சத்துவகுண பிரசித்தர்களின் சரித்திரமாகிய

# ஸ்ரீமகாபக்தவிஜயம்.

(முதற்பாகம்)



படங்களுடன்

சென்னை

அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்

பூமகள்விலாச அச்சுக்கூடம்

இதன் விலை] 1938 [ரூபா 2

ஸ்ரீ

ஓம் புண்டரீக வரதாய நம:

சத்துவகுண பிரசித்தர்களின்

சரித்திரமாகிய

# ஸ்ரீ மகாபக்தவிஜயம்.

(முதற்பாகம்)




இஃது

சித்தூர் அருள்வாக்கு

வேங்கடதாசர் அவர்களால்

மாராஷ்டிர பாஷையிலிருந்த

ஜெயதேவர், கபீர், துளசி, நாமதேவர், ஞானேசுவரர்

முதலிய ஐந்து தாசர்களின் சரித்திரங்களை

தமிழில் மொழிபெயர்த்ததுடன்,

சாத்தப்பாக்கம்

கிருஷ்ணசாமி முதலியாரால் இயற்றிய

குசேலமாமுனிவர் சரித்திரமும்

அடங்கியுள்ளன.



அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை

1938

இதன் விலை ரூபா-2½

ஸ்ரீ

ஓம் பரப்பிர்மணே நமஃ

# முகவுரை



இதனால் சகலருக்குந் தெரிவிப்பது யாதெனில்:
ஓம் சச்சிதானந்த நித்ய நிர்மலக் கடவுளாகிய பரப்பிரமம் தன் மாயாவிலாசத்தால் மூவுருவாகி, சிருஷ்டி - ஸ்திதி - சம்ஹார கிருத்தியஞ் செய்யும் இப்பூவுலகில், கிரேதா - திரேதா-துவாபர யுகங்களில் நடந்தவண்ணமே இக் கலியுகத்திலும் சகுண தியான மும், பிர்ம்மக்ஞானமும், கிரகஸ்த - சன்யாச - வர்ணுசிரம தர் மங்களும் நடக்கும்பொருட்டு, மூவரும் முனிவரும் அவதாரஞ் செய்து, மாந்தர்களின் பக்குவாபக்குவப்படி போதிக்கவேண்டிய தாகும் என்று பவுஷியபுராணத்தில் உரைத்தபடியே இக்கலி யுகத்தில் அவதாரஞ் செய்த பக்தமுக்தர் அனேகருள் 700-பேர் களின் சரித்திரங்களடங்கிய நாபாஜிசித்தர் செய்த இந்துஸ் தானி பாஷையிலுள்ள பக்திசாரத்தையும், உத்தவசித்தர் செய்த பக்தமாலாவையும், இதனுதாரத்தால் மைபதீபாவாஜி யென்பவர் சில சரித்திரங்களை சங்கிரமமாக மாராஷ்டகத்தில் செய்த பக்த விஜயம், சந்தவிஜயத்தையும், இன்னம் இச்சரிதங்களைச் சார்ந்த சில நூல்களையும், வடதேசத்தில் 16-வருஷங்களா யிருந்து சக்தி யானுசாரமட்டும் ஆராய்ந்து சங்கைகளைப் பல பெரியோர்களைக் கேட்டறிந்து இலக்கிய விலக்கணஞ் சற்றுந்தெரியாதவனு யிருந் தும் பக்தர் திருவிளையாடலென்னும் சரித்திரங்கள் உளத்தில் நிறைந்து இடம்போதாது பொங்கி இதைப்பார்க்கும் புண்ய வான்களின் கண்களின் வழியாகவும் கேட்போர் செவியின் வழி யாகவும் நிறைந்து தன் ஆற்றலடங்கவும், அவர்கள் ஆசீர்வா தப்பலனை அடியேற்குத் தருவிக்கவும், சகலரும் எளிதிலுணர வசனரூபமாய் வெளிப்பட்டு, அதின் முகப்பிலுள்ள ஐவர் திரு விளையாடல் முன்னிட்டுப் பல தேசங்களிற் பரவப் பகற்கண் ணுன சூரியனும் இராக்கண்ணுன சந்திரனும் உள்ளமட்டும் மேற்படி பக்தவிஜயத்தில் ஸ்ரீவியாசாவதாரமான ஜீவகாருண்ய விரதமுடையோர்க்கே மோக்ஷமுண்டெனத் தன் சரித்திரத்தாற் காட்டிய ஸ்ரீஜெயதேவர், ஸ்ரீசுகாவதாரமான தவத்திலும் தர்மமே பரமபதமடைவதற்கு ஏதுவான மார்க்கமெனத் தன் சரித்திரத்தாற் புலப்படுத்திய ஸ்ரீகபீர்தாஸர், ஸ்ரீவால்மீகவ தாரமான நிஷ்காமமேபேரின்பமடையும்சூட்சுமமார்க்கமெனத்

தன் சரித்திரத்தால் வெளிப்படுத்திய ஸ்ரீ துளசிதாஸர், ஸ்ரீ உத்தவாவதாரமான பகவத்பக்தியே பரந்தாமனது பதாம்புஜங்களின் தரிசனத்துக்கு ஏதுவாகிய முக்கியநெறியெனத் தன் சரித்திரத்தான் விளக்கிய ஸ்ரீ நாமதேவர், ஸ்ரீவிஷ்ணுவாவதாரமான இல்லறத்திலிருந்து தேர்ந்த பிர்மக்ஞானியே பிர்மானந்த வாரிக்கு உரியவனெனத் தன் சரித்திரத்தாற் றெரிவித்த ஸ்ரீ க்ஞானேஸ்வரர் ஆகிய இவ்வைவரின் சரித்திரங்கள் கங்காஸ்நானஞ் செய்யவந்த சதுர்வேத சித்தாந்த சபைத்தலைவராகிய ம-ா-ா-ஸ்ரீ சைதாபுரம் உமாபதி முதலியார் முன்னிலையில் சென்னைமாநகரை யடைந்து, ம-ா-ா-ஸ்ரீ சைதாபுரம் சோதிடவல்ல சிற்றம்பல முதலியார், ம-ா-ா ஸ்ரீ ஆறைமாநகரம் முத்தமிழ்க்கவி திருவேங்கடம்பிள்ளை பரீட்சைக்குட்பட்டுப் புரசை-அஷ்டாவதானம் ம-ா-ா ஸ்ரீ சபாபதி முதலியார் முதலான கவிவாணரின் சாற்றுக்கவிகளைப் பெற்ற புத்தகத்தைக்கொண்டும், பழைய பிரதிகளைக்கொண்டும், இப்போது அச்சிட்டு விற்பனை செய்கிற ஆறுதாஸர்கள் சரித்திரமென்னும் பக்தவிஜயத்தை இதுகாறும் சென்னையில் அநேகர் அச்சுப்போட்டது யாவருக்குந் தெரிந்தவிஷயமே. இப்புத்தகம் அதுபோல் எண்ண வேண்டாம். இப்புத்தகம் ஐதீகப்படி முக்தியடைந்த தாசர்கள் திருவுருவப்படங்களமைத்து ஒருவாறு திருத்தி அச்சிட்டிருக்கின்றோம். இதனை வைணவரே யன்றி ஏனையோரும் முயன்று வாங்கி வாசித்துப் பலனடைவார்களென்றே விலை சுருக்கினும். விஷ்ணுவினுடையவும், பக்தர் முக்தர்களுடையவும் அற்புத மகிமைகளை அறிந்துய்ய விருப்புடையோர் இப்பக்த விஜயத்தினை விரும்பாதிரார். விரைவில் முந்திக்கொள்ளுங்கள். சில பிரதிகளையே பதித்துள்ளாம். வாங்குவோருக்கு இதுவே தருணம். ஆகையால் ஒவ்வொருவரும் பூமகள்விலாச அச்சுக்கூடத்தில் அச்சிட்ட புத்தகத்தைப் பார்த்து வாங்கக் கோருகிறோம். இதில்வரும் சரித்திரத்தின் பிற்பாதியை எம்மால் வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச அய்யங்காரால் எழுதியுள்ள 'ஸ்ரீமகா பக்தவிஜயம்' இரண்டாம்பாகத்தில் பரக்கக் காணலாம்.

---

உ

கடவுள் துணை

# சிறப்புப்பாயிரம்

உபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ, தஞ்சாவூர்

## இலட்சுமணசுவாமி முதலியாரவர்கள் பாடிய

நேரிசை யாசிரியப்பா

மணிமலர் பொருநில மகளடை யழகுற
அணியென வுடுத்தபா லாழியி னெடுமால்
உந்தியங் கமலத் தொளிதரு பொகுட்டில்
வந்த நான்முகன் வாக்கினி லிருந்த
நாமக ணவின்ற நான்மறைக் கடலைத்
தோமறக் கடந்த சுயம்பிர காசன்
இருந்தவ ருள்ளத் தெழுந்த செழுஞ்சுடர்
தெரிந்துரை செய்ய வொணாதசி காமணி
அந்தமு நடுவு மாதியி லாதாய்
முந்த மலிந்த மோன வடிவாய்ச்
சிற்குணத் தவர்தஞ் சிந்தையு ணிறைந்த
நற்குண வாரி நானில மொருங்கு
பரவிய தனைய பாந்தண்மேற் கிடந்த
தரைமிசை யுருக்கொடு சார்ந்த தயாநிதி
குறைவிலா வன்ப ருளங்குடி கொண்ட
நறைவிரிந் தொழுகு நாண்மல ரனைய
தேசிகன் பரந்த ஜெகத்குரு வாகி
மாசிலா திருந்த மாதவத் துயர்ந்த
சங்கரா சாரியின் ருளனு தினமு
மங்கள கரமுடன் வாழ்த்து மடியரில்
மாதமும் மாரி வரையறப் பெய்து
தாதவிழ் சோலைசேர் தாமரைப் பொய்கையும்
சங்கின மீன்ற தாளத்தை யுற்று
அங்கிருந் தன்ன மடைபல கிடப்பச்
சென்னல் மலிந்த செழுவய லுடனே
கன்னன் முதிர்ந்த கழனிபு மாருப்
புயல்புறம் போகாப் பொழிலுமா மதிலும்
நயமுறு பல்பொரு ணண்ணிய கடையும்
பன்மணி யிடையிடை பதித்தகோ புரமுநற்
சொன்மலிப் புலவர் சூழுமா ளிகையும்
கயல்விழி யார்கழங் காடுசா லைகளும்
மயலறு தவத்தினர் வாழுமண் டபமும்
நீர்வள மிகுந்த நிலமங்கை நெற்றி
சீர்பெற வணிந்த திலகமென் றுலகஞ்
செப்புதற் கரிய சேரநா டதனில்
ஒப்பிலாச் சிற்றா ருரியநன் னூரான்
நிகரிலா சித்த லிங்கமென் றெவரும்
புகறிரு நாமன் புண்ணிய வசத்தால்
மரபினி லுதித்து மண்ணுளோர் களிக்கப்

பரிவுறு கலைபல் பண்புட னுய்ந்து
மலாயன் வகுத்த மன்பதைத் தொகுதியுள்
அலகிலா மக்கட் பிறப்பரி தென்னுய்ங்
குருகுசிங் தையனு யுய்புமா ரோர்ந்து
பெரும்பய னடைதலே பிறத்தற் கரிதெனு
முற்பவ மொழித்த வற்புதாத் துவித
கற்பனை கடந்த விற்பன விவேக
சற்சன சாது சங்கத் தமர்ந்து
துற்சன குழுவுத் துறந்தன னாகிப்
பூமலி வனமும் புனிதர்க ளினமும்
மாவளர் குயிலும் மன்னுபூ மயிலும்
பூவை கிள்ளை பொருந்திய வன்றில்
பாவைய ராடப் பாவலர் கூடக்
கீத வோசையுங் கிளர்ந்தெழு நாத
வேத வோசையு மிகவொலி தரவே
ராயவே லூரி னலம்பெற விருந்து
தூயனைம் புலனைத் துகளறக் களைந்து
தத்துவ மகன்ற சாத்விக காரண
சுத்த நிர்மல சொரூப சாக்ஷாத்பூ
ரண வகளங் களிர்நாம வரூப
வெண்குண னவதரித்த கொள்கை போன்றுற்ற
மாரிமுத் தாசான் மலரடி வணங்கிச்
சூருயி ரருந்தி சுரர்க்கருள் சுரந்து
தெள்ளித் தெளிந்த தெய்வ சிகாமணி
வள்ளி மணாளனை வழிபடு கடவுளாய்த்
துணைப்பத முடிமிசை சுடருறச் சூட்டிக்
கணப்பொழு தகலாக் கருத்துட் கொண்டு
இந்துஸ் தானெழின் மராஷ்டகத் தெய்திய
சுந்தர முயர்திரு துளசிதாஸ் நாம்தேவ்
ஜெயதேவ் முதலாச் சிறந்தவர் சரிதை
மகிதலத் தமர்ந்த வாரண வித்தை
சொற்பொரு ளிசைத்த சுவைநலந் தோன்றப்
பொற்பமை பாவு நிறைநிறை பொருந்த
வரையிலாத் தென்கலை மண்டலத் தூன்றிக்
கரையிலா னந்தக் கடனீர் பெய்து
நன்குணர்ங் தவரெலா ஞான மலரெனத்
தென்புட னறிவுயர் சென்னியிற் றுலங்கக்
கொடுத்தனன் கொடுக்கக் கொண்டுளோ ரகத்துத்
திடத்துட னெளிதர தெளிந்த வரகவி
வேங்கட தாசன் விளங்கப்
பாங்குற வியற்றிய பக்த விஜயமே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

# சாற்றுக்கவிகள்

புரசை - அஷ்டாவதானம் ம-ா-ா-ஸ்ரீ,

## சபாபதிமுதலியாரவர்களால் இயற்றப்பட்ட

நேரிசை யாசிரியப்பா

மழைதவழ் குடுமி யிமமலை வடபாற்
தென்பாற் குமரி திகழ்நில வரைப்பில்
விளங்குமீன் முதற்பல களங்கறு முருக்கொடு
செல்லல் களைவான் றெல்லைஞான் றுதித்த
புயனிற மேனிப் பவளவாய்ப் பொரும்பர்
தண்மையும் வெம்மையுந் தருபெருஞ் சுடரிரு
தடக்கை தாங்கிய எழுற்றிரு மார்பன்
பேரருட் களைகணாற் பிறல்கிலா வாரணப்
பொருட்பய னாகிய சாங்கிய யோகக்
கருப்பொரு ளுணர்ச்சியிற் கைவரு நெடுந்தகை
அடியரிற் சிறந்த அறிஞர்பற் பலருள்
ஞான தேவ ரைவகைப் பெயரிய
இந்திரி யத்தொடக் குறுமைங் தடக்கிய
ஜெய தேவர் நாம தேவர்
துளசி தாசர் கபீர்தாசர் முதலாம்
புண்ணியர் சரித நண்ணிய முதனூல்
இந்துஸ் தான்மராட் டிரமெனு மிவற்
றிருப்பதைத் தமிழி லியாவரு மெளிதிற்
புலங்கொடு தேர்ந்து நலம்பெறு மாண்பின்
நயந்தரக் கானூஉ வியந்தனர் களிப்பப்
பக்த விஜய மெனப்பெயர் பணித்து
வளங்கிளர் வசன நடையினிற் றந்தனன்
சரோருக மலர்த்தடம் விராவு மிராய
வேலூர்ப் பதியினன் மாலூர்ப் பழவினை
வலனறக் கடிந்த நிலைபுறழ் சீர்மைசால்
மாரி முத்துப் பிரம மாதவன்
பொற்பதம் பழிச்சு விற்பன மேதகை
தேங்கமழ் பொழிற்கண் மாங்குயிற் றெருகுதி
பண்ணிசை கூட்ட விண்ணிடைத் தருமலர்
தம்மினு மினியன வம்மினென் றத்தலைச்
சுரும்பரை யழைக்கும் பெரும்பரி சிஃதென
மெல்லிய நறுமென் பல்லவம் பொதுளிய
சேயிதழ் பூத்திர ளாயிடை வார்தரூஉம்
நருந்தே னார்வுற விருந்தயின் றகங்கொளீஇக்
களிதலை சிறப்ப வளியினம் பான்செயக்
கற்றுணர் மாக்களின் பொற்றுணர் கொடைசொரி
சரந்தரு கொன்றை நிறந்தநீள் புறவம்
உருவவோ டரிக்கட் பரும் விரிசிகைச்
சிற்றிடை மகளிர் பொற்றொடி கரமெனக்
காந்தளம் போந்தக மேந்துபல் சுடர்நிரை
வயங்குசிற் றாருறை பயன்செறி யருட்கவி
நேசமால் வேங்கட தாச னென்ப

அன்னத்தை யுழுநர் பண்ணையி லுரப்பும்
எறுநீ ருழக்கலின் வாளைபாய் தடஞ்சூழ்
ஆறையம் பதியின் வீறு முத்தமிழ்க்கவிழ்த்
திருவேங் கடனென வருநா வலனும்
மைதவழ் தண்டலை மதிமுகத் தங்கலார்
செய்தவழ் கூந்தல் நிகழ்வுறு சைதைவாழ்
சோதிடப் பெருநா ருளக்கற வுணர்ந்த
கோதறு குணச்சிற் றம்பலக் குரிசிலும்
ஆர்வமுற் றினிதிற் பார்வையிட் டுதவ
அன்னசிற் றம்பல னகமகிழ் சோதரன்
சென்னையிற் புகழ்மை திகழ்சதுர் வேத
சித்தாந்த சபைக்குத் திருந்து முதல்வன்
கல்விக் கடற்கரை கண்டவான் புலவர்
சொல்வித் தகந்தரு தொன்மை மருத
நிதிகுல திலகனெனாவி லுமாபதி
சதுரானு ரவுநீர்த் தரணியி லெவரும்
மெச்சிடு மெழுத் தியந்தரத்
தச்சிடு வித்து நல்கினனமை வுறவே.

---

ம-া-া-ஸ்ரீ, கா. பச்சையப்ப முதலியார் கல்விச்சாலை பிரதமபண்டிதர்

## ம-া-া-ஸ்ரீ, சுப்பராயப்பிள்ளை அவர்களா லியற்றப்பட்ட

பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

திருமருவு பக்தவிஜ யத்தைமக ராட்டிரந் திகழுமிந்துஸ் தானியாம்
தெளிமொழியி னின்றுதமி ழின்மாரி முத்தெனச் செப்பவரு பிரமவள்ளல்
மருவுமரு மாணுக்கன் சிற்றார் சிறக்கவரு மகிபனெண் டிருவேங்கட
மாதாசன் செய்ததைச் சைதவள நகர்தனில் வயங்குசிற் றம்பலவனென்
அருமருவு வள்ளலொடு பொழில்சூழு மாறையெனு மொப்பிலா நரபதியினுன்
ஒளிர்முத் தமிழ்க்கவித் திருவேங்க டப்புலமை யுயர்கவிஞ ஞராய்ந்திட
அருமைபெறு சென்னைபுரி சதுர்வேத சித்தாந்த வஞ்சபைத் தலைவனெனவே
அமருமா பதிநரேந் திரனுலகு போற்றவே யச்சிட்டளித்த னனரோ.

---

ம-া-া-ஸ்ரீ, கா. பச்சையப்ப முதலியார் கல்விச்சாலை

தமிழ் இரண்டாம் உபாத்தியாயர்

## திருமணம். கேசவசுப்பராய முதலியார் பாடிய

பதினன்குசீரடி யாசிரிய விருத்தம்

சீர்மருவு மரிதாசர் சரிதமிந்துஸ்தானி
செழுமராட் டிரபாஷையிற்
சேர்ந்துபண் டுற்றதைப் பக்தவிஜ யப்பெயர்
தெளித்தினிய செந்தமிழினுற்
நேர்மருவு மொழிபேர்த்து மாரிமுத் துப்பிரம
தேசிகற் கன்புபூண்ட
தெய்வவேங் கடதாச னருளிடச் சதுர்வேத
சித்தாந்த சபைதனக்குப்

பார்மருவு தலைமையொடு சோதிடப் புலமைவரு
பான்மைசெறி சிற்றம்பல
பாவலன் முத்தமிழ்த் திருவேங்க டச்செம்மல்
பழுதுறும் புரைதபுக்கத்
தார்மருவு குவளைப்பு யாசல னுமாமதிச்
சைதையான் சென்னைநகரிற்
றமிழ்வளர்த் திட்டநம் வள்ளலச் சிற்பதிவு
தான்செய் தளித்தனனரோ.

---

திரிசிரபுரம் வித்வான் ம-ா-ா-ஸ்ரீ,

கோவிந்தபிள்ளையவர்களால் இயற்றப்பட்ட

கட்டளைக் கலித்துறை

அரிதாச ரானபத்தரதுவிஜயமாராஷ்டகமிந் துஸ்தான் பாஷை
விரிதாசர் புகன்றவற்றை விளங்குசெந் தமிழில் வசன ரூபமாக
வரிதாசர் மாரிமுத்துப் பிரமதே சிகர்மகிழ்மா ணக்கர் சேட
கிரிதாச ரெனுந்திருவேங் கடதாச ரியற்றிடச்சென் னைக்கண் மாதோ.

சதுர்வேத சித்தாந்த சபைத்தலைவ ரானசிற்றம் பலச்சான் றோரும்
முதுசீர்சா லாறைதிரு வேங்கடமுத் தமிழ்கவிபு முயன்று நோக்கு
மதுசால வச்சபைக்குத் தலைவருமா பதியறிஞ ரச்சிற் சேர்த்தற்
கெதுதானெப் பெதுவுமிலை யிகபரபோ கங்களுக்கீ தேதுவாமே.

---

புரசை ம-ா-ா-ஸ்ரீ, செ. அப்பாவுபிள்ளை யவர்களியற்றிய

இரட்டை யாசிரியவிருத்தம்

பரப்பிரம மாந்திருமா லிணையடிக்கன் புடனினிய பக்திசெய்து
பாகவத மாதவரா யோகமுமெய்ஞ் ஞானபூ ரணருமாகித்
திரப்பேறு பெற்றுள்ள மாதுளசி தாசர்கபீர் தாஸர் தூய
ஜெயதேவ ருடனும தேவர்ஞா னேசுரரென் றைவர்தங்கள்
சரித்திரமிந் துஸ்தான் மாராஷ்ட மதினின்றெம் வெங்கடேச
தாஸனுந் தகையனற் றமிழ்வசன மாச்செய்ய வதனைச்சைதா
புரத்தருமா பதியெனுமா லொடுசிற்றம் பலவேளாம் புலமைமிக்கோர்
பொருவில்சீ ரச்சுதனிற் பதிப்பித்து வழங்கினர்பூப் புகழவம்மா.

---

நாகப்பூர் டிவிஷன் ஜெனரலஜிட்டன் ஆபீஸ் எட்ரைட்டராகிய

மா-ா-ா-ஸ்ரீ, தி. வீரராகவலு நாயகரவர்கள் இயற்றிய

விருத்தம்

சுந்தரஞ்சேர் சிக்கந்தர் பாதில் வாழும்
சோமசுந் தரனிதய தானந் தன்னைச்
சந்ததம்விட் டகலாத முருகன் றன்னை
தனதகத்திற் றினங்குடியாக் கொண்ட நேமன்
பந்தவுல கோரறிந்து படிக்கக் கேட்கப்
பாசமுடன் றலைக்கணிய விநயஞ் செய்ய
விந்தையதாய்ப் பக்தவிஜ யத்தை யீந்தான்
வேங்கடதா ஸனுநாமன் விரைந்து தானே.

ஆசிரிய விருத்தம்

பொன்னகர்க் கரசன்வே தாசௌரி நின்மலன்
பொய்யிலா முனிவர் தேவர்
போற்றுந் திருப்பழனி யாண்டவனை யனுதினம்
புளகமொடு துதிசெய்கு வோன்
மன்னுமறை முடிவருட் சங்கரா சாரியர்
மரபினைச் சார்ந்த புகழார்
மாரிமுத் துப்பிரம தேசிகன் றனதுதிரு
மலரடிக ளைப்பரவு வோன்
தன்னைநிக ரில்லாத சிற்றூர ணுந்திவ்ய
சத்குணச் சித்த லிங்கம்
தந்திடப் புவியில்வேங் கடதாச னுயிலகு
சாதுசன் மார்க்க தீரன்
பன்னுதமி ழால்பக்த விஜயமொன் றீந்தனன்
பரிவுட னகங் களித்தே
பார்த்தபே ருஞ்செவியிற் கேட்டபே ரும்புவியில்
பல்லாண்டு கூர்மின் களே.

---

ஸ்ரீ

ஓம் பரப்பிரம்மணே நமஃ



ஸ்ரீ பண்டரிநாதன் துணை

# ஸ்ரீ மகாபக்தவிஜயம்

## பாயிரம்

### பரப்பிரம்ம துதி காப்பு

அறுசீரடியாசிரியவிருத்தம்

சீரார்நெஞ் சினராற்றுஞ் செபக்கோவை தனைச்சூடுந் தேவ தேவைப்
பாராதி பஞ்சகர்த்தர் பகுதிபவ நெரிக்கிடமாம் பரமான் மாவைப்
போராதி யிலகோவை மனச்சோர்வை யகற்றுபரப் பிரம சேவை
தூராதி தூரமெனு மகப்பார்வை தரும்வாழ்வைத் தொழுதல் செய்வாம்.

### கஜானனன் துதி

வஞ்சித்துறை

திருவாழ் வருளுங் கரிமா முகனற்
சரணம் புயநஞ் சிரமே லணிவாம்.

### திருநாதன் துதி

அறுசீரடி யாசிரியவிருத்தம்

பிரகலாதனுக் காத்தூணிற் பெருநர ஹரியானனைக்
கரியழைத் திடவேவந்து காத்தருளிய மாயோனை
அரியுனக் கபயமென்றுட் காடைமேன் மேற்றந்தானைத்
துரியமா நிலைபெற்றுய்யத் தோத்திரஞ் செய்குவோமே.

## பார்க்கவி துதி

அறுசீரடி யாசிரியவிருத்தம்

அரன்பிர மத்திநீரா தனேகநா ளலையும்போதவ்
வான்பிர மத்திதன்னை யரைக்கணத்தினிற் றீர்த்தாளைக்
கரிதனை யுணர்த்ததுக்கா ராமரின் காந்தைக்கன்று
பெருநிதி யளித்தாடன்னைப் பேணிநம் மிடிகடீர்ப்பாம்.

## நிடலாக்ஷன் துதி

அறுசீரடி யாசிரியவிருத்தம்

மிருகண்ட முனியின் சேய்க்கும் வியாக்கிர பாதர் சேய்க்கும்
பெருவய துடன்பால் வரம் பிரியமாக் கொடுத்த நாதன்
திரிபுரந் தனையுங் காமன் றனையுஞ்செவ் வனலாய்ச் செய்தோன்
திருவடிக் கமலம் போற்றித் தீங்கினை யகற்று வோமே.

## பவானி துதி

அறுசீரடி யாசிரியவிருத்தம்

புசுண்டனுக்கழியாயோகம் பூர்ணமாய்ப்போதித்தாளை
அசியுணர்குகற்காவானோர்க் கருண்மகவில்லாதென்றும்
வசைமொழிபுகன்றிட்டாளை மாசிலாவதனத்தாளை
நிசபதத்தோடதீதப் பதம்பெறநினைவில்வைப்பாம்.

## காயத்திரி துதி

அறுசீரடி யாசிரியவிருத்தம்

ஹரியெழுத்தறியாநாயேன் றனைத்தடுத்தாட்கொள்வாளை
அருமறையாகமத்தோ டனந்தசாத்திரமானாளைப்
பிரமனார்நாக்குற்றாளைப் பிரியலீலையையாண்டாளை
எரியுறுதரும்பச்சோலை யாகினாட்கிணக்கஞ்செய்வாம்.

## கார்த்திகேயன் துதி

பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

அடியாரெங்குண் டெங்குண் டெங்குண்டென் றலையுமறுமா முககுகனே
அரனார்கணிலுற் பவித்தவனே அமரர்சிறையைத் தவிர்த்தவனே
அடியாதியிலா வறிவுருவே அகஸ்தியர்க்கன் றருட்குருவே
அருணகிரிநா தரையாண்ட வருளேஞானப் பரம்பொருளே
படிமீதடியார் சரித்திரமாம் பக்தவிஜய மெனுநூலைப்
பக்தியோடு வாசகமாப் பண்ணுநாயே னவதனிற்
குடியாயிருந்தோர் குறைவின்றிக் குணமாமுழுது முடித்தெனையாட்
கொள்வாய்தோகை வாகனனே கூவுஞ்சேவற் கொடியோனே.

## ஜீவன்முத்தர் துதி

அறுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

ஜெயதேவ் நாம்தேவ் சோபான்தேவ் க்ஞான்தேவ் நிவிர்த்தி திகழ்சாது
நயமீ ரோயிதாஸ் சூரதாஸ்மா நாண்ய துளசிதாஸ் கபீர்தாஸ்
கயமில் ராம்தாஸ் புரந்தரதாஸ் கனமா தவதாஸ் கூர்மதாஸ்
சுயதுக்காரா மேகநாது சுவாமி யெனைக் காக்கவுங் கடனே.

## குருபாரம்பரை துதி

கலிவிருத்தம்

அங்க லிங்க வயிக்ய முணர்த்துநற், கெங்க ணும்மில கும்பர மோருய
ரங்க மாயிவ் வகிலத் தெழுந்தருள், சங்க ராசாரி தன்பத மேத்துவாம்.

தத்து வங்க ளெலாமகன் றூனந்த, வத்து வாகி விளங்கிடு மாதல
வித்தி யாரண்ய ஸ்வாமி விமலனைப், பத்தி யோடு பணிந்தினி யுய்குவாம்.

அத்வி தானந்த வற்புத வச்சுத, சத்வி ஞேதவிச் சர்வ வியாபக
சித்வி லாச சதாசிவப் பிர்மமாந், தத்வ நீதனுக் குச்சர ணுங்களே.

நேத்ர மாதி நினைவுக ளும்மிகு, காத்ர மாயெழுங் காலு மலவல
சூத்ர தாரியென் றோர்ந்தரு டய்கர, பாத்ர ஸ்வாமியை யேத்திப் பணிகுவாம்.

அங்க மாதி யலவென்ற கன்றரு, ளங்கமாய்ப் பரை யாதிய கன்றுயர்
லிங்க மேவிய நின்மல ணுகிய, புங்க சேஷகி ரீசனைப் போற்றுவாம்.

சச்சி தானந்த ணுங்கிருஷ்ண சாமியை, அச்சுத வேங்க டேசக் குரவனை
உச்சி யையுணர் நாராய ணன்றனை, நிச்ச யம்பெற நெஞ்சு ளிருத்துவாம்.

சகல ரும்பிர மந்தனை யுற்றிட, ரகல வேண்டிக் கைவல்ய மறைந்தநற்
சுகசொ ரூபநற் றூண்டவ மூர்த்தியின், மிகுப தத்தினை மேவிப் புகழுவாம்.

## குரு துதி

இரட்டையாசிரிய விருத்தம்

தானந்தவத்தின்மிகு ஜீவகாருண்யமுஞ் சாந்தமுஞ் சரிதையென்றும்
தத்துவமுணர்த்துமரு ளாரியர்க்குப்பணிக டாஞ்செய்தல் கிரியையென்றும்
ஞானந்ததும்புமறி வினையறிந்தருணெறியை நாடலுயிர் யோகமென்றும்
நாதனருளாலறிவு நானெனத்திடமதாய் நம்பன்மிகு ஞானமென்றும்
ஆனந்தமாமெனக் கிடர்பிறப்பில்லையென் றறிவதே நிஷ்டையென்றும்
ஆகமிந்த்ரியகரண கருமமறிவாமெனக் கணுகா தெனத்தெரிந்தே
மோனந்தனைப்பெற்று யாதொன்று நாடாத மோனமுயர் சகசமென்றும்
முத்திமுடிவருள்ஞான மாரிமுத்துப்பிரம முத்தனை யகத்துள்வைப்பாம்.

---

# மகத்துக்கண் மகிமை

ஓம் அகண்ட-அகண்டாகண்ட-அசல-அதுல-அச்சுத-அத்வித-அபய-அட்சய-அபாகிய-அபாசிய - அனுமய - அப்ரமேய-அவிகார-அசரீர-அனந்த-அனந்தானந்த - ஆதிமத்யாந்தரகிதமாகியும், ஈசுவர-ஏகதேவ-கருணாலய-கர்த்தவ்ய-கருணாகரக்கடவுளாகியும், தற்பர-சிற்பர-ஜகநாத - சச்சிதானந்த-சகோதய - சமசாந்த-சாஸ்வித - சர்வசாக்ஷி - சர்வோன்னத - சர்வலோகசரண்ணிய-சர்வக்ஞ-சர்வகாரண - சர்வேசுவர - சர்வேந்திரியாமியாகியும், உசித-உத்க்ருஷ்ட-உத்தம-உத்தமமோத்தமமாகியும், சுயசுகசுந்தர-சுயம்பிரகாச-சோதிசொரூப-சாக்ஷாத்கார - சுபமங்களசுவாமியாகியும், நிகஜோத்ய-நிக்லேத்ய-நிர்வேத்ய-நிர்வாச்சிய-நிதான-நிசாதன-நிஜார்த்த-நித்ய-சத்ய-நிரஞ்சன-நிர்சலன-நிர்சிந்த-நிர்பந்த-நிர்சங்க-நிஷ்களங்க-நிர்நாம-நிஷ்காம-நிர்குண-நிர்விகாரமாகியும், நிர்பேத-நிர்சேத-நிகர்வ-நிரவயவ - நிரூப-நிர்சின்ன-நிர்பின்ன-நிர்பாவ-நிர்ஜீவ-நிராங்கார-நிராலம்ப-நிர்விசேஷானந்தமாகியும், நிர்சப்த-நிஷ்கர்ம-நிஷ்கள - புஷ்கள-நிர்மல-நிரந்தர-நிராகுல-நிர்வாண-நிஷ்பிரபஞ்சமாகியும், நிராவரண-நிராமய-நிராதார-நிராகார-நிரதிசயானந்தமாகியும், நீதிபர-பரஞ்சோதி-பரதுக்க-துக்கபரம - பரம்பர - பரப்பிர்ம்ம - பரமேஸ்வர-பராபர-பரிபூரணமாகியும், புண்ய-கண்ய-புனித-புராதன-ஜனுதன-புத்த-முத்த-சுத்த-விஷ்ணு-வ்யோம-வ்யாபகமாகியும், கேவல-கைவல்ய-பிர்மானந்த-மெஞ்ஞான-சின்மய-தேஜோமய - சித்விலாச - தேவதேவனுகியும் விளங்காநின்ற சமஸ்தமத சம்மதக் கடவுளாகிய பரப்பிர்மத்தை நானெனதென்னும் அகங்கார மமகாரமறத் திரிகாணசுத்தியோடும் வணங்கி இதைப்பார்க்கும் புண்ணியவான்களின் திருவருட் கமலக் கழல்களைச் சிரமேற்கொள்ளுதற் கிணங்கிப்,

| | |
|---|---|
| புளியம்பழத்தின் போர்வை | போலவும் |
| தெளிவிலூமை செவிடன் | போலவும் |
| நீர்மீதுறு நவ நீதம் | போலவும் |
| நீர்தனிற்றெரியும் நிழலைப் | போலவும் |
| பூமியிலுறுமகப் பூச்சியைப் | போலவும் |
| ஆழியில்விழும்பல ஆற்றைப் | போலவும் |
| ஆடும்தொம்மர கத்தைப் | போலவும் |
| பாடும்பாடகன் பாட்டைப் | போலவும் |
| கனவிற்காணுங் காட்சியைப் | போலவும் |

புனற்குடமேந்திய பூவைப் போலவும்
விபசாரிசெய்யும் வேலை போலவும்
உபகாரபுருஷ னுள்ளம் போலவும்
பாத்தையர்காட்டும் பட்சம் போலவும்
சிரத்தையிற்சிறந்த சீஷன் போலவும்
பஞ்சபூதங்களின் பண்பைப் போலவும்
பஞ்சவர்னங்கவர் படிகம் போலவும்
அருங்குழவிகளி னுசை போலவும்
பருந்துநிழலுறும் பான்மை போலவும்
உடன்கட்டையேறு முத்தமி போலவும்
மடங்கொக்குவீதி மணியைப் போலவும்
சமணர்போற்றுஞ் சாமியைப் போலவும்
கமலத்துறுமுத கந்தனைப் போலவும்
ஏகசக்ராதிப னிச்சை போலவும்
நாகங்குயில்மயில் நாணயம் போலவும்
நெய்யுண்டுகக்கும் ஞானியைப் போலவும்
வெய்யோன்விசிறி வீணை போலவும்
கண்ணிற்கரிக்குங் கருமை போலவும்
விண்ணிற்றெரியும் மேகம் போலவும்
கற்பகங்காக்கை கருவிழி போலவும்
கற்பைக்காக்குங் கன்னியைப் போலவும்
பித்தன்போலவும் பேயன் போலவும்
பக்தன்போலவும் பாமரன் போலவும்

சமுசார வியாபாரத்திலிருந்தே பிபீலிகாதி சமஸ்த வஸ்துக்களிலும் பிரமமே நிறைந்திருக்கிறதென்றும், பிரமமில்லாத விடமுண்டோ வென்றும், பரப்பிர்மத்துள் நானென்பது மூக்காலத்திலுமில்லையென்றும், நானெனு மகந்தையே மூலஞ்ஞானமென்றும், நானெனுஞ் சீவத்தன்மை அறிவூன்றி விசாரிக்கில் சுத்தசூன்யமாகுமென்றும், நா னீ எமதுமதென்னும் விகற்பமற்றிருத்தலே பிரமக்ஞானமென்றும், நானெனலற்றவிடத் துதயமானவின்பமே நிரதிசயானந்தமென்றும்,பரப்பிரமமேஒருருவாயெழுந்தருளிய குருஸ்வாமிகட்கு உடல் பொருளாவி யென்னு மூன்றையுந் தத்தஞ்செய்து நானென்பதை யடக்குவதே உத்தம தானமென்றும், தனக்கு இதர ஜீவர்களாற் பொல்லாங்கு நேரிட்டாலும் தானப்படி செய்யாதிதஞ்செய்து நானென்பதை யடக்குவதே சாந்தநிதானமென்றும், நான்மறைமுடிவாகிய மகா வாக்கி

யார்த்தங்களைச்சிரவணஞ்செய்து தேகேந்திரிய பிராணகரணசீவ விருள் நானல்லவென்று ஆத்மஸ்வருபமாகிப் பரப்பிரமத்துள் ஏகீகபாவமாதலே பிரமத்தியானமென்றும், இம்மனனபலத்தாற் றிரிகரணங்களை அசைவறநிறுத்தி நானென்னும் அகங்காரக் கிரந்தியைக் களைதலே பிரமக்ஞானமென்றும், திரிகரணங்களின் சலனமற்றபோது உதயமான பிரமானந்தவாரியில் அமிழ்ந்து தன்னை மறத்தலே மகாமௌனமென்றும், திக்கு தேசாதிகளை மறந்து சங்கற்ப விகற்ப மிறந்து நனவிற் சுழுப்தியை யடைந்து மானபிமானங்களைக் கடந்து நிருவிகற்பமாயிருத்தலே ஜீவன்முக்தியென்றும், இப்பேர்க்கொத்த அபேதநிலையிலிருந்து சாக்ஷாத்கார மடைதலே மோக்ஷமென்றும், தன்னையடைந்த சத்சீஷர்களுக்கு உபதேசித்து இஷ்டதேவதையை யுபாசித்து எப்போதும் ஆசானைப்பூசித்து இரவிபோல் என்றும் பிரகாசித்து எழிலாரருள்பெற யாசித்து இன்பமீவாரையே நேசித்து, இகவாழ்வு அற்பமென்றுயோசித்து குருவே பதியெனப் பூசித்துக்கோதிலா நூல்களைவாசித்துக் குருமொழிகளை விசுவாசித்துக் குருசங்கீர்த்தனங்களைக் கோஷித்துத் தம்மைத் தாமே தூஷித்துச் சாத்விகராய்ச் சந்தோஷித்துச் சாக்ஷிப்பொருளாய்ச் சேஷித்துச் சர்வசாட்சியாய் விசேஷித்துத் துரியவீட்டினிற் பிரவேசித்துச் சும்மாயிருக்கவே ஆசித்து ஆனந்தவாரியில் நிதானந்தப்பி தான் இறந்திருந்தும் தன்னைக்கொல்ல நினைந்த சண்டாளர்மேல் சாகரத்தைப்போன்ற கருணையும்; சங்கரன் சாரங்கபாணி தமக்குப் பணி செய்யும்படியான பெருமையும் மாயாவாழ்க்கையி லுள்ளோர் தம்மை மானபங்கஞ் செய்யும்போது மங்கலகாலத்துள்ள மகிழ்வும், தம்மை யண்டினோர்க்கு மோக்ஷவாழ்வளிக்குந் திகழ்வும், தருமார்த்தமாகத் தநயன் றலையையரிந்த தைரியமும், சாதுக்களுக்கு அன்னமளிக்கு நிமித்தம் தன் மனைவியை அயலானுக்கு அகமகிழ்வோடு ஈந்தபிரியமும், மிருகங்களின் வாக்கால் வேதத்தைச் சொல்வித்த சாதுரியமும்,சவத்தையெழுப்பின திறமையும், ஜனார்த்தனனைப் பனிரெண்டாண்டு ஜலம் சுமக்க வைத்த உரிமையும், பிறர் உயிர்க்காகத் தன்னுயிரை மாய்க்கத் துணிந்த ஒருமையும், தருமர் - சுகர் - ருக்மாங்கதர் முதலானோர் சகலரும் பார்க்கப் பொந்தியோடு வானுலகு அடைந்ததைப் போலவே தேகத்தோடு மேலுலகிற்சென்றும், ரூபமாய்த் தெரிந்தும், வெட்டும்போது ஆகாயவடிவாய் நின்றும், பக்தர்கள் மத்தியிலிருந்தபடி மாயமாகியும், தங்கள் ஆக்கையைப் புஷ்பத்

துளசிகளாய்க் காட்டியும், அழியாச் சிரஞ்சீவி பட்டத்தைப் பெற்றும், வானுலகிலிருந்து புஷ்பவிமானங்கள் வர அதில் அமர்ந்துசென்றும், அடியார்கள்முன் அரியரஸ்வரூபிகளாய் நின்றும், சமயோபதேசர்க்குப் பிர்மோபதேசஞ்செய்தும், மத பேதகர்க்குச் சம்மதபோதமளித்தும், பகவானுக்குங் கல்லுருவான ரிஷபத்துக்கும் அன்னமூட்டியும், அனுபவக்ஞானத்தால் இதர மதஸ்தரை வாட்டியும், ஆகாயத்திலிருந்து கொடிகள்வர நாதேசுவரர்கோயிலில் நாட்டியும், கற்களையெல்லாம் பரிசவேதியாகச்செய்து காட்டியும், நாதேசுவரர்கோயிலை மேற்குமுகமாகத் திருப்பியும், பாதங்களைத் தூக்கிவைத்த இடங்களிலெல்லாம் லிங்கங்கள் முளைக்கச்செய்தும், சமாப்தமானபின்னும் பக்தர்கள் கூப்பிட ஏனென்றுத்தூவிந்தும், இன்னம் அநேக விநோதங்களைக் காண்பித்தும், விளக்கமுற்றிருந்த ஜெயதேவ்-நாமதேவ்-க்ஞானதேவ்-சோபான்தேவ்-சாங்தேவ்-துளசிதாஸ்-கபீர்தாஸ்-கூர்மதாஸ்-விஷ்ணுதாஸ்-சூரதாஸ் - ரோயிதாஸ் - ராமதாஸ்-மாதவதாஸ்-மச்சாந்தநாந்-சலந்தர்நாத்- கோரக்நாத் - ஏகநாத்-கோராகுமார்-ராகாகுமார் - பரமானந்தசோகா - ஜகமித்ரிநாகா-நிவிர்த்திசாது-சாவ்தாமாலி-முக்தாபாய்-ஜெருபாய் - மீராபாய்-கங்காபாய்-நரஹரி-சஜன்கசாய்-துகாராம் முதலான 700-பிர்மக்ஞானிகளது சரிதையெனும் அமிர்தத்தை நிறைத்துவைத்திருக்கும்பக்தவிஜயமென்னுங் கிரந்தத்தைப்பொய்மொழிகள் பூரணமாய் நிறைந்த புன்மையேன் வாக்கினுற் புகலக்கூடாததாயிருந்தும், புகலத்துணிந்தகாரணம் தேகமான விக்கினமின்றி நிர்விக்கினமாய் முழுதுமினிதாக நிறைவேற்றும் கருணகாரக்கடவுளாகிய கணபதியின் திருத்தாட்டாமரைகளின் மகத்துவமே. இவ்வடியேனைத் தடுத்தாட்கொள்ளும் திருமுருகேசனருளோ! பக்த சரித்திரங்களைக் கேட்டவிதமோ! யானறிகிலேன். அன்றி பிர்மாவதாரனை நாபாஜிசித்தராற் செய்யப்பட்ட பக்தசாரமென்னும் விசாலமான தாத்திரியில் உத்தமர்கள் திருவிளையாடலென்னும் சுகந்த வாசனைவீசும்புஷ்பங்கள் புஷ்களமாய் புஷ்பித்திருக்கும் நந்தவனமாகிய பக்கவிஜயத்தை இவ்வுலகிலுள்ள பாபங்களெல்லாந்திரண்டு ஓர் உருவமான வடிவமும் க்ஷணநேரமாயினும் சஞ்சலமற்றிராத வஞ்சகமாகியநெஞ்சகமுள்ள கொடியேனுகிய அடியேனுடைய இருதயத்தில் ஆணவாந்தகாரத்தைக் கிழித்தெழா நின்றகோடிசூரியப்பிரகாசமான அருள்விலாசமேபிரவேசித்து தமிழ்ப்பாஷையிற்செய்யத்தொடங்கின அதிசயமே அதிசயமாம்.



# நூற்பெருமை



பக்தப் பிரியனாகிய பகவானுடைய திருநாபிக்கமலத்தில் வீற்றிருந்தபடி இவ்வண்டபிண்ட பிரம்மாண்டங்களை ஓர் நொடியிற் சிருஷ்டித்த பிர்மதேவனே! இவ்வுலகிடேற அவதாரஞ் செய்து நாபாஜிசித்தரென்ப் பேர்பெற்றுப் பக்தசரித்திரங்களை யெல்லாம் இந்துஸ்தானி பாஷையிற் செய்துவைத்து அன்பரைக்காத்து ரக்ஷித்து நாளதுபரியந்தம் இவ்வுலகில் உலாவிக் கொண்டிருப்பாரெனின் இதன் மகிமையை ஒருவராற் சொல்லக் கூடியதோ? சொல்ல மானிடராற் பாடியதோ? பக்தசாரமெனப் பேர்வழங்கும் பக்தவிஜயமானது பிர்மானந்த ரசத்தையளித்துச் சந்ததமுங்களித்து அழியாச் சத்யக்ஞானனந்த பிரம்ம மாத்திரமா யிருக்கச்செய்வதால் தேவாமிர்தமென்றும், கொலை களவு கட் காமம் குருநிந்தை யென்னும் பஞ்சமாபாதகங்களை நீக்குதலால் பாகிரதியென்றும், அனந்தஞ்சரிதங்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பதால் இதிகாசமென்றும், ஸ்ரீமந் நாராயணருடைய திருவிளையாடல் நிறைந்திருப்பதால் விஷ்ணுபுராணமென்றும், சாட்சாத் பரமசிவத்தின் பல மகிமைச் சரித்திரங்களடங்கியிருப்பதால் சிவபுராணமென்றும், பிரபஞ்சோற்பத்தி நாசமும் விதிநிஷேதங்களும் பல நிலைகளுமுரைப்பதால் வேதமென்றும், வேதமுடிவான மகா வாக்கியார்த்தங்களின் இரகசியங்கள் அனந்தமிருப்பதால் வேதாந்தமென்றும் சொல்லப்படும். அன்றி இதில் மதபேதங்களைக் கண்டித்து மானபிமானங்களைத் துண்டித்து அரியரனைச் சமமாகப் புகழ்ந்து அல்லவென்பவர்களை யிகழ்ந்து கர்மக்கிரியைகளைக் குறைத்து பிரமக்ஞானத்தை நிறைத்துத் துன்பத்திலிருப்போரைப்

பிழைத்து இன்பத்தில் வாருமென்றழைத்து, ஜன்மங்கள் இல்லாமற்போக நன்மைபெற்று எந்நாளும் வாழ்க. பிர்மானந்த போதத்தையே விரித்துரைத்தலால் வேதாந்தசித்தாந்த விளக்கமென்றும் சொல்லலாம், இவ்வளவு மாட்சிமையான மோட்சகாட்சிக் கிரந்தத்திற்குப் பக்தவிஜயமெனப் பேர்வைத்திருப்பது ஏனின்: அரியா குருபக்தியில்லாமல் சித்திமுத்தி யடைந்தவர்களில்லாமையாலும், எல்லாவற்றிற்கும் பக்தியே காரணமாதலாலும், பக்தியில்லாதவர்க்கு முக்தி யில்லாமையாலும், இதிற்சொல்லும் பிர்மக்ஞானிகள் அனைவரும் பகவத்பக்தியினாலேயே சித்திரவிரக்தி முக்தியடைந்தார்கள் ஆதலாலும், பக்தியினாற் காமக் குரோத லோப மோக மத மாச்சரியங்களென்னும் அரிஷ்டவர்க்க வீரர்களைச் செயித்து, விஜயம்பெற்று, உண்மைக் ஞானமும் பேரின்பமும் கைவல்யமும் அடைந்தபடியால் பக்தவிஜயமெனப் பெயர் வைக்கப்பட்டது.

அன்றி, கலியுகாதி 4811-ம் வருஷத்தில் துக்காராம் புத்திரியின் குமாரனாகிய வாசுதேவபாவா என்பவர் பண்டரபுரத்தில் பிரமாம்சமான நாபாஜிசித்தர் செய்த இந்துஸ்தானி பாஷையில் உள்ள பக்தசாரத்தைப் பாராயணஞ் செய்துகொண்டிருப்பதை அவ்வூருக்கிறைவனாகிய பாதுஷா நாடோறுஞ் சிரவணஞ் செய்துகொண்டே வந்து துக்காராம் பொந்தியோடும் சகலரும் பார்க்க வானுலகிற் சென்றார் என்பதைக்கேட்டுச் சந்தேகங் கொண்டு துக்காராம் போனதைக் கண்ணாரப் பார்த்தவர்கள் யாராவது இவ்வூரில் இருக்கிறார்களா? எனக் கேட்டான். இரண்டொருத்தர், நாங்கள் சிறுவயதுடையபாரா யிருந்தபோதுபோனார்; இது மெய்யென்றுரைக்க, அரசன் நம்பிக்கைகொள்ளாமல் இது சுத்த அபத்தமென்றறைய, அதற்குத் துக்காராம் பேரன் வயதில் மிகுந்த என்மாதாவுக்குத் தெரியுமெனப் புகல, இராஜன் உன் மாதாவை யழைத்துக்கொண்டு வந்து மெய்ப்பித்தாலும் நம்பமாட்டேன்; இனி இப்புராணத்தைக் கேட்கவுமாட்டேன் எனச் சபையிலுள்ளவரும் அப்படியே புகன்றார்கள்.

வாசுதேவபாவா தானுஞ் சந்தேகங்கொண்டு தன் தாயைக் கேட்டு நிஜந் தெரிந்துக்கொள்ளவேண்டிய வெண்ணத்தால் புராணத்தை நிறுத்திச் சபையோரை நோக்கி, அடியேன் வருகிறபரியந்தம் யாரும் போகாதீர்கள். இதோ அரைக்கணத்தில் வருகிறேனென்று அறைந்து, சபையை நீங்கித் தன் வீட்டை

நோக்கிப்போகையில், அந்தச் சபையில் சாதுவேஷத்துடன் வந்து நாடோறுங் கேட்டுக்கொண்டிருக்கும் துக்காராம் தனது பேரனைக் கூப்பிட்டுக்கொண்டே போய்த், துக்காராம் ரூபத்துடன் நின்று, அப்பா வாசுதேவா! நானே துக்காராம் என, அவர் நீர் துக்காராமாயின் என் தாயிடம் வாரும் என, துக்காராம் வாவென்று அழைத்துக்கொண்டுபோய்த் தன் புத்திரியின் நாமத்தைச் சொல்லிக்கூவினர். தந்தையின் தொனியைக்கேட்ட அவ்வம்மணி திடுக்கென்றெழுந்து ஓடிவந்து தந்தையின் அடிகளிற் படிந்து, ஓ என் தந்தையே! நீர் வந்தது வெகு விந்தையே; 80-வருஷங்களாக எங்கு மறைந்திருந்தீர்? எனப் பலவிதங்களாகத் தோத்திரஞ் செய்தாள்.

துக்காராம் வந்த காரணத்தைப் புகன்று, பேரனுக்குற்ற சந்தேகத்தை நிவர்த்திசெய்து, அடா என் கண்மணியே! நான் மீட்டிக்கொண்டிருந்த இந்தத் தம்பூரைச் சபைக்குக் கொண்டு போய், ஓ சபையோரே! துக்காராம் பொந்தியோடும் மேலுலகிற் சென்றது மெய்யாகின் அவர் கரத்தால் மீட்டிக்கொண்டிருந்த இந்தத் தம்பூரும் அந்தரத்திற் செல்லும் என்றுரைத்துக் ககனத்திலெறி; உடனே நான் பிடித்துக்கொண்டு வானுலகிற் செல்கிறேன் என்றுர்.

அதைக்கேட்ட வாசுதேவபாவா சந்தோஷசித்தனுகச் சபையையடைந்து இறைவனை நோக்கி, ஓ பாதுஷாவே! உமக்குற்ற சந்தேகத்தை இத்தம்பூரால் நீக்குகிறேன் பாரும் என்று உரைத்து ஸ்ரீமந் நாராயணனைப் பலவிதங்களாகத் துதித்து, ஓ என்னுண்டவனே! உமக்கு அத்தியந்த பக்தனுன துக்காராம் பொந்தியோடும் வானுலகிற் சென்றது சத்தியமானுல் அவருடைய தம்பூரும் அந்தரத்திற் செல்லும் என்றறைந்து ஆகாயத்தில் எறிந்தார். உடனே துக்காராம் அதைப் பிடித்துக்கொண்டு தம்பூரை மீட்டித் தாளத்தைக்கூட்டி ஜெயவிட்டல் பாண்டுரங்க விட்டல் எனப் பற்பல பாடல்களைப் பாடிக்கொண்டே அந்தரங்கத்திற் சென்றுர். அன்றிப் பக்தசரிதத்தை அன்புடன் ஓதுபவர்களும் கேட்பவர்களும் பவசாகரத்தையும் துக்கசாகரத்தையும் கடந்து, சகல சுபமங்களமும் பிர்மானந்தமு மடைந்து மோக்ஷவீட்டைப் பெறுவார்களென்று உரைத்து மறைந்தார்.

ஆதலால் இதன் பெருமையை மதித்துரைக்கக் கூடுமோ? இதைப் பக்தியுடன் பார்ப்போர்பால் யாதொரு துன்பமும்

நாடுமோ? நாடாது. ஸ்ரீமகாபாரத ராமாயண பிர்மாண்ட புரா ணத்திலும் பெருத்த நூலான இதை கலியுகாதி 4732-ம் வருஷத் தில் விரிஞ்சாவதாரரான நாபாஜிசித்தர் இந்துஸ்தானி பாஷை யில் 700-சரித்திரங்களைச் செய்து பக்தசாரமெனப் பெயர் வைத்து உத்தவசித்தர் முதலானவர்களுக்குப் போதித்தார்.

அதுகேட்ட உத்தவசித்தர் 700-சரித்திரங்களையும் சுருக்க மாகக் குவாலியர் பாஷையிற்செய்து பக்தமாலாவெனப் பெயர் வைத்தார். மைபதிபாவாஜி யென்பவர் கலியுகாதி 4862-ம் வரு ஷத்தில் ஒருவர்க்கொருவர் போதித்த ஞானவாக்கியங்களை முழு துஞ் சேர்க்காமல் சிலவற்றைச் சேர்த்து 109-சரித்திரங்களை மாராஷ்டபாஷையிற் செய்து பக்தவிஜயமெனப் பெயர்வைத்து மற்றைச் சரித்திரங்களுக்குச் சந்தவிஜயம், சந்தவிஜய லீலாமிர் தம் எனப் பெயர்வைத்தார். தீபதேவ என்பவர் ஞானவாக்கியங் களைமாத்திரஞ் சேர்த்து மாராஷ்டபாஷையிற்செய்து தீபாத்ஞ கரமெனப் பெயர்வைத்தார். இவைகளையெல்லாம் பார்வையிட்டு ஒன்றுக்கொன்று ஏறக்குறைவா யிருப்பவைகளைப் பெரியோர்கள் பாற் கேட்டுச் சரித்திரங்களிற் சற்றும் பிசகின்றி வரிசையாகக் கலியுகவருஷம்-4966, விக்கிரமாதித்தவருஷம்-1922, கிறிஸ் துவவருஷம்-1864, சாலிவாகனவருஷம்-1787, ஹிஜரிவரு ஷம்-1280, பசலிவருஷம்-1273, கொல்லமாண்டுவருஷம்-144, சதுர்வேத சித்தாந்த சபாவருஷம் 24-ல் சிற்றூர்-வேங்கடதாச ரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, சைதாபுரம் உமாபதி முதலியாரால் பிரசித்தஞ் செய்யப்பட்டது.

---

# அவையடக்கம்



விருத்தம்

கசடரிலுங் கசடனெனத் திரிந்துழலு மடியேனுங் கரங்கள் கூப்பி
நிசபதத்தை யளிக்கின்ற நித்தியஷண் முகப்பெருமா னெடிய பாதம்
நசையுடனே பணிந்திந்த பக்தவிஜ யம்மடியே னவின்றேன் சொற்கள்
பிசகிடினும் பெற்றோர்க்குப் பிள்ளைசொலுங் குதலைமொழி பிரிய மாமால்.

தெரியாத தன்மையினன் முன்னோர்க ளுரைத்தபடி தமிழிற் செய்யுந்
தாமேது மறியாம விருக்கையிலுஞ் செய்யுமெனைத் தயவி லாமற்
பெரியோர்க ளிகழ்ந்தாலும் பயனலா திழிவுண்டோ பிறவிமாற்றுந்
திரமான வவுடதமாம் பெரியோர்க டிருவாயின் றீஞ்சொ ருனே.

என்று பெரியோர்களின் திருவருட்கமலக் கழல்களைப் புகழ்ந்து மகிழ்ந்து, பிரமா-விஷ்ணு-ருத்திரன்-ஆதிசக்தி-வியாசர்-வான்மீகர்-சுகர்-உத்தவர்-நாரதர்-பிரகஸ்பதி-அருணன் - அக்ரூரன்-அனுமான் முதலானவர்களும் இவ்வுலகிலுள்ளோர் ஈடேறும்பொருட்டு அவதாரஞ்செய்த சரித்திரங்கள் நிறைந்த பக்த விஜயத்தைக் கல்வியில்வல்ல வித்துவான்கள் தமிழிற் செய்யுளாக வல்லது வாசகமாகச் செய்யல்வேண்டும். அக்கல்விகளைக் கனவிலும் அறியாக் கடையேன் துர்க்குணங்கள் நிறைந்த மடமையேன் தமிழிற்செய்ய ஆரம்பித்தது எப்படியிருக்கிறதெனில் வறுமையுள்ளோர் இரசவாதமும், யாசகன் இராஜரீகமும், பொன்னாசையால் அலைவோன் சன்யாசமும், இகபோகங்களை யாசித்துப் பகவானை மேலுக்குப் பூசித்துப் பரமபதமடைய விரும்பின பாமரனும், புருஷனை வஞ்சித்துப் பரபுருஷனை நாடிய பாவை, மதிதனின் மிகுந்த பதிவிரதத்தன்மையையும் இச்சித்ததுபோ லிருக்கின்றது. அன்றி, பஞ்சலட்சணங்களை யறிந்து இஷ்டதேவதையின் வரப்பிரசாதங்கள்பெற்ற கவிராஜர்களுக்குமுன் ஆசியக்கூத்தனாகிய அடியேனுரைக்கும் ஆசியச்சொற்களில் அனேகம் பழுதுகளிருக்குமாயினும் ஆசியச்சொற்களைப் பலரும் ஆனந்தமாகக்கேட்டு நகைப்பதன்றி இன்னங் கேட்க விரும்புகிறதைப்போல ஆசியச்சொற்களாகிய விதனையும் விரும்புவார்களானாலும் தீனனுடைய ஈனச்சொற்கள் நகைக்கிடமாயிருப்பினும்பக்தசரித்திரங்களென்னும் ஆனந்தவெள்ளம் இதைப் பார்ப்போர்மேற் பொங்கி அகமும் புறமும் நிறைந்து

தங்கித் தனக்குள்ளாக்கிக்கொண்டு இதிலுள்ள சாரம் ஆச்சரிய மெனவிண்டு, துச்சச்சொற்களை யெல்லாஞ் சொச்சச்சொற்களாகக் காட்டும். குற்றம் பார்க்கப்புகின் இதில் வரிக்குப் பல குற்றங்களிருப்பதற்கு ஐயமில்லை. ஏனெனின். "முக்கண்ணுள்ள முதல்வன் பாடிய ஓர் பாவில் முக்குற்ற மெடுத்தவருமுண்டு, குற்றம் பார்க்கில் சுற்றமில்லை-சுற்றம்பார்க்கிற் குற்றமில்லை" அன்றித் தாய் தந்தையர் தங்கள் மதலைகள் பேசுங் குதலைச் சொற்களில் ஓர் அற்புதமில்லாதிருந்தும் சொற்பமாய் எண்ணமற் கற்பனையும் விற்பனமுமுள்ளதாகப் பாவித்து அன்பாயின்பாய்க்கேட்டு உல்லாசமடைந்து உடம்பு பூரித்து ஆனந்தவாரியில் நிதானந்தப்பித் தான் இறந்திருப்பதைப்போல முத்துக்களையொத்த பற்பல அற்புதச்சொற்களை வித்தகமாகச்சேர்க்கும் உத்தம கர்த்தவ்ய சர்ச்சனர்களாகிய எந்தைகளே! உங்கள் சொந்த மைந்தனுந் தாசானு தாசனுமாகிய வேங்கடதாசன் தங்கள் திருத்தாட்டாமரைகளைச் சிரமேற்சூட்டி தூபதீபங்களைக்காட்டிச் சகல சந்தேகங்களையும் வாட்டி நிர்பயனெனப் பாராட்டித் தடைவருமென்பதை யோட்டி அடியாரடிகளை மனதில் நிலைநாட்டிச் சடாட்சரத்தை நாக்கிற்றீட்டிப் பக்தவிஜயத்தைச் சக்தியில்லா மோசகன் வாசமாகச்செய்யுங் கொடியேனாகிய வடியேன் புன்மொழிகளை நன்மொழிகளாக வங்கீகரித்து இவனறிவுக்கு எட்டினது இவ்வளவென்று யோசனையோடு பல ஆசிகள்கூறி, பழுதிலார் சரித்திரங்களைமுழுதும் பார்த்தால் அன்பாக முன்பு தோற்றித்தென்பெனும் மலைமீதிலேற்றி மனோவிகாரங்களை விலக்கி வினோதம் பலபல துலக்கிப் பரப்பிரம்ம விலாசத்தைக்காட்டிப் பரிபூரணானந்தத்தை நிலைநாட்டி ஆனந்த பாஷ்பங்களைப் பெருக்கி அன்பிலா நெஞ்சினை யுருக்கி ஆனந்த சாகரம்புரண்டு அளவிலா வாசைகள் திரண்டு அப்புறம் வேறவாக்குறைந்து ஆனந்தமெப்பொழுதும் நிறைந்து திக்குதேசாதிகளிறந்து திருக்ஸ்வரூபத்தில் மறைந்து ஆமைபோலடங்கி ஊமைபோல் ஒடுங்கி ஒரு விகாரங்களுமின்றி பெருமை பாராட்டலுங் குன்றிச் சங்கல்ப விகல்பமுங் கெட்டு அங்கமேல் ஆசையும்விட்டுக் கேவல கைவல்ய பிரமானந்த சொரூப சாக்ஷாத்கார சுயம்பிரகாச சுபமங்கள சின்மய தேஜோமய சித்விலாச சத்களமான பரப்பிரமத்திற் சொக்கியிருப்பார்கள்.

---

## விஷ்ணுபக்தர் வாக்கியம்

விருத்தம்

நின்றவொன்றையுணர்ந்தேனுக் கதனுணோர்மைய துவிதுவென்
றென்றமொருவர்க்குணாலகா துணர்ந்துமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபராம்பரமா யாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானங்கடந்ததே
நன்றாய்ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாநீத்
தொன்றாய்க்கிடந்தவரும்பெரும்பா மூலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்
அன்றேயப்போதேவீடு யதுவேவீடுவீடாமே.

## சிவபத்தர் வாக்கியம்

விருத்தம்

அஞ்சலென்ற காதலமுங் கணபணகங் கணமும்
அரைக்கிசைந்த புலியுடையு மம்புலிச் செஞ்சடையும்
நஞ்சமுண்ட மணிமிடறு முன்னூலு மார்பும்
நலந்திகழ் வெண்ணீற் றொளியு மறிமானு மழுவும்
கஞ்சமலர்ச் சேவடியுங் கருணைபொழி முகமுங்
காமனையன் றெரித்ததிருக் கண்களொரு மூன்றும்
பஞ்சடிசிற் றிடைமடந்தை யொப்பனைபா கனுமாப்
பால்வண்ண னுளத்திருக்கப் பயமுண்டோ வெமக்கே.

என்றுரைத்த

## பதிக்கவர் சதியுரைத்த வாக்கியம்

விருத்தம்

ஆக்கையெனும் புழுக்குரம்பை யணைந்தணையாப் பொருளை
அருளொளியைப் பராபரத்துக் கப்புறமா மறிவை
நீக்கமற மயிர்முனைக்கு மிடமறநின் றிலங்கும்
நிறைந்துநின்ற பெருவெளியை நினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள் செய்தனந்தந் தவக்குறைகண் முடிக்கும்
பழவடியார்க் கருளுதவும் பகுந்துணர் கற்பகத்தை
வாக்குமன விகற்பத்துக் களவுபடா வொன்றை
மாசற்ற பெருவெளியை மனவெளியி லடைப்பாம்.

குருநாதன் திருவடி - அருள்போதம் தருமுடி.

பாயிரம் முற்றிற்று.

---

# தோத்திரம்

ஓம் பரப்பிர்மணேநம, கணேசாயநம, கார்த்திகேயாயநம, சிவாயநம, விஷ்ணுவேநம, பார்க்கவியேநம, கவுரியேநம, பாரதியேநம, பிரமதேவாயநம, நாரதாயநம, தக்ஷிணாமூர்த்தியேநம, தத்தாத்ரேய யோகீஸ்வராயநம, ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமத் சங்கராசார்ய பதாம்புஜமேநம, அப்துலாசாயப் திருவடிகளேநம, அல்லிமீயா சரணங்களேநம, மாரிமுத்துப் பிரம யோகீஸ்வராயநம, குருவேதுணை, குருவாழ்க. சுபம்! சுபம்!!

---




ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# பண்டரிபுரத்தின் வரலாறு

ஸ்ரீமந் நாராயணருடைய பிரதான குணம்போலவும், லம்போதரனணியு மம்பரம்போலவும், சுப்ரமண்யர் திருநாமங்களிலோர் நாமார்த்தம்போலவும், பரமசிவனுர் மேனியைப்போலவும், சீதேவியின்ருய்க்குள்ள நிறம்போலவும், உமாமயேசுவரி லலாடத்திலிடும் பொருள்போலவும், நாமகள் வீற்றிருக்கு மாசனம்போலவும், அஷ்டாக்ஷரன் வாகனம்போலவும், கோதுக்குள்ளாய் வாதஞ்செய்வோர் மனவாதையுட னுதியூதி வேதையுற்றினிதுபோதுமென் ருேதும்படியாகச் செய்யும் சூதம்போலவும், பிரணவாக்ஷரத்திலுள்ள திரியாக்ஷரங்களை மாறி இலக்ஷமுருவேற்றி இராகுவுக்குச் சசியுணவாயாதி வருணர் ஸ்நானஞ் செய்யக் கிருபைகூறத் தமக்குத்தப்பிப் புறம்புசிதலுக்குமுன் மூலாக்ஷரத்தைச் சித்திசெய்துக்கொள்வோரால் ஊறுசெய்யப்பட்ட பேதியின் வெண்டாதுவைப்போலவும், விளக்கமுற்ற அப்ரங்கள் சுப்ரமத்தி லாரோபமாய்த் திரிகுணங்களுக்குத் தாயாகிய மாயையில் முதல்முத லுற்பத்தியாய் ஏககுணமாய் எங்குமிருப்பதாய் எங்குமில்லாததாய் சங்கையறப் பார்ப்போர் முன் தங்கியிருந்து அங்கமில்லா மங்குலிற்ருவி சடாதரன் முடியி லொளித்துக்கொண்டே சோமுகாசுரனும் திதிமுதற்சுதனும் பதுங்கவும், மதுகைடவருலாவவும், ஆதிசேஷன் தங்கவும், இடங்கொடுத்து வாயின்றியே ஓயாமல் அஷ்டதிக்குப் பாலகருட னுரக்கமின்றி ஓசையுடன் பேசிக்கொண்டும், ஒருவனுக் கைக்கியமாயிரா வேசைக்கிணையாகியும், கற்பி லொப்புவமையில்லாப் பஞ்சகுணமுள்ள வஞ்சியைத் தரங்கமென்னும் கரங்களாற் ருவிப்பிடிக்க நீட்டி நீட்டி அகப்படாமல் வாட்டமடைந்து சதுர்க்குணமுட னெப்போதும் பிரணவாக்ஷரத்தையுச்சரித்துக்கொண்டிருக்கும் முப்பூவிலொன்ருன உப்பளிக்கும் அப்புப் பெண்ணைக் கூடிக் கர்ப்பமடைந்து பின்னிடைந்து திருமால் வண்ணம்போலவும், சிவனுர் குணம்போலவும், பாமரன் மனம்போலவும், அளகேசனவாக்கொண்ட புளகக்குளகன் ருயினளகம்போலவும், நிதங்கொண்டு மீண்டு கற்புள்ள பதிவிரதையையும், ஆசாரமுள்ள பிரமசாரியையும், தருமத்திற் சிறந்த

4

கிரகஸ்தனேயும், தவத்திற் செழித்த வானப்பிரஸ்தனேயும், ஏகீக பாவமுள்ள சந்நியாசியையும், தன்னே மறந்த ஆரூடக் ஞானியையும், தலைவனிற் கலந்த அவதூதனேயும், நீதியால் நிறைந்த வாருகனேயும், ஜீவகாருண்ய விரதத்தையும், அரியரபக்தரையும், அறுபத்துநான்கு கலேகள் கற்று மகங்காரமற்றிருக்கும் சித்தரையும் அகமமதையற்றிருக்குஞ் சுத்தரையும், களிக்கடலிற் படிந்திருக்கும் முத்தரையும், திரிகுண சம்பையென்னும் அம்பகத்தைத்திறந்து பார்த்துக்கொண்டே பறந்து உபயகுணன் மோதுவதால் வேதையுற்று அச்சத்தா லிரிதலுற்றுத் தங்களுக்கு ளிகல நேரிட்டு இடிபட்டுப் பெருங்கூச்சலிட்டுத் தட்டுகெட்டுத் தடுமாறிக்கொண்டே பலதிசைகளிலு மலேந்து குலேந்து ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவினுடன் பிணங்கிச் சந்திரதிலகம் - காகதுண்டம்- கேசரம்-பாடலம் - துருமோத்பலம் - திலகம்-சம்பகம் - நாகம் - நாரங்கம்-நாகரி-மாலதி - மௌவல் - முல்லே - குல்லே - மரவம்- கவீரம்-தமநகம்-அநங்கம்-முண்டகம்-வலம்புரி-புற்பதி-மூக்கம்- கோலம்-பநசம்-ஆம்பிரம்-நாளிகேரம் - அரம்பை - கழை-வடம் காஞ்சுநம்-காகோளி-குஞ்சராசநம்-மதலே-சதாபலம் - மாதுளுங்கம்-கபித்தம்-குந்தம்-நீபம்-பூரணி-ஆஞ்சி-முதலிய செடி கொடி தருக்கள் பெருக்கமாய் நெருக்குண்டிருக்கும் திண்டிரவனத்திற் றங்கியிருக்கும் ருக்மணியைக்கண்டு ஆனந்தங்கொண்டு இதுவே நாம் நாடிவந்த ஸ்தானமெனத் துணிந்து சமுசாரிகளின் வாட்டம் நீங்க தவசிகளின் கோஷ்டமோங்க ஆசைகொண்டு யாசகஞ் செய்வோர்க் கறமோருருவா யவதரித்தோனளிக்குந் தானம்போலவும், மோசஞ்செய்யும் வேசையர் பாசத்துக்குட் பட்டவன் நேசத்துடன் அத்தாசிகட்கு விசுவாசத்துடன் மாசை யீவதைப்போலவும் பொழிந்து ருக்மணியின் பிணக்கைத்தவிர்க்க உருக்கமாய் வந்து,

சந்திரபாகாநதிக்கரையில் தந்தைதாய்க்குச் சேவைசெய்யும் புண்டரீகன் சிரத்தாபத்தியைநோக்கி ருக்மணிபாற் செல்லுமவாவை நீக்கிப் பீமநதியின் தீரத்தில் நிற்கும் பகவானேத் தேடிப் பாதபரிசத்தை நாடித் தங்காமலோடிச் சந்திரபாகையைக் கூடிப் பகவானடிகளேத் தழுவி அளற்றைக் கழுவிக் களிப்பால் வழுவி மெதுவாய் நழுவிப்போகும் பகவானிருக்கும் சந்திரபாகாநதிக்கும், ருக்மணியிருக்கும் திண்டிரவனத்துக்கும், இடையிலுற்ற பண்டரபுரத்தின் மகிமையே மகிமை. அன்னப்பிரமம் ஜெகநாதமென்றும், பூரணப்பிரமம் திருப்பதியென்

றும், தாரகப்பிரமம் வாரணாசியென்றும், நாதப்பிரமம் பண்டாரபுரமென்றும், சாஸ்திரங்கள் முறையிடுவதால் சமஸ்த சுபங்களாற் பூர்த்தியடைந்திருப்பது பண்டாரபுரமேயெனக் காட்டியது.

புண்டரீகபக்தன் தன் அண்டையில் வந்த விண்டுவைப் பண்டாரபுரத்திலிருக்கும் தொண்டர்களை யண்டித் தொண்டுசெய்தன்னமுண்டு உவந்தேனென விண்டு ஆனந்தங்கொண்டு, அக்கண்டங் கடக்காமலிருக்க வரம் வாங்கிக்கொண்டபடியால் பண்டாரபுரத்தின் மாக்ஷிமைக்கு எது சாக்ஷியாகும் என்று உரைக்கலாம். அன்றி,

பண்டாரபுரத்தின் சமீபத்தில் சதவருஷங்களுக்கு முன் களிப்பெய்தி ஒருஜாமம் பொன்மாரி பொழிந்திருக்க அதற்கு எதை ஒப்பெடுத்து உரைக்கலாம். இவ்வளவு அலங்காரமுள்ள பண்டாரபுரத்தில் கோபுரங்களும், மாபுரங்களும், கொடிகளும், பிடிகளும், மடங்களும், தடங்களும், ஓடைகளும், மேடைகளும், நீதிகளும், வீதிகளும், நிதிகளும், யதிகளும், பெருஞ்சோலைகளும், அருஞ்சாலைகளும், சாதுக்கள் கூட்டங்களும், சங்கீர்த்தன கோஷ்டங்களும், வரையுங் குறையுமின்றி யிருக்குமாயின் தாழ்வொன்றிருப்பதென்று உரைப்பதற்குக் கூடுமோ? மாந்தரின் வறுமையைக் கழித்து இப்பூவுலகிற்செழித்து இருப்பது பண்டாரபுரமே யெனப் பிரத்தியக்ஷமாகப் பொன்மாரியைப் பொழிந்து மேகங்களே காட்டியிருக்க மதபேதகராயினும் அநுமானங்கொள்ள இடமுண்டோ? இல்லை. மேலும் அப்பண்டாரபுரத்தில் வசிக்கும் குடிகளின் பக்தியைக் கிஞ்சித்து என் அறிவுக்கு எட்டியவரையில் யெடுத்து ஓதுகின்றேன். அதெப்படியெனில்; எட்டு வயது குழந்தைகள் முதல் ஆணும் பெண்ணுமான பெரியோர்களும், அதிகாலையிலெழுந்து சந்திரபாகா நதியையடுத்து, ஸ்நான அனுஷ்டானங்களை முடித்து பகவந்நாமங்களைப் பலவாறு படித்து, ஆங்காங்கு தன்னை மறந்து நடித்து சன்னதியை யடுத்து பாண்டுரங்கனைச் சேவித்து மெத்த அன்பு செய்து ஆலிங்கனாதி வினயங்களால் இன்பமெய்து பூர்வஜென்ம வினைகளைக் கொய்து சதாகாலமும் இடைவிடாது பஜனைசெய்து ஆனந்தவாரியில் முழுகி நாளைப்போக்கிக்கொண்டிருப்பார்கள். இது நிற்க வியாபாரிகள் பக்திசெய்யும் விதம் எப்படியெனில்? யாதாமொரு வஸ்து வேண்டிவரும் அவர்கள்

பணத்தைக் கொடுக்கும்போது விட்டல விட்டல என்று பகவந் நாமத்தை நவின்றுக்கொண்டே பணத்தைக் கொடுப்பார்கள். வியாபாரியும் அப்பணத்தைப் பெற்றுக்கொள்ளும்போது விட்டல விட்டலவென்று சொல்லிக்கொண்டே பெற்றுக் கொள்ளுவார்கள். ஆகையால் அப்பண்டாபுரத்தை பகவந்நாம பஜாரென்றே சொல்லத்தகும். அப்படிப்பட்ட பண்டாபுரத்தில் பகவான் சன்னிதி செய்துகொண்டு இருப்பதற்குக் காரணம் யாதெனில்? புண்டரீக பக்தனிமித்தியம் வைகுந்தமா நகாத்தை விட்டுவந்து புண்டரீகனுக்குக் கொடுத்த வாத்தின் பொருட்டு செங்கல்லின்மீது நின்று இரண்டு காங்களையும் இடுப்பின்மீது வைத்துக்கொண்டு ராதா ருக்குமணி சமேதராகி பக்தர்கள் இஷ்டார்த்தங்களைக் கொடுத்து ரக்ஷித்துக்கொண்டிருக்கின்றார். பாண்டுரங்நாதனிடம் வரம் பெற்றுக்கொண்ட புண்டரீகனென்பவர் யாவர்? அவர் பகவானைப் பக்திசெய்த விதம் எப்படி? அந்த விவரத்தைக் கேட்கவேண்டுமென்றால் அப்புண்டரீக பக்தன் வாலாறு எப்படியெனில்,

## புண்டரீகபக்தன் வாலாறு



சந்திரபாகாநதிக்கும் திண்டிாவனத்துக்கும் நடுவில் பண்டரி என்கிற ஓர் நாடு உண்டு. அதில் புண்டரீகபக்தன் என்னும் ஓர் புண்ணியசீலன் பாபாத்மாக்களில் முதல்வனும், பிரம குலத்தில் பிறந்தவனாகியும், தாய் தந்தையர்க்கு வணங்கி நடப்பவனாகியும், சகல சாஸ்திர புராணங்களில் வல்லவனாகியு மிருந்தமையால் தாய் தந்தையர்கள் சந்தோஷித்துப் புதல்வனுக்கு மணம்புரிவிக்க எண்ணங்கொண்டு, தங்கள் மாபில் ஓர் கன்னிகையைப் பேசி மணஞ் செய்வித்து, அன்பாய்ப் பாதுகாத்துக் கொண்டு வருகையில், சிலநாள் கடந்தபின் கலியாணப்பெண் தன் கணவனாகிய புண்டரீகனை நோக்கி, "ஓ ஸ்வாமி! தங்கள் தாய் தந்தையர்கள் என்னேரமும் என்மீது ஏதோ ஒரு குற்றத்தைச் சாட்டி வைத்துக்கொண்டிருப்பது மன்றிப் பார்த்துப் பார்த்து வயிறு எரிகின்றார்கள். ஆகையால் இன்றுமுதல் எனக்கு அவர்களுடன் ஒருமித்திருப்பதற்குச் சம்மதியில்லை. அவர்கள் இருவரையும் வேறு எங்கேயாகிலுங் குடியேற்றினாலன்றி நான் உம்முடன் கூடிவாழ்வேன்; அப்படிச் செய்யா

விடில் நான் தாய்வீட்டைச் சேர்வேன்" என்றாள். அதற்குப் புண்டரீகபக்தன் தனக்கு மனையாள்மீதிருக்கும் அதிக மோகத்தினால் உடனே தாய்தந்தையர்களை அடித்து வேறகத்திற் குடியேற்றிச் சவரட்சணை செய்துக்கொண்டு மிருப்பவனாயும், மனைவியைப் புகழ்பவனாயும், மாதாபிதாக்களை யிகழ்பவனாயும், மனையாள்மொழி மகாவாக்கிய மென்பவனாயும், ஒருபோதுந் தர்மஞ் செய்யாதவனாயும், ஒருதரமாகிலும்பகவான் திருநாமத்தை உச்சரிக்காதவனாயும், சாதுக்களைக் கண்டால் தூஷிப்பவனாயும், தையலரைக்கண்டால் பூசிப்பவனாயும், வேசையர் வலையிற் சிக்கினவனாயும், மிகவும் மோகத்திற் சொக்கினவனாயும், ஈவதை விலக்குபவனாயும், எளியோரை எதிர்ப்பவனாயும், கோள் சொல்லுவதிற் சிரேஷ்டனாயும், குலத்திலும் சிரேஷ்டனாயும் இருப்பவன்.

முன் சென்மத்திற் செய்திருந்த தபோபலத்தாலோ! இவன் தந்தைதாய் செய்யும் மாதவத்தாலோ! பிராஜைகளின் பலவந்தத்தாலோ! பண்டரியில் விண்டுவானவர் வந்திருக்க வேண்டுங்காரணத்தாலோ! மற்றெவ்வகைப் புண்ணியத்தாலோ! ஓர் புராணிகர் காசிகாண்டத்தை வாசிப்பதைக் கேட்க விசுவாசத்துடன் அவ்வூரிலுள்ளோர் அனைவரும் போகிறதைக் குறித்து தானும்போக எண்ணங்கொண்ட புண்டரீகனில்லாள் ஓர்தினந் தன் மணாளனை நோக்கி, "ஓ ஸ்வாமி! பகீரதியின் மகத்துவத்தையும் வாரணாசியின் மேன்மையையும் கேட்க விருப்பங்கொண்டேன். ஆதலால் தேவரீர் கருணைகூர்ந்து இன்றைக்குக் காசிகாண்டத்தைப் பாராயணஞ் செய்யுமிடத்திற்கு என்னை யழைத்துக்கொண்டு போகவேண்டும்" எனப் பிரார்த்தனை செய்தாள்.

புண்டரீகன் "அடி பேதாய்! அறிவில்லாக் கோதாய்! வீட்டிற் பற்பல வேலைகளிருக்க அதை விடுத்துப்போய்ப் புராணத்தைக் கேட்டுவருவதால் அன்னமகப்படுமா? சொர்ன மகப்படுமா? கர்மிகள் புண்ணியக்கதையைக் கேட்பதாற் பிரயோசனமேது உண்டு. ஏனெனின் ஒன்றைக் கேட்டபின் அவ்வழியில் நிற்கவேண்டும்; சிரவணஞ்செய் தம்மார்க்கத்தில் நெஞ்சகத்தை நிலைநிறுத்தாதவனுக்கு நரகமே பிராப்தியாகும். புராணத்தை ஓதும் ஆதிவருணனே ஓதினபடி சாதனஞ்செய்யக் கூடாமற் றடுமாற்றத்துட னிருக்க நம்மாற் கூடுமோ? ஓதினபடி சாதனஞ் செய்யாப் பேதையரிலும் அதிபேதை யாருமில்லை யென்னும் பழமொழி மெய்யல்லவா? காசிகாண்டத்தில் என்னென்ன

வைராக்கியங்கள் இசைத்திருக்கின்றனவோ! அரையன் பறை சாற்றினவண்ணம் நடக்கா மாந்தர்க்கு ஆக்கினை கிடைப்பது போல பகவானுடைய பறையென்னும் புராணாதிகளைக் கேட்ட வண்ணமே நடக்கவேண்டும். இன்றேல் குற்றத்துக்காளாகிக் கடவுளுடைய ஆக்கினைக்கு உட்படவேண்டும். ஆதலால் நான் வரமாட்டேன்" என்று மறுத்தான்.

அத்தெரிவை, ஓ ஸ்வாமி! பரிசவேதியினால் அயமிரணியமாமன்றி மண்ணுங்கல்லும் மழையாகாததுபோலப் புராணங் கேட்கும் பலரில் ஒருவனே அதினர்த்தத்தைக் கிரகித்து நல்வழியில் நடந்து தீயமார்க்கத்துக் கிடைந்து மோக்ஷார்த்தத்தை யடைவான். மற்றவர்களிற் சிலர் நாடோறுங் கேட்கக் கேட்கத் துர்க்குணங்கள் நீங்கிச் சத்குணத்திற் பிரவேசிப்பார்கள். சிலர் பாபகர்மங்கள் செய்யக் கிஞ்சித்து அச்சமுற்று நாட்செல்லச்செல்ல மேற்குணத்திற் பிரவேசிப்பார்கள். சிலர் சாபங்களை முன்போற் செய்தாலும் சிரவணஞ்செய்யும் வேளைமாத்திரம் பிரயோசனப்பட்டு மறுஜன்மத்தில் நற்குணமடைவார்கள். இப்படியிருக்க, நீர் கேட்டபடி நடக்கச் சக்தியுள்ளவனே! புராணசிரவணஞ் செய்யவேண்டுமென்று உரைப்பது விசித்திரமே! அசிரத்தையுடன் புராணங் கேட்டாலும் புண்ணிய லோகங் கிடைக்குமென்று புராணங்கள் முறையிடுகின்றன. எனக்கு விவாகமாகுமுன் நாடோறும் புராணங் கேட்பதிலேயே நாள்கழித்தேன். விவாகமானபின் பதியே தெய்வமாதலால் உமக்குச் செய்யும் பணிவிடையே சகல நோன்புகளுமெனப் புராணங் கேட்பதையும் விடுத்தேன். எனக்கும் உம்மிஷ்டப் படியே நடக்கும் அடக்க ஒடுக்கமே மோக்ஷமளிக்கு மார்க்கமாகும். உமக்கோ சாஸ்திரங்கள் கேட்கவும் அதின் வழியால் நடக்கவும் சிரத்தை பூரணமாயிருக்கவேண்டும். அன்றி நீர் புராணங் கேட்க வந்தாலொழிய நான் போகமாட்டேன்; காரணம் பதியைப் பிரிந்துபோய்ப் பாவை புராணங்கேட்பது பகவானைப் புகழ்ந்து பரமசிவனை இகழ்ந்ததை யொக்குமென்றுரைத்துக் காதலன் மனதைக் கரைத்துப் பலவந்தமா யழைத்துக்கொண்டு போய் ஓர் சார்பிலிருந்து கேட்க விருப்பங்கொண்டிருந்தாள்.

புராணிகர் சகரானைக் குறித்துப் பகீரதன் பரமசிவனை நோக்கித் தவஞ்செய்ததும் பாகீரதியைக் கொண்டுவந்ததும் பஸ்பமாய்ப்போன சகராள்மேல் கங்கை பிரவாகித்ததும் சானவியின் பரிசத்தால் சகராள் புண்ணியலோக மடைந்ததும்

கோஹத்தி சிசுவத்தி பிர்மத்தி ஸ்திரீஹத்தி குருஹத்தி முதலானவை செய்யும் கொடும்பாவிகளானலும், மந்தாகினியில் ஸ்நானஞ்செய்தால் பாவனராய்ப் போவார்களென்றும், அப்படி அக்கங்கை பகீரதனுக்கு வரமளித்திருக்கிறளென்றும், வாரணாசியில் மரணமடைந்தவர் வலது செவியில் ஸ்ரீவிஸ்வநாதர் தாரக மந்திரத்தை உபதேசஞ் செய்கிறரென்றும், அதனல் மோட்சமடைகிறர்களென்றும், எப்பொழுதும் சுரநதியின் தீரத்தில் முனீஸ்வரர்கள் வாசஞ் செய்கிறர்களென்றும், அவர்களின் பாதங்களைப் பரிசித்த புண்ணியவான்கள் அனேகர் இருக்கிறர்கள்என்றும், பிரமாதிதேவதைகளெல்லாம் மாறுருபங்கொண்டு தவஞ்செய்கிறர்களென்றும், விரதத்திற் சிறந்தோர்களுக்கு இப்போதுந் தரிசனந் தருகிறர்களென்றும் சொல்லினர்.

அதுகேட்ட புண்டரீகன் உடனே எழுந்து புராணிகரைப் பணிந்து காசியாத்திரைக்குப் பிரயாணமாய்ப்போகையில் அவர் சதிபதியைவணங்கி அடியாளையுமழைத்துக்கொண்டு ஏகுமென்று கூடவே தொடர்ந்துபோகையில் அது தெரிந்த புண்டரீகபக்தனை ஈன்ற தாய் தந்தை வழிக்குத் தேவையான சாமக்கிரிகைகளேந்திக்கொண்டு தனயனுடன் வாரணாசிக்குப் பிரயாணப்பட்டு மார்க்கத்தில் தங்குமிடங்களில் மகனும் மருகியும் அலுப்புற்றிருந்தாலும் வயிரமேறிய மரம்போற் றுங்களே பாக முதலானவைகள் செய்தூட்ட உண்ணும் குமாரனும் அவன் மனைவியும் விருத்தர்கள் பளுவேந்திக்கொண்டு வருகிறதையும் அன்னபாகங்களமைத்துத்தருகிறதையும் கவனத்திற் கொள்ளாமல் வாரணாசிக்குப் போகவேண்டுமென்கிற எண்ணத்தையே பெரிதென மதித்துக் காசிவிசுவநாதரையும் விசாலாட்சியம்மையையும் வரநதியையும் துதித்துக்கொண்டு போனன்.

மனைவி நடக்கச் சக்தியற்றதால் தோள்மேல் ஏந்திக்கொண்டு செல்லும்போது மாதா பிதாக்களுடைய வருத்தத்தை மனதிற் றரிக்காமல் மறந்து பறந்து காசியையடைந்து குக்குடரிஷி வாசஸ்தானமாகிய அசியென்னுமிடத்தில் இறங்கிக் குக்குட மகாரிஷியின் மகிமையைப் பலருஞ் சொல்லக் கேள்விப்பட்டு அவரைக் காணுதற்கு அவாக்கொண்டு ரிஷியிருக்கும் அகத்திற்சென்று அவரைக் காணமல் அங்கு பணிசெய்துக்கொண்டிருக்கும் கங்கா யமுனு சரஸ்வதி நர்மதை கௌதமி என்னும் ஐவரையும் பார்த்துக் கரங்களைச்சேர்த்து அவர்களுடைய அழகு சுந்தரத்தையும், ஆபரணங்கள் பூண்டிருக்கும்

அலங்காரத்தையும், விசித்திரமான ஆடைக ளணிந்துக்கொண் டிருக்குஞ் சிங்காரத்தையும் கண்டு ஆனந்தங்கொண்டு, ஓ! ஓ! இவர்கள் நரலோக ஸ்திரீகளா? சுரலோகஸ்திரீகளா? ஆ! ஆ! அகலிகை துரோபதை சீதை தாரை மண்டோதரி என்னும் பஞ்சகன்னிகைகளாக விருக்கவேண்டும். இன்றேல், பூதேவி சிதேவி பவானி பாகீரதி பாரதியா யிருக்கவேண்டும். இன்றேல், பஞ்சகங்கைகளா யிருக்கவேண்டும். இன்றேல், அநுசூயை ரேணுகை பிருந்தை இந்திராணி அருந்ததியா யிருக்கவேண் டும் எனத் துதித்து, வேர்வைகள் சிந்தப் பலகாரபாகங்களை அதிக பரபரப்போடுஞ் செய்கிறதைக்குறித்து வாட்டமடைந்து மிகவுமிடைந்து, "ஓ புண்ணியவதிகளே! நீங்கள் தேவலோக கன்னிகைகளைப்போலவும் இராஜஸ்திரீகளைப்போலவுந் தோன் றப்படுகிறீர்களே! இப்பணிகள் செய்யப் பாங்கிகளில்லாமற் போனார்களோ? உங்களங்கைகள்நோக இப்பாகங்கள் யார்க்கா கச் செய்கிறீர்களோ? உங்களிருப்பிடமேதோ? நாமகரண மேதோ? அடியேனுக்கு உரைப்பதன்றி மெலிவான கரங்கள் நோக மிருதுவான பாதங்கள் வருந்தச் சிங்காரமான அங்கங் குலுங்கச் செய்யும் இம்மடப்பளி வேலையைச் செய்கிறதை நிறுத்துங்கள்; அடியேன் சங்கையைத் திருத்துங்கள் உங்களைவ ரால் செய்யப்பட்டபாகங்கள் நானே செய்வேன். மறுப்பீரேல் என் மனையைக்கொண் டியற்றிவைப்பேன். ஐயோ தூமத்தாற் சோமத்துக் கிணையான உங்கள் வதனங்கள் கருகிப்போகின் றதே! அனலால் அங்கம் வேகின்றதே!" என்றான்.

இவ்வாறு கூறும் புண்டரீகபக்தனைப் பார்க்க பஞ்சகங்கை கள் முனீஸ்வரர்களுக்குங் காணுதற்கரிதான நாம் மாதா பிதாவை வாட்டப்படுத்தின கோட்டனுக்குப் புலப்பட்ட காரணமேது? இது யார்செய்த சூது? என்று எரிந்து கோபம் விரிந்து, அடா துன்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! பஞ்சமா பாதகா! எமகாதகா! சீக்கிரம் இவ்விடம்விட்டுப் போ போ வென்று அதட்டும்போது புண்டரீகன் அன்புடன் பணிந்து, "ஓ புனிதவதிகளே! உங்களுடைய நாமதேயத்தையும், யார்க் காக இப்பாகங்கள்செய்கின் றீர்களோ அதையும் திருவாய்மலர்ந் தருளுவீராயின், இக்கணம் இவ்விடம்விட்டுப் போகிறேன்" எனச்சாற்றினன். அதற்குப் பஞ்சகங்கைகள் தங்கள் நாமத்தைப் புகன்று குக்குடமகாரிஷிக்கே இப்பாகங்கள் செய்கிறோமென்று அறைந்து இனி யிருப்பிடத்திற்குப் போவென்று உரைக்கப்

புண்டரீகபக்தன் நீங்கள் தேவலோகஸ்திரீகளா? உண்மையைச் சொல்லுங்களென்ருன். பஞ்சகங்கைகள் கோபித்து நீ முன்னம் வினுவின இரண்டுசங்கைக்கு உத்தாஞ் சொல்லிவிட்டோம். ஆதலால் இனி பன்னிப்பன்னி பேசினுல் சென்னியைப் பிடித்து இத்திரிபதைகையிற் றள்ளிவிடுவோம் போபோவென்ருர்கள். புண்டரீகன், "ஓ ரூபவதிகளே! பண்டரியிலிருந்து பிரயாணப்பட்டு நெடுநாள் நடந்து அநேக தேசங்கள் கடந்து இக்காசியை யடைந்தது இந்நதியில் ஸ்நானஞ் செய்யவேயாம். உங்களங்கைகளால் என்னங்கத்தை இக்கங்கையிற் றள்ளினுல் யான் செய்த பஞ்சபாதகங்கள் உங்கள் சொந்தமாகும். எனக்குப் பரலோகஞ் சொந்தமாகும். பாகீரதியிலிறந்தால் பவித்திரமாவதற்கு ஓர் தடையுமுண்டோ? கங்கையில் ஸ்நானஞ்செய்யாமல் தரிசனபலத்தாலேயே பஞ்சகன்னிகை கட்கிணையான உங்கள் தரிசனம் பெற்றேன்; பாகீரதியில் மடிந்தால் எனக்கு என்னபேறு கிடைக்குமோ யானறிகிலேன்" எனப் பணிந்து பலகாரங்கள் செய்வதற்காகத் தன் நாயகியை விளித்தான்.

அதற்குப் பஞ்சகங்கைகள், "அடா மடையா! கடையா! ஒருவரறிந்தால் உலகம் அறியும் எனும் பழமொழிப்படிச் செய்ய யோசித்தாய். இனி இவ்விடம் எங்களை வராமற் செய்யத்தானு பூசித்தாய். உன் மனைவியை இங்கு அழைக்கவேவேண்டாம். நீயுமிங்கு நிற்கவே வேண்டாம்" என்று உரைத்துக் கொண்டே அதிதுரிதமாய்ப் பாகங்கள் செய்யும்போது, புண்டரீகன் கஷ்டத்துக் காற்றமாட்டாமல் பின்னுந் தன் மனைவியை விளித்தார்.

பஞ்சகங்கைகள், "அடா மூரடா! எங்களைக் கண்டு கொண்ட திருடா! உன் மனைவி இங்கு வந்தால் நாங்கள் இவ்விடம்விட்டு இப்போதே நீங்குவோம். குக்குடரிஷிக்குப் பக்குவபாக மில்லாமையால் கோபிப்பார். உன்னைச் சபிப்பார்" என்ருர்கள். அதற்குப் புண்டரீகன் குக்குடரிஷி எங்கே போயிருக்கிருரெனப் பஞ்சகங்கைகள் தாய் தந்தையர்க்குச் சேவை செய்யப்போயிருக்கிருரெனப் புண்டரீகன் உண்மை ஞானந் தெரிந்த ரிஷீஸ்வரரும் தாய் தந்தைக்குச் சேவை செய்யப்போனுரா? மாதா பிதா தாரம் புத்திரவாஞ்சை நீக்கினவர் அன்னை தந்தைமே லவாக்கொள்வாரா? எனச் சங்கை செய்தான்.

பஞ்சகங்கைகள், "அடா புண்டரீகா! அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பது அறியாயோ? மாதா பிதா குரு தெய்வமென்னும் நான்கில் மாதாவே முதல்கண்ட தெய்வ மாகும். இரண்டாவது போஷணைசெய்த பிதாவாகும். மூன்ரு வது ஞானமார்க்க மறிவிக்கும் குருவாகும். நான்காவது மோக்ஷ மளிக்கும் தெய்வமாகும். முதற்படியிலேருமல் மூன்ரும்படியிற் பாய்வாருண்டோ? அதுபோலப் பத்துமாசஞ் சுமந்து பல வவஸ்தைகளால் பீடிக்கப்பட்டுப் பிரசூதவேதனையால்ஸ்மரணை கெட்டுப் பெற்றுக் களித்துத் தன் உதிரத்தையூட்டி வளர்த்த மாதாவும்; பலபாடுபட்டுத் தேகசுகத்தை விட்டுப் புதல்வனையே முதல்வனுக எண்ணித் தன்னுயிரைப்போல் பாதுகாத்து வளர்த்த பிதாவும், சுமைசுமக்கவும், எவ்வர்னனுகிய உன்னுடன் நடக்கவும், இறங்குமிடங்களில் பாகஞ்செய்து படைக்கவும் செய்த கொடியபாதகனுகிய உனக்கு மாதா பிதாக்களுக்குச் செய் யும் பூசையின் மகிமை தெரியுமோ? முதுமைப் பருவமுள்ள தாய் தந்தையரைக் கஷ்டத்துக்குள்ளாக்கி இடையில் வந்த மனையாட்டியைச் சுமந்து கொண்டுவந்த நீ அன்னை தந்தைகளி னடிகளின் அர்ச்சனையின்பலனை யறிவாயோ? அரியரபக்தர் களுக்கும் ஜீவன் முக்தர்களுக்கும் பக்தனென்கிற பேர் கிடைக் காமல் மாதாபிதாவைத் தோள்மேலேந்திக்கொண்டு திரிந்தவ னுக்குக் குருபக்தன் என்று பேர்கிடைத்ததை நீ கேட்கவில் லையோ? சாஸ்திரங்களில் பார்க்கவில்லையோ? ஸ்ரீரகுநாயகர் தனக்குக் குருவாகிய வசிஷ்டர் தந்தையாகிய தசரதர் முதலான வர்களுடைய வாக்கியத்தைக் கடந்து மாதா வாக்கியத்தைப் பரி பாலனஞ் செய்யவில்லையோ? அருந்ததிகொழுநன் கௌசிகன் முதலானவர்கள் நெருக்குண்டிருக்குஞ் சபையில் வந்த ஸ்ரீராமர் முனீசுவரனையும் ஞானுசாரியனையும் வணங்காமல் முன்னம் தந் தையை வணங்கிப் பிதாவின் மேன்மையைச் சபைக்குத் தெரி விக்கவில்லையோ? ஒருவனன்றி இருவர் புணர்தல் மகா குற்ற மென்று அறிந்திருந்தும் மாதா வாக்கியத்தால் ஐவரும் ஓர் கன் னிகையைக் கூடியிருக்கவில்லையோ? பரஸ்திரீகமனஞ் செய் வோனுக்குப் பரகதியில்லையெனத் தெரிந்திருந்தும் மாதா வாக் கியத்தைத் தடுக்கக்கூடா குறையால் சகோதர ஸ்திரீகளை வியா சர் புணரவில்லையோ? இவ்வளவு மேன்மையான மாதா பிதாக் களை நையச்செய்த வெய்வனுகிய உன் முகத்தைப் பார்க்கலா குமோ? குரு தெய்வம் தாரம் புத்திரர் மித்திரர்களை வெவ்வேறு

சம்பாதித்துக்கொள்ளலாம்; மாதா பிதாவைச் சம்பாதிக்கக் கூடுமோ? கர்ப்பத்தில் வைத்துக்கொண்டு ஓர்பாதத்தை எடுத்து வைத்து நடந்ததற்குச் சதைகளைக் கொய்துக்கொய்துக் கொடுத் தாலும் நிகராகுமோ? மார்மீதும் தோள்மீதும் மடிமேலும் வைத்துப் பாதுகாத்த பிதாவுக்குத் தனயன் செய்யும் கைம்மாறீ தெனச் சாஸ்திரங்களில் உரைக்கின்றதோ? 'பெற்றமனம் பித்து பிள்ளைமனங் கல்லு'; 'கடந்தஞானியுங் கடப்பரோ மக்கள் மேற் காதல்' என்னும் பழமொழிகள் புத்ராபேக்ஷையைக் காட்டியிருப்பதால் இவ்வளவு அன்புள்ள மாதாபிதாக்கள் மனம்நோக நீ காசியாத்திரை வந்தால் ஓர் பிரயோசன முண்டோ? அற்ப சுகத்தைக் கொடுக்கும் சொற்பமான தோகை யைச் சுமந்து கொண்டுவந்த தோஷியாகிய உன்னுடன் பேசவுங் கூடுமோ? 'மாதாவையொருநாளும் மறக்கவேண்டாம்' என்றும், 'தந்தைசொன்மிக்க மந்திரமில்லை' என்றும்; சொல் லும் பழமொழி மெய்யா? பொய்யா? மாதா பிதாக்கள் சேவை யிற் சிறந்த குக்குடரிஷிக்குப் பஞ்சகங்கைகளாகிய நாங்கள் பணிவிடை செய்வது பிரத்தியட்சமாகப் பார்த்த நீ சங்கை செய்யக்கூடுமோ?" என்று உரைத்துக்கொண்டே சகல பாகங் களுஞ் செய்து முடித்து அந்தர்த்தானமாய் மறைந்தார்கள்.

அவ்வாச்சரியத்தைக் கண்ட புண்டரீக பக்தன் உடனே அவ்விடம் விட்டு நீங்கித் தந்தைதாயிட மடைந்து பாதங் களில் வந்தனஞ் செய்து காவடி கட்டித் தாய் தந்தையரை அதிலிருத்தித் தோள்மே லேந்திக்கொண்டு சாமக்கிரிகைகளை மனையாள் சுமந்து கொண்டுவரப் பண்டரியை யடைந்து ஒருநாள் தங்கி மறுநாள் அப்படியே புறப்பட்டுக் குருபக்தன் இவனேயாமெனத் திரிலோகங்களும் போற்ற வாரணாசியை யடைந்து கங்கையில் தாய்தந்தையரை ஸ்நானஞ்செய்வித்து அவர்கள் பாதநீரிற் முழுகி அவர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகள் செய்து முடிந்தபின் மாதா பிதாக்களிடம் விடை பெற்றுக்கொண்டு போனான்.

பிறகு குக்குடரிஷியின் ஆசிரமத்தை யடைந்து அம்மகா ரிஷிக்கு வந்தனம் புரிந்து அவர் மகிழ்ச்சியுடன் உபதேசித்த மகாவாக்கிய மர்மங்கள் அறிந்துக்கொண்டு ஆனந்தங்கொண்டு அவரிடம் தனக்குற்ற சந்தேகங்களை யெல்லாம் நிவர்த்தி செய்துக்கொண்டு பூர்ணாபிஷேகம் பெற்றுக்கொண்டு, அவ ரருளால் தாய் தந்தையர்பாற் சென்று தனக்குக் கிடைத்த

பிர்மானந்தத்தின் மாக்ஷிமையையும் மோக்ஷ காக்ஷியையும் புகன்று, அவர்களைக் காவடியில் ஏந்திக்கொண்டு பண்டரியை யடைந்து தாய் தந்தையரை நாடோறும் அதிகாலையில் சந்திரபாகா நதிக்குக் கொண்டுபோய் ஸ்நானஞ் செய்வித்துப் பாத பூசை முதலானவைகளும் செய்து வீட்டிற் கொண்டு போய் ஷட்ருசிகளான பதார்த்தங்களைப் புகட்டிச் சயனிக்கச் செய்து பின்பு தான் புசித்துப் பிர்மக்ஞான நிஷ்டையில் செழித்திருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில், பண்டரிபுரத்துக்கு அருகான கோபாலபூரிலிருக்கும் சந்த்ராவளியெனும் ஓர் உத்தமி பகவானையே விவாகம் செய்வேனன்றி மற்றப் பரமசிவனுதியரை எனக் குறித்துத் தவஞ்செய்தாலும் அவர்களைக் கனவிலும் நினையேனென்று உறுதிகொண்டு கிருஷ்ண பரமாத்மாவினுடைய நாமமன்றி வேறு நாமத்தை மறந்தும் நினையாமல் உக்கிரமான தபஞ்செய்துக்கொண்டு முப்பதுவயது பரியந்தம் விவாகமின்றி இருக்குங் காலத்தில், அப்புண்ணியவதியைச் சோதிக்கவேண்டிப் பகவான் பரமசிவனுர் உருவுடன்போய் அவ்வரிவையின் முன்னின்று, “ஓ பெண்ணே! உன் தவத்துக்கு மெச்சினேன்; உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்” எனத் திருவாய் மலர்ந்தருளினுர். அப்பத்தினி நிடலாக்ஷனைப் பணிந்து, “ஓ ஸ்வாமி! பகவான்வந்து என்னை விவாகஞ் செய்யும்படியான வரமே எனக்குத்தேவை” எனத் தொழுதாள். பார்வதிபாகன் “ஓ மாதரசே! பகவானைக் குறித்து இது நாள் பரியந்தந் தவஞ்செய்து நிஷ்பிரயோசனமானுய். ஏனெனின், ஸ்ரீகிருஷ்ணர் பவுத்தாவதாரமாய் மௌனஸ்திதியை யடைந்திருக்கிருர். அன்றி, ருக்குமணி அவரிணை பிரியாமலிருக்கின்ருள். ஆதலால் என்னை விவாகஞ் செய்துக்கொள்” என்று அறைந்தனர். அவ்வாக்கியத்தைக் கேட்ட அப்பதிவிரதை மிகவும் முனிவுகொண்டவளாய், “ஓ ஸ்வாமி! பகவானுக்கு மாலையிட நினைத்த என்னை நீர் கோருவது உத்தமமோ? ஒருவனுக்கு ஐக்யமானபின் மற்ருெருவனை மறந்தும் நினைக்கலாமோ? விபசாரியைப்போன்ற அபசாரி இவ்வுலகிலுண்டோ? பிறர் மனையாளை இச்சிப்பவர் ரக்ஷிக்கப்படுவார்களோ? தாருகாவனத்து ரிஷிகளின் பத்தினிகளைக் கற்பழித்தபோது அம்முனிவர்களிட்ட சாபம் போதாதோ? என்னுடைய சாபமும் பெறவேண்டுமோ? அத்திரிமகாரிஷியின்

களத்திரமான அநுசூயாதேவியைச் சோதிக்கப்போய் பங்க மடைந்ததை மறந்துவிட்டீரோ? காமத்தால் நியமத்தைத் துறந்துவிட்டீரோ?" என்று உரைத்தாள். அவ்வார்த்தை களைக் கேட்ட ருத்ரரூபத்துடன் வந்த பகவான் களிப்புற்று; ஸ்ரீகிருஷ்ண பரமாத்ம ஸ்வருபமாய்க் காக்ஷிகொடுத்து, "ஓ பெண்ணே! உன் கற்பைச் சோதிக்கும் நிமித்தமே மயேஸ்வர ரூபத்துடன் வந்து உன்மனதைக் கொதிக்கச் செய்தேன்; ஓ பதிவிரதா சிரோமணி! என்னைக்குறித்து நெடுநாளாய்த் தவஞ் செய்த காரணமேதோ? உனக்குத் தேவையானதேதோ?" எனக்கேட்டார். அத்தருவாயில், ருக்மணியம்மை பகவானைக் காணுமல் பலவிடங்களிற் றேடி அங்குவந்தடைந்து தனித் துப்பேசும் இருவரையும் பாரத்துக் குரோதம் மேலிட்டுப் பகவானைப் பணியாமல் நிற்கும்போது அவ்வுத்தமி, ஆ! ஆ! என் ஆண்டவனிடம் வந்தும் பேசாமலும் பணியாமலும், இந்த ருக்மணி அகமடைந்திருக்குங் காரணமேன்? ஓர் அரசன் புத்திரிக்கு இவ்வளவு அகங்காரமிருக்கலாமா? 16,000 கோபிகாஸ்திரீகளி லொருத்திதானே என மதித்துத் துதிக் காமலும் தொழாமலும் எழாமலும் பகவான் கேட்ட வினு வுக்கு உத்தரஞ் சொல்வதற்குக் கூடாமலும், இவளேன் இத் தருணத்தில் வந்தாள் எனுங் குரோதத்தால் ஒருவார்த்தையு மாடாமல் மௌனமா யிருந்தாள். பகவானே இவளுடைய மனோபாவத்தை ஆராய்வதிற் சித்தத்தைவைத்து ருக்மணியை அழைக்காம லிருந்துவிட்டார். ருக்மணியோ இவர்கள் குற்ற வாளிக ளானபடியினுலேயே தேள் கொட்டிய திருடனைப்போ லிருக்கின்றுர்கள். இனி யிவர்களைப் பார்க்கக்கூடாதெனத் தீர்மானித்துத் தவஞ்செய்ய யோசித்து ரிஷியாசீர்மங்களை யாசித்துத் திண்டிரவனத்தில் பிரவேசித்து அகோரமான தவஞ்செய்யத் தொடங்கினுள்.

பகவான் ருக்மணியின் பிணக்கைத் தவிர்த்து வருகிறே னென்று அம்மாதைச் சம்மதப்படுத்தித் திண்டிரவனத்துக்கும் பண்டரிக்கும் சமீபத்திலோடும் சந்திரபாகாநதியிலிறங்கி அக் கரையிற் சென்று தாய்தந்தையர்க்கு அன்பாய் பூசைசெய்யும் பூரண பிர்மக்ஞானியாகிய புண்டரீக பக்தனைக் கண்டு ஆனந் தங்கொண்டு ருக்மணியை மறந்து அசைவற்று நின்று, "ஓ புண்டரீகா! தாய் தந்தையர் சேவைசெய்வதற்கு நீயொருத் தனே யிவ்வுலகிற் பிறந்தாய்; குருபக்தன் உனக்கு இணை

யென்று உரைக்கத் தகாது; உனக்கு நீயே ஒப்பாகும். உன்னுடைய விரதத்துக்கு வந்தேன்; அரியசேவை தந்தேன்; சீக்கிரம் உனக்குத் தேவையான வரம் நீ கேட்பாயாக'' எனத் திருவாய்மலர்ந்தருளினர். அதைக்கேட்ட புண்டரீகபக்தன் பகவானை நோக்காமல் நீவிர் யார்? என்று வினவினன். பகவான் "ஓ ஒப்பில்லா வுத்தமனே! வசுதேவருக்கும் தேவகீ தேவிக்கும் மகவாய்ப்பிறந்த பகவானென்று அறிந்துகொள்'' என்றார். புண்டரீகபக்தன், "ஓ அரிபரந்தாமா! நான் நினையாதிருக்கவும் உம்முடைய காட்சிதந்தீரோ! சேற்றில் வெகுநேரமாய் நின்று நொந்தீரோ! இதோ இச்செங்கல்லின்மேல் சற்றே நிற்பீராயின் மாதாபிதாக்களுக்குச் செய்யும் பூசையை முடித்துத் தேவையான வரங்கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்று உரைத்தான். அன்னை தந்தைகட்கு அன்புடன் பூசை செய்து முடிந்தபின் அவர்களைக் காவடியில் ஏந்திக்கொண்டு பகவானை நோக்கி, "ஓ ஸ்வாமி! என் தாய்தந்தையை வீட்டிற் கொண்டுபோய் அன்னமூண்பித்து வருகிறேன். அதுபரியந்தம் இங்கேயிருக்கிறேனென்கிற வரம் முன்னமளித்து அனுப்பும்'' ஐயாவெனத் துதித்தான். கருணாநிதியான பகவான் "ஓ புண்டரீகபக்தனே! நீ வருகிறபரியந்தம் ஓரடியும் பேர்த்து வைக்காமல் உன் வரவுக்குக் காத்துக்கொண் டிருக்கின்றேன். சீக்கிரம் வருவாயாக'' என்று ஆக்யாபிக்கப் புண்டரீகபக்தன் தொழுது வீட்டிற் சென்று அன்னையனுப்பக் கன்னமுதலானவை யூட்டிப் பாராட்டி, "ஓ என் தாய்தந்தையே! ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகராகிய ஸ்ரீமந்நாராயணர் சந்திரபாகாநதிதீரத்தில் எழுந்தருளியிருக்கின்றார். தேவரீர்கள் உத்தரவு கொடுத்தால் போய் அவரிடம் தேவையான வரம் பெற்றுக்கொள்ளுகிறேன்'' எனப் பணிந்தான்.

அம் மாதா பிதா, "ஓ எங்கள் அரும்பாலனே! நீ ஒருவன் தரிசித்து வரங்களைப் பெற்றுக்கொள்ளுதலால் பிரயோசனமேது? ஆதலால், இவ்வுலகிலுள்ளோர் அனைவரும் தரிசித்துக் காக்ஷியடையும்படியான சூக்ஷிசெய்வாயாகில், மாக்ஷிமையடைவாய்'' என்று அறைந்தார்கள். புண்டரீகபக்தன் மகா பாக்கியம்; தங்கள் கட்டளையின்படியே செய்வேனென்று அவர்கள் தாள்களிற் றெழுது, இனி விண்டுவை இப்பண்டரியிற்றானே தங்கச்செய்கிறேனென்று உன்னி வீட்டைவிட்டுப் புறப்பட்டு,

ஓ! ஓ! ஸ்ரீமந்நாராயணரைக் கண்ணாரக்கண்டும் ஆனந்தங் கொண்டும் இனி பெறும்படியான வரமும் வேண்டியதோ? என்று உரைத்துக்கொண்டேபோய் 'தந்தைசொன் மிக்க மந்திரமில்லை' எனத் தூரத்தில் நின்றபடி பகவானைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து, "ஓ பகவானே! எனக்குத் தேவையான வரம் தாங்கள் இப்படியே நின்று சகலருக்குந் தரிசனந் தந்து காத்து இரக்ஷிப்பதே" என்று உரைத்துப் பகவான் அருகில் சென்றால் வேறு வரந்தந்து மறைந்தருளுவார். இதனால் தந்தைதாய் வாக்குக்கு ஆனிவரும் ஆண்டவன்முன் வந்தகன்றால் அபராதத்துக்கு உட்படவேண்டுமென்று உன்னிப் பல வாறுகவெண்ணிப் பகவானைப் பார்த்தபடி சமாதி நிஷ்டை சேர்ந்து பகிர்முகத்திலிருந்து போந்து பிர்மானந்தத்தால் களி கூர்ந்து சகல சங்கடங்களுந் திர்ந்து தன்னை மறந்து தேகஸ் மாணை யிறந்து கொல்லைக்குக் காவலிருந்த சடபரதரைப்போல் அசைவற்றுக் கைகளைக் கூப்பிக்கொண்டு நின்றார்.

பகவானோ இதோ புண்டரீகபக்தன் வந்தான்; நம்மைக் கண்டு உவந்தான் என்று அன்பின்மேலீட்டால் அவனுக்கு அளித்த வாக்கின்படி அப்புண்டரீகபக்தன் வரவுக் கெதிர் பார்த்தபடி அசைவறநின்று புண்டரீகபக்தன் சமாதியடையுங் காலபரியந்தம் சுபரூபத்துடன் சகலருக்குங் காட்சிகொடுத்துத் தன் எதிரில் நின்றபடி சமாதியடைந்த புண்டரீகபக்தனைப் புகழ்ந்து மிகவும் மகிழ்ந்து அவரைப் பார்த்தபடியே சிலா ரூபமாய் நின்றார்.

பண்டரியென்னும் ஊரில் தங்கியிருப்பதால் பண்டரிநாத னென்றும், ஈட்டென்னும் செங்கல்மேல் நிற்பதால் இடோபா வென்றும், நீ வந்து வரங்கேட்டுக்கொள்ளுகிற பரியந்தம் இங்கேயே நிற்கின்றேனெனப் புண்டரீகபக்தனுக்கு வரமளித்த தால் புண்டரீகவரதனென்றும் பகவானுக்கு நாமங்கள் ஏற் பட்டன.

புண்டரீகபக்தன் வரலாறு முற்றிற்று.

---

# நூல்வரலாறு



ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகராகிய ஸ்ரீமந் நாராயனைர் வீற்றிருக்கும் பூலோக வைகுந்தமாகியும், பிர்மானந்தத்தால் தன்னை மறந்திருக்கும் ஜீவன்முக்தர்கள் உலாவுமிடமாகியும் அஷ்டாங்க யோகங்களால் சகல சித்திகளையுமடைந்த சித்தர்கள் சஞ்சரிக்கும் ஊராகியும், திரிமூர்த்திகளையுபாசிக்கும் பக்தர்களும் வேதமாதிகளை ஓதியுணர்ந்த நீதிமான்களும் நிறைந்திருக்கும் நாடாகியும், துவாரகாநாத் ஜெகந்நாத் ராம்நாத் பதரிநாத் என்னும் நான்கு கயிற்றூற் கட்டியிருக்கும் மத்தியிலுள்ள கொடிஸ்தம்பத்துக் கிணையாகிய இடையிலுள்ள பண்டரிநாத் என்று உரைப்பதாகியும், சந்ததமும் எந்தத் திக்கிலும் காலப்பிர்மம் முழங்கும் பண்டரிபுரத்தில் கலியுகாதி 4690-ம் வருஷத்தில் இப்பூவுலகோர் ஈடேறத் திருவவதாரஞ் செய்தருளி அநேக அற்புதங்களைக் காண்பித்து டாகூர் தேசத்தில் அவதாரஞ்செய்தருளிய இராமதாஸ் ஸ்வாமிகளுக்கும், அவருடன்வந்த இராஜன் முதலானவர்களுக்கும் தேவர்களுக்கும் மூவர்களுக்கும் அன்னமூண்பித்து அச்சுவாமிகட்குமுன் விஷ்ணு ஸ்வரூபமாய் நின்று பல ஞானவாக்கியங்களைப் புகன்று 4730-ம் வருஷத்தில் தன்னுடன் பொந்தியோடும் வானுலகுக்குவர எழுநாள்பரியந்தம் அனைவரையுங் கூப்பிட்டுப் பரமபதத்துக்கு வாருங்களெனக் கும்பிட்டுச் சகலரும் வாராததற்காகப் பின்னிட்டு மிகவும் வியாகுலப்பட்டுப் பிராப்தியில்லையென முன்னிட்டு அழியாக்கீர்த்தியை இவ்வுலகில்நட்டு ஜெயவிட்டல் ஜெயவிட்டல் என்று உரைத்துக்கொண்டே தன்னுடன்வந்த 22-பேருடன் ஆகாயத்திற்போகும் துக்காராமென்பவரைப் பார்த்தார். திண்டிரவனத்திலிருக்கும் உத்தவசித்தர் முதலானவர்களும் பிரமாவதாரரான நாபாஜிசித்தரிடம்போய் வலம்வந்து பணிந்து அவர் தாள்களில் தங்களுடைய நயனங்களை யணிந்து துக்காராம் வானிற்போகும் விந்தையையுரைக்க, மகாயோகியான நாபாஜிசித்தர் உத்தவசித்தர் முதலானவர்களைக் கையமர்த்தித் துக்காராமுக்கு வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து உல்லாசத்தாற்றிரிந்து மகாத்மாவெனத் தெரிந்து சந்தோஷம் விரிந்து புஷ்பங்களைச் சொரிந்து ஆனந்தங்கொண்டு விந்தையெனவிண்டு நீர் செய்ததேதொண்டு பாக்கியஞ்செய்தவர் பண்டு

நல்லவரம் தந்தார்; விண்டு தீயமனதைக் கொன்று காமாதிகளை வென்று நானென்பதனை மென்று சற்றுமில்லாமற்றின்று எங்கே போகிறீரின்று பேசலாகாதா நின்று அடியேன் மூடனென்று நில்லும் நில்லுமென்று அன்பான மொழிகளைப் புகன்று சந்தோஷமேலீட்டால் ஆனந்த நிர்த்தனஞ் செய்யத் தொடங்கினர். உத்தவசித்தர் முதலானவர்களும் அவருடன் தாண்டவஞ்செய்து நாபாஜிசித்தரைப் பலவந்தமாய் நிறுத்தி ஆசனத்தின்மேலிருத்தி, "ஓ எங்கள் சற்குருநாதனே! மெய்ஞ்ஞான போதனே! ஆகாயத்திற்போகும் உத்தமர் எவர்? எந்த லோகத்திற்குப் போகின்றார்? இந்நாள் பரியந்தம் எங்கிருந்தார்? சொல்லும் சுவாமி" எனத் தொழுதார்கள்.

நாபாஜிசித்தர் நாம் இன்று செய்த பாக்கியமே பாக்கியம் எனச் சந்தோஷசித்தராய் அகங்குளிர்ந்து முகம் மலர்ந்து, "ஓ சித்தர்களே! மிகவும் பரிசுத்தர்களே! இவருடைய பெருமையை என் ஒருவனால் உரைக்கப்போமோ? ஆதிசேஷனாலும் விரிக்கப்போமோ? தேவர்களாலுந் துதிக்கப்போமோ? மூவராலும் மதிக்கப்போமோ? கூடாதாயினும் எனக்குத் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன். அதாவது குப்ததானஞ் சப்தலோகமும் அறியுமென்பதைப்போல் அதிகுப்தமாய்ப் பண்டரிபுரியின் சமீபத்திலிருந்தவர், பிரமக்ஞானம் பூரணமாய்த் தெரிந்தவர், பண்டரிநாதன் பணிசெய்யும்படியான தபோபலமுடையவர், துக்காராமென்னும் பெயருடையவர், வைராக்கியத்தில் வல்லவர், மிகவும் நல்லவர், ஜீவகாருண்ணியத்தையே விரதமாகக் கொண்டவர், பிரமக்ஞானமே முக்கியமென விண்டவர், மனதைப் பிரம்மானந்தத்தில் சொக்குவித்தவர், வாக்கைச் சந்ததமும் இஷ்டதெய்வத்தைத் துதிக்க வைத்தவர், காயத்தைச் சாதுக்கள் சேவைக்கு ஆளாக்கினவர், நானெனுஞ் சீவத் தன்மையைத் தூளாக்கினவர், இறந்த மைந்தன் உயிர்பெற்றெழ விண்டவர், இரண்டு நாய்களை மாணுக்கராக்கிக்கொண்டவர், கழுதையைக் கருடனாக்கினவர், கனம் வேண்டாமல் நீக்கினவர், சமுசாரத்தோடிருந்தவர், சகல மர்மங்களும் அறிந்தவர், அபிமானத்தை வென்றவர், ஆகாயத்திற் சென்றவர் என்று உரைத்தார்.

அதைக்கேட்ட உத்தவசித்தர் முதலானவர்களும் வணங்கி, 'ஓ ஸ்வாமீ! சுகப்பிர்ம ரிஷியைப்போல் ஆகாயத்திற்போகும் இவருக்குற்ற தபோபலம் முற்பிறப்பிற் செய்ததா? இப்பிறப்பிற் செய்ததா? திருவாய்மலர்ந்தருளும்" என்று விண்ணப்பஞ் செய்

தார். விரிஞ்சாவதாரனை நாபாஜிசித்தர் "ஓ உத்தவசித்தரே! இந்தத் துக்காராமென்பவர் முன் சென்மத்தில் ஸ்ரீவைகுந்த வாசராகிய ஸ்ரீமந்நாராயணரைச் சிறுபொழுதிலிருந்து தேக வியோகமாகிற பரியந்தம் தோத்திரஞ் செய்ததன்றிப் பண்டரி நாதன் கோயிலைவிட்டு நீங்காமல் பாண்டுரங்கனுக்கு அன்ன மூட்டின மகா அருமையான பக்தனுக்கும். அல்லாமல் யோனி சம்பந்த முடையவர்" என்று நவின்றார். அதற்கு உத்தவசித்தர் அயோனி ஜென்ம மெடுத்தவரெவர்? மூன்றாஞ் ஜென்மத்தில் எந்த முனிவராயிருந்தார்? சொல்லும் என்றார்கள்.

நாபாஜிசித்நர், "ஓ சித்தசிகாமணியே! இவர் மூன்றாஞ் ஜென்மத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் பிரமோபதேசம் பெற்றுக்கொண்ட உத்தமராகும். அவர் இவ்வுலகில் ஓர் குழந்தை யாகிப் பண்டரிபுரத்துக்கு அருகிலிருக்கும் சந்திரபாகாநதியில் மிதந்துக்கொண்டே வந்து பண்டரிநாதனை நெடுநாளாய் மிக வும் அன்பாய்ப் பூசித்துக்கொண்டிருந்த தாம்ஸேட்டி என்பவ ருக்குப் பிள்ளையாகி நாம்தேவ் என்று பேர்பெற்றுப் பாண்டுரங் கனுக்கு அன்னமூட்டி அநேக விசித்திரங்களைக்காட்டிக் கொடி கள் சுவர்க்கத்திலிருந்துவர, நாதேஸ்வரர் கோயிலில் நாட்டி, அநேக விசித்திரங்களைக் காட்டிப் பசுவின் கன்றை யெழுப்பி, அக்பர் பாதுஷாவை வாட்டி, அங்குள்ள நாதேசுவரர் கோயிலை மேற்குமுகமாகத் திரும்பச்செய்து சதகோடி கீர்த்தனைகளால் ராமாயணத்தை முடிக்க எண்ணங்கொண்டு, பாதி கீர்த்தனை களைப்பாடி விருதாப்பிய மேலிட்டுத் தேகத்தைவிட்டு, மற்றக் கீர்த்தனைகளைப்பாடி ராமாயணத்தை முடிக்கவேண்டி இந்தத் துக்காராமாய்ப் பிறந்து பாடி முடித்துப் பரமபதத்திலிருந்து வந்தபடியே இப்போது பொந்தியுடன் வைகுந்தத்திற்குப் போகின்றார்" எனப் புகன்றனர்.

உத்தவசித்தர் ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் பிர்மோபதேசம் பெற்றுச் சாக்ஷாத்காரத்தை யடைந்த உத்தவர், இவ்வுலகில் குழந்தையாய் வரவேண்டிய காரணமேதோ? தெரியச்சொல் லும் சுவாமி யென்றனர். நாபாஜிசித்தர் "உத்தவரொருவரே இவ்வுலகில் அவதாரஞ் செய்யவில்லை. வால்மீகர்-வியாசர்-சுகர்-அக்ரூரன் - அருணன்-தாரகன் - பிர்மா-விஷ்ணு - ருத்திரன் - ஆதிசத்தி முதலானவர்களும் இவ்வுலகில் அவதாரஞ் செய்துக் குலாசார தர்மத்தையும், உலகம் பிரஷ்டமடைந்த மர்மத்தை யும், சகுணத்தியானத்தையும், பிரமக்ஞானத்தையும், இவ்வுலகி

லுள்ள மாந்தர்களுக்குப் போதிக்கவந்தார்கள்'' என்ருர். உத்தவசித்தர் இவ்வுலகில் என்ன விபரீதம் நடந்தது? என்று இவர்களெல்லாம் அவதாரஞ் செய்தார்களென்ருர்.

நாபாஜிசித்தர் இவ்வுலகில் கலிபிறந்து பரிக்ஷித்து மகாராஜனுல் தாழ்ந்து 5000-வருஷபரியந்தம் இக்கலியுகத்தில் என் ஸ்வரூபத்தைக் காட்டமாட்டேனென்று வாக்குதத்தஞ் செய்திருந்தும் கலிகால மகத்துவத்தால் அநேகர்களுக்கு விபரீத குணங்களுண்டாகி ஒற்றுமையுள்ள மனமிரண்டாகித் தீர்த்த யாத்திரை போதல், புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தல், தேவாலயங்களைப் பிரதக்ஷணஞ்செய்தல், திரிமூர்த்திகளின் ஸ்வரூபங்களாகிய விக்கிரகங்களை ஆராதித்தல், பெரியோர்களை நேசித்தல், மாதா பிதாக்களைப் பூசித்தல், பக்த சரித்திரங்களை வாசித்தல், மோக்ஷார்த்தத்தை ஆசித்தல், அரியரசங்கீர்த்தனங் கோஷித்தல், தன்னை மறந்த பிரமக்ஞானிகளைப் பூசித்தல், வேத பாராயணங்களைச் சாதித்தல், வேதாந்த வாக்கியங்களைப் போதித்தல், ஆரியர் முதலானவரைக் கண்டெழல், எதிர்கொண்டு தொழல், சாதுக்களுக்கு நீராட்டல், மலர்மாலைகளைச் சூட்டல், தூபதீபங்களைக் காட்டல், இஷ்டபதார்த்தங்களை யூட்டல், அவர் சொல் நிலையில் மனதை நாட்டல், அதிதிகட்கு அன்னம் பரிமாறுதல், அடியார் சங்கத்திற் சேருதல் முதலான நற்குணங்கள் குறைந்து பெரியோர்களைத் தூஷித்தல், பேதையர்களைப் பூசித்தல், சத்தியவான்களைக் கெடுத்தல், தர்மஞ் செய்வோரைத் தடுத்தல், தாசிகட்கு அரும்பொருள்கொடுத்தல், தாம மவர்க்கே தொடுத்தல், சாந்தகர்கள் சங்கம் விடுத்தல், சண்டாளர் தம்மை யடுத்தல், சூதாடல், வாதாடல், மனைவியைக் கொண்டாடல், மாதாவுடன் வம்பாடல், சொர்னமிகுதியாற் றுள்ளுதல், சுராபானத்தைக் கொள்ளுதல், தூயர்களைத் தள்ளுதல், தூஷண வார்த்தைகள் விள்ளுதல் முதலான துர்க்குணங்கள் நிறைந்து சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் ஒருவழியிலுஞ் செல்லாமல், துரிய திருஷ்டியில் நில்லாமல், அரியர வென்றுஞ் சொல்லாமல், அஞ்ஞானமனதைக் கொல்லாமல் பரஸ்திரீகளையே யல்லாமல், குலஸ்திரீகளைப் புல்லாமல், ஒரு நற்குணமுமில்லாமல் அகமமதையை வெல்லாமல், பாபகர்மங்களையே செய்துக்கொண்டிருக்கிற காலத்தில், அக்கினிக்குச் சகாயமான காற்றைப்போல மூவர் தேவர் மற்றியாவர்மீதும் குரோதங் கொண்டு பிரமசிருஷ்டிக்கு எதிர் சிருஷ்டி செய்த விசுவாமித்

திருடைய கோரமான கோபத்திலிருந்து உதித்த கறுத்த நிற மும், பெருத்த உடலும், பருத்த உதடும், களித்த முகமும், சிலிர்த்த மயிரும், கடின நெஞ்சமும், கர்வமிகுதியும், பல்லிற் கறையும், சொல்லிற் குறையும், கொல்லுங் கையும், குடில குணமுமுள்ள அராபியரென்னுந் துடுக்கர், மிகவும் முடுக்கர், மோசலமாமுனிவனுல் விஸ்தீர்ணமடைந்து மொசல்மான்க ளென்கிற பேர்பெற்று அரசாங்கம் பெற்றுத் தேசங்களில் மத யானைகளைப்போற் சஞ்சரித்து, மறையோர்களென்றும் பெரி யோர்களென்றும் பாராமல், தீங்குவருமென்றோராமல், முன் பின் தெரியாமல், பாபமென்றுங் குறியாமல், அதட்டி, வாயில் வந்தபடித் திட்டி, மதுமாம்சங்களைப் புகட்டி, வாள்களைச் சுழற்றி, மனநடுங்க மிரட்டிப் பின்தொடர்ந்து வெட்டிக் குடி களைக் காட்டில் விரட்டி, ஸ்திரீகளின் மாங்கிலியங்களைக் கழற் றிப் பூமியில் வீழ்த்திப் புரட்டி, மானபங்கஞ் செய்துச் சிரங்க ளைக் கொய்து வாயில் வந்தபடி வைது, தலைமேற் கற்களை யெய்து, சூரியவம்சத்தைப் பாழாக்கிச் சந்திர வம்சத்தைக் கிழாக்கிக் காசி முதலான புண்ணிய க்ஷேத்திரங்களிற் பசுக்களை யறுத்து, மாமிசங்களை வறுத்து, நன்றாய்த் தின்று பருத்து, வேதவாக்கியங்களை மறுத்து, லாகிரியால் மிகவுஞ் சிரித்து அட்டகாசத்துடன் கொக்கரித்துப் பிறர் உடைமைகளைப் பறித்துப் பாழ்நெற்றிகளை நெறித்து, விக்கிரகங்களை அப கரித்து, ஊர்களிற் கொள்ளையடித்துத் தேவாலயங்களைப் பொடி த்து, இவ்வித கோரத்தால் அரசர் நீதிகுன்றித் தர்மஞ் சற்று மின்றி, உலகத்தைப் பாபம் மூடிக்கொண்டு மழைபொழியாமல், மந்திரம் பலிக்காமல், நாடுங் காடுஞ் சூரிய உஷ்ணத்தால் எரிந்து பொரிந்து கரிந்து, ரிஷிகளுடைய தபசுகள் பங்கப்பட் டுத் தவநிலை கெட்டு, இதுவென்ன விபரீதம்! இதுவென்ன அப வாதம்! இறந்த ராவணன் வந்தானே! இரணியன் உயிர்பெற்றெ ழுந்தானே! இறந்தன் சோமுகன் வந்தானே? எமன் இவ்வனத் தில் வந்தானே! என்று வாரணாசியின் அருகிலிருக்கும் வேத வியாசர் முதலான ரிஷிகளெல்லாங் கூடிச் சொர்க்கலோகஞ் சென்று, தேவேந்திரன்பால் முறையிட்டுத் தேவர்களும் ரிஷிக ளும் புறப்பட்டு, வைகுந்தத்தை யடைந்து தவங்குன்றினதற் கிடைந்து, அரிகரி யென்ற கோஷத்துடன் நவரத்தின கசித மான மேடையில் கோடிசூரியப் பிரகாசமான சிங்காதனத்தில் வீற்றிருக்கும், ஸ்ரீமந்நாராயணரை வலம்வந்து பணிந்து அவர்

தாள்களில் நயனங்களை யணிந்து, "ஓ ஸ்வாமி! அகிலாண்ட கோடி பிர்ம்மாண்டநாயகா! அனுதரட்சகா! பக்தவச்சலா! பரம தயாபரா! அனந்தசயனு! கமலநயனு! கருடவாகனு! கோபியர் மோஹனு! சங்குசக்கரா! சதுர்ப்புஜா! பச்சைவர்ணு! பரந்தாமா! துளசீதரா! தாமோதரா! மச்சகச்ச வராகவதாரா! ராக்ஷச சம்மாரா! ஓ பகவான்! ஓ கர்த்தனே" என்று முறையிட்டார்கள்.

அப்போது மேகவர்ணனுன மகாவிஷ்ணுவானவர் கையமர்த்தி, "ஓ ரிஷிகளே! உங்களுக்கு நேரிட்ட குறை ஏது?" என்று திருவாய்மலர்ந்தருளினுர். அப்போது, சகலருந் தொழுது கண்ணீர்விட்டழுது "ஓ புருஷோத்தமா! புண்டரீகாக்ஷா! இக்கலியுகத்தில் இகலோகத்திலுள்ள காசி, கயா, அஸ்தினுபுரி, அயோத்தி முதலான புண்ணியஸ்தலங்களில் கோஹத்தி, சிசுஹத்தி, பிர்மத்தி, ஸ்ரீஹத்தி, குருஹத்தி முதலான பாபங்கள் நேரிட்டு வர்ணுசிரம தர்மங்கள் கெட்டு, அந்தணர் காயத்ரீஜெபஞ்செய்தல்-வேதமோதல்-ஓமம்வளர்த்தல்-சந்தியாவந்தனஞ் செய்தல் முதலான தானதருமங்களைவிடுத்து துன்மார்க்கரை யடுத்துப் பொருளாசையால் மற்ற வர்ணத்தாருக்குக் குற்றேவல் செய்து பொருமை மேலிட்டுழல்கின்ருர்கள். க்ஷத்திரியர்களோ தன் பலப்பிரதாபத்தால் வேதியர் சாதுக்கள் முதலானவர்களிடம் பணிவிடைகள் வாங்கி, அகங்காரம் மிகவுமோங்கி, அநேக ஸ்திரீகளைப் புணர்ந்து காமதுரந்தர்களாயிருந்து இராஜநீதி விசாரணையின்றி மதமச்சரங்கள் மேலிட்டிருக்கின்ருர்கள். வைசியரோ பொருளாசையால் பொய்விலைகள்பேசி அகவிலைகள் விற்று சூதும்வாதுங் கற்று, கோக்களைப் புலையர்க்கு விற்பனைசெய்து கொலை களவு கள் காமம் குருநிந்தையென்னும் பஞ்சமாபாதகத்துக்கு உட்பட்டிருக்கின்ருர்கள். சூத்திரரோ துரைகளாய்ப் பிர்ம க்ஷத்திரிய வைசியர்களில் விப்பிரர்வணங்க, க்ஷத்திரியர் வாயிலைக்காக்க வைசியர் இஷ்டப்படிவிற்க சகலரும் வரிப்பணங் கட்டத் திட்டஞ்செய்துச் சூரர்களாய்க் காமக் குரோத லோபங்களாற் கட்டுண்டிருக்கின்ருர்கள். பஞ்சமராகிய துடுக்கரோ மேற்சொன்ன நான்கு வர்ணத்தாருக்கும் அதிபதிகளாய் இஷ்டமான ஸ்திரீகளைப் புணர்ந்து, மேடை மாளிகையி லிருந்துக்கொண்டு குடும்பிகளை யிடும்பு செய்துக் கொடும்பாவிகளாய் வரிப்பணம் வாங்கி மலர் மெத்தையில் தூங்கித் தேவாலயங்களை இடித்து மடஞ் சத்திரங்களை பொடித்து கோஹத்திசெய்து சாதுக்கள் சிரங்களைக்

கொய்து துன்பமின்றி இன்பத்துடனிருக்கிருர்கள். இவ்வித கொடூரங்களால் பாபம் உலகத்தைச் சூழ்ந்துகொண்டு மழை பொழியாமல் நாடுங் காடும் உலர்ந்து வனத்திலிருந்து எங்களால் தவஞ்செய்யக்கூடாமல் மனேசஞ்சல மிகுந்து உமது அடைக்கலம் புகுந்து முறையிட்டுக்கொள்ள வந்தோம்" எனத் தொழுது தோத்திரஞ் செய்தார்கள்.

அதற்கு ஸ்ரீமந்நாராயணர் உலகங்களை ரட்சிக்குங் கர்த்தாவாதலால் தனக்குள்தானே யோசிக்கத் தொடங்கினர். அதாவது எப்போது அரசநீதிகுன்றிப் பதிவிரதத்தனங்கெடுமோ அப்போதே பாபம் மேலிடும்; பாபமேலிட்டால் மழைகுன்றும்; மழை குறைவதால் தவசு பங்கமாம்; தவசு பங்கமாவதால் குலதர்மங் கெட்டுக் கொலையாதிகள் மேலிட்டு உலகத்தைப் பாபம் மூடிக்கொள்ளும். இதனுல் ஜீவர்களுக்கு வியாதி முதலான பீடைகள் நேரிட்டு ஆயுள் குறைந்து நாஸ்தியாய்ப் போவார்கள். ஆதலால் இதைக்குறித்துப் பூர்த்தியாய் யோசிக்கவேண்டுமென்று ஸ்ரீகைலாசவாசகராகிய பரமசிவனைச் சிந்திக்க, அது தெரிந்த பசுபதி பார்வதி சமேதராய் ரிஷபவாகனரூடராய், விக்நேசுவரர், சுப்ரமண்யர், நந்திகேசுவரர், பிருங்கீசர், தூருவாசர், வியாக்கிரபாதர், வசிஷ்டர், அகஸ்தியர், புலஸ்தியர், மிருகண்டர், மார்க்கண்டர், புஜண்டர், முதலான ரிஷிகளும்; நவகோடி சித்தர்களும்; அநேகங்கோடி பூதகணங்களும் புடைசூழ வைகுந்தத்திற்கு எழுந்தருளி ஸ்ரீமந்நாராயணர் முன்வர, உடனே பகவான் புளகாங்கமுடையவராயெழுந்து ஒருவருக்கொருவர் வந்தனை வழிபாடுகள் செய்துக்கொண்டு இருவரும் சமானராய்ச் சிங்காதனங்களில் எழுந்தருளிப் பிர்மா சரஸ்வதி முதலானவர்களுக்கு ஆசனமளித்து க்ஷேமவார்த்தைகள் பேசும்போது பராசர், வியாசர், சுகர் வால்மீகர் முதலானவர்களும் பரமேசுவரரை வணங்கி, "ஓம் அரகரா! சடாதரா! சசிதரா! பஞ்சமுகா! பாண்டரங்கா! நீலகண்டா! நிடலாக்ஷா! பார்வதி சமேதா! பூதகணநாதா! சர்ப்பாபரணு! சர்வபாபஹரணு! திரிசூலா! காலகாலா! சதாசிவா! மகாதேவா! ஓ ஸ்வாமி! எனத் துதித்துப் பரமசிவனுர் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் ஆதிசத்தியைப் பணிந்து, ஓஅம்மணி! அந்தரி! சுந்தரி! நிரந்தரி! துரந்தரி! சங்கரி! உமாமகேசுவரி! கௌரி! திரியம்பிகை! திரிநேத்திரி! நிர்மலகாத்திரி! ஓங்காளி! மனேன்மணி! அன்னபூரணி! ஓ லோகமாதவே! எனப் பலபல விதங்களாய்த் தோத்திரஞ்

செய்து, பிரமதேவரையும் சரஸ்வதியையும் மகாலட்சுமியை யும் பணிந்து அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நின்ருர்கள்.

அப்போது பரமசிவனுர் "ஓ ரிஷீசுவரர்களே! உங்களுக்கு நேரிட்டகுறை எது?" என்று கேட்டார். அதற்கு தபோதனர் "ஓ ஸ்வாமி! இக்கலியுகத்தில் மானிடர்கள் நான்கு வேதங்களை யும் தள்ளிவிட்டார்கள். கொலைக்குரிய வேதத்தை ஸ்திரமாக நட்டார்கள். பாபகர்மங்களுக்கு உட்பட்டார்கள். கோஹத்தி யால் கெட்டார்கள். முற்காலத்தில் இரணியனுனவன் தானே தேவனென்று அநேக சாஸ்திரங்களை ஏற்படுத்தத் தேவரும் மற்றியாவரும் தன்னையே வணங்கும்படியாகச் செய்து தானே அநேகருக்கு வேண்டிய வரங்களீந்து நானென்னும் அகங்கா ரத்தால் அழிந்துப்போனதைப்போலக் கலியுகத்து மனிதர் களில் மிகவுங்கற்ற சிலர் அநேக யுத்திவார்த்தைகளைச் சேர்த்து இதுதான் கடவுளால் உண்டாக்கப்பட்ட ஆதிவேதமென்று உரைத்துத் தங்கள் மதத்தில் பிரவேசிக்கச் செய்து தாங்கள் கெட்டதன்றி மற்றவர்களையுங் கெடுத்துக்கொண்டு வருகிருர்கள். சிலர் பொருளாசையாலும் பூவைபராசையாலும் மது மாமிசங் கள்மே லிருக்கு மிச்சையாலும் ஆசாரத்தை விடுத்து அனுசா ரத்தை யடுத்து ஈனமதங்களிற் பிரவேசித்து மானிடர்களால் உண்டாக்கப்பட்ட கட்டுக்கதைகளை வேதமென்று நம்பிப் புலை யர்களாய் மாமிச புக்தமும் மதுபானமுஞ்செய்து வரிசையே யின்றி மாதர்களைப் புணர்ந்து அதோகதிக்காளாயிருக்கிருர்கள். ஜீவகாருண்யத்தை விரதமாகக்கொண்டு ஜீவர்கள் பதைக்க வதைக்காமல் தங்கள் பெரியோர்க ளிருந்த ஆசாரத்திலிருந்து நீதிபரனுல் நிருபமாகிய பரப்பிரமத்தையாவது, சிருஷ்டி ஸ்திதி நாசகர்த்தர்களாகிய தங்களையாவது தோத்திரஞ்செய்து மோக்ஷலாப மடையாமல் மூக்கறுப்புண்டவன் பலர் மூக்கையும் அறுக்கத்துணிந்த கதைபோல யாதோ ராதாவில்லாப் பொய்ப் போதகர்க்கு உட்பட்டு வர்ணுச்சிரம தர்மங்கெட்டுப் பிரஷ்டத் துவ மடைந்தோமேயெனத் தன் மனந் திடுக்குத் திடுக்கென்று தனக்குச் சாக்ஷியாய் பறையறைவதுபோல் பிரத்தியக்ஷமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கவும், தான் கெட்டகுரங்கு வனத்தை யெல்லாங் கெடுத்ததென்பதைப்போலச் சங்கைகளுண்டாக்கி ஆசாரம் பூஜை தவம் ஜபம் தோத்திரம் முதலான சத்காரியங் களில் வாழ்நாளைக் கழிப்பவர்களைக் கெடுத்து மதுபானமும் மாமிச புக்தமுஞ் செய்து மதத்துக்கொழுத்து லாகிரியால்

வெறிகொண்டு வீணுளைக் கழிக்கும்படியாய்ச் சொல்லுகிருர்கள். பசுவைப்போலொத்த மானிடர்கள் ஈனமதங்களில் பிரவேசித்து ஆனையைப் புசிப்பவனுக்குப் பூனை எவ்வளவு பெரியதென்பதுபோல மதுபானம் மாமிசபுக்தஞ் செய்வதிலும் மாதர்களைப் புணர்வதிலும் சிரேஷ்டர்களாய் நரகப் பட்டணத்தை எப்போதும் ஆளும்படியான கீர்த்திபார்களாகி அதிதிகட்கு அன்னமிடாமலும், அந்தணர்களைப் பணியாமலும், அனித்திய வாழ்வை மெய்யென்றும், நித்தியவாழ்வைப் பொய்யென்றும், தந்தை தாயார் வாடவும், தாரத்தைக் கொண்டாடவும், தர்மதானங்களைத் துறக்கவும், தயவு தாக்ஷண்ய மிறக்கவும், வாக்கினுற் சொன்னதை மாற்றவும், வசைமொழியாற் பெரியோர்களைத் தூற்றவும், கபடுங்கள்ளமும் மிஞ்சவும், கன்னிகள் மொழிகளைக்கேட்டுக் கொஞ்சவும், வீணருக்கு ஏவல் செய்யவும், வித்தகர் தம்மை வையவும், பொய்மொழியென்றும் பேசவும், புலால்நாற்றம் மேல்வீசவும், தவசிகள் தம்மைத் தாழ்த்தவும், சண்டாளர் தம்மை வாழ்த்தவும், தேவாலயங்கள் குறையவும், தேவதாசிகள்வீடு நிறையவும், கோக்களை யனுதினங் கொய்யவும், கொய்து பாகங்களாய்ச் செய்யவும், குருவைக்கண்டால் நாணவும், கோதையர் தம்மைப்பேணவும், பூசை யாசாரங்கள் நீங்கவும், ஆசையாய்ப் பொருளைச் சேர்க்கவும், சாதுக்கள் சங்கம் நீங்கவும், சண்டாளர் சங்கம் ஓங்கவும், இஷ்டதெய்வங்களை யிகழவும், ஈனர்கள் தம்மைப் புகழவும் நேரிட்டதால் பாபம் மேலிட்டுத் தெரிவையர் மனம்போனபடி திரிந்து மழையில்லாமல் சகலமுமெரிந்து, எங்களுடைய தவசு பங்கமாய் உலகத்தில் நிர்வகிக்கமாட்டாமல் நாட்டில் முகங்காட்டாமல் மிகவும் நொந்தோம்; தங்களிடம் முறையிட்டுக்கொள்ள வந்தோம். ஆதலால், உலகில் புண்ணியம் பூசை புகழும் ஓங்க, திண்ணிய மனதிற் செபங்களும் ஓங்க அன்னியஸ்திரீகளை அன்னையாய்ப் பார்க்கத் தானந் தியானஞ் சாந்தமாய் செய்யச் சாதுகள் சங்கம் சந்தோஷமாய்ச் செய்யத் தேவாலயங்கள் தெருவெல்லாம் நிறையத் தேவதோத்திரங்கள் செவிகளில் நிறைய, அன்பும் ஆசாரம் அதிகமாயிருக்க, அன்பர் சேவடிக்கு அன்பு செய்திருக்கச் சத்தியமொழிகள் தழைத்து அழகாகச் சகல சம்பத்துடன் சகலரும் வாழ்க, மாதமும்மாரி வளமுடன் பெய்ய, மானிடரெல்லாம் மாதவஞ்செய்யக்கருணை கூர்ந்து எங்களையாட்கொளவேண்டும்" எனப் பிரார்த்தனை செய்து வணங்கினார்கள்.

அப்படி நிற்கும்போது திரிமூர்த்திகளும் ஆலோசித்து ரிஷிகளை நோக்கி, "ஓ தபோதனர்களே! நாங்கள் பூலோகத்தில் காசிக்கும் அயோத்திக்கும் பண்டரிபுரத்துக்கும் மத்தியில் அவதாரஞ் செய்து பாமக்ஞானமும் சகுணத்தியானமும் ஜீவகாருண்யமும் பூசை யாசாரமும் தழைக்கும்படியாய்ச் செய்கிறோம்; நீங்களும் அத்தேசங்களிலேயே அவதாரஞ்செய்து துலுக்கர்மதம் முதலான துர்மதங்களை கண்டித்துத் துன்மார்க்கரைத் தண்டித்து எங்கள் திருநாமங்களை நிலைநிறுத்துங்கள்" எனத் திருவாய் மலர்ந்தருளி, மகாலட்சுமியையும் சரஸ்வதியையும் நோக்கி, "நீங்கள் இருவரும் இத்தபோதனர்களுக்கு உதவியாயிருங்கள்" என்று உரைத்துச் சபைகலைந்து தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு பகவான் கட்டளைப்படி வேதவியாசர் ஜகநாதமென்னும் ஸ்தலத்தில் அவதாரஞ்செய்து ஜெயதேவென்றும், வால்மீகர் டில்லியில் அவதரித்துத் துளசிதாசென்றும், உத்தவர் பண்டரிபுரத்தில் யோனிசம்பந்தராய்ப்போய் நாமதேவென்றும், சுகர் காசியில் யோனிசம்பந்தாய் அவதாரஞ்செய்து கபீர்தாஸென்றும், அக்ரூரன் மதுரா பிருந்தாவனத்தி லுற்பவித்துச் சூரதாஸென்றும், அனுமார் டாகூர்தேசத்தில் ஜன்மித்து இராமதாச ஸ்வாமிகளென்றும் திருநாமம் பெற்றார்கள். இப்படியே அனேகர் அனேக தேசங்களில் அவதாரஞ் செய்தார்கள். மும்மூர்த்திகளும் ஆதிசத்தியும் பண்டரிபுரத்திற்குச் சமீபமாயிருக்கும் ஆபேகாம் என்னும் ஊரில் கர்ணீக பிராமணக்குலத்தில் விடோபா என்பவர்க்கும் ருக்மாபாயிக்கும் பிள்ளைகளாய்ப் பிறந்து நிவர்த்திநாது க்ஞானேசுவரர் சோபான்தேவ் முக்தாபாய் என்னும் திருநாமம் பெற்றார்கள்.

இவர்களுடைய வரலாறுகள் அங்கங்கே அவரவர்கள் சரித்திரங்களில் சவிஸ்தாரமாய்த் தெரிந்துக்கொள்ளலாமெனத் திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாறு கூறிய நாபாஜி சித்தரை உத்தவசித்தர் முதலானவர்களும் தோத்திரஞ்செய்து முன்னம் வேதவியாசர் இவ்வுலகில் அவதரித்து என்ன திருவிளையாடல் செய்தாரோ அதையும், மற்றவர்களுடைய சரித்திரங்களையும் ஆதியோடந்தமாய் யாங்கள் அறியக் கருணை கூறுங்கள்" என்று வணங்கினர்கள். அதற்கு நாபாஜிசித்தர் அகங்குளிர்ந்து முகம் மலர்ந்து, "ஓ சித்தர்களே! உங்கள் இஷ்டப்படியே சொல்லுவேன். ஆனல் இன்று ஜெயதேவ் திவ்விய சரிதையைச் சொல்ல என்ன பாக்கியஞ் செய்தேனே?" என்று புளகாங்கத்துடன் சொல்லத்தொடங்கினர்.

ஷண்முகன் திருவடிகளே சரணம்

குருவே துணை

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

முதலாவது

# ஜெயதேவஸ்வாமிகளின் சரித்திரம்



## பகவான் துதி

விருத்தம்

திருவைகுந்தந் தனில்வாழுந் தேவேகோவே தேவரெலாம்
மருவித்துதிக்குந் திருமாலே மணியேகணியா மாதவமே
பெருமைதருமெம் பெருமானே பீதாம்பரதா மோதரனே
அரியபொருளே அச்சுதனே அடியேனுன்ற னடைக்கலமே.

## ஜெயதேவர் துதி

விருத்தம்

ஜெயதேவென்னுந் தேசிகனே திருடர்தமையாட் கொண்டவனே
மயலாயுயிர்நீங் கியபதுமா வதிக்காருயிரை யளித்தவனே
ஜெயமீயுன்றன் சரிதைதனைச் சீராச்செயவுன் திருவடியைத்
தயவோடீங்தென் றனையாளச் சரணம்புகுந்தேன் சரணருளே.

முதலாவது

# ஜெயதேவர் உற்பத்தி அத்தியாயம்



சீர்தருங் கணபதி என்று ஓர்தாம் நினைக்கும் பக்குவா பக்குவர்களின் எக்காரியங்களும் அக்கணமேமுடியச் சர்வ விக்கினங்களையும் நிக்கிரகிக்கும் சுக்லாம் பாதரனை விக்னேஸ்வானை மூலாதாரத்திலும், நோக்கற்கரிய சாக்கியாய் ஜீவன் மோட்சமடைந்தோர் வாக்கினில் நீக்கமின்றிய வாக்காளை நாக்கினில் தரித்த எண்ணேக்கமுள்ள பிரமாவைச் சுவாதிஷ்டானத்திலும், பகிர்முகம்விட்டு அகமுகப்பட்டு அகமமதைகுன்றிச் சட்டகஸ்மரணையின்றிச் சுகமயமாயிருப்போர் வாசஸ்தானத்தை நீங்காத் திருமகளை வட்சஸ்தலத்தில் பட்சமுடன்தரித்த அச்சுதனை மணிபூரகத்திலும், தர்மங்களெல்லாந் தெரிந்து மர்மங்களெல்லாமறிந்து, கர்மங்களெல்லாமெரிந்து, பிரமானந்தம் விரிந்து, தன்னை மறந்திருப்போர்க்கு அன்னமும் பாலும் ஏந்திக் கொண்டு அவர்பின் நிழலைப்போற்றிரியும் அன்னபூரணிக்கு இடப்பாகமீந்த சங்கானை அனுகதத்திலும், பிர்மானந்தவாரியில் மூழ்கி, திரிகாணத் துன்பங்கள் மாழ்கி, உன்மனியவஸ்தையி லிருப்போர்க்கு ஏவல்செய்யும் மாதவர்மேல் தனது

ஆக்கினையைச் செலுத்தா மயேஸ்வரனை விசுத்தியிலும், ஜாக்ரத-சுவப்ன-சுழுத்தி-துரியமுங் கடந்து, துரியாதீத நிலைமைப் பொருந்திச் சங்கல்ப விகல்பமென்னும் இராப்பகலற்று, நிருவிகற்பமா யிருப்போரைப் பணியும் பக்தர்களின் சித்தத்தைச் சுத்தமாக்கும் பிரசித்தனுன நித்திய சத்திய சதாசிவத்தை ஆக்னேய சக்கரத்திலும், தரிசித்த பரிசுத்த உத்தமசித்தர் முதலானவர்களை நோக்கி, இருமணிகளையும் ஒருமணியாக்கி ஆயிரத்தெட்டிதழ்ப் பங்கயமேடையில் ஒருகாலை நீட்டி, ஒருகாலையாட்டி, காலனை வாட்டி, வீணையைமீட்டி, ஓசையைக்கூட்டி, சுகாமிர்தத்தை ஊட்டிய சட்சக்ரேஸ்வரர் அறுவரும் ஒருருவாகிய கோடிசூரியப்பிரகாச கிரணங்கள் திரணங்களாய்மங்கும்படி ஒளிவிளங்கிய சுப்பிரமணியை, பிரமரந்திரத்திற் காணுமற்கண்டு ஆனந்தங்கொண்டு அவாங்மனே கோசரமாய் மூவர் தேவர் மற்றியாவராலும் அறிவதற்கரிய பரமாய், அபரோக்ஷமாய், அத்வைதமாய், சாக்ஷாத்காரமாய், தன்மய சின்மயமாய், நிஷ்களபுஷ்களமா யிருக்கும் அச்சுப்ரமண்யமே தானுன நாபாஜிசித்தர் சொல்லுவார்.

"ஓ சீலர்களே! சற்சங்கத்துக் கனுகூலர்களே! ஸ்ரீரகுநாயகர் தன் மார்பகத்திற் போட்ட மாலையிலுள்ள முத்துக்களை ஒன்ரென்ருய்க் கடித்துப் பார்த்து ஞானரசமில்லையென்று அத்தாமத்தை யெறிந்துவிட்ட பூரண பிர்மக்ஞானியாகிய மாருதியின் திருவுருவை வெகு விசித்திரமாய் வரைந்திருக்கும் நீட்சியான அனுமக்கொடிகளும், பிருங்கீசனைத் தன் சேட்டைக்காற்றினல்வாட்டி அக்கேச னழகிய வடிவை எழுதியிருக்கும் மாட்சிமையான கருடத்துவஜங்களும், புருஷ மிருகத்துக்கும் பீமனுக்குமுள்ள வழக்கைத் தீர்த்த நடுநிலைமைப்பூண்ட தருமமே ஒருருவான உதிஷ்டிரன் முதலான அரசர்களும், நாணும்படியான நீதிகள் வாய்ந்தவர்களால் கட்டப்பட்ட வாயுமண்டலத்தின் ஸ்பரிசத்தையும், பாபத்துக்கஞ்சி கோபித்துக்கொண்டிருக்கும் மேகசலத்தின் ஸ்நானத்தையுங் கோரியதொத்த நீண்டகோபுரங்களும், மாபுரங்களும், மாதர் போகத்தையும் மோகத்தையும் வென்றவர்களால் வகுத்த சத்தியலோகத்தார் பார்த்து ஆச்சரியப்படும்படியான ஓமகுண்டங்களும், பிதுர் பிண்டங்களும், கனகாசை கனவிலுமில்லார் புதுக்கிய தேவர்கள் மகிழத்தக்க யாகசாலைகளும், பெருஞ்சோலைகளும், சொற்

பனத்திலுந் தப்பிதஞ்செய்யா அற்புதமானவர்களாற் செய்த தர்மதேவதை வாஞ்சித்திருக்கும்படியான அன்ன சத்திரங்களும், அதில் வன்ன சித்திரங்களும் அறம் மறந்தும் செய்யாமலறமேசெய்து ஆனந்தமடையும் புனிதர்களா லியற்றிய ரிஷிகள் சந்தோஷத்துடன் எப்பொழுதுந் தங்கி வாசஞ்செய்யும் படியான பூந்தோட்டங்களும், அதில் நீரோட்டங்களும் இதர புருஷர்கள் நம்மைக் காணிஞசித்து மயக்கமடைவார். அதனுல் நமது பதிவிரதா தர்மங்கெட்டுப் பாபகர்மம் மேலிட்டு நிரையத்துக் காளாவோமென்று அச்சமுற்றுப் புறம்போகாது மறைந்திருக்கும் அளகேசனுந் துதிசெய்யும் மேடைகளும், சிங்கார வீடுகளும், மேனகை ஊர்வசி அரம்பை முதலானவர்களும் நாட்டியஞ்செய்ய பின்னிட்டு இதுவென்னமுழக்கமென்று அச்சமுற்று ஆகாயத்தி லிருந்தபடி ஆவலுடன் கேட்டு உளமகிழும் விதாணையான மத்தளத் தொனிகளும், வீணையினெலிகளும், பவுத்தாவதாரமாகிய பூரணனந்த நிஷ்டையிற் றிகழ்ந்து மன மகிழ்ந்து இதுவே யிருப்பிடமாகி க்ஷீரசாகரத்தை நினையா திருப்பதென்ன பயித்தியமோ! சீக்கிரம் சேஷன்மேல் சயனிக்க வாருமென்று ஓங்கார சப்தத்துடன் கூவும் வாரிதியின் கோஷ்டமும், ஒ கிருஷ்ண! இந்த நாதானந்தம் க்ஷீரசாகரத்தில் கேட்கக் கிடையாது. ஆதலால் இச்செகநாதத்தை எப்போதும் விட்டு நீங்காதிருப்பாயென்று ஆசையுடன் ஓசையாய்ப் பாடும் பரம பாகவதர்களில் விஷ்ணுசங்கீர்த்தன கோஷ்டமும் முழங்கும், நான்கு வர்ணத்தாரும் ஒருமைப்பட்டு அன்னமுண்ணும் ஸ்தலமாகியும் புண்ணியக்ஷேத்திரமாகியும் அழகும் புகழும் ஓங்கிய ஜகநாதமென்னும் திருநாமம்படைத்த திவ்விய நகருக்குச் சமீபமாகிய பில்வகாம் என்னும் ஊரில் இருப்பவர்; திவ்விய திருநாமந் தரிப்பவர்; பந்தபாசங்களிற் குறைந்தவர்; மந்த புத்திகளெல்லாம் மறைந்தவர்; இந்திரிய சேஷ்டைகளிறந்தவர்; தொந்தங்களெல்லாந் துறந்தவர்; நிந்தையிலிருந்து பிரிந்தவர்; எந்த சாஸ்திரங்களு மறிந்தவர்; இந்த வாழ்வு அற்பமென்றறைந்தவர்; நந்தனந்தனன் பக்தி நிறைந்தவர்; விந்தையாம் ஸ்திதியிற் சிறந்தவர்; சிந்தைமாய்ந்தருளி லுறைந்தவர்; அந்தமாம் பிர்மத்தில் மறைந்தவர்; அந்தரானந்தத்திற் கரைந்தவர்; அந்தணர் குலத்திற் பிறந்தவர்; அல்லும் பகலும் கல்லும் உருக நாராயணன் திருநாமங்களைப் பாராயணஞ்செய்யும் நாராயணசாஸ்திரியென்னும் திருநாமமுள்ள ஓர் புண்ணிய சீலர்.

விமலானந்தமே ஒருருவாகிய கமலாபாய் என்னும் உத்தம சித்தத்தினையுடைய பத்தினியோடும் வித்தகமாகிய இல்லறத்தில் நல்லறத்தோடிருந்து அதிதிகட்கு அடிக்கடி விருந்து அன்புடன் செய்து கர்மங்களைக் கொய்து சதா சாதுக்கள் சங்கமும் சத்கதா பிரசங்கமும் பெரியோர்கள்பால் வணக்கமும் உரியோர்கள்பா லிணக்கமும் நாவில் அரிகாரியென்னும் செபமும் நாடோறும் பிசகாமற் செய்யுந் தபமும் எப்போதுங் காத்தில் வேதமும் இசைப்பதெல்லாஞ் சுத்தபோதமும் இல்லையென்பவர்க்கு ஈயுந்தானமும் தொல்லை வந்தாலும் முனியா நிதானமும் சஞ்சலமில்லா யேகத்தியானமும் சந்தோஷவாரியிற் படிந்திடும் மோனமும் பெற்று நித்தமும் உத்தமோத்தமாகிய ஜனார்த்தனுக்கு தனுமனார்த்தங்களைத் தாரைவார்த்து உச்சித மனதுடையவனாய் துச்சவிச்சைகளையெல்லாம் வெறுத்து அஞ்ஞான பாசங்களை யறுத்து சகல சாம்பிராச்சியத்துடன் பிர்மானந்தத்தைப் பெற்று நிர்விகற்ப நிலையையுற்று வாழ்கின்ற காலத்தில், கமலாபாய் தனக்கு எல்லாப் பாக்கியமிருந்தும் புத்திரபாக்கியமில்லாக்குறையால் ஸ்ரீ ஜகநாதரை விசுவாசித்து அன்புடன் பூசித்து, ஓம் அரிகரி! நரஹரி! அம்புஜாட்சரி! எனக் கோஷித்து புத்திரவாஞ்சை விசேஷித்து, "ஓ பகவானே! சாந்தமே ஒருருவான ஓர் மைந்தனை யான் பெறும்படியான வரந் தந்தருளல் வேணடும்" எனச் சந்ததமுஞ் சிந்தனஞ் செய்துக் கொண்டிருக்கிறநாளில், ஒருநாள் இரவில் இலட்சுமியை வட்சஸ்தலத்தில் தரித்த பச்சைவர்ணனை அச்சுதனனவர் நாராயணசாஸ்திரியார் கனவிலடைந்து, "ஓ எனக்குகந்த பக்தனே! ஜீவன்முக்தனே! நீயும் உன்மனைவியும் என்னை நோக்கித் தவஞ் செய்ததற்காக ஆனந்தமடைந்தேன். அதனல் உன் மனைவி கோரிய வரமுந்தந்தேன். இதனல் உன்குறையும் உன் மூதாதைகள்செய்த குறையும் நீங்கும்" என்றறைந்து மறைந்துபோயினர்.

உடனே சாஸ்திரியார் விழித்துத் தன் நாயகியை விளித்து, "ஓ பெண்ணே! என்னிருகண்ணே! என் கனவில் பகவான் வந்து உன் மனையாள் இச்சித்த வரம் கொடுத்தேன்; அதனல் உன் குற்றமும், உன் மூதாதைகள் குற்றமும் நீங்கும்" என்று ஓதிப்போயினர். "ஓ என் குலவிளக்கே! கோதிலாவமுதே! என்ன வரத்தைப் பகவானிடங் கேட்டாய்? அதை இக்கணமே சொல்லும் பாவையே பூவையே" என்று ஆவலுடன் கேட்டார். அதற்கு அப்புண்யவதி இன்பமொழி புகன்ற அன்பனை

வணங்கி, "ஓ சுவாமி! நமதுகுறை நீங்க ஆனந்தமோங்க ஆரணத்தின் கருத்தின்படி முத்தியளிக்கும் புத்திரனைப் பெறும் வரத்தையே வாஞ்சித்தேன்" எனச் சந்தோஷத்துடன் உரைத்தாள். அவ்வசனத்தைக்கேட்ட அந்தணர் மிகவும் வியாகூலமடைந்து, "அடி பேதாய்! அறிவில்லாக் கோதாய்! 'எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தி' என்ற பழமொழியை நிலைநாட்டினுய்; பேதைமைக்குணத்தையே காட்டினுய்; அழியாப் பதத்தையும் பதத்தையடையும் விதத்தையுந் தரும் பகவான் தரிசனத்தைக் கோராமல் இகவாசையைக் கோரினுய்; பலநாள் ஜகநாதரை நோக்கித் தவஞ்செய்த நீ மோட்சத்தைக் கேட்கலாகாதோ? அதனுல் சஞ்சித கர்மங்களெல்லாம் நீங்கிப் போகாதோ? இகவாசையான மகவாசைக்குட்பட்டாய்; நீகெட்டாய்; பகவானைக்கேட்பது நித்தியப்பொருளையா? அநித்தியப்பொருளையா? ஈஷணுத்திரயங்களை வாஞ்சிப்போர்க்குப் பந்தமென்றும், புராணங்களில் முறையிடுவதறியாதவளா? ஒன்றுந்தெரியாதவளா? சீதேவியைப் பூசித்து மூதேவியை வேண்டியதுபோலவும், மலையைக்கெல்லி எலியைப்பிடித்ததுபோலவும், பாதாளாஞ்சனம் போட்டுப் பருத்த எலும்பைக் கண்டெடுத்ததுபோலவும், நெடுநாள் தவஞ்செய்து யுத்தத்தைக் கோரிய வாணுசுரனைப்போலவும், பேரின்பத்தை நீக்கிச் சிற்றின்பத்தைக்கோரிய குப்ஜாவைப்போலவும் செய்தாய். ஓ மாதே! காளையால் பரமபதம் பெறுவோமா? பரமானந்த முறுவோமா? வெகுநாளாய் விரதமிருந்தும் வீணுய்ப்போனுயே! நிறையத்துக்காளானுயே!" என்கிற பலவார்த்தைகளாடி மனம்நைந்துவாடிப் பகவானைப்பாடிப் பரமானந்தத்தை நாடி நிஷ்டையில் வெகுநேரமிருந்து பிறகுதெளிந்து மனையாளுடன் பேசாமலிருந்தார்.

கமலாபாய், மணாளன்முன் நிற்பதற்கு நாணமடைந்து மிகவும் இடைந்து புத்திரரைப் பெருதவர்களுக்கு முத்தியில்லையென்று உரைக்கும் கர்மகாண்டத்தை நம்பி மர்மமறியாமல் பிரமைக்குள்ளாய்ப் போனேமே; துச்சவிச்சையாற் பேதையானேமே; என்று அனந்தவித வெண்ணங்களால் மனம் புண்ணுகி, ஸ்ரீஜகநாதரை நினைந்து கண்ணீரால் நனைந்து, "ஓ பகவானே! சதிபதிகளாகிய எங்கள் மூவேழிருபத்தோர் தலைமுறையோரும் மோட்சமடையும் பாக்கியம் அளிப்பாய்" எனப் பணிந்து, இருவரும் அன்னுகாரமின்றிப் பகல்முழுதுங் கழித்து இரவிற் றுயில் வாராமையால் விழித்துக்கொண்டு இருந்தார்கள்.

அப்போது பகவான் ஓர் அந்தணனுக வந்து உபயருக்குந் தரிசனந் தந்து, "ஓ பத்திமிற்சிறந்த உத்தமர்களே! புத்திர பாக்கியத்தால் உங்கள் மூதாதைகட்கு முத்தியும் விரத்தியினுல் உங்களுக்கு என்பத்தியும் அளித்தேன். இனி ஸ்நானபானஞ் செய்து இருவரும் ஒருமித்திருங்கள்" என்று உரைத்து அந்தரத்தானமாயினர்.

அவ்வற்புதத்தைப் பார்த்த பாகவதன் தனக்கிருந்த மாச்சரியங்கெட்டு ஆச்சரியப்பட்டுக் காதலியைநோக்கி கக்கசத்தைப் போக்கி, "ஓ மாதுசிரோமணியே! என் இருகண்மணியே! உன்னுல் என் குலத்தோரும் நானும் கிருதார்த்தராேனும்" என்று உரைத்து முன்பிலும் அன்புமேலிட்டு இன்புடன் கூடியிருந்தார். இப்படி சிலநாள் கழிய இலட்சுமியை வட்சஸ்தலத்திற்றரித்த அச்சுதன் உத்தரவாலும், சதிபதிகளிருவரும் ஒருமனதாய்ச் செய்யுந் தபோபலத்தாலும், முனிவருக்குள் முதல்வர் பராசமகாரிஷியின் புதல்வர் வேதங்களைக் கையிற் பிடித்துக் கொண்டே பிறந்தவர் எண்ணுஞ் சிரஞ்சீவிகளாகிய அறிஞரிற் சிறந்தவர், பெண்ணுசை முதலானதுந் துறந்தவர், வேதவாக்கியங்களை யறிந்தவர், மூவுலகத்தும் வேதங்களை விரித்தவர், நாவிற் ருமோதரனுமந் தரித்தவர் ஆகிய வேதவியாசர் கௌசலையின் கர்ப்பத்தையடைந்து மகாவிஷ்ணுவைப்போலவும், சுமித்திரையின் கருவிலடைந்த ஆதிசேஷனைப்போலவும், கமலாபாயின் வயாவிலடைந்து பிறர் குற்றத்தை நாடாப் பெரியோர்களின் வாழ்வைப்போலவும் ஜீவகாருண்ய முள்ளோர்கள் செய்யுந் தவத்தைப்போலவும் கற்புள்ள ஸ்திரீகளுக்கு உண்டாகுஞ் சுபத்தைப்போலவும், மோட்சவிச்சையுள்ளோர் அன்புடன் செய்யுஞ் செபத்தைப்போலவும், பெருமை சற்றுமில்லார் குடும்பத்தைப்போலவும் விர்த்தியடைந்து பூரணமானபின் திவ்யமங்கள விக்கிரகத்தைப் போன்ற திருவுருவுடன் அவதாரஞ் செய்தருளினர்.

அழகிய தனயனைக்கண்ட பெற்றேர் அன்பாய்ப் பார்த்து மார்புடன் சேர்த்துப் பிறவிக்குருடன் கண் பெற்றதைப்போலவும், மலடி மைந்தனைப் பெற்றதைப்போலவும், தரித்திரனுக்கு சேமங்கிடைத்தாற்போலவும், யாசகனுக்கு இராஜரீகம் கிடைத்தாற்போலவும், அகம் மகிழ்ந்து அரியைப்புகழ்ந்து கண்ணைக் காக்கும் இமையைப்போலவும், கன்றைக்காக்கும் கபிலையைப் போலவும், கற்பைக்காக்குங் காந்தையைப்போலவும், உயிரைக்

காக்கும் உடலைப்போலவும், காப்பாற்றிக் கர்த்தனைப்போற்றி தரு மந்தாராளமாய்ச்செய்து தங்களுக்குற்ற சங்கல்பத்தைக்கொய்து அனைவருக்கும் விருந்திட்டு ஜெயதேவன் என்று பெயரிட்டு ஐந்துவயதானதே நற்சுபதினத்தில் பலவாத்தியங்கள் முழங்க, பிராமணர்கள் சூழ உபநயனஞ் செய்து வித்தியாப்பியாசமுஞ் செய்வித்து நான்குவேதம் ஆறுசாஸ்திர புராண விதிகாசங்களை யும் ஓதுவித்து, வயது முதிர்ந்தபின் தங்கள் பந்துக்களில் திருந் திய செல்வமும் அருந்தவக் கல்வியும் செவ்விய தேகமும் திவ் விய யோகமும் கண்டுபோல் மொழிகளும், கெண்டையின் விழி களும், கமலநிகர் தாள்களும், விமலமுள்ள தோள்களும், பதி யின் பால் அடக்கமும், துதியுளொடுக்கமும், பரமானந்த பக்தி யும், திரமான புத்தியும், கற்புடன் மானமும் விற்பன தியானமும், கருணையுள தானமும், ஸ்மரணையோடு மோனமும், மேகத்தைப் போன்ற கூந்தலும், சந்திரனைப்போன்ற முகமும், பவளம் போன்ற வாயும், முத்தைப்போன்ற பற்களும், மெதுவான நடை யும், மெலிவான விடையும் உள்ள பத்மாவதியென்னுங் கன்னி யைப்பேசிப் பலருக்குஞ் சந்தனம் பூசி பந்துவர்க்கத்துடன் பல ருஞ் சேர்ந்து விந்தையாய் மணஞ்செய மிகக் களிகூர்ந்து, அன் பாய்த் தென்பாய் அருமையாய்ப் பெருமையாய்ப் பச்சைப்பந் தல் பட்சமாய்ப்போட்டு உச்சிதவாழைகள் உயர்ந்ததாய் நட்டு மலர்களின் தோரணம் மாவிலைத்தோரணம் பலரும் மெச்சப் பரி வாகக்கட்டி ஜெயதேவுக்குச் சீரணிபூட்டி நயபத்மாவதிக்கு நகை பல சூட்டி மணக்கோலஞ் செய்து மலர்ப்பந்தல் கீழே இணக்க மாய் இருவரை யிருந்திடச் செய்து ஓமம் வளர்த்தி உச்சிதம் நடத்தி நேமமனைத்தும் நேசமாய்ச் செய்து க்ஷேமமீவேளையில் தெரிவையர் சூழச்செய்து க்ஷேமமாயிருவருஞ் சேர்ந்தென்றும் வாழ, வேதியர் வேதகோஷ்டங்களை யோத, கோதையர் மங் கள கோஷ்டமோத, தாளமும் மேளமுஞ் சதிருடன் முழங்க, ஆளும் பதிபதம் அன்புடன் வழங்க, அமரர்கள் சாக்ஷியாய் குமாரன் கைகளால் கோதையின் கழுத்தில் மங்கிலியத்தை வகையுடன் தரித்து அங்கையாற் பலரும் அக்ஷதை தூவி ஆசிகள்செய்து அலர்மழைபெய்து மாசுகோத்தமரர்கள் மன மிகமகிழ பந்துவர்க்கத்துடன் பலரும்விண்டு விந்தையீதென் றும் மெச்சியுட்கொண்டு உள்ளங்கனிந்து உடலம்பூரித்து விள்ளொணு வன்பினை மேவியே வியந்து வதுவை முடிந்தபின் பின்சகலருந் தங்கள்தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தனர்.

பின்பு ஜெயதேவும் பத்மாவதியும் அன்புடன் இன்ப போகங்களை அனுபவித்துக்கொண் டிருந்தார்கள். எப்படி யெனின், உடல்வேருக உயிரொன்ருக வடிவிரண்டாக மன மொன்ருக ஒருவர் மொழியை ஒருவர் தள்ளாமல் பிரியமில்லா புன்மொழிகள் விள்ளாமல் இருவருமொன்ருய் ஏகபோகமாய் மருவி திருமால் மாயையிலிருந்தும் கடினமில்லாமல் கசந்து பேசாமல் விடியுமுன்னெழுவார், வேதமோதிடுவார், ஆதிநாரா யணன் அரிநாமங்களை ஓதி எந்நாளு முளங்களிகூர்வார், பெரி யோர்க்கு ஏவல் பிரியமாய்ச்செய்வார், உரியோர்வந்தா லுவகை யோடு அழைப்பார், சொர்னதானங்கள் சும்மாசெய்வார், அன்ன தானங்க ளன்புடன் செய்வார், அநித்யவாழ்விலாசையேனென் பார், ஜெனித்ததிவ்வாஞ்சையாற் றெளிந்தோமென்பார், சத்திய மானது தவசே யென்பார், துர்ச்சனசங்கந் தொல்லையாமென் பார், சற்ஜனசங்கஞ் சதானந்தமென்பார், சாதுக்கள்வந்தால் சாந்தமாய்ப்பணிவார், போதமீந்தெமையாள் புனிதனே யென் பார் இவ்வித நன்மொழிகளாடிக்கொண்டு இருவரும் மன மொத்து மூவருந் தேவரும் முத்தரும் சித்தரும் யாவரும் மனமகிழ வாழ்கிறகாலத்தில்,

நாராயண சாஸ்திரியாரும் கமலாபாயும் விரக்தியினுல் உங்களுக்கு பக்தியும், பக்தியினுல் முக்தியும் உண்டென்று உரைத்த பகவான் வாக்கியத்தை நினைத்து இனி நமது மைந்த னுக்கு ஓர் குறையுமில்லை; கற்புள்ள பத்மாவதி யிருப்பதால் வராது யாதொருதொல்லையென்று யோசித்துப் பகவானைப் பூசித்துத் தந்தைதாய் இருவருந் தவஞ்செய்ய நினைத்து விந்தை யாய் வனந்தனில் மேவிடத்துணிந்து தனயனைப் பார்த்துச் சாந்தமாயிருந்தால் வினயமாய் மோக்ஷ நீ மேவுவாயென்று மருமகள் தன்னை மகிழ்ச்சியாய் நோக்கித் தெரிவையே பதியே தெய்வமென்ருேதி அடவியிற்போய் நல்ல அருந்தவம்புரிந்து மடமையைத் தவிர்த்து மகிழ்ச்சியா யிருந்தார்கள். ஜெயதேவும் பத்மாவதியும் தந்தைதாய் வனத்தில் சென்றதற்கு அயர்ந்து நாமும் சிலநாளில் வானப்பிரஸ்தத்தையே கைக்கொள்ள வேண்டுமென்று உறுதி கொண்டிருந்தார்கள்.

ஜெயதேவர் உற்பத்தி அத்தியாயம் முற்றிற்று.

---

இரண்டாவது

## ஜெயதேவர் விரக்தி அத்தியாயம்

கேட்டீர்களோ சித்தர்களே! பின்பு ஜெயதேவ் என்னும் தேசிகோத்தமனும் திவ்விய பத்மாவதியென்னுந் தேவியும் சந்தோஷத்துடன் சகல சௌக்கியங்கள் அனுபவித்துக்கொண்டிருக்குந் தருவாயில், ஜெயதேவுக்குத் தவத்துக்கு உறுதியான ஜீவகாருண்யமும், மோக்ஷத்துக்குரிய பிரமக்ஞானமும் மேலிட்டுக் காலையிலிருந்து மாலைமட்டும் தன்னையறிந்த பிரமக்ஞானிகளுக்கும் காயத்திரி ஜபஞ்செய்யும் பிராமணோத்தமர்களுக்கும், ஆசையோடு யாசகஞ் செய்யும் அதிதிகட்கும், இல்லையென்னுமவிருந்ததையெல்லாம் தயவு தாக்ஷண்ய மிகுந்து சாந்தமனதுடன் தந்து திரவியஞ் சற்றுமில்லாமல் ஆவினந் தன்னிலோராவில்லாமல் தானியந்தன்னிற் றவிடில்லாமல் வீட்டையும்விற்று மேலவர்க்கீந்து காட்டிலிருப்பவர்களைப் போலாகி மங்கிலியந் தவிர மற்றொன்றின்றி எங்கணும்பேச இவர் செய்ந்நன்றி கோவணமணிந்து குவலயந்தன்னில் சாவடி சத்திரந் தன்னிற்றங்கி அச்சுதகேசவனாதிநாராயணன் உச்சிதநாமங்கள் உளத்திற் பாராயணம் க்ஷணமறக்காமல் ஜபித்து அகமகிழ்ந்து கணத்துங் காந்தையுங் கர்த்தனைப்புகழ்ந்து குட்சியினிமித்தம் பிக்ஷைக்கேகி பக்ஷமுள்ளோர் தரும் பண்டங் கைக்கொண்டு சதிபாற் சென்று தையலே! கொள்வாய்; மதியுளோரளித்த வஸ்துவென்றீந்து, தடாகந்தன்னில் ஸ்நானமுஞ்செய்து, அடாது செய்தால் அலைச்சலென்று உரைத்துப்பூசைகள்செய்து,புராணமும் படித்து, மாசுகோத்தமரை வாஞ்சையாய்த்தேடி, அன்பரைக் கண்டு அடிபணிந்தேத்தி, அன்புடன் மலர்களையணிந்து பூசித்து, நாராயணன் கதை நல்லமுதென்று பாராயணஞ்செய்யும் பக்தரைப்பணிந்து, அரியினுமம் அன்புடனோதிப் பிரமக்ஞானம் பெருமையென்றோதி அதிதியின் மனதை அரக்காக் கரைத்துத் துதிசெய்து எங்கள் தோன்றலேயென்று போனகஞ் செய்யப் புனிதனே வாரும், ஞானவிளக்காம் நாதனே வாரும், அருளோருருவா மையனே வாரும், பொருளீந்தெம்மைப் புனிதனே வாரும், சுயம்பிரகாசச் சோதியே வாரும், நயந்தருங் குருவே நலமுறக்காரும், சின்மயானந்த தேவனே வாரும், தன்மயமடியேன் சார்ந்திடக்காரும் என்று அத்துறவியை

யின்புடன்கொணர்ந்து இன்று இங்ஙனமுண்டு எங்களைக் காரு மென்று உரைத்து, ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயக ராகிய ஸ்ரீமந் நரநாராயணன்மேல் நூதனமாய் அநேக கீர்த் தனைகளும் அஷ்டகங்களும் பாடிக்கொண்டிருக்கும்போது,

பத்மாவதி பதி கொண்டுவந்து கொடுத்த பண்டங்களை ஒரு நொடியில் அதிமதுர பாகமாய்ச் சமைத்துப் பலவிதங்களால் அமைத்துப் பதியைப் பணிந்து பாதங்களால் நயனங்களை யணிந்து, "குருதெய்வமான கொழுநனே வாரும்; சுரர்நர ரேத்துந் தூயனே வாரும், அன்னமுண்ணுதற்கு என்னப் பனே வாரும்; அன்னம் புசிப்பித்து அதிதியைக்காரும்"; என்று அவ்வம்மணி ஏத்திடும் பொழுதில், நன்றருள் ஜெய தேவ் நாயகிதனைப்பார்த்து இதமாக்கூவு மெழிலே! பொழிலே! பத்மாவதியே! பரிபூர்ணமதியே! அன்னமே! ஏன் இன்னம் அதிதிக்கிடவில்லை. இன்னமேனுன்றனிருள்மனங் கெடவில்லை என விசைத்து அவிபடை பாயெனவோதி அன்னமுணத் தாமதமாச்சுதென்று ஓதித் துரிதமாய் அதிதியின் தூயடி பணிந்து பிரியமாய் நோக்கிப் பிரானேயென்று படைத்த வமு தினைப் பண்புட னூட்டி அடைக்காயிலையும் அன்புடன் கொடுத் துச் சந்தனம்பூசிச் சந்தோஷம் பேசி எந்தையே! என்ற னிறை வனே! என்று பந்தமில்லாத பரமனே! என்று அந்தராமுகத்தி லமர்ந்தோயென்று வேதமாவாக்கிய விவரங்களெல்லாஞ் சோதி யைக்காணுஞ் சூசனையெல்லாம் மனதைக் கொல்லு மார்க்கங்க ளெல்லாம் மனங்குவிந்தொடுங்கும் மார்க்கங்களெல்லாம் சுவாச மடங்கும் சூக்ஷமமுஞ் சலன சுவாசமடங்குந் துவாதசவெளியும் வந்தவர் மயங்க மாய்ந்திட்ட வுரைத்துச் சிந்தைகள் மறந்து தருக்குவாயிருந்து பரமானந்தம் பண்புடன் புசித்துப் பரமசமா தியில் பசுமரத்தாணிபோல் இன்பமாயிருந்து ஏகமாய் நிறைந்து துன்பமகன்ற துரியமே தானுய்த் தன்னைமறந்து தலைவனிற் கலந்து பின்னமில்லாத பிரமமே தானுய் நினைவுங் கனவும் நாஸ்தியாய்ப்போக நனவிற் சுழுத்தியை நன்ருயடைந்து ஞானந்ததும்ப நயனநீர் பெருக ஆனந்தத் தூக்கந் தன்னி லமர்ந்து நிவாத தீபத்தைப்போலவும் நிஸ்தரங்க சமுத்திரம் போலவும் பிர்மநிஷ்டையில் இருந்தார்.

பத்மாவதி பதியின் பாதங்களை மனதிற்பதித்து அதிதியின் அடிகளை யன்புடன் துதித்துப் போய்வாருமென்று அப்புனி தரை யனுப்பித் தாய்தந்தைகளைத் தான் நினையாமல் பதியே

அருளாம், பதியே பொருளாம், பதியே துணையாம், பதியே புண்யாம், பதியே குருவாம், பதியே தேவாம், பதியே அன்பாம், பதியே யின்பமாம் என்று உறுதிகொண்டு கொழுநன் பணிவிடையே தனக்கு உரிய நியமமாகக் காலங்கழிக்கத்தொடங்கினுள். இவ்விதமாய் இருவரு மிருக்குங்காலத்தில் அவ்வூரிலுள்ளோர் ஜெயதேவசுவாமிகள் செய்யுங் கீர்த்தனைகளையும் அஷ்டகங்களையும் சேர்த்து, ஓர் புத்தகமாக்கி அதை அத்தியந்த பக்தியுடன் பாராயணஞ் செய்துக்கொண்டிருந்து ஜெகநாதத்தில் திருவிழா வாகும்போது பில்வகாமில் இருக்குஞ் சிலர்போய் ஸ்ரீஜெகநாதருடைய திருச்சன்னிதானத்தில் அப்புஸ்தகத்தை வைத்து நவரசாலங்காரமான சுலோகங்கள் அஷ்டகங்கள் கீர்த்தனங்கள் பாடித் தோத்திரஞ் செய்யும்போது ஸ்ரீஜெகநாதருடைய கோயிலினுள் அங்கீகரித்தேன் அங்கீகரித்தேன் ஆனந்தமடைந்தேன் ஆனந்தமடைந்தேன் என்கிற சப்தம் ஓர் முகூர்த்தபரியந்தம் உண்டாகியது. அதுகேட்ட திருநாளுக்கு வந்திருந்த சகலருஞ் சந்தோஷவாரியில் அமிழ்ந்தவர்களாய் ஜெயதேவசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய வாக்கியங்களை வேதமென்று நம்பிச் சகலருந் துதித்து ஆனந்தமேலீட்டால் தண்ணீரைப் பெருக்கித் தன்னை மறந்து நிர்த்தனஞ்செய்யத் தொடங்கினுர்கள். அதையறிந்த அவ்வூரிறைவன் உற்சவம் நடக்கும்போதெல்லாம் நூதனகீர்த்தனைகளும் அஷ்டகங்களும் செய்து அரங்கேற்றுவோனுதலால் நான் செய்ததை யாவரும் தோத்திரஞ் செய்யும்படியாகப் பலதரங் கொடுத்தும் அங்கீகரியா அந்தணர்களை நோக்கி முனிவுகொண்டு; 'இதுவுஞ் ஜெகநாதருடைய தோத்திரமன்றி வேருே? இதை ஏன் தோத்திரஞ் செய்யாமல் மறுக்கின்றீர்கள்? ஜெயதேவ் செய்ததை மாத்திரம் ஏன் துதிக்கின்றீர்கள்?' என வற்புறுத்திக் கேட்டான்.

அதற்கு விப்பிரர் "நீர்செய்த வாக்கியங்கள் அடங்கிய புத்தகத்தைப் பகவான் அங்கீகரித்தால் நாங்களும் அங்கீகரிக்கின்ருேம்" என்று இரண்டு புத்தகங்களையும் ஜெகந்நாதருடைய திருப்பாதத் தண்டையில் வைத்து அரணம்மூடி இராஜ முத்திரைபோட்டுச் சில அந்தணர்களையும் காவலரையும் - காவல் வைத்துத் தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேர்ந்து மறுநாட்காலையில் அனைவரும் ஒன்ருய்ச் சேர்ந்துவந்து பார்க்கையில் வெளியிலெறிந்திருக்கும் இராஜன் பாடிய புத்தகத்தை நோக்கிக் கவாடந் திறந்து ஜெயதேவ சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

புத்தகத்தின்மேல் அங்கீகரித்தேனென்று எழுதியிருப்பதைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து ஆனந்தமடைந்து வேதமென்று நம்பி நாற்றிசையோரும் பாராயணஞ் செய்யத் தொடங்கினார்கள்.

அப்போது அவ்விறைவன் வாட்டமனதுடன் வீட்டையடைந்து, அன்னாகாரமின்றிப் பகலெல்லாங்கழித்துத் தன்னை மிகவும் பழித்து இரவாகியும் ஆயாசத்தால் விழித்துக் கொண்டே, "ஓ பகவானே! இரணியாக்ஷதனுவடைய தூஷண வார்த்தைகளையெல்லாம் பூஷணமாகக்கொண்ட புருஷோத்தமா! புண்டரீகாக்ஷா! அன்புடன் செய்த உன் தோத்திரங்களடங்கிய புத்தகத்தைக் காத்திரத்துடன் வெளியில் எறிந்து விடலாமா? என்னைச் சுடாமற் சுடலாமா? ஓ தீனபந்துவே! உன்னுடைய திவ்விய திருநாமங்களும், திருவிளையாடல்களும் நிறைந்திருக்கும் நூல் உமக்குக் கசப்பான காரணம் ஏதோ? யான் செய்த தீதோ? உமக்குள்ள சூதோ? செய்யும் வாதோ? ஓ என் ஆண்டவனே! கற்கண்டு ஓர்பக்கங் கைப்பும் ஓர்புறம் தித்திப்புமா யிருக்குமோ? ஓ அனாதரட்சகா! தந்தையின் மடியை ஆசித்துக் கிடைக்காத துருவன் உனக்குச் செய்த உபகாரமென்ன? நான் செய்த அபகாரமென்ன? ஓ பக்தவச்சலா! பரமேஸ்வரா! ஜெயதேவ் உமக்குச் செய்த உபசாரமென்ன? நான் செய்த அபசாரமென்ன? சொல்லலாகாதோ? ஜெகத்துக்கெல்லாம் நாதரென்னும் பேர்பெற்ற உமக்குப் பாரபக்ஷ மிருக்கலாமோ? கோபிகாஸ்திரீகளின் மத்தால் அடிபட்டு ஆனந்தமடைந்த நீர் என் துதியென்னும் வாக்கம்புகளுக் கிடைந்தீரோ? சர்வம் ஒன்றேயென்று திருவாய்மலர்ந்து இவ்விடத்திருந்த வாக்கைக் கடந்தீரோ? உமக்குச் சுபாவமான பேதகத்தை விடவில்லையோ? துவிதபாவங் கெடவில்லையோ? அலரவனை ஆழியால் மறித்துச் சயந்தனைக் கொன்றீரே? அபத்தம்பேசித் துரோணரை வென்றீரே? அது யின்னம் நீங்கவில்லையோ? மெய்ஞ்ஞானம் ஓங்கவில்லையோ? ஓ அரிபாந்தாமா! ஸ்ரீரகுராமா! வேணுகோபாலா! அருமறைகள்மூலா! வாசுதேவா! தேவதேவா! சேஷசயனா! கமலநயனா! வசுதேவபுத்ரா! பாண்டவர் மித்ரா!" என்று அனந்தம் விதங்களாக நிந்தாஸ்துதி செய்து நித்திரைசெய்தான். பகவான் அவ்விறைவன் சொற்பனத்தடைந்து, "ஓ அரசனே! நீ ஜெயதேவ் செய்த வாக்கியங்களை யோக்கியத்துடன் துதிப்பாயாயின் நீ செய்த வாக்கியங்

களில் பதின்மூன்று சுலோகங்களை யங்கீகரிப்பேன்" என்று அறைந்து மறைந்து போனர்.

உடனே அவ்வேந்தன் விழித்துக்கொண்டு ஜெயதேவ் பகவானென்றே தீர்மானித்துத் தோத்திரஞ் செய்துக்கொண்டிருந்து, அதிகாலையில் ஜெகநாதருடைய திருச்சந்நிதானத்தையடைந்து, அந்தணர்களுடன் கூடிக்கொண்டு அத்தியந்த பக்தியுடன் ஜெயதேவ் திருவாய்மலர்ந்தருளிய பாடல்களைத் தோத்திரஞ் செய்யும்போது, கபடநாடக சூஸ்திராவதாரியாகிய ஸ்ரீ ஜெகநாதர் அசரீரியாய் "ஓ ராஜனே! நீ செய்த பலபாடல்களில் ஆதியிலிருக்கும் பதின்மூன்று பாடல்களை அங்கீகரித்தேன்" என்று திருவாய்மலர்ந்தருள அவ்வாக்கியத்தைக்கேட்ட சகலரும் அந்நரபதியா லியற்றிய பதின்மூன்றுபாடல்களை ஜெயதேவ் செய்த புத்தகத்திற்சேர்த்து பாராயணஞ் செய்யத் தொடங்கினர்கள். இவ்வளவு மகிமை பொருந்திட ஜெயதேவ் எவ்விடத்தில் தங்கியிருக்கின்றரோ? அவ்விடத்திலே அஷ்டயிசுவரியமும், ஆவினம்பலவும், சிஷ்டர்கள் கூட்டமும், தெளிவுளோர் கோஷ்டமும், குறைவின்றி நிறைந்திருக்கையில் இவ்வற்புதங்களைப் பலரும் புகழத் தொடங்கினர்கள்.

பத்மாவதியின் தந்தையானவர் இவர்களிருவருக்கும் விந்தையைக் கேட்டு சிந்தைநைந்துருகிவந்து இவரிருக்கும் மகிமையை நோக்கித் துன்பத்தை நீக்கி உடலம் பொங்கி உள்ளங் கலங்கி இவர்களைக் காண என்ன தவஞ்செய்தேன்! இவர் மருமகனு! இவள் மகள்தானு! இவரே பகவான்; இவரே மகவான்; இவரே கனவான்; இவரே தனவான்; இவரைப் பார்த்தால் புத்தி பத்தியும் வரும்; இவரைப் பார்த்தால் சித்தி மூத்தியும் வரும்; இவள் சிதேவி, இவள் பூதேவி, இவளே கமலை, இவளே விமலை, இவள் இந்திராணி, இவள் இராணியென்று பலபல விதங்களாகத் தோத்திரஞ்செய்து தனக்கிருந்த காத்திரங்கொய்து பத்மாவதியின் அருகிற்சென்று, மகளேயென்று கூப்பிட்ட தந்தையின் அடிகளில் பத்மாவதி சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுப் பாதங்களுக்கு முத்தமிட்டு எந்தையே! என்னைப்பெற்ற தந்தையே! வெகுநாள் பொறுத்து வந்தையே! என்மீதிருந்த அன்பைத் துறந்தையே! என்னைச் சுத்தமாய் மறந்தையே! என்கிற பட்சமான வார்த்தைகளைப் புகன்று பயபக்தியுடன் எதிரில் நின்று பல வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கையில், ஜெயதேவ சுவாமிகள் நிஷ்டையிலிருந்து தெளிந்து, மாமனுரைப்

பார்த்துக் கரங்களைச்சேர்த்து, அடிகளிற் சந்தனம் பூசி, க்ஷேம வார்த்தைகள்பேசி, "உத்தமா! உன்றன் புத்திரியாலே சாதுக்கள் சேவை சாந்தமாகச் செய்தேன்; இத்தரைக்குள் நான் இன்பத்தைப் பெற்றேன்; அத்தனே! உந்தனுசியாலென்று அன்பான வார்த்தைகளுரைத்து, மாமனுர் மனதைக்கரைத்து, ஒரு நொடி யதனில் உளந்தனைத் திருப்பி, உத்க்ருஷ்டமான சிற்சொரூப சமாதியில் எழுந்தருளியிருந்தார்.

அப்போது பத்மாவதியின் தந்தையானவர் விந்தையீதென்று மிகவதிசயித்து, வந்தனஞ்செய்து, மனமிகமகிழ்ந்து, பலபல விதங்களாய்ப் புகழ்ந்து, கொண்டுவந்த ஆடையாபரணங்களை யளித்துப் பத்மாவதியை நோக்கி வியாகூலத்தைப் போக்கிப் போய்வருகிறேனென்று புத்திமதிகளைச் சொல்லித் தன்னிருப்பிடம் போகையில் பத்மாவதி கூடவே தொடர்ந்து போய்த் தந்தையை வழிவிட்டு வருவதற்குள் ஜெயதேவஸ்வாமிகள் நிஷ்டைகலைந்து வெளிப்பட்டு நடந்து வெகுதூரஞ்சென்று அவ்விடம் மனித சஞ்சாரமில்லாமலும், மிருகங்களும் பறவைகளும் சஞ்சரிப்பதாயும் ஆரணியமாயும் ஆகாயத்தை யளாவிய பர்வதக்குகைக்குள் புகுந்து உன்னதமான ஓரிடத்தில் உட்கார்ந்து பதுமாசனமிட்டுக் கண்ணைமூடி பசுமரத்தாணிபோல் பகவான் பாதத்தில் மனதைப் பதித்து இன்பமாயிருந்து ஏகமாய் நிறைந்து துன்பமகன்ற துரியமேதானுய்த் தன்னைமறந்து தலைவனிற் கலந்து பின்னமில்லாத பிரமமேதானுய் நினைவுங் கனவும் நாஸ்தியாய்ப்போக நனவிற் சுழுத்தியை நன்ருயடைந்து ஞானந் ததும்ப நயனனீர்பெருக, ஆனந்தத் தூக்கந் தன்னிலமர்ந்து நிவாதீபத்தைப் போலவும், நிஸ்தாங்க சமுத்திரம் போலவும், அசைவின்றி பிர்மநிஷ்டையி லிருந்தார். இங்கே பத்மாவதி திரும்பி இருப்பிடம்வந்து மணாளனை நாடிக் காணுமல் வாடிச் சுற்றுப்பக்கங்களி லோடி அதிக பரபரப்போடுந் தேடிப் புதருகளில் நுழைந்து களையால் கீழ்விழுந்து, ஐயோ! பொழுதுபோச்சுதே; எனக்கே துன்பம்வாச்சுதே; இருபுறமும் அக்கினி மூண்டெரியும் மூங்கிற் குழாய்க்குள் அலையும் எறும்பைப்போல பலதரம் நாட்டுக்குங் காட்டுக்கும் அலைந்து செடிகளில் மயிர் சிக்கவும், தேன் புயங்கடிக்கவும், முட்களால் திரேகத்திலுங் கால்களிலும் உதிரம் பெருகவும், கற்களால் கண்ணீர் பெருகவும், உடல்வேர்த்துருகவும், உள்ளங்கலங்கி யுருகவும், கர்டியும் புலியுமிரட்டவும், கரியுமெருமையு மதட்டவும், நடுங்கி

ஒடுங்கி குருதியாலும் கண்ணீராலும் நனைந்து கொழுநனை அடிக்கடி நினைந்து, "ஓ என் பிராணநாயகா! பிராண சிநேகா! சர்வசங்கபரித்தியாகா! சதானந்தபோகா! நீர் இப்படி மோசஞ் செய்வீரென்று அறியாமற்போனேனே! ஆருத்துயருக் காளா னேனே! யாருமற்ற அனுதியைப்போலானேனே! என் தந் தையைவிட்டு வருவதற்குள் எப்படிப்போனீரோ! எங்குசென்று எப்படி ஆனீரோ! காமக்கடலைக் கடந்தவா! காசினித் தலங்க ளுக்கு நடந்தவா! மோக்ஷவீட்டில் நுழைந்தவா! மோனுனந்தத் திற் றழைத்தவா! மிருகங்களின் கர்ச்சனையால் மனம்நடுங்குகின் றதே; உம்மைக்காணுக்குறையால் பிராணன் ஒடுங்குகிறதே; காரி ருளால் வழியுந் தெரியவில்லையே, ஏனோ தந்தாய் இவ்வளவு தொல்லையே; இன்னம் உனதுமனம் இரங்கவில்லையே; எனக்குள் அருமை தரிசனந்தாவில்லையே; மாதர் அச்சத்தால் மரணமடை வாரே; மணாளன்மேலிச்சையால் மிகவும் இடைவாரே; என்னை நீர் இப்படி சோதிக்கலாமோ இருளில் மறைவுற்றுப் பேதிக்க லாமோ; ஓ புருஷோத்தமா! புண்ணிய புருடா! பூத தயாளா! புண்டரீகத்தாளா! ஓ என்தெய்வமே என்னுயிரே! தனித்து இவ் விருளில் உம்மைத் தேடித்தேடித் திரிகிறேனே; பதறிக்கதறி வெகுநேரமாய்ப் புலம்புகிறேனே; ஏனென்று பேசலாகாதா; இன்னம் ஓர்கணத்தில் என் உயிர்போகாதா; இன்னமும் நீ நினைத்திருப்பதற் கிச்சையா! எளியாளுடன் பேசவும் லச்சையா" என்கிற பலவார்த்தைகள் பேசிக்கொண்டே இரவெல்லாந்தேடி, சூரியோதயமானதே, மலைக்குகைகளிலும், புதருகளிலும், பர்ண சாலைகளிலும், அடர்ந்த சோலைகளிலும் பார்த்து அங்கம் வேர்த்து, "ஓ மயில்களே! குயில்களே! என் மணாளனைக் கண்டீர் களா? ஓ நரிகளே! என் காவலனைப் பார்த்தீர்களா? ஓ புலிகளே! புனுகு பூனைகளே! என் கணவன் இங்கு வந்தாரா? ஓ காகங் களே! யூகங்களே! என் ஆர்வலர் உங்களுக்கும் தரிசனந் தந் தாரா?" என்று மிருகங்களையும் பட்சிகளையும் கேட்டுக்கொண்டே வாயில்வந்த மொழிகளையெல்லாம் விண்டுக்கொண்டே பெருத்த மலையின் குகையுள் புகுந்து அங்கு பதுமாசனமிட்டுக் கண்ணை மூடி பிரமநிஷ்டையி லிருக்குந் தன் கணவனைக்கண்டு; அவர் திருவடிகளில் வணங்கி மூக்காலும் வலம்வந்து இணங்கியிருக்க ஜெயதேவ் பிரம்மநிஷ்டை கலைந்து கண்ணைத்திறந்து மனைவி யைப்பார்த்து, இம்மாது இருக்குங் கோலத்தால் சிரமத்தை யுணர்ந்து தன் மனைவியுடன் காட்டைவிட்டு நாட்டையடைந்து

தங்கள் இருப்பிடஞ் சேர்ந்து சில வருடங்கள் கழித்துக் கொண்டிருந்தார்.

இவர் இப்படியிருக்க, பத்மாவதியின் தந்தை முன்போல வந்து மகளையும் மருமகனையுங் கண்டு, ஆனந்தங்கொண்டு, அவர்களால் பல உபசாரங்களையேற்று விடைபெற்றுக்கொண்டு பத்மாவதியும் முன்போலத் தந்தையை வழிவிடப்போனபோது நடந்த ஆச்சரியத்தையும் பிராப்தத்தின் சமர்த்தையும் ஜெய தேவுக்குண்டான விபத்தையும் அதனால் பத்மாவதி யடைந்த துன்பத்தையும் சொல்லப் பெருந் துக்கமா யிருக்குமென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

விரக்தி அத்தியாயம் முற்றிற்று.

---

மூன்றாவது

## ஜெயதேவர் கைகால்கள் வெட்டுண்ட அத்தியாயம்



கேளும் சித்தர்களே! பரிசுத்தர்களே! இப்பால் ஜெயதேவ சுவாமிகள் சற்றுநேரம் நிஷ்டையிலிருந்து பிறகுதெளிந்து வீதியின் வழியாகப்போகையில் அயலூரிலிருந்துவந்த மிகவும் ஞானத்திற் றெளிந்த பகவத்தாஸ் என்னும் வர்த்தக கனவானு கிய தனவான் ஜெயதேவரைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து இன்று இம்மகாத்மாவைத் தரிசிக்கும்படியான காரணம் நான் செய்த தவமோ! எங்கள் மூதாதைகள் செய்த மாதவமோ! என்று அவரை வாரியெடுத்துத் தன் ரதத்தின்மேலிருத்திக் கொண்டு பில்வகாமிலிருந்து புறப்பட்டுக் காட்டைக் கடந்து தன் ஊரை யடைந்து வீட்டினுட் கொண்டுபோய்த் தானுந் தன் மனைவியும் பூசித்து, மிகவும் விசுவாசித்துப் பத்மாவதி தேடுவாளென்று யோசித்து குரு ஸங்கீர்த்தனங்களைக் கோஷி த்து அந்த ரதத்தின்மேல் சுவாமிகளை எழுந்தருளச்செய்து பத்மாவதிக்காக பல ஆடையாபரணங்களும் ஆயிரம் வராகன் களுங் கொண்டுபோய்க் கொடுவென்று சாரதியை எச்சரித்து சீக்கிரம் சுவாமிகளை விட்டுவாருமென்று அனுப்பினன்.

ஜெயதேவர் வர்த்தகனை நோக்கி, இவ்வுயிர்க்கொல்லியும் ஆடையாபரணங்களும் ஏன் கொடுத்தனுப்புகிறீர்கள்? வேண் டாம்; வேண்டாம்'' என்று மறுக்க, அவ்வியாபாரி என் தாயாகிய

பத்மாவதிக்கு தக்ஷிணையென்று உரைத்துச் சிரசாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து சாரதியைச் சாக்ரதைசெய்ய, உடனே சூதன் அந்த ரதத்தை அதிசிக்கிரமாய் ஓட்டிக்கொண்டு காட்டின் மத்தியிற்போகையில், அவ்விரதத்தின் சத்தத்தைக்கேட்ட கள்வர் ஓடிவந்து தனித்துப்போகும் அச்சகடத்தை நிறுத்தி, வலவனை வருத்தி, ஆபரணாதிகளைப் பறித்து, ஆங்காரத்துடன் கொக்கரித்து வாளால் வெட்டப்போகையில், சாரதி பூமியிற் குதித்து ஓட்டமெடுக்க ஜெயதேவ் விபரீதம் நேரிட்டதென்று அவ் இரதம் விட்டிழிந்து இதையும் ஓட்டிக்கொண்டு போகட்டுமென்று அவரைப் பார்க்காமல் நடந்து போகையில், அவர் மகிமையறியாச் சோரர் வீரத்துடன் தீரம் பேசிக்கொண்டு அவரைப் போகவிடாமல் மடக்கி நெட்டித்தள்ளி யடக்கிக் காட்டில் நடவென்று முடுக்கிப் புலிமுன் பசுவைப்போலொடுக்கி, இழுத்துக்கொண்டு போகையில், ஜெயதேவ் கள்வர்க்கு வந்தனம் புரிந்து என்னிடத்தொன்றுமில்லையே; நான் உங்களுடன் போர்புரியவாவில்லையே; வீணாய் ஏன் என்னை அலங்கோலப்படுத்துகிறீர்கள்? சந்தோஷமாய் இந்த ரதத்தின்மேல் ஊர்ந்துகொண்டு உங்கள் இருப்பிடஞ் சேருங்கள்; ஏழை யென்மேற்கிருபை கூறுங்கள்" என்று பணிவாகப் பொழிந்தார்.

அப்போது அக்கரவடர் அவர் அணிந்துகொண்டிருந்த வஸ்திரங்களைப் பறித்துக்கொண்டு நிர்வாணமாக்கி, "அடா பணவாசை நீங்காப்பிணமே! கூசாமற் பாசாங்கு வார்த்தைகளைப் பேசாதே; திருடர்கள் முரடர்களென்று அறியாயோ; எங்கள் இருப்பிடத்தைக் கண்டுகொள்ள மெதுவாய் நடந்துபோன உன் எண்ணத்தை நாங்கள் அறியோமோ? பலருக்குங் காட்டிக்கொடுத்து எங்களை வாட்டப்படுத்த நீசெய்த சூதைக்குறியோமோ? திருடர்களிடத்து உன் திருட்டுத்தனம் நடக்குமோ? யாரை நம்பினாலும் நம்பலாம்; ஆதிவருணரை நம்பப்போமோ? உன்னை இனி உயிருடன் விடப்போகிறோமோ?" என்று அப்புண்ணியவான் வேண்டாம் வேண்டாமெனப் பலஅன்பான மொழிகளில் மறுக்கவுங் கேட்காமல் இருகரங்களையும் கால்களையும் இரண்டாகத் துண்டித்து அவரை ஓர் பாழுங்கூபத்திற் றள்ளிச் சகடின் மேல் ஏறிக்கொண்டு போய்விட்டார்கள்.

பின்பு பாழுங்கிணற்றில் வீழ்ந்த பக்தசிகாமணி, பரப்பிரமக்ஞானி, பரமசாதுவாகிய வைனதையன், பரப்பிரமமே ஒருருவான துய்யன், என்றும் பொய்சொல்லா மெய்யன், ஏழைகட்கு

அனேக திரவியமீந்த கையன், சத்தியவாக்குள்ள சாந்தன், சாந்தர் அநேகருக்கு உபதேசித்த வேதாந்தன், ஜகத்திலுள்ள வடியார்களெல்லாம் புகழுஞ் சீலன்; ஜன்மப்பிணிக்கு அயர்ந்து வரும் முமூட்சுக்களுக் கனுகூலன்; முனிவென்னுங் காட்டை வெட்டின முத்தன், மோகாதிகளை யெதிர்த்த சுத்தன், பயமென் பதறியா நிஷ்காமி, ஜெயதேவென்னும் சுவாமி, பாழுங்கேணி யில் உருண்டுகொண்டேபோய் தலைகீழாய் விழுந்து துக்கசாகரத்தில் ஆழ்ந்து பிராலப்தம் யாரையும் விடாதெனத் தெளிந்து பிராப்தாதீன மல்லவோ இத்தேகமெனத் துணிந்து பாபங் களையே முக்கியமாகச் செய்யுங் கைகால்களை வெட்டி எறிந்ததற்கு ஆயாசப்படாமல் களித்துப் புரையோரை விளித்து ஓ புண்ணிய புருஷர்களே! எனத் துதித்துத் துரிதமாய் ஓர் கல்லைப்போட்டு என்னைக் கொல்லலாகாதோ? எனக் கதித்து அவ ராவ மில்லாததற்கு ஆயாசமடைந்து மிகவுமிடைந்து கைகால் கள் அறுபட்ட உபத்திரவத்தாலும், முட்களும் கற்களும் தேக மெல்லாம் பொத்துக்கொண்டதாலும், உருண்டு விழும்போது தேகமெல்லாம் உராய்ந்து தேய்ந்து போனதினாலும், ஈக்களும் எறும்புகளும் மொய்த்துக்கொண்டதினாலும், அன்னாகார மில்லா ஆயாசத்தாலும், உறவி முழுதும் முண்மயமா யிருந்ததி னாலும், எழுதற்கும் உட்காருதற்குங் கூடாமையாலும், சகிக்கக் கூடா வேதையாலும் மனோபாதையாலும் கிடந்தபடியே களைத்து மிகவுமிளைத்து மூர்ச்சையடைந்து துன்பமேலீட்டாற் றெளிந்து;

ஓ! ஓ! இனி தேகவியோக மடையுங்காலம் நேரிட்டது; இப்பொழுதே நமது இஷ்ட தெய்வமாகிய ஸ்ரீமந் நாராயணனைத் தியானஞ்செய்து பிரமநிஷ்டையால் தேகத்தை மறந்து விதேக கைவல்யத்தை யடைந்து மோட்சானந்தம் பெறுவோமெனத் துணிந்து பகவானை நினைந்து கண்ணீரால் நனைந்து மொண்டிக்கரங்களைக் கூப்பிக்கொண்டு பாதுகாப்பாயெனவிண்டு அச்சுதா! கேசவா ஆயனே! அபயம், உச்சித நானுவுபாயனே! அபயம், புண்டரீகாக்ஷா பரிபூரணா! அபயம், அண்டரேத்தும் ஆதிகாரணா! அபயம், பரமபுருஷா பத்மநாபனே! அபயம், திருவாழ்வு தருஞான தீபனே! அபயம், சங்குசக்கர தண்டபாணியே! அபயம், பங்கமில் கோதண்டபாணியே! அபயம், மாயனே யுலகுண்டவாயனே! அபயம், தூயனே தூதர்கள் நேயனே! அபயம், அடியார்கள்மேல் அதிக மித்ரா! அபயம்,

படியுளோரேத்தும் பலபத்திரா! அபயம், மச்சாவதார மணி வண்ணனே! அபயம், கச்சாவதாரநற் கண்ணனே! அபயம், ஜெயராம ஸ்ரீராமதேவனே! அபயம், பயனருளு மகானுபா வனே! அபயம், மாதவா வைகுந்தவாசனே! அபயம், யாதவா ராகவா ஈசனே! அபயம், தேவரனுகூல திரிவிக்ரமா! அபயம், யாவரும் போற்றும் பராக்ரமா! அபயம், சுரர் நரர் தொழு தேத்து முராஹரீ! அபயம், அரி அரீ அரி அரீ நாஹரீ! அப யம், பக்தவச்சல வேணுகோபாலா! அபயம், முத்தியருள் முகுந்தபூபாலா! அபயம், சீதாசமேத துளசீதரா! அபயம், தாதா விநோத தாமோதரா! அபயம், மதுசூதனு கிருஷ்ண வாமனு! அபயம், பதிதபாவன லோகபாலனு! அபயம், பஞ்ச பாண்டவர்தூத பரமனே! அபயம், கெஞ்சுவோர்க்கருணீத கிர மனே! அபயம், ரங்கநாதா நாரசிங்கனே! அபயம், துங்கபாதா தொனிசங்கனே! அபயம், கரிவரத கோவிந்த கர்த்தனே! அபய்ம், சிரமைதீர்த் தாள்வை பிரசித்தனே! அபயம், பாண்டு ரங்காவிஷ்ணுபகவனே! அபயம், ஈண்டென்னையாளுவாயிறை வனே! அபயம், துரோபதைதனைக்காத்த தோன்றலே! அபயம், விரோதமென் மீதிலேன் விமலனே! அபயம், அருமறைகள் புகழாதி மூலனே! அபயம், திருவருளை யீந்திடுஞ் சீலனே! அப யம், வேங்கடேசுவர வேணுநாதனே! அபயம், சங்கடந்தீர்க் குஞ் சகநாதனே! அபயம், சுயஞானவடிவான சோதியே! அப யம், நியமமெல்லாந்தரும் நீதியே! அபயம், ஜகபதி வேங்கடா சலபதி! அபயம், ரகுபதி கஜபதீ பசுபதீ! அபயம், பரமேசு வரா பரந்தாமனே! அபயம், பரமசுகமுள பரசுராமனே! அப யம், சகலபூஷணசேஷசயனனே! அபயம், சர்வலோகசரண்ய சாமியே! அபயம், சர்வபாபவிநாசநேமியே! அபயம், கம்ஸ சம்ஹார காம்பீரனே! அபயம், அம்ஸஸ்வரூபாவ தாரனே! அபயம், மாசுள்ள சிசுபாலமர்த்தனு! அபயம், தேசுள்ள காளி ங்கநிர்த்தனு! அபயம், மதமுள்ள ராவணனை மாய்த்தவா! அப யம், சதிசெய்சிசுபாலனைச் சாய்த்தவா! அபயம், கருடவாஹனு கருடத்துவஜனே! அபயம், இருடிகள் ஏத்துஞ் சதுர்ப்புஜனே! அபயம், நாராயணு(நந்தநந்தனே! அபயம், பாராயணு பக்தர் சொந்தனே! அபயம், பீதாம்பரா அன்பர் பிரியனே! அபயம், மாதா பிதா குரு தெய்வமே! அபயம், எழில் பிரஹலாதன்மேல் இஷ்டனே! அபயம், தொல்வினைகள் துகளறு பிரமநிஷ்டனே! அபயம், சனகாதியர் தொழுங் காத்ரனே! அபயம், கனவிபீ

ஷணவனுமகோத்ரனே! அபயம், களபமொழுகிய புளகமார்பனே! அபயம், அளகமுள நளினியுறு மார்பனே! அபயம், முனிவரனுதினமேத்து முதல்வனே! அபயம், புனிததசரதராஜன் புதல்வனே! அபயம், இரணிபாக்கனை வென்ற எந்தையே! அபயம், தருணமெனையா ளென்றன் தந்தையே! அபயம் அபயம், அபயமென்று இவ்விதமாக ஓலமிட்டு ஓவென்றிறைந்து கூவும் முறையானது பரமபதத்தில் ஆதித்தர் அனேகர் ஒளிமழுங்கும் கிரணங்கள் வீசும் சிங்காரமண்டபத்தில் நவரத்தினங்கள் பதித்த சிம்மாசனத்தில் கருடர் காந்தருவர் கின்னரர் கிம்புருடர் விஞ்சையர் தேவர் முனிவர்கள் சூழ வீற்றிருக்கும் ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகிய ஸ்ரீமந்நாராயணருடைய திருச்செவியிற் புகுந்த மாத்திரத்தில் பச்சைமேனியெல்லாம் புழுங்கி வேர்வைகள் சிந்தி மிகவும் பதறி ஆவெனக் கதறிக் கண்ணீரைப்பெருக்கிச் சூழ்ந்திருப்போரையு முருக்கிக் கைகளை யடிக்கடி பிசைந்து, இவ்வளவு அவஸ்தையும் நேரிட்டதா? என்று இசைத்துக் கருடனையும் நினைக்காமல் தாரகனையும் விளிக்காமல் இலக்குமியுடனும் பேசாமல் நாரதாதி முனீசுவரர்களையும் பார்க்காமல் தன்னை மறந்து திடுக்கென்றெழுந்து ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் மறைந்து,

ஆ என்பக்தனே! ஜீவன் முக்தனே! ஆ சஞ்சீவியே! அருள் சிரஞ்சீவியே! ஆ பரமபாகவதனே! பரப்பிரமக்ஞானியே! ஆ என்பாலனே! அன்பர்க்கனுகூலனே! நாராயணனே! பரப்பிரம்மமெனச் சத்தியஞ்செய்தவனே! நானென்னும் ஆங்காரத்தைக் கொய்தவனே! என்னை மேன்மையென்று உரைத்தவர்க்கும் இகழுண்டா? என்னை யிகழ்ந்தவர்க்குப் புகழுண்டா? உனக்கும் இப்போக்கொத்த துன்பம் வந்ததா? மனமும் நொந்ததா? இதோ வந்தேன், வந்தேன்; சுகந்தந்தேன் தந்தேன்; என்று உரைத்துக்கொண்டே துளசிமாலைகள் கழன்று விழவும், பீதாம்பரத் தொங்கலானது பூமியிற் புரளவும், சுதரிசனம் பின் தொடர்ந்தோடி வரவும், ஆகாயவாசிகள் பூமாரி பொழியவும், ருத்ரபிரமாதி ரிஷிகள் தோத்திரஞ் செய்யவும், அஷ்டகெஜங்களுந் தும்பிக்கைகளை ஆகாயத்திலெடுத்து ஆரவாரிக்கவும், பூதேவி மனமகிழவும், இலக்குமி ஆச்சரியத்தால் தன்னை மறந்திருக்கவும், ஆதிசேஷன் அதிசயிக்கவும், வாயுவேகத்திலும் அதிவேகமாய் நடந்து ஜகநாதத்தைக்கடந்து,

ஜெயதேவஸ்வாமிகள் வீழ்ந்திருக்குங் கூபத்தினிட மடைந்து சுகசொரூபத்துடன் அவர் இருதயகமலத்தினுள் ஆனந்த மெல்லாந் திரண்டு ஓர் உருவமாய் எழுந்தருளி ஞானக்கண்ணுக்குப் புலப்பட்டுத் துன்பமென்பது இனி எக்காலத்திலும் திரணமளவும் தங்காமல் நீங்கும்படியான ஆசீர்வாதஞ்செய்து என்னப்பனே! என்னுடைய ரூபம்-சொரூபம்-நிரூபம் என்னும் மூன்றையும் இக்கணமே தரிசிப்பாயென்று அசரீரியாய்த் திருவாய்மலர்ந்தருளியதைச் சிரவணஞ் செய்யா முன்னமே, ஜெயதேவர் ஞானக்கண்ணுய் தனது உள்ளத்தில் கிருஷ்ணபரமாத்ப ஸ்வரூபமாய் விளங்கும் பகவானைக் கண்டு, ஆனந்தங் கொண்டு, துன்பமிறந்து, இன்ப நிறைந்து, ஆ! என்னுண்டவன் வளிக்கும் வெளிக்கும் கண்ணொளிக்கும் சமீபமாய்ப் பூரணச்சந்திரனைச் சூழ்ந்திருக்கும் அதிசீதள கிரணங்களைப்போல என்னை யானந்தமாகச் சூழ்ந்து என்னுற் புகல்வதற்கு அகண்டிதமான பாவசமளித்தது எனக்குள்ளாகவே யிருப்பதை யோராமல் ஆராய்ந்துபாராமல் தான் தானுகவே யிருக்கத்தானென்பதெது? என்று அவ்பவங்களைத் தானெனப் பிரமித்துக் கேட்கும் அறிவீனனைப்போலே அநித்ய சடதுக்க நிர்மல வுன்மத்தமான ஆக்கையினிடருக்கு ஆயாசப்பட்டுத் திடஞானத்தைக் கைவிட்டு ஓலமிட்டழுதேனே! ஆ! ஆ! பகவான் என்னுளத்தமர்ந்து பத்தர்கள் போற்றும் ரூபத்தையும் பரமயோகிகள் காணுஞ் சொரூபத்தையும் பரப்பிரமஞ்ஞானிக ளைக்கியமாயிருக்கும் நிரூபத்தையுங் காணுமல் விஷயானந்தங்களை யிச்சிக்கும் சுரோத்ராதி இந்திரியங்களென்னும் பஞ்சதந்திரிகளும், மனமாதி சதுர்மந்திரிகளும், இச்சையென்னும் பல கொஞ்சிப்பேசும் வஞ்சியர்களும், காமக்குரோதாதி வீரர்களும், சப்தாதி சூரர்களும், வாக்காதி ஏவலரும், பிரணுதி காவலரும், வாசனுதி சேனுதிபதிகளும் புகழும் சீவராஜனென்னும் அகங்காரி அரசுசெலுத்தி இதமாயிருக்கும் அரணுகிய இவ்வங்கத்தின் சுகத்தைக் கோரினேனே; எல்லையற்ற பேரின்பத்தை வாஞ்சிக்காமல் சிற்றின்பத்தை யிச்சித்து எப்போழ்தும் இடரையே நுகரும் மானைப்போலத் துன்பத்தை ஓர் அணுவாக்கும் எனக்குள் இருக்கும் இவ்வின்பத்துக்குள் ஐக்யமாயிராமல் மறதிக்குட்பட்டேனே! ஆ கெட்டேனே! மதியிலாமல் தன்பதியை யிழந்தெனுந் துயர்வாயில் அமிழ்ந்த தோகையைப்போல இந்தப் பாரத்பரனை நம்பாமல் நரககூடமான இத்தனுவை வாய்மையென்று உறுதிகொண்டு அறுதிக்

குள்ளாக விருந்தேனே, அடக்கம் ஒடுக்கமுள்ள அருந்துணை வியை யிகழ்ந்து நடையு நொடியுமுள்ள நாயகியைப் புகழும் நானைப்போல இந்தப் பாரத்பரனைப் புகழாமல் புகழ்ந்து மகிழாமல் தூலத்தைத் துதிக்க எண்ணினேனே; துயர் நண்ணினேனே யென்கிற பற்பல வாக்கியங்களை மொழிந்து, பகவானைக் கண்ட பரவசத்தால் ஆனந்த பாஷ்பங்கள் வழிந்து, தனது உளக் கண்ணின் மையத்தில் வீற்றிருக்கும் அழகெல்லாந் திரண்டு ஒருருவாய களிப்பெலாங் கூடிய மேனியாய்ப் புண்ணியவதியான தேவகியின் கர்ப்பத்திருந்து உற்பவித்தபோது தூலமாய் நந்தன் இல்லாளாகிய அசோதையி னட்சிகளுக்குப் பட்சமுள்ள சூட்சுமபாலனுகப் புலப்பட்ட ஸ்ரீமந் நாராயணனைப் பரப்பிரம்ம பாராயணனைப் பார்த்தபடியே நிலையில் நின்று இவரல்லவோ சுமந்தவர் கோவர்த்தனக் குன்று; எனப்புகன்று, எவ்விதமாய்ப் புகழலாமென்று உச்சிதொடங்கி உள்ளங்கால் பரியந்தம் ஊடுருவப் பார்த்து மனமொன்றுகச் சேர்த்து, ஓ! கோடி சூரியப் பிரகாசங்கள் மழுங்க, விகசித்தகிரீடனே! நவாத்னங்களாற் றுலங்குங் குண்டலனே! விசாலமான நிடலனே! திவ்பபுண்டரந் தரித்தவனே! சலஜலோசனனே! பத்மதளாகார முகவசீகரனே! சுயவொளியான வாகுவலயனே! புஜபலபராக்கிரமனே! பீதாம்பரதரனே! சுலட்சணங்கள் வாய்ந்த ஸலட்சணமான இலட்சுமி வீற்றிருக்கும் வட்சஸ்தலனே! வனசந்தி வனமாலிகாபரணனே! திவ்ய பரிமள வலங்கிருத பூஷணனே! ராதா மனோகரனே! ருக்மணி மணாளனே! கோபியர் கணாளனே! அண்டபிண்ட பிர்மாண்டங்களை உண்டுபண்ணும் வீதிவீற்றிருக்கும் பத்மநாபனே! ஈரேழுலகு மோர ணுவாகக் கர்ப்பத்தில் வைத்திருக்கும் பிரதாபனே! சாம்பசிவனுர் சடாபாரத்தில் வீற்றிருக்குங் கங்காபவானி யுற்பத்தியான பாதனே! மெய்ஞ்ஞான போதனே! வேணுநாதனே! லீலாவினோதனே! அவதூதனே! அதீதனே! அவிரோதனே! நிச்சேதனே! நிற்பேதனே! நிஷ்குரோதனே! என்று தோத்திரம் புரிந்து மிகவும் பரிந்து சந்தேகங்களை நீக்கித் தேகஸ்மரணையைப் போக்கி இந்திரியங்களை யடக்கிப் பகிர்முகமாகாமல் மாயாமனதை மடக்கிச் சுவாசத்தை யொடுக்கிப் பிரமரந்திரத்தில் முடுக்கிச் சங்குகளின் முழக்கமும், மேகங்களின் முழக்கமும், வீணையினோசையும், தம்பூரினோசையும், மத்தளத்தொனியும், மகதயாழ்தொனியும், தாளங்களின் சப்தமும், சாமண்டல சப்தமும், பெண்டுகள் கீதமும் வண்டுகள்

நாதமும், குயில்களினொலியும், மயில்களினொலியும், சமுத்திர கோஷ்டமும், சங்கின்கோஷ்டமும், கேட்டுத் துவாதசாந்த வெளியில் ஆயிரத்தெட்டிதழ்ப் பங்கயமேடையில் கங்கா யமுனை கூடுங் கூட்டத்தில் புரியட்டகநாடியின் முனையான சுழிமுனை யில் பலகோடி இரவிகளினொளிபோல விளங்கியிருக்கும் பகவா னுடைய சொரூபமான சோதியைக்கண்டு ஆனந்தங்கொண்டு மனவெண்ணங்களை மாய்த்து மானுபிமானங்களைத் தேய்த்து நானென்னு மிருட்டைக்கடந்து நல்லருளுடன் தொடர்ந்து மாயாசத்தியைப் பார்த்து ஆயாசங்களைத்தீர்த்து அறிவெனும் பொருளிலேக்யமாய் ஆனந்தத்தில் மூழ்கிச் சௌக்கியமாய் நிவாததீபமாய் பிரமசொரூபமாய் விளங்கியிருக்கும் பகவா னுடைய நிரூபமாகிய ஏகபரிபூரணத்தைக் காணுமற்கண்டு ஒன்றுந் தோணவில்லையென விண்டு, பின்னும் பகவானைத் துதிசெய்யத் தொடங்கினர்.

அதெப்படியெனில், "ஓ புண்டரீகாக்ஷா! உனக்கு வந்தனம்; புருஷோத்தமா! உனக்கு வந்தனம்; சகலலோகசொரூபா! உன க்கு வந்தனம்; உக்கிரமாகும்சக்ரமதைத் தரித்தவா! உனக்கு வந் தனம் தவசு வேதங்கள் முதலானவற்றிற்கும் தேவதேவனுகி கோக்களுக்கும் பிர்மநிஷ்டர்களுக்கும் நேசனுகி சகல உலகங்க ளுக்கும் ரட்சகனுகி ஸ்ரீகிருஷ்ணனென்றும், கோவிந்தனென் றுந் திவ்விய நாமங்களோடு கூடியிருக்கும் உமக்கு அனந்தம் வந்தனங்கள், பிரமரூபனுகி உலகங்களைச் சிருஷ்டித்தும் சுய சொரூபத்தினுலே ரட்சித்தும், கல்பாந்தாத்தினில் ருத்ரரூபி யாகி சங்கரித்துக்கொண்டும், திரிமூர்த்தி சொரூபியாகி பிரகா சித்துக்கொண்டு மிருக்கும் உமக்கு வந்தனம்; ஓ அச்சுதனே! தேவ அசுர கந்தர்வ கின்னர சித்த சாத்திய பன்னக யக்ஷ ராக்ஷச பிசாச மநுஷிய பசு பட்சி ஸ்தாவர பிபீலிகாதிகள் பிருதிவு அப்பு தேயு வாயு ஆகாயங்கள் சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்கள் மனம் புத்தி சித்த ஆங்காரங்கள் காலம் அக்ருணங்கள் இதின் பரமார்த்தமாகும். ஆத்துமா இவை யாவும் நீயே. வித்தை அவித்தைகள் சத்தியம் அசத்தியங்கள் பிரவிருத்தி நிவர்த்தி கள் வேதோக்த சகலகருமங்கள் இவையாவும் நீயே. ஓ பக வானே! சகல கருமயோகங்களை அனுபவிக்கு மவனும் கரும சாதனங்களாகும். திரவியங்களும் சகல கருமபலன்களும் நீயே. ஓ மகாப்பிரபூ! என்னிடத்திலும் அன்னியர்க ளிடத்திலும் சேஷபூதங்களாகும், சகல லோகங்களி னிடத்திலும் நீ நிறைந்

திருப்பது உபாதான நிமித்தகாரணமாகும். ஐஸ்வரியங்களும் அனந்த ஞானசக்தியாதி கல்யாணகுணங்களும் நன்ருய்க் காணப்பட்டுக்கொண் டிருக்கின்றது. பரமயோகிகளும் உன்னை வணக்கமாய்த் துதிசெய்கிருர்கள். யாகசீலர்கள் உன்னை யுத்தே சித்து யாகங்கள் செய்கிருர்கள், நீயே பிதுர்ரூபமும் தேவரூப முந்தரித்து அவ்விய சவ்வியங்களைப் புசிக்கின்ருய். ஓ அச்சு தனே! மகதசங்காராதி நுட்பங்களும், பிருதிவியாதி பூதங்களும் அதனிட மிருக்கின்ற நுட்பமாகும். ஆத்தும தத்துவமுமாகி இந்த சூட்சப்பிரபஞ்சம் யாவும் எவ்விடமிருக்கின்றதோ? எவ்வி டத்திலிருந்து உண்டாகின்றதோ? அது சொரூப குணங்களி ஞலே பெருத்ததாகும். நினது மஹாரூபமாகி யிருக்கின்றது. சூக்குமாதி அதிக சூனியமாகி சிந்திக்கக்கூடாதாகியிருக்கும். ரூபம் நினது பரமாத்தும சொரூபமாகி யிருக்கின்றது.

இப்படிப்பட்ட புருஷோத்தமனுகும் உமக்கு வந்தனம். சகலாத்துமகன யாவத்பூதங்களினிடத்திலும் சாந்தாதி குணங்க ளுடன் கூடியிருக்கும் நினது அப்ராக்ருதசத்தியாகும் ஜீவ சொரூபத்திற்கு நமஸ்காரஞ் செய்கிறேன். எது வாக்கும் மனது களுக்கும எட்டாமலிருக்கின்றதோ, எது விசேஷங்களாலும் விசேஷிப்பதற்குக்கூடாததோ, ஞானிகளுடைய ஞானத்திஞலே நிருபிக்கக் கூடாததோ அப்படிப்பட்ட சிலாக்கியமாகும் நினது முக்தாத்தும சொரூபத்திற்கு வந்தனம். எவனுக்குத் தனக்குப் புரம்பாகும் பதார்த்தமில்லையோ, எவன் யாவற்றிற்கும்அன்னிய மாகி யிருக்கின்ருனே, அப்படிப்பட்ட பகவானுகும் வாசுதேவ னுக்கு வந்தனம் தந்தனம், கர்மாதீனமாகும் நாமரூபங்களில்லா மல் கேவல விலக்ஷண சொரூபமாகும் மஹாத்துமனுக்கு வந்த னஞ் செய்கின்றேன், மேலுமவனுக்கு வந்தனஞ் செய்கின்றேன். அவனுக்கு அனந்தம் வந்தனஞ் செய்கின்றேன். சங்கர்ஷணுதி வியூகரூபி யகுவானி வந்தனஞ் செய்கின்றேன். தேவர்களெவன் பராத்பர ரூபத்தைத் தரிசிக்கமாட்டாமல் மச்சகூர்மாதி அவதா ரங்களிஞலே அர்ச்சனை செய்துக்கொண் டிருக்கின்ருர்களோ அப்படிப்பட்ட பரமாத்துமனுக்கு வந்தனம். எவன் ருத்திராதி சகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாகி சுபாசுபங்களைப் பார்த் துக்கொண்டிருப்பனே அப்படிப்பட்ட சகலசாக்ஷியும் பரா பரனுமாகும் ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு வந்தனஞ் செய்கின்றேன். அனித்தியமாகிய இப்பிரபஞ்சம் யாவும் எவனுடன் பேதமின்றி

யிருக்கின்றதோ அப்படிப்பட்ட விஷ்ணுவுக்கு வந்தனஞ் செய்கின்றேன். எவனிடத்தில் நூல் வஸ்திரத்தில் கலந்திருப்பது போலக் கலந்தும், நூலில் மணிகள் கோர்க்கப்பட்டதுபோல கோர்க்கப்பட்டிருக்கின்றதோ அந்த மகாத்துமனுக்கு வந்தனம். சகல சாமியாகி சகல சேஷியாகு மிருக்கும் அந்த உத்தம புருஷனுக்கு வந்தனம். எவனிடத்தில் சகலமும் ஒடுங்குமோ எவனிடமிருந்து சகலமும் சிருஷ்டிகாலத்தில் உற்பத்தியாகுமோ, எவன் சரீரியாகி சகலத்திற்கும் ஆதாரபுருஷனுக யிருக்கின்ருனே அப்படிப்பட்ட சர்வசுவாமிக்கு வந்தனஞ் செய்கின்றேன். எவன் யாவற்றிற்கும் ஆத்துமாவாகி உள்ளும் புறம்புமாய் வசித்து ஞானனந்தமயனுகி நிறைந்திருப்பானே அந்த வாசுதேவனுக்கு வந்நனம்" என்று பலவாறு ஜெகதீசனுன பரதேவ வாசுதேவனைப் புகழ்ந்துக் கொண்டாடி, அப்பர வெளியில் ஐக்யமாய் அத்வைதமாய் அகண்டானந்தமாய் அவாங் மனேகோசரமாய்த் தன்னை மறந்து அகம்பாவமிறந்து சதானந்த வாரியில் நிதானந் தப்பித் தானிறைந்திருந்தார்.

கேட்டீர்களோ சித்தர்களே! "இவர் இப்படிக்காட்டிலிருக்க, நாட்டில் ஜெயதேவ சுவாமிகளின் பத்தினியாகிய பத்மாவதி, பதிவிரதைகளிற் புண்ணியவதி, பாபங்களைத்தீர்க்கும் பாகீரதி, பக்தர்களைக்காக்கும் பார்வதி, பரஞானந்தெரிந்த பாக்கியவதி, பரிபூரணனந்தம் நிறைந்த சந்த்ரமதி, பசித்தோர்க்கு அன்ன மளித்த அழியா நிதி, பந்தபாசங்களை மாய்த்த குணவதி, சகல சாஸ்திரங்களுமறிந்த பாரதி, அழியாக் கற்புள்ள பகவதி, ஜெயதேவுக்குகந்தரதி, பதியின் வாக்கைக் கடவாசதி, தன் தந்தையை விட்டுத் தன்னிருப்பிடஞ் சேர்ந்து தன் கணவன் மாலைமட்டும் வாராமையால் பலவிடங்களிலும் பார்த்துக் காணுமல் வேர்த்து நிஷ்டையாலெங்கு நின்றுவிட்டாரோ! சிஷ்டராலெங்குக் கட்டுப்பட்டாரோ! பசியாலெங்கு பள்ளிகொண்டாரோ! பக்தர்கள் கையிற் சிக்கிக்கொண்டாரோ! அலைச்சலென்றூரைத் துறந்துவிட்டாரோ! ஆனந்தத்தாலென்னை மறந்துவிட்டாரோ! என்று வாஞ்சையாகத் தேடுவாள், நாடெல்லாம் நாடுவாள், நலிந்துளம் வாடுவாள், ஆசையாலழுவாள்.

ஊரெல்லாந்தேடி யுளம்மிகவாடி மடங்களுள் ஓடுவாள், அலறிவீழ்ந் தெழுவாள், காக்கைபோல் பறந்து கால்பலங் குறைந்து அயல்வீடென்றும் அறியாநங்கை, அயலாரோடுரையிடாமங்கை. பிள்ளைகள் தம்மையும் கேட்டுளம் நைந்தாள்,

பள்ளிவீடுகளிற் பார்த்து அகம்நொந்தாள், என்செய்வேன் என்பாள், இறப்பனெனென்பாள், பதியினைப் பிரிந்தேன், பாவியேனிருந்தேன், என்று பிரலாபித்துக்கொண்டு தெருக்கள் தோறும் அலையும்போது அதுதெரிந்த பத்மாவதியின் தந்தையானவர் பத்மாவதியினிடம் வந்து மிகவும் நொந்து "அம்மா! நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்; நான் தேடிப்பார்த்து அழைத்து வருகிறேன்" என்று உரைத்து அவ்வம்மணியைத் தன் வீட்டுக்கு அனுப்பிவிட்டுத் தான் நாடுங் காடுந் தேடித் திரிந்து முகங்கரிந்து காணமல் மிகவுமிடைந்து வீட்டையடைந்து பத்மாவதியை நோக்கி,

"ஓ அம்மா பாக்கியவதி! அவர் எங்கேயோ மலைக்குகைகளிற் புகுந்து தவஞ்செய்துக்கொண் டிருப்பதைப்போற் காண்கின்றது. இன்னுஞ் சிலநாளில் தானே வருவார்; தரிசனந் தருவார்" என்று பலவிதங்களாகத் தேற்றித் துக்கத்தை யாற்றிக் காப்பாற்றுகையில், பத்மாவதி அழுதகண்ணுந் தொழுதகையுமாய் ஒருபொழுது உண்டும் தரையிற் புரண்டும் தலைமயிர் கோதாள், கலைகளை யோதாள், வேறுடை யுடுக்காள், மெத்தையிற் படுக்காள், மொழியாடாமல் விழிமூடாமல் துக்கம் மேலிட்டுக் கக்கசத்துக்கு உட்பட்டு, ஓ ஓ பகவானே! என் கணவனைப் பார்க்க எத்தனை நாள் செல்லுமோ? இப்பிறப்பிற் காண்பேனோ? காணமாட்டேனோ? எக்காட்டிற் பிரவேசித்தாரோ? அல்லது தூரநாட்டிற் போய்விட்டாரோ? இம்மலைக்குகைகளில் தவஞ் செய்கிறாரோ? என்று நாடோறும் காலையிலெழுந்து மாலைமட்டுக்கும் மலைகளிலும் குகைகளிலும் புதருகளிலும் பார்த்துத் தேகமெல்லாம் வேர்த்துக் கற்களாலும் முட்களாலும் பாதங்கள் பிளந்து தேகமெல்லாம் பீறிட்டு ரத்தமயமாகிப் பலதரம் களைத்து நடப்பதற்கிளைத்துப் பகலில் காட்டிலும் இரவில் நாட்டிலுமிருந்து சொல்லொணாத் துயர்க்கடலில் அமிழ்ந்து பகவானைப் பழிக்கத் தொடங்கினாள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் சொல்லுவார்.

ஜெயதேவர் கைகால் வெட்டுண்ட அத்தியாயம்

முற்றிற்று.

---

நான்காவது

# ஜெயதேவர் நாட்டையடைந்த அத்தியாயம்



இவ்விதமாகப் பத்மாவதி நாள்கழிக்கும்போது கிரவுஞ்ச ராஜனவன் வேட்டையாட நாட்டைவிட்டுக் காட்டையடைந்து வேட்டையாடித் தாஷ்டீகவீரரோடு நாட்டைநாடி வருகையில் ஜெயதேவர் வீழ்ந்திருக்கும் ஆழ்ந்தகிணற்றில் ஜலமுண்டென்று நலமுடன் சென்று எட்டிப்பார்க்கையில் மானிடவுருவாய் மதிதருங் குருவாய்த் தோன்றப்பட்டு பெருமூச்சுவிட்டு ஜீவகாருண்யம் மேலிட்டு, ஐயோ! என்று முறையிட்டு, வீரரைவிடுத்து வெளியிலெடுத்து, நீரெவரென்று, நிஜஞ்சொல்லென்றும் வேந்தனவன் வினவினன். ஜெயதேவர் ஊமைபோல் ஒன்றும் உரையாதிருக்க, இராஜன் எதிராளிகளுடன் இகல் செய்திரோ! மதிகெட்டு இந்தவகையானீரோ? துஷ்டர்கள் இந்தத் துன்பஞ் செய்தனரோ? கஷ்டம்வந்து உம்மைக்கலந்து நொந்திரோ! கைகால்போன காரணமேதோ! பொய்யில்லாமற் புகலவொண்ணாதோ! திருடனோ! சித்தனோ! தேவனோ! சொல்வீர்; குருடனோ! முறடனோ! குறையினைச் சொல்வீர்.

என்று பலதரங்கேட்கும் அண்ணல் வாக்கியத்தைக்கேட்ட ஜெயதேவர் சமாதியினின்று நீங்கிக் கண்களைத் திறந்து மன்னனே! நீர் ஏன் வந்து என்னை யெடுத்தீர்? உன்னதமான என் சமாதியை ஏன்கெடுத்தீர்? தேவனுமல்ல, சித்தனுமல்ல, பாவஞ்செய்யாப் பத்தனுமல்ல, ஏழைப்பார்ப்பான ஹீனமதியோனன், ஊழினலிந்த உபத்திரம் நேர்ந்தது, பக்தர்கள் போற்றும் பகவானனவர், இத்தலந்தன்னி லின்புடன் பிறந்தார், கோதிலா ராமனுகக் குறைபலவடைந்தார், சீதையாற் றுன்பமாஞ் சிந்தையிலடைந்தார், சங்கரர் ஹத்தியாற் சகமெலாந் திரிந்தார். பங்கயன் தலையிழந்து அங்கநொந்திருந்தார், பிராரப்த வசத்தினற் பேதையேன் நொந்தேன், தராதலத் தழிவிலாச் சமாதியிலிருந்தேன். கால்கையைக் குறைத்தவன் கர்த்தனேயாகும், மால்விட்டு முன்படிவைத்து நீரேகும், சஞ்சாரசமாதி பல சஞ்சலமீந்திடும், சஞ்சலமிலாதவிச் சமாதி யருளீந்திடும், யாவரோ வென்றனக் கிவ்வுதவிசெய்தனர், சேவைதந் தென்றனைத் திருக்குவிற் சேர்த்தனர். கைகால் ஜீவகாருண்யம் போமல்லோ, கைகளாற் பலபல கஷ்டம் வந்துறுமலோ, பாதங்களா லிமிசை

பாவம் வந்துறுமலோ பாதங்களாற்பல பதிதம் வந்துறுமலோ, சடபாதர் காதையைச் சாந்தனீ ரறிவிரோ, சடவுடலே யறிஞர்கள் தானெனப் புகல்வரோ, என்று பற்பல மொழிகள் பண்புடனுரைத்துப் பார்த்திபனுளந்தனைப் பாகுபோற் கரைத்து, நயனங்களை மூடி நல்லருளை நாடி, நிஷ்டையில் தருக்குவாய்த் திருஷ்டி சேர்ந்திருந்தார்.

அப்போது இறையவணுகிய சிவபக்தன் திகைத்து, மிகவும் பதைத்து, நம்முடைய அரசாக்ஷியிலும் இப்போர்க்கொத்த தீங்கு நேரிட்டதல்லவா? ஆ! ஆ! துஷ்டர்களியாரோ, என் ஆண்டவனைத் துன்பத்தில் அமிழ்த்தினர்கள். சிவ சிவா! இதற்கு நான் என்னசெய்வேன் என்று கண்ணீர்விட்டழுது,கடவுளேயென்று தொழுது பெரியோர்க்கும் வந்ததே பழுது, பிரயோசன மில்லாதாயிற்றே யென்று அழுது, மிகவும் நைந்து, அவரை வலம் வந்து, சாஷ்டாங்கமாகப் பணிந்து, அவர் நயனங்களில் தன் நயனங்களை யணிந்து, பூமியில் விழுந்து, புரண்டெழுந்து வாய் விட்டிரைந்து, மனம்புழுங்க வயர்ந்து மார்பிறுகத் தழுவிக் கண்ணீராற் கழுவி அருமை யீதருமை யீதாகரா வென்முன், பெருமையாம் பெருமையாம் பித்தனே யென்முன், தெளிகிலேன் தெளிகிலேன் சிவ சிவா வென்முன், எளியனென் செய்குவேன் ஈசனே யென்முன், சங்கரா சங்கரா சாம்பவாவென்முன், மங்கை பங்காளா மழுவாளியே யென்முன், அய்யனே மெய்யனே ஆதியேயென்முன், துய்யநற்கையனே சோதியே யென்முன், தேவர்கள்பணி வாமதேவனே யென்முன், ஜீவர்கள் தொழுமகா தேவனேயென்முன், திருநீறணிந்த திரிசூலனேயென்முன், அருமறைகள் புகழாதிமூலனேயென்முன், காமதகனு ரிஷபவாகனுவென்முன், ஏமமில்லாக் கங்கை மோகனுவென்முன், சோமசுந்தர மௌலி தூயனே யென்முன், நேமமுள பக்தர்கள் நேயனே யென்முன், பூதநாத பரிபூரணுவென்முன், ஆதிநாதா ஆதிகாரணுவென்முன், திரிநேத்ர திவ்ய சரணனேயென்முன், சரணமென்பவர் பாப ஹரனே யென்முன், சம்புசாம்பவ சாக்ஷி சாந்தனே யென்முன், அம்புவிய ரேத்தும் வேதாந்தனே யென்முன், நாகபூஷண நந்திகேசனே யென்முன், தியாகராய சித்விலாசனே யென்முன், நீலகண்டா வின்ப நிர்த்தனே யென்முன், சீலதிரிபுர நாச சித்தனே யென்முன், பாண்டரங்க பரசு பாணியேயென்முன், தாண்டவா ஆண்டவா சாமியேயென்முன்; அருளிலேன் செய்வதென் னருள்வாயென்முன், அயனரியு

மேத்துமக ளங்கனேயென்றுன், இபமமருளும் ஏகலிங்கனே யென்றுன், நித்ய நிர்மல நிராங்காரனேயென்றுன், சத்யசாஸ் வித வலங்காரனேயென்றுன்,சிவசிதம்பர தேசிகனேயென்றுன். பவவினை மசானவாசனேயென்றுன், அவிநாசவ விசேஷவைது லனேயென்றுன், சுவிசேஷஜகதீச சுபலனேயென்றுன், நித்த சுத்தவசோகா நிஷ்களாவென்றுன், புத்தமுத் தவ்யோம புஷ் களாவென்றுன், அந்தமாதியிலா வனுதியேயென்றுன், பந்தமறு நிஷ்டானுபூதியேயென்றுன், சகலசுகமரு ளுபயபாதனேயென் றுன், சரவசரஜீவர்கள் சாட்சியேயென்றுன், துரியபரவசமீயுஞ் சூட்சியேயென்றுன். என்று இவ்விதமாகத் தோத்திரம்புரிந்து மிகவும் பரிந்து அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நின்று எனது இஷ்டதெய்வமாகிய பரமேசுவரனே! என்னையாட்கொள் ளும்பொருட்டு இவ்வுருவோடு இவ்விடத்து எழுந்தருளினுர்.

ஓ ஓ மந்திரி பிரதானிகளே! நமது சத்குரு சுவாமிகளைப் பார்த்தீர்களா? சந்தேகத்தைத் தீர்த்தீர்களா? என்று தண்டிகை யிலேற்றி சற்குருவே யெனப்போற்றி நாட்டிற் கொண்டுபோய் மேடையிலிருத்தி கைகள் ரணத்தையும் கால்கள் ரணத்தையும், ஔஷதங்களினுல் அருமையாகவாற்றி உலகெலாம் இவர் என் குருவெனத் தூற்றி எனையாளவந்தவர் இவரென்று வாழ்த்தி, இனியெனக்கு ஓர் குறையில்லை யென்று ஏத்தி உடலும் உயிரும் போலும், ஊசியும் நூலும்போலும், நீரும் பாலும்போலும், வெளியும் வளியும்போலும், வேருந் தோலும்போலும், கண் ணும் நிமையும்போலும், கடலும் ஒலியும்போலும், ஒற்றுமை யோடு கால்சேவைமுதலானதுஞ் செய்துக்கொண்டு வருங்காலத் தில்,இராஜனுக்குத் தர்மம்மேலிட்டுக் கர்மங்கீழ்ப்பட்டு முத்தியை நாடி முகம் மிக வாடிக் குருவேயென்று குறை பல புகன்று, ஞானசாஸ்திரம் வாசித்து நல்லருளடைய யோசித்து உபதேசம் பெற்றுத் தபவேஷமுற்று நிஷ்டையைக்கூடி நேயத்தை நாடி ஒருநாள் ஜெயதேவ ஸ்வாமிதனை வலம்வந்து பணிந்து இல் வாழ்க்கை வேண்டிலேனெனத் துணிந்து, "ஓ எனதையனே! மிகவுந் துய்யனே! தேகமோ நீர்மேற்குமிழி, செல்வமோ நீர் மேலெழுத்து, துக்கமோ ஆழ்ந்த ஆழி, சுகமோ அளந்திடு நாழி, பந்தமாஞ் சமுசாரப்பாழில், எந்தையே நானின்னம் வீழில் துன்பங்கள் நீங்கலெக்காலம், இன்பம் நானடைவதெக் காலம், அன்னப்பால் புசித்தாலுமென்ன, ஆவின்பால் புசித் தாலுமென்ன, சரிகை யுடுத்தாலுமென்ன, தவிசுமேற் படுத்

தாலுமென்ன, கந்தையை யுடுத்தாலுமென்ன, கற்கள்மேற் படுத்தாலுமென்ன, கனகபூஷண மணிந்தாலும் கஸ்தூரி திலகமணிந்தாலும், நாடெலாம் பணிய வாழ்ந்தாலும், நாற்றிசையர்வந்து தாழ்ந்தாலும், மாடுபோ லுழைத்து நொந்தாலும், வாயில்காத் திழிவடைந்தாலும் எல்லாமொன்றேயாம். ஆதலால் அருளான ஞானவழி கற்று, ஆனந்த வாழ்வினைப்பெற்று, உம்மைப்போல் ஒன்றுயிருந்து இம்மைச் சுகமெல்லாந் துறந்து, வீடெலாம் போய்ப் பிச்சைவாங்கி வீதிதிண்ணையில் தங்கித் தூங்கி, உணர்வான ஒளிவிரித்தோங்கி, உம்மைப்போல் துக்கத்தைத் தாங்கி, எண்ணங்களில்லாமலோட்டி, ஏகத்தில் மனதினை நாட்டிப், பித்தனென் றயலோர்க்குக்காட்டிப், பேய்மனதை யில்லாமல் வாட்டிச் சந்தோஷவாரிதியிற் படிந்து, தன்னையறிந்து, தேகஸ்மரணை யிறந்து, பிரமமாத்திரமாயிருக்கக் கருணை கூறுமையா" வென்று கிரீடமுதலானவைகளையும் நீக்கி, இகபோகவிச்சையைப்போக்கி, ஜெயதேவஸ்வாமிகளை அரை நிமை பிரியாதிருக்கும்போது, ஒருதினம் ஜெயதேவர் கருணையுடன் இராஜனை நோக்கி.

"ஓ அரசனே! பிரஜைகளுக்குள் சரசனே! இல்லறந் துறந்தால் ஏதுண்டு லாபம்? யானெனதென திரிபவர்க் கேகுமோ கோபம், சள்ளையென்று அயர்வதால் சாகுமோதாபம், தானிறக் காவிடிற் றேறுணுமோ தீபம், சாதுக்கள் சேவையாற் புத்திபத்தியும்வரும், சாதுக்கள் சேவையாற் சித்திமுத்தியும் வரும், சாதுக்கள் சேவைசெய்தால் வரும் பாக்கியம், சாதுக்கள் சேவைசெய்தால் வரும் யோக்கியம், சாதுக்கள் சேவையால் வரும் அருள் சிலாக்கியம், சாதுக்கள் பக்குவர்க்கருள்வர் மாவாக்கியம். ஆதலால் அரசாங்கத்தை அன்புடன் செய்து, அறத்தால் பாவமனைத்தையுங் கொய்து என்போல் இல்லறத் திருந்தையேயானல், உன்போல் உத்தமர் உலகினிலுண்டோ? ஏழையேன் மொழியா லிழிவுறலுண்டோ? கோழையேன் மொழியாற் குறைவுறலுண்டோ?" என்று கிரீடமுதலானவைகளையும் அழைப்பித்து உத்தமர் கைகளாற் றரிப்பித்து மௌனசமாதியில் எழுந்தருளி யிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

ஜெயதேவர் நாட்டை அடைந்த அத்தியாயம்

முற்றிற்று.

---

ஐந்தாவது

## ஜெயதேவரைப் பத்மாவதி தரிசித்த அத்தியாயம்



என்னைப்போ லில்லறத்தி லிருப்பாயானால் உன்னைப்போல் உத்தமருண்டோ? எனத் திருவாய்மலர்ந்தருளிய ஜெயதேவைப் பூபதி வணங்கி, "ஓ ஸ்வாமி! தேவரீரைப்போல் அடியேனைச் சமுசாரத்தி லிருக்கும்படியாகக் கட்டளையிட்டீரே? ஸ்வாமி களுக்கு மனைவிகளுண்டோ?" என்று தொழுதான். ஜெயதேவர் உண்டென் றுரைத்தார். நரபதி அவ்வம்மணியை விட்டுப் பிரிந்த காரணம் ஏது? என்று பணிந்தான். ஜெயதேவர் முன் னடந்தவெல்லாஞ் சொல்ல வேந்தன், ஐயோ! பாவியீதறியா திருந்தேன்; அடியேனுக்குற்ற அபசாரந் தெரிந்தேன் என்று அக்கணமே பல பல்லக்கு ஆட்களையும், பலதெரிவையர்களை யும், சிங்காரமான தண்டிகையையும், திவ்யமான ஆடையாபர ணங்களையும், பில்வகாமுக்கு அனுப்பவும், பத்மாவதியைப் பய பக்தியுடன் அழைத்துக்கொண்டு வரும்படியாகவும், மந்திரிக ளிடமுரைத்து ஸ்வாமிகளைநோக்கி, "ஓ என் ஆண்டவனே! பத்தர், சித்தர், பரமஞானிகள் சித்தங்கலங்கிடத் தீவினை மூண் டிடுமெனப் பெரியோர்கள் உரைக்கின்றார்களே? அது மெய்மை யானால் தேவரீரை இவ்விதமாய்க் கண்டித்துப் பாழுங்கிணற்றி லெறிய நினைத்தவுடனே அக்கள்வர் எரிந்து பஸ்பமாய்ப் போகாமலிருந்த காரணமேதோ? தெய்வீகத் தன்மைபொருந் திய தங்கட்கு இவ்வித தண்டனையும் வந்த காரணமேதோ? தாங்கள் நினைத்தால் வீரமுள்ள சோரர் மனந்திடுக்கிட் டிடை யாரோ? எமலோகமடையாரோ? இச்சங்கை நீங்க அனுக் கிரகம் புரியுமையாவெனத் துதித்தான். ஜெயதேவர் "ஓ நித்தி யானந்தத்தைக் கோரும் சத்தியவாக்குள்ள வேந்தனே! உப சாந்தனே! பிராலப்தமானது மூவர் தேவர் முனிவர் மற்றியா வரையும் விட்டதல்ல; அப்படியிருக்க என்னால் வெல்லக் கூடியதோ?" இதற்கு ஓர் திருஷ்டாந்தமான சரித்திரமுண்டு. அதாவது,

திரிகாலங்களை யுணர்த்த சித்துவித்தைகளிற் றேர்ந்து, ஜீவன்முக்திப்பதத்தை யடைந்த ஓர் முனீஸ்வரரிடம் மோக்ஷா பேக்ஷையுள்ள ஓர் சீலன் அடைந்து அவர்க்குப் பணிவிடை

செய்துகொண்டு இருந்தான். அஃதெவ்விதப் பணி யெனின்? ஆசான் மெய்ஞ்ஞான நிஷ்டையில் எழுந்தருளியிருந்து பகிர்முகப்பட்டுக் கண்களைத் திறந்து எவ்வஸ்துவை நினைப்பாரோ அவ்வஸ்துவை அவர் கேட்காமுன்னமே அவர் எதிரில் வைத்து வந்தனஞ் செய்வான். ஆதலால் தேசிகன் ஓர்நாளும் இப்பண்டம் எனக்கு வேண்டியதென்று வாய்திறந்து கேட்டதேயில்லை. எதுவேண்டுமென்று ஓர்நாளும் மாணாக்கனும் வினவியதும் இல்லை. இப்பேர்க்கொத்த அபூர்வ சேர்வை செய்யும் சீஷனைச் சோதிக்கும்பொருட்டு அவ்வடிகள் ஓர் திவசமொன்றையும் நினையாமல் அட்சிகளைத் திறந்து மௌனமாயிருந்தார். அப்போது அம்முமுட்சு ஆசிரியர் கவனித்ததை வேறுவிஷயத்தில் தம்புத்தியைச் செலுத்தி யிருந்ததனாலல்லவோ உணராமற் போனேம். குருவுக்கு அபராதஞ்செய்த நாம் இனி இவ்வாக்கையோடிருத்தல் மிகவுங் குற்றமென்று அம்முனிவன் பாதத்தில் வந்தனஞ்செய்து, தன்சிரத்தைக் கொய்துக்கொள்ள வெத்தனிக்கையில், மாதவன் மாணாக்கனை விளித்து, "ஓ சீலனே! நான் கேட்காமுன்னமே கோரிய பொருளைக் கொடுத்துக் கொண்டுவந்த உன் விவேகத்துக்கு வியப்படைந்து இன்றையத்தின மொன்றும் உண்ணாமல் கண்கள் மலர்ந்திருந்தேன். இதனாலேயே உனக்கொன்றும் புலப்படாமற் போயிற்று. உன்னைப்போல் பணிவிடைக்காளானவர்கள் இவ்வுலகில் யாருமிருக்கமாட்டார்கள். உன்னை மிகவும் மெச்சினேன். நீ எனக்குகந்த மாணாக்கனேயாம். இனி உனக்கு உபதேசிப்பதற்கு யாதோர் தடையுமில்லை. உனக்கு என் அபயஸ்தங் கொடுத்தேன். அறுபத்துநான்கு சித்திகளையும் ஜீவன்முக்தியின் நுட்பமான நிலையையும் போதிப்பேன். எமபாசத்தைச் சேதிப்பேன். உனக்கு ஓர் குறையுண்டாகுமாயின் மூவர்களோடும் வாதிப்பேன். அண்டபிண்ட பிரமாண்டங்களையும் பேதிப்பேன்" என்று சீஷன் மஸ்தகத்தின்மேல் தனது அஸ்தத்தைத் தாக்கி மகாவாக்கியோபதேசஞ் செய்ய யோசித்து இவனுக்கு இன்னம் எத்தனை நாள் ஆயுளிருக்கின்றதோ வென்று க்ஞானதிருஷ்டியால் நோக்கி எழுபத்திரண்டு நாழிகையிருக்க ஆச்சரியப்பட்டு மாச்சரியங்கொண்டு ககன கமன குளிகையொன்றை வாயிலடைத்து மற்றொன்றைச் சீடனை யடைத்துக்கொள்ளும்படியாய்ச் செய்து, பூலோகம் புவலோகம் சுவர்லோகம் சனலோகம் தபோலோகம் மகாலோகம் என்னும் ஆறையுங் கடந்து, சத்தியலோக

மடைந்து, பிரமாவைத் தரிசித்து என் மாணுக்கனுக்கு அற்ப ஆயுள்கொடுத்த காரணமேது?'' எனக் கேட்டார். விரிஞ்சன் "ஓ முனிசிரேஷ்டரே! உமது மாணுக்கனுக்கு இன்னம் இருபத்தாறு முகூர்த்தமே ஆயுளிருக்கின்றது. ஆதலால் நான் என்ன செய்யட்டும்'' என்று பின்னிடைந்தார். அதைக்கண்ட அப்புங்கவன் வைகுந்தமடைந்து நாரணனை வினவ, அம்முகுந்தன் "இவனுக்கு இன்னம் பதினுறு முகூர்த்தமிருப்பதால் என்னுல் ஒன்றுஞ் செய்யக் கூடியதல்ல'' என்றுன். முனிநாதன் கைலைக்கெழுந்தருளி உமாபதியைக் கேட்க அக்கறைமிடற்றண்ணல் "இவனுக்கு இனி ஆறுமுகூர்த்தம் ஆயுளேயிருக்கின்றது. ஆதலினுல் என்னுல் ஒன்றுஞ் செய்யக்கூடியதல்ல'' என்றுர். அவ்வடிகள் தமது மாணுக்கனை மாய்க்குங் காலனை இப்போதே வாட்டுவேனென்று எமபுரிக்குப்போய் எமன் வாயிலிற் புகுத ஆறுமுகூர்த்தமானதால் பின்வரும் மாணுக்கனுக்கு ஆயுள் முடிந்து கவாடம்பட்டு மண்டை யுடைந்து ஆசிரியர்மேல் விழுந்து மரணமடைந்தான். அதைக்கண்ட முனிநாதன் மிகவும் முனிந்து பெருமூச்சுவிடவே, அம்மூச்சில் அக்கினி பிறந்து எமனுலகை எரிக்கத் தொடங்கிற்று.

அப்போது கூற்றுவன் பயந்து நயந்து நடுங்கி ஒடுங்கி ரிஷீஸ்வரனைத் தொழுது, "ஓ மாதவனே! உம்முடைய மாணுக்கன் மடிந்தது உம்மாலன்றி என்னுலல்ல. எப்படியென்பீரேல் உமது ஆசிர்மத்தி லிருந்துக்கொண்டே எமன் எப்படி வருவான்? என்று ஆசீர்வதித்திருப்பீரேல் இவன் உயிர் நீங்குமோ? மும்மூர்த்திகளாவது தங்களுலகங்களில் நிறுத்தி ஆசீர்வாதஞ் செய்திருப்பாராகில் என் வாயிலில் மாணமடைவானே? தேசிகர் பணிவிடையிற் செழித்தவனுதலால் மும்மூர்த்திகளையும் தரிசித்து என்னைத் தரிசிக்காமல் மரணமடைந்தான்.

என்னுடைய வாசலில் அவனுடைய பிராணன் நீங்கும்படியான விதியிருந்தபடியால், அவ்விதி உம்மையும் திரிமூர்த்திகளையும் ஆசிர்வாதஞ்செய்யாமற் பேதித்ததன்றி, இவ்வளவுதூரம் உம்மையும் வரும்படியாகச் செய்தது. உண்மைதெரியாமல் என்மேல் முனிவுகொள்ளலாமோ? உமது மாணுக்கன்மேல் உமக்குக் கருணையிருக்குமானுல் உமது அஸ்தத்தை அவன் மஸ்தகத்தின் மேல்தாக்கித் தீர்க்காயுளுடன் வாழ்வாயாக என்று ஆசீர்வதிப்பீரேல் இப்போழ்தே உயிர்பெற்று எழுவான்'' எனப் பணிந்தான். அப்போது அம்முனீஸ்வரன் உண்மையேயென்று ஆங்காரந்

தணிந்து ஓங்கார முச்சரித்துச் சீஷனுக்கு ஆசீர்வாதஞ் செய்து எழுப்பிக்கொண்டு தன் ஆசிரமமடைந்து அறுபத்துநான்கு கலைகளையும் பிரமானந்த நிலைமையும் போதித்துச் சுகசமாதியி லெழுந்தருளியிருந்தார். ஆதலால், "ஓமண்டலாதிபனே! பிராலப்தபோகம் யாரையும் விடாது; வீணுய்த் துக்கத்தைக்கொடாது; ஆனால் ஈஸ்வர கடாட்சமும் பெரியோர்கள் ஆசீர்வாத பலமும், திடஞானமு முள்ளவர்களுக்கு 'மலைபோல் வரும் வினை பனிபோல் நீங்கும் என்பதற்கு ஐயமில்லை. அதெப்படியெனில் எனது கை கால்கள் வெட்டுண்டும் ஸ்ரீமந்நாராயணன் கருணை கடாட்சத்தால் எனக்கு ஓர அணுவளவுந் துன்பந்தோன்றுமற் பிரமானந்தத்தில்சொக்கியிருந்தேன். எந்தெந்தநாளில் எந்தெந்தச் சுகதுக்கங்களை யனுபவிக்கவேண்டுமோ அந்தந்த நாளில் அதுவது வந்தடையாமற்போகாது. பளுவாய் வரும் விதி சுளுவாகப் போவதற்குச் சாதுக்கள் சேவையே முக்கியமானது. ஏனெனின் திரிமூர்த்திகளாலுந் தீர்க்காவினை சீவன் முக்தர்களால் தீர்ந்து போம். முன்னம் மாந்தாதா மைந்தரில்லாக் குறையால் வாட்டமடைந்திருக்க, அதுதெரிந்த நாரதபகவான் ஆசீர்வசனம் புகலாமல் மும்மூர்த்திகள்பாற் சென்று கேட்க, அவர்களும் வரமளிக்காமல் அவ்வரசனுக்குப் புத்திரபாக்கியமில்லையென்று அாற்ற யாழ்வல்லோன் சிந்தாக்கிரந்தனுய்க் காட்டிற்சென்று தபஞ்செய்யத் தொடங்கினர். அதை யறிந்த ஓர் முனிவர் மாந்தாதா வீட்டையடைந்து அவர் மனைவி பணிந் தன்புடன் கொடுத்த நான்கு பலகாரங்கட்கு நான்கு புத்திரர் பிறக்கக்கடவதென்று ஆசீர்வதித்துத் தன்னிருப்பிடஞ் சேர்ந்தார். அம்முனிவர் வாக்கியப்படியே மாந்தாதாவுக்குச் சதுர்மகவுண்டாகிச் சந்தோஷசாகரத்தில் அமிழ்ந்திருந்தான். ஆதலால் மகான்களுக்குப் பணிவிடை செய்வோர்க்கு ஓர் காலத்தும் பழுதுண்டாகாது. அனுமார் முதலானவர்களும் சிரஞ்சீவியைப் பெற்றது உத்தமர்களின் ஆசீர்வாதப் பலனல்லவோ?

"ஓ இராஜனே! நீயும் பெரியோர்களுக்குப் பணிசெய்வதற்கு உடன்பட் டிருப்பையாயின் மேன்மையான லாபத்தை யடைவாய்" என்கிற பலபல வார்த்தைகளைப் பகன்றனர். அப்போது நிருபன் மகாபாக்கியமென்று சாதுக்கள்சேவையிற் செழித்திருந்தார். இவர்கள் இவ்விதமாயிங்கிருக்கையில் மந்திரிகளால் அனுப்பப்பட்ட தண்டிகையாளரும் தையலரும் பில்வகாமுக்

குப்போய் ஜெயதேவஸ்வாமிகளின் திருநாமம் புகன்று பதி விரதா சிரோமணியாகிய அவர் பத்தினி எத்தெருவி லிருக்கி ரூர்? எனக் கேட்டறிந்து, அவ்வம்மணி யிருக்கும் வீட்டை யடைந்து, பத்மாவதியைப் பணிந்து நயனங்களை யணிந்து, பத்மாவதியிவளெனத் துணிந்து, அம்மா பாக்கியவதி! ஜெய தேவஸ்வாமிகளுக்குகந்த யோக்யவதி! ஸ்வாமிகள் கிரவுஞ்ச ராஜனிடம் க்ஷேமமா யிருக்கின்ருர், அவ்வரசன் உம்மை இக் கணம் அழைத்துக்கொண்டு வரும்படியாய் எங்களை யனுப்பி யிருக்கிறபடியால் எங்களம்மணி தடைசெய்யாமல் சீக்கிரம் புறப்படுமம்மாவெனத் துதித்து நிற்கும் ஏவலாளர் வார்த்தை யைக்கேட்ட பத்மாவதி உடலைவிட்டகன்ற உயிர் பின்னும் அவ் வுடலில் வந்துற்றதுபோலவும், இறந்த மக்கள் எழுந்து வந்த தைப்போலவும், இஷ்டதெய்வம் தன்னெதிர் பிரசன்னமான தைப்போலவும், தரித்திரனுக்கு இராஜரீகங் கிடைத்ததைப் போலவும், சந்தோஷமடைந்து ஸ்ரீராமனைப் பிரிந்த சீதா பிராட்டி அசோகவனத்தில் உயிர்விடுந் தருணத்தில் பிரசன்ன மாகி ஸ்ரீரகுநாயகன் சீர்புகன்று உயிர்விடாமல் ஜானகியைக் காத்த அனுமானைப்போல் என் பிராணநாயகனுடைய க்ஷேம முரைத்து என்னை ரட்சித்த சீலர்களே! அனுகூலர்களே! இதோ பாயாசமுண்ணுங்கள்; ஆயாசந் தீருங்கள் என்று உப சரணை செய்தூட்டித் தன் பதிவிரதாதர்மத்தைக் காட்ட நள மகாராசனைப் பிரிந்த தமயந்தி தன்பதியைக் காணும் பரியந்தம் கிழிந்த ஓர் துண்டுவஸ்திரத்தையே யணிந்துகொண்டிருந்து நளமகாராஜனைத் தரிசித்த பதிவிரதைப்போல ஜெயதேவ ஸ்வாமிகளைப் பிரிந்ததினம் உடுத்தியிருந்த ஆடையுடன் ஓர் வருஷபரியந்த மிருந்து, அப்படியே வெளிப்பட்டுப் பிராண நாயகனைப் பிரிந்தநாளே இறவாம லிதுநாள்பரியந்தம் இவ்வாக் கையை வைத்திருந்த பாதகியாகிய தோதகி தண்டிகைமீதேறத் தகுமோ? என்று தாய்தந்தையரிடம் விடைபெற்றுக்கொண்டு காதலனைப் பார்க்க அதிக ஆவலோடும் நடக்கத்தொடங்கினுள். அப்போது காவலாட்களும், ஏவல் ஸ்திரீகளும் பலவந்தமாய் அவ்வம்மணியைப் பல்லக்கிலேற்றி அதிதுரிதமாக நடக்கும் போது பத்மாவதி இத்தனைநாளாக எனைமறந்து எவ்வண்ண மிருந்தார்? யான் செய்தகுறை ஏதென்பாள்? இத்தனை நாளாய் இவ்வுடல் நீக்காதேனிருந்தேனே இறைவனே யென்பாள்; பதியினைப் பிரிந்தும் பாவியேனிருந்த பண்பேதறியேன் பானே

யென்பாள்; பதியினைப் பிரிந்தும் பாவையரினிதாப் பாரினிலி ருந்ததாற் பயனேதென்பாள்; தேசமெல்லாம் நான் தேடா தையோ வாசமாக இவ்வூரில் வாழ்ந்தே னென்பாள்; நீ சதி யென்று நிமைபிரியாத நிர்மலன் பிரிந்த நியமமேதென்பாள்; எத்தனை நாள் செலும் இறைவனைப் பார்க்க ஏவலாளர்களே இசைப்பீரென்பாள்; என்றனுயகனிருந்திடும் ஊர்தானிதுவோ? எதுவோ? இசைப்பீரென்பாள்; என்று இங்ஙனம் புலம்பிக் கொண்டே கிரவுஞ்ச ராசனுடைய பட்டணத்திற் பிரவேசித்து ஜெயதேவரைப் பார்க்க மிகவுமாசித்து ஸ்வாமிகள் இருக்கும் மேடையிற் சென்று கணவன் முன்னின்று தோத்திரம் புரிந்து மிகவும் பரிந்து வலம் வந்து பணிந்து கரங்களைச் சேர்த்துக் கைகால் வெட்டுண்டிருப்பதைப் பார்த்துத் தேகமெல்லாம் வேர்த்து இதுவென்ன ஆச்சரியமென்று பூமியில் விழுந்து கடகட வென்றுஉருண்டுபெருமூச்சுகள்விட்டு ஸ்மரணைகெட்டு மூர்ச்சை யடைந்து மிகவு மிடைந்து உடனே தெளிந்து வாய்விட் டழுது பலதரந்தொழுது யார்செய்தார்? இக்குறை இறைவனே யென்றாள்; பார்தனிலவர் இருப்பார்களோ வென்றாள்.

இப்படி பத்மாவதி புகன்ற மொழியைக்கேட்ட ஜெயதேவர் திடுக்கிட்டு என்ன புன்மொழிதனை யிசைத்தனை பூவையே! என்னை யாண்டவர்களை யிகழ்ந்ததேன் பாவையே! கைகுறைந் தாலென்னே? மெய்யிழந்தாலென்னே? விதியைநான் வெல் வனே? அம்பை யெய்தவனைவிட்டு அம்பினை நோதல்போல் எம்பிரான்றன்னை விட்டு யாரை நாம் நோதலே! எம்பிரான் கட்டளை யார்வெல்வர்? நங்கையே! யாம் முன்னஞ்செய்த தீவினை நம்மை வந்தணுகினல் நாராயணன் என்செய்வான்? நவிலுவாய் கோதையே! பிணிகளுங் கவலையும் பீடையும் பிரித லும் பிராலப்தமென்று நீ தெளிகுவாய் பேதையே! அரசாங்க போகமும், அருள்ஞான யோகமும், அயனெழுத்தின்படி யமை யும் நல்லறிவையே! ஜகமாண்ட புரூரவச்சக்ரவர்த்தியும் அரிச் சந்திரனும் பட்டபாடு அறிவையோ? தெரிவையே! என்று பத்மாவதியின் துயர்நீங்க அரிச்சந்திரன் முதலானவர்களு டைய சரித்திரங்களைச் சொல்லத் தொடங்கினர்.

---

# அரிச்சந்திரன் கதை

## விருத்தம்

சத்தியம்பொறுமை தருமநல்லொழுக்கஞ் சாந்தமுமுளவரிச் சந்த்ரன்
உத்தமநாடு நகாரசாட்சி யொருநொடி தனிலிழந்தணிக
வத்திரமிலதோர் தனையனைச்சுமந்து மன்னர்வாழ்த் திடுமடிநோக
அத்தமுற்றிரவு தேள்கடிக்கயர்வுற் றனல்வெயின் முட்களினடந்தே. 1

உலகெலாமாளும் புத்திரன்றனையு மும்பர்வா முலகினைமதித்து
நலமுதாய் வாங்கும் பணியணிந்திருந்த நன்மனை யாளையுநாண
மிலதயனுட்டு வீதிகடோறும் நீர்கொண்மி னீர்கொண்மி னென்று
விலைதனைக்கூறி யந்தணன்றனக்கு விற்றழுந்தினன் றுயர்க்கடலில். 2

ஜகமொருதுரும்பா யெண்ணியீந்திட்ட சற்குணன் கிஞ்சிதப்பொருட்கா
இகழ்வுளபுலையற் கடிமையாயாவி னிறைச்சியைச் சுமந்திடுகாட்டைப்
பகலிராக்காத்து வாயரிசியையே பக்ஷித்துப் புலையன்கால்பிடித்துச்
செகம்புகழ்புதல்வன் றனைத்தனதாவித் தேவியை நினைந்தழுதேங்கி. 3

இருக்கின்றநாளிற் சந்திரமதியு மீவிரக்கமுமிலா மறையோன்
றருக்குடனடிக்க வுடன்மிகநடுங்கித் தலைவிதி யென்றதிகாலை
சுருக்குடனெழுந்து பூமியைத்துலக்கித் தோட்கள்வீழ்ந் திடப்பணிசெய்து
மருக்கொழுந்தணிந்த மத்தகநோக வரிபுனல்சாணமுஞ் சுமந்தாள். 4

ஆழிசூழுலகை யாளுநற்குமா னருக்கன்வந் திடுமுனமெழுந்து
கூழினைப்புசித்துக் கரிபுலிவாழுங் குறும்பொறை தனில்வெயிலதனி
லேழைபாலகருக் கேவல் செய்தஞ்சி யிடர்தருங் கற்கண்மேனடந்து
தோழர்களோடு சமிதையுந்தருப்பைச் சுமந்துயா மத்தின்முன்பாக. 5

கொண்டுவந்திடவந் தனன்மிகமுனிந்து கொஞ்சமென் றடித்திடவயர்ந்து
மண்டிடமில்லா தாதரவில்லா தம்மம்ம வப்பனேயென்றும்
முண்டநொந்திடவுங் கண்டநொந்திடவு முளரியைத் தருப்பையைக்கட்டிக்
கொண்டுவந்திடுநா ளினிலொருநாளிற் கொடியமா வடவயிற்றநயன். 6

தருப்பையைக்கண்டு பறித்திடாவிடினந் தலைவன்மோ துவனெனவஞ்சித்
தருப்பையைப்பறிக்கச் சீறியேயுரகந் தீண்டிடச் சகித்திடாதுடலம்
நெருப்புபோலெரிய நிலந்தனில்வீழ்ந்து நெட்டுயிர்ப் பெறந்துமெய்மூர்ச்சித்
தருப்பமேமிகுந்ததா தரவிலாதையோ வன்னைதந்தையை நினைந்தழுதான். 7

பஞ்சணைமீது மரும்பிலாமலரைப் பரப்பிமேற் படுக்கவைத்திடவப்
பஞ்சணைமீது முடல்சகிக்காத பண்புளகுமரனு நாய்பேய்
வஞ்சகப்புலிவா ழடவியிற்கற்கண் முட்கண்மேற் புரண்டுடல் வருந்தித்
தஞ்சம்யாரின்றித் தனல்விழுபுழுப்போற் ரூபமேமிகுந் துயிர்விடுத்தான். 8

ஆவிநீங்கிடவந் தனர்நகர்மேவி யறைந்திடச் சந்திரமதியும்
ஓவியம்போலோர் நாழிகைநின்றுன் மத்தமா யுடறனைமறந்தாள்

பாவிநானென்செய்வே னெனப்பதைப்பாள் பதைத்துவீழ்ந் தழுதுமூர்ச்சிப்பாள்
ஆவிநீத்தவள்போ லரைபதமிருப்பா ளப்பனே மடிந்தையோவென்பாள். 9

வாய்திறந்தழுதால் மறையவன்முனிவா னென்றுதன் வாய்திறந்தாற்றாள்
சேய்தனைநினைந்து மறந்துதன்வாய்விட் டிடர்க்கடலினிற் புகுந்தழுவாள்
நாய்நரிபேய்வாழ் நாசமாங்கானினல்லுயிர் விடுத்தையோ வென்பாள்
சேய்தனைக்காண மன்னவன்வந்தாற் செப்புவ தென்னெனத்துடிப்பாள். 10

வேறு

முகத்தினு மார்பின்மீது மறைந்துகொண் டழுதேமுற்றத்
தகத்துள பணிகள்யாவு மட்டியில் லாமற்செய்து
தகர்த்திடு மறையோன்பாதந் தாழ்ந்தென்றன் றநயன்காட்டில்
தகித்திடு மரவான் மாண்டான் தகனஞ்செய் திடனுன்போக. 11

விடைகொடு மெனவப்பார்ப்பான் வேலைபற் பலவிருக்க
அடியென்ன சொன்னாப்பைய லடவியின் மாண்டதாலே
தடந்தனக் குரியசுள்ளி தருப்பையைக் கொணர்தற்காளின்
றிடர்நஷ்ட மெனக்கல்லாம லென்னடி யுனக்குநஷ்டம். 12

என்னவென் னையாவீட்டி லிருக்கின்ற பணிகள்யாவு
முன்னமே செய்தேனென்ன முனிவுகொண் டடித்துவைதென்
சொர்னத்துக் கழிவுதந்த துன்மார்க்கப் பயறனக்கோ
ரன்னையு முண்டோபோகா தகத்தினி லிருப்பாயென்றான். 13

இருவென்ற போதேபெற்ற வயிறெரிகிற தென்னையா
அருணன்வந் திடுமுன்சேர்வே னகந்தனை யெனவவ்வும்பன்
அருங்கானஞ் செலவிடையீ யெனவடி பணிந்துபோற்றி
இருளென்று மறியாச்சந்த்ர மதியிர வினிற்றனித்தே. 14

கானக நாடிச்செல்லக் கார்மழை குமிறிப்பெய்ய
ஆனனங் காட்டிடாம லநிலன்வே கமதாய்வீச
கானக முள்ளுங்கல்லுங் கால்களிற் றைக்கழுங்கில்
ஊனெலாம் பீறரத்தத் தாலுடனனைந்து நொந்தாள். 15

செடிகளின் மயிர்கள்சிக்கத் தேள்புயங் கழுங்கடிக்கப்
பிடிபுலி கூவிநிற்கப் பீதியான் மனந்துடிக்க
மடிபிடி யெனப்பேய்சூழ மைந்தனை நினைந்துநைந்து
படியெலா மாளுந்தூய பாலனைத் தேடலுற்றாள். 16

மயில்குயில் கிளிகாளென்றன் மைந்தனைக் காண்கிலீரோ
புயங்கமே புலியேயென்றனன் புதல்வனைக் காண்கிலீரோ
கயங்கர டிகளேயென்றன் காளையைக் காண்கிலீரோ
பயந்தரும் பேய்களேயென் பாலனைக் காண்கிலீரோ. 17

திக்கொரு வருமிலாமற் றியங்கியே தேடித்தேடி
மைக்குழன் மாதுகானின் மைந்தனைக் கண்டாள்கண்டு
துக்கமே மிகுந்துசோர்ந்து சுதனைத்தன் மடிமேலேந்தி
துக்கத்தா லழுதியாவ ராற்சொல லாமென்மாதே. 18

வெகுபொழு தழுதுசோர்ந்து விடியுமுன் வேதியன்றன்
அகந்தனைச் சோரவிட்டால் முனிவனென் றவனுக்கஞ்சி
மகன்றனைத் தோண்மேலேந்தி மயானஞ்சேர்ந் திமமீது
மகனைவைத் தழலைமூட்ட மன்னன்கண் டோடிவந்து. 19

அடிகுடி கேடியென்றத் தயனைக் காலால்வீசப்
படிபுகழ் மைந்தாவுன்னைப் பறையனு முதைத்தானென்று
மடிமிசை மைந்தன்றன்னை மதிமதி யேந்திக்கொண்டங்
கிடர்க்கடல் புகவவ்வேந்த னென்மகன் மடிந்தானென்றே. 20

சந்திர மதியாலுற்ற சங்கதி யெல்லாங்கேட்டு
மைந்தன்மேல் வீழ்ந்தயர்ந்து மார்புட னணைத்துக்கொண்டுன்
மைந்தனை வைத்துநீபோய் மடிபணங் கொண்டுவந்து
தந்தபின் சுடுவாயென்ன சந்திரமதிநீ பார்ப்பான். 21

இடஞ்செல வழியின்மாண்ட விளைஞனைக் கண்டுநொந்து
மடிமிசை யேந்தலோடும் வந்துகாவ லர்கள்சூழ்ந்து
துடிதுடித் திடவிரத்தந் தோன்றக்கீழ் விழவடித்துப்
படிபுகழ் காசிமன்னன் பாற்கொண்டு போய்நின்றார்க்க. 22

மன்னனுஞ் சிறுவன்றன்னை வதைத்தவ ளிவளோவென்றிக்
கன்னியைக் கொல்வாயீமங் காப்பவ வெனவங்கீசன்
மென்னியைப் பிடித்துத்தள்ளிக் கோசல வேந்தன்கையில்
கன்னியைக் கொடுக்கவேந்தன் காந்தையோ டிடுகாடுற்றே. 23

தயனைப் பார்த்தயர்ந்துந் தையலைத் துணிக்கநைந்தும்
தயனே பணியான்மாண்டான் சதிதனை நானேவெட்ட
எனமுனம் பாவஞ்செய்தே னென்றிடர்க் கடற்புகுந்து
மனைவியைக் குனியவைத்து வாளினைக் கையிலேந்தி. 24

விசிடப் பரமன்வந்து வேந்தன்கை பிடித்துக்கொண்டு
மாசிலா தவனீயென்று மைந்தரை யெழுப்பித்தந்து
கோசலம் புரப்பாயென்று குன்றுவில் லியன்மறைந்தான்
மாசிலா தவளேகேட்பாய் மற்றொரு காதையென்றான். 25

அரிச்சந்திரன் கதை - முற்றிற்று.

---

## புரூரவச்சக்கரவர்த்தி கதை

சந்த விருத்தம்

பொக்கிஷமும்விளை வும்முளநாடு புரந்தபு ரூரவமாச்
சக்கரவர்த்தியு மனைதனநாடு மிழந்தய னாட்டினிலே
மைக்குழல்மனை யாளையிழந்திரு மகவினி லோர்மகவைப்
பக்குவமாயோ ராற்றின்கரைதனில் வைத்தோர் பாலனையே. 1

ஆற்றங்கரையினில் வைத்திக்கரைவரு மாதவ வரசனுமவ்
வாற்றுறுநீர்மேன் மேன்மிகவாவே யக்கரை காணும
லாற்றுறுநீரி லமிழ்ந்துமெழுந்து மவஸ்தைகள் பலவெய்தவ்
வாற்றுறுநீருட னேவெகுதூர மகன்றோர் கரையேறி. 2

ஏறுங்கரைதனி லுயர்வெண்பொன்னு மிலகிய பொன்னகையும்
கோறற்சமனு முத்தாரம்மிகு கோமேதகங்கண்டே
ஏறுங்கரிபுலி வாழுங்கான மதிலிவ்வுயிர் கொலியெவ்
வாறுபொருந்தின தெனநோக்குற்றங் குற்றான்மன்னவனே. 3

வேறு

மாடுனக்கேதென்று நோக்கிடும்வள்ளலே மாக்கள்ள னென்றடித்தக்
காடுதனிலொருகையை யொருகாலைவாங்கிக் காவலரகல மன்னனேங்கி
நாடிழந்தேன்ப்ராண நாயகியோடெச்சமு நலனிழந்தே னதியினிற்
பாடடைந்தேனிடர்க் கடலடைந்தேன்பாணி காலிழந்தேன் றெய்வமே. 4

என்னகாரணமர கராசிவானந்த னேயென்றறைந்த வண்ணல்
என்னவரசென்னவாழ் வென்னவிதியெனவிசைத் திறைவனே யபயமென்றே
மன்னுமறைமுடிவிலில் குற்றபொருலருளினன் வடிவுமனை மகவுமன்றி
முன்னிழந்தவையெலாம் பெற்றிறுதியினின்முத்தி பெற்றின்ப முற்றானரோ. 5

---

## நளச்சக்கரவர்த்தி கதை



விருத்தம்

பூவெலாமாண்டநன் னளமகாராஜன் பொன்னாடு மகவிழந்திப்
பூவினுறுகன்னியர்க ளினிலழகுகற்புள்ள புண்ணியசா லியுநைந்திடத்
தாவமதிலலையவிட் டுத்தூசி லாமற்றன் னுருவேற தாய்த்தனக்குச்
சேவைசெயுமண்ணலுக் காளதாய்த் துன்புறுந் தேர்ப்பாகனானரோ. 6

வேறு

இரவினிற்கானிற் காவலனின்றி யேங்கினபோதெனக் களிப்பே
அரவுவந்தணுகி விழுங்கிடும்போதி லயர்ந்திடும்போதெனக் களிப்பே
அரவினைத்துணித்த கிராதனைக்கற்பா லனல்செயும்போதெனக் களிப்பே
கரிகண்மேல்வீழ்ந்த போதங்கவனத்திற் களிப்பெனத்தமயந்தி தனக்கே. 7

அரக்குமாளிகையி லனலிட்டபோழ்து மமர்செயும்போதென வின்பே
இரக்கின்றமறையோர் பாலிரந்துண்டங் கிருந்தபோதென்னநல் லின்பே
எரிப்புதல்விமைமன் னவர்முனமான் வீனஞ்செய்போதென வின்பே
அருப்பமீயடவி தனிலுறும்போது மைவருக்கென்னநல் லின்பே. 8

மாவுரிதரித்து வனந்தனிற்செல்லும் போதுந்தன்மனேவியைக் காணு
திருளடவியிற்றன் றேடுறும்போது மிராக்கதரமர்செயும் போதும்
அருளிலக்குமியை யடவியிற்கொடுபோ யதஞ்செய்துவாவென்ற போதும்
தரைதனிற்சிதை புதைந்திடும்போதுந் தசரதன்மகற்கென சுகமே. 9

வனந்தனிற்செலும்போ தவுணரைக்கொலும்போ திராவணன்வந்தெடுக்கும்போ
தனந்தனும்வெருவுங் கழலுமன்கீழ்விழும்போ தசோகமாவனந்தனி லமும்போ
தனந்தவதார னிராமனுத்தரவென் றடவியிற்கொண்டு போய்விடும்போ
தினம்பிரிமான்போற் றனித்திடர்படும்போ திலக்குமிக் கெனசுகமாதே. 10

வேறு

நாடெலாமாண்டமக் கிரீடம்புனேந்தநன் னரபதிக ளுள்ளனைந்தெம்
நாடிழந்தோமரிய நகரிழந்தோநல்ல மகவிழந் தோமெமதுயிர்ச்
சோடிழந்தோமிடர்க் கடல்கடைந்தோங்கழற் றேளிழந் தோமெனமிக
வாடியிறையோனருளி னுலின்படைந்தனர் மாசிலாக் குமுதவதியே. 11

என்று பலபேர் பட்டபாட்டைப் பகர்ந்து பத்மாவதியின் துயரத்தையாற்றி பகவானேப் போற்றித் துரியதிருஷ்டியிற் கரியாக்கிப் பிரியாதிருந்தார்.

பகவான் மாறுத்தரவு ஒன்றுஞ் சொல்லாமல் விதியினுல் நமது பதிக்கு இக்கெதி வந்ததென்று உன்னி, வியாகுலத்தை நண்ணி, பதியேதெய்வம், பதிமொழியேவேதம், பதிசேவையே பூசை, பதியை நினைத்தலே தியானம், பதியைப் பிரியாதிருத்தலே ஞானம், பதியுடனிறத்தலே மோக்ஷமென்று, பதி சேவையை நாடிப் பதிபக்தியிற்கூடிப் பதியைத் தியானஞ் செய்துக்கொண்டிருந்தாள்.

இவ்வாச்சரியங்களைப் பார்த்த இறைவன் இவரே மகாதேவன், இவரே வாசுதேவன், இவரே தேவதேவன், இவரே பிரமதேவன், இவரே அயிராணி, இவரே இந்திராணி, இவரே செல்விவாணி, இவரே கல்வி நிர்வாணி; எனத் துதித்து, இருவரையும் வலம்வந்து பணிந்து, துறவியாய்ப் போகலாமென்கிற விச்சை தணிந்து, பத்மாவதியின் திருவடிகளில் தன் திருநயனங்களை யணிந்து, இனி இவர்களுக்குப் பணிசெய்தலே மோக்ஷம், இதுவே மோக்ஷமடையும் சூக்ஷம், எனத் தீர்

மானித்து அன்றுமுதல் சாதுக்கள் யார்வந்தாலும் வேண்டிய உபசரணையோடும் வைத்துக்கொண்டிருந்து வேறு தேயங்கட்குப்போக எண்ணங்கொண்டவர்க்கு அளவற்ற திரவியங் கொடுத்தனுப்பி, மந்திரி பிரதானிகளை நோக்கி, "நம்முடைய பட்டணத்தில் விஷ்ணுபக்தர்கள், சிவபக்தர்கள், பிரமக்ஞானிகள், அதிதிகள் யார்வந்தாலும் எனக்கு அறிக்கைசெய்து சேவையைத் தருவித்து என்னை உய்வித்து கீர்த்தியடையுங்கள்" என்று ஆக்யாபித்தார்.

அப்படியே மந்திரி பிரதானிகள் நடக்கப் பிராமணர்களும், சாதுக்களும், நிறைந்து வீதிவீதியில் விஷ்ணு சங்கீர்த்தனங்களும் சிவசங்கீர்த்தனங்களும் வேதகோஷ்டங்களும் வேதாந்த கோஷ்டங்களும் முழங்க, எத்திசையிலும் ஆலயகோபுரங்களும், அனுமக்கொடிகளும், ஒன்றிலுமொன்று உயர்ந்ததாய் விளங்கிப் பசுக்கூட்டங்கள் பரவி ஸ்ரீமகாவிஷ்ணு வீற்றிருக்கும் வைகுந்தத்தைப்போலவும், பரமசிவனுர் வாசஸ்தானமாகிய கயிலையைப்போலவும், பிரமதேவன் நிவாசஞ்செய்யும் சத்திய லோகத்தைப்போலவும், சொர்க்க லோகத்தைப்போலவும், அளகாபுரியைப்போலவும் பிரகாசித்து ஐம்பத்தாறு தேசங்களிலும் பிரக்யாதியாய் நான்கு திக்குகளிலும் கீர்த்திப் பிரசன்னமாகி அரிச்சந்திரன், நளன், மாந்தாதா, ரகுராஜன் தருமர் முதலானோர் செய்த அரசாட்சியைப்போ லிருந்தது. கேட்டீர்க்ளோ சித்தர்களே யென்று விரிஞ்சாவதாரனுன நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

ஜெயதேவைப் பத்மாவதி தரிசித்த அத்தியாயம்

முற்றிற்று.

---

ஆருவது

## கள்வர் பாதாளத்திலமிழ்ந்த அத்தியாயம்

இப்படி யிருக்குங்காலத்தில் ஜெயதேவ ஸ்வாமிகளின் கைகால்களைக் கண்டித்துப் பாழ்கிணற்றிற் றள்ளின பாதகர்களாகிய சோரர் கிரவுஞ்சராஜன் சாதுக்களைக்கண்டால் மிகவும் உபசாரத்துடன் தேவையான திரவியக் குவையல் தருகிறபடி

யால் நாம் என் திருட்டுத்தனத்தால் சீவனஞ் செய்யவேண்டும்; சாதுக்கள் வேஷந்தரித்து வேண்டிய வஸ்துக்களை வாங்கிக் கொண்டுவந்து சுகமாய் வாழ்ந்திருப்போமென்று கோஷாயி வேஷந் தரித்துக் கிரவுஞ்சராஜன் தேசத்தில் பிரவேசித்தார் கள். அவர்களைக்கண்ட காவலர் வந்தனஞ்செய்து, அரசன் அரண்மனைக்கு அழைத்துக்கொண்டுபோய் இதுதான் இறைவ னிருக்குமிடம். அதோ தெரியும் மேடை ஜெயதேவஸ்வாமி களின் வாசஸ்தானம், ஸ்வாமிகளின் தரிசனம் வேண்டியிருக்கு மாயின் அவ்விடத்திற் செல்லுங்களென்றுசாற்றக், காவடர் அண்ணல் மேடைக்குப்போனல் இராஜதரிசனங் கிடைக்கத் தாமஸமாவதன்றி எல்லாருக்குங் கிடைப்பதுபோல நமக்குக் கொஞ்சம் பொருளகப்படும். ஆதலால் இறைவன் ஆசாரியர் அனுமதியாற் போவோமாயின் அளவற்ற பொருள் அகப்படு மென்று அதிகவாசை அளவற்றமோசம் என்பதறியாமல் சத் குருஸ்வாமிகளின் மேடைக்குட் பிரவேசித்தார்கள். உடனே அங்கிருவரும் ஏவலாளர் பணிந்து, "ஓ சாதுக்களே! தடையில் லாமல் வாருங்கள்; கிருபை கூறுங்கள்; எங்களைக்காருங்கள்; ஸ்வாமிகள் இதோ வீற்றிருக்கிருர்; பாருங்கள்" என்று அழைத்துக்கொண்டுபோய் தேசிகரைநோக்கி, "ஓ ஸ்வாமி! யாரோ புண்ணியபுருஷர்கள் தங்கள் தரிசனத்துக்கு எழுந் தருளினுர்கள். அவர்களை அன்புடன் பார்த்து வேண்டிய தளித்துக் காத்து அரசனுடன் சேர்த்துக் கோரிக்கைகளைத் தீர்த்து ஆட்கொள்ளுமையா" என்று பணிந்தார்கள்.

ஜெயதேவர் சாதுக்களைக் கண்டதே மொண்டிக் கைகளைக் கூப்பித் தெண்டனிட்டார். அப்போது தேவர் மொண்டிக் கைகளையுங் கால்களையுங்கண்டு சந்தேகங்கொண்டு, ஓ! ஓ! மோசம்வந்தது; ஆசையெல்லாம் வீணுச்சுது; நாமே தேடிக் கொள்ளலாச்சுது என்று முன்னிட்டகாலைப் பின்னிட்டு ஓடத் தொடங்கினுர்கள். அதற்கு ஸ்வாமிகள் "ஓ பரமசாதுக்களே! வந்தனம் வந்தனம், பரப்பிரம ஞானிகளே! வந்தனம் வந்தனம். பரமபாகவதர்களே! வந்தனம் வந்தனம், இவ்வளவுதூரம் நடந்துவந்தும் பாவியேனுக்கு தரிசனந்தந்தும் சிலநாளிருந்து போகாமல் பாமரன் முகத்தைப் பார்க்கொணுதென்ருே போகி றீர்கள். தயவுசெய்து சற்று நில்லுங்கள் நில்லுங்கள், உங்கள் பாததரிசனந்தந்தாட்கொள்ளுங்கள்என்றுசிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அன்புடன் அழைக்கும்போது புரையோர் சற்

றுந்தங்காமல் காலடிபிட்டத்திற் படும்படியாக ஓடத் தொடங்கிஞர்கள். ஆரியர் இவர்கள் நம்மைக்கண்டித்த காவடர்போற் ரேன்றுகின்றது. ஐயோ! யாதோ விச்சையால் இவனடைந்து நம்மைக் கண் ணூற் றிடைந்து பயந்தோடுகிருர்கள். இனியிவர் களைப் பலவந்தமா யழைப்பித்து வேண்டிய திரவியங்களைக் கொடுத்தனுப்பலாமென்று ஏவலாளரை நோக்கி, "ஓ சேவகரே! என் பிராணனைக் காப்பாற்றின பரம பாகவதோத்தமர்களைப் போகவொட்டாமற்றடுத்து அன்போடு அழைத்துக்கொண்டு வந்து என்னெதிரி லிருத்திப் பாயசத்தைப் பருகுவித்துப் பண்டு பலாதிகளை நுகாவித்து விசிறிகளைக்கொண்டு வீசி, மேனியெல்லாம் சவ்வாதுபூசி, விரைவாக வேந்தன்பாலோடி வேந்தன் விரைவா யிங்குவோடி வரும்படியாய்ச் செய்வீர்கள்" எனத் திரு வாய்மலர்ந்ததைக்கேட்ட வேவுகாரரிற் சிலர் கள்ளச் சாதுக்களைப் பலவந்தமாக விழுத்துக் கொண்டுவந்து பீடங்களின் மேலிருத்தி உபசரணை செய்துக்கொண் டிருக்கச் சிலர் இராஜன் பாற் போகையில், பிதா என்னமோ மோசம் வந்தது, 'மோசம் நாசம் கம்பளிவேஷம்' என்கிறபடி நமக்கு மாணகாலம் நேரிட்டதென்று திருடர் நெஞ்சம் திடுக்கு திடுக்கென்று துடிக்குமென்பதுபோலவும், விபசாரியினுள்ளம் வெடுக்கு வெடுக்கெனத் திடுக்குறுவதைப்போலவும், கொலையாளிகளின் இதயம் குடுக்கு குடுக்கென முடுக்குவதைப்போலவுந் துடித்து உதடுகளைக் கடித்துத் தாங்கள்செய்த அக்கிரமங்களை நினைந்து விசனுக்கினியாய் வெந்து, உள்ளம் மிகவும் நொந்து, உயிர் நீங்கினவர்போல் நைந்து, முகவாட்டமடைந்து நடுக்கங்கொண் டிடைந்து, மொழிபேசல் குறைந்து, வியாகுலம் நிறைந்து. கனகாசை யிறந்து, தங்களைத்தாங்கள் மறந்து, மனதிற் கிலிபிறந்து, காயத்தை யசைக்காமல், கண்ணிமைக்காமல் பிர்மஹத்தி பிடித்தவரைப் போலவும் பேய்பிடித்தவரைப்போலவும், சர்ப்பயாகஞ் செய்த காலத்தில் ரிஷியின் மந்திரோச்சாடன பலத்தால் ககனத்தில் இந்திரன் ஸ்தம்பித்து நின்றுவிட்டதைப்போலவும், மயங்கித் தயங்கித் தேகமுருகி முகங்கருகிப் பயமென்னும் வாரிதியிலாழ்ந்து பிரமத்தி சூழ்ந்து அசைவற்றிருந்தார்கள்.

காவட ரிப்படியிருக்க, காவலர் திருபனிடம் போய், "ஓ சுவாமி! தேவரீரை நமது சத்குருஸ்வாமிகள் துரிதமாய் அழைத்துக்கொண்டு வரும்படியாகச்சொன்னர்" என்றுவணங்க உடனே நராதிபன் கருணாநிதியாகிய கர்த்தனுக்கு இவ்வெளியேன் மீதில்

இன்றைக்குத்தான் கருணைவந்ததோவென்று உடனே எழுந்து விசையான காற்றைப்போலவும், அம்பைப்போலவும் ஓடிவந்து, சுவாமிகளை அன்பா யின்பமாய்ப்போற்றிப் புகழ்ந்து, பொங்கிப் பூரித்து, மகிழ்ந்து, அகங்குளிர்ந்து, முகம் மலர்ந்து சிரசாஷ்டாங்கமாய் வந்தனம் புரிந்து, மிகவும் பரிந்து, கைகட்டி வாய் பொத்தி, ஓ எனது சத்குருநாதனே! மெய்ஞ்ஞான போதனே! அடியேனுகிய கொடியேனை அழைப்பித்த காரணம் ஏதோ? திருவாய்மலர்ந்தருளுமெனக் கேட்க, அடிகள் அண்ணலை யன்புடன் நோக்கி, ஓ ராஜாதிராஜனே! சிறப்புற்ற போஜனே! நீ செய்த நலமோ! உங்கள் பெரியார்செய்த தபோபலமோ! மகா புண்ணியவான்களான இந்தச் சாதுக்கள் இங்கு வந்தார்கள்; அரிதான சேவை தந்தார்கள்.

ஓ! ஓ! இவர்களிருக்கும் நிஷ்டாபலத்தைப்பாரும்; இவர்களடிகளில் உமது தலையைச்சேரும், பீடைகளெல்லாந்தீரும், மெய்ஞ்ஞான விலாசம் மீறும், என்ன வரம் வேண்டுமோ கோரும், அதிலெனக்குப் பாதிதாரும். ஆ! ஆ! இவர்கள் மெய்ஞ்ஞான தேசிகோத்தமர்களையா? யான் சொல்வார்த்தை பொய்யா? இதிற் சந்தேகமில்லை துய்யா? என்றும் பொய் சொல்லா மெய்யா! தர்மஞ் செய்யுங்கையா!" எனப் புகழ்ந்து, "ஓ அரசனே! பிழைகளுக்குள் சாசனே! இவர்களுக்கு நல்ல ஆடையாபரணங்களளித்து உமது சிங்காரமேடையிலிருத்திப் பயபக்தி யிதயத்திருத்திப் பாழிற்போகும் மனதைத் திருத்திப் புண்ணியமும் புகழும் பூலோகத்தில் நிறுத்திப் பூரண தியானத்தை விருத்தி யடையும்படி செய்வாயப்பா" எனத் திருவாய்மலர்ந்தருளினர். அதிபதி அதிக சந்தோஷசித்தனுய் காவலாற் றண்டிகைகளை யழைப்பித்து அதிற் சாதுக்களை எழுந்தருளவைத்துச் சிங்காரமான மேடையி னுட்கொண்டு போய்ச் சிம்மாசனங்களில் எழுந்தருளச்செய்து இவர்களே மகத்வம் பொருந்திய பிர்மக்ஞானிகள், இவர்களே பத்திபுத்தி தருஞ் சீலர்கள், இவர்களே சித்தி முத்தி யளிக்கும் அனுகூலர்கள், எனப் பலவாருகப் புகழ்ந்து புகழ்ந்து மகிழ்ந்து ஏவலாளர்களாய் சகல உபசாரங்களையுஞ் செய்துக்கொண்டிருக்கிறகாலத்தில், சஞ்சல நெஞ்சவஞ்சகர்களாகிய கரவடர் தங்களுக்குள் தாங்களே குழைந்து நமக்கு இவ்வித பூசனைசெய்துக் கொண்டு வருகிறதை யோசிக்குமளவில் வெகு மோசமாகவே யிருக்கின்றது. யாதொன்றும் வேண்டாமல் ஓட்டமெடுப்போ

மென்றால் அருகில் ஏவலாளர் கடுங்காவல் நெருக்குண்டிருக்கின்றது.

இனி சிலநாளில் நம்மை வதைப்பார்களேயன்றி விடப்போகிறதில்லை; நாம்செய்த துரோகம் நம்மையே சூழ்ந்துக்கொண்டிருக்கின்றது. கழுவிலேற்றுவோனுக்குச் சகல சுகபோகங்களும் அனுபவிக்கக் கொடுப்பதைப்போல நம்மைப் பூசித்துக்கொண்டு வருகிறார்களென்று தேள்கொட்டிய திருடனைப்போல் பூசனை செய்யச்செய்ய மனைவியாகுல மிகுந்து மாறாப்பீதி மனதிற்புகுந்து உடல்வாட்டமும், மனவாட்டமுமடைந்து மிகவுந் திகிலடைந்திருந்தார்கள். இப்படியிருக்க பார்த்திபன் சாதுக்களின் குணங்குறிகள் வேறுபட்டிருக்கக்கண்டு சந்தேகங்கொண்டு ஸ்வாமிகளிடமடைந்து, "ஓ சுவாமி! அருள் விலாசம் விளங்கிய ஞானிகளை முகவிலாசத்தாற் கண்டறியலாமல்லவா? அப்படியிருக்க, இப்போது வந்திருக்கும் சாதுக்கள் கோதுக்குள்ளானவர்போல் உடல்வாடி ஓடிப்போவதற்கே நாடியிருக்கிறார்களன்றி நான் சேவைசெய்யப்போனால் பீதியடைந்து என்னைப் பார்ப்பதற்கிடைந்து குற்றமுள்ளவன் பலர் முன்வர மனங் கோணுவதைப்போலவும், ஆசையுள்ளோன் நிராசையுள்ளோன் முன்னிற்க நாணுவதைப்போலவும், கற்பில்லா மங்கையர் கால்நடையைப்போலவும், கண்சைகையைப்போலவும், கொலைபாதகன் குலத்தைப்போலவும், திருடாடைந்த திகிலைப்போலவும், பலகுறிகள் வேறுபட்டுச் சற்சனர் குணங்களுக்கு மாறுபட்டுக் காணுகின்றது. ஆனால் பெரியோர்செய்கை நன்றாயறியேனாதலால் அறியும்படியாகக் கிருபைகூர்ந் தருளவேண்டும்" எனப் பிரார்த்தித்தான்.

ஜெயதேவர் கோமானை நோக்கி, "கொற்றவனே! சொல்லற்கரிய நற்றவனே! வறியேனும் பெரியோர்களின் குணங் குறிகளை நன்றாயறிந்தவனல்ல; ஆயினும் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன்; அதாவது பரப்ரமக்ஞானிகளாகிய ஜீவன்முக்தர்கள் ஆரம்பத்தில் சமாதி சாதனஞ் செய்யத்தொடங்கிச் சாத்தியமாகும்பரியர்தம் ஒருவரோடு அதிகமாகப் பேசாமலும், தேகாதிகளின்மேல் வாஞ்சைகொள்ளாமலும், கடினவார்த்தைகள் விள்ளாமலும், அதிகுப்த மௌனத்தை யடைந்திருப்பார்கள். மனபடக்க அடங்காமல் நிஷ்டைக்கு மாறுபட்டதானால் பித்தனைப்

போற் பிறரை வைவதாய் வாயில்வந்த பிரகாரம் பிதற்றிக் கொண்டே திரிவார்கள். மனமடங்கினல் ஆனந்தம் மேலிட்டுப் பாடுவார்கள் பாடியாடுவார்கள். பிரம்மானந்தத்தையே நாடுவார் கள். பிரமத்துடனென்ருய்க் கூடுவார்கள். மனம்பகிர்முகப்படில் வாடுவார்கள். அந்தர்முகத்தையே தேடுவார்கள். தானின்னு னென்று மறியார்கள். காடு நாடென்றுந் தெரியார்கள். நன்கு தீதென்றும் குறியார்கள். துரியநாட்டத்தைப் பிரியார்கள். தேக சுகத்தைத் தேடார்கள். தேசங்கடோறு மோடார்கள். இந்திரிய சுகங்கருதி வாடார்கள். இந்த்ராதிலோகங்களை நாடார்கள். தீமைகளொன்றுஞ் செய்யார்கள். தெரிவையர் போகங்களில் நையார்கள். அடிமைகடம்மையும் வையார்கள். அன்பிலாதோ ருயிரைக் கொய்யார்கள். பிராலப்தத்தால் இல்லறத்திருந்தாலும் நாழியமுதுக்கும் நால்முழத்துண்டுக்கே இச்சைவைப்பார்கள். இவ்விச்சையையும் மனதிலிருந்து பிரிப்பார்கள். சமுசாரம் நமக் கேனென்று உரைப்பார்கள். ஒரேமனதாய்த் துறப்பார்கள். இருந்தாலுமிருப்பார்கள். மெஞ்ஞானத்தையே விரிப்பார்கள். நாற்றிசையிலுந் தெரிப்பார்கள். பிரமமேமேலானதெனக் குறிப் பார்கள். அடியார்கள் தீங்குகள் விலக்கத் திரவியமும் பறிப்பார் கள். அகந்தையை யடியோடு மெரிப்பார்கள். மாயாவாழ்க்கை யீதெனச் சிரிப்பார்கள். மாயாவாரியிலு மனமெழாமல் மறிப் பார்கள். இன்னம் அநேகவிதங்களாயு மிருப்பார்கள்.

ஏனெனில் பிரமக்ஞானிகளின் அனுபவத்தைத் திரிமூர்த் திகளாலும் அறியக்கூடாப் பான்மையானதால் என்னுலுரைக் கப்போமோ? ஓ பூபாலனே! உரைத்தற்கரிய சீலனே! ஏழைகட் கனுகூலனே! என்னருமைப்பாலனே! இப்போது நம்மிடம் வந்திருக்கும் பெரியோர்கள் நமது குறைகளெல்லாம் நீங்க, உமக்கு நற்குணங்களோங்க, இகவெண்ணெங்களெல்லா மோங் கப், பாவங்களை யெல்லாம் வாங்க, ஆனந்தத்திற் ருங்கச்செய்ய வந்தார்கள். இப்பேர்க்கொத்த மகானுபாவர்களைச் சஞ்சாரசமாதி செய்யாமல் இச்சையானவிடத்திற்கேகாமல் நெடுநாளாகத் திரு டரைச் சிறைச்சாலையி லடைத்ததுபோலவும், விபசாரமங்கையை வெளியில் விடாததைப்போலவும், யானையைக் குழியிற் றள்ளி வைத்ததைப்போலவும், புலியைக் கூண்டி லடைத்ததைப்போல வும், மேடையில் வைத்திருப்பதால் சஞ்சார சமாதிக்குத் தடை யாயிற்றென்றும் ஏகாந்தமாயிருப்பதற்கு இல்லாமற் போயிற்றே யென்றும் வாட்டமடைந் திருப்பார்கள். ஆதலால், அவர்களுக்

குத் தேவையான திரவிய முதலானதுகளைக் கொடுத்தனுப்பி விடும்'' எனத் திருவாய்மலர்ந்தருளினர்.

ஏந்தல் ''ஓ ஸ்வாமி! நிஷ்காமி பெரியோர்கள் தங்கள் உடல்மேலிருக்கும் அவாவையும் அகற்றித் தன்னை மறந்திருக் குஞ் சீலர்களாயிற்றே; அவர்களுக்கு உயிர்க்கொல்லியின்மேல் இச்சையிருக்குமா? திரவிய வாஞ்சையுள்ளோரை ஞானிகளெ ன்று சொல்லக்கூடுமோ?'' என்று சங்கைசெய்தார். ஜெயதேவர், ''ஓ கோமானே! தருமகுணத்திற் சிறந்த சீமானே! மலைகளையெல் லாம் பொன்னுக்கும் வல்லமையுள்ளவராயும், சமுத்திரத்தை யுண்டு கலசத்திலடைத்தவராயும், வாதாபி சீரணுபியெனப் புகன் றவராயும், கும்பத்திலுதித்தவராயும் தாருகாவனத்து ரிஷிகளை வென்றவராகியும், விளங்காநின்ற அகஸ்தியமுனிவர் ஓர் பெண் ணாசையால் அரசர் அநேகரிடமலைந்து திரவியத்தைச் சம்பா தித்தார். ஜனகர் யாகஞ்செய்து அளவற்ற திரவியமும் அநேக பசுக்களையும், ஞானியாய் ரிஷியாயிருப்பவருக்குக் கொடுப்பேன்'' என்று பறைசாற்றிவைக்க, அது தெரிந்து மைத்திரி மூடை யென்னும் இருமனைவியர்களின் வாஞ்சை நீங்க யாக்யவர்க்க ரென்பவர் பூரணக்ஞானியுமல்லாமல் ரிஷிசிரேஷ்டன் நானென் பதுண்மை யல்லவோ? ஆதலால் இத்திரவியக் குவையலும் கோகூட்டமும் எனக்குத் தத்தஞ்செய்யும் என்று கையேந்தி, அவ்விறைவனிடம் பெற்றுக்கொள்ளவில்லையா? இவர்கள் இச் சித்தது மாத்திரந்தொல்லையா? யாரார் பிராலப்த மெப்படியிருக் கின்றதோ நமக்குத் தெரியுமா? யார் எதை யிச்சித்தார்களோ அது தன்னிட மிருக்குமாயின் க்ஷணமே பக்ஷமுட னளிப்பவ னல்லவோ உத்தம புருஷனெனச் சொல்லப்படும். இதற்குத் திருஷ்டாந்தம் ததீசிமகாரிஷி-கர்னன் - ரகுராஜன்-அரிச்சந்தி ரன் முதலானவர்களேயாம். ஆதலால் இல்லையெனக் கேட்ப வர்க்கு இல்லை யென்னுமற் கொடுத்தனுப்புவதே ஐஸ்வரிய முடைய விவேகிகட்கு அழகல்லாமல் க்ஞானிகளருத்தத்தை ஆசிப்பார்களா? என்று உத்தமனாகிய நீ சங்கைசெய்யலாகாது. பிறர் குற்றத்தை நாடாதவர்களே பெரியோர்களென்று உரைக் கத்தகும். ஆதலின் என்வாக்கை மறுக்காமல் இச்சாதுக்களுக்கு அளவற்ற கனகந் தந்து அனுப்பிவிடும். ஏனெனின் பிராம ணர்-யாசகர்-கவீசுவரர்-யாத்திரைவாசிகள்-அங்கவீனர் ஏழைய ராகிய இவர்கட்கே தானஞ்செய்ய வேண்டுமென்றும், அதிலுந் தன்னையறிந்து நிஷ்டாசாதனஞ் செய்வோர்க்கு இரணிய முத

லானதளித்துச் சமாதிக்குத் தடைவராமல் அனுகூலஞ் செய்தலே ராஜசூயத்துக்கு மேன்மையான உத்தமதானமென்றும் சொல்லப்படும். பெரியோர்களுக்கு ஓர் பிடியமுதளித்தால் பிரமானந்தத்தைக் கொடுக்குமென்று ஆரணம் முறையிடுகின்றது. ஆதலால் இச்சாதுக்களுக்கு ஏமமளிப்பீரேல் தன்யனுவதற்கு ஓர் தடையில்லை" எனச் சாற்றினர். மண்டலீகன் மாறுத்தரவொன்றுஞ் சொல்லாமல் ஆசிரியர் அடிகளிற் பணிந்து சாதுக்களிடம் போய் யானை குதிரை ஒட்டகங்களை யழைப்பித்து அவற்றின்மேல் திரவியத்தை யேற்றிச் சாதுக்களைப்போற்றித் தண்டிகைகளில் வீற்றிருக்கச்செய்து அவர்களின் மனக்கோட்டதைக் கொய்துக் காவலரை நோக்கி "ஓ ஏவலாளர்களே! இந்தச் சாதுக்கள் எத்திசையிற்போக வெண்ணங் கொள்கிறார்களோ அத்திசையிற் கொண்டுபோய் யானை முதலான திரவியத்தை இவர்களுக்கு ஒப்பித்து வாருங்கள்" என்று ஆக்கியாபித்தான்.

காவலர் மகாபாக்கியமென்று பட்டணத்திலிருந்து வெளிப்பட்டுச் சாதுக்களை நோக்கி, "ஓ ஸ்வாமிகளே! தாங்கள் எத்திசையிற் போகவேண்டும்?" என்று வணங்கினர்கள். அதற்குக் கள்ளஞானிகள் காட்டைக்காட்ட, 'மகாபாக்கியம்' என்று காட்டிற் கொண்டுபோய்த் தாங்கள் தவஞ்செய்யுமிடம் ஏதென்று பணியக், கரவடர் மெள்ளவும் பேசாமலிருந்து போய் நாட்டுக்கரசன் யானை, காட்டுக்குத் திருடர் யானையென்பதுபோலக் காலாட்களைச் சட்டைசெய்யாமல் வாய்விட்டிறைந்து, "ஓ ஏவலாளர்களே! இவ்விடத்திலேயே நாங்களிருப்பவர்கள். ஆதலால் இங்கேயே திரவியங்களைக்கொட்டி யானை முதலானதுகளையுங் கட்டிப்போய்விடுங்கள்" என்று அதட்டினர்கள். அதற்குப் பணியாளர் அச்சமுற்றவர்களாய், "ஓ புனிதர்களே! உங்களை ஓர் வார்த்தை கேட்க விருப்பங்கொண்டோம்; உத்தரவானுல் விண்ணப்பஞ் செய்துக்கொள்ளுகிறோம்" என்று வணங்கினர்கள். கள்ளச்சாதுக்கள் மெள்ளப்பேசாமல் குயில் தான் பறக்கச் சக்திவருமட்டும் மௌனமாயிருந்து சக்தி வந்ததே ஓடிப்போகும் பாவனைபோல் ஒரு பேச்சும் பேசாமலிருந்துபோய்ப் பாசாங்கை விட்டுக் கூசாமல், "அடா துஷ்டர்களே! ஏவல்செய்யும் பிரஷ்டர்களே! என்ன கேட்கவேண்டியதோ சீக்கிரங் கேளுங்களடா?" என்றுரைத்தார்கள். தொழும்பர், "ஓ சீலர்களே! நீங்கள் இதுநாள் பரியந்தம் மௌனமாயிருந்தது என்ன காரணம்?

அன்றி ஜெயதேவர் உங்களைக் கண்டவுடன் மரியாதையோடு வந்தனஞ் செய்து வைபவத்துடன் வெகுநாள் வைத்திருந்து அளவற்ற திரவியங் கொடுத்தனுப்பும்படியான காரணமேதோ? உங்களை அவர் முன்னமறிந்திருந்தாரோ? உங்களுக்கும் அவர்க்கும் முன்னம் ஏதாவது தொந்தார்த்தமுண்டோ? சற்றே கிருபை கூர்ந்து தெரியப்படுத்துங்கள்" எனப் பணிந்தார்கள். அதற்கு அவ்வசடர் 'கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே' என்கிற பழமொழிப்படி தாங்களே தங்களுக்குக் கேடுதேடிக் கொள்ள, "ஓ சேவகரே! இப்போது ஜெயதேவ் என்று பேர் பெற்றுக் கூசாமற் பாசாங்குபண்ணி எல்லாராலும் பணிவிடை வாங்கிக்கொள்ளும் வஞ்சகன், கடின நெஞ்சகன் இப்படியே முன்பு ஓர் அரசனிடம் தான் மகா ஞானவானென்று வெகுநாள் மௌனமாயிருந்து சமயம் பார்த்துச் சிலரத்தினங்களைத் திருடிக் கொண்டு வஞ்சித்துப் போகக்கண்டு இராஜன் முனிவுகொண்டு உண்டவீட்டிற் கிரண்டகஞ்செய்த இக்கண்டகனை இரண்டாக வெட்டி அத்துண்டங்களைக் கோட்டைவாயலில் எதிரில் கட்டி வையுங்கள் என்று சேவகராகிய எங்களுக்குத் திட்டஞ் செய்தான். நாங்கள் தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்க்க வெண்ணி இவனை இக்காட்டிற் கொண்டுவந்து கைகால்களை மாத்திரம் வெட்டி ஓர் பாழுங்கிணற்றில் தள்ளி இராஜன்பாற் போகப் பயப்பட்டு எல்லாவற்றிலுந் தவமே மேலானதென்று உலகாசையை வெறுத்துப் பலதேசங்களில் உழன்று உங்களுடைய பட்டணத்திற்கு வந்து மேடையினுட்போக ஜெயதேவென்கிறவர் ஓ! ஓ! நம்மைத் தண்டித்தவர்களும் கண்டித்தவர்களும் வந்துவிட்டார்களே? இனி நமது சூது வெளிப் படப் போகுதென்று பலவந்தமாய் அழைத்துப் பல வுபசாரங்கள் செய்து தன்சூதை வெளிவிடாமலடக்கி எங்கும்போகாமல் மடக்கி இவ்வளவு திரவியங்களைக் கொடுத்தனுப்பினுன்" என்கிற பற்பல தூஷணவார்த்தைகள் உரைத்தனர்.

தக்ஷணம், பூமி படீலென வெடித்துக் கள்ளஞானிகளினுள்ளங் கலங்கிப் பூமியிலமிழ்ந்து பரமலோபிகளும் மிகுந்த கோபிகளும், பக்தர் முக்தர்களை நடுங்கச் செய்தவர்களும், பதைபதைக்க ஓர் சீவன் கழுத்தைக் கொய்தவர்களும், குருவை வெறுத்தவர்களும், குருவாக்கை மறுத்தவர்களும், தெய்வத்தை யிகழ்ந்தவர்களும், தீமைகள்செய்து மகிழ்ந்தவர்களும், பிறர்மனைவிகளை யிச்சித்தவர்களும், கோமாமிசத்தைப் பட்சித்தவர்களும், தேவால

யங்களை யிடித்தவர்களும், மடஞ் சத்திரங்களை இடித்தவர்களும், பொய்சொல்லிப் பிறரைக் கொல்வித்தவர்களும், ஜீவர்களை வதைத்தவர்களும், ஓர் குடியைக்கெடுக்க நினைத்த சூலைப்பாதகரும், இகவாசையால் இதரமதத்திற் பிரவேசித்த தோதகரும், இடுகின்றபேரை யிடாமற் கெடுத்தவர்களும், தவஞ்செய்வோரைத் தடுத்தவர்களும், குருவுபதேசத்தை மறந்தவர்களும், இயமநியமங்களைத் துறந்தவர்களும், நம்பிக்கைசொல்லிக் கொடாதவர்களும், அதிதிகளுக்கு அன்னமிடாதவர்களும், பத்தினிகளைப் பழித்தவர்களும், தூரவுதோப்புகளை யழித்தவர்களும், பிரமக்ஞானிகளை வைதவர்களும், பணிந்தவன்மேலம் பெய்தவர்களும், உத்தமர்களை தூஷித்தவர்களும், உலுத்தரைப் பூஷித்தவர்களும், குண்டினிவேலை செய்பவர்களும், கோட்சொல்லித்திரிபவர்களும், ஏழைகளை யெதிர்த்தவர்களும், இணங்குவோர்வாடக் குதித்தவர்களும், பதிவிரதைகளை யுதைத்தவர்களும், பரத்தையரைத் துதிப்பவர்களும், பெரியோர்வரவைக் கண்டு எழாதவர்களும், பிராமணர்களைத் தொழாதவர்களும் அடையும்படியான ரௌரவாதி நரகத்திற் பிரவேசித்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

கள்வர் பாதாளத்திலமிழ்ந்த அத்தியாயம்
முற்றிற்று.

---

ஏழாவது

## ஜெயதேவர் கள்ளரைக்காத்த அத்தியாயம்

கொல்லாமை, மெய்மைகூறல், கள்ளாமை, பிறர்பொருள் இச்சியாமை, இந்திரியமடக்கல் முதலான சற்குணங்களாற்செழித்த இயமநியமங்களைப் பாதுகாக்கும் சித்தர்களே! பரிசுத்தர்களே! இப்படி பூமி படீலென்று வெடித்து ஜெயதேவைத் தூஷித்தவேஷதாரிகள் தாத்திரியில் அமிழ்ந்துபோகவே, சேவகர் கிடுகிடென நடுநடுங்கிக்கொண்டு வந்தவைகளை யெல்லாம் அங்கேயே விட்டுவிட்டு தட்டுகெட்டுத் தடுமாறிக்கொண்டே மூலைக்கொருவராயோடி பட்டணத்தை நாடி ஓட்டமெடுத்து இராஜனை அடுத்து நடந்ததைச் சொல்லப் பயப்பட்டுத் தூஷணஞ்செய்ததை நினைத்துக் கண்ணீர்விட்டு அவ் வசனங்களைச்

சொல்லப் பின்னிட்டுப் பூமியிலமிழ்ந்தது சொல்ல முன்னிட்டு மற்றதைச் சொல்லத் தடைபட்டு ஊமைகளாய் நின்றார்கள். அவர்களைப் பார்த்த பார்த்திபன் மயங்கித் தயங்கி, "ஓ ஓ பெரியோர்களுக்கு என்னமோ குறைநேரிட்டதுபோற் றோன்றுகின்றது" என யோசித்து ஏவலாளர்மேற் கோபித்துத் துவேஷத்துடன் சாதுக்களுக்கு என்ன தீங்கடா செய்துவந்தீர்கள்? என்று அதட்டிக் கேட்கச் சேவகர் கள்ளசாதுக்களைக் காட்டிற் கொண்டுபோனதும் தாங்கள் அவர்களை வினவியதும், சுவாமிகளை அவர்கள் தூஷித்ததும், பூமியிற் பிரவேசித்ததும் சொல்லி முறையிட்டழத் தொடங்கினார்கள்.

அதற்கு இறைவன் வந்தவர்கள் துன்மார்க்கர்; அவர்க்கு உபசாரஞ் செய்தவர் எவ்வளவு சன்மார்க்கர்; எனப் பலவிதங்களா யோசித்துச் சோரரைத் தூஷித்துச் சுவாமிகளைப் பூசித்து அவரைப் பார்க்க ஆசித்து ஜெயதேவ ஸ்வாமிகளிடம்போய் வந்தனஞ் செய்து, "ஓ என்னுண்டவனே! நாம் அநேக நாள் வைத்துப் பூசித்து அனுப்பிய பாதகர் பாதாளத்தில் அமிழ்ந்ததைக் கேட்டீர்களோ?" என்று ஆதியோடந்தமாய்ச் சகலமும் உரைத்துப் புரையோரைத் தூஷிக்கத் தொடங்கினர். அது கேட்ட ஜெயதேவர் "ராமராமா! பரமசாதுக்களைத் தூஷிக்கலாமா! துவேஷிக்கப் போமா! அவர்களுரைத்த வாக்கியங்களெல்லாஞ் சத்தியமேயாம். அவ்வளவு உபகாரஞ்செய்த புண்ணியவான்களானபடியினாலே பூமி யிடங்கொடுத்தது; மகா பதிவிரதையான சீதாபிராட்டிக்கு இணையானவர்கள். ஆதலால் பிருதிவியிடங்கொடுத்துச் சமாதி யடைந்தார்கள். உண்மையாயவர்கள் என்னைக் காத்தவர்கள்தான். ஆதலால் அவர்களைத் தூஷிக்கலாகாது. என்னைப்போன்ற பாவிகட்குத் தாலம் இடங்கொடுக்குமா? துன்மார்க்கர்களுக்கு இப்பேர்க்கொத்த பேர் கிடைக்குமா? ஓ இறைவனே! துஷ்டர்களையும் நிந்திக்கலாகாது. துவேஷியே பாவஞ்செய்வதில் விசேஷியெனப் பெரியோர்கள் உரைக்கின்றார்கள். தான் நைந்தாலும் பிறரை நிந்தை செய்யக் கூடாதென்று சாஸ்திரம் முறையிடுகின்றது. ஒருவரைத் தூஷிப்பவனே உலுத்தரிற் சிறந்த மகாலுத்தனென்று சொல்லப்படும். அப்படியிருக்க இப்படிப் பேசலாமோ? வந்தனஞ் செய்யத் தகுந்தவரை நிந்தை செய்யப்போமா? மேலானவர்களைத் தூஷித்த பாவம் நம்மைவிட்டுப்போமா? ஆ! ஆ! என்னைக் காத்து இரக்ஷித்த சாதுக்கள் தராதலத்திலமிழ்ந்து

போனார்களா? அந்தோ! நானிதற்கென்ன செய்யட்டும்'' என்று பிரலாபிக்கத் தொடங்கினர்.

அப்போதண்ணல், ஜெயதேவ ஸ்வாமிகளுக்கு இருக்கும் ஜீவகாருண்யத்தைக் குறித்து வியந்து, "ஓ ஸ்வாமி! அந்தச் சாதுக்கள் பாதலத்தில் அமிழ்ந்தவிடத்தைப் பார்க்க வாஞ்சித்தேன். ஆதலால் தேவரீரும் அங்கு எழுந்தருளல் வேண்டும்'' என வணங்க; ஆரியர் ஆ! ஆ! புண்ணியவான்கள் சமாதியான விடமே பரமபதமெனச் சொல்லத்தகும். ஆதலால் அகத்தியம் அவ்விடத்தைப்போய்த் தரிசிக்க வேண்டியதுதான். இது காரியத்திற்காகத் தடையுண்டோ? சீக்கிரம் பிரயாணப்படுமென்று நவில, அரையன் சந்தோஷசித்தனுப் சதுரங்க சேனைகள் சூழத் தானும் ஸ்வாமிகளும் ரதாரூடர்களாய்க் கானகமடைந்து அங்குப் பூமி கிடுகிடு பாதாளமாய்ப் பிளந்திருப்பதைக் கண்டு ஆச்சரியங்கொண்டு அப்பிளப்புக்கு அருகில் ஜெயதேவர் வீழ்ந்திருந்த பாழுங்கிணற்றைப் பார்த்து, ஐயோ! பாவிகள் நமது ஸ்வாமிகளின் கால் கைகளை வெட்டின ரணபூமியே கொலைபாதகரைக் கொள்ளைகொண்டது. ஆ! ஆ நமது ஸ்வாமிகளை சோரர் சூழ்ந்து கரங் கால்களைக் கண்டித்தபோது எவ்வளவு துயரமடைந்தாரோ? கிணற்றி லெறியும்போதெவ்வளவு மனமிடைந்தாரோ? எல்லா நீதிகள் தெரிந்திருந்தும் திருடரென்றறிந்தும் அன்புடன் வைத்திருந்தோமே; உபசாரத்தோடு பூசித்தோமே என்கிற பலபல எண்ணங்களோடும் இருக்கையில் ஜெயதேவர் கள்வர் பூமியில் அமிழ்ந்ததற்காக மிகவுந் துக்கித்து, "ஓ கர்த்தனே! பரிசுத்தனே! பரமசாதுக்களைப்பாரி லமிழ்த்தலாமா? மகா பாவியேனுவி இனியிருத்தலாமா? நீ கருணாகரனென்பது கட்டுக்கதையே யல்லவா? இத்தனை நாளாய்ச் செய்துவந்த தவம் பாழாய்ப் போச்சே. இனி யிவ்வுடலோடிருத்த லீனமான யேச்சே. ரௌரவாதி நரகத்துக் குட்படலாச்சே. சந்திர சூரியர்களிருக்கிற பரியந்தம் நகைக்கிடமான பேச்சே'' என்று அனந்தவித வார்த்தைகள் உரைத்துக்கொண்டே ரதத்தின்மேலிருந்து பூமியில் விழுந்து கடகடவென்று உருண்டு கற்களிலும் முட்களிலும் புரண்டு தேகமெல்லா முராய்ந்து தேய்ந்து இரத்தப்பிரவாகத்தில் நனைந்து மூர்ச்சையாயிருந்து உடனே தெளிந்து, "ஓ பரமசாதுக்களே! பரப்பிரமஞானிகளே! நீங்கள் அமிழ்ந்த இப்பாதலத்தில் நானும் விழுந்து உம்மைத் தரிசிக்க இதோ வந்தேன் வந்தேன்'' என்று உருண்டுக்

கொண்டே பிளப்புக்கருகிற் போகையில், அதையறிந்த இறைவன் அதிசீக்கிரமாயோடிப் பாதாளத்தில் விழாமற் பிடித்துக் கொண்டு இதுவென்ன விபரீதம்! இதுவென்னவபவாதம்! இதுவென்ன பாபம்! இதுவென்ன கோபம்! இதுவென்ன கோரம்! என்று அவருடைய வயிற்றிற் றன் தலையை வைத்துக்கொண்டு தாரைதாரையாய்க் கண்ணீர்வடிய அழத் தொடங்கினர்.

அப்போது ஜெயதேவர், "ஓ அரசனே! இவ்வேளையில் என்னை மறுக்கவேண்டாம் வேண்டாம்" என்று தலையைத் தரையிற் பலதரம் மோதிக்கொண்டார். மத்தகத்திற் கற்கள் பொத்துக்கொண்டு இரத்தம் புறப்பட்டு, இராஜனை இரத்தமயமாக்கி விட்டது. அப்போது இராஜன் மந்திரி பிரதானிகளை நோக்கி, "ஓ சீலர்களே! என் ஆண்டவனை அசையாமற் பிடித்துக்கொள்ளுங்கள்" என்று கூக்குரலிட்டு அழத்தொடங்கினன். அப்போது மந்திரி பிரதானிகள் இதுவென்ன விபரீதகாலமென்று ஜெயதேவஸ்வாமிகளின் தேகமும் சிரசும் அசையாமல் பிடித்துக்கொண்டார்கள். அதற்குத் தேசிகர், "ஓ மந்திரி பிரதானிகளே! வீணாய் என்னை ஏன் வியாகுலத்தில் அமிழ்த்துகிறீர்கள்? என் வாக்கும் எண்ணமும் ஒன்றேயன்றி இரண்டல்ல. இனிமேல் நான் பிராணனோடு யிருப்பதே வபத்தம்" என்று உரைத்துக் கைகால்களைத் திமிறிப் பிடுங்கிக்கொள்ள எத்தனப்பட்டு அவயவங்களிலுள்ள எலும்புகள் நறநறவென்று முறியும்படியாகச் செய்துக்கொண்டார். அதையறிந்த இராஜன் துக்கம் மேலிட்டு தனது இஷ்டதெய்வமாகிய பரமேசுவரனை நினைத்து கண்ணீரால் நனைந்து, ஓ பரமேஸ்வரா! ஜகதீஸ்வரா! கருணாகரா! சுகசாகரா! இவரிறக்கும் பாவம் என்மட்டிற் போகுமா? இவருடைய வைராக்கியத்தை நீக்க என்னலாகுமா? ஐயோ! நிந்தைக்குள்ளாய்ப் போனேனே! நாட்டிலிருந்தவரைக் காட்டிற்கொண்டுவந்து கொல்லத் துணிந்தேனே! தனித்து வாராமற் போனேனே! இவருக்கு நானே எமனானேனே!" என்று பலபல விதங்களாகப் பிரலாபித்து ஆரியரை நோக்கி, "ஓ ஸ்வாமி! உம்முயிர் நீங்குமுன் என்னுயிரை விட்டு விடுகிறேன் பாரும்" என்று அப்பாதலத்தில் விழப்போனர். உடனே ஏவலாளர் அரசனை விழாமற் பிடித்துக்கொண்டு அனைவரும் இதுவென்ன கொடுமையென்று ஓலமிட்டு அழத்தொடங்கினர்கள். அப்போது இறைவன் தொழும்பர்மேல் அதிக கோபங் கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு ஜெயதேவஸ்வாமி

கள் ரத்தத்தால் நனைந்திருப்பதைப்பார்க்கத் துன்பமேலிட்டு ஓவென்று புலம்பத் தொடங்கினர். அப்போது ஜெயதேவர் பாவியாகிய என்னால் பரமசாதுக்கள் பாரில் அமிழ்ந்திப்போனார் கள். அரசனும் உயிர்விடத் துணிந்தான். இனி இக்கொடிய தேகமிருந்தால் வெகு குற்றங்களுக்கு இடமுண்டாகும் என்று தலையைத் திமிறிப் பிடுங்கிக்கொண்டு பூமியில் மோதிச் சாவுக் கிணையான மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டார். அதையறிந்த பார்த் திபன் ஆரியர் மடிந்தாரென்று தீர்மானித்து, ஓ! ஓ! என் ஆண் டவன் மரணமடைந்தாரா? இனி நானென்ன செய்யட்டும்? ஓ கர்த்தனே! பரிசுத்தனே! ஜடாதரனே! கங்காதரனே! நிடலா க்ஷனே! நீலகண்டனே! உமைபாகனே! லோகநாயகனே! கபால பாணியே! கைலாசவாசனே! சுயம்பிரகாசனே! எனத் துதித்து, ஆயாசமேலீட்டால் மூர்ச்சையாய் அடியற்றபனைபோல் நிலத் திற் சாய்ந்துவிட்டார். அப்போது மந்திரி பிரதானிகள்முதல் சகலரும், ஓ! ஓ! இராஜனும் இறந்துவிட்டார்போற் றேன்று கிறதென்று ஜெயதேவஸ்வாமிகளினருகிற் கிடத்திக் கோவெ ன்று அழத் தொடங்கினர்கள். அவ்வோசையால் இராஜன் மூர்ச்சை தெளிந்து ஜெயதேவஸ்வாமிகளைப் பார்த்து மார் புடன் சேர்த்து, "ஓ என் சத்குருநாதனே! மெய்ஞ்ஞான போதனே! என்னைவிட்டுப் பிரிந்தீரோ! என்னைப் பிரியவும் உமக்கு மனம் வந்ததோ! இனியும்மை எப்பிறப்பிற் காணப் போகிறேன்! ஐயோ! நீர் மரித்த சங்கதி என்தாயாகிய பத் மாவதி கேட்டால் உயிருடனிருப்பாளா! அரைநிமை பொறுப் பாளா! என்னவென்று சொல்வேன். எவ்விதமாகத் துயரத்தை யாற்றுவேன். ஆ! ஆ! இனி யிவ்வுடலோடிருப்பேனா? இருந் துயிர் தரிப்பேனா? என் தாயின்முன் போவதைப் பார்க்கிலும் உமது சரணாரவிந்தத்தி னண்டையிலே மரணமடைகிறேன்" என்று ஜெயதேவைப் போலவே மத்தகத்தைத் தரையில் மோதிக் கொள்ளப்போனார். உடனே மந்திரி பிரதானிகள் அரசனை யசையாமற் பிடித்துக் கொண்டார்கள். இராஜனோ அந்தோ! இந்த வேளையில் என்னை ஆதரிப்பார் யாரு மில்லையே! ஐயோ தொல்லையே! குருவைக்கொன்ற கொடும் பாவியாகிய வெனக்கென்ன கெதியுண்டாகுமோ! இப்படி வரு மென்று அறியாமற் போனேனே! நரகத்துக்குள்ளானேனே! என்று தனது இஷ்ட தெய்வமாகிய பரமேஸ்வரனைத் தோத் திரஞ்செய்யத் தொடங்கினர்.

## பாடல் தேவாரம் சிவதுதி



திருவரு ளுருவேதிவ்ய தெளிவருட் குருவேயுன்றன்
சரணமே கெதியென்றெண்ணிச் சத்குரு பஜனைபண்ணிப்
பெருமையாய் வாழ்ந்திட்போது பெரும்பழிக் காளாய்நின்றேன்
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 1

அரியய னமரர்போற்று மனுதியே யாதியேயுன்
கருணையாற் குறையொன்றின்றிக் காசினி புரந்திப்போது
சிரமையிற் புகுந்தேனையா செய்வதொன் றறியேன்துய்யா
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 2

திரிபுரந் தனையெரித்த சிவபெரு மானேயுன்னைப்
பிரியமா நினையாதென்றும் பிழைகளே செய்திப்போதில்
உரிமையா யுனைப்பாராட்டி யுளங்குழைந் தழைக்கின்றேனே
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 3

சிரந்தச முடையோனென்று தேவியைக் கேட்கவன்பா
யுரிமையோ டவனுக்கீந்த வுதாரசத் குணனேயுன்றன்
தரிசனந் தாராதின்னந் தாமஞ் செய்யலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 4

தரமறி யாமலுன்னைச் சமரினுக் கழைத்ததீய
கருவவா ணன்றன்வாயில் காத்தகா ருண்யமூர்த்தி
அருமையோ டழைக்குமென்மே லருள்செயா திருக்கலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 5

பரமனே பரசுபாணி பத்மாசுரன் முன்கேட்ட
வரமளித் தவன்றுரத்த வாடியோ டியபூங்காலாய்
குருதுரோ கியும்பிழைத்திக் குவலயத் திருக்கலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 6

மிருகண்ட ரிஷிசேய்காலன் வேதனைக் காற்றுதுன்னைப்
பிரியமாய்த் துதித்தபோதே பெருவய தளித்தாட்கொண்ட
கருணையங் கடலேயென்னைக் காத்திடா திருக்கலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 7

அருளுப மன்னியர்க்கா யமிர்தசா கரமளித்த
பெருமையென் னென்றுசொல்வேன் பிஞ்ஞகா பினகபாணி
திருவுள மிரங்காயேலென் சிரமிதோ தருவேன்மெய்யா
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 8

*சுரராக் கருங்கடைந்த சுதைததி யினிலெழுந்த*
*காளமுண் டவனேநீல கண்டனே கபாலமூர்த்தி*
*யொருவா தரவிலாம லுனதடைக் கலம்புகுந்தேன்*
*அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா.* 9

*அருமறைப் பொருளேயென்ற ஞவியே யடியேனிந்தத்*
*தரணியிற் பிறந்தடைந்த சஞ்சல மெவர்க்குச்சொல்வேன்*
*தருணமே யாட்கொள்ளாமற் றடைசெயி னுயிர்நில்லாது*
*அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா.* 10

என்று இவ்விதமாகத் தோத்திரஞ்செய்யும்போது கைலாசவாசராகிய பரமசிவனுர் இராஜனுடைய அலங்கோலத்தையும், ஜெயதேவஸ்வாமிகளின் ஜீவகாருண்ணியத்தையுந் திருவுளத்தறிந்து ரிஷபவாகனரூடராய்ப் பார்வதி சமேதராய்த் தேவ கணங்களும் பூதகணங்களும் சூழ, இராஜன்பாலடைந்து, "ஓ என் அருமைப்பாலனே! திவ்யகுணசீலனே! உனக்குவேண்டிய வரமேதோ அதைத் தந்தோம் சீக்கிரங்கேளப்பா" என்று திருவாய்மலர்ந் தருளும்போது, பார்த்திபன் பரமசிவனுர் பாதத்திற் சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டெழுந்து நின்று, "ஓ என் தெய்வமே! உம்மையும் பார்க்கும்படியான பாக்கியஞ் செய்தேனே! இப்பாவியின்முன்னும் பிரசன்னமானீரோ! என்னையும் ஒருபொருளாக நினைத்துவந்தீரோ! அரிதான சேவையுந் தந்தீரோ! என்முன் வருவதற்கு முவந்தீரோ! உம்மைத் தரிசிக்கும்படியான தபமொன்றுஞ் செய்யவில்லையே! செய்ததெல்லாந் தொல்லையே! உம்மையன்றி வேறு துணையில்லையே! நீர் வந்தும் என் ஆண்டவன் உயிர்பெற்றெழவில்லையே! நான் சத்குருநாதனைக்கொன்ற பாவியாச்சுதே! என் ஆண்டவனுயிர் பிரிந்து போச்சுதே! தீராப்பழிக்காளாய் விட்டேனே! குருவைக்கொல்லவு முட்பட்டேனே! ஆ கெட்டேனே! இதற்காகவே உமக்கு முறையிட்டேனே! சீக்கிரம் என் குருஸ்வாமிகளை எழுப்பலாகாதோ? எழுப்பாவிடில் என் உயிர் பிரிந்து போகாதோ" எனப் பலபல விதங்களாகப் பிரலாபித்தான்.

அப்போது கங்காதரன், "ஓ பாலனே! ஜெயதேவ் இறந்துவிட்டாரென்றோ நினைத்தாய். எவ்வளவுசூது கபடநாடகனுகிய பகவானிடத்திருக்கின்றதோ அவ்வளவுதந்திரம் அவர் பக்தர்களிடத்திலு மிருக்குமென்று அறிந்துக்கொள்வாய். இப்போது உம்முடைய ஆரியர் தன்சுவாசத்தை பிர்மரந்தரத்திலேற்றி இத்தேகத்தின்மேல் நிராசையாகி இப்பாதலத்தி லெறிந்து

விட்டுப் போகும்படியான யுக்திசெய்து, பிர்மானந்தத்தில் ஐக்கியப்பட்டிருக்கின்றூர், நீ அந்தச்சூது தெரிந்துக்கொள்ளக் கூடாமல் துக்கசாகரத்தில் மூழ்கி மரணமடைய நினைத்தாய். இனி வியாகுலப்படாதே; தைரியம்விடாதே" என்று அரசனை மார்பிறுகத் தழுவிப் பலபல அன்பான வார்த்தைகளாடினூர்.

அப்போது பூபாலன் சிவபெருமானை நோக்கி, "சர்ப்பாபரணம்பூண்டு மான் மழு சூலமேந்திய கையனே! தேகமெங்கும் விபூதி தூளிதந்தரித்த மெய்யனே! சகல பிராணிகளையுங் காத்து ரக்ஷிக்குந் துய்யனே! அடியேனுக்குண்டாகிய இடரைத் தீர்த்து ஆட்கொள்ள வெழுந்தருளிய எனது ஐயனே! சாக்கிரதை - சொப்பனம் - சுழுத்தி - துரியம் - துரியாதீதம் என்னும் இவ்வைந்து அவஸ்தைகளையும் சகல ஜீவர்களுக்கும் பொதுவேயாகும். இந்த ஐந்தவஸ்தைகளையும் சத்குருநாதன் முன்னிலையில் நன்ருய் விசாரித்தறிந்து ஞானமார்க்கந் தெரிந்து, அந்த ஞானத்தால் பத்தியும் சித்தியும் வைராக்கியமும் யோக்கியமும் சூக்ஷமான தியானமும் மோனமும் அணுமுதல் பிரமாண்டபரியந்தம் பிரமமே நிறைந்திருக்கிறதென்றும், அப்பரிபூரணமாகிய பிரமத்தைவிட நானென்பது இல்லையென்றும், என்றும் அழியாமலிருப்பது பிரமமென்றும், நானென்னும் அப்பாவத்தையும், எனதென்னும் மமபாவத்தையும் தலையெடுக்காமல் தவளையையுண்ணும் சர்பத்தைப்போலப் புசித்துப் பூரண வைராக்கிய மடைவது கானற்சலத்துக் கிணையான பிரபஞ்சத்தை சுத்தமாய் மித்தையென்றுன்னி, ஸ்திரீகள் முதலான போகங்களைக் காகங்களின் எச்சத்தைப்போ லெண்ணி மனதிற் ருேன்றும் நினைவுகளை யெல்லாம் மாய்த்துக் காம குரோத லோப மோக மத மாச்சரியங்களென்னும் ஆறு கள்வரையும் அடியோடு வெட்டிச் சாய்த்து, குடும்பத்தை விர்த்தி செய்ய வேண்டுமென்கிற மனேவிச்சையைத் தேய்த்து, ஆனந்த சமுத்திரத்தில் கருவி கரணுதிகளைத் தோய்த்துத், தன்னை யறிந்து பிரமமாத்திரமாயிருக்கும் எதார்த்த வைராக்கியத்தையு மடைந்து ஆசாரியர்மீது அதிகப் பிரியமுடையவராய், எப்போதுஞ் சாதுக்கள் கூட்டத்தை விடாமற் ருெடர்ந்து சதாகாலமும் நானே பிரமமென்று மௌனம் பண்ணுபவரும், சரீரபாவனையை நீக்கிச் சங்கல்ப விகல்பங்களைப் போக்கிப் பாமரத்தைத் தூளாக்கி அகமுகத்திற் பரப்பிரமத்தை நோக்கித் தன்னைப் பிரமத்திற்குள் ஐக்கியமாக்கி நிர்விகல்பராய் அகண்டானந்த நிரா

மயமான சத்பாவவைராக்கியமும் அபாவவைராக்கியமும் ஸ்தாபனவைராக்கியமும் திடவைராக்கியமும் சம்மதவைராக்கியமும் விசாரவைராக்கியமும் நிர்வாண வைராக்கியமும் மகா வைராக்கியத்தையும் அடைந்த எமது குருசாமிகளாகிய ஜெயதேவ சுவாமிகள் கைகால்கள் வெட்டுப்பட்டுப் போவதற்கு முன்ஜென்மத்தில் என்ன பாவம் செய்தனரோ? இம்மகாத்துமாவுக்கு இப்படிப்பட்ட சங்கடம் வந்து நேரிடுவதற்குக் காரணமேதோ? அதைச் சங்கைதீர திருவாய்மலர்ந்தருளவேண்டும்" என்று தொழுது நிற்கும் நாபாலனைநோக்கி கரைமிடற்றண்ணல் புன்சிரிப்புடன் சொல்லத் தொடங்கினர்.

கேளும் "அரசனே! கர்மமானது மூவரையும் தேவரையும் மற்றியாவரையும் விட்டதல்ல. இந்த ஜெயதேவர் எந்த கர்மத்தை யனுட்டித்து கால் கரங்கள் வெட்டுண்டாரெனில்? முற்பிறப்பில் இவர் பராசமுனிவருக்கும் பரிமளகந்திக்கும் பிறந்து வியாசரென்று பேர்பெற்று பல மதங்களை ஏற்படுத்திக் கட்டுபாடுசெய்து முடிவில் கங்கையிலிரங்கி கரங்களை உயரத்தூக்கி நாராயணனே பானென்று மூன்றுதாஞ் சத்தியஞ் செய்தபடியால், கால்கள் ஜலத்தில் எவ்வளவு மூழ்கியிருந்ததோ அதுவரையிலும் கரங்கள் முழங்கைவரையிலும் கள்வர் வெட்டினர்கள். மேலும் இவர் சகலசாஸ்திர சம்பன்னராக இருந்தும், ஏகமூர்த்தி திரிமூர்த்திகளானதை யறிந்திருந்தும் பிரிவுசெய்யத் தகுமோ? அக்கருமத்தினலே இவர்க்குக் கைகால்கள் துண்டிக்கப்பட்டார்" என்று சொல்லி ஜெயதேவ் மஸ்தகத்தின்மீது தனது திவ்ய அஸ்தத்தை வைத்து, "ஓ ஜெயதேவ்! உன் கண்களைத் திறந்து அரசனைப் பார்த்து துக்கத்தை நீக்கலாகாதோ? சூதுசெய்து பூமியில் வீழ்ந்திருப்பதழகோ? பிரமஞானியாகிய உம்மையண்டின சகலரும் பிர்மானந்தத்தில் ரமித்திருக்கவேண்டுமேயன்றித் துக்கத்தையடையக்கூடுமோ? ஓ சீமானே! வீணுய் ஏன் உம்முடைய உயிரைவிடத் துணிகிறீர்? வேண்டாம்; சீக்கிரம் எழுந்து தேவையான வரங் கேட்டுக்கொள்ளும்" என்று அஸ்தமஸ்த சையோகஞ் செய்தமாத்திரத்தில் ஜெயதேவ் தேகவாதைகளும் மனேபாதைகளுந் தீர்ந்து களிகூர்ந்து நித்திரைவிட்டு எழுந்தவர்போ லெழுந்து பரமேசுவரன் பாதங்களின்மேல் விழுந்து, "ஓ என்னுண்டவனே! முத்துத்தாண்டவனே! கள்வரைக் காத்து இரக்ஷிப்பதே எனக்குத் தேவையான வரம்" என்று வணங்கக் கைலாசபதி, "ஓ ஜெயதேவ்! உமது கைகால்

களைக் கண்டித்தவர்களுக்கு என் பதவியைக்கொடுத்தேன். இதிற் சந்தேகமில்லை. அவர்களைக்குறித்து ஆயாசப்படவேண்டாம். கள்வர் காசினியிலமிழ்ந்தது உன்பொறுமையாலும் உன்மனைவியிட்ட சாபத்தாலுமேயாம். நீர் ஓர் தூஷணவார்த்தைச்சொல்லியிருப்பீராகில் சோரர் பாதலத்திலமிழ்ந்துப் போகமாட்டார்கள். உம்முடைய பூஷணமே அவர்களுக்கு எமபாசமாய் விட்டது. அன்று யாரார் செய்கைக ளெப்படியோ அப்படியே அவரவர்கள் இன்பதுன்பமடைவார்கள். அவரவர்கள் செய்கர்ம தர்மமே அவரவர்களுக்குத் துணையாயிருக்கும். உண்மை இப்படியிருக்க உம்மால் மாணமடைந்தார்களென நினைந்து உயிர்விடத் துணிந்தது விபரீதகுணமே. உம்மாலல்லவோ கொடும்பாவிகளான கள்வர்களுக்கு என் பதவியைக் கொடுக்கும்படியாய் நேரிட்டது'' என்று பரமசிவன் திருவாய்மலர்ந்தருளினர். ஜெயதேவ் அவர் திருவடிகளில் வணங்கி, "ஓ மகாதேவா! ஆதிதேவா! தேவதேவா! வாமதேவா! மகானுபாவா! பாவியேனுடைய மஸ்தகத்தின்மேல் உமது திவ்ய அஸ்தத்தை வைக்கும்படியான நற்காலமும் வந்ததோ! ஓ கர்த்தனே! ஆனந்த நிர்த்தனே! பாரிலமிழ்ந்த பரமசாதுக்கள் உன் பதவியை யடைந்தார்களோ ஆனந்தம். ஆனந்தம். அவர்கள் இப்பூமியிலமிழவும், நாங்களிங்குவரவும், இறைவன் உம்மைத் துதிக்கவும், தேவரீர் பிரசன்னமாகவும், எங்கள் குறைகள் நீங்கவும், மெய்ஞ்ஞானம் ஓங்கவும், நேரிட்ட சுபம் பாரிலமிழ்ந்த பரமசாதுக்களாலல்லவோ! தீயருக்கு உம்முடைய பதவி கிடைக்குமோ! ஆ! ஆ! அவர்கள்செய்த பாக்கியமே பாக்கியம்'' என்று சங்கரன் தாட்களிற்சூழ்ந்து ஆனந்த வாரியிலாழ்ந்து இன்பமேலீட்டாற் றன்னைமறந்து பலபலவிதங்களாகத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்.

அதற்குக் கருணாசாகரனை கங்காதரன் ஜெயதேவைநோக்கி, "ஓ ஜீவகாருண்ய விரதத்திற் சிறந்த ஜீவன்முக்தனே! ஓ அரிபக்தனே! நீர் பட்டணத்திற் பிரவேசித்த இரண்டு முகூர்த்தத்துக்குள் உமது கைகால்கள் தனக்குத்தானே வளரக்கடவது; ஸ்ரீமந் நாராயணரும் தரிசனந் தரக்கடவது; பின்பு ஆனந்தமாய் யாதொரு குறைவுமின்றி வாழக்கடவது; உமதுபேரைச் சிந்திப்பவர்களின் தீவினைகளகலக்கடவது'' என்று திருவாய்மலர்ந்தனர். பின்பு அரசனைநோக்கி, "ஓ என் அன்பனே! குருவை நம்பினோர்க்குக் குறைவுண்டோ? நீ குருபக்திசிகாமணியாதலால்

உனக்கு ஓர் குறையும் நேரிடாது; சுபமங்களமாக பிர்மானந்த வாரியில் மூழ்கி மோக்ஷலாபம் பெறுவாய்" என்று ஆசீர் வதித்து அந்தர்த்தானமானுர். தேவர்கள் பூமாரி பொழிந் தார்கள். தேவதுந்துபி தாம்தாமென்று முழங்கிற்று. ரிஷிகள் ஜெயதேவ் சாந்தகுணத்தைக் குறித்து வியந்து மிகவுமகிழ்ந்து இராஜனுடைய குருபக்திக்கு ஆச்சரியப்பட்டு மாச்சரியங் கெட்டு 'ஜெயவிஜயீபவா' என்று வாழ்த்தி மறைந்தார்கள். பின்பு கிரவுஞ்சராஜன் ஜெயதேவ் ஸ்வாமிகளின் திருத்தாட் டாமரைகளிற் பணிந்து நயனங்களை யணிந்து பலதோத்திரம் புரிந்து, இனி நம்முடைய நாட்டுக்குப்போகலாம் வாரும் ஸ்வாமியென்று தேரின்பேரில் ஏற்றிக்கொண்டு சதுரங்கசேனை களுஞ்சூழ அதிக சந்தோஷத்துடன் நாட்டைநாடிப் பிரயா ணப்பட்டார்கள். அப்போது மந்திரி பிரதானிகள் முதல் சகல ரும் ஜெயதேவைத் தன்யகுருவென்று கொண்டாடிப் புகழ்ந் தார்கள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பிர்மாம்சமான நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினுர்.

கள்வரைக்காத்த அத்தியாயம்

முற்றிற்று.

---

எட்டாவது

## பத்மாவதி மரித்த அத்தியாயம்



இப்படி ஜெயதேவும் இராஜனும் சதுரங்கசேனைகள் சூழ நாட்டை நாடிவருகையில் நகரில் கிரவுஞ்சராஜன் மனைவி பத்மாவதியினிடம் போய் அன்புடன் பணிந்து, "ஓ அம்மணி! ஒன்றும் அறியாத நான் ஒரு நன்மார்க்கத்தை யடையும் பொருட்டு ஞானுபதேசஞ்செய்து கருணையுடன் ஆட்கொள்ளு மம்மா" என்று தாள்களில் வணங்கும்போது, பத்மாவதி, "ஓ அம்மா! பாக்கியவதி! இராசனுக்குகந்தயோக்கியவதி! நானெரு ஞானமார்க்கமும் அறியேன், ஆனுல் எனக்குத்தெரிந்த மோக்ஷ மார்க்கத்தை ஒளிக்காமல் உரைப்பேன். அது ஏதென்ருல், ஸ்திரீகளுக்குப் பதியே பரமேசுவரன், பதியே ஜகதீசுவரன், பதியே முத்தியளிக்கும் நாதன், பதியே ஞானமளிக்கும் விநோ தன், பதிக்குச் செய்யும் பணிவிடையே மேலான பூசை, பதி

சொல் பிசகாதே பரகதியடையும் ஆசை, பதிவிரதத் தன்மை யைக் காத்தலே மேலான ஞானம், பதியின் திருநாமத்தைப் பஜித்தலே பிர்மத்தியானம், பதியுடனிறத்தலே மோக்ஷம், பதி யிறந்த வக்கணமே தன்னுயிரை விட்டுவிடுதலே மோக்ஷமடை யும் சூட்சமம். அன்றிக் கற்புள்ளவளே விற்பனமுடையவ ளென்றும், கற்புடையவளே அற்புதகுணமுடையவளென்றும், கற்புடையவளே முத்திக்குரியவளென்றும், கற்புடையவளே விற்பத்தியுடையவளென்றும், கற்பிலாதவள் கர்த்தபத்துக் கிணை யானவளென்றும், கற்புடையவளே காமதேனுவுக் கிணையானவ ளென்றும், கற்பழிந்தவள் கணிகைக்குக் கீழ்மையானவளென் றும், கற்புடையவளே கமலைக்கிணையானவளென்றும், கற்புடை யவளொரு தியானமும் செய்யவேண்டியதில்லையென்றும், கற் பைக் காத்தலே பெண்மைக்குரிய சகல கிரியைகளென்றும், கற்பழிந்தவள் செய்யுஞ் சகல தர்மங்களும் கர்மங்களாய் முடியு மென்றும், கற்பே பரலோகத்தைக்காட்டுமென்றும், கற்புள்ளவ ளாலேயே இக்காசினி நிற்கின்றதென்றும், கற்புள்ளவளுக்குத் திரிமூர்த்திகள் முதலானவர்கள் பயப்படுவார்களென்றும், பெரி யோர்கள் சொல்லுவதன்றிச் சாஸ்திரங்களும் இப்படியே முறையிடுகின்றன. அன்றிச் சாவித்திரியம்மை தன் கற்பால் இறந்த புருஷனை யெழுப்பினுள். தமயந்தி கற்பை யழிக்க வெத்தனப்பட்ட வேடனை யெரித்தாள். சந்திரமதி அக்கினியை ஜலம்போல் குளிர்ச்சியடையும்படிசெய்தாள். அன்றி ரேணுகா தேவி ஜலத்தைத் திரட்டினதும், பிருந்தை தன்புருஷன்போல் வந்த பகவான் மாயை யறிந்துக்கொண்டதும், ஜலந்தரான் திரி மூர்த்திகளை வென்றதும், அனுசூயாதேவி நாரதரளித்த இருப் புக் கடலையைப் பொரியாக்கினதும், மூவரைப் பாலராக்கின தும், ஜானகி இராவணன் தன்னைத் தீண்டாமல் மறித்ததும், நளாங்கினி ஏழுநாள் பரியந்தம் சூரியனுதயமாகாமற் செய்த தும், அருந்ததி மணலைப் பாகமாக்கினதும், இலக்குமி பரமசிவ னர் பிரமத்தியை நீக்கினதும், அக்கினிபகவானுடைய மோக த்தை நீக்கும்பொருட்டு அவன் மனைவி அருந்ததியின் ரூபமெ டுக்கக்கூடாமற் றிகைத்ததும், பார்வதி பரமசிவனர் இடப்பாக த்தைப் பெற்றதும் கற்பினாலல்லவோ? இன்னம் விரித்துச் சொல்லவோ? ஓ ராஜபத்தினி! அருந்ததி நீச்சஸ்திரீயாயிருந் தும் நக்ஷத்திரரூபமாய்த் துலக்கமுற்றாள். அகலிகை பெண் மைக்குரிய இலக்ஷணங்களெல்லா மறைந்திருந்தும் திருப்பாற்

கடலிற் பிறந்தவளாயிருந்தும் கற்பிழந்தகால் கல்லுருவாய்க் கணவன் சாபத்தை யடைந்தாள். தற்காலத்திலும் கலியாணச் சடங்குகளில் கற்பிழந்த அகலிகை கல்லுருவானதால் விபசாரமென்னும் அம்மியை மிதியென்றும், பதிவிரதத் தன்மையுள்ள அருந்ததி நக்ஷத்திரரூபமாயிருப்பதால் கற்பென்னும் அருந்ததியைக் காட்டி வணங்கென்றும் சொல்லுகிறார்கள். கற்புள்ளவளுக்கு ஆசாரம் பூசை தியானம் நிஷ்டை முதலானதும் வேண்டியதே யில்லை. கற்பைக் காத்தலே ஆசாரம் பூசை தியானம் நிஷ்டையெனச் சொல்லப்படும். தேவகுருவான பிரகஸ்பதிபகவான் மனைவியாகிய தாரா விபசாரஞ்செய்து எல்லாராலும் நிந்திக்கப்பட்டாள். ரேணுகை ஆகாயத்திற் போகும் கார்த்தவீரியார்ச்சுனனை ஜல நிழலில் பார்த்து இப்பேர்க்கொத்த புருஷர்களு மிருக்கிறார்களா? என்று அதிசயித்த மாத்திரத்தில் கற்பழிந்து ஜலந்திரட்டக் கூடாமல் பரசுராமனால் வெட்டுண்டாள். துரோபதை கர்னன் அழகைப் பார்த்து அதிசயித்த குறையால் ஓர் ரிஷி புசிக்கும் பழம் அத்தருவில் ஒட்டிக்கொள்ளப்போனது கீழ்விழுந்து ஐவருக்குங் கலக்கமுண்டாக்கினதுமன்றி மிகவும் நாணமடையும்படியாய்ச் செய்துவிட்டது. ஆதலால் பெண்கள் அதிசாக்கிரதையாய்க் கற்பைக் காப்பாற்றல் வேண்டும். இறந்தவர்களை யெழுப்புதலும், திரிமூர்த்திகளை வரவழைத்தலும், பூமியைத் தலைகீழாகச் செய்தலும் இலேசானதாகும். கற்பைக் காத்தல் வெகு துர்லபமாகும். ஏனென்றால் சஞ்சலமுள்ள மனதை மடக்கியடக்கும் பிர்மநிஷ்டையும் பதிவிரதைத் தனமும் சமானமென்றே சொல்லத்தகும். புருஷர்களுக்குச் சலனமுள்ள மனதை யடக்கும் பிர்மநிஷ்டையே மோக்ஷமடையும் சூட்சமமாகும். ஸ்திரீகளுக்கும் அச்சஞ்சல நெஞ்சகத்தைக் கிஞ்சித்தும் பிசகாமற் காத்தலே முத்தியளிக்குஞ் சித்தியென்று எண்ணத்தகும். தபோதனர்க்குத் துன்மார்க்கமுள்ள ஸ்திரீகளெப்படி விஷமோ அப்படியே கற்புள்ள ஸ்திரீகளுக்குத் துர்க்குணமுள்ள புருடர்களே விஷமாகும். உத்தம புருஷர்களுக்குத் தெய்வமொன்றேயாகும். உத்தம ஸ்திரீகளுக்குக் கணவனொருவனேயாகும். ஆடவர்க்குப் பகவானே தெய்வமாகும். அரிவைக்குப் பதியே தெய்வமாகும் என்கிற பற்பல வார்த்தைகளுரைத்ததைக் கேட்டாள்.

இராஜபத்தினி, "ஓ அம்மா! தாங்கள்சொன்னபடியே கணவனுடன் எதிரிட்டுப் பேசாமலும், கணவனுக்குச் சேவைசெய்

வதிற் கூசாமலும், கணவனே தந்தைதாயென்றும், கணவனே குருதெய்வமென்றும் பக்தியுடன் பணிவிடை செய்யலாம்; பதி யிறந்தவுடனே தன் பிராணனை விடுவது வெகு பிரயாசையாம். அப்படி யிறப்பவர்கள் இவ்வுலகிலில்லை; வாக்கினுற் சொல்வதே யன்றிச் சொன்னவண்ணம் நடப்பது மிகவு மருமையல்லவோ'' என்றுள்.

அதற்குப் பத்மாவதி நகைத்துப் பதிவிரதையாகிய சீதாபி ராட்டி நினைக்கப் பூமி படிலென்று வெடிக்கவில்லையா? கற்புள்ள சகுந்தலை நினைக்க ஆகாயவாணி பேசவில்லையா? உயிர் பிரிந்து போதல்தொல்லையா? நாகபாசத்தால் இராமலட்சுமணர் இறந்தா ரென்பதைக் கேட்டவுடனே ஜானகி தன்னுயிரைவிட வெத்த னித்துத் திரிச்சடையால் பிராணனை விடாமலிருக்கவில்லையா? இராவண னிறந்ததே அவன்மேல் வீழ்ந்துபுலம்பி உடனே மண்டோதரி பிராணனை விட்டுவிடவில்லையா? பக்ஷிசாதிகளு முடனே தன் பிராணனை விட்டுவிடுகின்றதே. பெண்டுகள் பதி யுட னிறந்துபோகாம லிருப்பதாற் பிரயோசனமேதுண்டு. அப் படியிருப்பதாற் கரைகாணுத துன்புண்டு. பதியுடனிறந்தா லின் புண்டு. அப்பதிவிரதைகளுக்கே மோக்ஷவீடுண்டு. அன்றி, பதி யிறந்தானெனக் கேட்டும் உயிருடனிருப்பவள் அதர்மஸ்திரீ. உடன்கட்டை யேறுபவள் மத்திமஸ்திரீ. உடனே உயிர்விடுப வள் உத்தமஸ்திரீ என்று பெரியோர்கள் உரைக்கின்றுர்கள். அன்றி ஸ்திரீகளில் உத்தமஸ்திரீ தன் பிராணனைவிடக் கண வனே மேன்மையென்று மதித்திருப்பாள். நானும் அப்படியே நம்பி யிருக்கின்றேன் எனச் சொல்லக்கேட்ட அரசன்றேவி அவிவேகிகளுக்குள் சிகாமணியாதலால் பத்மாவதியை நோக்கி, "ஓ அம்மா! யாவராலுஞ் செய்யக்கூடாத அபாரமான வார்த்தை யைச் சொல்ல வந்தீரென்று தன்மேடையிற் பிரவேசித்து, ஆ! ஆ! அந்தப் பத்மாவதிமாத்திரம் பத்தினி; மற்றவர்களெல் லாம் சித்தினிகளாயல்லவோ தோன்றப்படுகின்றது. இப்படியே முன்னெருதரம் கணவனிறந்த ஸ்திரீயின் அழுகுரலைக்கேட்டு, ஆ! ஆ! புருஷனிறந்து வெகுநாளாயும் துணிவோடு உயிருடன் இருந்துக்கொண்டு அழுகிறதற்கும் மனம்வருமா? என்னுல் இப்படியிருக்கக் கூடுமா? என்கிற பலவார்த்தைகளாடினுள். இப்படித் தன்னைத்தானே புகழ்வதறிவீனமல்லவா? இவ்வுலகில் மணவாளன் மறித்தால் மங்கையர் உடன்கட்டை யேறுவார்கள். அப்படி செய்வது மேகதேசம். அப்படியிருக்க இந்தப் பத்மா

வதி புருஷன் இறந்ததே தன்னுயிரை விடவேண்டுமென்றும், அப்படி விட்டவளே உத்தம ஸ்திரீயென்றும் விகடமாய்ச் சொன்னாள். சொன்னபடி தன்னால் நடக்கக்கூடுமோ? ஓ தாதிகளே! நீங்கள் சொல்லுங்கள். தன்னாற் கூடாமையான காரியத்தைப் பிறருக்குச் சொல்லக்கூடுமோ? வார்த்தைகளால் வெல்லக் கூடுமோ? தன்னாலெடுக்கக்கூடாப் பாரத்தைப் பிறரை யெடுக்கச் சொல்லும் பாவனைபோலல்லவோ யிருக்கின்றது'' என்று சாற்றக்கேட்டதாதிகள் 'ராஜன் மெச்சினவளே ரம்பை' என்பது போல, "ஓ ராஜேஸ்வரி! உலகத்தில் உடன்கட்டையேறுதலே வெகு பிரயாசை. அதிலுமிது கலியுகம். இக்காலத்தில் உடனே உயிர்துறத்தல் கூடவே கூடாது. அப்படிவிட உயிர் தன்வசமாயிருந்தாலல்லவோ முக்காலத்திலும் இக்காரியம் நடந்திருக்க மாட்டாது. அநேக சாஸ்திரங்களைக் கற்றுக்கொண்டு பிறருக்குப் போதித்து அப்படி நடக்கச் சக்தியில்லாப் பேதையரைப்போலிருக்கின்றது'' என்று உபசாரவார்த்தைகள் சொல்லினர்.

இராணி கெக்கலிக்கொட்டி பற்களைக்காட்டி நகைத்துப் பத்மாவதியைப் பகைத்து, "ஓ பாங்கிகளே! நீங்கள் இக்கணம் ஓர் பக்ஷியைக் கொன்று அதின் உதிரத்தில் ஓர் வஸ்திரத்தை நனைத்துப் பத்மாவதியினிடங் கொண்டுபோய் ஜெயதேவைப் புலிகொன்றுவிட்டது இது அவருடைய வஸ்திரம் என்று சொல்லுங்கள்; உடனே தான் சொன்னவண்ணம் உயிரைவிட்டு விடுகிறாளா? பார்ப்போம்'' என்று உரைக்கத் தாதிகள் திடுக்கிட்டு மதிகெட்டு, "ஓ அம்மா! இதுகாரியத்தில் ஓர்வேளை பொல்லாங்கு நேரிட்டாலும் நேரிடும். இக்காரியம் செய்யாமலிருப்பதே யோக்யம்'' என்று மறுத்தார்கள். இராஜஸ்திரீ, "ஓ தாதிகளே! மகாபதிவிரதைகளான கைகேயி, சுமித்திரை, கௌசலை, குந்தி முதலானவர்கள் தங்கள் கணவனிறந்தும் உயிருடனிருக்கவில்லையா? ஸ்திரீகளுக்குப் புருஷன்பேரில் மிகுவிச்சை. அதிலும் ஆடையாபரணங்கள்மேல் பிரீதி. அதிலும் தன் பிராணன்மீது அதிகவாஞ்சையல்லவோ? விவரித்துச் சொல்லவோ? நல்லது இந்தப் பத்மாவதி சொன்னவண்ணம் நடப்பது மெய்யாயிருக்குமாயின் ஜெயதேவ் கால்கைகள் வெட்டுண்டு பாழுங்கிணற்றில் வீழ்ந்திருந்தபோது எப்படி பிரிந்து உயிருடனிருந்தாள். அப்போது பிராணனை விடாமலிருந்த காரணமென்ன? அல்லாமல் உங்கள் பதியிறந்தா ரென்னக்கேட்டதே பிராணனை விட்டவர்களைப் பார்த்ததுண்டோ? அல்லது கேள்விப்பட்ட

துண்டா? மகாலட்சுமியான சீதை இராமலட்சுமணர் இறந்தாரெனக் கேள்விப்பட்டதே அவரைப்பார்க்க வாஞ்சித்தாளன்றி உடனே பிராணனைவிடத் துணிந்தாரா? இது பொய்யான வார்த்தையல்லவா? அந்த மண்டோதரியும் இராவணன்மேல் விழுந்தழுது, உயிர்விட்டாளன்றி உடனே உயிர்விட்டாளா? கேட்டவுடன் உயிர்விடுவது ஒருவராற் கூடுமா?'' எனப் புகலத் தாதிகள் இந்தவண்ணம் நடந்ததெனக் கேள்விப்பட்டது மில்லை; பார்த்ததுமில்லை. ஆனல், நளாயினி சூரியோதயமாகா மற் செய்தாளென்றும், தமயந்தி வேடனை யெரித்தாளென்றும், சந்திரமதி அக்கினியிற் குதிர்தாளென்றும், சாவித்திரியம்மை இறந்த புருஷனுக்கு உயிர்கொடுத்தாளென்றும், சீதை கணவனுடன் வனத்திற் சென்ருளென்றும் புராணங்களில் முறையிடுகிறதேயன்றிப் பதி யிறந்தானெனக் கேட்டவுடன் சதி யிறந்தாளென்று எப்புராணத்திலும் முறையிடவில்லை. ஆனல் யார் யார் எண்ணம் எப்படி யிருக்குமோ? நம்மாலறியக்கூடுமா? முன்னம் இப்படி நடந்திருந்தாலு மிருக்கலாம், இல்லவேயில்லையெனச் சொல்லவும் கூடாதெனத் தொழுதார்கள்.

அரையன் நாயகி, "ஓ தாதிகளே! ஆதிமூலப்பெருமாளாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் குமாரத்தியான சுமித்திரை அவ்வாசுதேவன் உடன்பிறந்தாளாகிய சுபத்திரை பெற்ற அபிமன்னனென்னுந் தன் கணவனிறந்தான் என்று பலர் சொல்லக் கேட்டும், தன்பிராணனைவிடாம லிருந்தாளென்ருல் குட்சிநிமித்தம் பிச்சையெடுத்து உண்ணுந் துற்சகுணமுள்ள இப்பத்மாவதி ஜெயதேவர் இறந்துபோனுரென்று சொன்னமாத்திரத்தில் உயிர் விட்டுவிடப் போகிருளா? உயிரைவிடல் இலேசான காரியமா? தானிறப்பது அற்பவீரியமா? வாளாலாவது விஷங்களாலாவது, கற்களாலாவது பிராணனைவிட யெத்தனிப்பாள். அப்படிச்செய்யாமல் நீங்கள் மறுத்து என்னைக் கூப்பிடுங்கள் உடனே நான் வந்து ஜெயதேவர் இறந்துபோகவில்லையென்றும், இக்காரியம் உம்மைப் பரீக்ஷிக்கச் செய்தோமென்றும் உரைத்து மேலான ஆடையாபரணங்களளித்துத் துயரத்தையாற்றிவிடுகிறேன், கர்வத்தை மாற்றிவிடுகிறேன் சீக்கிரம் நான் சொன்னபடி செய்யுங்கள்; ஓர்பக்ஷியின் கழுத்தைக்கொய்யுங்கள்'' என்று அறைந்தாள். தாதிகள் பயந்து, "ஓ அம்மா! இராஜபத்தினி, பத்மாவதிமகா பதிவிரதையெனச் சொல்லுகிருர்கள். கணவனைப் பிரிந்தநாள் உடுத்தியிருந்த வஸ்திரத்துடன் வெகுநா

ளிருந்து அவ்வஸ்திரத்தோடும் வந்து மனனைக்கண்டாள். இதுவே போதுமான சாக்ஷியாயிருக்கிறது. குணங்குறிகளுமப் படியே காணுகிறது, ஓர்வேளை உள்ளே பிராணனை விட்டாலும் விடுவாள். ஆதலால் இக்காரியம் செய்யாமலிருக்கின்றதே நமக்குச் சிலாக்கியமா யிருக்கின்றது” என்று மறுத்தார்கள். அரசன் மனைவி “நான் முன்னமே பத்மாவதியினிடம் போய் இருக்கிறேன். நீங்கள் நான் சொன்னபடி செய்து சீக்கிரமாக வாருங்கள்” என்று அதட்டிப் பத்மாவதியினிடம்போய், “ஓ அம்மா! காட்டிற்போன அரசன்மீதிலும், ஜெயதேவஸ்வாமி களின் மீதிலும் பருத்துக்கொழுத்த பெருத்த வேங்கையொன்று பாய்ந்ததாம். என்ன கெதியானர்களோ! நான் போகும்போதே வேண்டாமென மறித்தேன். என் வார்த்தையைக் கேட்காமற் போனர்கள். என்ன விபரீதம் நடந்ததோ? கைகால்களில்லாச் சுவாமிகளுக்கு என்ன துன்பம் நேரிட்டதோ? எனக்கு மிகவுஞ் சந்தேகமாயிருக்கின்றது, ஆனல் ஒருதாதியைத் தூதுவர்கள்பா லனுப்பி யிருக்கிறேன். ஒரு நொடியில் உண்மை தெரியவரும்” எனப் பலபல விபரீத வார்த்தைகளாடி துக்கமுகத்தைக் காட்டி னள். சத்தியவார்த்தையாய்ப் பாராட்டினள். பத்மாவதியினுள் ளத்தில் துன்பத்தை நாட்டினள் விசனக்கினியை மூட்டினள்.

பத்மாவதி அரசன்தேவியின் பொய்வார்த்தையை மெய் யென்று நம்பி மனங்குழம்பி; “ஐயோ! பாவியாகிய நான் ஸ்வாமிகளுடன் போகாமல் அறிவீனத்தா லிங்கிருந்துவிட் டேன்; முன்னமிப்படியே கெட்டேன்; துன்பத்துக் குட்பட் டேன்; அல்லாமல் நமது ஸ்வாமிகள் புலியென்றும் பூதமென் றும் பார்க்கமாட்டார்; எல்லா முள்ளபடி முடியுமென்று பாயும் புலிமேற் பாய்வார்; நிச்சயமாய் அவர்மேற் புலிபாய்ந்ததா” எனப் பலதரங்கேட்டு, ஆம் என்னும் இராணியின் மொழியை மெய்யென நம்பி கண்ணீர்விட்டு அழத்தொடங்கினள். அத்தரு வாயில் தாதிகள் இராஜஸ்திரீ சொன்னவண்ணஞ்செய்து ரத்த வஸ்திரத்தைக் கையிலேந்திக்கொண்டு பத்மாவதியின் எதிரில் நின்று பத்மாவதியின் முகவிலாசத்தையும் அழகுமேனியையும் தேம்பியழுவதையும் பார்த்துக் கரங்களைச் சேர்த்து நமது ஸ்வாமிகள் மரணமடைந்தாரென்று எப்படி துணிந்து சொல் லுவோம்? சொல்லி எவ்விதம் பத்மாவதியைக் கொல்லுவோம்? இதனல் என்ன விபரீதம் விளையுமோ? இராஜன் இதை யறிந் தால் என்ன ஆக்கினை செய்வானே?” என்கிற பலபல வெண்

ணங்களால் ஒன்றுஞ்சொல்ல வாயெழாமற் பிரமித்து அசையாச் சித்திரம்போல நின்றுக்கொண்டு இதுவென்ன விபரீதச்செய்கை செய்யத்துணிந்தோம்" என்று கண்ணீர்விட்டு அழத்தொடங்கினார்கள். அத்தருணத்தில் இராஜன்தேவி கொப்பென்றெழுந்து இதுவென்னவஸ்திரம் ரத்தமயமாயிருக்கின்றது? இந்தவஸ்திரம் ஜெயதேவ சுவாமிகள் அணிந்துகொண் டிருந்ததாயிற்றே. ஜெயதேவ சுவாமிகள்மேல் புலிபாய்ந்ததெனக் கேள்விப்பட்டோமே. புலிபாய்ந்ததால் சுவாமிகள் மரணமடைந்தாரோ" எனச் சொல்லிக்கொண்டே சைகைசெய்தாள். இராஜஸ்திரீக்குப்பயந்ததாதிகள் சுவாமிகளைப் புலி கொன்றுவிட்டதாமெனப் பணிந்து அழுதார்கள். அதுகேட்ட பத்மாவதி ஆ! ஆ! இது நிச்சயமான வார்த்தையா? என ராணி நிச்சயமில்லா வார்த்தையைத் துச்சமாய்த் தாதிகள் சொல்லுவார்களா? சொல்லி யழுவார்களா? பூமியில் விழுவார்களா? நிச்சயமாகவே யிருக்குமென்றாள்.

அவ்வார்த்தையைக் கேட்டவுடனே, பத்மாவதி அடியற்ற பனைபோல் பூமியில் வீழ்ந்து கடகடவென்று உருண்டு அழுது புரண்டு முகத்திலு மார்பிலும் கரங்களால் அறைந்துக்கொண்டு, "ஓ என் பிராணநாயகா! பிராணசிநேகா! பிராணவல்லபா! ஆ புண்ணியபுருஷா! புருஷசிகாமணி! ஆ என் மனோகரா! மன்மத சொரூபா! என்கிற பற்பல வார்த்தைகளாடி முகம்வாடி தேகம் வேர்த்து மனஞ்சோர்ந்து சாவுக்கிணையான மூர்ச்சையடைந்து உடனே தெளிந்து, ஆ! ஆ! என் பிராணநாயகா! என்னைவிட்டு இறந்தபின் இனி யரைநிமை என் பிராணனிருக்குமா? ஓ பகவான்! ஓ தெய்வமே! அற்பமான புலியடித்துக் கொல்லவும்பார்த்திருந்தாயோ? என்னைத் தனித்திருக்கச் செய்தாயோ? என் கழுத்தைக் கொய்தாயே? என் பிராணநாயகா! நானு மிதோவந்தேன் வந்தேனென்று அலரி, ஓம் அரகரா மகாதேவா! வாமதேவா! நீலகண்டா! நீறணிமுதல்வா! சாம்பவா! சங்கரா! மயானவாசா! கயிலாசவாசா! உமாபதி! பசுபதி! திரிநேத்திரா! திரிபுரதகனா! சர்வேஸ்வரா! சர்ப்பாபரணா! காலகாலா! திரிசூலா! பரமேசா! ஆதிமூர்த்தி! கபாலமூர்த்தி! விஸ்வநாதா! பூதகணநாதா! சசிதரா! சடாதரா! நந்திவாகனா! கங்கைமோகனா! தாண்டவா! ஆண்டவா! என்றும், ஓம் ஹரிஹரி! நரஹரி! முரஹரி! அம்புஜாக்ஷரி! அச்சுதா! உச்சிதா! பஞ்சாயுதா! பாண்டவர்தூதா! லட்சுமிசமேதா! லீலாவினோதா! கமல

பாதா! ஆதிமத்தியாந்தாகிதா! அனுதாக்ஷகா! அகிலாண்ட கோடி பிரமாண்டநாயகா! பரமானந்தா! முகுந்தா! வைகுந்தா! கோவிந்தா! பச்சைவண்ணு! கார்வண்ணு! கமலக்கண்ணு! ஜனுர்த்தனு! கருடவாகனு! ராக்ஷஸமர்த்தனு! காளிங்கநிர்த்தனு! சேஷசயனு! நாராயணு! பிரமபாராயனு! வாமனு! நந்தநந்தனு! மதுசூதனு! பரிபூரணு! சர்வகாரண வெங்கடரமனு! சங்கட ஹரணு! சீதரா! துளசிதரா! தாமோதரா! பீதாம்பரா! மச்ச வராகவதாரா! பலபத்திரா! பரமதயாபரா! பரமேசுவரா! சங்கு சக்ரா! ஸர்வேசுவரா! கருணுகரா! ராதாமனேகரா! ஸ்ரீரங்கா! பாண்டுரங்கா! லோகநாயகா! பத்மநாபா! திவ்யசொரூபா! புண்ணியபுருஷா! புருஷோத்தமா! ஸ்ரீராமா! பரந்தாமா! நார சிம்மா! திரிவிக்கிரமா! பரசுராமா! சகஸ்திரநாமா! பக்தவச் சலா! தேவானுகூலா! ஆதிமூலா! வேணுகோபாலா! மாதவா! யாதவா! ராகவா! கேசவா! வாசுதேவா! தேவதேவா! ஆதி தேவா! மஹானுபாவா! வசுதேவதநயா! தசரததநயா! மாயா விலாசா! வைகுண்டவாசா! சுயம்பிரகாசா! வெங்கடேசா! ருஷீ கேசா! சித்விலாசா! கஜபதி! ரகுபதி! சீதாபதி! வேங்கடாசல பதி! மாயா! ஆபா! வெண்ணெயுண்டநேயா! அண்டர்களேத் துந் தூயா! உலகமுண்டவாயா! நானுஉபாயா! பக்தர்கள் சகாயா! சதுர்புஜா! கருடத்துவஜா! கோதண்ட அஸ்தா! புண்டரீகவரதா! ஓ விஷ்ணு! ஓ பராத்பரா! பரமதயாளா! அரே கிருஷ்ணு! அரே கிருஷ்ணு!" என்று பகவானைத் துதித்துத் தன் பிராணனை விட்டுவிட்டாள்.

அப்பிராணனுனது சோதிப்பிரகாசமாய் ஆகாய மார்க்க மாய்ப் போய்விட்டது. அச்சோதிபோன அதிசயத்தைக் கண்ட சாதுபிராமணர்கள் ஆச்சரியங்கொண்டு விந்தையென்று விண்டு பத்மாவதியின் மேடைக்குவந்து சங்கதிதெரிந்து மயங்கி தயங்கி அங்கங்கே அசைவற்று நின்றுவிட்டார்கள். தங்கள் ஸ்மாணை கெட்டார்கள். அங்கேயிருந்த ராஜஸ்திரீயும் பிரமைகொண்டு திக்குமுக்கிட்டு ஒன்றுந் தோன்ருதவளாய் அசைவற்று நின்றிரு ந்தாள். தாதிகளோ அங்கங்கே வீழ்ந்து விட்டார்கள். பின்பு அரசன்தேவி கண்கெட்டபின் சூரியநமஸ்காரஞ் செய்வதைப் போலவும், தலையிற் பட்டபின் தாழ்வதைப்போலவும் ஓ! ஓ! மோசம் வந்தது. இதற்கு நானென்ன செய்வேன்? உலகில் இப் பேர்க்கொத்த உத்தமிகளும் இருக்கின்ருர்களோ? ஆ! ஆ! தான் திருடி அயலாரை நம்பாள் என்கிறபடி நான் பாதகியாயிருந்

தும் பத்தினியைக் கொன்றுவிட்டேனே? சித்தினியாய் நின்று விட்டேனே? இராஜன் செய்த தர்மங்களையெல்லாம் பாழாக்கி விட்டேனே? நரகத்துக்காளாகி விட்டேனே? பார்வதியைத் தின்றுவிட்டேனே, பாவியாய் நடுவீதியில் நின்றுவிட்டேனே, ஆ கெட்டேனே'' என்று பலபலவிதங்களாயுரைத்து அங்கிருக்கும் பலருடைய மனதையுங் கரைத்து மிகவும் நொந்து இடராக்கினியால் வெந்து பூமிமேல்விழுந்து புரண்டெழுந்து இராஜன் வந்தால் என்ன சொல்லப்போகிறேன்'' என்று அலைந்து மனங் குலைந்து பலபலவிதங்களாய் நினைந்து கண்ணீரால் நனைந்து கைகளைப்பிசைந்து பூமியிலறைந்து மெய்மறந்து பெருமூச்சுகள் விட்டு ஸ்மரணைகெட்டு மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டாள். அதையறிந்த தாதிகள் கைகால் நடுக்கமெடுத்து இராசஸ்திரீயை யடுத்து கண்ணீர்விட்டு அழுது கடவுளேயென்று தொழுது, ஐயோ வந்ததே பழுது. இதோ போய்விட்டதே பொழுது. இராஜன் முதலானவர்களும் வந்துவிடுவார்களே? நம்மைக் கொன்று விடுவார்களே? இரண்டுபேர்களு மிறந்து விட்டார்களே? இகலோகத்தைத் துறந்துவிட்டார்களே? இராஜனுக்கென்ன சொல்லுவோம்? என்ன தைரியங்கொண்டு எதிர் நிற்போம்?'' எனப் பலபலவிதங்களாய்ப் பிரலாபித்து ராணியின்மேற் கோபித்துப் பன்னீரைவீசி விசிறிகளால் பலங்கொண்டு வீசிக் கோவென்றழத் தொடங்கினர்கள். அப்போது இராஜஸ்திரீ யெழுந்து பத்மாவதியைப் புரட்டிப்பார்த்து மார்புடன் சேர்த்து, "ஐயோ! பிராணன் உண்மையாய்ப் போய்விட்டதே; இராஜ தருமங்கெட்டதே; ஸ்திரீஹத்தி மேலிட்டதே; என்னைச் சுட்டதே; இராஜனும் மரிக்க நேரிட்டதே; பட்டணத்தைப் பாவஞ் சூழ்ந்துகொண்டதே; ஸ்திரீஹத்தி பொல்லாதாச்சுதே; இனி யென் மானம்போச்சுதே; தானே தேடிக்கொள்ளலாச்சுதே. தீரா அபகீர்த்திவாச்சுதே. ஓ பாங்கிகளே! இனி நாமென்ன செய்யலாம்? யாரைவையலாம்? நான் இராஜன் வாராமுன்னமே பிராணனை விட்டுவிடுகிறேன்; விஷங்கொண்டு வாருங்கள்; குடித்து உயிர்விடுகிறேன்; இனி என்பிராணனை அரைக்கணமும் வைக்கலாகாது; பாவியின் முகத்தை அரசனுக்குக் காட்டலாகாது. இப்பாவம் என்மட்டும் போகாது. இனி யரைக்கணமு மிருக்கமாட்டேன் சாகாது'' என்று தலையைத் தரையில் மோதிக்கொண்டு உயிர்விடத் துணிந்தாள். தாதிகள் ராணியை அசையாமற் பிடித்துக்கொண்டு ஓவென்

றலறி அழத்தொடங்கினார்கள். அப்போது அங்கிருக்கும் சாதுப் பிராமணர்கள் இராஜன் மனைவியை நோக்கி, "ஓ ராஜபத்தினி! பத்மாவதியை யெழுப்ப ஜெயதேவசுவாமிகளாலாகும்; அவர் நினைத்தா லீதருமையோ; அவர்க்கோர் பெரிதல்ல. சுவாமிகள் வந்தவுடன் உள்ளபடி கள்ளமின்றி யுரைத்து அவர் மனதைக் கரைத்துப் பணிவையாகில் பத்மாவதியை ஓர் கணத்திலெழுப்புவார்; உன்னைத் தேற்றுவார்; காப்பாற்றுவார்; பாவத்தை மாற்றுவார்; பத்மாவதியைப் போற்றுவார்; உன் துயரத்தை யாற்றுவார்" என்று உரைத்துத் தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள். பின்பு அரசன்றேவி ஒருவாறுதேறி பத்மாவதியை ஓர் அறையி லடக்கஞ் செய்து ராஜன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். கேட்டீர்களோ சித்தர்களே என்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினார்.

பத்மாவதி மரித்த அத்தியாயம்

முற்றிற்று.

---

ஒன்பதாவது

## பத்மாவதி உயிர்பெற்ற அத்தியாயம்



இங்கு இப்படியிருக்க நாட்டை நாடிவரும் அரசன் தேரிலிருந்துகொண்டு ஜெயதேவுடைய பெருமையைக்கொண்டாடி, ஆ! ஆ! இன்றைக்குப் பரமசிவனார் தரிசனம் பெறும்படியான பாக்கியமேதோ! நாம் செய்த சிலாக்கியமேதோ! இப்பிறப்பிற் செய்த தவமோ! முற்பிறப்பிற் செய்ததவமோ! ஸ்வாமிகளுக்குச் செய்த பணிவிடைப்பலமோ! நமது முன்னோர்செய்த நலமோ! சங்கரனைத் தரிசிக்கும்படியான பாக்கியம் குருஸ்வாமிகளா லல்லவோ நேரிட்டது. பத்மாவதியின் வாக்கியமல்லவோ கள்வரைப் பாரிலமிழ்த்துவிட்டது. ஸ்வாமிகள் பாழுங்கிணற்றில் வீழ்ந்திறந்ததனு லல்லவோ என்தாய் வெகுநாள் பிரிந்திருக்க நேரிட்டது. மகா பதிவிரதையாகிய பத்மாவதியும், சாந்தமே ஒருருவான சுவாமிகளும், நமது பட்டணத்தில் எழுந்தருளியிருக்க நாம் என்னதவஞ் செய்தோமோ? ஆ! ஆ! நமக்குற்ற பாக்கியமே பாக்கியம்; நமது பெரியோர் செய்த சிலாக்கியமே சிலாக்கியம்; நம்மைப்போன்ற புண்ணியவான்கள் இவ்வுலகில்

யாருமில்லையென்றே சொல்லத்தகும். காட்டில் பரமசிவனைத் தரிசித்து இனி நாட்டில் பகவானைத் தரிசிக்கும்படியான புண்ணிய மொன்றுஞ் செய்ததில்லையே? நாட்டிற் சென்றதே பகவான் தரிசனந்தருவாரா? ஸ்வாமிகளுக்குக் கைகால்கள்வருமா? என் கண்களுக்கு ஆனந்தந்தருமா? இன்றைக்கு நாமடைந்த லாபமே லாபம்: நமக்குற்ற பிரதாபமே பிரதாபம்'' என்று உன்னிக்கொண்டே ஆனந்தமாய்க் குருசங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டே ஸ்வாமிகளையும் பத்மாவதியையும் தோத்திரஞ் செய்துக்கொண்டே ஆனந்தம் ஆனந்தமென்று உரைத்துக் கொண்டே கேளிவிலாசத்தோடும் மந்திரிபிரதானிகளும் ரதகஜதுரகபதாதிகளும் புடைசூழப் பட்டணத்திற் பிரவேசித்தார்கள். அப்போது பட்டணத்திலிருக்கும் சகலரும் பத்மாவதியின் பிராணன் சோதிரூபமாய்ப் போனதும், இராஜன்தேவி செய்த சற்பனையும் தாதிகள்செய்த கற்பனையும், நினைத்து நினைத்துப் பிரலாபித்துச் செவிகளைக் கரங்களால் மூடிக்கொண்டு அரி! அரி! ராம ராமா! சிவசிவா! அரகரா! என்ன பாவம்! என்ன காரணம்; என்ன காலம்; என்ன விபரீதம் என்று உரைத்துக்கொண்டே மனமுருகிக் கண்ணீர் பெருகி அங்கங்கு கும்பல்கும்பலாய்க்கூடி இராஜன் வரவை யெதிர்நாடி குசுகுசுவெனப் பேசிக்கொண்டே நின்றிருந்தார்கள்.

அப்போது பட்டணத்திற் பிரவேசித்த அரையன் நாட்டில் லட்சுமிவிலாச மில்லாமல் இருளடைந்து வேதகோஷ்டங்களும் அரியரசங்கீர்த்தன கோஷ்டங்களும் குறைந்து அழுகுரலோசை நிறைந்து சந்தோஷமென்பதில்லாமல் ராம ராம! சிவா சிவா! வென்னும் வார்த்தையல்லாமல் வேறுவார்த்தை சொல்லாமல் அரசன் முன்னில்லாமல் தங்கள் தங்கள் வீட்டினுள் புகுந்து வெளிவராமலிருப்பதை இராஜனறிந்து தேசிகரைப் பணிந்து, "ஓ ஸ்வாமி! இப்பட்டணம் பாழடைந்திருக்குங் காரணமேதோ? சாதுப்பிராமணர் முதற் சகலரும் மனக்கோட்டமும் முகவாட்டமு மடைந்திருக்க வேண்டியதென்ன மர்மமோ? அடியேனெதிரில் யாரும் வாராமலிருப்பதென்ன கர்மமோ? நமது பட்டணத்தில் என்னபாவம் நேரிட்டதோ? அல்லது அடியேன்செய்த கொடுமையே இப்பட்டணத்தைச் சூழ்ந்துக் கொண்டதோ? ஒன்றுந் தோன்றவில்லையே? ஏவலரால் வந்த தொல்லையோ? பட்டணத்தை யடைந்ததே பகவான் பிரசன்னமாவாரென்று உரைத்த பரமேசுவரன் வாக்கியம் வெகுயோக்கி

யமா யிருக்கின்றதே? என்ன காரணத்தாலோ என்னெஞ்சந் துடிக்கின்றதே?'' எனப் பற்பல வார்த்தைகளாடும்போது, ஜெய தேவர் நீ சொன்னபடியே என் மனமும் திகிலடைந்து திடுக்கு திடுக்கெனத் துடிக்கின்றது. இதுகாரணத்தை யோசித்தால் உத்தமரியார்க்கோ விபத்து வந்ததுபோற் காண்கின்றது, சீக்கி ரம் இப்பிரஜைகளைக் கேளுமெனத் திருவாய்மலர்ந்தருள, மகா பாக்கியமென்று இறைவன் ரதம்விட்டிழிந்து பிரஜைகளை நோக்கி, "ஓ புனிதர்களே! நல்ல மனிதர்களே! நமது பட்ட ணத்திலென்ன தீங்கு நடந்தது? அதைத் தெரியச்சொல்லுங் கள்" என்று வற்புறுத்திக் கேட்க, ஜனங்கள் சொல்லக்கூடாக் குறையால் மௌனமாய் நின்றிருந்தார்கள். மன்னவன் பலதரங் கேட்டும் ஒன்றுஞ் சொல்லாமையால் மனந்திடுக்கிட்டு மந்திரி களைநோக்கி, இதுவென்ன விபரீதச் செய்கையோ? சீக்கிரங் கொலுமண்டபத்திற்போய் விசாரியுங்களென்று ஆக்கியாபித் துத் தானும் அதிதுரிதமாய்த் தேரை நடத்திக்கொண்டு போகும்போது மந்திரிகள்போய் விசாரித்து உண்மை தெரிந்து கொண்டு அரையனிடம்வந்து வணங்கி, "ஓ இறைவனே! இப் போது நமது பட்டணத்தில் நடந்தது தீங்கேயாகும். அதை உமது மனைவியைக்கேட்டாலன்றிச் சவிஸ்தாரமாகத்தெரியாது. தெரிந்திருந்தாலும் யாருஞ்சொல்லமாட்டார்கள்" என்று உரை த்தார்கள். அதைக்கேட்ட பூபதி கைகால்கள் நடுக்கமெடுத்துக் கொண்டு அதிதுரிதமாய் மேடையிற் பிரவேசித்து மனைவி யைக் காணுமல் காவலரைக் கேட்டுப் பத்மாவதி யிருக்கும் மேடைகுட்போய்த் தன்னுபகியின் அழுகுரலைக்கேட்டு உடனே தாதிகளைக் கூப்பிட்டு என்ன சங்கதியென்ருர்? பாங்கிகள் நடந்த சங்கதியாவும் கள்ளமின்றி உள்ளபடியுரைத்து அழத்தொடங் கினர்கள். இராஜனே ஆ!! ஆ! என்தாயான பத்மாவதியைக் கொன்றுவிட்டீர்களா? கொன்று தின்றுவிட்டீர்களா? ஆ! பத் மாவதி என்னும் பார்வதி மரணமடைந்தாளா? ஓ தெய்வமே தெய்வமே! இந்தப் பழிக்கு யானென்ன செய்யட்டும்? உயிரோடு எப்படி யிருக்கட்டுமென்று தரையில் வீழ்ந்து துக்கசாகரத்தி லாழ்ந்து மெய்மறந்து மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டார்.

அத்தருணத்திற் ஜெயதேவர் மேடையிற் பிரவேசித்து இராஜன்மனைவி ஓவெனப் புலம்புவதையும் அரசன் மூர்ச்சை யடைந்திருப்பதையும் பார்த்துத் தேகமெல்லாம் வேர்த்துப் பாங்கிகளை நோக்கி, "இராஜன்தேவிக்கு என்னகுறை நேரிட்

டது? சொல்லுங்கள்" எனக்கேட்கத் தாதிகள் சகல சங்கதிகளுஞ்சொல்லி பத்மாவதியின் பிராணன் சோதிரூபமாய்ப் போய்விட்டதென்று அறைந்து கரைந்தழுதார்கள். அதுகேட்ட ஜெயதேவர் பிரமித்து ஆ பத்மாவதி! நானிறந்தேனெனக் கேட்டதே ஆவியை விட்டுவிட்டாளா? உயிர் சோதிரூபமாய்ப் போய்விட்டதா? ஆ மரணமடைந்தாளா? இன்றுடன் பத்தினியைப் பிரியலாச்சுதா? நிச்சயமாகச் சீவன் சோதிரூபமாய்ப் போய்விட்டதா? என்மேலிவ்வளவு பட்சமும் வைத்திருந்தாளோ? அன்பே மரணத்துக் கிடங்கொடுத்ததோ? இப்படியும் உலகில் நடந்ததுண்டோ? நடப்பதுமுண்டோ? ஆ! ஆ! நான் இறந்தேனெனக் கேட்டதே எவ்விதமாகப் பதைத்தாளோ? என்னமாயழுதாளோ? என்னென்ன நினைத்தாளோ? எவ்விதமாய் உயிர்விட்டாளோ? எவ்வளவு பதைபதைப்போடு உயிர்பிரிந்து போயிற்றோ? இவ்வளவு அன்பு என்மீது வைத்திருந்த காரணமேதோ? எனக்காக உயிர்விடப்போமோ? இவ்வளவு துன்பப்படலாமோ?" எனப் பலபல விதங்களாய்ப் புலம்பி தேகத்தைக் கண்ணீராலலம்பித் தயங்கி மயங்கிப் பெருமூச்சுவிட் டிடைந்து சகிக்கக்கூடாத துன்பத்தை யடைந்து மிகவு மேங்கித் துக்கமோங்கி ஒவென் றழத்தொடங்கினர். ஜெயதேவர் அழுகுரலோசையைக் கேட்ட ராஜன் மூர்ச்சை தெளிந்தெழுந்து ஸ்வாமிகளின் முன்விழுந்து ஓவெனக் கூக்குரலிட்டு அழுது ஐயோ! வந்ததேபழுது; எனக் கோபதீப்தனுய்க் கண்களி லிருந்து நெருப்புப்பொறிகள் பறக்கப் பல்லை நரநரவெனக் கடித்து மீசை படபடவெனத் துடிக்க, அங்கமெல்லாம் நடுங்க ஆர்ப்பரித்துச் சந்திராயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு தன் மனைவியிருக்கும் அறைக்குட் குதித்துப் பாய்ந்து கோபமேலீட்டால் தேகமெல்லாம் வேர்த்துப் பூமியிற் சாய்ந்து மறுபடியும் மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டார்.

அப்போது அரசன்றேவி கைகால்கள் கிடுகிடென்று நடுநடுங்கத் திடுதிடென வெளிப்பட்டு ஜெயதேவ ஸ்வாமிகளைக் கட்டிக்கொண்டு வயிற்றிற் றலையை வைத்துக்கொண்டு, "ஓ தெய்வமே! ஓ கர்த்தனே! நான் அறியாமற்செய்த குற்றத்தைப்பொறுத்து சீக்கிரம் பத்மாவதியை யெழுப்பி என்னையும் இறைவனையுங் காக்கலாகாதோ? கருணைக்கண்ணுற் பார்க்கலாகாதோ?" எனக் கூக்குரலிட்டு அழத்தொடங்கினள். அவ் வழுகுரலோசையாற் பார்த்திபன் மூர்ச்சை தெளிந்து குதித்தோடி வந்து மனைவியின்

தலைமயிரைப் பிடித்திழுத்து, "அடி பஞ்சமாபாதகி! பார்வதியைக்கொன்ற தோதகி! கடினசித்தமுள்ள நீலி! இனி எல்லாருஞ் செய்வாரே கேலி! படுபாவி! உன்னைக் கண்டங் கண்டமாய் வெட்டிப் பிறகு மடிவேனென்று இத்தாதிகளையெல்லா மொன்ருய்ச் சேர்த்துக் கட்டித் துண்டந் துண்டமாகவும் வெட்டியெறிந்தல்லவோ நானும் வெட்டிக்கொண்டு மடிவேன்" என்று ஈனவார்த்தைகளைப் புகன்று, ஜெயதேவைக் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்குங் கரங்களை விடுவிக்கத் தொடங்கினர். அப்போது அரசன்மனைவி ஜெயதேவைச் சர்ப்பம்போற் பின்னிக் கட்டிக்கொண்டு "ஓ என்னுண்டவனே! உமக்குக் கருணையின்னம் வரவில்லையோ? நான்செய்த தொல்லையோ? ஓ ஸ்வாமி! நானிறந்தால் யாதொரு குற்றமில்லை; யாதொரு குற்றமுஞ் செய்யா இத்தாதிகளும் இராஜனும் மரித்தல் தர்மமோ? சும்மா விருப்பதென்ன மர்மமோ? நான் செய்த கர்மமோ? ஓ தீனதயாளா! தீனபந்து! கள்வரை யாட்கொண்ட கர்த்தனே! மிகவும் பரிசுத்தனே! எல்லா வல்லமையுமுள்ள சித்தனே! நாற்றிசையிலும் பேர்பெற்ற பிரசித்தனே! சீக்கிரம் பத்மாவதியை யெழுப்பலாகாதோ? எழுப்பினுல் எங்கள் குறைபோகாதோ?" எனப் புலம்பும்போது, ஜெயதேவர் இராஜனை நோக்கி, "ஐயா அரசனே! சற்றே நில்லும் பதறவேண்டாம், 'ஆத்திரக்காரருக்குப் புத்திமட்டு' எனகிற பழமொழி யறியீரோ என்று உரைத்து அரையன் இல்லாளைநோக்கி, "ஓ அம்மணி! அழவேண்டாம்; நான் இருக்கும்போது உங்களுக்கோர் குறையும் நேரிடாது. இப்போது பத்மாவதி மடிந்தது கடவுள் செயலேயன்றி உன் பேரில் யாதொரு குற்றமும் இல்லை. ஜீவர்கள் எப்போது ஜென்மிக்கவேண்டுமோ அப்போதே ஜென்மிப்பார்கள். எப்போது மரணமடைய வேண்டுமோ அப்போதே மரிப்பார்கள். அவரவர்கள் மரணமடையுங்காலம் நேரிட்டால் அதைப் பிரமாதி தேவர்களாலும் தடைசெய்யக்கூடாது. நிந்தையில்லாமல் பொந்திபோகா தென்கிறபடி வீணுய் உன்மேல் நிந்தை நேரிட்டது" என்று உரைத்து இறைவனை நோக்கி, "அப்பா பூபாலனே! இனியுன் கோபத்தையாற்றிப் பத்மாவதியை யடக்கஞ் செய்ய எத்தனப்படும். சந்திராயுதத்தைக் கீழே போட்டுவிடும். இனி என் வார்த்தையைத் தள்ளாதே; தூஷண வார்த்தைகள் விள்ளாதே; வீணுய்க் கோபங் கொள்ளாதே; வெட்டி மடிகிறேனெனத் துள்ளாதே" எனச்

சொல்லும் வாக்கியங்களைக் கேட்ட மன்னவன், "ஓ ஸ்வாமி! நல்லவசனங்களை யுரைத்தீர்; இனியவர்களை இரண்டு துண்டாக நறுக்கி நெருப்பாற் சுட்டு கருக்கி என்னுயிரையும் விட்டுவிடுகிறேன். பின்பு எங்களனைவரையும் தாங்கள் அடக்கஞ்செய்து விடுவீர்" என்று கடுங்கோபங்கொண்டு கொடுஞ்சூரியென்று விண்டு பலங்கொண்டு தன் ஸ்திரீயை யிழுத்து வாளால் வெட்டப்போகையில், இராஜஸ்திரீ "ஓ ஜெயதேவ ஸ்வாமி! உமக்கபயம் அபயம்" என்று ஓலமிட்டுக்கூவினாள். உடனே ஜயதேவஸ்வாமி "ஓ ராஜனே! வெட்டவேண்டாம் வேண்டாம்" என்று அலங்கோலமாய் அவசரமாய் அவ்விறைவனது கரத்தைப் பிடித்துக்கொள்ள வெழுந்திருக்கையில் உடனே ஸ்ரீமந் நாராயணர் அருளால் கைகால்கள் வந்துவிட்டது. தனக்குக் கைகால்கள் வந்ததுமறியாமல் அதிக பரபரப்போடும் போய் இராஜனது இரண்டு கரங்களையும் பிடித்துக்கொண்டு இதுவென்ன விபரீதம் நேரிட்டது? என விண்டு துக்கம் மேலிட்டு கக்கசத்துக்குட்பட்டு ஒன்றுந் தோன்றாதவராய்த் தனது இஷ்டதெய்வமாகிய ஸ்ரீமந்நாராயணரைத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்.

## தசாவதாரத் தோத்திரம்



விருத்தம்

திருவருட் பொருளாயாகித் தேவனுய்த் தேவர்கோனுய்
அருவமாய் தூயவன்பர்க் கன்பனு யகண்டானந்த
சொருபமாய்த் துலங்கியெங்குஞ் சோதியாய் நிறைந்தமூர்த்தி
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 1

சுருதியைத் திருடிப்போன சோமுகவசு ரன்றன்னைத்
திரைகடற் குள்ளேமீனுய்ச் சென்றுகொன் றவனேநேமி
கரமுடை கமலக்கண்ணு கர்த்தனுகிய கார்வண்ணு
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 2

சுரர்கடல் கடையும்போது தூயகச் சபமாய்நீமந்
தரமலையினை யாழாமற் றங்கின தயவேதையா
முராஹரி யெழிலார்மெய்யா மூடன்மேல் முனிவேன் றய்யா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 3

தரைதனைச் சுருட்டியாழ்ந்த சமுத்திரத் தொளித்திருந்த
இரணியாக் கனைவராக வெழிலுரு வெடுத்துநின்ற

பரமனே பதுமநாபா பரஞ்சோதி யானதீபா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 4

பிரலாதனுக்காத் தூணிற் பெருநர ஹரியாய்த்தோன்றி
இரணியன் றனைவதைத்த விசனே நெடியமாலே
பிரமனைப் பெற்றநாதா பேதையே ஞானேனீதா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 5

திரமகா பலிபாதாளஞ் சேரவிவ் வுலகளந்த
சரணனே வாமனவ தாரகெம் பீரசூரா
திருவுறுங் களபமார்பா திவ்விய துளபமார்பா
தெருஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 6

அரசர்க டமைபடக்கி யந்தணர் தம்மைக்காத்த
பரசுராமா கோபாலா பரந்தாமனே பூபாலா
விரிமறை தேடுமூலா வேலையிற் றுயின்றசீலா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 7

இருடிக டவஞ்செழிக்க விராவணன் றனைவதைக்கத்
தரைதனில் வந்தராமா சாஸ்விதனே சங்க்ராமா
முருகனுக் கிசைந்தமாமா முறையிடு மெனையாள்சோமா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 8

பிரலம்பன் முதலானோரைப் பிடித்திகல் செய்துகொன்ற
தரையும்வின் புகழுநாமா ஜயபல பத்ரராமா
தரணியிற் கொடுமைசெய்த சண்டாள ஞனவென்னைத்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 9

திரைகட லுலகினுற்ற தீயர்கடமை யழித்துத்
தருமரா தியரைக்காத்த சங்குசக் கரனேகிருஷ்ண
வரையினைச் சுமந்தசீலா வாரியிற் றுயின்றபாலா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவா. 10

பரியவ தாரமாகிப் பாரினை யழிக்கவுன்னுங்
கரியனே கஞ்சத்தாளா கடையனேன் றனையாள
வரியனே முறையோவென்று மோலங்கேட் டிருக்கலாமோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 11

என்று தசாவதாரங்களைத் தோத்திரஞ்செய்தும், பிரத்தியக்ஷமாகப் பகவானை நினைத்து, கண்ணீரால் நனைந்து ஓ தெய்வமே! என்னால் இப்பட்டணம் பாழடையும்படியாய் நேரிட்டதே? உமது கருணை எளியேன்மேல் எள்ளளவு மில்லாமற் போச்சுதே? பொல்லா வபகீர்த்திவாச்சுதே என்று புலம்பும்போது, இராஜன் பரமசிவனுர் சொல்லிய வாக்கியப்படியே சுவாமிகளுக்குக் கைகால்கள் வந்துவிட்டது. இனி பகவானும் பிரசன்னமாவார். பத்மாவதியை எழுப்புவார். பத்மாவதியை

சுவாமிகளருகிற் கொண்டுவந்து வைத்தாலன்றி உருக்கமாய்ப் பகவானைத் துதிக்கமாட்டாரென்கிற கருத்தால் தாதிகளால் பத்மாவதியைக் கொண்டுவரச்செய்து சுவாமிகளின் முன்வைக் கவே அப்பதிவிரதையைப் பார்த்த ஜெயதேவர் அனலில் வைத்த அரக்குபோற் கருகி, மிகவும் உருகி, "ஓ பெண்ணே! என்னிரு கண்ணே! கற்பகத்தருவே! பரிமளமருவே! என் குல விளக்கே! தீண்டா நெருப்பே! பதியிறந்தானெனச் சொல்லக் கேட்டதே ஜீவனைவிட்ட தேவியே! ஓ என்னுவியே! பதிவிரதா சிரோன்மணியே! என்னிருகண்மணியே! என்னைப் பரலோகத் திற் பார்க்கப்போனுயோ! எனக்குற்ற துன்பத்தைத் தீர்க்கப் போனுயோ? பகவானுக்குப் பக்ஷத்துடன் ராதா முத்தமீவது போல் எனக்கோர் முத்தமீயலாகாதோ? என் துயர் நீங்கிப் போகாதோ? 'பாடையேறினும் பக்ஷமறவாள்' என்கிற பழ மொழியைப் பொய்யாக்கி விட்டாயே. அது மெய்யானுல் பாடையில் வைத்துக்கொண்டு போமுன் உனக்கிருக்கும் பக்ஷத் தைக் காட்டலாகாதோ? என் முகத்தைப் பார்க்கலாகாதோ? நான் உனக்கோர் குறையுஞ் செய்யவில்லையே? ஓ பத்மாவதி! ஓ பத்மாவதி! என்னுடன் ஓர் வார்த்தையாவது பேசலாகாதா? உன்னை விட்டுப் பிரிந்து இனி உயிரோடிருப்பேனு? உன்மே லதிக அன்புடையவனென அறியமாட்டாயோ? நின்முகத் தைக் காட்டாயோ? எனக்குக் கைகால்கள் வந்துவிட்டதை உன் கண்களாற் பார்க்கமாட்டாயோ? என் துயரத்தைத் தீர்க்கமாட் டாயோ? நீ பிராணனை விட்டதை நினைத்துக்கொண்டால் தனக் குத்தானே துக்கம் வருகின்றதே; மெழுகுபோல் நெஞ்சம் உருகு கின்றதே; கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகுகின்றதே; துக் கத்தையடக்கினுலும் அடங்கேனென்கின்றதே; கொஞ்சத்திற் றுயரம் ஆறேனென்கின்றதே; உயிர்பெற்றெழுந்திருப்பாயா? என்னையு முன்னைப்போ லாக்குகின்ருயா? ஐயோ வெகுநேர மாய்ப் பகவானைத் துதித்தும் அன்புடனழைத்தும் பிரசன்ன மாகவில்லையே? இராஜனே தன் பத்தினியைக்கொல்ல வாளேந்தி நிற்கின்ருனே? கொல்லாம லிருக்கேனென்று புகல் கின்ருனே? தானுமடியத் துணிந்திருக்கின்ருனே" என்று மன முருகிக் கண்ணீர் பெருகிப் பின்னும் பகவானைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

## தோத்திரப் பாடல்



கரிமுகந் துன்பத்தாழ்ந்து காதலா யழைத்ததோநல்
பிரகலா தனனிப்போது பிரியமா யழைக்கின்றானே
மருளனேன் முன்பிந்நேரம் வருவதற்குந் தடையேனையா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 12

சுராரக்கருக் கயர்ந்து துரிதமா யழைக்கின்றாரோ
அருடுரோ பதையிந்நேர மபயமிட் டழைக்கின்றாளோ
கருடவாகன கோவிந்தா கடினமேன் வரமுகுந்தா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 13

அருச்சுனன் சுதர்மன்வில்லா லடிபட்டுச் சுழல்கின்றானே
உரிமையா லவனைக்காக்க வோடுகின் றீரோவென்றன்
கருமமே தடையாக்கிற்றோ கடையனேன் பொறுக்கமாட்டேன்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 14

தருமமோ ருருவமான சகாதேவன் பிணித்திட்டானே
துரிதமாய்த் தந்தவக்ரன் துரத்துகின் றானோவென்ன
மருமமோ வழக்கமான மாயமோ மடையனேனைத்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 15

பரமனிப்போது பொல்லாப் பஸ்மாசுரன் றன்னானே
விரவிக்காய்க் குண்ணுழைந்தே வேஷ்டையுற் றிருக்கின்றானே
உரியமோகினியா யன்னோற் குதவிசெய் திடப்போனாயோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 16

குருகுல நாதாவுன்றன் கோபிகா ஸ்திரீகள்போரை
யருமையாய்த் தீர்க்கின்றீரோ யவர்குர லோசையாலே
யருளினேன் கூவுமோசை யணுவுங்கேட் கிலையோவந்தோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 17

தெரிவையர் மேன் மோகித்துத் தியக்கமுற் றிருக்கின்றாயோ
ஒருமையாக் கலைகள்கொண்டோர் மரத்தின்மே னிற்கின்றாயோ
அருடுரையே யென்னன்பே யலக்கணுற் றிருக்கின்றேனே
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 18

உருக்கமாய் மறையோனாலே யுருக்மணி யழைத்திட்டாளோ
சுருக்குடன் செல்கின்றாயோ தொண்டன்முன் வரவொண்ணாதோ
செருக்குட னழைக்கின்றேனே தீவினை பலசெய்தேனே
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 19

தருமமெள் ளளவுஞ்செய்யேன் க்ஷணமுமே நினையேன்பொல்லாக்
கருமமே மிகவுஞ்செய்திக் கவலையிற் சிக்கிக்கொண்டேன்
அரவின்மே னடித்தமாயா வருமதை தேடுந்தூயா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 20

கருணையோ சற்றுமில்லாக் கடுநெஞ்சன் வஞ்சன்றுங்காச்
சிரமையிற் புகுந்துவிட்டேன் றிக்கிலா தனைக்கூப்பிட்டேன்
துரிதமாய் வாராதின்னஞ் சோதனைச் செய்பலாமோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 21

அருளெனுந் தேனேயென்ற னன்புரு வானகோனே
பெருமையோ டிருந்தேனின்று பீடையால் நொந்தேனிந்தத்
தருணமே வரலாகாதா சந்தோஷந் தரலாகாதா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 22

அருமையா யென்னைக்காக்கு மருடெய்வ நீயுண்டேயென்
றொருவரை மதிக்காதென்று முவகையோ டிருந்திப்போது
திருடன்போல் விழிக்கின்றேனே சிந்தைநைந் திருக்கின்றேனே
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 23

கருணைத்தெய் வமேநீயானுற் கடியனுன் னடிமையானல்
தரணியன் பார்க்கராதா சமேதனுய்த் துன்பந்தீர்க்கத்
தருணமே வரலாமையா தடைசெயி னுயிர்போமையா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 24

என்று தன்னிஷ்ட தெய்வமாகிய ஸ்ரீமந் நாராயணரைத் தோத்திரஞ்செய்து உருகியும், பகவான் வாராமையால் ராதாம்பாளிடந் தன் மனதைத் தூதாகவனுப்பி, ஏ ராதா! முன்னம் பகவான் ஸ்ரீராமாவதாரஞ்செய்து பிதுர்வாக்கிய பரிபாலன நிமித்தம் வனம்போகையில், சித்திரகூடத்தில் நின்னுடன் தங்கி உனது துடையின்மீது ஸ்ரீராமர் சிரசைவைத்து நித்ரை செய்கிறபோது, ஜெயந்தனுனவன் காக்கையுருவமெடுத்து அங்கிருந்த ஓர் மாத்தின்மீதிருக்கையில் நினது கச்சை தளர்ந்து கொங்கை வெளி தோன்றக்கண்ட காகாசுரனுனவன் அதனை யாதோ ஒருகனியென்று உன்னி விரைவில் மரத்தை விட்டுப் பறந்துவந்து தன் மூக்கினுல் கொங்கையைக் குத்த உதிரம் பெருகுவதைக்கண்டு, இது கனியல்லவென்று கடுகி முன்போலப் பறந்து அம்மரத்தின்மீதிருக்க, அப்போது கொங்கையிலிருந்து உதிரமானது சிறிய கால்வாயிலிருந்து பெருகுவதைப்போல உதிரம்பெருகிப் பூமியில் விழுந்து பரவுகிறபோது, பகவானை எழுப்பினுல் நித்திரைபங்கமாகு

மென்று கருதிநீயிருக்க, உதிரமானது ஸ்ரீராமர் முதுகிற்பட்டு உடனே நித்திரை தெளிந்து பார்த்து இப்படிச்செய்தவர்கள் யார்? என்று நின்னை வினவியபோது உலகமாதாவும் யாவரையும் புத்திரரைப்போலப் பாவித்து இரக்ஷிக்கும் தயாளகுணமுடைய தாயானதால் ஸ்ரீராமருக்கு உண்டாகிய கோபத்தையறிந்து வாக்கினால் இவன்தான் என்று சொன்னால் சங்கரித்து விடுவாரென்று உன்னிக் கையினாற் சைகையாகக் காகாசுரனைக் காட்டின தாயே! ஸ்ரீராமர் வில்லும் அம்பும் சமீபத்திலில்லாமையால் அருகிலிருக்கும் புல்லைக்கிள்ளி அதற்கு மந்திரத்தை உச்சரித்துக் காகாசுரன் மீது விட்டார். அப்புல்லஸ்திரமானது ஸ்ரீராமர் கையிலிருந்து விடுபட்டு காகாசுரனை விடாது துரத்த அவன் தசதிக்குகளிலும் சென்று அங்கங்குள்ள தேவதைகளைச் சரணம் புகுந்தும், ஒருவராகிலும் தன்னை ஆதரியாக் குறையால் அக்காகாசுரன் திரும்பி வந்து நின் திருவடியில் அபயமபயமென்று சரணாகதியடைய, சுதந்தரமில்லாத நீ மனங்கரைந்து புத்திரவாச்சல்யம் அதிகரித்து நின் திருவடியில் விழுந்துகிடந்த காகாசுரனைத் திருப்பி ஸ்ரீராமர் திருவடிகளில் வீழ்த்தி ஆட்கொண்ட என் அம்மணி! உன்மேலிருக்கும் மோகத்தால் ஸ்ரீகிருஷ்ணபகவான் பூமியில் வீழ்ந்து புரண்டுக்கொண்டிருக்கிறார்; சீக்கிரம் நீபோய் அவரைத் தேற்றி ஜெயதேவிடம் அழைத்துக்கொண்டு வாவெனப் பாடும்போது பகவான் இனி என்னென்னவிதமாய் பாடுவானோவென்று பரமபதத்திலிருந்து உருண்டுக்கொண்டே ஜெயதேவிடம் வந்த மாத்திரத்தில் ககனத்திலிருந்து தேவர்கள் புஷ்பமாரியைச் சலசலவென்று பொழிந்தார்கள்.

## பகவான் பிராமணரூபமாய் வந்து

### சுயரூபத்தைக் காட்டின அத்தியாயம்

விருத்தம்

*அன்பர்தம் மமுதேசோதி யருமறைப் பொருளேதேவ*
*ரின்புர வமுதளித்த யெழிலுறு வமைந்ததேனே*
*நின்புகழ் பகரநீச நெறியிலா வேழையாகு*
*மென்றர மாமோவெங்கு மேகமாம் நெடியமாலே.*

தும்புருநாரதர் தம்புருவீணையை மீட்டிப் பாடினார்கள். அரம்பாஸ்திரீகள் நடனமாடினார்கள். எங்கும்தேவர்கள் - எங்

கும்ரிஷிகள் - எங்குஞ்சித்தர்கள் - எங்கெங்கும் பத்தர்கள் - பரவி நிற்பதையறிந்த ராதாவும் அங்குவந்து காக்ஷிகொடுக்க உடனே இராஜன் தன்கையிலிருந்த சந்திராயுதத்தைக் கீழேபோட்டு விட்டு, ஸ்ரீகிருஷ்ணபகவானையும், ராதாம்பாளையும், சகல தேவ ரிஷிகளையும் வணங்கி நிற்க, அப்போது ஜெயதேவர் பகவானைக் கண்டு ஆனந்தங்கொண்டு பலபல விதங்களாகத் தோத்திரஞ் செய்து சிரசாஷ்டங்கமாக வந்தனஞ்செய்து நின்றுர். அப்போது பகவான் ஜெயதேவைத் தழுவி, "ஓ புண்ணியவானே! என்னை வருந்தி நினைத்த காரணமேதோ? என்னவரம் வேண்டுமோ? கேளும் தருகிறேன்" எனத் திருவாய்மலர்ந்தருளினுர். ஜெயதேவர், "ஓ ஸ்வாமி புண்டரீகாக்ஷா! புருஷோத்தமா! புண்ணியபுருஷா! தீனதயாளா! தீனபந்து! ஓ பகவான்! ஓ தெய்வமே! இப்பாவியேன் தேவரீரைப்பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தும் வேறே வரமுங்கேட்கவேண்டியிருக்கின்றதோ? கொடியேனுகிய அடியேனை என்ன காரணத்தைக்குறித்து உம்மை நினைக்கச் செய்தீரோ? அதைமுடித்து இவ்விறைவனையும் என்னையும் ஆட்கொள்ளும் சுவாமி" என்று தாள்களில் வீழ்ந்தார். அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் ஜெயதேவை மார்புடன் அணைத்துக்கொண்டு "ஓ சீலனே! உன்னுலாகாதகாரியம் என்னுலாமோ? நீ நினைத்தால் பத்மாவதி உயிர்பெற்றெழாளோ? நானென்னும் ஆங்காரத்தைக் காட்டக்கூடாதென்றல்லவோ என்னை இவ்வளவு வருந்தியழைத்தாய். ஓ ஜீவகாருண்ணியத்திற் சிறந்தவனே! ஆசாபாசங்களைத் துறந்தவனே! சாந்தரூபனே! பிரமானந்த நித்திரையில் ரமித்தவனே! உன் மனையாளாகிய பத்மாவதியை யெழுப்பிவிடட்டுமோ? அல்லது இந்த இராஜனுக்குச் சிரஞ்சீவிபட்டங் கொடுக்கட்டுமா" எனத் திருவாய்மலர்ந்தருளினுர்.

அப்போது அரசன் பகவான் பாதத்தில் சிரசாஷ்டாங்கமாய் வந்தனஞ்செய்து, "ஓ சுவாமி! என்தாயாகிய பத்மாவதியை எழுப்பித் தருவதே எல்லா பாக்கியமுந் தந்ததற்குச் சமானமாகும்" எனப் பணிந்தான். அப்போது மாயாவிலாசனுகிய பகவான் பத்மாவதியை நோக்கி, "ஓ அம்மணி! பத்மாவதி நான் வந்தும் நித்திரை செய்யலாமோ? சீக்கிரம் எழுந்து வரலாகாதோ" எனத் திருவாய்மலர்ந்தருளினுர். அப்போது அப்பகவானுடைய திருவாயிலிருந்து ஒரு ஜோதிபுறப்பட்டுப் பத்மாவதியின் திவ்யதேகத்தில் தங்கினமாத்திரத்தில் பத்மாவதி நித்திரைவிட்டெழுந்தவள்போல் எழுந்து, ஆ என் பிராணநாயகா! ஆ என்

பிராணநாயகா! என்று தன் நாயகனைக்காண அவாக்கொண்டு கைகால்கள்வந்து பிரமானந்த முகவிலாசத்துடன் நிற்குங் கணவனைக்கண்டு ஆனந்தங் கொண்டு பலதரம் வலம் வந்து பணிந்து, பாதங்களில் தனது திருநயனங்களைப் பணிந்து, பகவானையும் ராதாம்பாளையும் போற்றிப் புகழ்ந்து, பொங்கிப் பூரித்து மகிழ்ந்து சகல தேவரிஷிகளையும் வணங்கி மிகவும் இணங்கி ஜெயதேவர் பின்பக்கமாய் நின்றாள்.

அப்போது பகவான் ஜெயதேவ் பத்மாவதி கிரவுஞ்சராஜனையும்பார்த்து "நீங்கள் மூவரும் பிரமக்ஞானம்பெற்று பிரமானந்தத்தை யுற்றுச் சுகசீவிகளாய் வாழ்ந்திருக்கக் கடவீர்கள்" என்று ஆசீர்வதித்தார். பின் ஜெயதேவைநோக்கி, "ஓ மஹானுபாவனே! ஜெயதேவனே! நீ கற்ற கல்வியையும் பிரமக்கியானத்தையும் உன்மட்டில் மறைத்துவைத்திருப்பது அழகல்லவே; உலகோபகாரமாய்ப் பக்திமார்க்கத்தையும், முக்திமார்க்கத்தையும் சேர்த்துச் சில சாஸ்திரங்களை ஏற்படுத்தி ஜீவர்களுக்குப் போதித்து என்பதவியை யடையக்கடவாய்" எனத் திருவாய் மலர்ந்தருளிச் சகல தேவரிஷிகளுடன் அந்தர்த்தானமானார். தேவர்கள் பூமாரிபொழிந்தார்கள். ரிஷிகள் 'ஜெய விஜயீபவா" என்று ஆசீர்வதித்தார்கள். பின்பு இராஜன் பத்மாவதியை வலம்வந்து பணிந்து, "அம்மா! என்னையீன்றதாயே! பகவான் தரிசனம் யாருக்குக் கிடைக்கும்? உமது கிருபையாலல்லவோ தரிசித்துக் கிருதார்த்தனானேன். தங்களுடைய கிருபையில்லாவிட்டால் முழுமூடனுக்கும் நாரதாதிகளின் சேவை கிடைக்குமா? ஓ பரமேசுவரி! ஜகதீசுவரி! எனத் தொழுது, ஓ லோகமாதாவே! உம்மை வஞ்சனைசெய்து சர்ப்பனையாற் கொன்ற கொடும்பாவியாகிய என்மனைவியை என்னசெய்யலாம் சொல்லுமம்மா" என்று வணங்கினான். அதற்குப் பத்மாவதி, ஐயா ராஜனே! உன் மனைவியினாலல்லவோ நமது ஸ்வாமிகளுக்குக் கால்கைகள் வந்தன. பகவான் தரிசனந்தந்தது என்று கூறி அரசன் தேவியை அருகிலழைத்து ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு, பலபல உபசாரவார்த்தைகளுரைத்து அத்தியந்த பிரீதியுடன் அனுசரித்தாள். பின்பு இறைவன் ஜெயதேவசுவாமிகளின் திருவடிகளிற்றொழுது, "ஓ சுவாமி! இத்திருவடிகளை இத்தனை நாளாய் எங்கு மறைத்து வைத்திருந்தீரோ? அஞ்யாசமாய் வளர்ந்த காரணமேதோ? ஓ என்னாண்டவனே! நீரே வாமதேவன்; நீரே வாசுதேவன்; நீரே பிரமதேவன்; நீரே ஆதிதே

வன்; நீரே தேவதேவன். நீரே மகானுபாவன்" என்று சுவாமி களின் திருவடிகளில் வீழ்ந்து கண்ணுடன் சேர்த்துப் பலதரம் முத்தமிட்டு ஸ்மரணைகெட்டு ஆனந்தவாரியிற் படிந்திருந்தான்.

ஜெயதேவ் இராஜனை வாரியெடுத்து மார்புடன் அணைத்துக்கொண்டு, பல அன்பான வார்த்தைகள் விண்டு, இராஜன் தேவியை விளித்துப் பல உபசார வார்த்தைகளுரைத்து, இராஜனை முன்னிலும் அன்பாய்ப் பார்க்கச்சொல்லிப் பல ஆசிகள் கூறி, இதுகளையெல்லாம் ஓர் சொற்பனம்போல் நினைத்து, உத்க்ருஷ்டமான சிற்சொரூப சமாதியில் எழுந்தருளியிருந்தார். பின்பு இறைவன் ஆசான் கட்டளைப்படியே அரசாங்கஞ் செய்துக்கொண்டிருந்தான். இப்படி சிலநாள் கழிய ஒருநாள் ஜெயதேவ் பகவான் பக்தவிலாசத்தையும் பரப்பிரமக்ஞானத்தையுந் தொகுத்து நூதனமாகச் சாஸ்திரங்களைச் செய்யும்படியாய்க் கட்டளையிட்டதை நினைத்துப் பகவானுடைய லீலையும் பிரமக்ஞானமும் பூரணமாய் நிறைந்திருப்பது பாகவதமேயாம். அதை விஸ்தீரணமாகச் செய்வதே நலமாயிருக்கின்றது. ஏனெனின், பகவான் பிரதாபமும் லீலையும் பக்தியும் பிரமக்ஞானமும் பிரமக்ஞானிகளுடைய சரிதையும் பகவானுடைய அவதாரங்களும் வருமென்று தேவபாஷையில் வெகு விசித்திரமாகப் பாடிக்கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜி சித்தர் சொல்லத் தொடங்கினர்.

பத்மாவதி உயிர்பெற்ற அத்தியாயம்
முற்றிற்று.



பத்தாவது

## ஜெயதேவர் பாடிய பாகவதத்தைப் பகவான்
### பிராமண ரூபமாய் வந்து வாசித்துச் சுயரூபத்தைக் காட்டின அத்தியாயம்

ஜெயதேவர் பாகவதத்தைப்பாடி முடித்து, ஒருநாள் அரசன் முதல் சகல சாது பிராமணர்களும் சூழ்ந்திருக்குஞ் சபைக்குக் கொண்டுபோனர். சுவாமிகள் வரவைபறிந்த இறைவன், உடனே சிம்மாசனம்விட்டு எழுந்து பாதங்களில் விழுந்து "ஓ சுவாமி! தேவரீர் திருவடிகள்நோக அடியேன்சபைக்கு எழுந்

தருளும்படியான காரணமேதோ? தாங்கள் கொலுமண்டபம் வர நான்செய்த பாக்கியமேதோ? அடியேனை அழைப்பித்தால் வரமாட்டேனோ?" என்று பலபல வார்த்தைகள் பக்ஷத்துடன் உரைத்தார். அதற்குஜெயதேவர், "ஐயா அரசனே! நமதுஇஷ்ட தெய்வமாகிய ஸ்ரீபகவான் திருவாய்மலர்ந்தபடி நூதனமாய் ஓர் கிரந்தம் ஏற்படுத்தினேன். அதைப் பலருங்கேட்கும்படியான இடமிதுவேயாமென்று வந்தேன். இக்கிரந்தத்தை ஓதும்படியான மறையோன் இச்சபையில் யாராவது வந்திருக்கின்றாரா?" என்று அறைந்தார். அத்தருவாயில் பகவான் ஓர் பிராமணரூபந் தரித்து இராஜன் சபையைபடைந்து, "ஓ இராஜேஸ்வரா! நீ சுகஜீவியாய் வாழ்ந்திருக்கக்கடவாய்" என்று ஆசீர்வதித்தனர். அவ்வாறு ஆசீர்வதித்த அந்தணரை இறைவன் வணங்கி, "ஓ சுவாமி! தேவரீர் எத்தேசத்திலிருந்து எழுந்தருளினீர்? அடியேனிடம்வந்த காரணமென்ன? தேவரீருக்குத் தேவையானதென்ன சீக்கிரந் திருவாய்மலர்ந்தருளும்" என்று அஞ்சலியஸ்தனாய் நின்றான். அப்போது பகவான், "ஓ அரசனே! நான் இருப்பது கோகுலபிருந்தாவனம்; பிறந்ததுமுதல் இந்நாள்பரியந்தம் கிரந்தபாஷையை வாசித்துச் சகலசாஸ்திரார்த்தங்களும் அறிந்து வியாகரண முதலானவைகளிற்றேர்ந்து பண்டிதர்களிற் பரமேஷ்டியெனப் பேர்பெற்று, நமக்கு நிகரான வித்வாமிசர்கள் இவ்வுலகில் யாராவது இருக்கிறார்களா? இல்லையா? எனப் பலதேசங்களிலுழன்று ஜெகநாதத்தை யடைந்து உமது பட்டணத்தில் ஜெயதேவென்கிற மகா பண்டிதனிருக்கிறாரெனக் கேள்விப்பட்டு அவரைக்காண இங்குவந்தேன்" என்று உரைத்தார். அப்போது ஜெயதேவர் அதிசீக்கிரமாய் எழுந்து அப்பிராமணருடைய திருவடிகளிற்பணிந்து, "ஓ சுவாமி! அடியேன் பண்டிதனல்ல; உமது பாதசேவைக்குகந்த பணியாளன்" என்று பரிவாக வுரைத்தார். அதற்கு அந்த மாயப் பிராமணன் "நீதானா? ஜெயதேவ் நீதானா? விஷயபோகத்தைத் தரும் மனைவிக்கு உயிர்வர அஷ்டபதிகங்கள் பாடினவன் நீதானா? பந்தபாசங்களைக் கொய்தவன் நீதானா? மனைவிமரிக்க மேல்விழுந்து புலம்பினவன், கண்ணீரால் யவள்தேகத்தை யலம்பினவன், முக்கால் மூடனை முழுமூடன் கொண்டாடினதைப்போலக் கல்வி யறிவில்லா இவ்விறைவன் முதலானவர்கள் உனக்குச் சுவாமிகளென்றும், பிரமக்ஞானியென்றும், பிரசண்ட வித்துவானென்றும் பெயர் கொடுத்த மாத்திரத்தில் பண்டித

ளுய் விட்டாயோ? இதோ உன் வித்வத்திறத்தையும் வாக்கின் தாத்தையும் ஓர் க்ஷணத்திலறிகிறேன் பார்" என்று மூடுக்கான வார்த்தைகளாடினூர். அப்போது ஜெயதேவ் "ஓ சுவாமி! அடியேன் ஹரிஓம் என்கிற வாக்கியத்தின் அர்த்தமே தெரியாதவன்; வியாகாணமாதிகள் சற்றுமறியாதவன்; யானைக்கிணையான உம்முடன் பூனைக்கிணையான வடியேன் பேசவல்லனே? ஒன்றுமறியா இம்மூடனைத் தாங்கள் ஒருபொருளாய் நினைக்காமலுங் கலைக்காமலுங் கிருபைகூர்ந்து ஆட்கொள்ளுமையா" என்று அவர் தாள்களில் வீழ்ந்தார். பகவான் மிகவுங் குரோதங் கொண்டு, "அடா ஜெயதேவ்! கார்த்திகேயன் பிரமாவை எதிர்த்து அகார உகாரம் மகாரமென்னும் திரியாக்ஷரங்கள் அடங்கிய பிரணவாக்ஷரத்தின் அர்த்தத்தைக்கேட்டு அதற்கு அர்த்தஞ் செய்வதற்குக் கூடாமல் திகைக்கும் அவ்வேதாவைச் சிறைச்சாலையிலடைத்துத் தந்தைக்கு அவ்வோங்காரத்தின் இரகசியத்தை உபதேசித்துத் தகப்பன் சாமியென்று பேர் பெற்றதுபோல என்னை ஹரிஓம் என்கிற மூலமந்திரத்தின் அர்த்தத்தின் இரகசியத்தைச் சங்கோசமாகக் கேட்டு என்னை வென்று இவ்வுலகத்துக்கு அரசனுக யுக்திசெய்தாயோ? ஹரிஓம் என்கிற வாக்கியத்தின் அர்த்தந்தெரிந்தால் வேதாகமசாஸ்திரங்களை ஓதவேண்டுமோ? ஹரிஓம் என்கிற வாக்கியத்தின் அர்த்தந்தெரிந்தவனை ஒருவரால் வெல்லக்கூடுமோ? எதிர்த்து உத்தரஞ் சொல்லக்கூடுமோ? அப்பப்பா! ஆரம்பத்திலேயே சூட்டாமற் சூட்டினுய்; உன் பராக்கிரமத்தைக் காட்டாமற் காட்டினுய்; என்னை வாட்டாமல் வாட்டினுய்; இப்படியே அநேக வித்துவான்களை இப்பட்டினத்தில் தங்காமலோட்டினுய்; நானே பண்டிதனென்று நிலைநாட்டினுய்; என்னையும் மூடர்களிலொருவனுகக் கூட்டினுய்; ஹரிஓம் என்கிற வாக்கியத்தால் மாட்டினுய்; எனக்குக் கோபாக்கினியை மூட்டினுய்; உன் பெருமையைப் பாராட்டினுய்; எதோ என்னைச் செயிக்கிறேனெனக் கைதட்டித்தா; இல்லாவிடில் உன் தலையை வெட்டித்தா" என்று மீசையை முறுக்கிக் கோபத்தைப் பெருக்கித் தோள்களைக் குலுக்கி ஜெயதேவ் மார்புடன் மார்பைச்சேர்த்துக் கரத்தைப்பிடித்திழுத்து ஆர்ப்பரித்து அட்டகாசஞ் செய்தார்.

ஜெயதேவ் இதென்ன வல்லடி வழக்காய் இருக்கின்றது; நாம் ஹரிஓம் என்பதே அறியேனென்று உரைத்தால் விபரீதகோபங் கொண்டார், பலவார்த்தைகள் விண்டார், மௌனங்

கலகநாஸ்தி யென்பதைப்போல் இனி நாம் மௌனமாயிருப் பதே நல்ல ஸ்திதியென்று எட்டநின்று கைகளைக் கூப்பிக் கொண்டு பேசாமலிருந்தார். பகவான் "ஓ ஜெயதேவ்! க்ஷாமற் பாசாங்கு செய்கின்றாயோ? துன்மார்க்கனைக் கண்டால் தூரமாய் நிற்க வேண்டுமென்கிற பாவனையின்படியே என்னை எல் லோருந் துன்மார்க்கனென்று அறிந்துகொள்ள வல்லவோ நீ தூரமாய்ப் போய் நிற்கின்றாய். இந்தச் சூதுகளாற்றானு என்னை வெல்கின்றாய். நீ தூரமாய்ப்போனாலும் என்னை வெல் பவனானாலும் உன்னைப் பரீட்சை செய்யாமலும் வாயில்வந்தபடி வையாமலும் நான் போகவேமாட்டேன்" என்று அவர் அருகிற் சென்று முழங்கால்மேல் உட்கார்ந்து ஹரிஓம் என்கிற வாக்கி யத்தின் அர்த்தத்தை நான் அறியாதவனென்றோ எண்ணினை. தர்க்கம் பண்ணினை. ஹரிஓம் என்னும் வாக்கியத்தின் மர் மத்தை நீ பிரமைகொள்ளும்படி யுரைக்கிறேன் பார் என்று சபையை நோக்கி நீங்கள் அனைவோருங் கேளுங்கள்.

அதாவது பக்தர்கள் பாபங்களை அரிக்கப்பட்ட பகவானுக்கே ஹரியென்று சொல்லப்படும். அப்பகவானே பிரணவஸ்வரூபி என்று சொல்லப்படும். பிரணவமென்பது அகார உகார மகார மென்னுந் திரியாக்ஷரங்கள் கூடிய ஓங்காரமென்று உரைக்கத் தகும். இதின் அர்த்தம் பூரண பிரமக்ஞானிகளுக்கன்றி மற்ற வர்களுக்குத் தெரியாது. பிரமமே ஓங்காரமென்று வேதங்கள் முறையிடுகின்றன. பிரணவத்தின் இரகசியந் தெரியாதவர்கள் சகல வேதாகம சாஸ்திரார்த்தங்க ளறிந்தவர்களானாலும் ஒன் றும் அறியாதவர்களேயாம். பிரணவத்தின் மர்மமறியாதவர்கள் பிரமைக்குள் ளானவர்களேயாம். பூரண பிரமக்ஞானியாகிச் சாக்ஷாத்கார தசையடைந்த சத்குரு கிருபையாலன்றிப் பிரணவ வர்த்தந் தெளிதல் வெகுதுர்லபம். வேதாகம சாஸ்திரங்களெல் லாம் ஓங்காரத்தி னுதாரத்தினாலேயே பிரகாசிக்கின்றது. வேதத் தினுடைய சாரம் பிரணவமென்றே யுரைக்கத்தகும். சர்வசிருஷ் டிக்கும் ஆதாரமாயும் ஆதேயமாயு மிருக்கின்றது மூலாக்ஷர மென்றே சொல்லப்படும். பிரணவத்தின் மர்மமறிந்தவனே சுக் ஞானியாகும். அறியாதவனே அக்ஞானியாகும். சகல மந்திரங் களுக்கும் உயிராகிநின்ற மூலாக்ஷரத்தின் மர்மமறியாமற் செய் யும் தபம்-செபம்-யோகம்-தியானம்-வேதாத்தியயனம்-வேதாந்த சிரவணம்-மனனம்-நிதித்தியாசனம் - சமாதி - சாக்ஷாத்காரமும் வீண்முயற்சியாய் முடியும். ஓங்காரம் சமுத்திரமாகும். வேதாக

மங்கள் நுரைகளாகும். பலபலவித்தைகள் பதார்த்தங்களும் ஓங்காரம் லவணமுமாயிருக்கின்றது, ஓங்காரத்தின் இரகசியந் தெரிந்தவர்களே பூதபவுஷ்ய வர்த்தமானமென்னும் திரிகாலங்களை யறிந்த பிரமக்ஞானிகளென்று உரைக்கலாம். பிரணவார்த்த சோதனையினாலே அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம் சாஸ்திரவாதனை லோகவாதனை தேகவாதனை முதலானவைகளும் நிவாரணமாய் திடப்பிரக்ஞையுண்டாக வேண்டும். அஷ்டாக்ஷரத்துக்கும் பஞ்சாக்ஷரத்துக்கும் ஸ்திரமான வலிமை யுண்டாக்குவது பிரணவமேயாம். விருக்ஷங்களுக்கு ஜலமும், ஸ்திரீகளுக்குக் கற்பும், புருஷர்களுக்கு விவேகமும், மேடைகளுக்கு அஸ்திவாரமும் எப்படி ஆதாரமாயிருக்கின்றதோ? அப்படியே சமஸ்த மந்திரங்களுக்கும் ஆதாரமாயிருப்பது பிரணவமேயாம். தானும் பிரமம் ஜகத்தும் பிரமமென்னும் திடமெவனுக்கு வந்ததோ அவனே பிரணவத்தின் இறுதியார்த்த மறிந்தவனும். புத்திவந்தனென்றும், யுக்திசாலியென்றும், விற்பன்னனென்றும் முமூட்சுவென்றும் சிரேஷ்டனென்றும் பண்டிதனென்றும் பக்தனென்றும் முக்தனென்றும் சித்தனென்றும் சுத்தனென்றும் பிரணவார்த்த மறிந்தவனையே சொல்லவேண்டும். பிரணவ பாவ மறிந்தவனொருவனே பிரமத்திலே ஏகீகபாவமா யிருப்பான். மற்றவர்கள் மாயையிற் சிக்கினவர்களாம். பிராணவானுபவ மறிந்தவனே பிராந்திரகிதனென்றும் பிராமணனென்றும், அறியாதவனே பிராந்திசகிதனென்றும் ஸ்வபசனென்றும் சொல்லப்படும். பாலுக்குள் வெண்ணெய்போலவும் எள்ளுக்குளெண்ணெய் போலவும் பரிபூரணமா யிருக்கும் பரப்பிரமத்துக்கு இலௌகீகபாவமாயிராது. வெதிருக்தமாயிருப்பதே பிரமஹத்தியென்று பெரியோர்கள் உரைப்பார்கள்.

மாதா பிதாக்களுக்கு ஐக்யமாயிராமல் மாறுபட்ட தநயனபராதியானதுபோலப் பரப்பிரமத்துக்குஐக்யமாய் நானென்பதருத அகங்காரக் கிரந்தியுள்ள வபராதிக்கு விபரீத குணங்களுண்டாகிப் பிரமத்துக்குத் தவிராவிரோதியாய் மூவர் தேவர் முனிவர்களுக்கும் விரோதியாய்க் குரோதமோருருவாயிருக்கும். ஜீவனே தானுகி ஜராமரணந்தரங்கக் கணங்களிருக்கும் பாசாகரத்துளோர் திரணமாய்வீழ்ந்து கரையேறுவதற்கு ஓர் துறை காணமல் கற்பாந்த காலங்கள் பலகடந்தாலும் தனக்குச் சலனமுந் துன்பமும் நீங்காமல் மேற்படி தரங்கங்க ளெத்தெத்திசையிற் ருவுகின்றனவோ அந்தத் திசைகளில் உழன்று அலைந்து

நிலைகலைந்து இன்பங் குலைந்து யாதொன்றுந் தோன்ருமல் அலைந்து அந்தகாரத்தில் அமிழ்ந்திருப்பான். அன்றி மாயை யென்னுங் கன்னிகை விளையாடுவதற்கு ஓர் பந்தாய்நைந்து மிகவு நொந்து சிந்தாக்கிரந்தனுப்ப பந்தத்தாற் பிணிக்கப்பட்டுக்ஞான ஸ்மரணை கெட்டு மோக்ஷமார்க்கம்விட்டு தொன்றுதொட்டு பிர் மப்பிரளயபரியந்தம் சுழல்காற்றில் அகப்பட்ட இலவம்பஞ்சு போலவும், சூழ்ந்தெரியும் வன்னியின் மத்தியிலுற்ற பன்னகம் போலவும், இருபுறமு மெரியும் குழாயினுள்ளிருக்கும் எறும்பு போலவும், உழன்றுழன்று அலக்கணுற்று இடரடைந்து மிகவு மடைந்து, இறுதியில் நிரையத்துக்காளாவான். "ஓ சபையோர் களே! மூன்றரை மாத்திரையான ஓங்காரத்தின் அம்சமான அகாரம் சாக்ராவஸ்தையென்றும், பிர்மதேவனென்றும் சிரு ஷ்டியென்றும் நாதமென்றும் ருக்வேதமென்றும் மிர்த்யலோக மென்றும் மனதென்றும் சொல்லப்படும். உகாரம் சொப்னுவஸ் தையென்றும், விஷ்ணுவென்றும், ஸ்திதியென்றும், பிந்து வென்றும், எஜுர்வேதமென்றும், சொர்க்கலோகமென்றும், புத்தியென்றும் சொல்லப்படும். மகாரம் சுழுப்தி யவஸ்தை யென்றும், ருத்திரனென்றும் சம்ஹாரனென்றும், களையென் றும், சாமவேதமென்றும், பாதாளலோகமென்றும், அகங்கார மென்றும் சொல்லப்படும். அர்த்தமாத்திரையே துரியாவஸ்தை யென்றும், ஆதிசத்தியென்றும் க்ஞானமென்றும், சாக்ஷியென் றும், அதர்வண வேதமென்றும், மோக்ஷலோகமென்றும், சித்த மென்றும் சொல்லப்படும்; அன்றி, ஓங்காரத்தைப் பிண்டம் அண்டம் பிர்மாண்ட மென்றும், இச்சாசக்தி கிரியாசக்தி ஞான சக்தியென்றும், சத்வரஜ தமோகுணங்களென்றும், இடாபிங் கலா சுழுப்தி நாடியென்றும், கங்கா யமுனு சரஸ்வதி யென்றும், மனம் வாக்கு காயமென்றும், வாணி லக்ஷிமி பவானியென் றும், ஆதிமத்யாந்தமென்றும், மாதா பிதா குருவென்றும், ஆகாமிய சஞ்சித பிராலப்தமென்றும், ஆதியாத்மீகமாதி பௌதிகம் ஆதி தெய்வீகமென்றும், சந்திர சூரியாக்கினி யென்றும் சொல்லப்படும். அல்லாமல் மனசு என்பதிலே ம - என்னுந் தமோகுணமும், ந - என்னும் ரஜோகுண மும், சு - என்னும் சாத்வீக குணமும் அடங்கி யிருக்கின் றது. இதனுல் 96 - தத்துவங்களாகிய ஒவ்வொன்றில் திரியா க்ஷராதிபதிகளாகிய திரிமூர்த்திகளும் இருந்து தங்கள் தொழிலை யியற்றுவார்கள். திரிமூர்த்திகளுக்கு ஆதாரமான திரியாக்ஷ

ரங்கள் இல்லாத வஸ்து எவ்வுலகத்திலும் எக்காலத்திலும் இல்லையென்றே சொல்லத்தகும். அல்லாமல் அகாரம் ஸ்தூல தேகமென்றும், உகாரம் சூட்சுமதேகமென்றும், மகாரம் காரண தேகமென்றும், அர்த்மாத்ரா மகாகாரணதேகமென்றும் சொல்லத்தகும். மூன்று தேகங்களுக்குஞ் சாக்ஷியான மகாகாரணமே பிரத்யேகாத்மாவென்றும், ஆனந்தமென்றும், அனாதிகாரண மென்றும், அசியென்னும் ஐக்யபாவத்தை யளிப்பதென்றும், நித்ய சத்ய வஸ்துவென்றும், நிர்வாணபதமென்றும், சஞ்சுத்த யோகீசுவரர்கள் உரைப்பார்கள். துரியராணியோடுங்கூடிச் சுகித்திருக்கும் ஆத்மராமனைத் துரியாதீதனென்றும், பரமாத்மாவென்றும், பராத்பரமென்றும், பராபரமென்றும், பரிபூரணமென்றும், பரமேசுவரனென்றும் சொல்லுவார்கள். பகவானென்றும் சொல்வார்கள்.

ஆனால் துரியராணியே ஆனந்தமென்றும், ஆனந்தத்தை யனுபவிப்பவனே ஆத்மராமனென்றும் உரைக்கத்தகும். அர்த்த மாத்திரையான மாயையுடன் மற்ற அர்த்த மாத்திரையாய் அவாங் மனோகோசமாயிருக்கும் பிர்மம்கூடி புலப்படாமலே ஓங்காரத்துக்கு இடங்கொடுத்திருக்கின்றது. நிச்சப்தமான பிரமத்திலிருந்து ஓங்காரமும் உண்டாயிற்று. அதில் சப்தமும் பதமும் வாக்கும் வார்த்தையும் சுலோகமும் வேதாகமும் உண்டாயிற்று. வேதாகமங்கள் வாச்சியார்த்தமென்றும், ஓங்காரம் லக்ஷியார்த்தமென்றும் பெரியோர்கள் உரைப்பார்கள். வாச்சாஞானிக்கு லக்ஷியார்த்தந் தெரியாததுபோல ஜாக்ர ஸ்வப்ன சுழுப்தியின் அனுபவமுறைக்கவே சென்று துரியானுபவமுணர்தல் அதிதுர்பலமென்றுஞ் சொல்லவேண்டும். அகாரத்தில் நரரும், உகாரத்தில் சுரரும், மகாரத்தில் ராக்ஷதரும், அர்த்தமாத்திரையில் ஞானிகளும் உற்பத்தியானார்களென்று வேதத்தில் முறையிடுகின்றது. திரிமூர்த்திகளாகுதல் அரிதல்ல. பிரமக்ஞானியாதலே அரிதென்று உரைக்கத்தகும். அன்றி, ஓங்காரம் சகுணபிர்மமாகவும் நிர்க்குணப் பிர்மமாகவுமிருக்கின்றது, எப்படியெனில்? "ஓம் நமோ நாராயணாய ஓம் நமசிவாய" வென்னும் சகுணபிர்மமான பிரதான மந்திரங்களுக்கு ஆதியிலிருக்கின்றது ஓங்காரமேயாம்.

ஓங்காரத்தை யுச்சரிப்பவன் திரிமூர்த்திகளையும் ஆதிசத்தியையும் பரப்பிரம்மத்தையும் நினைத்ததாகும். நிர்க்குண மர்மமான அம்ஸோஹம் என்னும் அஜபாமந்திரமே அர்ச்சுனா நீ

ஜெயிக்கத் தருந்ததென்று பகவானும் சிவோஹம் என்னும் அத்வைத மந்திரமே ஸ்ரீராமா நீ ஜெயிக்கத்தகுந்ததென்று வசிஷ்ட பகவானும் போதித்த மகா வாக்கியங்களில் ஓங்காரமே ஆதாரமாயிருக்கப் பிரணவத்தின் மகிமையை ஒருவராற் சொல்லக்கூடியதோ? "ஓ ஜெயதேவ்! ஓம் என்னும் பிரணவத்தின் அர்த்தம் இன்னஞ் சொல்லப்புகின் ஓ - அதுவென்னும் பிர்மமே. அம்-நானென்றும் நிர்க்குணப் பிர்மைக்கியத்தைக் காட்டும் அத்வைத பாவமாயிருக்கின்றது. எல்லாவற்றிற்கும் ஓங்காரமே பிரதானமென்று அறிந்துக்கொள்ள சரீரத்துக்குப் பிரதானமான மஸ்தகமே பிரமாணமா யிருக்கின்றது, எப்படியெனில்? ஆதியில் பிரமாவான பரப்பிர்மத்திலிருந்து முதல்முதல் ஓங்காரம் உண்டானபடியால் நாமும் ஓங்காரத்தையே ஆரம்பத்தில் உண்டாக்க வேணுமென்று ஓங்காரஸ்வரூபமாய் மஸ்தகத்தை யுண்டாக்கிக் களிப்புற்றுப் பின்பு அவ்வவயவங்களைச் சிருஷ்டித்தான். ஓ ஜெயதேவ்! ஓங்காரத்தின் மர்மம் இன்னம் விரித்து உரைக்க வேண்டுமோ? நான் உரைத்ததற்கு அதிகமான யுக்தியுடன் உரைக்குஞ் சக்தி உனக்கிருந்தால் சொல்லு? என்னை வெல்லு" என்று மல்லுசெய்யும் பூசுரனை ஜெயதேவ் வணங்கி இணங்கி, "ஓ ஸ்வாமி! சூரியனுக்குமுன் கச்சோதம்போலவும், சந்திரனுக்குமுன் சாலியைப்போலவும், அருந்ததிக்குமுன் அகலியைப்போலவும், சமுத்திரத்துக்குமுன் புற்புதம்போலவும், மேகத்துக்குமுன் திவலையைப்போலவும், கற்புள்ளவளுக்குமுன் கணிகையைப்போலவும் இருக்கும் என்னைத் தேவரீர் ஒரு பொருளாக நினைத்துக் கனைத்துத் தர்க்கஞ்செய்ய யோசிக்கலாமோ? இதோ அடியேன் கற்ற கல்வி" என்று தான்செய்த பாகவதத்தை அவர் கரத்திற் கொடுத்து இதை அங்கீகரியும் ஸ்வாமி யெனத் தொழுது, அடக்க ஒடுக்கத்துடன் நிற்கும்போது, அதை மாயாமறையோன் வாசித்துப் பார்த்து ஜெயதேவ் கரத்தைப் பிடித்திர்த்து "இது முன்னோர் செய்ததாயிருக்க, நான் செய்தேனென்று எப்படி யுரைக்கின்றாய்? இவ்விதச் சூதுகளாற்றானே சாதுவென்று பேரெடுத்தாய்?" என்று கலகலவென்று நகைத்தார். அப்போது இராஜன், "ஓ ஸ்வாமி! இது புராதனராற் செய்யப்பட்டதல்ல. எனது சத்குருஸ்வாமிகளே செய்தது" என்று உறுதிகூறினன். அதற்கு பகவான் "அடா ஜெயதேவ்! நீ இது நூதனமாகச்செய்த நூலா? அல்லது நீ இதைப் பார்த்துக்கொண்டேவா? முதியோர் செய்ததை நான் சொல்லிக்

கொண்டே வருகிறேன்" என்று அவர் காத்தில் அப்பாகவ தத்தை யளித்துத் தன் திருவாக்கினுற் சொல்லத்தொடங்கினர்.

அவர் வாக்கிலிருந்து புறப்படும் சுலோகங்களே தான்செய்த பாகவதத்தில் வரிசையாயிருக்கப்பார்த்து காங்களைச்சேர்த்துப் பிரமித்துக்கம்பித்து ஜெயதேவ் ஒன்றுந்தோன்றுதவராய் அசை வற்று நின்றிருந்தார். அப்போது ஜெயதேவ ஸ்வாமிகளின் திருவாக்கினுற் செய்த நவரசாலங்கார அதிமதுரமான திவ்ய சுலோகங்களைச் சொல்லிக்கொண்டேவந்த பகவானுனவர் அவ் வாக்கியங்களில் தன்னைப்புகழ்ந்து துதித்திருக்கும் அர்த்தசாரத் தில் தன் மனதைச் செலுத்தி ஆனந்தபரவசத்தால் தன்னை மறந்து சற்றுநேரம் அசைவற்று நின்ருர். உடனே மாயாரூபம் நீங்கிச் சுயரூபஞ் சகலருக்குங் காணப்பட்டதன்றிப், பிர்ம ருத்தி ராதி தேவர்களுக்குஞ் சந்தோஷமுண்டாகியது. இதனுல் என்று மடையா வின்பமடைந்ததேவர்கள் ஆகாயத்திலிருந்தபடி சலசல வெனப் பூமாரியும் பொன்மாரியும் பொழிந்து களிப்புற்ருர்கள். தேவதுந்துமி தாம்தாமென முழங்கிற்று. தும்புருநாரதர் தம் புருவீணையை மீட்டிக்கொண்டே இராஜசபையில்வந்து நின்ருர் கள். ரிஷிசித்தர்களும் அங்கடைந்து கானராகங்களைப் பாடும் போது பகவான் தன்னைமறந்து தான் முன்போலவே பிரா மணனு யிருக்கிறதாகவேமதித்து ஜெயதேவ் பாடிய பாகவத சுலோகங்களைத் துதிக்கத் துதிக்க இன்பமேலிட்டுத் தம்புரு வீணையினெலிக்குஞ் சரியாய்ப்பாடி ஆவேசமேறினவர்போல் ஆனந்த நிர்த்தனஞ் செய்யத் தொடங்கினர். தாத்திரியசைந் தால் சகலமுமசைவதுபோலப் பகவானுடன் சகலரும் ஆனந் தத்தாண்டவஞ் செய்யத்தொடங்கினர்கள்.

இப்படி நான்குஜாமபரியந்தம் ஜெயதேவ் முதலானவர்க ளுந் தன்னை மறந்து இன்பநடனம் புரியும்போது பரமசிவனர் பார்வதிசமேதனுய் ரிஷபவாகனரூடனுய் அச்சபைக்கு எழுந் தருளிப் பகவான் இருகரங்களையும் பிடித்துக்கொண்டு "ஒ ஜனர் தனு! காளிங்கநிர்த்தனு! ராக்ஷஸமர்த்தனு! என்னுடைய மைத் துனு! உம்முடைய மாயையை நீரேயறியாமல் தன்னை மறந்து இன்பம் நிறைந்து தன்னைத்தானே தோத்திரஞ் செய்துக் கொண்டு இப்படி ஆனந்தத்தாண்டவம் புரியலாமோ? உம்மு டைய கபடத்தை ஒருவராலறியப்போமோ?" என்கிற பற்பல பக்ஷ வார்த்தைகளாடித் துதிக்கும்போது பக்தவச்சலனுகிய பக வான் கண்களைத்திறந்து தன்சுயரூபந் தனக்கு வந்ததற்காக

ஆச்சரியப்பட்டுச் சுலோகங்களைச் சொல்வதைவிட்டு ஜெயதே வைப்பார்த்து மார்புடன் சேர்த்து, "ஓ மாதவனே! பந்தபாசங்க ளில்லாதவனே! உம்முடைய திருவாக்கினுற் செய்த பாகவ தத்தை முதல் நானே வாசித்து அரங்கேற்ற எண்ணங்கொண்டு ஓர் பூசுரனுய் வந்தேன். வாசித்து என்னை மறந்தேன். அரிதான சேவைதந்தேன். மிகவு முவந்தேன். ஆதலால் பழைய பாக வதம் முழுதும் வாசிக்கும் பலனும் நீர்செய்த பாகவதத்தி லுள்ள ஓர் அத்தியாயம் ஓதும்பலனுஞ் சரியாயிருக்கக் கடவது" என்று அந்தர்த்தானமாய் மறைந்தருளினர். உடனே பரமசிவ னுர் முதலானவர்களும் பல ஆசிகள்கூறி 'ஜெயவிஜயீபவா' என்று அந்தாத்தில் மறைந்தார்கள். கேட்டீர்களோ சித்தர் களே யென்று பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்.

பகவான் பிராமணரூபமாய் வந்து தரிசனந்தந்த
அத்தியாயம் முற்றிற்று.

---

பதினேராவது

## ஜெயதேவ் செய்த முப்பது அஷ்டகங்களைக்

### கங்கையில் விடுத்துப் பரீக்ஷித்த அத்தியாயம்

நாபாஜிசித்தர் சித்தர்களைநோக்கிச் சொல்லுவார்: "ஓ சீலர் களே! சத்சங்கத்துக் கனுகூலர்களே! இப்படி பகவான் மறவா யன்பினையளித்து அந்தர்த்தானமாய் மறைந்து போனபின் ஜெயதேவஸ்வாமி களிக்கடலில் அமிழ்ந்தவராய்ப் பகவான் லீலையை அஷ்டகத்தில் அலங்கரித்துப் பாடும்போது, ராதா வின் திருவடி பகவான் திருமுடியில் அணிந்துக்கொண்டா ரென்கிற சொல் தனக்குத்தானே வருவதைக்குறித்து ஆயாச மடைந்தவராய் வேறு அஷ்டகஞ்செய்ய அதிலுமப்படியேவர, இப்படி யிருபத்தைந்து அஷ்டகங்கள் செய்ய அதிலுமப் படியே வர, இப்படி அதை வெளிப்படுத்துவதற்கு அச்சமுற்ற வராய் மறைத்துவைத்து இப்படி எந்த நூல்களிலாவது பாடி யிருக்கின்றதா? ஆராயவேண்டுமென்றும் பெரியோர்களைக் கேட் டறிய வேண்டுமென்றும் அபிப்பிராயங்கொண்டு யாத்திரை செய்யப் புறப்பட்டார். அதையறிந்த பத்மாவதியும் இராஜ னும் கூடவே தொடர்ந்துபோகையில், மந்திரிபிரதானிகள் ஜெயதேவ ஸ்வாமிகளை மறித்து, "ஓ ஸ்வாமி! ரதகஜதுரக நர

வாகனங்கள் வேண்டியதிருக்கக் கால்நடையாய்ப் பிரயாணப்பட்டுப் போகலாமோ? என்று உரைத்தார்கள். அதற்கு ஜெயதேவ் பிரதானிகளை நோக்கிப் புண்ணிய ஸ்தலத்துக்கும் தீர்த்தங்களுக்கும் பெரியோர்கள் தரிசனத்துக்கும் கால்நடையாய்ப் போனாலன்றிப் பலனடையக்கூடாது. ஏனெனில்? ஓர் வாக்கியத்தால் சொர்க்காதிபோகங்களை யெல்லாங் கொடுக்கும் உத்தமர்கள் பாதசாரியாய்ப் பலவிடங்களில் திரிந்துக்கொண்டிருக்க, நான் அவர்களிலும் மேன்மையானவனோ? அற்பமான அரசனிடமே மாந்தர்கள் அடக்க ஒடுக்கத்துடன் கால்கள் கடுக்க நடந்துபோவாராயின் மகாத்துமாக்களின் தரிசனத்துக்குப்போகும் நான் ரதசாரதியாய்ப் போகலாமோ? என்று உரைத்துச் சகல போகங்களையும் வெறுத்து, ஏகாந்தியாய்ப் போகும்போது, இராஜன் மந்திரிகளை நோக்கி "நீங்கள் நமது பட்டினத்தைப் பாதுகாத்துக்கொண்டிருங்கள். நான் ஸ்வாமிகளுடன் போய் வருகிறேன்" என்று உரைக்கப் பிரதானிகள் பஞ்சுபோன்ற பாதங்கள்நோக எப்படி நடந்துபோவீர்களென்று வாட்டமடைய மன்னன் கஷ்டப்படாமல் சுகமும் நஷ்டமில்லாமல் லாபமும் நிஷ்டைசாதிக்காமல் இன்பமும் கிடைக்கவேமாட்டாது. யாத்திரை பலன்வேண்டின ஸ்வாமிகளின் திருவாக்கின்படியே பாதசாரியாய் நடந்தே போகவேண்டும். ஏனெனின்? ஓர் காலத்தில் தர்மர் துரோபதையுடன் சந்தோஷமாய் வார்த்தை யாடிக்கொண்டிருப்பதைப் பார்த்த அருச்சுனன் அபராதியானே னென்று அவ்வபசாரம் நீங்க யாத்திரை செய்தது பாதசாரியாயல்லவோ? பலராமருக்கு கிருஷ்ண பரமாத்மா செய்த சூதால் கோஹத்தி பாதகமேலிட்டு அது நீங்கப் பாதசாரியாய் யாத்திரைசெய்தது பொய்யா? மெய்யா? எனது இஷ்டதெய்வமாகிய ஸ்ரீ கைலாசவாசர் தனக்குற்ற பிர்மத்தி நீங்க இப்பூவுலகில் சஞ்சரித்தது கால்நடையாயல்லவோ? ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீராமாவதாரத்தில் காட்டிற்சென்றது கால்நடையாயல்லவோ? ஓ மதிமந்திரிகளே! மகாதேவன் வாசுதேவன் நளன் அரிச்சந்திரன் முதலானவர்கள் கால்கள் கடுக்கக் கற்கள் முட்கள்மேல் நடந்திருக்க நான் நடக்கக் கூடாதோ? ஐசுவரியம் நீர்மே லெழுத்தல்லவோ? விரித்துச் சொல்லவோ? என்று மறுத்து இராஜரீகத்தை வெறுத்துப் போகையில், அவர் மனையாளுங் கூடவே தொடர்ந்து பலதேசங்களில் திரிந்தும் ஜெயதேவை விடாமற் றொடர்ந்துவரும்போது,

ஜெயதேவ் தன்னுடன்வரும் மூவருடைய கஷ்டத்துக் கிரக்க முற்றவராய் வாரணாசியையடைந்து காசி விஸ்வநாதரைத் தரிசித்து அங்கிருக்கும் பெரியோர்களின் பாதங்களைப் பரிசித்து ஓர்மடத்திற் பிரவேசித்துத் தனக்குற்ற சந்தேக நிவர்த்தியாகாததைக் குறித்து வாட்டத்துடன் நித்திரை செய்யும்போது பரமசிவனார் அவர் கனவிலடைந்து, "ஓ ஜெயதேவ்! என்பேரில் ஐந்து அஷ்டகங்கள் செய்வாயாயின் உனக்குற்ற சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேன்" என்று அறைந்து மறைந்துபோனார்.

உடனே ஜெயதேவ் விழித்து மிகவுங் களித்து உதயமாவதற்குள் காசி விஸ்வநாதர்மீது ஐந்து அஷ்டகங்கள் செய்தார். உடனே காசிவிஸ்வநாதர் ஓர் பண்டிதனாய்ப் பல மாணாக்கர்கள் சூழ ஜெயதேவிருக்கும் மடத்திற் பிரவேசித்து, ஓர் பிராமணனிடம் 'சந்தேக நிவர்த்தி குடாரபண்டிதர் வந்தார்' என்றுரைத்து வாவென் றனுப்பினார். அப்பூசுரன் ஜெயதேவிடம்போய், "ஓ ஸ்வாமி! சந்தேக நிவர்த்தி குடாரபண்டிதர் உமது தரிசனத்துக்கு வந்திருக்கிறார்; சீக்கிரம் வாருமையா" என்று அறைய, அது கேட்ட ஜெயதேவ் உதயமாகாததற்கு முன்பே எந்தப்பண்டிதர் வந்தார்? அல்லது மகாதேவரே இவ்வுருவோடு வந்தாரோ? என்று அதிதுரிதமாய்ப்போய் அப்பண்டிதர் பாதங்களிற் சிர சாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்ய, அவரும் வந்தனஞ்செய்து, ஜெயதேவ் சயனித்திருந்த இடத்திற்சென்று, புத்தகமூட்டையை யவிழ்த்துப் பகவான்பேரிற் பாடிய இருபத்தைந்து அஷ்டகங்களை யெடுத்துக்கொண்டு அவ் வாரணாசியிலுள்ள பண்டிதர்களை யெல்லாம் விளித்து, அஷ்டகங்களை வாசித்துக் காண்பித்து, "ஓ பண்டிதர்களே! வேதத்தின் சிரத்தின்மேற் பகவான் பாதங்களிருக்கின்றதெனப் பல சாத்திரங்கள் முறையிட, இந்த ஜெயதேவ் பகவான் முடிமேல் ராதாவினடிகளிருக்கின்றதெனப் பாடி இருக்கின்றார். இது உங்களுக்குச் சம்மதமாயிருக்கின்றதா" என்றார். பண்டிதர்கள் சீசீ இப்படி மூடனும் பாடமாட்டானென்றறைய, அவ்வாக்கியத்தைக்கேட்ட ஜெயதேவர் அம்பலக்கூத்தன் சொர்ப்பனத்தில் வந்து நம்மை அம்பலத்தில் வைத்துவிட்டானென நாணமடைந்து, ஓ பண்டிதர்களே! நான் மறதியாய்ப் பாடிவிட்டேன்; க்ஷமியுங்கள்" என்றார். அதற்கு சந்தேக நிவர்த்தி குடாரபண்டிதர் பற்களைக் காட்டிக் கெக்கலிகொட்டி நகைத்து, "அடா ஜெயதேவ்! மறந்து பாடினல் ஓரஷ்டகத்திலிருக்கும்; இருபத்தைந்து அஷ்டகங்களிலு மிருக்குமா? அல்லாமல்

மறைந்து மாதாவை மனையாளென்று உரைக்கக்கூடுமோ? நீதானு ஜெயதேவென்னுங் கவீசுவரன்; உன் கவி மற்றெந்தத்தேசத்தில் சிரேஷ்டமடைந்தாலும் இக்காசியில் சிரேஷ்டமடையுமா? மூக் கால்மூடனை முழுமூடன் கொண்டாடுவதைப்போலக் கல்வியறி யாதவர்கள் யாரோ உனக்கு ஜெயதேவ் கவியென்கிற பேர் கொடுத்தார்கள். வீணுக்கெடுத்தார்கள். என்கிற பற்பல வார்த் தைகளாடி, "ஓ பண்டிதர்களே! இந்த ஜெயதேவ் வியாசர் பாடிய பாகவதத்துக்கு இழிவுவர வேறு பாகவதத்தைப் பாடினுனும்; பகவானுல் அரங்கேற்றினுனும். இவைகளெல்லாம் பொய்யா கவே யிருக்கும். அப்படிப் பாடியிருந்தாலும் அதில் எத்த னைப் பிழைக ளிருக்கின்றனவோ? எல்லாமிந்த அஷ்டகங்களைக் கங்கையில்விட்டு எதிர்கொண்டேறுவதன்றி கங்கையும் அங்கீ கரித்தேன் என்று உரைக்காவிட்டால் அப்பாகவதத்தையும் இக்கங்கையிலேயே விட்டுவிடலாம்" என்று உரைத்தார். பண் டிதர்கள் இதுவே சரியெனச் சம்மதித்துச் சீக்கிரங் கங்கையில் அஷ்டகங்களை விடுமென்று ஆர்ப்பரித்தார்கள்.

அப்போது பரமசிவனுர் ஜெயதேவுடைய சந்தேகஞ் சீக் கிரம் நிவாரணமாகும்பொருட்டு அஷ்டகங்களைக் கையிலேந்திக் கொண்டு, "ஓ கங்காபவானி! உனது மணுளன்மீது பாடியிருக் கும் ஐந்து அஷ்டகங்களிலும், பகவான்மீது பாடியிருக்கும் இருபத்தைந்து அஷ்டகங்களிலும், ஓர் தப்பிதமில்லாம லிருக் கின்றது சத்தியமானுல் உனக்குள் விடு; இவைகளை உன் திவ்ய அஸ்தங்களாலெடுத்து என்னிடந் தாரும்" என்று பாகீரதியில் விட்டார். உடனே அந்த ஐந்தஷ்டகங்களும் கங்கையில் ஸ்நானஞ்செய்து எதிர்கொண்டேறிப் போகையில் கங்காதேவி நமது மணுளன் சடைமுடியைவிட்டு நீங்கி வெகுநாளாயிற்று. இன்றைக்குஅவரைப் பார்க்கும்படியாயும் அஸ்தத்துடன் நமத ஸ்தத்தை சேர்க்கும்படியாயும் இன்று நேரிட்டது. இந்த அஷ் டகங்களாலல்லவோவெனக் களிப்புற்றுச் சுயரூபத்துடன் சகல ருக்குங் காட்சிகொடுத்து, "சந்தேகநிவர்த்தி குடாரபண்டிதரே! அக்ஷரம் வார்த்தை சீர் முதலானவைகளிற் குறைவில்லாமல் சிறப்புற்றோங்கிய அஷ்டகங்க ளிந்தாரும்" என்று எல்லாவற் றையும் ஓரேதரமெடுத்துக் கொடுத்தால் நமது நாயகர் மறைந்துபோவாரென்றும் நெடுநாளாய்ப் பிரிந்த கணவனைப் பலதரம் பரிசிக்கவேண்டுமென்னுங் கருத்தால் ஒவ்வொரு பத் திரத்தை எடுத்து இரண்டு காங்களாலும் சந்தேகநிவர்த்தி

குடாரபண்டிதர் கரத்திற்கொடுத்துச் சிவ அஷ்டகங்களைந்தும் எனக்குரியதென்று எடுத்துக்கொண்டேன்'' என்று அறைந்தாள். அதற்குச் சந்தேகக நிவர்த்தி குடாரபண்டிதர், "ஓ கங்காதேவீ! பகவான் முடிமேல் ராதாவினடிக ளிருக்கின்றனவெனப் பாடியது உனக்குச் சம்மதமாயிருக்கின்றதா?'' என்றார். அதற்குப் பாகிரதி எனக்குஞ் சம்மதம்; மூவர் தேவர் மற்றியாவருக்குஞ் சம்மதமாயிருக்கின்றது என்றாள். அதற்குப் பண்டிதர், "ஓ பாகிரதி! நீ சிவன்முடிமேல் என்றும் அடிகள் வைத்திருப்பவளாதலால் சம்மதித்தாய்? எனக்குச் சம்மதமில்லை'' என்று ராதாவினடிகள் பகவான் முடிமேலிருக்கின்றன வெனப் பாடியிருக்கும் இருபத்தைந்து அடிகள் வரைந்திருக்கும் இருபத்தைந்து பத்திரங்களைக் கோபித்தவர்போல் வீசியெறிந்தார். உடனே பகவான் ராதாசமேதனுய்க் கருடவாகனரூடராய்ச் சகலரும் பார்க்க அந்தரத்தில் நின்று இவ்விருபத்தைந்து பத்திரங்களும் எனக்குரியது. மற்றவைகளெல்லாம் உமக்குரியது என்று கங்கையில் விழாமல் தாங்கிக்கொண்டார். உடனே சந்தேகநிவர்த்தி குடாரபண்டிதர் ரிஷபவாகனரூடராய்ப் பார்வதி சமேதராய்க் காட்சி கொடுத்தார்.

அப்போது ஜெயதேவ ஸ்வாமிகள் பகவானைக்கண்டு துதி செய்யத் தொடங்கினர். எப்படியெனில்? அந்தியமில்லாததும் தாண்டக்கூடாததும் காமக்குரோத மோகாதி திமிங்கிலாதிகளால் பயங்கரமாகும் நதியுமாகிய சம்சாரக்கடலைத் தாண்டுவதற்கு ஓடமாகிய அதற்கு சீமை பூமியாகியிருப்பவனும் உபதேச பரம்பரைகளால் அறியப்படத் தகுந்தவனும், அனந்தசக்தியுக்தனும், தேசகால வஸ்துக்களினுல் காணக்கூடாதவனும், உண்மைநாமப் பிரபாவங்களினுலே கர்மயோகஞ் சாதிப்பவர்களுக்குப் பலபிரதானசக்திகொடுக்கும்படியானவனும், பிரமாதி சகல ஆத்மகோடிகளுக்கும்மேலானவனும், நிரதிசயானந்தரூபனும், பிரமாதிகளைப்போல காலவசியனுகாமல் சகல சக்தியுக்தனுகி நித்தியமாகி தேஜோமயமாகிப் பிரகாசிக்கும் திவ்வியமங்கள விக்கிரகத்துடன் கூடி ஆனந்தசொரூபியாகி யிருக்குமவனும், பிரதானத்திற்கு சீமை பூமியாகி தேவவைதிகங்களைப் பரிபாலிக்குமவனுகி, பிரதானமும் ஜீவனும் பிரளயகாலத்தில் லயிக்கும் ஸ்தானமாகி சகலத்திற்கும் மேலாவனென்று சொல்லத்தகுந்த காரணத்துவ சேஷத்வ யுக்தனுகிய ஆகாசாதி விபுதிரவியங்களில் நிறைந்தவனுகி யிருக்கும் ஸ்ரீவிஷ்ணுதேவா! ஜெகத்திற்குக்

காரணமாகும் விராட்புருஷனும், அவனுக்குக் காரணமாகும் ஆங்காரமும், அதற்குக் காரணமாகும் மஹத்தத்வமும், அதற்குக் காரணமாகும் பிரகிருதியுமாகி இந்த தத்துவங்களினுடைய முக்கிய காரணங்களாகி காரிய காரணரூபமாக அகப்பட்டிருக்கும் சுபாவங்களும், அனந்தங்களுமாகும் ஞானபல ஐஸ்வரிய சத்திரூப சுசீல வாற்சல்லிய சௌரிய தைரியாதி சகல கல்யாண குணங்களுக்கு இருப்பிடமானவனுகி கிரியாசொரூபங்களினுல் கர்த்ரு சொரூபங்களினுலும் சேதனுசேதனங்கள் யாவையும் ரட்சிக்கிறீர்.

வேதங்களுக்கு அதிபதியும் வேதவேதாந்த வேத்தியனும் வேதவேதாந்த சாஸ்திரசொரூபனும் நீயேயன்றி வேறல்ல. சாஸ்திரத்திற் குட்பட்டவனென்றும் விவேக மதிகரிக்குமென்றும் சொல்லப்படும் இரண்டுவித ஞானங்களும் வேதாத்தியயனனுகும் பிரமனும், சுருதி அத்தியயனராகும் மனுவாதிகளும் நீயே. பாரபக்ஷங்கள் முதலான தோஷங்களை விட்டவனும் ஜெனனமில்லாதவனுகி நித்தியனுகும் பரப்பிரமமும் நீயே. அப்படிப்பட்ட நீ பக்தர்களைப் பரிபாலிக்கும்பொருட்டு அந்தர வீதியில் நாராயணரூபியாகிப் பிரகாசிக்கின்றுய். ஆகையால் உன்னைச் சேவித்துச் சிந்தித்து சரணுகதி யடைந்தவனுகிய என் விஷயத்தில் நற்கிரியா யோகங்களுக்குக் கெடுதியாகும் ராகத்வேஷ லோப மோகாதி துர்க்குணங்கள் சாந்தமாகவேண்டும் என்று பிரம்பாரத்துதி ஜெபித்து நின்றுர். அத்தருணத்தில் மாணுக்கரெல்லாம் ரிஷீஸ்வரர்களாய்விட்டார்கள். தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். ரம்பையர் நடனமாடினுர்கள். அப்போது பகவான் தன் கரத்திலிருக்கும் இருபத்தைந்து பத்திரங்களையும் ஜெயதேவ் கரத்தில் அளித்து, "ஓ ஜெயதேவ்! என்னுடைய மர்மம் உனக்கு ஒருவனுக்குத் தெரியுமன்றி மற்றவர்களால் அறிந்துக்கொள்ளுதல் லேசானதோ? நடந்ததையே பாடினுய். ஆதலால் நீர் பாடிய பாகவதத்தையும் அஷ்டகங்களையும் அன்புடன் அனுதினம் பாராயணஞ் செய்வோர்களின் இருதயத்தில் வாசமாயிருக்க மனமுவந்தேன். இது நிச்சயம்" என்று அறைந்து மறைந்தார். பரமசிவனுர், "ஓ ஜெயதேவ்! நீசெய்த சிவாஷ்டகங்களையும் உன்சரித்திரத்தையும் சிரவணஞ் செய்வோர்களுக்கு அஷ்டயிசுவரியமுங் கொடுக்க விருப்பமுற்றேன். இது சத்தியம்" என்று உரைத்து மறைந்தார். தேவரிஷிகள் ஜெயதேவாவென்று அன்புடன் உரைப்போர்களுக்கு ஜெயமுண்டா

கக்கடவது என்று ஆசிர்வாதம்செய்து தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு அவ்வாரணாசியிலுள்ள பண்டிதர்களெல்லாம் ஜெயதேவைப் பகவான் என்றே தீர்மானஞ்செய்து சகல உபசாரத்துடன் பூசித்துக்கொண்டுவந்தார்கள். ஜெயதேவ் வாசுதேவனையும் மகாதேவனையும் தரிசித்த சந்தோஷத்தாலும், தபமேலீட்டாலும், பகவானைப் பலவாருகத் துதித்தபடியாலும், நிர்மல மனதுடையவராகிப் பேசுதலும், நடத்தலுங் குறைந்து, மனதில் ஆனந்தம் நிறைந்து, தன்னை மறந்து, திக்கு தேசாதிகளிறந்து பித்தன் உன்மத்தன் சுபாவத்தையடைந்து, காடென்று நாடென்று பாராமல் நடந்து, ஓர்வேளை சோதிசொரூபமாகவும் ஓர்வேளை அரூபமாகவும், ஓர்வேளை பகவானுருவமாகவும், பலர் கண்களுக்கும் புலப்பட்டு உலாவிக்கொண் டிருக்குங்காலத்தில், பத்மாவதி இராஜனை நோக்கி, "ஓ பூபாலனே! ஓதுதற்கரிய சிலனே! ஸ்வாமிகள் தேகஸ்மரணையின்றிச் சாக்ஷாத்காரத்தையடைந்திருக்கிறார். இனி நம்முடன் பேசுவதுந் துர்லபமே. ஆதலால் நீர் உமது தேசத்திற்சென்று நீதியுடன் அரசாங்கஞ் செய்துக்கொண்டிரும்" என்று உரைக்கக் கிரவுஞ்சராஜன் அவ்வுத்தமியின் பாதங்களிற் பணிந்து, "ஓ என்தாயே! கக்கினது பாயாசமானாலும் நக்குவாருண்டோ? அதுபோல அற்பமான ராஜாங்கத்தின்மேல் நிராசையாய் அநித்ய வாழ்வைச் சொர்ப்பனத்தினுலும் நினையாமல் அற்புதமான மோக்ஷவாழ்வைக் கோரிய என்னை அகற்றலாமோ? தந்தை தாய் தாரம் புத்திரர் மித்திரர்களாதி யரசாலும் நித்தியானந்தத்தை யடையப்போமோ? அநித்திய மலபாண்ட தேகத்தைச் சத்தியமென்று நம்பினோர்க்கல்லவோ இராஜபோகம் வேண்டியது. மோக்ஷாபேக்ஷையுள்ளோர்கள் அற்பமான விஷயபோகங்களைப் பரமென நம்புவார்களோ? நம்பி வெம்புவார்களோ? ஓ மாதாவே! நித்தியா நித்தியவஸ்து விவேகமறிந்தவர்கள் அநித்ய தேகசுகத்தைத் தேடுவார்களோ? இகலோகத்தை நாடுவார்களோ? இகபரயோக விராகமுள்ளவர்கள் சுரலோகாபேக்ஷ கொள்ளுவார்களோ? சத்குரு சேவையைத் தள்ளுவார்களோ? சமாதி நிஷ்டை சம்பத்துடையோர்கள் மனது எண்ணப்படி நடப்பார்களோ? குருவாக்கினையைக் கடப்பார்களோ? விஷய வஸ்துக்களைத் தொடுவார்களோ? வைராக்கியத்தை விடுவார்களோ? ஆசிரியரைப் பிரிவார்களோ? முனிவுகொள்ள வறிவார்களோ?

சற்சங்கத்தை நீக்குவார்களோ? சன்மசாகரத்துக் குட்பட்டு ஏங்குவார்களோ? மூமுட்சுத்வபாவமறிந்தவர்கள் மோகாந்தகாரத்தில் மூழ்குவார்களோ? ஏகாந்தியாகாமல் வாழ்வார்களோ? ஓஎன்னன்னையே! என்னையும் போகச்சொன்னையே" என்று அவ்வம்மணியின் திருவடிகளிற் பணிந்தெழுந்து, ஜெயதேவஸ்வாமிகளின் தாள்களின்மேல் வீழ்ந்து ஓவென்று அழத்தொடங்கினர். ஜெயதேவர் அவ்வரசன்மீதிருக்கும் அன்பின்மேலீட்டால் உனக்கு என்னகுறை நேரிட்டது? எனக் கருணையுடன் கேட்டார். இராஜன் பணிந்து உரைக்கலானன். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லுவார்.

அஷ்டகங்களை அரங்கேற்றிய அத்தியாயம்

முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

## பிரமோபதேச அத்தியாயம்

நாபாஜிசித்தர், ஓ சித்தர்களே! கேளுங்களென்று சொல்லத் தொடங்கினர். கிரவுஞ்ச ராஜனனவன் ஜெயதேவஸ்வாமிகளின் திருவடிகளிற் பணிந்து, "ஓம் நமோ சத்குரு பராத்பரா! சர்வவ்யாபக நிர்விகார ஆனந்தமளிக்குஞ் சர்வேசுவரா! அடியேனையாட்கொள்ளும் கருணசாகரா! உமதுகிருபை ஆகாமியமே செய்யும் மோகாந்தகாரன்மேல் வருமோ? வந்தாற் பாவனைப் போக மாட்டேனு? ஓ அனுதிகாரணு! சர்வபரிபூரணு! எனக்குவேண்டியதுபிர்மக்ஞானமே. ஆதலால் ஆத்மானுபவத்தையேசொல்லி ஆட்கொள்ளும்படியாய் உம்மை மிகவும் வேண்டுகின்றேன். ஓ தீனபந்துவே! தினேதினே என்னுயுள் அந்தகனுக்கு இரையாய்ப் போகின்றது; 'ஓடத்திலேறிச் செல்லுபவர்க்கு ஆறும் சுடும்' என்கிற பழமொழிப்படியே ஓர் பிரேதத்தைச் சுமந்துகொண்டு போகும் இத்தூலத்தை ஓர்நாள் ஒருவர் சுமக்கநேரிடும். ஒரு நிமையிலோ, ஒரு மாத்திரையிலோ, ஒரு விகடிகையிலோ, ஒரு கடிகையிலோ, ஒரு முகூர்த்தத்திலோ, ஒரு ஜாமத்திலோ, ஒரு காலையிலோ, ஒரு மாலையிலோ, ஒரு அல்லிலோ, ஒரு எல்லிலோ, ஒரு தினத்திலோ, ஒரு வாரத்திலோ, ஒரு பட்சத்திலோ, ஒருமா

தத்திலோ, ஒரு ருதுவிலோ, ஒரு அயனத்திலோ, ஓராண்டிலோ தசாண்டிலோ, சதாண்டிலோ, கனவிலோ, நனவிலோ, காட்டிலோ, நாட்டிலோ, இடியாலோ, கடியாலோ, புலியாலோ, கிலியாலோ, வலியாலோ, நலியாலோ, கிடக்கும்போதோ, நடக்கும்போதோ, புசிக்கும்போதோ, வசிக்கும்போதோ, இந்தப் பிராணன் நீங்குமேயல்லது ஸ்திரமல்ல. வெட்டவெளியில் வைத்த விளக்கைப்போலவும், பழுத்த யிலையைப்போலவும், கனியைப் போலவும், நீர்மேற் குமிழியைப்போலவும், எழுத்தைப்போலவும், சுழல்காற்றைப்போலவும், பம்பரத்தைப்போலவும், மின்னலைப்போலவும், அறுகுநுனி பனியைப்போலவும் ஒத்த ஆவியை நம்பிப் பாவியாய்ப் போனேன். நிச்சயமில்லா இம்மலவுடலை மெய்யென்று நம்பிப் பொய்யனுய்ப் போனேன். நாயும் நரியும் பேயுங் கழுகும் பிடுங்கித் தின்னும் இப்பிணத்துக்கு மணஞ் செய்து பேதையாய்ப் போனேன். பிரத்தியட்ச நரகமான இத்தனுவுக்குச் சுபங்கொடுத்துப் பலருக்கும் மகவாய்ப் பிறந்தேன். கோழையுங் குருதியும் என்பும் நரம்புஞ் சதையும் பொருந்திய இவ்வூனை நானென்று அஞ்ஞானியாய்ப்போனேன். லவணஞ் சலமல்லவென்றும், பாண்டம் மண்ணல்லவென்றும், ஆபரணம் பொன்னல்லவென்றும், ஆயுதம் இரும்பல்லவென்றும் சொல்வாருண்டோ? அதைப்போலவே தேகம் அநித்தியமென்றும் பிரபஞ்சம் மயேந்திரஜாலமென்றும் சொல்வதே மெய்யன்றிப் பொய்யென்று பிதற்றும் பேதையரைப்போலக் கோதுக்குள்ளானேன். மெய்ஞ்ஞான சாதனத்துக்குரிய அரிதான வாயுளை வீணுய்ப் போக்கலழகோ? காலனெப்போது இவ்வாயுள் முடியுமென்று காத்துக்கொண்டு இருக்கின்றான்.

சூரியனென்னும் நாழியால் ஆயுளென்னுந் தவசங்களையுண்டு முடிவிற் றன்னையுமுண்ணும் எமனுக்குத்தப்பி இவ்வுலகில் யாருமிருக்கவில்லை. குலைபழுத்தவுடன் அடியோடு வெட்டித் தள்ளும் வாழைக் கிணையான இவ்வேழ்மை யாக்கையைக் கோழைபுத்தியால் மாழையால் வைத்திருப்பது நலனே? இராஜரீகமுதலான வியாபாரத்தாலும், தேகேந்திரிய மனோவிகாரங்களாலும், தேகவாதையாலும், மனோவாதையாலும், சஞ்சலமே மிகுதியாய் வளர்ந்துக்கொண்டு வருகின்றது. பொன்னாசை பெண்ணாசை மண்ணாசையென்னும் ஈஷணாத்திரியங்களால் கட்டுண்டு வெட்டுண்டு தட்டுக்கெட்டுத் தடுமாறித் தலைதெரியாமல்

தலைகீழாய் விழுந்து தறிதலையாய்ப் போயினேன். ஒருநாளும் உம்மைப்போல் அந்தமா யிருந்தறியேன். அஞ்ஞானந்த காரத்தாலும் துன்மார்க்கர் உறவாலும், மனேவிச்சையாலும், பஞ்சேந்திரிய வாசையிற் சிக்கிச் சொக்கிச் சம்சாரமென்னும் சாகரத்தில் ஆழ்ந்தும் தாழ்ந்தும் விழுந்தும் எழுந்தும் அவிந் தும் கரையேறுதற்கு ஓர் துறைகாணுமல் வெகுநாளாய் அழு துக்கொண்டு இருக்கின்றேன். பந்தமென்னும் பாசத்தாற் கட்டுப்பட்டேன். மோக்ஷார்த்தத்தையே மறந்துவிட்டேன். ஆ கெட்டேன். அநித்தியமான இவ்வித ஆசையால் நித்தி யத்தைத் தேடாமல் நாசமாய்ப் போனேன். சந்தோஷமோ அணுவளவும் இல்லை; அனுபவிப்பதோ அளவற்ற தொல்லை. ஆனந்தத் தருமநிலையோ தெரியவில்லை; நிலைபிரிவதற்கு எனைப் போன்றவர்க்கு மிகவுந் தொல்லை. பஞ்சவறிவுள்ள மானிட னுய்ப் பிறந்தும் பூமிக்குப் பாரமான மிருகத்துக்கு இணையா னேன். மிருகமாவது ஓர் காரியத்திற்கு உதவும், நானே ஒன் றுக்கும் உதவாப் பிணமானேன். மரணமோ புலியைப்போல் பயங்காட்டிக்கொண்டு முன்னிற்கின்றது. மரணத்தை நினைத் துக்கொண்டாலோ கிடுகிடென்று நெஞ்சம் நடுநடுங்குகின்றது. பிறக்கும்போதுள்ள துன்பத்தைவிட இறக்கும்போது ஆயிரம் பங்கு அதிகமான துன்ப மிருக்குமென்பதற்கு ஓர் சந்தேகமே யில்லை. இது கவனத்தில் வந்தாலோ இருதயம் பிளந்துபோ கின்றது. பிரமஞ்ஞான மில்லாதார்க்குச் சனன மரணத் துன்பம் ஒழியாதென்று அநேகசாஸ்திரங்கள் முறையிடுகின்றது. புருஷ ஜென்மமாய் நரபதியாய் மெய்ஞ்ஞானத்தை யறியும் விவேகி யாய்ப் பிறந்தும் அகண்டானந்தத்தைத் தரும்படியான கருணு நிதியாகிய உம்மைச் சரணுகதி யடைந்தும் பாவத்தை நீக்குஞ் சிவத்தையடையும் மார்க்கந் தெரிந்துக்கொள்ளாமற் போனுல் இனி எப்பிறப்பில் மெய்ப்பொருளைச் சேர்ந்து இப்பிறவிகளை நீக்கிக்கொள்ளப் போகிறேன்? “ஓ சுவாமி! நிஷ்காமி! சிசுவுக் குத் தாயும், விருட்சங்களுக்குச் சலமும், பக்தர்களுக்குத் தெய்வ மும், ஜீவர்களுக்கு உணவும், பிரஜைகளுக்கு இராசனும், தரித் திரர்களுக்குப் பிரபுவும், பகலுக்குச் சூரியனும், இராத்திரிக்குச் சந்திரனும், தர்மத்துக்குச் சாந்தமும், வீரனுக்குத் தைரியமும், வேந்தனுக்குப் படையும், சதிக்குப் பதியும், பதிக்குச் சதியும், தவத்துக்கு வைராக்கியமும், திடத்துக்குச் சிரவணமும், சன்ம பாசத்துக்கு நிராசையும், ஸ்திரீகளுக்குக் கற்பும், புருஷர்களுக்

குக் கல்வியும், கல்விக்குச் சீவகாருண்யமும், மந்திரிகட்கு யுக்தியும், வியாபாரிகட்குத் திரவியமும், உலகத்துக்கு மழையும் துணையாய் இருந்து விளக்குவதைப்போல் அடியேனுக்குத் தாங்களே துணையாய் இருந்து காக்கவேண்டும்'' அன்றி வேறு வழியில்லை. ஏனெனின், அநேக சாஸ்திரங்களை வாசித்தும், இஷ்டதேவதையைப் பூசித்தும், பெரியோர்களை நேசித்தும், அன்பால் விசுவாசித்தும், வறியன்போல் யாசித்தும், பேரின்பத்தையே ஆசித்தும், ஒரு நிமையானாலும் சஞ்சலமற்று ஆனந்தமாய் இருந்து அறியேன். ஆதலால், பிர்மமே ஓர் உருவான தேவரீரே என்னை ஆனந்தக்கடலில் இரமித்திருக்கச் செய்ய வேண்டுமென்று கண்ணீர்விட்டழுது பலதரந் தொழுது பய பக்தியுடன் நிற்கும்போது, கருணாநிதியான ஜெயதேவ் சுவாமிகள் இவன் அதிதீவரப் பக்குவமுடையோனென்று அறிந்து மார்புடன் அணைத்துக்கொண்டு, 'ஓ வேந்தனே! உபசாந்தனே! சர்க்கரையெனச் சொல்வதால் மதுரந்தோன்றுமா? அன்னமென்று உரைப்பதால் பசிநீங்குமா? பாகீரதியென்று அறைவதாற் பாப நிவாரணமாகுமா? தீபமென் றிசைப்பதால் இருள் நீங்குமா? கிரியாபக்தியால் நானற்றுப் போகுமா? வேதாந்தம் என்று இசைப்பதால் சகல சந்தேகங்களும் நிவர்த்தியாகுமா? மந்திரமென்று ஓதலால் சித்தியுண்டாகுமா? ஔஷதமெனச் சொல்வதால் பிணிநீங்குமா? குருவெனப் பகர்வதால் கிருபையுண்டாகுமா? தெய்வமெனச் செப்புதலால் அன்பு உண்டாகுமா? அதைப்போலவே வாசாக்ஞானத்தால் ஆனந்தமுண்டாகுமா? ஓ ராஜசிரேஷ்டனே! மோட்ச அபேக்ஷையுள்ளவனுக்கு முன்னம் வைராக்கியம் இருக்கவேண்டும். ஏனெனில் வைராக்கிய மில்லாக்ஞானம் நிஷ்பிரயோசனமாய் முடியும். ஆனல் வைராக்கியங்களும் அநேகவிதமுண்டு. அதேனெனின்? சாஸ்திரங்களைக் கேட்கும்போது மாத்திரம் அப்படியிருக்க வேண்டும்; இப்படி யிருக்கவேண்டும்; பாபஞ்செய்யவே கூடாது; புண்ணியமே செய்யவேண்டும்; எப்போதும் பகவானைத் தியானிக்க வேண்டுமென்று நினைப்பது புராணவைராக்கியம். பிரேதத்தைக் கொண்டுபோகும்போது மாத்திரம் என்னவாழ்வு, என்ன சுகம், என்ன சம்சாரம், எல்லாம் நிஷ்பிரயோசனம். பிரபஞ்சம் இந்திரஜாலத்துக் கிணையானது என்று நினைப்பது மயான வைராக்கியம். வேதனைப் பொறுக்கமாட்டாமல் இனி புருஷனைப் புணரவே கூடாதென்று உறுதியாய் நிச்சயஞ் செய்துக்

கொள்ளும் ஸ்திரீயைப்போலக் குடும்பத்தில் ஓர் சங்கடம்வருங் காலத்தில் இகபோகங்களில் துன்பமேயன்றி இன்பமணுவளவு மில்லை; ஆதலால் இவ்வாழ்வை நீக்கிப் பேரின்பத்தை யடைய வேண்டுமென்று நிச்சயித்துக்கொள்வது பிரகூதவைராக்கியம். சம்சாரத்தில் கலகம்நேரிட இனி இவர்களுடன் கூடியிருப்பது கூடவேகூடாதென்று அயல்நாட்டையடைந்து கோபமேலீட்டால் தனியனு யிருப்பது சலனவைராக்கியம். அக்கிரமஞ்செய்த இவர்களைவெட்டி இரண்டுதுண்டாக்க வேண்டுமென்கிற குரோதங்கொண்டு தன் பிரதிக்கினையை முடித்துச் சன்யாசியாய்ப் போவது மூடவைராக்கியம். இச்சையான பதார்த்தங்களைப்புசித்துப் போகபாக்கியங்களில் அமிழ்ந்து சோம்பலின்றி இரவும்பகலும் உழன்று எதிர்த்தவர்களைவென்று யாதொன்றுக்கும் அஞ்சாதவனுய்க் கர்வமடைந்திருப்பது இராட்சச வைராக்கியம். பரமசிவன் தன்னையடைந்த பிர்மத்தியை விஷ்ணுவால் அகற்றிக் கொண்டதால் நாராயணனே ஆதிதெய்வமென்றும், திருமாலும் பிரமாவும் அடிமுடியைத்தேடிக் காணுததால் பரமசிவனே ஆதி தெய்வமென்றும், எங்களுடையசமயத்திற்பிரவேசித்துக் காரண குருவைத் தொழுதவர்களுக்கே மோட்சமுண்டென்று தேவதைகளை தூஷிப்பது மதவைராக்கியம். காரண குருவைத்தேடி அவ ரருளால் தனது எதார்த்த ஸ்வரூபத்தையும் பிரமத்தையும் உணராமல் காரிய குருக்கள் போதிக்கும் நானென்பது விர்த்தியடையும் நிலைகளில் நம்பிக்கை வைத்திருப்பது அஞ்ஞானவைராக்கியம். அநித்திய மலபாண்ட தேகத்தை என்றைக்கும் அழியாமல் வைக்கும்பொருட்டுக் காயகற்பங்களைப் புசித்தும் பிராணவாயுவையடக்கி நாதாந்தவசமாகிச் சோதியைத் தரிசித்து முடிவில் சூனிய பாவத்தையடைவது அடவைராக்கியம். வேதாந்த சாஸ்திரங்களைச் சற்குரு முன்னிலையில் விசாரித்துப் பிரபஞ்சம் அநித்தியமென்றும் தான் நித்தியமென்றும் பிர்மமே தானென்றும் எல்லாம் பிர்மமென்றும் திடப்பிரக்ஞையால் ஆனந்தவசமாகும் ஞான நிஷ்டையைச் சாதிக்காமல் இறுமாந்திருப்பது அபல வைராக்கியம் என்றும், இன்னம் பல அஞ்ஞான வைராக்கியங்களிருக்கின்றது இதனல் கற்பகாலங்களிலும் ஆனந்தமடையக் கூடாது.

ஏனெனின்? நானென்னும் மதமானது மதத்தையே தருமன்றி இதத்தையும் சம்மதத்தையும் ஒருநாளுந் தராது. ஞானியானவன் ரணக்களத்தில் தன்னை எதிர்த்தவன் எவனுனலும்

அவனை எதிர்த்துச்செயம்பெறும்அதிசூரனைப்போலவும், நியாய சபையில் உற்றோர் மற்றோர் எளியோர் வலியோரென்கிற பார பட்சம் பார்க்காமற் றீர்க்கும் சத்திய நியாயாதிபதியைப்போல வும், சகலரும் சம்மதிக்கும் சம்மதமான ஞானமார்க்கத்தைக் கண் டிப்பா யுரைக்கவேண்டும். அன்றி பந்தியில் சகலருக்குஞ் சம மாகப் படையாத அநீதனைப்போலவும், ஈ எறும்பு முதலான ஜீவர்களிடத்துச் சமபாவம் பார்க்காத அஞ்ஞானியைப்போல வும், தன்மக்கள் பிறர்மக்களென்று சிசுக்களிடத்திற் றுவிதபாவ மாய்ப் பார்க்கும் உலுத்தனைப்போலவும், பிறர்மானம் தன்மான மென கருதாப் பாவியைப்போலவும், தன் சீவனைப்போலவே அந்ய ஜீவர்களைப் பார்க்கா அசடனைப்போலவும், பூஷணைக்கு மகிழ்ந்து தூஷணைக்குக் காதுகொடா அவிவேகியைப்போல வும், மனதிலொன்றும் வாக்கிலொன்றுமாயிருக்குங் குரோதி யைப்போலவும், சைவமே முக்கியமென்றும் வைஷ்ணவமே பிரதானமென்றும் சொல்லக்கூடாது. ஏனெனின்? ஆயிரம் ஞானிகளின் மார்க்கம் ஆயிரம் விதங்களாயிருக்கும். ஜாக்கிர சொர்ப்பன சுழுத்தி துரியம் துரியாதீதமென்னும் ஐந்தவஸ் தைகளும் சகல ஜீவர்களும் பொதுவாயிருக்கின்றது.

இவ்வவஸ்தைகளைந்தையும் சத்குரு முன்னிலையில் நன்ருய் விசாரித்து அறிந்தாலொழிய ஞானமார்க்கந் தெரியாது. ஞான மில்லாதவர்க்கு நானென்பதற்றுப் போகாது. நானென்பது அற்றுபபோவதே ஞானமென்று உரைக்கத்தகும். ஞானமில் லாப் பத்தியும் சித்தியும், ஞானமில்லா வைராக்கியமும் யோக் கியமும், சூட்சமில்லாத் தியானமும் மோனமும் ஓர்பிரயோசன மும் கொடுக்காது. மோட்சமென்பதை லேசிலடைவதற்கு ஞான வைராக்கியங்கள் முக்கியமாய் வேண்டும். அதாவது, அணு முதல் பிரமாண்டபரியந்தம் பிரமமே நிறைந்திருக்கிறதென் றும், பரிபூரணமாகிய பரப்பிர்மத்தைவிட நானென்பது வேறில் லையே இல்லையென்றும், என்றும் இருப்பது பிரமமென்றும், நானென்னும் அகம்பாவத்தையும் எனதென்னும் அமபாவத் தையும் தலையெடுக்காமல் தவளையை யுண்ணும் சர்ப்பத்தைப் போலப் புசித்துவிடுவது பூரணவைராக்கியம். கானற்சலத்துக் கிணையான பிரபஞ்சத்தை சுத்தமாய் மித்தையென்று உன்னி ஸ்திரீயாதி போகங்களைக் காகத்தினெச்சத்தைப் போலெண்ணி மனதில் வருகிற நினைப்புகளையெல்லாம் மாய்த்துக் காமக்குரோ திகளென்னும் கள்வரை அடியோடு வெட்டிச் சாய்த்துக்

குடும்பத்தை விர்த்திசெய்யவேண்டுமென்கிற ஜீவேச்சையைத் தேய்த்து ஆனந்த சமுத்திரத்தில் கருவிகாணாதிகளைத் தோய்த்துத் தன்னையறிந்து பிரமமாத்திரமா யிருப்பது எதார்த்த வைராக்கியம். ஆசாரியர்மேல் அதிக பிரீதியுடையவனாய் எப்போதுஞ் சாதுக்கள் கூட்டத்தைவிடாமல் அனுசரித்து சந்ததம் தாம் பிர்மமென்று மனனம்பண்ணி சரீரபாவனையை நீக்கிச் சங்கல்ப விகல்பங்களைப்போக்கி பாமரத்தைத் தூளாக்கி அகமுகத்திற் பாப்பிரமத்தை நோக்கித் தன்னைப் பிர்மத்துக்குள்ளாக்கி நிர்விகல்பனாய் அகண்டானந்த நிராமயமான சாட்சியாயிருப்பது சத்பாவவைராக்கியம். கர்மங்களெல்லாம் குணங்களாற் பிரவர்த்திக்கின்றது.

நானோ குணாதீதன் கர்மபக்தியோகங்களால் ஓர் பிரயோசனமு மில்லையென்று நிரேதுவாய் ஒன்றையுங் கேட்கா வாக்கு மௌனமும், ஒன்றையும் நினையா மௌனமும், ஒன்றையுமிச்சிக்கா ஜீவமௌனமும் பெற்றுச் சமாதி நிஷ்டாபரனாய் அத்வைதமா யிருப்பது அபாவவைராக்கியம். எல்லாவற்றையுஞ் சொற்பனமாய் நினைத்துச் சுகதுக்கதீதனாய் த்விதியுக்த சந்துஷ்டனாய் நானீயென்னும் துவிதபாவ மில்லாதவனாய்த் தானே தானாய்ப் பிரபஞ்ச வெத்தனத்தைத் தள்ளிப் பிரவமித்ய வெத்தனமே மேலிட்டுச் சொப்பனத்திலும் இகபோகங்களை நினையாமலிருப்பது ஸ்தானவைராக்கியம். சுகதுக்கமயமான சரீரம் பிராப்தாதீனமென்றும், பிராப்தப்பயனே சுகதுக்கமென்றும், தேகபோஷணையும் தேகபீதியையும் விடுத்து விதிநிஷேதங்களைத் தள்ளித் துக்கமும் சுகமும் வந்தாற் சமமாய்ப் பார்த்துச் சகல சந்தேகங்களையும் பேர்த்துத் துரியதிருஷ்டியை மேவியிருப்பது திடவைராக்கியம். பிராலப்தமென்னும் ஆசனத்தின்மீது உறுதியாயிருந்துக்கொண்டு ஞானக்கினியால் அஞ்ஞான ஆபரண விக்ஷேபாதிகளைப் பஸ்பமாக்கிக் காலபயத்தை நினைக்காமல் பித்தன் உன்மத்தன் சிசு இராஜன் சுபாவத்தையடைந்து நிர்த்தொந்தனாயிருப்பது விச்சிரமவைராக்கியம். ஆலஸ்யம் நித்திரை நிந்தாஸ்துதியைவிட்டுத் தேகஸ்மரணைகெட்டு அகண்ட சிரவண மனனங்களாற் பூர்த்தியடைந்து பரமாத்மாவில் ஐக்கியமாய் மௌனமாயிருப்பது சம்மதவைராக்கியம். பேரிடி விழுந்தாலும் பயப்படாமல் நான் விநாசன், அவிசேஷன், அதுலன், அசலன், அனுமயன், பரிபூரணன் ஆதலால் எனக்கு மரணமேது ஜனனமேது பாவமேது புண்ணியமேது நரகமேது மோக்ஷமேதுஎனக்

குள்ளாகவே இப்பிரபஞ்சம் முழுமித்தையாய் உதித்து ஒடுங்கு கிறதென்று. நிற்சலனமாயிருப்பது விசாரவைராக்யம். யாதொரு வியாகுலமு மில்லாமல் பிர்மம் நிர்வசன வஞதி அதற்கேது உபாதியென்று நிர்ப்பந்த நிர்ச்சிந்தனுப் அயிக்கிய சுபுத்தியுடையவனுப் பிரமம் நிர்விகாரம் நமக்கேது விகாரம் என்று கல்ப நாமரூபத்தைக் கெடுத்துச் சுயம்புவாய்ச் சாவகாசமாய் ஒரே நிதானமாய் நிவாத தீபம்போலவும், நிஸ்தரங்க சமுத்திரம் போலவும் இருப்பது நிர்வாணவைராக்கியம் என்று அனேக ஞானவைராக்யங்கள் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கின்றன. இது ஞானயுக்தி வைராக்கியம். இதனுல் வஸ்துலாப பாக்கியம் வஸ்து லாபத்தால் வரும் சிலாக்கியம். சிலாக்கியந்தரும் மேலான யோக்கியம். யோக்கியர்க் குரைக்கத்தகுந்தது மகாவாக்கியம். மேற்சொன்ன ஞானவைராக்கியங்களன்றி மற்ற வைராக்கியங்கள் விட்டம்பநம் உத்தண்டகல்பநம் என்றும் சொல்லப் படும். எதெது மனோவாக்குக் கோசரமா யிருக்கின்றதோ அதுக ளெல்லாம் கற்பிதமென்றே நினைக்கவேண்டும். மனோவாக்குக் கோசரமாய் வேதாதீதமாய் மூவரும் தேவரும் மற்றியாவரும் போற்றும் பொருளானது எதுவோ மூகபாவத்தைக் கொடுக்கும் வஸ்து எதுவோ அதுவே சத்தியக்ஞானனந்த நித்ய நிர்மலமா யிருக்கும்.

பரப்பிர்மமென்றும், பரப்பிர்மமே ஆதிதெய்வமென்றும், இதில் ஐக்யப்பட்டவர்க்கே ஆனந்தமென்றும், ஆனந்தமே மோக்ஷமென்றும் சொல்லப்படும். சந்திரகிரணத்தைப் புசித்துத் திருப்தியாகும் சகோரபட்சியைப்போல ஞானரசனையான பிர்மானந்தத்தைப் புசித்துத் துரியபூமியில் வசித்து நானென்பது நசித்துத் தேகேந்திரியங்கள் முசித்து பரப்பிரமத்தில் ஐக்யப் பட்டு இளைப்பாறியிருத்தலும், எழுதலும், மறந்து பிர்மானந்தம் நிறைந்து நடத்தலும், பேசலுங் குறைந்து, தேகாபிமானத்தையுந் துறந்து சொஸ்தனுய்ச் சகோரபட்சிக்கு உணவாகியும், எங்கும் சீதளபிரகாசமாய் நிறைந்திருக்கும் சந்திரனைப்போல உனக்குள்ளே குளிர்ச்சி யடைந்து, அந்தக்கரணுதிகளுக்குஞ் சீதளத்தைத் தந்து குறையாமல் பரிபூரண ஸ்வரூபமாகிப் பிரபஞ்சமயமாகாமல் அதிகுப்தனு யிருப்பாயப்பாவென்று செல்லும் பரமாசாரியராகிய ஜெயதேவஸ்வாமிகளின் திவ்விய திருவருட்டாமரைகளிற் பணிந்து, இருகண்களையுமணிந்து, இவரே பரமேசுவரனெனத் துணிந்து நானென்னும் அகங்காரந்

தணிந்து, "ஓ என் சத்குருநாயனே! மதுரமொழிகளை யுரைக்கும் வாயனே! இவ்வுலகிலுள்ள சகலருமேற்றுந் தூயனே! என்னைப்போன்ற எளியோர்களுக்கு மிகவும் நேயனே! இப்படிக்கு யதார்த்தமாய்ச் சன்னல் பின்னலாய் திருவாய் மலர்ந்தருளினல் முழுமூடனாகிய அடியேன் தெரிந்துகொள்வது எப்படி?" என்று இராஜன் பிரார்த்தித்தான். அதற்கு ஜெயதேவ் சுவாமிகள் ஓ அரசனே! பிரஜைகளுக்குள் ஸாஹஸனே! பிர்மானந்தத்தை விரும்பினவன் முன்னம் சகுனமாகிய திரிமூர்த்திகளை யாவது நிர்க்குணமாகிய பரம்பிர்மத்தையாவது அன்பாய் உபாசிக்கவேண்டும். இதனல் அக்கினியில் வீழ்ந்த சருகைப்போலச் சகல ஆகாமிய பாபங்களும் பஸ்பமாகிப் புண்ணியம் மேலிடும்.

இப்புண்ணிய மேலீட்டால் அநித்தியமாகிய சம்சாரம் துன்பமாய்த் தோன்றுவதன்றி நித்தியமான மோக்ஷமார்க்கத்தைக்காட்டும் சத்குரு தரிசனங் கிடைக்கும். அந்தச் சற்குருநாதனுக்கு அன்புடன் பணிவிடை செய்வதால் பெருங்காற்றால் சிதறிப்போகும் மேகத்தைப்போலச் சஞ்சித கர்மங்களெல்லாஞ் சிதறுண்டுபோகும். இதனல் அதிக சந்தோஷமுண்டாகும். பின்பு ஆசாரியர் உபதேசிக்கும் மகா வாக்கியத்தை ஏகாந்த ஸ்தானத்தில் இருந்து தைலதாரைபோல தியானிக்கவேண்டும். இதனல் காற்று இல்லாவிடத்துள்ள தீபத்தைப்போலச் சகல சஞ்சலங்களும் நீங்கி, ஏகாக்கிரகசித்தம் உண்டாகும். பிறகு சத்குருமுன்னிலையில் தேகத்தையும் இதில் இருக்கும் துவாரங்களையும் இதனுள் உலாவும் சுவாசத்தையும் இதினில் இருந்து உதிக்கும் அந்தக்காணங்களையும் இவைகளை யெல்லாம் நானென்று இருக்குஞ் ஜீவனையும் இதனுக்கு ஆதாரமான சுத்த சூன்னியமாகிய அஞ்ஞானத்தையும், ஜாக்ரா அவஸ்தையில் கருவிகளின் சேஷ்டையையுஞ் சொப்பனத்தில் மனக்கூத்தையும் சுழுப்தியிற் சூனியத்தையும் அறிந்துக்கொண்டு இருக்கும் சாக்ஷியாகிய தானும், இப்படியே சராசரங்களிலுஞ் சாக்ஷியாயிருக்குஞ் சர்வசாக்ஷியாகிய பிரமமும் ஒன்றேயெனக்காட்டும் மகா வாக்கியார்த்த சிரவணஞ் செய்யவேண்டும். இதனல் சூரியோதயத்தால் நீங்கும் இருளைப்போல் அஞ்ஞானம் நீங்கிப்போம். பின்பு தேகம் அநித்தியம், நாம் நித்தியம், இந்திரியங்கள் துக்கமயம், நாம் ஆனந்தமயம், அந்தக்கரணஞ் சலன சுபாவம், நாம் நிர்சலன சுபாவம், வாயு தேகத்துக்கு ஆதாரம், நாம் சமஸ்தத்துக்கு ஆதாரம், ஜீவன்

நானெனும்பாவம், நாம் நானென்றபாவம், அஞ்ஞானம் சுத்த சூன்யம், நாம் அகண்ட பரிபூரணமென்று மண்டூகேத்தின் கண்டதைப்போலவும், சிசுக்களின் உச்சியைப்போலவும், மானிடர்கள் இருதயத்தைப்போலவும், சதா மனனம் பண்ணவேண்டும். இதனால் தீர்ப்பானபின் வாதியின் சந்தேகமற்றதுபோலச் சகல சந்தேகங்களுந் தலையெடுக்காமற் சாகும். பிறகு தேகாதிகள், நாமல்லாததால் நமக்குத் தர்மாதர்ம பந்த மோக்ஷ ஜராமரணங்கள் முக்காலத்திலுமில்லை. பல துளிகளுங்கூடி வெள்ளமானதுபோலச் சகல சாக்ஷிகளின் கூட்டமே சர்வ சாக்ஷியாகிய பிரமமென்றும், பிர்மமே சாக்ஷிஸ்வரூபமாகிய நானென்றும், ஜனனமில்லா வெனக்கு மரணமேதென்றும், ரூபமில்லா வெனக்கு விகாரமேதென்றும், சங்கல்பமில்லாவெனக்கு விகல்பம் ஏதென்றும், மாணம் இல்லாமல் எனக்குப் பயமேதென்றும், எங்கும் பரிபூரணமாய் இருக்கும் எனக்குத் தேசமேதென்றும், முக்காலத்திலும் ஓர் இயல்பாயிருக்கும் எனக்குக் காலம் ஏதென்றும், என்றைக்கும் அழியாமலிருக்கும் என்பால் முன்னும் பின்னும் இத்தையான இந்திரஜால வித்தையைப்போன்ற இப்பிரபஞ்சம் முழுமித்தையென்றும், என்று மழியாதிருக்கும் பிரமமே நானென்பதற்குச் சந்தேகமேயில்லை என்றும் திடமாய் நிதித்தியாசனத்தாற் றெளிந்துக்கொள்ளவேண்டும்.

இதனால் தீபமேற்றியபின் சர்ப்பபயம் நீங்கிப் பழுதை யென்று காலாற் றள்ளிவிடுவதுபோலப் பிரபஞ்சம் மெய்யென்றும், தேகந் தானென்றும், பந்தமோக்ஷங்கள் உண்டென்றும் நினைக்கச் செய்யும் விபரீதபாவனை யொழிந்துபோம். பிறகு தேகமிருந்தாலென்ன? மரித்தாலென்ன? காட்டில் இருந்தாலும் நாட்டில் இருந்தாலும் பிராலப்தாதீனமான இத்தூலம் சுகத்தையும் துக்கத்தையும் அனுபவித்தே நீக்கவேண்டு மென்றும், பலதாம் இச்சித்து நினைத்தாலும் வராது. வரவே வராது. பலதாம் வேண்டாம் என்று நிக்கிரகித்தாலும் போகாது. போகவே போகாதென்றும் நிரேதுவாய் சகல இச்சைகளு மற்று புற்றின் உள்ளிருந்து புறப்படும் ஈசலைப்போல உள்ளத்தில் இருந்து உதிக்கும் சங்கல்பங்களை இந்திரியங்களின் வழியாய்ச் செல்லாமல் மீனை யுண்ணும் கொக்கைப்போல் உண்டு இச்சையென்னும் மடுவிலிருக்கும் நினைப்பென்னும் மச்சங்களையெல்லாம் நாசஞ்செய்து இச்சையின் வழியால் மனதைச் செல்லாமல் நிக்கிரகித்து நிஸ்தரங்க சமுத்திரத்தைப்

போல் அசைவற்றுக் கூடஸ்தம் பிரமமாத்திரமா யிருப்பது சமாதியென்று சொல்லப்படும். இதனுல் சுழூத்தியில் உண்டாகுஞ் சுகத்தைப்போலக்கண்டு ஆனந்தமுண்டாகும். இப்பேர்க்கொத்த எல்லையில்லாச் சுகானந்தக் கடலிற் படிந்து தன்னை மறந்து தலைவனிற்கலந்து திக்கு தேசாதிகளிறந்து திருக்கு ஸ்வரூபத்திற் கரைந்து எங்கணும் நிறைந்து மூகபாவத்தையடைந்து தான் இன்னுனென்றுந் தெரியாமல் சுத்தா சுத்தத்தையுங் குறியாமல் பேசுவதும் உண்ணுவதும் சொர்ப்பனத்திற் கண்டுங் காணுத காட்சிபோல் உணர்ந்தும் உணராமல் பேயன் பித்தன் உன்மத்தன் சிசுவைப்போலாகி அரிஹராதிகள் பிரத்தியட்சமானுலும் மாயாமயனென்று அறிந்து தலையரிவதுந் தெரியா ஆனந்தாவேசம் மேலிட்டு சாக்ரசுழூப்தியின் நிலையை மேவி பிரமமாத்திரமாயிருப்பது சாக்ஷாத்காரம். இதனுல் கற்புள்ள கன்னிகைக்குச் சாயுச்சியங் கிடைப்பதுபோலச் சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் நாலுபதங்களுக்கு அப்பாற்பட்ட ஐந்தாம்பதமாகிய ஆனந்தமாத்திரமான கைவல்லியங் கிடைக்கும். ஆதலால் சகல பற்றுக்களுமற்ற இராஜனே! சிறப்புற்ற போஜனே! பிர்மமே இஷ்டதெய்வமென்றும், தெய்வமே சத்குருவென்றும், குருசேவையே சகல கிரியைகளென்றும், குருவுபதேசமே வேதமென்றும், வேதமுடிவே வேதாந்தமென்றும், வேதாந்த சிரவணமே மோக்ஷமார்க்கமென்றும், மோட்ச யிச்சையே தபோபலமென்றும், தபோபலமே மனனமென்றும், மனனமே நித்தியாசனமென்றும், நித்தியாசனமே சமாதிநிஷ்டையென்றும், நிஷ்டையே சாக்ஷாத்காரமென்றும், சாக்ஷாத்காரமே பிர்மமென்றும் பிர்மமே ஆனந்தமென்றும், ஆனந்தமே முக்தியென்றும், நிச்சயமா யறிந்துக் கொள்ளவேண்டும்'' என்று பின்னுஞ் சொல்லத்தொடங்கினுர்.

"ஓ நரபதியே! முக்கியமாகப் பரமாசாரியர்மீதும் இஷ்டதேவதையின் மீதும் சிரவணுர்த்தங்களின்மீதும் சிரத்தை பூர்ணமாயிருக்கவேண்டும். பரமாசாரியர் மீதிருக்கும் சிரத்தையானது பரமக்ஞானத்தைக் கொடுக்கும் இஷ்டதேவதைமீதிருக்கும் சிரத்தை பாபவிமோசனமாக்கும். சிரவணுர்த்த சிரத்தை சகல சந்தேகங்களையும் மாற்றும். சிரத்தை யல்லாதவனுக்கு ஞானம் லபிக்கமாட்டாது. எப்படி ருதுவாகாக் கன்னிகைக்கு கர்ப்பந் தரிக்காதோ அப்படியே சிரத்தை யில்லாதவனுக்கு ஞானுர்த்தம் மனதில் தரிக்காது. சிரத்தையே ருது;

உபதேசமே விந்து, ஞானமே கர்ப்பம், ஆனந்தமே சிசுவென்று உரைக்கத்தகும். குரு கிருபையில்லாவிட்டால் சிரவணுதிகள் பலிக்கமாட்டாது. தன்னை மறக்கிற பரியந்தம் மேற்சொன்ன மூன்றினிடத்திலும் சிரத்தை பூரணமா யிருப்பவனுக்கே பிர்மானந்தம் உதயமாகும்.

எப்போது ஆசாரியருடைய பரிபூரணக்கிருபை பெறுவானே அப்போதே உதயமாகும் ஞானப்பிரகாசம். அற்றுப் போகும் அஞ்ஞானபாசம். விஸ்தரிக்கும் ஆத்மவிலாசம். இருக்காது சிந்தனம். லவலேசம் சஞ்சிதகர்மங்களாய்ப் போகும். நாசம் தன்னை மறக்கச் செய்துவிடும். அப்பா பிர்மோபதேசம் சகல பற்றுக்களும் அற்றுப்போகும்படிச் செய்யும்பார். சாதுக்கள் நேசம் இவ்வளவு மேன்மையானது பார் குருவிசுவாசம். "ஓ இறைவனே! தேகம் அசேதனம் மூடம் சடம் நீ நித்திய சுக் ஞானசேதனம் தேகம் கண்டிதரூபநாமம் நீ அகண்ட பரிபூரண நிருப நிர்நாமம் தேசம் விகாரமல துக்கம் நீ நிர்விகார நிர்மலானந்தம் மூக்தனுன உனக்கேன் இனி தேகாபிமானம்; உன்னுடைய ரூபம் என்றைக்கும் ஒரே நிதானம்; உன்னை இப்படி யார் செய்யப்போகிருர்கள் சமாதானம்? உன்னுடைய ரூபம் யாராலுஞ் சொல்லுதற்கரிய மோனம். இதுவே வேதமுடிவான யதார்த்தக்ஞானம். மற்றவைகளெல்லாம் மூடக்ஞானம். மூகபாவத்தையடைந்திருப்பதே பிரமத்தியானம்; தற்சுதந்தரமற்றிருப்பதே ஆசாரியருக்கு அளிக்குந் தானம்; நான் என்பது அற்றவர்க்கும் உண்டோ ஈனம்; நானந்த பிர்மக்ஞானியே மூவர்க்குஞ்சமானம்; நானற்றபேர்க்கு உண்டு நாரதாதிகளின் சன்மானம். ஓ மன்னவனே! தேகத்தை நடப்பிப்பது பிராணன்; பிராணனை நடப்பிப்பது ஜீவன்; ஜீவனை விளங்கச்செய்வது ஆத்மக்கியானம். ஆதலால் தேகாதிகளை நானல்லவென்றே இருக்கவேண்டும். பிராலப்தாதீனமான இத்தேகத்தைக் குறித்து உனக்கு அக்கரையென்ன? தேகாபிமானத்தை இன்றுடன் விட்டுவிடு. உன்னை நீயே நன்ருய் ஆராய்ந்துப்பார். தனக்குள் ஆராய்பவர்க்கே எல்லையற்ற ஆனந்தம் உண்டாகும்.

தேகாதிகளை அசைவற நிறுத்தினவனுக்கு நித்திரானந்தம் வந்து அடைவதுபோல் துரியதிருஷ்டியை ஏவிப் பிரமமாத்திரமா யிருப்பவர்க்கே ஆனந்தோதயமாகும். நித்திரையானது தன்னை மறக்கச் செய்வதுபோல ஆனந்த நித்திரை உன்னை மறக்கச்செய்யும். நீ முக்காலத்திலும் முக்தனுகவே யிருக்

கின்றாய். இனிமேல் சங்கை செய்வாயானுல் பந்தத்துக்கு உட்பட்டுப்போவாய். திரிகுணங்களும் திரிகுண சேஷ்டைகளும் பஞ்சபூதங்களும் பஞ்சகர்த்தர்களும் மாயையால் நிர்மாணிக்கப்பட்டது. மாயையோ மித்தையால் நிர்மாணிக்கப்பட்டது. நீயோ சர்வசாட்சி. இவைகளை யெல்லாம் சாட்சியா யிருந்து அறிகிற உனக்கு மாயையும், திரிகுணங்களும், பஞ்சபூத விகாரங்களும் ஒருகாலத்திலும் இல்லை. நீ பிருதிவி, அப்பு, வன்னி, வாய்வு, ஆகாசங்களிலும் நிறைந்திருக்கும் பிர்மமேயாம். இவ்வித வைக்கிய வத்விதானு பலத்திறைலே நானென்னுஞ சீவ பாவம் ஒழிந்துபோம் என்கிற பற்பல வேதாந்த ரகசியங்கள் உரைத்து, "ஓ பூபதியே! இந்த அனுபவமே நான்கு வேதத்திலும் வசிஷ்ட சங்கிதை, சூத சங்கிதை, பகவத்கீதை, ஆத்மகீதை, ராம கீதை. உத்தர கீதை, ரிபுகீதை, குருகீதை, பாண்டவ கீதை, பிரமகீதை, அஷ்டவக்கிற கீதைகளிலும், வேதவியாசருரைத்த பதினெட்டுப் புராணங்களில் தசசிவபுராணங்களிலும். நான்கு விஷ்ணுபுராணங்களிலும், உபய பிர்மபுராணங்களிலும், சூரிய புராணம், அக்கினிப் புராணங்களிலும், கணபதிபுராணம், சக்திபுராணம் முதலான புராதன புராணங்களிலும் சொல்லியிருக்கிறதைத் தப்பென்று மதபேதத்தால் திரஸ்கரிப்பவர்களுக்கு இரௌரவாதி நரகமே பிராப்தியாகும்" என்று அறைந்து இராஜன்முதல் அனைவரும் நம்பும்பொருட்டு ஸ்ரீகாசி விசுவநாதர் சன்னிதானத்தின் முன்சென்று முன்னம் 'ஏகம் நாராயணம் துவிதம் நாஸ்தி, யெனச் சத்தியஞ் செய்ததுபோலவே ஏகம் பிர்மம் துவிதம் நாஸ்தியெனச் சத்தியஞ் செய்த மாத்திரத்தில் ஸ்ரீ காசிவிஸ்வநாதரும் விசாலாட்சியம்மையும் திருக்கோயிலில் இருந்து பலபேர்களும்பார்க்க வெளிப்பட்டு இதுவே வேதமுடிவான யதார்த்தமென்று அறைந்து ஜெயதேவருக்குப் பற்பல ஆசீர்வசனங்கள் புகன்று அந்தர்த்தானமானர்.

விருத்தம்

என்னுளே விளங்கியெங்கு மேகமாய் நின்றசோதி
நின்னுளே யடங்குமிந்த நீணிலத் துயிர்கட்கெல்லா
மன்னையா யப்பனுகி யருந்தெய்வங் குருவுமான
நின்னையான் சரணடைந்தே னீசனே நேமிகையா.

உடனே பகவான் கருடவாகனரூடராய் லட்சுமி சமேதராய் அங்கெழுந்தருளி ஜெயதேவை ஆலிங்கனஞ்செய்து, இதுவே

என் வாக்கினுல் உரைத்த பகவத்கீதா பிரமாணம். இதுவே சத்தியம். இதுவே நித்தியமென்று அறைந்து மறைந்துபோனுர். அப்போது நாரதாதி முனீசுவரர்களெல்லாம் அங்கெழுந்தருளி இதுவே வியாசருரைத்த பாகவதத்தின் அந்தரங்கமென்று உரைத்து ஜெயதேவ்மீது புஷ்பங்களை யிறைத்து ஜெயஜெயவென்று அறைந்துகொண்டே மறைந்தார்கள்.

பின்பு இராஜனும் ஜெயதேவும் மற்றவர்களும் வாரணுசியிலிருக்கும் பண்டிதர்களிடம் விடைபெற்றுக்கொண்டு தங்கள் நாட்டையடைந்து பிர்மனிஷ்டையில் எழுந்தருளி ஆனந்தமாயிருந்தார்கள். ஓ சித்தர்களே! இன்னம் ஜெயதேவர் சரித்திரம் மத்தியில் வருகிறபடியால் முடிவு பெறவில்லையென்று நாபாஜிசித்தர் திருவாய்மலர்ந்தருளினுர். உடனே உத்தவசித்தர் முதலானவர்களும்பணிந்து ஆ! ஆ! இதென்ன ஆனந்தமானகதையைச்சொன்னீர். இச்சரிதையைக் கேட்டுக் களிப்படையாதவர்களு முண்டோ! என்கிற பற்பல வார்த்தைகளாடி உத்தவசித்தர் நாபாஜி சித்தரை வணங்கி, "ஓ மாதேவனே! ஜெயதேவஸ்வாமிகள் கைகால்கள் வெட்டுண்ட காரணமேதோ? தெரியச் சொல்லவேண்டுமெனப் பணிவாகக் கேட்டார்கள். நாபாஜிசித்தர் துக்காராம் சரித்திரத்தில் இதன் விபரம் வருகின்றதென்ருர். சித்தர்கள் வணங்கி, ஓ சுவாமி! உண்மையான பிரமக்கியானந் தெரியாமல் சிலர் விஷ்ணுவே பரதெய்வமென்றும், சிலர் பரமசிவமே ஆதி தெய்வமென்றும் உரைக்குங் காரணமேது" என்று பணிய அதற்கு நாபாஜிசித்தர் சொல்லுவார். முக்குணங்களில் சாந்த குணம் முதன்மை ஆதலால் சாந்தகுணனுன விஷ்ணுவே பரப்பிரமமென்றும், பஞ்ச பூதங்களில் பிருதிவி யம்ஸனுன பிர்மாவிலும், ஜலாம்ஸனுன விஷ்ணுவிலும், தெய்வாம்சமான பரமசிவனே மேன்மை ஆதலால் ருத்திரனே பிரமமென்றும் சொல்லப்பட்டதானுலும், விஷ்ணு பரப்பிரமம் சொரூபம். பரமசிவம் பிர்மமென்றும் சொல்லுங் காரணம் சாந்தகுணத்திற் பிரதிபலித்த பரப்பிரமமே விஷ்ணு வென்றும், தமோகுணத்திற் பிரதிபலித்த பரப்பிரமே சதாசிவமென்றும், வேதாந்தங்கள் முறையிடுவதால், இருவரையும் பிரமம் என்றே சொல்லத்தகும். இச்சந்தேகம் இனி உரைக்கும் கபீர்தாஸ் முதலானவர்களுடைய சரித்திரங்களால் நிவாரணமாகுமெனத் திருவாய் மலர்ந்து இனி உங்கள் ஆசிர்மத்துக்கு எழுந்தருளுங்களென விடைகொடுத்து அனுப்பிப் பிர்மானந்தத்திற் படிந்திருந்தார்.

இந்த ஜெயதேவர் சரித்திரத்தை அன்புடன் அனுதினம் பாராயணஞ் செய்வோர்களும், சிரவணஞ் செய்வோர்களும், வாசுதேவன் மகாதேவன் கருணையும், பிர்மக்ஞானமும், சாந்தகுணமும் அஷ்ட ஐசுவரியமும் பெற்று சுபமங்களத்துடன் வாழ்வார்கள்.

பிரமோபதேச அத்தியாயம் முற்றிற்று.

---

### சிவபத்தர் வாக்கியம்

விருத்தம்

அஞ்சலென்றகரதலமுங் கணபணகங்கணமும்
    அரைக்கிசைந்தபுலியுடையு மம்புலிச்செஞ்சடையும்
நஞ்சமுண்டமணிமிடறு முன்னூலுமார்பும்
    நலந்திகழ்வெண்ணீற்றொளியு மறிமான்மழுவும்
கஞ்சமலர்ச்சேவடியுங் கருணைபொழிமுகமும்
    காமனையன்றெரித்ததிருக் கண்களொருமூன்றும்
பஞ்சடிசிற்றிடைமடந்தை யொப்பனைபாகனுமாய்ப்
    பால்வண்ணனுளத்திருக்கப் பயமுண்டோவெமக்கே.

### என்றுரைத்த பதிக்கவர் சதியுரைத்த வாக்கியம்

விருத்தம்

ஆக்கையெனும்புழுக்குரம்பை யனைந்தனையாப்பொருளை
    அருளொளியைப்பராபரத்தைக் கப்புறமாமறிவை
நீக்கமறவுயிர்முனைக்கு மிடமறநின்றிலங்கும்
    நிறைந்துநின்றபெருவெளியே நினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந் தவக்குறைகண்முடிக்கும்
    பழவடியார்க்கருளுறவும் பசுந்துணர்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்துக் களவுபடாவொன்றை
    மாசற்றபெருவெளியை மனவெளியிலடைப்பாம்.

### வாழி சந்தவிருத்தம்

பூமிமுதலைம்பூதம் பூரணமாய்வாழ்க
    பொறிகளைந்துநெறியிலகும் புண்ணியர்கள்வாழ்க
நாமிங்குதுதிசெய்ஜெய தேவர்புகழ்வாழ்க
    நற்சரிதையைச்சொல்லு நாபாஜிவாழ்க
நேமிபுகழ்மாரிமுத்துப் பிர்மம்வாழ்க
    நீடுமிச்சரிதைதனக் குதவினர்கள்வாழ்க
ஆமிந்தசதுர்வேத சித்தாந்தசபையோ
    டருள்வாக்குவேங்கட தாசனும்வாழ்க.

ஜெயதேவ ஸ்வாமிகளின் சரித்திரம் முற்றிற்று.

---

☞ இச்சரித்திரத்தின் பிற்பாதியை எம்மால் வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச அய்யங்காரால் எழுதியுள்ள ஸ்ரீமகாபக்தவிஜயம் இரண்டாம்பாகத்தில் பரக்கக் காணலாம்.

ஸ்ரீ

ஸ்ரீபாண்டுரங்கவிட்டலாயநம:

# இரண்டாவது
# கபீர்தாசர் சரித்திரம்

துதி கவி

தாயாரகட்டிற் பிறக்காதோன் தரையினம்போ லிறக்காதோன்
மாயாவிலாசந் தனைக்கடந்தோன் மனையாடன்னை யயலானுக்
காயாசமிலா தடியாரக்கா வளித்தோன் றனுசன் றலையரிந்தோன்
தூயோன் கபீரானந்தனை நாந்தொழு வினைக்கு விடைகொடுப்பாம்.

## முதலாவது
## கபீர் உற்பத்தி அத்தியாயம்



திருமால் சக்கரத்தைப்போல் இவ்வுலகைச் சூழ்ந்திருக்கும் திரைகள்வீசும் கடலிலிருந்து சூரியோதயமானதே உத்தவ சித்தர் முதலானவர்களும், திவ்வியமான சந்த்ரபாகாநதியில் ஸ்நானஞ்செய்து, ஜபதபங்களை முடித்துக்கொண்டு, கபீர்தாஸ் முதலான பிரமக்ஞானிகளது சரித்திரங்களை வடமொழியிற் செய்து அதனுல் இவ்வுலகிலுள்ள மானிடர்களை ஈடேற்றும் பிரமாம்சனுன திரிகாலங்களை உணர்ந்த நாபாஜிசித்தரிடம் போய் அவருடைய திருவருட்கமலக் கழல்களுக்கு அனந்தம் வந்தனந்தந்து, "ஓ மாதவனே! சுகாவதாரனுன கபீர்தாஸ் சரிதையைத் திருவாய்மலர்ந்தருளி எங்களைப் புனிதராக்குமையா" என்று வணங்கி நின்றுர்கள்.

அவர்களைப்பார்த்து நாபாஜிசித்தர் அகமு முகமுமலர்ந்து சகஸ்த்ராரமான ஆக்னேயசக்கரத்தில் வளியையேற்றி ஒளியைப் போற்றி ஒளியுந் திரிசியமென்று அகற்றி பரவெளியாகி ஆனந்தமாத்திரமா யிருக்கும் சித்தர்களே! எனக்குகந்த பக்தர்களே! மூவரையுந் தேவரையும் மற்றியாவரையும் விழுங்கி உமிழாமாயைக்கடந்த சுகப்பிர்மரிஷியின் அவதாரத்தைக்கேட்டு உளங்களியாதவரும் உண்டோ? ஓ தன்யர்களே! மிகவுங் கண்யர்களே! தேகமென்னும் மரணபூமியில் விஷயங்களென்கிற பதாதிகளையும், இந்திரியங்களென்கிற வீரர்களையும், அந்தக்கரணங்க

ளென்கிற சேனதிபதியையும், எண்ணங்களென்கிற துரகங்களை யும், மதமச்சரங்களென்கிற கரிகளையும், மானபிமானங்களென் கிற ரதங்களையும், இச்சையென்கிற சாரதிகளையும், ஜீவத்வமென் கிற அரசனையும் ஞானமென்னும் பாணத்தைத் தொடுத்து, கண்டதுண்டங்களாகும்படி விடுத்து, தன்னெதிரில் வாராமற் கெடுத்து, ஆனந்தத்தையடுத்து, ஆத்மா மாத்திரமாயிருக்கும் முத்தர்களும், பாசமென்கிற நாட்டைவிட்டு, ஆசையென்கிற வீட்டைச்சுட்டு, காமமென்கிற ஸ்திரீயை நீங்கி, நிஷ்காமமென் கிற ஸ்திரீயுடனேங்கி, நீந்தலென்கிற மார்க்கத்திற்சென்று, ஏகாந்தமென்கிற வனத்தினில் நின்று கூடஸ்த பிர்மமேதானகி தேகாதிகளுக்குக் கோனயிருக்கும் சித்தர்களும், வாழுமிடமாகிய சகலரும் புகழும்படியான கங்காதீரமாகிய காசிதேசத்திலிருப்ப வர்; பாவிகளை மிகவும் வெறுப்பவர்; சஞ்சலமனதை யறுப்பவர்; மேல் வீழ்ந்து அடிக்கப் பொறுப்பவர்; நித்தியசத்தி நிர்விகார நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மத்தை பரிசுத்த மனதுடன் ஐந்துவேளையும் இடையரு அன்புடன் தியானஞ்செய்பவர், * மோசலமா முனிவராலேற்படுத்திய துலுக்கர்குலத்தில் உற்ப வித்தவர்; தமாலென்னும் பேருடையவர்: விசாலமான வீடுடை யவர்: தான் ஜீவஹிம்சைசெய்யும் துடுக்கர்குலத்தில் உற்பவித் திருந்தும் தன்னுயிர்போல்மன்னுயிரைப் பார்க்கவெண்ணி எந் நேரமுங் கடவுளைப் பஜனைபண்ணி நமது ஜீவனம் ஜீவஇம்ஸை யில்லாமல் எத்தொழிலால் நடக்குமென்றுயோசித்து, வஸ்திரம் நெய்யுந்தொழிலிலே நலமென்று ஆலோசித்து நன்றாய் நெய் வோருடன் நேசித்து, யாவர்க்கும் இது நல்லதொழிலென்று உபதேசித்து வேறு தொழில்களைத் தூஷித்து, நல்லயோசனை வந்ததெனச் சந்தோஷித்து, பீதாம்பரம் நெய்வோரைப் பூசித் துப் பரப்பிரம்ம சங்கீர்த்தனங்களைக் கோஷித்து, நாணயமாய் நெய்யுந்தொழிலைக் கற்றுக்கொண்டு தனது நாயகியையும் நெய் யும்படியாய்விண்டு,கொல்லாவிரதமே நல்லவிரதமென்று ஞான வழியிற்சென்று அஞ்ஞான மனதைக்கொன்று கடவுளே நமக் குத்துணையென்று நாமென்னும் ஆங்காரத்தைவென்று,பழவர்க் கங்களைமென்று, அன்னம் பருப்பேதின்று, சாதுக்கள் சங்கமே நன்று, மற்றவர்களுறவு நன்றன்று. எல்லாசமயத்துக்கும் தெய் வம் ஒன்று எனப்புகன்று இல்லறத்தில் நல்லறத்துடனிருந்து சாதுக்களுக்கு அடிக்கடி விருந்து அன்பாய்ச் செய்து 'அகம்பா

* மோசலமாமுனிவரா லேற்பட்டவர்களே மொசல்மான்கள்.

வத்தைக்கொய்து ஏழைகள்மேற் கருணைமழை பெய்து ஏழைகளை வருத்துவோரை வைது நெய்யுந்தொழிலால் திரவியஞ் சேகரித்து, உலோபகுணத்தைத் திரஸ்கரித்து, சதாகாலமுஞ் சாதுக்கள் பணிவிடை செய்துக்கொண்டிருந்தார்.

அத்தருணத்தில் ஓர் மகாத்மா இவர்கள் செய்யும் பணிவிடைக்கு உகந்து இவர்களுக்கு எல்லாப் பாக்கியமிருந்தும் புத்திரபாக்கியம் இல்லாக்குறையால் சற்றுத் தாழ்வடைந்திருக்கிறார்கள் என்று அன்பின் மிகுதியால் தமால் மனைவியாகிய ஜிஜ்ஜாபீபியை நோக்கி, "ஓ அம்மா புண்ணியவதி! உனக்கு முப்பத்திரண்டு லக்ஷணங்களும் ஈஸ்வரபக்தியும் பிரமக்ஞானமுமுள்ள ஓர் புத்திரன் உண்டாகக்கடவன்" என்று ஆசீர்வதித்துத் தன்னிருப்பிடம் போயினர். ஜிஜ்ஜாபீபி மிகவும் மனமகிழ்ந்து பெரியோரைப் புகழ்ந்து தன்பதியிடம் வந்து வந்தனந்தந்து, "ஓ சுவாமி! யாரோ ஓர் மகாத்மா எனக்குப் புத்திர சந்தானம் உண்டாகும்படி ஆசீர்வதித்துப் போனர். அவர் வாக்கியப்படியே நமக்குப் புத்திரபாக்கியம் உண்டாகுமா?" என்று கேட்டாள். அதற்குத் தமால் பெருநகைபுரிந்து, "ஓ பெண்ணே! எண்ணிரு கண்ணே! உனக்கு எவ்வன பருவங்கடந்து விருத்தாப்பிய பருவம் நடந்து வருகின்றது. இனி உனக்குப் பிள்ளைபிறக்குமா? உனக்குற்ற எண்ணமிறக்குமா? அப்படி குழந்தை பிறந்தாலும் குழவியால் மோக்ஷமடைவோமா? ஆனந்தம் பெறுவோமா? பாவங்கள் நசித்துபோமா? இகவெண்ணங்க ளிறந்துபோமா? இல்லையே; நீ நினைத்திருப்பது தொல்லையே; நாணமின்றியுரைத்தா யிச்சொல்லையே; நீ மோக்ஷ மடைகிறவளல்லவே? அடிபாவையே! பூவையே! நமக்குரிய மைந்தன் கொல்லா விரதமே. ஆதலால் ஜீவகாருண்யத்தைக் கடைபிடித்தொழுக" என்று உரைத்தார்.

அதற்கு ஜிஜ்ஜாபீபி, "ஓ என் பிராணவல்லபா! தெய்வவாக்குப் பொய்த்தாலும் பெரியோர்கள் வாக்குப் பொய்த்துப்போகாதே, பொய்த்தால் பெரியோர்களென்று சொல்லலாகாதே, அப்படியிருக்க நீரிப்படி சொல்லலாகுமா?" எனப்புகன்றுள். அதற்குத் தமால் அடிமானே! இன்பந்தருந்தேனே! பெரியோர்கள் வாக்கும் வேதவாக்கும் மண்ணாசை பொன்னாசை மகவாசை முதலானதுந் துறக்க வேண்டுமெனச் சொல்லியிருக்க பிள்ளை பிள்ளையென்று பிதற்றுகிருய்; பெரியோர் ஆசீர்வாதஞ் செய்தாலும் நமக்குப் பிள்ளைபிறக்கவே பிறக்காது. இனி உனக்குக்

கர்ப்பம் தரிக்கவே தரிக்காது. போ! போ! 'பேதமை யென்பது மாதர்க் கணிகலம்' என்னுஞ் சொல்லை நிலைநிறுத்தினை என்று நவில, அதற்கு ஜிஜ்ஜாபீபி, "ஓ என் பிராணநாயகா! எனக்கு ஆசிசெய்த பெரியோர் வாக்கியப்படி நமக்குப் பிள்ளைப்பேறு கிடைக்கும்; நடவாக்காரியமும் நல்லோரால் நடக்கும். ஏனெனில்? முன்னம் ஓர் பெரியோரால் ஓர் ஊர் தலைகீழாய்ப் போனதும் மன்சூரென்னும் புண்ணியவான் அழைக்க சூரியன் ஓர் பர்வதத்தில் இறங்கினதும், இறந்துபோன குழவி உயிர்பெற்று எழுந்ததும் உண்மையல்லவா? சாதுக்கள் மகிமையை விரித்துச் சொல்லவா?" என்று அறைந்தாள். அதற்குத் தமால், "அடி கோதையே! அறிவில்லாப் பேதையே! இகவாசை நீத்தவர்களே புனிதர். மற்றவர்கள் ஈனமனிதர் என்று ஆரணத்தில் முறையிடுவது அறிந்தும், இகவாசையான மகவாசையைக் கோரினை. வேதவாக்கியத்துக்கு மீறினை. மலையைக்கெல்லி எலியைப் பிடிப்பதுபோல, நெடுநாளாய் என்னுடன்கூடிக் கடவுளைத் தியானஞ் செய்தும், இகவெண்ணங்களைக் கொய்தும், துச்சமான இச்சைக்கு உட்பட்டாய். மகாத்துமாக்கள்பால் கேட்டுக்கொள்வது அநித்தியப்பொருளையா? நித்தியப்பொருளையா? 'எண்ணறக் கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தி' என்கிற பழமொழி உன்னிடத்தில் பிரத்தியக்ஷமாய்க் கண்டேன். சீ சீ! புத்திரவாஞ்சையை இக்கணம் அகற்றிவிடு" என்று உரைத்துத் தனக்குரிய தொழில்செய்யப் பட்டுநூலை ஏந்திக்கொண்டு கங்கைக்கரையிற் சென்று பட்டுநூலின் சிக்கை வாங்கிக்கொண்டிருந்தார்.

அப்போது பிள்ளைப்பேற்றுக்காக அநேகர் கங்கையில் ஸ்நானஞ்செய்து பாகிரதியை நோக்கி, "ஓ கங்காபவானி! எங்களுக்கு மகப்பேறு உண்டாகும்படியாய் வரமளிப்பாய்" என்று தோத்திரஞ் செய்துகொண் டிருந்தார்கள். அதைக்கேட்ட தமால் ஆச்சரியப்பட்டு ஆ ஹா! குழந்தைகளுக்காக எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள்; மகவாசை மகா பெரிதென்றே சொல்ல வேண்டும். இதனாலேயே நமது மனைவி வெகுநேரம் தர்க்கஞ் செய்தாள். க்ஷணபங்கமான இம்மலவுடலை மெய்யென்று நம்பி இழிவான குழவியாசையால் குழம்பும் ஜீவர்களின் அஞ்ஞானத்தால் குழைந்த மந்தபுத்தியை எந்தவிதத்தினாலும் போக்குவது அரிதல்லவா? ஓ தெய்வமே! மோகாந்தகாரக் குகையிற் சிக்கியிருக்கும் ஜிஜ்ஜாபீபி உன் திருவடியடைவது எப்படி? என்ன

காரணத்தால் அவளுக்குப் புத்திரபாக்கியம் இல்லாமற் செய்தாய்? குழப்பமுள்ள மனைவியாளுடன் கூடி வாழ்கிறதைப் பார்க்கிலும் செழிப்புள்ள அடவியிற்போய்த் தியானஞ்செய்வதே யுக்தமல்லவா?'' என்று அனந்தம் விதங்களாய் யோசித்துக்கொண்டிருந்தார்.

அச்சமயத்தில் கையிலிருந்த பட்டுநூல் நழுவி கங்கையில் அடித்துக்கொண்டு போயிற்று. அதுதெரிந்த தமால், "அடா! நம்முடைய பேய்த்தனம் பட்டுநூல் இழந்துவிடச் செய்தது. புத்திரனால் என்னபேற்றைப் பெறப்போகிறுள்? புத்திரர் பிறப்பதும் இருப்பதும் இறப்பதும் துன்பமேயன்றி இன்பமில்லவேயில்லை. அஞ்ஞானிகள்கோரும் நித்தியப்பொருளை மெய்ஞ்ஞானிகள் வெட்கமின்றி வேண்டுவார்களா? அன்பாய மகவைத் தீண்டுவார்களா? பன்றியுடன் சேர்ந்த கன்றுங் கெட்டதுபோல் பாமரரைப் பார்த்து வைராக்கியத்தைத் தோற்று வட்டிக்கு ஆசைப்பட்டு முதலிழந்ததுபோல் பாலன் யோசனையால் பட்டுநூலை யிழந்தேன்; வீண் எண்ணத்தாற் குழைந்தேன்; இப்பட்டு நூலால் ஐம்பது பகிரிகளுக்கு அன்னமிடலாமே; பிரம்மானந்தத்துட்படலாமே; என்கிற எண்ணத்துடன் நூலைக்கண்டெடுக்கக் கங்கையோரமாய்ப் பார்த்துக்கொண்டே மனிதசஞ்சாரமில்லாக் காட்டிற் பிரவேசித்து, ஆஹா! இதென்ன பேராசையாற் பேதுற்றதுபோலிருக்கின்றது. அற்பமான பட்டுநூலாசையால் கால்கள் நோவ நடந்தேன்; கானகத்தை யடைந்தேன்; ஆயாசத்தாலிடைந்தேன்; வேதவாக்கியத்தைக் கடந்தேன்; சீ சீ! காட்டையடைந்த நாம் இனி நாட்டையடைவதும் ஆசையே; மனக்குறையுள்ள மாதுடன்கூடி வாழ்கிறதைவிட வனத்திலிருந்து அரிதான தவஞ்செய்கிறதே உத்தமம்'' என்று அங்கிருக்கும் ஓர் பர்னசாலை பிரவேசித்து மெய்ப்பொருளை யாசித்து இருகண்களையும் மூடி பரப்பிர்மத்தை நாடி பல சங்கீர்த்தனங்களைப்பாடி கடவுளருளுக்கு வாடி தவஞ்செய்யத் தொடங்கினர்.

கேட்டீர்களோ சித்தர்களே! தமால் இப்படி யுத்க்ருஷ்டமான தவத்திலிருக்கும்போது வைகுந்தத்தில் ஸ்ரீமந்நாராயணர் சுகப்பிரம்மரிஷியை நோக்கி, "ஓ மாயாதீதனே! தனைமறந்த அவதூதனே! நாம் அனைவரும் யோசித்தபடியே நீ இந்த க்ஷணம் புண்ணியக்ஷேத்திரமான வாரணசியிற்போய் ஜீவகாருண்யத்தையே விரதமாகப்பூண்டு, நெய்யுந்தொழிலாற் சீவனஞ்செய்யும் மிகவும் புண்ணியவானன தமால் மனைவியின் கர்ப்பத்

திற்றங்கி ரிஷிபிண்டத்தைப்போல் ஓர் முகூர்த்திற்குள் காசினி யிலுள்ளோர் ஆச்சரியப்படும்படியாயும் ஈடேறும்படியாயும் அவதாரஞ்செய்வாய்'' என்று ஆக்யாபித்தார். உடனே சுகர் பகவானைப் பணிந்து, "ஓ என் ஆண்டவனே! என்னைத் தூர்க் கந்தமான கர்ப்பத்திலிறங்கி ஜென்மித்து மயங்கி மாயையிற் சிக்கி வாட்டத்தாற் சொக்கி, இஷ்ட தெய்வமாகிய உம்மையும், அகமமதையை மாற்றும் பிரமக்ஞானத்தையும் மறந்து, அஞ்ஞானம் நிறைந்து, தேருருளையைப்போல் பல ஜென்மங்க ளெடுத்து உழலும்படியாய் யுக்திசெய்தீரோ? உமது ஆசீர் வாதத்தால் அடியேனும் உமது மாயையைச் சற்றறிந்தவனே உலகிலுள்ள ஜீவர்களை இரட்சிக்கும்படியான கருணை உமக்குப் பூரணமா யிருக்குமாயின் உமது மாயையென்னுந் திரையைச் சற்றே நீக்குவீராயின் இக்கணமே சகல ஜீவர்களும் பிரமக் ஞானத்தால் மோட்சம் அடைவார்கள். மத்தியில் இப்படி செய்யக்கூடாதென்றால் அடியேனுக்கு உத்தரவு கொடும். இக் கணமே இவ்வுருவுடன் அகிலத்திற்போய்ச் சகலருக்குஞ் சாந்த குணரான உம்முடைய திவ்விய திருநாமங்களின் மகிமையையும், மமதாகங்காரத்தை மாற்றும் பிரமக்ஞானத்தையும் போதித்து வருகிறேன்'' என்று வணங்கினர்.

அப்போது பகவான் சுகயோகியைநோக்கி, "ஓ மாதவனே! எந்தெந்த யுகத்தில் எந்தெந்தவிதமாய் உலகத்தை இரட்சிக்க வேணுமோ அந்தந்தயுகத்தில் அந்தந்தப்படி அவதரித்து, இரட்சிக்காமல் உன் எண்ணப்படி செய்தால் விபரீதத்துக்கு இடமுண்டாகும். அன்றி, நீ இவ்வுருவோடு அகிலத்திற் சென்றால் வித்தியாசம்பந்தமுள்ள சிலர்கள் நித்தியத்தையே கோருவதன்றி பட்சிமுகத்தோடு நிர்வாணியாயிருக்கும் உன்னைப் பரியாசமே செய்வார்கள். மேலும் கலியுகதர்மத்தை நீயறிந் தவனேயன்றி அறியாதவனல்ல. மூவர் தேவர் முனிவர் உரு வங்களான விக்கிரகங்களை நிக்கிரகிக்கும்படியான துடுக்கர் உம்மை முடிக்காமல் எளிதில் விடமாட்டார்கள். ஆதலால் என் வாக்கியப்படி நடந்துக்கொள்வதே உத்தமம்'' என்று திருவாய்மலர்ந்தருளினர். அதற்குச் சுகர், ஓ பகவானே! என் உயிர் நீங்கினும் உதாத்தில் மாத்திரம் பிரவேசிக்கமாட்டேன்'' என்று சாற்றினர். அதற்கு ஸ்ரீமந்நாராயணர், "ஓ சுகமுனியே! நான் வாமனவதாரத்திலும், பரசுராம ஸ்ரீராம கிருஷ்ணவ தாரத்திலும், ஒரோர் புண்ணியவதியின் கர்ப்பத்திலிருந்து

அவதரித்தது நீ யறிந்ததுதானே. அல்லாமல் இப்போது நானும் அானயனுதிசத்தியும் ஓர் புண்ணியவதியின் கர்ப்பத்திலிருந்து அவதாரஞ் செய்ய யோசித்திருக்கிறோம். இதில் உனக்குச் சந்தேகமிருக்குமாகில் அவர்களையுங் கேட்டுத் தெரிந்துக்கொள்ளும்'' என்று அம்மூவரும் வரும்படியாய்ச் சிந்தித்தார். உடனே சிவன் அயன் அம்பிகையும் வைகுந்தத்திற்கு எழுந்தருளிய பகவானிடம் க்ஷேமவார்த்தைகள் பேசியபின் சுகரைநோக்கி, "ஓ புண்ணியவானே! ஈண்டு இவ்வாண்டவன் புகன்ற வாக்கியப்படியே நாங்கள் ஓர் கன்னியினகட்டிலிருந்து அவதரிப்பது சத்தியம்'' எனப் புகன்றார். அதற்குச் சுகர் மூவரையும் வணங்கி, "ஓ யான்தொழுந் தெய்வங்களே! நீங்கள் மாயாவிளையாட்டுடையவர்களாதலால் துர்க்கந்தமான கர்ப்பத்தில் பிரவேசித்தாலும், சேற்றிலுற்ற பூச்சியைப்போல நிர்மலமாகவே யிருப்பீர்கள். அன்றி சர்வக்ஞமுள்ள தேவரீர்கள் எப்படி உற்பவித்தாலும் உற்பவிக்கலாம். கிஞ்சித்து அறிவுள்ள அடியேன் மாயையின் உட்பட்டபின் மாயையைச் செயிக்க வல்லமையிராது. முன்னம் ஓர் அரம்பையை யனுப்பிப் பரிசோதித்தது இன்னும் மறந்துபோகவில்லை'' என்று தொழுதார். அதற்குப் பகவான், 'ஓ சுகமுனியே! நீர் சிறு குழவியாய்க் கங்கையிற் பிரவேசித்துக் காட்டில் தவஞ்செய்யும் தமாலுக்குக் குழவியாய்போம், நாங்களும் அவதாரஞ் செய்கிறோம்'' என்று ஆக்யாபித்தார். அதற்கு அரிதாஸனுகிய சுகர், "ஓ பகவானே! அடியேன் கான்முளையாய் உலகிற்சென்று பிரமக்ஞானத்தையே முக்கியமாய் ஸ்தாபிக்கட்டுமா? உமது திருநாமத்தையே ஸ்தாபிக்கட்டுமா?'' என்று வணங்கினர். அதற்கு மூவரும் பவானியும், "ஓ முனீஸ்வரனே! நிர்க்குணமான பரப்பிர்மத்தைத் தியானஞ்செய்தும், துலுக்கரைச் சகுணத்தால் வெல்லக்கூடாது. ஆதலால் அவர்களை நிர்க்குணத்திலேயே வென்று சகுணத்தையும் நிர்க்குணத்தையும் உலகத்தில் ஸ்தாபித்து எங்களைத் தொழாப் பாவிகள்மேல் கோபித்து ஜீவர்களை இரட்சியும்'' என்று கூறினர்.

அதற்குச் சுகர் நிர்க்குணமென்பது எது? அதனை அடியேனுக்குச் சவிஸ்தாரமாகத் தெரியச் சொல்லவேணுமென்று பணிய, பகவான் முதலானேரும் சொல்லுவதற்கு யோசனை செய்யும்போது, பகவான் மற்றவர்களுடைய கருத்தை யுணர்ந்து சுகரைநோக்க, "ஐயா சுகமுனிவரே! நிர்க்குணத் தியான

மென்பது எப்படியெனில்? நிர்மல, நிர்விகற்ப, நிரஞ்சன, நிரா தார, நிருப, நிஷ்களங்க, நிர்ப்பேத, நிர்ச்சேத, நிர்நாம, நிஷ் காம, நிர்க்குண, நிராங்கார வஸ்துவாகிய பரப்பிரமத்தில் ஐக் கியமாயிருப்பதே நிர்க்குணம். அப்பரப்பிர்மம் பொன்னைப் போலவும், மண்ணைப்போலவும், பஞ்சைப்போலவும், அயத் தைப்போலவும், கல்லைப்போலவும், சொர்னத்தைப்போலவும், நிருபமாகியும், பிரமப்பிரளயத்தில் அழியாததாயும், எங்கும் நிறைந்திருப்பதே பிர்மமாகும். அப்பிரம மில்லாவிட்டால் மாயையேது? அத்திரிகுணப் பிரதிபிம்பரான திரிமூர்த்திக ளேது? ஒருவருமேயில்லை. மேலும் அகண்டம், அகண்டசக னம், அசலம், அனந்தம், அப்ரமேயம், சின்மயம், தேசோமயம், சித்விலாசம், நித்தியம், சத்தியம், நிஷ்களானந்தம், பரப் பிர்மம், பரமேஸ்வரம், சயம், துரியம், துரியாதீதம், விஸ்வம், பூரணம், விசுவாதீதம், விமலம், விசேஷம், வேதாதீதம், சுபம், சுபதாம், சுயம்பிரகாசமும் பொருந்தியது எதுவோ அதுவே சத்தியக்ஞானனந்த நித்திய நிர்மலமாயிருக்கும் பரப்பிரம்ம மென்றும், அப்பரப்பிரமமே ஆதிதெய்வமென்றும், இதில் ஐக்கியப்பட்டவர்க்கே ஆனந்தமென்றும், ஆனந்தமே மோட்ச மென்றும் சொல்லப்படும். சந்திரகிரணத்தைப் புசித்துத் திருப்தியாகும் சகோரபட்சியைப்போல ஞானரசனையான பிர் மானந்தத்தைப் புசித்து, துரியபூமியில் வசித்து, நானென்பது நசித்து, தேகேந்திரியங்கள் மூசித்து, பரப்பிரமத்தில் ஐக்கியப் பட்டு இளைப்பாற்றியிருத்தலும், எழுதலும், மறந்து பிரம்மா னந்தம் நிறைந்து நடத்தலும், பேசலுங் குறைந்து, தேகாபி மானத்தையுந் துறந்து, சொஸ்தனுய்ச் சகோரபட்சிக்கு உண வாகியும், எங்கும் சீதளபிரகாசமாய் நிறைந்திருக்கும் சந்திர னைப்போல் உனக்குள்ளே குளிர்ச்சியடைந்து அந்தக்கரணாதி களுக்குஞ் சீதளத்தைத்தந்து குறையாமல் பரிபூரணசொருப மாகிப் பிரபஞ்சமயமாகாமல் அதிருப்தமா யிருப்பதே நிர்க் குணத்தியானமென்று உரைத்த பகவானைப் பணிந்து சுகர் மகா பாக்கியம் என்று முப்பத்திரண்டு லக்ஷணங்களும் வாய்ந்த சிறுகுழந்தையுருவாகி பாகீரதியிற் பிரவேசிக்கையில் அம்மதலை யைப்பார்த்த அானயனாதி சத்தியும் மயங்கி நின்றார்கள். மாயா விலாசனான பகவான் அச்சிசுவை வரநதியிற் பலதரம் அமிழ்த்தி பிர்மிக்கும்படியாய்ச்செய்ய அப்போது அக்குழவி சானவி யிற் பலதரம் அமிழ்ந்தும் எழுந்தும் திக்குமுக்கிட்டு தட்டு

கெட்டு பீதிமேலிட்டு தம்சுயஸ்மரணைகெட்டு முற்பிறப்பை மறந்துவிட்டு கா கா வென்று கூக்குரலிட்டு பெருமூச்சு விட்டுக் கொண்டே மந்தாகினியில் அடித்துக்கொண்டே போகையில், பகவான் தமால் மனதிற் பிரவேசித்து புத்திரவாஞ்சையை உண்டாக்கினர்.

உடனே தவங்கலைந்து குழந்தையின் அழுகுரலைக்கேட்ட தமால் இது ஏது? இச்சுரநதியில் குழந்தையின் அழுகுரல் கேட்கின்றது? என்று அதிசீக்கிரமாய்த் திரிபதகையின் அருகிற்சென்று கோடி சூரியப்பிரகாசமான பாலகனைக் கண்டு, ஆனந்தங்கொண்டு ஆச்சரியமெனவிண்டு ஜிஜ்ஞாஸி தவஞ் செய்தவளே பண்டுயென்று சொல்லிக்கொண்டு மனமிகவிரங்கி மந்தாகினியிலிறங்கி வாரியெடுத்து மார்புடன் அணைத்து சுர நதியேறி சுதன்நசைமீறி, அப்பனே மகனே! அழகானமுகனே! ஒப்பிலாதவனே! ஒளிருமாதவனே! செப்புதற்கரிய செல்வமே! நலமே! இப்புவியேத்துமெழிலே! பொழிலே! துப்புளவடிவே! தூய்மறைமிடிவே! செப்பமே! திருவே! திவ்யவுருவே! சுப்பிரமணியே! சுரர்சிகாமணியே! எப்படி நதியில் இறவாமலிருந்தாய்? எப்படி மிதந்து ஈண்டு என்னிடம் வந்தாய்? எனக்கு உன் சேவையை நீ தந்தாய்? எனக்கு ஆனந்தமீந்த என் மைந்தா! என்று 'கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கண்மேற் காதல்' என்பதைப்போல புதல்வனை ஏந்திக்கொண்டு ஜலம் நாடினவனுக்கு அமிர்தமும், சிப்பியைத் தேடுவோனுக்கு முத்தும், வேசியைத் தேடுவோனுக்குப் பதிவிரதையும், பிட்சைக் கேகுவோனுக்கு ராஜரீகமும், எட்டியைத் தேடுவோனுக்குக் கற்பகமும், சூதாடுவோனுக்குப் புராணமும், துன்மார்க்கரைத் தேடுவோனுக்குச் சன்மார்க்கரும், கல்லைத்தேட ரத்தினமும், கழுதையைத்தேடக் குதிரையும், பைசாசைப் பூசிக்கக் கடவுளும், உலக வியாபாரத்தை நாடக் கடவுள் தியானமும் லபித்ததுபோலப் பட்டுநூலைத் தேடிவரத் தவமும், தவத்தாற் சுபமும், சுபத்தால் சுதனும் கிடைத்த பாக்கியமே பாக்கியம்" என்று பலவிதங்களாயோசித்து, மனையாளிடம்போக ஆசித்து, "ஓ அல்லா பிஸ்மல்லா! ஓ கர்த்தனே! பரிசுத்தனே! தெய்வமே! கைம்மாறு என்ன செய்வமே!" என்று அனந்தம் விதங்களாய்த் தோத்திரஞ் செய்துக்கொண்டே காட்டைக்கடந்து நாட்டையடைந்து வீட்டினுட்புகுந்து மிகவும் மகிழ்ந்து மனைவியை நோக்கி வாட்டத்தைப்போக்கிக் காதலனைத்தந்து கடவுளைப்

புகழ்ந்து, "அடி பெண்ணே! என் இருகண்ணே! இத்தோன் றலை யாரோ கங்கையில் விடுத்தார்கள்; நமக்குக் கொடுத்தார்கள்; உன் துன்பத்தைக் கெடுத்தார்கள்; என் தவத்தைத் தடுத்தார்கள். ஓ மானே! இன்பந்தருந் தேனே! முப்பத்திரண்டு இலட்சணங் களும் வாய்ந்த புத்திரசிகாமணி நமக்குக்கிடைத்தது சிலாக்கி யமே; சிலாக்கிய மேதோ? நாம்செய்த பாக்கிய மேதோ? நீ யிருந்த யோக்கியமேதோ? பெரியோருரைத்த சத்திய வாக்கிய மீதோ? குழந்தையின்மேற் சுகந்த வாசனைவீசும் கோலத்தைப் பார்; நமக்கு உண்டான அனுகூல காலத்தைப்பார்" என்று துள்ளிக் கூத்தாடினுர்; சங்கீதம் பாடினுர்; தெருக்களில் ஓடினுர்; கடவுள் தயவை நாடினுர். இவர் இப்படிச் சந்தோஷமேலிட்டுக் கான்முளையகப்பட்ட விந்தையையும், கற்போன்றிருந்து ஒரு நொடியில் உருகின சிந்தையையும் பலர்பாலுஞ் சொல்லிக் கொண்டே திரிந்திருந்தார்.

ஜிஜ்ஜாபீபி பெரியோர் வாக்கியப்படியே கிடைத்த அழ கான பிள்ளையைப்பார்த்த சந்தோஷத்தால் தன்னை மறந்து ஆனந்தம் நிறைந்து துன்பமிறந்து அளவற்ற ஆசைபிறந்து அன்பார்ந்த நெஞ்சுடன் அருஞ்சுதனை மார்பில் அணைத்துக் கொண்டாள். உடனே பகவானருளால் பால்சுரந்து வடிந் தது. வழியவே குழந்தையைத் தான் பெற்றதாகவே மோக மாகிப் பாலூட்டி, நீராட்டி, சீராட்டி, பாராட்டி, ஆலங்காட்டி, மைதிட்டி, ஆபரணம் பூட்டி, தொட்டிலில் மாட்டி, ஓசைகூட்டி, தாலாட்டி, எணையாட்டி, துன்பங்களை யோட்டி, கண்களை நாட்டி, என்கண்ணுட்டி, நீ மேட்டான மேட்டி, மற்றவர்கள் தோட்டி, என்று அருமையாய் வளர்ந்து அருங் கொழுந்துபோல் தளிர்த்து களிப்பென்னுங் கடலிற் படிந்து ஒன்றுந் தோன்று தவளா யிருந்தாள்.

தமாலோ தசரதன் ஸ்ரீராமன் பிறந்தபோதும், வசுதேவன் ஸ்ரீகிருஷ்ணபகவான் ஜன்மித்தபோதும், அடைந்த சந்தோ ஷத்தைப்போல் உடல மிருக்கவிருக்கப் பூரித்து உற்சாகமிகுந்து வீட்டினுட்புகுந்து குழந்தையின்மேல் அபீர்வாசனை வீசுதலால் * கபீர் என்று பேரிட்டு பந்துக்களுக்கு விருந்திட்டு அதிதிகட்கு அன்னம் அன்புடன் அளித்து சதிபதி தங்களிற்றுனே களித்து, மிகவும் அருமையாய் வளர்த்து வருங்காலத்தில், முன்னம்

* கபீர் உற்பத்தியைச் சிலர் வேறுவிதமாய்க் கூறுகிறுர்கள். ஆனுல் இதிற் குறித்தபடியே முன்னோர்செய்த நூலிலிருக்கிறது.

சுரருலகில் தேவேந்திரன் முன் சுகப்பிர்மரிஷியைப் பங்கஞ் செய்து வருகிறேனென்று பிரதிக்கினைசெய்து சுகர் ஆசிர்மத்தை யடைந்து அவருடைய பேரழகைக்கண்டு, அதிமோகங்கொண்டு தயங்கி மயங்கி அவரை வெல்வதற்குத் தன்னாலாகாமல் தேவர் பால் போக, நாணமுற்ற அரம்பையானவள் தன்னிச்சையை நிறைவேற்றிக் கொள்ளும்பொருட்டுக் கபீர் வளருங் குலத்தில் தானும் அவதரித்துக் கண்டோர் மயங்கும்படியான மின்னற் கொடிபோல் அழகுடன் வளர்ந்து வருங்காலத்தில், அக்கன்னி கையைப்பார்த்த தமாலுஞ் ஜிஜ்ஜாபீபியும் நமது மைந்தனுக்கு உகந்த ரதி யிவளேயாம் என்று அம்மாதின் தாய்தந்தையரை வாஞ்சையாய் விசுவாசித்து மிகவும் நேசித்துத் திரவியமுதல் வஸ்திராபரணங்கள் அளித்துச் சம்பந்திகள் மிகவுங் களித்து பலவந்தமாய்ப் பேசும்படியாய்ச் செய்து ஓர்நாள் செல்வனைச் சிங்காரித்து அழகைக்கண்டு பூரித்து சம்பந்தியின் மனைக்கு அழைத்துக்கொண்டுபோய், "ஓ புனிதர்களே! உங்களுடைய சுந்தரியை எமது மைந்தனாகிய இச்சுந்தரனுக்கு மணஞ்செய்ய வாக்களிக்கின்றீர்களா?" என்று கேட்டார்கள். கபீர் அழகைக்கண்ட அவர்கள் உள்ளங் களிகூர்ந்து நமது கன்னிகைக்கு இவனே தகுந்த மணாளனெனத் தேர்ந்து, வேறொருவர்க்கு அளிக்கலா மென்கிற சந்தேகந்தீர்ந்து, உங்கள் தனுசனுக்கு எங்கள் வனிதையே மனைவியென ஒற்றுமையுடன் சேர்ந்து, உற்றோர் மற்றோருடனே நிச்சயதாம்பூலமும் மாற்றிச் சந்தோஷசாக ரத்தில் அமிழ்ந்திருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே! என்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

---

இரண்டாவது

## கபீர் சுன்னத்துச் செய்கிறதை

மறுத்த அத்தியாயம்



கேளும் காலனுக்கு இத்தூலத்தை ஒப்பிக்காத சீலர்களே! இப்படி சுகவாரிதியில் அமிழ்ந்திருந்த தமாலும் ஜிஜ்ஜாபீபியும் குலமுறைதர்மப்படி கபீருக்குச் சுன்னத்துச் செய்ய யோசித்து, ஓர் நன்னாளில் காஜிமுதலான சகலரையும் அழைப்பித்துச் செய்யவேண்டிய கிரியைகளெல்லாஞ் செய்து முடித்தபின்,

காஜி: கபீருக்குச் சுன்னத்துச் செய்யுமென்று மஞ்சிகனுக்கு ஆக்யாபிக்க,

கபீர்: காஜியை நோக்கி, "இதென்ன விபரீதச் சடங்கினைச் செய்ய யோசித்தீர்?" என்று வினவ,

குலகுரு: நமது மரபிற் செய்யவேண்டிய கொள்கையென,

கபீர்: இச்சடங்கு ஆண்பிள்ளைக்கு மாத்திரமோ? பெண் பிள்ளைக்குங்கூட வுண்டோ? என,

ஆசான்: ஆண்பிள்ளைக்கே செய்யவேண்டியதென,

கபீர்: இதனால் அடையும் பயனேதென,

ஆரியன்: இதனாற் பரிசுத்தமாகின்றானென,

கபீர்: இதனால் ஆண்பிள்ளைதான் பரிசுத்தமாகின்றான் பெண்பிள்ளை எவ்விதத்தால் பரிசுத்தமாகவேண்டுமென,

தேசிகன்: மந்திரோபதேசத்தால் சுத்தமாக வேண்டுமென,

கபீர்: மந்திரோபதேசத்தால் ஆடவன் கிருதார்த்தனாக மாட்டானோவென,

உபதேசி: புருடர்க்கு அனுக்கிரகமுஞ் சுன்னத்துஞ்செய்ய வேண்டுமென்று ஆதியிலிருந்து நமது பெரியோர்களுக்குக் கடவுள் விதித்திருக்கிறபடியால் அகத்தியம் செய்துக்கொள்ள வேண்டுமென,

கபீர்: கடவுளிட்ட கட்டளையாயிருக்குமாயின் கட்டளையிட்டது முதற்கொண்டு அசுத்தமானதைச் சிருஷ்டிக்கவே மாட்டார். நாளதுவரையில் சிருஷ்டித்துக்கொண்டே வருகிறபடியால் ஆண்டவன் இப்படி விதித்திருக்கமாட்டாரென்கிற கருத்தைப் பிரத்தியக்ஷமாய்க் காட்டுகின்றதென,

காஜி: நமக்கு முதன்மை ஆசாரியனான இப்ராயிம் பயம்பர் காலத்தில் கடவுள் உத்தரவு செய்திருக்கவில்லையென உனக்குள்ள குழந்தைப் பருவமல்லவா?

கபீர்: இப்ராயிம் என்பவன் கடவுள்மேல் சத்தியஞ்செய்ததைக் காப்பாற்றாமல் அற்பமான விஷயானந்தத்தை யிச்சித்துக் கடந்தபடியால் இவ்வாக்கினை அவனுக்குக் கிடைத்ததேயன்றி கடவுளிட்ட கட்டளையல்லவென,

காரியகுரு: (நம்ருத் அரசன்) அக்கிரமமாய் அவருக்கு ஆக்கினை கொடுத்தானேயன்றி பயம்பர் யாதொரு குற்றமுஞ் செய்தவரல்லவென,

கபீர்: இப்ராயிம் சாராவென்னும் இளைய மனையாள்மேல் கொண்ட மோகத்தால் அவளைப்பார்த்து உன்னுத்தரவுக்கு எதிர் உத்தரஞ் சொல்லேனென்று கடவுள்மேல் சத்தியஞ் செய்து கொடுத்து மூத்தமனைவியான ஆஜராவென்பவள் மகா பதிவிரதையா யிருப்பதன்றிக் கர்ப்பவதியா யிருப்பதறிந்தும், கடின நெஞ்சையுடையவனுய் இளையாளிட்ட கட்டளையைக் கடவாமல், மனிதசஞ்சாரமில்லாத ஆரணியத்திற் கொண்டுபோய் விட்டு வந்தான். பின்பு கடவுளருளால் ஆஜராவென்பவளுக்கு ஒரு தீங்குமின்றி புத்திரன் உற்பத்தியாய் அச்சாங்கமும் கிடைக்கவே அதைக் கேள்விப்பட்ட இப்ராயிம் இளையாள் மறுக்கவுங் கேட்காமல் மூத்தவளிடம் போகும்போது இளையாள் அகங்காரத்துடன், "ஓ அசத்தியனே! நீபோய் அவளை அன்புடன் ஆலிங்கனஞ் செய்வையாகில் உனது இரண்டு கரங்களையும் தறித்துவிடுவேன். முத்தமிடுவையாகில் உதடுகளை யரிந்து எறிவேன். கூடுவையாகில் கோசத்தைக் கொய்துவிடுவேன். சயனிப்பையாகில் சிரத்தை வெட்டிவிடுவேன்" என்று சொல்லிஞள். அக்கடூர வார்த்தைகளைச் செவியாரக்கேட்டும் சற்றும் தங்காமற்போய் ஆஜராவைக்கண்டு மிகுமோகங்கொண்டு ஆணையைக்கடந்து, விஷயானந்தபோகத்தில் அமிழ்ந்திருப்பதைக் கேள்விப்பட்ட சாராவும், அவள் தந்தையாகிய அரசனும், சகல சேனைகளும் சூழப்போய் இப்ராயிம் பிரமாணத்தைக் கடந்ததை யாவர்க்கும் விரித்துணர்த்தி சொன்னவண்ணம் ஆக்கினை செய்யப்போகையில் ஆஜராவும் மற்றவர்களும் கண்ணீர்விட்டு அழுது, இப்படி அக்கிரமச் சிட்சைசெய்து சிரமறுப்பதால் இருவர் விதவையாவர். அதன்றி தீராப்பழியுண்டாகும். எங்கள் அனைவோருடைய பிராணனும் அவர்நிமித்தம் கொடுப்போமென்று அலரும்போது அவ்வரசனுக்கு மனமிரங்கி, "விரதபங்கனன இவனுடைய சிரம் வெட்டாமல் மொட்டையடியுங்கள். குறியைக் கொய்யாமல் அதின் நுனித்தோலை யறுத்தெறியுங்கள். உதடுகளை அறுக்காமல் இதழ்களின்மேலும் கீழுமிருக்கும் மீசை முதலான கேசங்களைச் சிரைத்து விடுங்கள். கரங்களைத் தறிக்காமல் நகக்கண்களில் உதிரம் புறப்பட பீறிவிடுங்கள். குடுமியை வைக்காமல் தாடியை விடுங்கள்" என்று ஏவலா

ளர்களுக்கு உரைக்க, அவர்கள் அப்படியே செய்து அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரையன் மகிழ்ந்து அவனை விட்டு அகன்றனென்று உங்கள் சாஸ்திரங்களில் முறையிட, கடவுள் ஆக்கினையென்று என்னை ஏமாற்றுவது உமக்கு அழகோ? என்றார்.

காஜி: நம்ருத் என்னும் அரசனால் எங்கள் ஆசானுக்கு அப்படி நடந்தது உண்மையானாலும் அவருக்குச் சுன்னத்தானது முதற்கொண்டு மற்றெல்லோரையும் செய்துக்கொள்ளும் படியாயும், அவரை உலககுருவெனப்பணியும்படியாயும் கடவுள் கட்டளையிட்டபடியால் அன்றுமுதற்கொண்டு அவர் பாம்பரையான நமது குலத்தோர் கட்டளையைக் கடவாமல் நடந்து கொண்டு வருகிறார்களென்றார். கபீர்: இப்ராயிம் சொந்த மனைவியான சாராவுக்கு கடவுளருளால் பிறந்த இசாக் என்பவன் சுன்னத்து செய்கிறதை மறுத்திருக்க, நான் எப்படி சம்மதிக்கக்கூடுமென்றார். காஜி! அந்த இசாக் என்பவன் பைசாசத்தின் வார்த்தைக்கு உட்பட்டு இபிலிஷ் ஆய்ப்போனான். அவனைப்போலவே நீயும் ஆக விருக்கிறாயோவென்றார். கபீர்: கடவுள் அருளால் பிறந்து ஓர் மதத்துக்குக் காரணகுருவான * இசாக் கடவுள் ஆக்கினையைக் கடந்து பேய்வார்த்தைக்கு உட்படுவானா? முக்கியமாய் இப்ராயிம் செய்த குற்றத்துக்காக ஆக்கினை கிடைத்ததேயன்றி வேறில்லை என்று உரைத்துக் குலுங்க நகைத்து வெளியிற்போகையில், உற்றோர் மற்றோர் கற்றோரும் கபீர் கரத்தைப் பிடித்துக்கொண்டு சிறுகுழந்தையாகிய உனக்கு இந்த குதர்க்கங்களேன்? நமது குலத்திலுற்றபடி சுன்னத்து செய்துக்கொண்டு சகலரையும் சந்தோஷப்படுத்தும் அப்பா என்று வேண்டினார். கபீர்: இப்ராயிம்போல் நான் ஏதாவது குற்றஞ் செய்திருந்தா லல்லவோ இந்தச் சடங்கு உடன்படுவேன் என்றார். சகலரும்: நீ இக்கிரிகைக்கு உடன்படாயேல் சுத்தனாய் இருப்பாயோ என்றார். கபீர்: தாய்அகட்டிலிருந்து உற்பவித்த ஆக்கையெல்லாஞ் சுத்தங் குறியின் நுனிமாத்திரம் அசுத்தமான காரணம் ஏது? என்றார். கற்றோர்: அதில் சுத்தஜலம் தங்குவதால் குற்றமாம் என்றார். கபீர்: தேகமெல்லாம் சுத்தமாயிருக்கத் தங்கும் ஜலமாத்திரம் சுத்தமென்று உரைக்கும் உங்கள் வார்த்தைஅறிவின்மையைக் காட்டுவதன்றி மூக்கறுப்புண்டவன்

* இசாக்கை ஐஜிக்கென்றும், இவர் மதம் கிறிஸ்துமதமென்றும் சொல்லப்படும்.

பலர் மூக்கையும் அறுக்கத் துணிந்த கதைபோல் இருக்கின்றது. ஏனெனின், அரசன் ஆக்கினையைக் கடந்து தலையும் முகமும் மொட்டை யடிக்கப்பட்டு மானமும் அறுபட்ட பாம்பர் தன்னைப் பலரும் பரியாசஞ் செய்யாதபடிக்கு அநேகரை மொட்டை யடித்து மானமும் அறுத்துக்கொள்ளச் செய்த சூதேயொழிய கடவுள் கட்டளையே யல்ல. விரத ஆக்கினையைக் கடந்தவனுக்கு இதுதான் அடையாளம் என்று தலையும் முகமும் கோசமும் மொட்டையடித்தது மெய்யாயிருக்கும். கடவுள் இப்படியே சகலரையுஞ் செய்துகொள்ளச் சொன்னது சுத்தப் பொய்யாயிருக்கும். காரணம் இப்ராயிம் பெண்ணரசின் ஆக்கினையைக் கடவாமலிருந்தால் இவனுக்கு அவ்வாக்கினையும் அவனல் உங்களுக்கு இவவாக்கினையும் உண்டாகாதல்லவா? இன்னம் விரித்துச்சொல்லவா? சொல்லி உம்மை வெல்லவா? இது இப்ராயிம் யுக்தியல்லவா? என்று உரைத்து எழுந்துபோகையில், அன்னையும் தந்தையும், "அடா குழந்தாய்! நமது குலமுறை தர்மத்தை மறுக்கலாமா? குலகுருவை வெறுக்கலாமா? வா அப்பா! வா ஐயா!" என்று அன்புடன் வேண்டிக்கொள்ளும்போது, கபீர்: நான் ஏதாவது குற்றஞ் செய்திருந்தாலல்லவோ இவ்வாக்கினைக்கு உடன்படுவேன்? என்று உரைத்து எழுந்து வெளியில் ஓடிப்போனர். அப்போது சகலரும் தமாலையும் ஜிஜ்ஜாபீபியையும் நோக்கி, "இக்கொடிய துன்மார்க்கனை வீட்டில் சேர்க்காமல் துரத்திவிடுங்கள்?" என்றறைந்து, பின்பு உண்டு தங்கள் தங்களிடஞ் சேர்ந்தார்கள்.

அதன்பின்பு தமாலும் ஜிஜ்ஜாபீபியும் மகன்மீதிருக்கும் அன்பினல் அவனைத் தேடிப்பிடித்துக் கொண்டுவந்து பல புத்திகளைச் சொல்லியும் கேட்காத கபீர்மேற் கோபித்து இவ்வளவு சஷ்டகல்விகளெல்லாம் பேசும்நீ வேலைசெய்தாலொழிய உனக்கு அன்னம் இடுகிறதில்லை என்று ஓர் தரியிலுள்ள பட்டு நூலால் வஸ்திரத்தை நெய்யடா என்று வைது அடித்து வஸ்திரம் நெய்யும்படியாய்ச் செய்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே! என்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

---

## மூன்றுவது

# பிராமண ரூபமாய்வந்த பகவானுக்கு

## கபீர் வஸ்திரதானஞ்செய்த அத்தியாயம்



விருத்தம்

ஐயனே யருஞ்சிறிய னென்முன் ளுன்றி
யடையொணு வானந்த மிகவேதந்த
துய்யனே தேவர்முதற் றிசைமுகனுஞ்
சங்கரனுங் தேடிக் காணு
மெய்யனே மெய்ஞ்ஞான போதமேவு
மேதினியிற் ளுெண்டருளங் தங்குஞ் சக்ரக்
கையனே கோதண்ட ராமா நின்றன்
கழற்கருத வரமளித்துக் காப்பாய் கோனே.

காயமென்னும் வீட்டில் அஞ்ஞானமென்னும் இருளை மாற்றி ஞானமென்னும் விளக்கேற்றி மோனமாயிருக்கும் சித்தர்களே! பரிசுத்தர்களே! சிசுக்களின் உச்சிமண்டேகத்தின் கண்டம், மானிடர்களிருதயம், விபசாரமங்கையின் நெஞ்சம், தொடிமானுள்ளம்போல சதாகாலமும் பிர்மத்தைத் தியானஞ்செய்யும் கபீரைத் தரிநெய்யச் செய்தது எப்படியிருந்ததென்ருல்? பதிவிரதையை வேசையுடனும், யோக்கியனை நிந்தகனுடனும், ஜீவகாருண்ணியனைக் கொலையாளியுடனும், சந்திரனை ராகு கேதுவுடனும் ஞானியை அஞ்ஞானியுடனும், சர்ப்பத்தைக் கருடனுடனும், பசுவைப் புலியுடனும், காமக்கன்னியை நபும்ஸகனுடனும், தேவர்களை இராக்கதருடனும் சேர்த்தாப்போலவும் இருக்கிறது.

இப்படி குழந்தைமனதுடைய மகா புண்ணியவானுன கபீர் கடவுளைத் தியானஞ்செய்துக்கொண்டே ஒருமுழவஸ்திரம் நெய்து பிரமக்ஞானமேலீட்டால் தன்னை மறந்திருந்தார். அப்போது பகவான் மாயமாய் வந்து கபீருக்குப்பதில் ஒருமுழம் நெய்தார். * அதற்குள் ஜிஜ்ஜாபீபி வந்து கண்களை மூடிக்

* இப்படிப் பகவான் கபீரை நினையாமுன்னமேவந்து அவர் வேலைக்கு உதவியான காரணம் சுகப்பிர்ம்மரிஷிக்கு முன் வாக்குக் கொடுத்ததினுலேயாம். இவ்வளவு உபசாரணை பகவான் செய்வது எதக்கெனில்? மாயாதீதனுன சுகரை மாயையிலழுத்தலேயாம். விஷய போகமறியா சுகரை தேவர்களால் அனுப்பப்பட்ட ரம்பை பலவிதத்திலுஞ் செயிக்கமுடியாமல் அச்சுகரைத் தந்திரத்தால் வெல்லவெண்ணி ரம்பை சுகர் ஆசிர்மத்தினருகில் தபவேஷத்துடன் உக்கிரமான தவம் செய்துக்கொண்டிருக்கையில் இச்சூது அறியா சுகர் ஓர் முனிவ

கொண்டு தியானத்திலிருக்கும் கபீரை அதட்டி, "அடா கபீர்! வஸ்திரம் நெய்யச்சொன்னால் சொஸ்தமாய்த் தூங்குகிறாயா? காலையிலிருந்து மாலைபரியந்தம் இரண்டுமுழந்தானா நெய்தாய்? சஷ்ட கல்விகளெல்லாம் பேசும் உனக்கு இதுமாத்திரம் தெரியாமற் போனதென்ன? நல்லது இந்தக்ஷணம் இதை யறுத்தெடுத்துக் கொண்டுபோய் கடையில் விக்கிரையஞ் செய்து வந்தாலொழிய உனக்கு அன்னமகப்படாது" என்று உரைத்து வீட்டுக்குட்சென்றாள். பின்பு கபீர் தறியிலிருக்கும் இரண்டு முழத் துண்டை தறித்தெடுத்துக் கொண்டுபோய் கடையின் தெருமத்தியில் நின்றுக்கொண்டு வஸ்திரத்தை விரித்துக் காட்டி, "ஓ புண்ணியவான்களே! புண்ணியவதிகளே! இந்தப் பீதாம்பரத்தை வாங்கிக் கொள்ளுங்கள்" என்று பலதரஞ் சொல்லிக்கொண்டு அக்கடைத்தெருவில் திரிந்தது எப்படியிருந்ததென்றால்: சக்ராதிபதியாகிய புரூரவச்சக்கரவர்த்தியும் அரிச்சந்திரமகாராஜனும், வீரகுமாரனுடைய மாதா விறகையும், மனையாளையும், மகனையும் விலை கூறியதைப்போலிருந்தது. அல்லாமல் பலவந்தமாய் அணையவரும் ரம்மியமில்லா ஸ்திரீ புருஷாளைப்போலவும், பலவந்தமாய் விக்கிரயப்படுத்தும் வஸ்துக்களைப் போலவும் இருந்தது.

இப்படி பலவந்தமாய் விலைகூறும் கபீர் காத்திலிருக்கும் வஸ்திரத்தைப் பார்த்த சிலர், அடடா! இதென்ன வலையைப் போல் அங்குலத்துக்கு ஓரோர் இழை நெய்திருக்கின்றது. எவன் நெய்தானென்று பரிகாசஞ் செய்துப்போகையில், பகவான் மாயையால் அதை வாங்கவருஞ் சிலர் கண்ணுக்கு மேன்மையான விலையுள்ளதாய்த் தோன்றப்பட்டு, அப்பா! இதை எங்களால் வாங்கத் தகுந்ததோ? என்று போய்விட்டார்கள். ஏனெனின், பகவான் கைகளால் நெய்த வஸ்திரத்திற்கு ஒருவரால் விலைமதிக்கக் கூடுமோ? ஓ சித்தர்களே! கபீர் சூரியன் அஸ்தமனமாகும் பரியந்தம் இருந்தும் யாவரும் வாங்காமையால் இப் பீதாம்பரத்தை இனிமேல் யார் வாங்கப்போகிறார்கள் என்று

---

னென்றே உன்னி அருகிற்சென்று, "ஓ தபயோகியே! வெகுநாளாய் எதைநாடி இவ்வித உக்கிரமான தவஞ்செய்கிறீர்?" என்று வினவ, ரம்பை முனிந்தவள்போல அந்த இன்பத்தை விக்கினஞ் செய்தபடியால் நீர் இந்தக்ஷணம் நான் கோரிய வரமளிக்காவிட்டால் என்சாபம் பெறுவீர் எனச் சுகர் நீர் கோரியது அளித்தேன் கேளுமென்றார். உடனே ஸ்திரீரூபந் தரித்த ரம்பையைப் பார்த்து பிர்மித்து நல்லது கலியுகத்தில் உன்னிச்சை நிறைவேற்றுவேனென்று உரைத்தபடி கபீராயவதரித்து இரண்டு மகவைப் பெற்றார்.

வஸ்திரத்தை மடித்து கக்கத்தில் அடக்கிக்கொண்டு வீட்டை நோக்கிப்போகையில், பகவான் ஏழைப்பிராமணராய் கபீர் முன் வந்து வெடுக்கென்று அத்துண்டைப் பிடுங்கிக்கொண்டு ஓடத் தொடங்கினர். உடனே கபீர், "அடா திருட்டுப் பிராமணு! முரட்டுப் பிராமணு! கோபிகாஸ்திரீகளின் வஸ்திரங்களை அபகரித்துக்கொண்டு ஓடிப்போன திருட்டுக் கிருஷ்ணனைப்போல நாணயமான பீதாம்பரத்தைத் திருடிக்கொண்டா ஓடுகிருய்" என்று சொல்லிக்கொண்டே பிராமணனை விடாமற் றொடர்ந்து ஓடி மடியைப் பிடித்துக்கொண்டு அசையாமல் நிறுத்தி மிகவும் வருத்தி அருமையான பீதாம்பரத்தைத் தா என்று பிடுங்கத் தொடங்கினர்.

அப்போது மாயப்பிராமணர் அதைவிரித்துப் பலருக்கும் காண்பித்து, "ஓ ஜனங்களே! இந்த வலைத்துணி அருமையான பீதாம்பரமாம். இப்பேர்க்கொத்த வஸ்திரத்தை எங்கேயாவது பார்த்ததுண்டா? எனப் பழித்து இரண்டாய்க் கிழித்துவிட்டார். அதற்குக் கபீர் பிராமணரைநோக்கிச் சாந்தத்தை நீக்கி, "ஓ பிராமணு! நீ வேதமோதும் விப்பிரனுயிருந்தும், மகாவிஷ்ணுவின் மார்பில் அணிந்துக்கொண்டிருக்கும் பச்சை பீதாம்பாத்துக்குச் சமானமான விலையில்லாப் பீதாம்பரத்தைக் கிழித்துவிட்டாயே! நீ கெட்டாயே! ஊராருடைமைக்குப் பேயாய்ப் பறக்கும் பிராமணர்களைப் படைத்த பிர்மதேவன் எமனைப் படைத்தது நிஷ்பிரயோசனம்" என்று உரைத்து வஸ்திரத்தைப் பிடுங்கிக்கொண்டார். அப்போது மாயாபிராமணர் அடா கௌபீனத்துக்கும் உதவா இக்கந்தையைத் தாமோதரன் அணிந்துக்கொண்டிருக்கும் பீதாம்பரத்துக்கு மேலானதென்று உரைத்தது எப்படியிருக்கிறதென்ருல்: லோபியைப் பாபியும், வேசையை விபசாரியும், கொலையாளி வேட்டையையும், இச்சையுள்ளோன் சம்சாரத்தையும், காமமிகுந்தோன் ஸ்திரீயையும், உலுத்தன் தன் வல்லமையையும் புகழ்கிறதைப்போலிருக்கின்றதென்று உரைத்துப் பெருநகைபுரிந்து பலரும் பரியாசஞ்செய்து கெக்கலிகொட்டி நகைக்கும்படியாய்ச் செய்தார்.

அதற்குக் கபீர் பதிவிரதைக்கு அழகும், குணவானுக்கு ஐஸ்வரியமும், தர்மிக்குத் தவமும், ஜீவகாருண்யனுக்கு விரதமும், சாந்தகுணனுக்கு ஜபமும், நிராசையுள்ளோனுக்குச் சன்யாசமும், குலஸ்திரீக்குக் காவலும், ஆத்மஞானிக்குத் தியானமும், மனோசுத்தியுள்ளவர்க்கு ஆசாரமும் இல்லாதிருந்தாலும்

மேன்மையையே யடைவதுபோல, இவ்வஸ்திரம் வலையைப் போன்றதாயிருந்தாலும், பட்டுநூலால் நெய்திருப்பதால் மேன்மையானதாகவே யிருக்கின்றது. அன்றிப் பச்சைவண்ணனை அச்சுதன் அணியத்தக்கதேயாம் என்று உரைத்து வீட்டை நோக்கிப் போகையில், மாயாபிராமணர் மறித்து நான் இதை வாங்கிக்கொள்ளுகிறேன்; விலை என்ன? சொல்லடா? என்று கேட்டார். கபீர் எனக்கு இதன் விலை தெரியாது. நாலுபேர் உரைப்பதே விலையென்று சொல்லினர். பிராமணர் பலரையுங் கூப்பிட்டு, "ஓ புண்ணியவான்களே! இந்த வலைக்கந்தைக்கு என்னவிலை கொடுக்கலாம்? சொல்லுங்கள்" என்று கேட்டார். வழிப்போக்கரிலொருவன் இதற்கு ஒருபணமென்றும், மற்றொருவன் ஒரு வராகனென்றும், இன்னமொருவன் பத்து வராகனென்றும் ஒரு வர்த்தகன் நூறு வராகனென்றுஞ் சொன்னர்கள். அதற்கு மாயா பிராமணர் ஒரு கவடிவிலையும் பெருத பட்டு நூலால் சிக்காய் வாங்கக்கூடாமல் வஸ்திரமாய் விரித்துக் கொண்டுவந்த இக்கந்தைக்கு ஓர்விலை செப்பாது, பத்து வராகன் நூறு வராகனென்று பரியாசஞ் செய்கிறீர்கள் என்று உரைத்துக் கபீர்தாசரை நோக்கி, "ஓ கபீர்! ஓர் கவடிக்கும்பெருத இவ்வலைத்துணிக்கு இவ்வளவு விலை கொடுத்துவிடுகிறேன். நீ இன்றையத்தினம் இராஜன் முகத்தையோ, நரிமுகத்தையோ, பதிவிரதையின் முகத்தையோ, பக்தன் முகத்தையோ பார்த்து வந்தாய் என்று உரைத்தும் ஆயிரம்பொத்தலாயிருக்கும் பொத்தக்கந்தையில் அரிதான சொத்தாய் முடித்துவைத்திருக்கும் இரண்டு சொத்தைக் கவடிகளை அவிழ்த்தெடுத்து மெத்த விலையெனப் பதைத்து உரைத்துக்கொண்டே கபீர் கரத்திற் கொடுத்து இத்தனை விலை இப்பொத்தைக்கந்தைக்கு வாங்குவது உத்தமமல்ல" என்றார். கபீர் தன்கையிற் கொடுத்த இரண்டு வெள்வரிகளையும் பார்த்த கபீர், "ஓ ஜனங்களே! இந்தப் பிராமணன் கூடியமட்டுக்குங் கெட்டிக்காரன்தான்; இவன் மிகவும் பிரயாசத்துடனே கொடுத்த மேன்மையான விலையைப் பார்த்தீர்களா? சந்தேகத்தைப் தீர்த்தீர்களா?" என்று அந்தப் பலகரைகளை வீசி யெறிந்தார்.

உடனே அம்மறையோன், "அடா துஷ்டப்பயலே! பிரஷ்டப்பயலே! எங்கள் மூதாதைகள் சம்பாதித்த ஆஸ்தியை நாஸ்திசெய்யவா யோசித்தாய்? இனி எவ்வளவு பொருளைத் தான் ஆசித்தாய்? இதற்கா பிராமணோத்தமாவென்று பூசித்தாய்?

வீண்வழக்கை வளர்க்கவா நேசித்தாய்? அடடா! சாலக்கிராமத்தையும், லிங்கவுருவத்தையும், மாணிக்கத்தையும், வைடூரியத்தையும், அரியானுமத்தையும், இந்த க்ஷமத்தையும் எறிந்துவிடத்தக்கதோ" என்று அதை எடுத்துக்கொண்டுவந்து, அடா கபீர்! இக்கவடிகளால் உன்னையும் உன் தாதைமூதாதைகளையும், மூவுலகையும் விலைக்குவாங்குவேன்; குபேரனுக்கும் மேலாயோங்குவேன்; அண்டபிண்ட பிர்மாண்டங்களையுந் தாங்குவேன்; எனக்குற்ற தரித்திரத்தைவிட்டு நீங்குவேன். இதன்மகிமை பேய்ப்பயலே நீ அறியத்தக்கதோ? முழுத்தேங்காய் நாய்க்கெட்டாததுபோலக் கிடைப்பதற்கு அரியபொருளை எறிந்துவிட்டாய்" என்று சொல்லிப் பலதரங்காட்டி மறைத்தார். கபீர் இப்பீதாம்பாத்துக்கு உன்னையும் உன்னப்பனையும் விற்றாலும் விலைபோதாது. போபோ என்றுசொல்லி இருவரும் வழக்காடும்போது, அங்கு நிற்கும் பலரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகளாவது; செவிடனுங் குருடனுங் கூத்தைப் பார்க்கவும், பதிவிரதையும் பரத்தையும் திருநாளைப் பார்க்கவும், காமியுந் தாமியும் பெருமாளைப் பார்க்கவும், விருத்தனும் பாலனும் யுத்தஞ்செய்யவும், மௌனனுங் கலகனும் புராணங் கேட்கவும், கோளனுங் கொடியனும் நியாயந்தீர்க்கவும், திருடனும் பேராசைக்காரனும் வியாபாரஞ் செய்யவும், பாபியும் லோபியும் விபசாரஞ் செய்யவும், குடியனும் வெறியனுங் கூத்தாடவும், பித்தனும் உன்மத்தனுந் தர்க்கஞ் செய்யவும், பார்ப்பானும் பறங்கியும் பஞ்சாயத்துப் பேசவும் நேரிட்டதைப்போல் இவன் இந்தப் பொத்தக்கந்தைக்கு விலை கூறுவதும் அவன் இரண்டு சொத்தைக் கவடிகளைக்காட்டி மறைப்பதுமா யிருக்கிறதென்று கெக்கலிகொட்டி நகைத்து, "ஓ பயித்தியம்மேலிட்ட பார்ப்பானே! சயித்தியம்மேலிட்ட பஞ்சமனே! உன்னுடைய சண்டியெருதுக்கு இணையான கந்தைக்கு நொண்டிக் குதிரைக்கு இணையான சொத்தக்கவடிகளே போதுமான விலை" என்று உரைத்து அவரவர்கள் அலுவலைப் பார்த்துக்கொண்டு அகன்றார்கள்.

பின்பு பிராமணர் கபீரைநோக்கி, "ஓ கபீர்! மேன்மையான காட்சிக் கவடிகளைக்கொடுக்கும் மாட்சிமையான எனக்கு இத்தாக்ஷியான கந்தையைக்கொடுக்காமல் பிரஷ்டசாட்சியைப்போலக் குளறிக்குளறிப் பேசலாமா?" என்று சொல்லினர். கபீர் "பல்லில்லாவாயுள்ள நீயே ஏதேதோவாயில்வந்தபடி வெகுநேரமாய்

உளறிக்கொண்டிருக்கின்ருய். இப்பீதாம்பரத்துக்குத் தகுந்த விலைபெருமல் கொடுத்தால் என் தாயார் வாயில் வந்தபடி வைவாள்; சித்ரவதை செய்வாள்; போபோ; பேராசையுள்ள பேயனே! ஏமாற்றவந்த வாயனே!" என்று நவின்ருர். பிராமணர் பின்னும் அச் சொத்தக் கவடிகளைக் காண்பித்து இதை வாங்கிக்கொண்டு அதைத் தரலாகாதோ? என்ருர். கபீர் "புழுத்துப்போன வலகுகளுக்கா மடியைத் தருவேன்; குட்சிறிறையப் பிட்சை யகப்படாதவன் லட்சாதிபதியைச் சம்பந்தஞ் செய்ய யோசித்ததைப்போல் எங்கேயோ வீழ்ந்திருந்த கவடிகளைக் கொண்டுவந்து கொடுத்து ஏமாற்றிப் போகவந்தீர். நீர் வாங்கிக்கொண்டது போதும்; வந்தவழியைப் பார்த்துக்கொண்டு ஏகும்" என்று உரைத்தார். மாயாபிராமணர் இக்கவடிகள் இரண்டன்றி வேருெரு பொருளும் எனக்கில்லை. இவ்வேழைப் பிராமணன்மேல் கிருபைகூர்ந்து தருமார்த்தமாய்ப் பாதி வஸ்திரந் தருவீராளுல், கோகுலபிருந்தாவனத்தில் திருநாளாகும்போது பெருமாளுக்கு அணிகிறேன். இதனுல் உமக்குப் புண்ணியம் புகழுமுண்டாவதன்றி, எச்சிலைக்கொடுத்த சவரியும், பிடியவல் கொடுத்த குசேலனும், பெற்ற பேற்றைப் பெறுவீரென்று உரைக்க, கபீர் இப்பீதாம்பரம் பெருமாளுக்கே அணியத்தக்கதாயிருந்தாலும் யான் தகுந்த விலைவாங்காமல் தருமார்த்தமாய்க் கொடுத்தால் என் தாயும் தந்தையும் நைய அடிப்பார்கள்; உயிரை முடிப்பார்கள். ஆதலால் மன்னியுமையா என்று வணங்கினுன்.

பிராமணர், "ஓ மகானுபாவா! சத்தியநாவா! நீ தருமகுணத்திற் சிறந்தவனென்று பலருஞ் சொல்லக் கேள்விப்பட்டதும் அன்றி முகமும் அகமும் குறியுங் குணமும் அப்படியே தோன்றுகின்றது. அல்லாமல், நீ இக்காசியில் சிலநாளில் தருமக்கொடியை நடுவாய். 'விளையும்பயிர் முளையிற்றெரியும்' என்ற பழமொழி பழுதாகாது. ஓ தருமப் பிரபுவே! பெண்டு பிள்ளை பண்டம் பதார்த்தம் நாடு நகர் தாய் தந்தை உற்ருேர் மற்ருேர் ஆனை சேனை முதலானதுங் கூடவருந் துணையல்லவே. தர்மம் அனேக ஜன்மங்களுக்குத் துணையாயிருந்து காப்பாற்றுமல்லவா? உனக்கும் விரித்துச் சொல்லவா? 'தர்மந் தலைகாக்கும்' என்னும் பழமொழி பொய்யா? மெய்யா? சொல்லையா? மிகுதுய்யா? தர்மஞ் செய்யுங் கையா" என்று மிகவும் வேண்டிக்கொண்டார். அதற்குக் கபீர் இந்தத் துண்டு வஸ்திரத்தைக் கொடுக்கலாமென்

ருல், இப்போதே தாய் வந்துவிடுவாளே; வந்து துன்பந் தந்து விடுவாளே; இதற்கு என்ன செய்பலாம்? என்கிற எண்ணத்தி ஞல் கொடுக்க மனம் வராமலும், இல்லையென்று உரைக்க வாயெழாமலும் மௌனமாய் நின்றுக்கொண்டிருந்தார்.

பகவான், "ஓ கபீர்! ஜீவர்களுக்குத் தருமத்தையன்றி வேறு துணையில்லையே? மௌனமாயிருப்பது தொல்லையே? லோப குணத்தை மாற்றவில்லையே. நீ தருமகுணமுடையவனல்லையே. அடட! இந்த ஏழைப்பிராமணன் முகத்தைப் பார்க்கலாகாதோ? பார்த்தால் உனக்கு லாபமுண்டாகாதோ? பாபங்களெல்லாம் பஸ்பமாய்ப்போகாதோ? லோபகுணம் நசித்துப்போகாதோ? ஓ தருமஸ்வரூபனே! திவ்விய சொரூபனே! லோபியைப்போன்ற பாபியில்லையென்கிற பழமொழி அறிவாயே. அறிந்து என் ஆசி பெறுவாயே. முற்காலத்தில் தருமார்த்தமாய் பரமசிவனுர் கொல் லும் விஷத்தைக் குடிக்கவில்லையா? பத்மாசுரன்கேட்ட வரமளி த்து அவன் துரத்த ஓடிப் பதுங்கவில்லையா? வாணுசுரனுடைய வாயலைக் காக்கவில்லையா? கும்பகர்னனுக்குத் திரிசூல மளிக்க வில்லையா? இராவணனுக்குத் தன் மனைவியை ஈயவில்லையா? அர்ச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரங் கொடுக்கவில்லையா? மார்க் கண்டனுக்கு என்றும் பதினறு வயது அருளவில்லையா? மன்ம தன் பஸ்பமாய் எரிந்துபோகவில்லையா? ததீசி மகாரிஷி தன் முதுகெலும்பைத் தரவில்லையா? மாபலி பாதாளத்தில் அமிழ் ந்துபோகவில்லையா? சிபிச்சக்கரவர்த்தி தன் சரீரத்தை அறுத் தளிக்கவில்லையா? ரகுராஜன் தன் அரசாங்கத்துடன் மனைவி களையும் நல்கவில்லையா? கர்ணன் தன்னுயிரைக் காக்கும் கவசகுண்டலங்களை ஈயவில்லையா? தருமராஜன் தன்னுடன் வந்த சுணங்கனைச் சுரலோகத்துக்குக் கொண்டுபோகவில் லையா? அருச்சுனன் ஓர் கந்தர்வனைக் காக்க ஸ்ரீகிருஷ்ண பகவானேடு போராடவில்லையா? இலட்சுமி பரமசிவனுக் குற்ற பிரமஹத்தியை மேற்கொள்ளவில்லையா? பிரஹஸ்பதி இந்திரனுக்குற்ற பிரமஹத்தியைத் தான் ஏற்றுக்கொள்ள வில்லையா? கலைக்கோட்டுமுனி தசரதனுக்குற்ற புத்திரவாஞ் சையைத் தீர்க்கவில்லையா? தசரதன் தேவர்களைக் காக்கவில் லையா? புரூரவச்சக்ரவர்த்தி தேவகன்னிகையை விடுவிக்கவில் லையா? கிருஷ்ணன் பஞ்சபாண்டவர்களுக்குத் தூதாகவில் லையா? அவர்களுக்குச் சாரத்தியஞ் செய்யவில்லையா? தூருவாச ருக்கு ஏவல் செய்யவில்லையா? மாடுபோ லிரதத்தை யிழுக்கவில்

லேயா? கோவர்த்தனகிரியைக் குடையாக வெடுக்கவில்லேயா? குசேலனுக்கு அஷ்டயிஸ்வரியமுங் கொடுத்து அடிமையாய்ப் போக எண்ணங் கொள்ளவில்லேயா? அம்சத்துவஜன் தன்னுடலே நடுபாதியாய் அறுத்து ஈயவில்லேயா? பாண்டியன் தன் தலேயையறுத்துக் காவேரிநதியில் போடவில்லேயா? நீ மாத்திரம் இத்தூசையளிப்பது தொல்லேயா? இதற்கு உத்தரஞ் சொல்லேயா? சற்றே என்முன் நில்லேயா? சீரைக்கொடுக்காதது லோபமில்லேயா?" என்று உரைத்தார்.

அவ்வாக்கியங்களேக் கேட்ட கபீர் மனந்துலங்கி மிகவுங் கலங்கி இவருடைய தொனியான குரலுக்கு இணையான இனிய வஸ்து இவ்வுலகத்தில் இல்லவேயில்லே. ஆஹா! தர்மத்தின் நிமித்தியம் எவ்வளவு திருஷ்டாந்தங்கள் சொன்னர். எத்தனே புண்யபுருஷர்களுடைய திருநாமங்களேப் புகன்றார். ஆஹா! அந்த மாபாலி பகவான் கேட்ட மூன்றடி மண்கொடுத்து ஸ்ரீமந் நாராயணருடைய திவ்விய திருவடி தன் சிரமுடியாகக்கொண்டு அழியாச் சிரஞ்சீவிபட்டமும் பெற்ருர். தேவகுருவான பிரகஸ்பதிக்குத் தெரியாத சஞ்சீவிமந்திரம் பெற்ற சுக்கிரன் தர்மஞ் செய்கிறதைத் தடுக்கப்போய் ஒருகண்ணிழந்து, லோபியென்று பேர்பெற்ருன். இவ்வளவு இழிவான லோபகுணத்தை விடாமல் கேட்போர்க்குக் கொடாமல் யாதொரு லாபமும் பெருதவனுவேனே? இல்லறத்துக்குத் தருமமும், துறவறத்துக்குத் தபமும், ஸ்திரீகளுக்குக் கற்பும் புருஷர்களுக்கு ஞானமும் முக்கியமென்பது மெய்யல்லவா? வியாபாரம் செய்யப்புறப்பட்ட நாம் இல்லறவானென்பதற்கு ஓர் தடையுண்டோ? இனி இல்லறத்துக்குத் துணையான தர்மத்தை என் உயுருள்ளமட்டும் மறப்பேனு? யார் வந்தாலும் வெறுப்பேனு? பசியென்ருல் பொறுப்பேனு? பொறுத்து உயிருடனிருப்பேனு? என்கிற பற்பல யோசனேயோடுங்கூடின மனதுடன் வழக்கப்படி பிஸ்மில்லாவென்று கொடுக்கப்போனுர்.

அதற்கு மாயாமறையோர், "அடா நீச்சா! இது வேதப் பேச்சா! தபத்துக்கும் ஜபத்துக்கும் இகத்துக்கும் பரத்துக்குந் துணையான ஜீவகாருண்ணியத்தை நிக்கிரகித்து உயிர்களே வதை செய்து உண்ணும்படியான கொடியவார்த்தையை எழுதியிருக்கும் கட்டுக்கதையான ஓர் புத்தகத்திலுள்ள ஏதோ ஓர் நாமத்தைச் சொல்லிக் கொடுக்கவந்தாய்? ஐயையோ! யாரோ பிராமணப்பிள்ளே யென்றல்லவோ நினேத்தேன். உத்தமனென்று

மதித்தேன். பிரபுவேயென்று துதித்தேன். சந்தோஷத்தாற் குதித்தேன். சீலனென மனதிற்பதித்தேன்" என்று கபீர் தலையை நாலுதிக்கிலுந் திருப்பித் திருப்பிப் பார்த்து அடா! உன் நெற்றியில் சகல மங்களமும் நிறைந்த திருநாமம் அணிந்திருக்கின்றதென்றல்லவோ யிருந்தேன். பஸ்பமும் அணியாப் பாழ்முகனே! துடுக்கர் மகனே! விஷ்ணுவாம்சமான திருநாமமாவது சிவாம்ஸமான பஸ்பமாவது அணியாதிருக்கிற அறிவீனனே! பிருதிவியம்ஸமான இத்தேகம் பிருதிவியேயாய்ப் போகும் என்று பலரும் அறியக் காட்டும்படியான திருநாமத்தையும், இந்த லலாடஸ்தானத்தில் பரஞ்சோதி இப்படியே இருக்கின்றதைப் பாருங்களென்று அனைவர்க்கும் அறிவுணர்த்துந் திருமணியையும், இன்றைக்கே யணிந்துக்கொள். தர்மமே உயிர்க்குத் துணையென்று 'துணிந்துக்கொள். துடுக்கரை வெல்லவந்ததை அடிக்கடி நினைந்துக்கொள். மனதே உன்னெண்ணப்படி நடக்கமாட்டேன் என்று கனைத்துக்கொள். திருநாமம் பகவானுடைய திருவடிகளென்று அறிந்துக்கொள். பரஞ்சோதியே பரப்பிர்மமென்று தெரிந்துக்கொள். பரமாத்துமாவை உனக்குள்ளாகவே உணர்ந்துக்கொள். பிரம்மானந்தமே மேலான வின்பமென யுணர்ந்துக்கொள். எப்போதும் ஸ்ரீராம நாமத்தை துதித்துக்கொள். இவ்வுலகங் கானற்சலமென்று மதித்துக்கொள். இப்பிரபஞ்சம் பொய்யென்று எண்ணிக் கொள். எந்தவஸ்துவைக் கொடுத்தாலுஞ் சீதாராமாவென்று துதித்துக்கொடு" என்று அச்சீரையை வாங்கிக்கொண்டார்.

இவ்வாக்கியங்களைக் கேட்ட கபீர் கருடனைக்கண்ட சர்ப்பத்தைப்போற் கலங்கி சகுண நிர்க்குணங்களில் நிர்க்குணமே அதிகமாயிருக்க, இவர் சகுணத்தையே மேன்மையாகப் பேசுகின்றார். ஆனால் இதின் உண்மையை நன்றாயறிந்துக்கொள்ள வேண்டும் என்று மறையவரைநோக்கி, "ஓ பிராமணோத்தமரே! நிரூபமாயிருக்குங் கடவுளை இப்பேர்க்கொத்ததென்று சொல்லக்கூடாக் குறையால் பிர்மமென்றும், அனித்தியத்தைக் குறித்து நித்தியமென்றும், மலத்தைக்குறித்து நிர்மலமென்றும், குணத்தைக் குறித்து நிர்க்குணமென்றும், ஆங்காரத்தைக்குறித்து நிராங்காரமென்றும், நிர்நாமமான பரப்பிர்மத்துக்கு அநேக கற்பு நாமங்கள் வேதத்திற் சொல்லுவதன்றி நிர்க்குணத்தையே மேன்மையாகப் பேசுகின்றது. நீர் அதை விடுத்து வேதவாக்கியத்தைத் தடுத்து சகுணமான விஷ்ணுவின் திருநாமமான சீதா

ராமென்னுந் திருநாமத்தை மேன்மைப்படுத்திச் சொல்லுங் காரணத்தைச் சவிஸ்தாரமாய்த் தெரியச் சொல்லுமையா" என்று கேட்டார். அதற்கு மாயாபிராமணர் இந்தக் கபீரை முன்னஞ் சகுணத்தியானத்தினால் பரிசுத்தனாக்கிப் பின்பு பிரமக் ஞானத்தை யுணர்த்தவேண்டும் என்கிற தாத்பரியத்தால் தர்க்கஞ் செய்யாமல் குதர்க்க மார்க்கமாய்ப் பேசத்தொடங்கினார்.

அதெப்படியென்றால், ஓ சித்தர்களே! பகவான் கபீரை நோக்கி, "ஓ கபீர்! சுத்தசூன்யமாய்ப் பரவெளியான பரப்பிர்மம் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததென்று உரைத்த நீ வாக்கையும் மனதையும் மவுனமாக்காமல் சஞ்சலமானதை ஞானேந்திரியங்களில் செலுத்திக் கர்மேந்திரியமானவாக்கின் விவகாரமாடிக்கொண்டு தேகேந்திரிய கரண ஜீவனே நானென்றும், இவ்வலைத்துணி முதலான வஸ்துக்கள் என்னதென்றும், பிர்மைகொண்டு உழலும் நீ அகமமதையற்று ஆத்மஸ்வரூபமே தானென்றிருக்கும் பிர்மக்ஞானிகளேத்தும் வாக்குமனோகோசரமான பரப்பிர்மத்தை நினைத்தால் பிரயோசன மேதுண்டு? தன்னையறிந்த பிர்மக்ஞானி ஒரு கர்மஞ் செய்யக்கூடுமா? ஓ அறிவில்லாதவனே! மண்ணின்மேல் மரக்கலமோடுமா? காவலின்றி கட்டுப்பட்டவளே காந்தையன்றிக் காவலாற் கட்டுப்பட்டவள் கற்புள்ளவளாவாளா? சத்கதிக்காகத் தருமஞ் செய்பவனே சத்புருஷனன்றி டம்பத்துக்காகச் செய்பவன் சத்புருஷனாவானா? தன்னை அன்னியர் புகழ்வதே கீர்த்தியன்றித் தன்னைத்தானே புகழ்ந்துக்கொள்வது கீர்த்தியாகுமா? ஒருவனுக்குத் தான் ஐக்கியமாயிருந்தாலே வந்தனமன்றி கள்ளக் கும்பிடு வந்தனமாகுமா? அதுபோல எங்கணும் பரிபூரணமாயிருக்கும் பரப்பிர்மத்துக்குள் ஐக்கியமாயிருப்பதே வந்தனமன்றி வேறுபட்டுத் தியானிப்பது வணக்கமாகுமா? நீதான் தெரியச்சொல்" என்று உரைத்தார். கபீர், "ஓ பழமறை யுணர்ந்த பார்ப்பானே! சகல சந்தேகங்களையுந் தீர்ப்பானே! உடல் பொருள் ஆவி என்னும் மூன்றையுந் தானென்று நினைக்கும் அகத்தைச் சிகிச்சை செய்து நிஷ்கிரிய வஸ்துவாகிய பரப்பிர்மத்துக்குள் ஐக்கியமாயிருப்பதே உத்தமதானமென்றும், சத்தாதி வசனாதிகளையடக்கி அகங்காரமனதை மடக்கி, நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மத்துக்குள் ஐக்கியமாயிருப்பதே சாந்த நிதானமென்றும், பிபீலிகாதி பிர்மபரியந்தம் பரப்பிர்மமே நிறைந்திருக்கிறதென்றும், அதில் நானென்னும் அகம்பாவமேதென்றும், பரிபூரண வஸ்துவா

யிருப்பதே பிர்மத்தியானமென்றும், நானென்னும் அகங்காரத்தோடு கூடி யாதொரு கிரியையுஞ் செய்யாமல் தானே அந்த காரியங்களைப் பற்றறச் செய்து அகம்பாவத்தை அடியோடும் இல்லாமற் கொய்து சிதாகாசமாத்திரமாயிருப்பதே பிர்மக்ஞான மென்றும், சாட்டிய நித்திரையில் நசித்திருந்ததுபோல பிர்ம நிஷ்டையில் மனம்நசித்து பிர்மானந்த ஆவேசம் மேலிட்டுத் தன்னை மறந்திருப்பதே மகா மௌனமென்றும் சொல்லலாம். இந்த ஞானத்தை உமதிடங் கேட்கவில்லை. சீதாராமென்று சொல்லச்சொன்ன காரணமேதோ? அதைத் தெரியப்படுத்து மையா வென்று தர்க்கித்தார்.

மாயாபிராமணர், "ஓ அறிவில்லாதவனே! யான் சொல்லும் மர்மமறியாமல் கத்தரிக்காய்க்கு கால் கை முளைத்தாப்போல பிஞ்சிலே பழுத்து ராகத்தை யிழுத்துத் தானம் நிதானம் தியானம் கியானம் மோனமென்று உளருகிறாய். உன்னையும் உன் அப்பனை யுங் கண்ணனையுங் கண்ணப்பனையும் விழுங்கி உமிழாமல் தனக்குள் ஓர் அணுப்போல் வைத்திருக்கும் பிர்மத்துக்கு நீ வேறு பட்டிருந்தால் அல்லவோ பிரமத்தை நினைக்கத்தகும். அடா மூடா! சமுத்திரத்தையன்றி துளி வேருகுமா? அக்கினியன்றி பொறி வேருகுமா? பிருதிவியின்றி தூசி வேருகுமா? பிர்மமன்றி நீ வேருகுமா? தானுகவும் வானுகவும் பரிபூரணமாகவும் இருக்கும் பிர்மத்தைத் தனக்கு அன்னியமாக்கித் தியானிப்பது அஞ்ஞானமா? மெய்ஞ்ஞானமா? குஞ்ஞானமா? விஞ்ஞானமா? முக்கால் மூடனைக் கொண்டாடும் முழுமூடனுக்கு இணையான மூட்டாளே! ரூபமேதானென்று இருக்கும் நிரூபமுள்ள பகவானையே நினைக்கவேண்டும். ஏனெனில், நிரூபமாய் நிர்ச்சலனமாய்இருக்கும் பிர்மத்தில் பிரபஞ்சம் உண்டாச்சுதா? மாயா சொரூபனுன பகவானுற் பிரபஞ்சம் உண்டாச்சுதா? சீக்கிரம் சொல்லடா" என்று தலைமேல் ஓர் குட்டு குட்டினுர். அதற்குக் கபீர், "ஓ வேதாந்தந் தெரிந்த விப்பிரனே! மறுமாசில்லாச் சுப்பிரனே! நிரூபமாகிய பரப்பிர்மம் நிர்ச்சலமாய் இருப்பதால் அஃதொன்றையும் நிர்மாணிக்கமாட்டாது. மாயாசொரூபனுன பகவானுலேயே நிர்மாணிக்கப்பட்டது. ஆனுலும் காரணமான பரப்பிர்மத்தைத் தியானஞ்செய்யாமல் காரியமான விஷ்ணுவை நினைப்பதால் பிரயோசனமேதுண்டு. நானற்ற பிர்மக்ஞானி மௌனமாய் இருக்கவேண்டியது சகஜந்தான். நானென்பது அறுதவர் நிஷ்களமான பரப்பிர்மத்தைத் தியானிக்கலாமென்று பல சாஸ்

திரங்களும் முறையிடுகின்றதே. நீர்மாத்திரம் வேண்டாமென்று சொல்லுங் காரணம் என்?" என்று நவின்றார்.

மாயாவிலாசனுன பகவான், "ஓ கபீர்! சர்வம் பிரமமயமாயின் தானங்கொடுப்பவன் யார்? வாங்குபவன் யார்? தோத்திரஞ் செய்பவன் யார்? கேட்பவன் யார்? மோக்ஷம் என்பது எது? மோக்ஷம் அடைகிறவன் யார்? ஆனந்தமென்பது எது? ஆனந்தத்தை யனுபவிப்பவன் யார்? ஆசான் யார்? மாணுக்கன் யார்? இகபாமென்பதேது? இகபர சவுக்கியங் கொடுப்பவன் யார்? ஜனனமரணமேது? ஜனனமரண துன்பத்தை யனுபவிப்பவன் யார்? பிரபஞ்சமேது? பிரபஞ்சத்தைச் சிருஷ்டிப்பவன் யார்? சிருஷ்டி ஸ்திதியேது? ரக்ஷிப்பவன் யார்? ஸ்திதி நாசமேது? சங்கரிப்பவன் யார்? ஜாக்ரஸ்வப்னமேது? இதைக் கற்பிப்பவன் யார்? ஸ்வப்பன சுழுத்தியேது? விகற்பப்படுத்துகிறவன் யார்? தாய்தந்தையேது? பிறந்தவன் யார்? நீயென்பதும் நானென்பதும் எது? மாயையென்பதேது? பிர்மமென்பது தானே என்று வகுப்பற்றுப்போம். இப்பேர்க்கொத்த பிர்மக்ஞானந் தெரிந்தவன்தானே இந்தக் கந்தையைக் கொடுத்தால் தாயார் வந்துவிடுவாளே; துன்பத்தைத் தந்துவிடுவாளே என்று வெகுநேரங் கொடுக்காமல் பின்னிட்டாய். வாய்ஞானம் பேசுவதற்குமாத்திரம் முன்னிட்டாய்; வாச்சாக்ஞானம் பேச்சாமீனம் என்கிறதறியாயோ? யான் உரைக்கும் இரகசியத்தைக் குறியாயோ? எதுகாலபரியந்தம் ஒருவனுக்கு ஜாக்ராவஸ்தையிற் சுழுத்திநிலை வராதோ அதுபரியந்தம் நீ நானென்கிற விவகாரந் தொடர்ந்தேயிருக்கும். அன்றி ஊமை பேசுவானு? சுழுப்திநிலையுள்ளவன் ஒன்றைத் தியானஞ் செய்வானு? செய்யமாட்டான். ஆதலால் அத்துவிதபாவந் தெரிந்து நீ பிர்மத்தைத் துவிதப்படுத்தித் தியானிக்கலாகாது. எவனெருவன் அபின்னத்தைப் பின்னப்படுத்துவானே அவன் முன்னம் பிர்மத்துக்கு வேருகவேண்டும். இப்படி வேருக இருப்பவனுக்கு அபின்னபாவங் கூடவே கூடாது. அபின்னமான பிர்மமேதானுனவன் பின்னபாவஞ் செய்யக்கூடாது. பின்னப்பட்டிருப்பவன் அத்துவிதத்தைப் பேசலாகாது.

ஏனெனின், பரத்தை பத்மினியாகமாட்டாள். பத்மினி பரத்தையாகமாட்டாள். அதுபோலவே, அத்துவிதபாவம் அறிந்த உனக்குத் துவிதபாவமேன்? துவிதபாவம் உள்ளவனுக்கு அத்துவித பாவமேன்? இதுகளின் மர்மம் நன்ருய் அறிந்

துக் கொள்வதற்கு நீ சிறுபையன். பாச்சி சோச்சி என்பவன்; வேதங்களை ஓதாதவன்; தர்க்கஞ்செய்யப்போதாதவன்; சின்னஞ் சிறுபிள்ளை; பேசுவதெல்லாஞ்சொள்ளை; அறிவில்லாவெள்ளை; கொஞ்சிப்பேசுங்கிள்ளை; நீ ஆவாயா என்போல் ஆண்பிள்ளை என்று பலவார்த்தைகள் புகன்று மீசையைமுறுக்கிக் கோபத்தைப்பெருக்கி, "அடா கபீர்! நான் நீ யென்னும் பாவமுடன் அபிமானமுமுள்ள நீ பிஸ்மில்லாவென்னும் மொழியின் மர்ம மறியாமல் சொன்னுய். யாரும் முன்னஞ் சகுணத்தியானத்தில் தேர்ந்து இகபரங்கள் அனித்தியமென்று அறிந்து எல்லா ஆசையுந் தீர்ந்து தேகாபிமானங்களிலிருந்து பேர்ந்து, நிர்க்குணத்தியானத்தைக் கைக்கொள்ளவேண்டும். அப்படிக்கின்றி நின்றபடி படுத்துத் தலையையுடைத்துக் கொள்வதுபோல ஒன்று மறியாச் சிறுவனுகிய நீ ஆதியிலேயே நிர்க்குணத்தைத் தியானித்து இகபரத்துக்கும் உதவா பிரஷ்டனுகவேண்டாம். சிறு குழந்தைகள் மணலால் வீடுகட்டி விளையாடுகிறதற்கு இணையான வாசாக்ஞானம் பேசவேண்டாம். பேசினுல் அப்படியே யிருக்க வேண்டாமா? அப்படி யிருக்காமல் வாய்ஞானத்தால் என்னை வெல்லவந்தாயே? இதற்கு உத்தாஞ்சொல்லக் கூசி நொந்தாயே. ஆதலால் இன்றுடன் நிர்க்குணபாவத்தை விட்டு நாரதாதி ரிஷீஸ்வரர்களெல்லாம் எந்தத் திருநாமத்தைத் தோத்திரஞ் செய்கிருர்களோ? எவனுடைய அருளால் நிர்க்குண ஞானத்தை யடைந்தார்களோ? எதனுற் சகல பாவங்களும் நசித்துப் போகுமோ? அந்தத் திருநாமத்தை யாரிடத்திலாவது உபதேசம் பெற்றுக்கொண்டு அதை நெடுநாள் தியானஞ் செய்து பரிசுத்த மனதுடையவனுகிப் பின்பு நிர்க்குணத்திற் பிரவேசிக்கலாம். அப்படிக்கின்றி நிர்க்குணத்தால் திரிமூர்த்திகளையும் நிக்கிரகித்த தாருகாவன ரிஷிகளைப்போலப் பங்கப்பட்டுப் போக வேண்டாம் என்று பயமுறுத்திக் கபீர் மனதைச் சகுணத்தில் ஸ்திரமாய் நிறுத்திப் போய் வருகிறேன்" என்று மாயா மறையோன் மாயமாய் மறைந்துபோனுர்.

கேட்டீர்களோ சித்தர்களே! இப்படிப் பலவந்தமாய் ஆண்டுக்கொண்டு பகவான் மறைந்தபின் கபீர் யோசிக்கின்ருர். நாம் தியானத்தைக் குறித்துக் கேட்க ஞானத்தைப் பேசிப்போனுர். அப்படிப் பேசிப்போனுலும் முதற்படியில் கால்வைத்து ஏருமல் மூன்ரும்படியிற் பாய்ந்து நிலத்திற் சாய்ந்து தலையை யுடைத்துக்கொள்வதுபோலச் சரியை கிரியை யோக மென்னும்

மூன்றையுங்கடந்த பிரமதியானத்தையும், பேசினபடி நடக்கக் கூடாமல் இத்தூசியின்மேல் ஆசையால் மோசம் போனேனே. வாசாக்ஞானம் அறியா மாந்தரை வெல்வதற்கு உரியதாகும். அறிந்த அனுபவிகளின்பால் ஓர்வார்த்தையும் பேசுவதற்கு உதவாது. அன்றி பேச்சின்படி நிற்கப் பெருமூச்சுவரும்; ஓதின படி சாதனஞ்செய்யாதவன் பேதையரிலும் அதிபேதையென்ப தற்கு ஓர் ஐயமேயில்லை. சகுணத்தைக்கடந்த நிர்க்குணத்தைப் பேசின நாம் நிர்க்குணத்தில் நிற்பது வெகு அரிதாகவே தோன்றுகின்றது. ஏனெனில் ரூபமுள்ள குணத்திலேயே நிலைக் காத மனம் நிர்க்குணத்தில் நிற்பது மிகவுந் துர்லபந்தான். ஆனாலும் மோக்ஷ இச்சையுள்ளவர்க்கு எந்தத் தியானஞ் செய்ய வேண்டுமோ நமக்குத் தெரியவேயில்லை. இதைப் பரிசுத்தமான ஓர் ஆசான்பால் கேட்டுத் தெரிந்துக்கொள்ளும் பரியந்தம் இப் போது உரைத்துப்போன பிராமணருடைய வாக்கியத்தையே நம்பியிருக்கலாம் என்று பகவானை அத்தியந்த பக்தியுடன் தியா னஞ்செய்துக்கொண்டே யிருந்தார். கேட்டீர்களோ சித்தர் களே! என்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

பிராமண ரூபமாய்வந்த பகவானுக்குக் கபீர் வஸ்திரதானஞ் செய்த அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காவது

## கபீருக்குப் பகவான் பகீரி ரூபமாய் வந்து நிஜதரிசனம் கொடுத்த அத்தியாயம்

பிர்மரந்திரத்தில் சுவாசத்தை ஏற்றி ஜீவகளையைப்போற்றி நாதாந்த வசமாயிருக்குந் தன்யர்களே! மிகவுங் கன்யர்களே! புண்ணியவானான கபீர் இந்தக் கதையின்மேல் வாஞ்சையாயிரு ந்த நாம் வாசாக்ஞானி யென்பதற்கு ஓர் சந்தேகமேயில்லை. வந்தவர் உரைத்துப்போனதே உண்மையான சொல் என்று பசுமரத் தாணிபோற் பகவத்தியானத்தில் பதிந்திருக்கையில் இவரைப் பரிசோதிக்க வேண்டுமென்று பகவான் ஓர் பகீரி வடிவுகொண்டு கபீர்பக்கலடைந்து, "ஓ புண்ணியவானே! நீ மிகவும் தயாளகுணமுடையவனெனப் பலருஞ் சொல்லக் கேள்

விப்பட்டு மெள்ளவாராமல் துள்ளிவந்தேன். எனக்கோ வஸ்திரமில்லை; உமது கையிலிருக்கும் வஸ்திரத்தைக் கொடுத்து எனக்குள்ள தரித்திரத்தைப் போக்கலாகாதா? உமது அஞ்ஞானமும் அடியோடும் வெந்து நீருகாதா? பாவங்களெல்லாந் தலையெடுக்காமற் சாகாதா? உலோபகுணம் குறைந்துபோகாதா? ஓ தரும ஸ்வரூபனே! திவ்வியமான கியாபனே! உலோபியைப்போன்ற பாபியும்; விபசாரியைப்போன்ற அபசாரியும் இவ்வுலகில் இல்லையென்பது உண்மையல்லவா? உமக்கு விரித்துச்சொல்லவா? புருஷனுக்குப் புண்ணியமும் காந்தைக்குக் கற்புமின்றி வேறு துணையுண்டா? நான் சொல்லும் வார்த்தையில் பழுதுண்டா? உம்மை லோபகுணத்தில் அமிழ்த்தியதுண்டா? அல்லது வேறே எண்ணங்கொண்டா?" என்கிற பற்பல வார்த்தைகளாடினர். அப்போது கபீர், "ஓ முற்றுந்துறந்த பகீரியே! இல்லையென்று கேட்கும் பிகாரியே! நீர் ஆசைகொண்டது இந்த வஸ்திரத்தின்மீது தானே; இந்தாரும்; ஜெயசீதாராமாவென்று உரைத்துக் கொடுக்கப்போனர்.

அதுகேட்ட மாயா பகிரி மிகவுங் கோபங்கொண்டவர்போல், "அடா துர்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! நித்ய நிர்மல நிர்விகற்ப நிரஞ்சன நிராதார நிரூப நிஷ்களங்க நிர்ச்சங்க நிர்ப்பேத நிர்ச்சேத நிர்நாம நிஷ்காம நிர்க்குண நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மமே ஆதிதெய்வமெனத் தெரிந்திருந்தும், சீதாராம் ஜெயராமென்று ஓர் மனிதன்பேரைப் புகழ்ந்து கொடுக்க வந்தாய். நிரூபமான கடவுளை விடுத்து வேதவாக்கியத்தைத் தடுத்து ரூபமுள்ள தெய்வத்தை நினைக்கலாமா? எங்கணும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் சச்சிதானந்தக் கடவுளை மறக்கலாமா? என்றுங் கேட்காத வார்த்தை சொன்னுய். இனி உன்னருகிலும் நிற்கக்கூடாது" என்று உரைத்துப் போனர். அப்போது கபீர், "ஓ ஸ்வாமி! உமக்குத் தத்தஞ் செய்ததை வாங்கிக்கொண்டு போகாமல் என்னை அபராதியாக்கிப் போகலாமா? இதனுல் நான் நரகத்திற்கு ஏகலாமா? ஒருவருக்குத் தத்தஞ் செய்த வஸ்துவைக் கொண்டு கொடுக்காதவனை எமதூதர்கள் தண்டத்தா லடித்து முடுக்காமற் போவார்களா? வாக்கைக் கொடுத்து ஒரு போக்கைக் காட்டுவோர்கள் நீதியுள்ளவர்களாவார்களா? நான் அறியாக் குழந்தையென்று அறிந்திருந்தும் பகவான் அணியத்தகுந்த இந்தப் பீதாம்பரத்தின்மேல் இச்சைகொண்டும் வாங்காமற் போவது நியாயமா? என்னை

லுத்தனுக்கிப் போவது சகாயமா? அறிவில்லாக்குழந்தையின் மேல் அன்புகூர்ந்து வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு போம் ஐயா" என்று மிகவும் வேண்டிக்கொண்டார். அப்போது மாயா பகீரி கபீரை நோக்கி, "போபோ! வேதவிரோதமான வார்த்தை யைச் சொன்ன உன்னிடத்தில் ஒரு கவடி வாங்கினல் பாபம் வந்து நேரிடும்" என்று உரைத்தார்.

அதற்குக் கபீர், "ஓ சுவாமி! நான் அறியாக் குழந்தையன்றி ஞானமார்க்கம் நன்ருயறியேன். ஆனலும் அக்கினியாலுருகி நிரூபமாயிருக்கிறநெய்யும் குளிராலுறைந்து ரூபமாய்த்தெரியும். நெய்யும் வேருகுமா? அன்றி நிரூபமாயிருக்கிற பொன்னும், ரூபமாயிருக்கிற ஆபரணமும், நிரூபமாயிருக்கிற பஞ்சும் ரூபமா யிருக்கிற வஸ்திரமும், நிரூபமாயிருக்கிற வர்னமும் ரூப்மாயிருக் கிற சித்திரமும், நிரூபமாயிருக்கிற பர்வதமும் ரூபமாயிருக்கிற விக்கிரகமும், நிரூபமாயிருக்கிற இரும்பும் ரூபமாயிருக்கிற ஆயு தமும், நிரூபமாயிருக்கிற மண்ணும் ரூபமாயிருக்கிற பாத்திர மும், நிரூபமாயிருக்கிற ஜலமும் ரூபமாயிருக்கிற லவணமும் வேருகாததுபோல் நிரூபமாயிருக்கிற பிர்மமும் ரூபமாயிருக்கிற பகவானும் வேறென்று சொல்லக்கூடாது. அன்றி நிரூபமா யிருக்கிற பிர்மமும் ரூபமாயிருக்கிற பகவானும் வேறென்று சொல்லக்கூடாது. அன்றி, நிரூபமாயிருக்கிற சலத்தைவிட ரூபமாயிருக்கிற முத்தே மேன்மையானது. அதைப்போல நிரூபமாயிருக்கிற பிர்மத்திலும் ரூபமாயிருக்கும் பகவானே மேன்மையென்று சொல்லத்தகும். ஆதலால் அந்தப் பரந்தாம னுடைய திவ்விய திருநாமத்தையே யாதொரு காரியத்துக்குஞ் சிந்தனஞ் செய்யவேண்டும்" என்று உரைத்தார். மாயாபகீரி, "ஓ கபீர்! ஆசானுக்கு மாணுக்கன் உபதேசஞ் செய்கிறதைப் போல சொல்லவந்தாய். யதார்த்த வஸ்து பொன்ளு? ஆபர ணமா? மண்ணு? பாத்திரமா? பஞ்சா? வஸ்திரமா? அயமா? ஆயுதமா? கல்லா? விக்கிரகமா? ஸ்வர்னமா? சித்திரமா? நிரூ பமா? ரூபமா? சொல்லும் பிள்ளாய்" என்று கேட்டார்.

கபீர் "ஓ பெரியோரே! எனக்கு உத்தரஞ் சொல்லச் சிறி யோரே! நீர் நன்ருய்த் தெரிந்தவராயிருந்தும் அறிவில்லாக் குழந்தையாகிய அடியேனை ஏமாத்துகிறீர். எதார்த்த வஸ்து நிரூபமாகிய பரப்பிர்மமேயானலும் அதுவே ஆலாங்கட்டி யைப்போல் ரூபமாகிப் பகவானென்கிற பேர்பெற்று இவ்வுல கத்தை ரக்ஷிக்கின்ருர். அன்றி சூரியனுக்குக் கிரணமும், சந்திர

னுஞ் சீதளமும், அக்கினியும் உஷ்ணமும், தீபமும் பிரகாச மும், ஜலமும் ருசியும், தனமுங் கனமும், சாபமும் கோபமும், கோபமும் பாபமும், ஆசையும் பாசமும், இச்சையுஞ் ஜென்ம மும், ஜென்மமும் கர்மமும், கர்மமுந் தேகமும், தேகமும் நாகமும், நரகமும் துக்கமும், தானமுந் தயவும், நிதானமும் சாந்தமும், ஜபமுந் தியானமும், ஞானமும் மோனமும், மோன மும் நிஷ்டையும், நானென்பதும் அக்யானமென்பதும், மாயையும் பிரபஞ்சமும், நிராசையுஞ் சன்யாசமும், பொறுமை யுந் தவமும், ஜீவகாருண்யமும் விரதமும், குருவுந் தெய்வமும், தெய்வமும் பிர்மமும், பிர்மமும் ஆனந்தமும், ஆனந்தமும் மோக்ஷமும் வேறுயிருந்தாலல்லவோ பகவானும் பரப்பிர்மமும் வேறென்று சொல்லக்கூடும். அன்றியும் ரூபமாகிய தேகாதி களே நானென்று இருக்கும் நாமரூபமாகிய பகவானையே தியா னிக்கத் தகுந்தது” என்று உரைத்தார்.

அதற்குப் பகிரி, “ஓ கபீர்! பிர்மப்பிரளயத்தில் அழுந்திப் போகும் ரூபத்தையும் க்ஷணபங்க தேகத்தையும் சத்தியமென்று நம்பலாகுமா? சகுணத்தியானத்தால் ஜனனமரணத் துன்ப மொழிந்து போகுமா? விஷத்தை அமிர்தமென்று நினைக்கும் அறிவீனரைப்போல வெகுநேரமாய் குதர்க்கஞ் செய்கிறாய்; விஷத்தைக் குடித்து இறப்பதைப் பார்க்கிலும் அமிர்தத்தை யுண்டு அழியாமலிருப்பது உத்தமமானதைப்போல அநித்திய தெய்வத்தை நம்பி அதோகதியடையாமல் நித்தியதெய்வத்தை நம்பி நித்தியானந்தத்தை யடையடா எனப் பலதரஞ் சொல்லி யுங் கேட்காத உன் மூடத்தனத்துக்கு நான் என்னசெய்யட்டும்?” என்று உரைத்தார்.

கபீர், “ஓ சாதுவே! மரணத்தைத் தரும் பாம்பின் விஷம் மாணிக்கமானதுபோல சாந்தகுணத்திற் பிரதிபலித்த பிர்மமா கிய ரூபமுள்ள பகவான் பிர்மானந்தத்தோடு அஷ்ட ஐஸ்வரிய முந் தரும் ஆண்டவனுயிருக்கிறூர். அவரை என்றும் மறக்கவே கூடாது. அன்றி பிர்மப்பிரளயத்தில் எல்லாஞ் சூனியமாகும் போது ஜீவர்களுஞ் சூனியமே. ஜீவர்களை ரக்ஷிக்குந் திருமாலின் திருவுருவஞ்சூனியமே. ஆனாலும்சுழுப்தி அவஸ்தையிலிருக்கும் இருளிலும் ஜாக்ராவஸ்தையிலுள்ள கரணங்களே மேலானது போல நிரூபமாயிருக்கிற பரப்பிர்மத்திலும், பக்தர்கள் நினைத்த வண்ணமான ரூபமெடுத்து இரக்ஷிக்கும்பகவானே முக்கியவான்”

என்று உரைத்தார். மாயாபகிரி, "அடாமுட்டாளே! பிர்ம மில்லாவிட்டால் மாயையேது? திரிகுணங்களேது? திரிகுணப் பிரதிபிம்பரான திரிமூர்த்திகளேது? நிச்சயந்தெரியாமல் ஏன் குளறுகிருய்? பிர்மத்தையே உறுதியாய் நம்பியிரும் பிள்ளாய்" என்று உரைத்தார். கபீர், "ஓ மூதுணர்வோரே! பகவான் ஜல ரூபமாய் வருஷிக்காவிட்டால் பிரபஞ்சமேது? சராசர ஜீவர்களேது? பிர்மமென்று நினைக்கிறவர்களேது? நீரேது? நானேது? ஆதலால் ரூபமான நாராயணனை ஒருவர் மறக்கத்தகுந்ததோ? இரக்ஷிப்பவனைவிட மேலான தெய்வம் ஒன்று உண்டோ? போம்போம்; என்னவார்த்தையைப் பேசுகிறீர்?" என்று நவின்ருர்.

பகிரி, "ஓ கபீர்! திரிமூர்த்திகளையும் மாயையும் பிரபஞ்சத்தையும் ஸ்வப்பனக் காக்ஷிபோலவும், சுத்திகா ரசிதம்போலவும், ரச்சு சர்ப்பம்போலவும், முழுதும் மித்தையென்றும், பிர்மமே சத்தியமென்றும் சொல்லும் வேதாந்தத்தை விடுத்து பிர்மமே பகவானென்றும், பகவானே நித்திய தெய்வமென்றும், வாயில் வந்தபடி பேசுகிருய். நிரூபமாயிருக்கிற பரப்பிர்மத்துக்குச்சலனமுண்டா?சலனமில்லா வஸ்துவே பகவானுகிப் பிரபஞ்சத்தை ரக்ஷிப்பது எப்படியாகும்? சூரியனில் இருட்டும், ஆனந்தத்தில் துக்கமும், பிரியத்தில் கோபமும், ஆகாயத்தில் ரூபமும் பதிவிரதைக்குச் சலனமும் உண்டாயிருந்ததால் அல்லவோ நிரூபமாகிய பரப்பிர்மத்திலிருந்து ரூபமாகிய பகவான் உண்டாவார். அன்றி நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மம் ஆங்கார வஸ்துவாகிய விஷ்ணு எப்படியாகும்? உனக்கு இந்தப் பயித்தியம் எத்தனை நாளாய்ப் பிடித்திருக்கிறது?" என்று நகைத்தார்.

கபீர், "ஓ விருத்தரே! ஆகாயத்தில் சுழல்காற்றும், சுத்த சூன்யமாகிய சுழுப்தியிலிருந்து நினைவும், ரூபமில்லாச் சுக்ல சுரோணிதத்தில் ரூபமும், அண்டத்தி லில்லா நானுவித தோகையின் வர்னமும், வித்திலில்லாச் சுகந்தம் புஷ்பத்திலும், விருட்சத்திலில்லா மதுரம் கனியிலும், எப்படி தனக்குத்தானே யுண்டாயிற்ருே, அப்படியே நிர்சலனவஸ்துவிலிருந்து தனக்குத்தானே சலனமுள்ள பகவானுண்டாகி இவ்வளவு விசித்திரங்களைச் செய்தார். அல்லாமல் பகவான் ஒருவனில்லாமற்போனுல் மாயையேது? பஞ்சபூதங்களேது? பஞ்சவர்னங்களேது? பிரபஞ்சமேது? மோக்ஷமும் நரகமும் ஆனந்தமும் துக்கமும் புண்ணியமும் பாவமும் குருவும் சிஷ

னும், தொழுதலும் துதிப்பதுமேது? அசராசர ஜீவர்களேது? நீரேது? நானேது? தர்மமேது? தானமேது? போபோ மூக பாவத்தைப் பேசும் மூதுமையனே" என்று உரைத்தார்.

மாயாபகிர், "ஓ கபீர்! தருமமேது? தானமேது என்று நான் கேட்ட வஸ்திரத்தைக் கொடுக்கமாட்டீரோ?" என்று கேட்டார். கபீர் "நீர் துணிந்து என் உயிரைக் கேட்கினும் தருவேன்; இந்த வஸ்திரம் பெரிதோவென்று கொடுத்து இனி உம்மிருப்பிடம்போய்ச் சேரும்" என்று புகன்றார். மாயாபகிரி வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு, "ஓ தனவானே! கனவானே! உனக்கு இன்னும் ஆத்மஞானந் தெரியவில்லை. ஏனெனில், கர்மத்திலும் பக்தியிலும் வைராக்கியம் மேன்மை; வைராக்கியத்திலும் ஞானம் மேன்மை என்று வேதத்தில் முறையிட; அதைத் தள்ளி பக்தியையே பிரதானமாகச் சொல்வது அறியாமையாகும்" என்று உரைத்தார். கபீர், "ஓ வாசாமுறை பேசும் வாயனே! மேல் கீழாக்கு மூபாயனே! முன்பு பக்தியிற் றேறி பின்பு வைராக்கியத்தைக் கைக்கொண்டு பிரபஞ்சத்துக்கு வேறாகி ஞானசாதனஞ் செய்யவேண்டும். அப்படிக்கின்றி முதற்படியிலிருந்து ஏருமல் மூன்றும்படியிற்றுண்டி முகத்தை யுடைத்துக்கொள்ளுகிறதைப்போல் பாலியனாகிய நான் இப்போதே ஞானமார்க்கத்தில் பிரவேசித்தால் பிரயோசனம் ஏதுண்டு. ஆதலால் முன்னம் பக்தி முதிர்ச்சியினுல் பக்த வச்சலனாய்ப் பகவானை என் கண்குளிரப்பார்த்து அவருடைய திருவடிகளில் என் திருக்கண்களையுஞ் சேர்த்து, மனதையுஞ் ஞானாந்தகாரக் கூபத்தில் விழாமல் காத்துச் சகல சந்தேகங்களையும் பேர்த்து, நிர்க்குண தியானபரனாகிப் பந்தபாசங்களைக் கழித்து ஞான நிஷ்டையிற் செழித்து ஆனந்தமேலீட்டாற் றழைத்து, அகமமதையால் அழியாமற் பிழைத்துத் தன்னை மறந்த ஆரூடக்ஞானியாவேன்" என்று சொல்லினர்.

மாயாபகிரி, "ஆஹா! க்ஷணபங்கமான இந்தத் தேகத்தை நித்தியமென்றல்லவோ இவ்வளவு எண்ணங்கொண் டிருக்கின்றாய். ஒருவேளை உன் இஷ்டப்படி பகவான் முடித்தாலும் முடிப்பார்; புண்ணியவானான நீ நினைத்தபடியே முடியட்டும். ஆனாலும் நிர்ச்சலனமாயிருக்கும் பாப்பிர்மத்திலிருந்து பகவான் உண்டானதும் பகவானுல் பிரபஞ்சமுண்டானதும் எப்படியோ அதைச் சற்றே தெரியச்சொல்லுமப்பா" என்றுகேட்டார். கபீர் "ஓ மூதுணர்வோரே! இப்பேர்க்கொத்ததென்று தன்மனதினுல்,

நினைக்கவும் வாக்கினுற் சொல்லவுங் கூடாததான பரப்பிரமத்தி லிருந்து உண்டானது; சுழுப்திக்கிணையான அவ்வியந்த மென்கிற மூலப்பிரகிருதியென்றும் அதிலிருந்து உண்டானது முக்குணங்களென்றும், திரிகுணங்களின் முதன்மையான சாத்வீகத்திற் பிரதிபலித்த பிர்மமே பகவானென்றும் சொல்லப்படும். அப்பகவானுல் பிர்மாவுண்டாகி அவனுல் இவ்வெழுவகைத் தோற்றங்களான சராசரங்களும் அண்டபிண்ட. பிர்மாண்டங்களும் உண்டாயிற்று.

நிரூபமாயிருக்கும்போது பிர்மமென்றும் ரூபமானபோது விஷ்ணுவென்றும், அப்பகவானுக்கேசொல்லப்படும். விஷ்ணு பரப்பிரமசொரூபமென்று வேதத்தில் முறையிடுகின்றது. ஆதலால், விஷ்ணுவையே ஆதிதெய்வமென்று நம்பவேண்டும். அல்லாமல் பகவானுனவர் முதல்முதல் ஜலரூபமாய்ப் பிரகாசித்தார். அதனுலேயே நாராயணன் என்கிற பேர் உண்டாயிற்று. [பகவான் பாதத்திலிருந்து கங்கையுண்டாச்சு தென்பதின் தாற்பரியம் ஜலரூப னென்பதாம்] அன்றி ஜலம் வருஷித்ததே எங்கும் பச்சையாய் விளங்குகிறபடியால் பச்சைவர்ணனென்றும், மேகமாய் வருஷித்தலால் மேகமேனியனென்றும், சமஸ்த சுபமங்களங்களும் அவர் நினைத்த மாத்திரத்தில் உண்டாகின்றதால் அவருடைய இருதயமான மார்பகத்தில் சுபமங்களங்கள் விளங்கிய மஹாலட்சுமி வீற்றிருக்கின்ருளென்றும், ஜலரூபமான அந்த மகானுபாவர் பூமியை சக்கரம்போல் சூழ்ந்திருக்கின்றபடியால் அவருடைய ஆயுதஞ் சக்கரமென்றும், எப்போதுந் தொனிக்கும் வாரிதியில் ஆதியிலிருந்து சமஸ்தங்களுக்கும் ஆதாரமாகிய அகார உகார மகாரமென்னும் திரியாக்ஷரங்களுங் கூடிய பிரணவாக்ஷரமே உச்சரிக்கிறபடியால் சங்கையுடையவனென்றும், ஜலத்தின் மத்தியில் இப்பூமி உண்டானதால் பூமியே பிர்மாவென்றும், பிருதிவிக்கு நான்கு திக்குகள் இருக்கிறபடியால் சதுர்முகமென்றும், இப்புவியே சிருஷ்டிக்கு ஆதிகாரணமாதலால் சிருஷ்டிகர்த்தாவென்றும், இப்புவி தன் வல்லமையினுல் அந்தரத்திலிருப்பதால் தன் சக்தியான ஆதிசேஷன் முடியின்மே லிருக்கிறதென்றும், சக்தியே தனக்கு ஆதாரமானதால் ஆதிசேஷன்மேல் சயனிப்பவனென்றும், அக்கினியின்மேல் ஜலரூபனுன விஷ்ணுவிருப்பதால் அக்கினியம்ஸனுன ருத்திரன் முடியிலிருப்பவனென்றும் ஜலாம்ஸ விஷ்ணுவால் அக்கினியம்ஸனுன பரமசிவன் தாபத்தை

நீக்கிக்கொண் டிருப்பதைப்பற்றி ருத்ரப் ·பிரிய னென்றும் சமஸ்த ருசிகளுக்கும் ஆதாரமான ஜலமயனானதால் க்ஷீரசாகர னென்றும், பக்தர்களுக்கு வேண்டிய வரங்களளித்ததால் வரத னென்றும், எங்கும் வியாபித்திருப்பதால் விஷ்ணுவென்றும், அழியாமலிருப்பதால் அச்சுதனென்றும், பாபங்களை அரிப்ப தால் அரியென்றும், அன்பர்களிருதயத்தில் எப்போதும் ரமிப் பதால் ராமனென்றும், விளையாட்டாய் இச்சகத்தை உண்டாக்கி னதால் லீலாவினோதனென்றும், சமஸ்தவஸ்துக்களிலும் ஒட் டியும் ஒட்டாமலிருப்பதால் கபட நாடகனென்றும், தன்னை நம்பி னோர்க்கு அழியாப்பதமீதலால் வைகுந்தநாதனென்றும் இதுவே அவருடைய ரூபமென்று உணர்ந்துக்கொள்ளக் கூடாததால் பிர்மமென்றும், பக்தப்பிரியனாதலால் பகவானென்றும், சமஸ்த லோகங்களுக்கும் அதிபதியாதலால் ஜகன்னாதனென்றும், அடி யார்களுக்கு அடிமை செய்பவனாதலால் பக்தவச்சலனென்றும், நித்திரை வருவதும் நீங்குவதும் முதலான தன் மாயையை யாராலு மறியக்கூடாமல் செய்பவனாதலால் மாயனென்றும், காணுதற்கு அரியவனாதலால் பராத்பரனென்றும், நாரதாதி ரிஷீஸ்வரர்களால் துதிக்கப்பட்டவனாதலால் ருஷிகேசவனென் றும், மிகவுந் தபஞ்செய்வோர்கள்முன் பிரசன்னமாகிறவ னாத லால் மாதவனென்றும், சமஸ்தத்துக்கும் ஆதார புருஷனாத லால் ஆதிமூலமென்றும், சமஸ்தலோகங்களும் ஜலாம்ஸத் தால் உண்டாவதால் சர்வ சிருஷ்டியென்றும், சமஸ்தலோகங்க ளுஞ் சலத்தால் ரக்ஷிக்கப்படுகிறதால் சர்வ ஸ்திதியென்றும், சமஸ்தமும் ஜலமென்னுந் தண்ணில் அடங்கிப்போவதால் சர்வ சம்ஹாரனென்றும், தசாவதாரங்களால் இவ்வுலகில் துஷ்ட நிக் கிரகம் சிஷ்டபரிபாலனஞ் செய்தும் செய்பவனாதலால் மச்ச கச்ச வராக நாரசிங்க வாமன பரசுராம ஸ்ரீராம பலபத்ர ராம கிருஷ்ண கற்கியென்றும் பலபேர்கள் துதிப்பதாலும் வேதத்தி லும் முறையிடுகின்ற இப்பேர்க்கொத்த பகவானைக் கனவிலும் மறக்கத் தகுந்ததோ? மறக்காமல் சிந்திப்பவர்களுக்கு ஓர் இடை யூறும் உண்டோ? பகவானைப் புகழாத வேதாகம சாஸ்திரங்க ளும் உண்டோ? ஓ பகீரியே! பிர்மம் பிர்மமென்று பலதரம் பிதற் றுகிறீரே? அந்தப் பிர்மத்துக்குப் பேச்சுண்டா? மூச்சுண்டா? இல்லை, ஆதலால் இனி என்னுடன் குதர்க்கஞ் செய்யாமல் வாயில் வந்தபடி வையாமல் என்னுறுதியைக் கொய்யாமல் என் மனம் புறளும்படியான சொல்லம்புகள் எய்யாமல் உமது

இருப்பிடத்துக்குப் போய்ச் சேருமையா'' என்று நவின்றனர்.

மாயாபகீரி இன்னஞ் சோதிக்கவெண்ணி, "சபாசு! சபாசு! நல்லவார்த்தைகளைச் சொன்னாய். அகண்டம், அகண்டாகண்டம், அசலம், அனந்தம், அப்ரமேயம், சின்மயம், தேஜோமயம், சித்விலாசம், நித்யம், சத்யம், நிஷ்களானந்தம், பரமம், பரப்பிர்மம், பரமேஸ்வரம், சுயம், துரியம், துரியாதீதம், விஸ்வம், பூரணம், விஸ்வாதீதம், விமலம், விசேஷம், வேதாதீதம், சுபம், சுந்தரம், சுயம்பிரகாசம் என்கிற நிஷ்களங்க நாமங்களுடைய நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மத்தை விடுத்து ஆங்காரத்துடன் அவுணர்களை யெல்லாங் கொன்ற அரியென்பவனை ஆங்காரத்தால் தோத்திரஞ் செய்துக்கொண்டே வந்தாய். நிச்சயமறியா அறிவீனனே! விதை முன்னதா? விருக்ஷம் முன்னதா? தந்தை முன்னவனா? தனயன் முன்னவனா? ஆண்டவன் முன்னவனா? அடிமை முன்னவனா? தமையன் முன்னவனா? தம்பி முன்னவனா? சொல்லும் பிள்ளாய்'' என்று அதட்டிக் கேட்டார்.

கபீர், "ஓ பிகாரி! பணங்காட்டுநரி ஸலஸலவென்பதற்குப் பயப்படுமா? பதிவிரதை மன்மதபாணத்துக்கு இடங்கொடுப்பாளா? வீரன் எதிரிக்கு முதுகுகாட்டி ஓடுவானா? பேரின்பத்தை யாசித்தோன் விஷயானந்தத்தில் அமிழ்வானா? திடநிச்சயமுள்ளவன் துக்கத்தால் வாடுவானா? தைரியசாலி அவதைரியத்துக்கு உட்படுவானா? படான். அதுபோல, வாய்ஞானம் பேசும் உம்மை நானொருபொருளாய் மதிப்பேனா? ரூபத்தில் நிலைக்காத மனம் நிரூபத்தில் நிலைக்குமா? ஆகாயத்தில் ஏணிவைத்து ஏறக்கூடுமா? விருக்ஷம் இல்லாமல் விதையென்கிறபேர் உண்டாகுமா? தனயன் பிறக்காமல் தந்தையென்கிற பெயர் உண்டாகுமா? தம்பியில்லாமல் தமையனென்கிறபேர் உண்டாகுமா? அடிமையில்லாமல் ஆண்டவன் என்கிறபெயர் உண்டாகுமா? உண்டாகாது. ஆதலால் அடிமையாகிய எனக்கு ஆண்டவனே துணை. அடிமைத்தனமில்லா உமக்கு ஆண்டவனே யில்லை. நிர்ச்சலன வஸ்துவாகிய பிர்மத்தைத் தியானித்தால் அந்தப் பரப்பிர்மம் அசையுமா? பேசுமா? காக்ஷி கொடுக்குமா? திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை. தாசனுக்குச் சாமியே துணை. அடிமைக்கு ஆண்டவனே துணை. பக்தனுக்குப் பகவானே துணை. நரனுக்கு நாராயணனே துணை. அன்றி ஆதிமூலமே யென்று கூப்பிட்ட கஜேந்திரனைக் காத்து ரக்ஷித்தது பகவானா?

பரப்பிர்மமா? பிரகலாதனனைக் காக்கத் தூணிலிருந்து புறப்பட்ட நரசிம்மம் பகவானா? பிர்மமா? துரோபதையின் துகிலுரியும்போது காத்தது துளசீதரனா? சுயம்பிர்ம்மா? ஓ பகீரி! நாராயணனே சகலரையுங் காத்தவர். ஆதலால் நாராயணனை நம்பினவனுக்கு நாகமில்லை; துளசீதரனைத் தொழுபவனுக்குத் துக்கமில்லை; விஷ்ணுவன்றி எனக்கு வேறுதெய்வமில்லை; ஸ்ரீராம நாமமன்றி நான் வேறு நினைப்பதில்லை; சரணமென்பவர்க்கு மரணமில்லை; பதிவிரதை தன் உயிர் நீங்கினும் பரபுருஷருக்கு இடங்கொடுப்பதில்லை; பக்தனாகிய நான் பகவானையன்றி வேறு தெய்வத்தை வணங்க உடன்படுவதில்லை. ஆதலால், விருதாவாய் வெகுநேரமாய் வளவள சளசளவென்று ஏன் ஏசுகின்றீர்? உண்மை தெரியாமல் ஏன் பேசுகிறீர்? வீணாய்க் கைகளை வீசுகிறீர்? தகுந்த உத்தரஞ்சொல்லக் கூசுகிறீர்? இனி பேசினது போதும் எழுந்துபோமையா'' என்று சொல்லினர்.

மாயாபகீரி, "ஓ கபீர்! நிருபமான பரப்பிர்மத்தைத் துதிக்கும் துலுக்கவம்சத்திற் பிறந்தும், சகுணத்தைக் கைக்கொண்டு மகம்மது மதத்தைக் கண்டிப்பது இராக்கதர் வம்சத்தில் பிறந்த விபீஷணனைப்போல் இருக்கின்றதென்றும் உரைத்தார். கபீர், ஓ பகிரி! நான் பிரகலாதனன்; நீர் விபீஷணன். ஆதலால் விபீஷணன் தன் வம்ஸத்தை நாசஞ்செய்தாப்போல நீர் உம்முடைய குலத்தை நாசஞ்செய்யும். நான் பிரகலாதனனைப்போல் இரக்ஷிக்கிறேன்'' என்று நவின்றார். பகீரி, "ஓ கபீர்! நீ குலத்தோரை ரக்ஷிப்பது சகுனியைப்போலவே யிருக்கிறது'' எனப் புகன்றார். கபீர், "ஓ பெரியோரே! நான் சகுனியல்ல. தோலுண்டு கழியுண்டு குற்றமுண்டு ஆக்கினையுமுண்டென்று அகலனின்ற விதுரனைப் போலிருக்கிறேன். நீரே ஸ்திரமான சகுனியாய் துலுக்க வமிசத்தை நாசஞ்செய்யக் கங்கணங் கட்டிக்கொண்டு, நீண்டகுல்லாவும், நீண்ட அங்கியும் போட்டுக்கொண்டிருக்கிறீர்'' எனப் புகன்றார். பகீரியாகிய பகவான் ஆஹஹா! சந்தோஷம். என்ன வார்த்தையைச் சொன்னாய்? சபாசு! சபாசு என்று நகைத்து துஷ்டர்களையும் பிரஷ்டர்களையும் சிஷ்டை செய்யவே கங்கணங் கட்டிக்கொண்டிருக்கும் என் சாமார்த்தியத்தை இன்னஞ் சற்றுநேரத்திற் காட்டுகிறேன்; பம்பரம்போல் ஆட்டுகிறேன்; நல்லது ஆகட்டும்; சற்றே பொழுதும் போகட்டும்; உன்னை இந்தப் பிரம்பால் பதைக்கப் பதைக்க அடிக்காமலும் முழங்கையால் இடிக்காமலும் வாயில்வந்தபடி திட்டாமலும்தலைமேற்குட்டாமலும் விடப்

போகிறேனு? பார் பேய்ப்பயலே! என்று வைதுக்கொண்டே அவ்விடம்விட்டுப் போகையில், கபீர் பகவானை நம்பினோர்கள் பகவான்களன்றி உன்னைப்போன்ற பிகாரியான பகீரியல்ல; போம்போம்; வீண்வார்த்தைகள் பேசவேண்டாம்" என்று சொல்லினர். மாயாபகீரி, "அடா கபீர்! போபோவென்று என்னை மிரட்டுகிருயா? இப்போதே உன் தாயாரிடம்போய் பல வந்தமாய் வஸ்திரத்தைக் கொடுத்துவிட்டதும், சொந்தமதத்தைத் தூஷித்ததும், சகலருந் தொழும்படியான என்னை அபேக்ஷித்ததுஞ் சொல்லி, இப்போதே அழைத்துக் கொண்டுவந்து உன்னை உதைக்கும்படியாகவும் சிதைக்கும்படியாகவுஞ் செய்கிறேன்" என்று மிகவுங் கோபத்துடன் தமால்வீட்டை நோக்கிப் போகத் தொடங்கினர்.

கபீர், "அடா! இவன் என்ன வம்புசெய்யத் தென்புள்ளவனுயிருக்கிருன். 'குலத்தளவேயாகுங் குணம்' என்பதைப்போலவும், ஜீவகாருண்ணியமில்லாத தீயர் துறவிகளானாலும் தன் துர்க்குணம் விடாரென்பதைப்போலவும், இந்தத் துடுக்கன் வெகு மூடுக்காகப்போகிருன். ஒருவேளை நமது மாதா வஸ்திரங் கொடுத்துவிட்டதைக் கேட்டால் கொல்லாமலும், ஈனவார்த்தைகள் சொல்லாமலும், உதைக்காமலும், சிதைக்காமலும் விடுவாளா? என்று ஓடோடியும்போய் அந்தப் பகீரியின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு என் தாயினிடத்தில் இவ்வார்த்தையைச் சொல்லி என்னைக் கொல்லாமல் கிருபைசெய்யுமையா" என்று மிகவும் பரிதாபத்துடன் வேண்டிக்கொண்டார். பகீரி, "அடா போடாபோ; இந்தக்ஷணம்போய் உன்தாயிடஞ் சொல்லாமலும், உன்னைக் கொல்லாமலும் அரைநாழிகையும் பொறுக்கமாட்டேன்" என்று எட்டியுதைத்து ஜிஜ்ஜாபீபீயிடத்திற்குப் போய்விட்டார்.

பின்பு கபீர் யோசிக்கின்ருர்; ஊர்ச்சண்டை கண்குளிர்ச்சியென்பது போலவும், தேளுக்கு அதிகாரங்கொடுத்தால் நாழிக்கு ஒருதரங் கொட்டுமென்பது போலவும் செய்தார். அன்றி நம்முடைய 'உரிப்பணம்போய்த் தெருச்சண்டையிழுத்த' தென்பதுபோலவும், 'சணப்பன் வீட்டுக்கோழி தானே வந்து மாட்டிக்கொண்டது' போலவும், மல்லாந்தபடி உமிழ்ந்து மார்பெல்லாம் எச்சில் ஆக்கிக்கொண்டது போலவும் நமக்கு நேரிட்டது. பகீரி செய்யும் ஆகாத்தியங் கெட்டது. இனியென்ன செய்யலாம் என்று பலவிதங்களாலும் யோசித்து ஒன்றுந்

தோன்ருமல் ஓர் பாழ்வீட்டிற்குட்போய்ப் பதுங்கிக்கொண்டு, பகவானே! எனக்கு இந்தச் சமயத்தில் அருகே துணையிருந்து காக்கவேண்டும்" என்று ஸ்ரீமந் நாராயணருடைய திவ்விய திரு நாமங்களைத் தோத்திரஞ் செய்துக்கொண்டேயிருந்தார். இப்படியிருக்கப் பகவானுகிய பகிர் கபீர்கொடுத்த துண்டுவஸ்திரத்தைக் காத்திலேந்திக்கொண்டே ஜிஜ்ஜாபீபியினிடம் போய், வஸ்திரத்தைக் காண்பித்து, "ஓ அம்மா பாக்கியவதி! உனது குமாரனுகிய கபீர் விக்கிரயஞ்செய்யக் கொண்டுபோன இந்த வஸ்திரத்தைப் பலவந்தமாய் ஓர் பிராமணனுக்குத் தானஞ் செய்யப் போகும்போது, எனக்குக் கொடுமென்று வேண்டிக் கொண்டேன்; கொடுக்காமல் இரண்டாய்க் கிழித்து அப்பிராமணனுக்கும் எனக்கும் கொடுத்தான். பாதிவஸ்திரம் வேண்டாமென்று மறுத்ததற்குப் பலவந்தமாகக் கொடுத்து நீர் இக்கணம் என் தாயாரிடம்போய்க் கேட்டால் உமக்குத் தேவையான பெரிய வஸ்திரங் கொடுப்பாளென்றும், நான் சொன்னதாய்ச் சொல்லவேண்டாமென்றும் உம்முடனே வந்தால் நானே அழைத்துக்கொண்டு வந்ததாய் நினைப்பாளென்றும், நீர் வருகிறபரியந்தம் இங்கேயே யிருக்கிறேனென்றும் சொல்லி, ஓர் பாழ்வீட்டில் பதுங்கிக்கொண்டு இருக்கிருன் சிறுகுழந்தையாயிருந்தும் இவ்வளவு தருமகுணமிருக்கின்றதே. ஓ அம்மணி! நீ என்குறை நீங்க ஓர் வஸ்திரம் தாருமம்மா" என்று கேட்டார். ஜிஜ்ஜாபீபி அப்படியே கொடுக்கிறேன், கபீர் எவ்விடத்திற் பதுங்கிக்கொண்டிருக்கிருன் காட்டவாருமையா? என்று அழைத்தாள். பகிரி வாருமம்மா காட்டுகிறேனென்று அவ்வம்மணியை அழைத்துக்கொண்டு கபீர் தியானஞ்செய்துக்கொண்டிருக்கும் பாழ்வீட்டிற் பிரவேசித்து இதோ பார்த்தீரா? உம்மைப் பார்த்ததே கண்களை மூடிக்கொண்டான். சிறு பையனுயிருந்துங் கெட்ட திருடனுயிருக்கிருன். ஓர்வேளை எந்தப்பக்கமாய் ஓடிப்போனுலும் போய்விடுவான். ஆதலால் நான் அந்தப் பக்கமாய் வருகிறேன். நீர் இந்தப் பக்கத்திலிருந்து நுழைந்துப் பிடித்துக்கொள்ளுமென்று உரைத்துத் தான் அந்தப்பக்கமாய்ப்போய், "ஓ கபீர்! உன் தாயார் வந்துவிட்டாள். சீக்கிரம் இப்பக்கமாய் ஓடிப்போ" என்று உரைத்தார். கபீரானவர் பெருங் கோபங்கொண்டு வரும் தாயாரைக்கண்டு பகிரி நிற்கும் பக்கமாய் ஓடத்தொடங்கினர். உடனே மாயாபகிரி கபீர் தலைமேற்குட்டிக் கையைநீட்டி எட்டி குடிமியைப் பிடித்துக்

கொண்டு, இதோ ஓடுகிறுன் ஓடுகிறுனென்று கூக்குரல் இடத்தொடங்கினுர். கபீர் பூனைக்குத் தோழனுய்ப் பாலுக்குக் காவலானது போலவும், திருடனுக்கிடங்காட்டி விளக்கைப் பிடிப்பதுபோலவும் செய்வது உமக்குத்தகாது. என் தாயார் அருகில் வராமுன்னமே விட்டுவிடுமையா'' என்று வேண்டிக் கொண்டார்.

மாயாபகீரி, "அடாபோடா திருட்டுப்பயலே! உன்னை இந்த மட்டில் விடப்போகிறேனு? என்று உரைத்துச் சீக்கிரம் வாரு மம்மா வாருமம்மா'' என்று கூப்பிட்டார். ஜிஜ்ஜாபீபி வந்து கபீர் கரத்தைப் பிடித்துக்கோண்டு, "அடா துஷ்டா! வஸ்தி ரத்தை ஏன் கொடுத்துவிட்டாய்?'' என்று அடிக்கப்போகையில், மாயாபகீரி இந்தத் திருடனை இக்களாசத்தால் அடியுமம்மா வென்று தன் கரத்தில் இருக்கும் பிரம்பைக்கொடுக்க, ஜிஜ்ஜா பீபி அப்பிரம்பால் இரண்டடி ஆங்காரத்தால் ஓங்கி வாங்கி விட்டாள்.

அப்போது ஈயெறும்பு முதலான சகல ஜீவராசிகளும் அசரமான கல் மரம் முதலானதுகளும் ஏனேனென்று சொல் லும்படியான பூரணநிலையைப்பெற்ற சுகாவதாரனுன கபீரான வர் அடிகளைப் பொறுக்கமாட்டாமல், அரோராம்! அரோராம்! என்று மிகவுந் துடித்தார். இப்படித் துடிக்கும்படியாய் அடித்த இரண்டடிகளும், கபீர்மேற் படாமல் பகீரியாய்வந்த பகவான் மேற்பட்டு மிகவுந்துடி துடித்து அதனுல்தன்மாயத்தைவிடுத்து, அடா அப்பாவெனப் புகன்று, சுயரூபத்துடன் நின்று கபீரை வாரியெடுத்து மார்புடன் அணைத்துக் கண்ணீரைப்பெருக்கி ஜிஜ்ஜாபீபியின் மனதையும் உருக்கினுர். உடனே அவ்வம்மணி, ஆ என்மகனே! அழகான முகனே! உன்னைக்கோபத்தால் அடித்துவிட்டேனே! ஆ கெட்டேனே! என்று அலறிக் கபீரை ஏந்திக்கொண்டு உருகியழும் ஜிஜ்ஜாபீபி மணிமகுட குண்டல வாகுவலய சங்குசக்கர துளபத்தால் மார்பகத்துடன் விளங்கும் ஸ்ரீமந்நாராயணரைக்கண்டு ஆனந்தங்கொண்டு ஒன்றுந்தோன் ருதவளாய்ப் பிர்மைபிடித்தவள்போல் அசைவற்றுத் தன்னை மறந்திருந்தாள்.

கபீரை ஏந்திக்கொண்டு இருக்கும் பகவான் அப்போது யோசிக்கின்ருர். முன்னம் மாபலியைச்சோதிக்கப்போய் அநேக நாள் அவன் வாயலைக்காக்கும் காவற்காரனு யிருந்தபோதும், அத்திரிமகாரிஷியின் களத்திரமான அநுசூயாதேவியைசோதிக்

கப்போய் அவள் கற்பின் மகிமையால் புத்திரனுயிருந்தபோதும், மதுகைடவர்கள் இரணியன் இரணியாக்ஷன் இராவணன் முதலானவர்களோடு யுத்தஞ் செய்தபோதும், பாணமெடுக்காமல் பாரதயுத்தத்தில் சாரத்தியஞ்செய்தபோதும், தர்மர் அஸ்வமேத யாகத்தில் தாமரைத்துவஜன் கக்கத்திலிடுக்கிக்கசக்கும்போதும், தந்தவக்ரன் துரத்தும்போதும், சிசுபாலன் வாணுசுரன் நரகாசுரனுடன் போர்புரியும்போதும், இவ்வளவுசங்கடம் அடைந்ததில்லை. இக்கபீரைச் சோதிக்கப்போய் இரண்டடிபட்டுப் பொறுக்கமாட்டாமல், நமதுமாயத்தை விடுக்கும்படியாய் நேரிட்டது ஆச்சரியம். அம்மம்மா! சலந்தரன் உருக்கொண்டுபோய் பிருந்தையின் அழகைக்கண்டு மோகமாகி மாயாரூபம் நீங்கி சுயரூபத்துடன் நின்றதைப்போலல்லவோ நேரிட்டது. ஆஹா! நமது வல்லமையான மாயத்தை நீக்கின அடிகளைத் தாங்கக் கபீராற் கூடுமோ? என்று அன்பின் மேலீட்டால் "அடா என் கண்மணியே! சிகாமணியே! உன் தாயார் அடித்த அடிகளாற் பொறுக்கமாட்டாமல் பதைத்தாயோ? ஸ்ரீராம நாமத்தைத் துதித்தாயோ? என்னை அழைத்தாயோ? அடிகளுக்குத் தப்பிப் பிழைத்தாயோ?" என்கிற பற்பல வார்த்தைகளாடி உருகினர்.

அப்போது ஜிஜ்ஞாஸீபி பகவான் திருவடிகளிற் பணிந்து, நயனங்களையணிந்து, "ஓ என்னுண்டவனே! உம்மைக்காணும் பொருட்டு அநேகர் ஊண் உறக்கமின்றி தபஞ்செய்கிருர்களே? அவர்களுக்கு ஏன் உம்முடைய அரிதான தரிசனந் தரவில்லை? ஓ அரிபரந்தாமனே! சகஸ்த்ரநாமனே! அநேகர் உன் திருநாமத்தை மறக்காமல் சந்ததஞ் சிந்தனஞ்செய்து அன்புடன் வந்தனஞ்செய்து, இகபோகங்களை வெறுத்து இழிவான எண்ணங்களைமறுத்துப் பசிதாகங்களுக்குப் பொறுத்து குடிலக்குணங்களையறுத்து உம்மைக்காணத் தேடித்தேடி பல சங்கீர்த்தனங்களைப் பாடிப்பாடி ஆயாசம் மேலீட்டால் அயர்ந்திருக்கிருர்களே? அவர்களுக்கு ஏன்உம்முடையதரிசனந்தரவில்லை? ஆதெய்வமே! உம்முடைய லீலாவிநோதங்களைப் புகலும் பரம பக்தர்களைத் தேடிப்பிடித்து அவர்களுக்குற்ற குறைகளை முடித்துச் சதாகாலமுஞ் சேவைசெய்துக்கொண்டும், உம்முடைய திருவிளையாடல்களை அன்பாய் கேட்டுக்கொண்டும் அநேகர் இருக்கிருர்களே? அவர்களுக்கு ஏன் உம்முடைய தரிசனந் தரவில்லை? ஓ புருஷோத்தமா! புண்டரீகாக்ஷா! இல்லறத்திலிருந்து உம்முடையதரிசனம்பெறல் அரிதென்று அதிதிகளால் யாதொரு பற்றுமின்றி

முற்றுந் துறந்தோராகி உன்னும பஜனானந்தத்தால் உடலம் பூரித்து மயிர்க்குச்செறிந்து ஆனந்தநிர்த்தனஞ் செய்துக் கொண்டிருக்கிறார்களே? அவர்களுக்கு ஏன் உம்முடைய தரிசனந்தாவில்லை? ஓ மகானுபாவா! தேவாதிதேவா! நாட்டிலிருந்தால் நாட்டத்துக்குக் குறைவென்று காட்டையடைந்து இந்திரியங்களை யடக்கிக் காலைமடக்கி மேன்மூலத்தில் முடுக்கி அதோமுகமாகாமல் ஒடுக்கிக் கோடிசூரியப் பிரகாசத்தைக்கண்டு நாதானந்தங்கொண்டு அமிர்தபானத்தையுண்டு அரிதான சேவைதாவா? விண்டு என்கிற எண்ணங்கொண்டிருக்கும்பேர்களுக்கு ஏன் உம்முடைய தரிசனந் தாவில்லை? ஓ பகவானே! மகவானே! தேகேந்திரியாதிகளை நியதிசெய்து மனக்கோட்டத்தைக் கொய்து சாக்ஷி ஸ்வரூபமாகி பரமாத்மாவில் ஐக்கியப்பட்ட பிர்மக்ஞானிகள் உம்முடைய காக்ஷிக்காக மாக்ஷிமையான நிஷ்டை சாதித்துக்கொண்டிருக்கிறார்களே. அவர்களுக்கு ஏன் உம்முடைய தரிசனந் தரவேயில்லை. ஓ மகானுபாவனே! தேவாதிதேவனே! நீர்தானே ரக்ஷிக்குங் கர்த்தர்? நீர்தானே வேதமுடிவிலிருக்குஞ் சித்தர்? நீர்தானே ஸ்ரீமந்நாராயணர்? நீர்தானே பிர்ம்பாராயணர்? மணிகர்ணிகையில் வீழ்ந்த குண்டலம் உம்முடையதுதானே? மக்காவிலிருப்பது உம்முடைய பாதந்தானே? மாபலிசிரத்தில் பதித்தபாதம் இதுதானே? இவ்வுலகை அளந்தபாதம் இதுதானே? ஓ தீனபந்துவே! உம்மைத் தரிசிக்கும்படியான பாக்கியமேதோ? நான்செய்த சிலாக்கியமேதோ? ஓ பராத்பரா! பரமேஷ்வரா! ஜெகதீஸ்வரா! கருணாசாகரா! மனோகரா! சங்குசக்ரா! தாமோதரா! பீதாம்பரதரா! துளசீதரா! வேங்கடேஷ்வரா! கமலநேத்ரா! சத்குணபாத்ரா! தேவர்கள்கோத்ரா! திவ்வியமானசாத்ரா! ராவணசம்ஹாரா! தசரதகுமாரா! நவநீதசோரா! அகண்டகெம்பீரா! வீராதிவீரா! நிராங்காரா! சொல்வதற்கரியதீரா! சுபமங்களாகாரா! மூலபலத்தை வென்றசூரா! அறிவதற்கரிய அபாரா!" என்று பலபல விதங்களாய்த் தோத்திரஞ்செய்து ஏத்தினர்.

அப்போது பகவான் ஜிஜ்ஜாபீபியைக் கருணையுடன் நோக்கி, "ஓ பாக்கியவதி! இப்போது உனக்குப் பயந்தோடி எனக்கு அடிகள் வாங்கிக்கொடுத்த புண்ணியபுருஷனை யார் என்று நினைத்தாய்? எனக்கு அருமையான பக்தனும் ஜீவன் முக்தனும் எனது திருக்கண்ணின் உண்மணியாடு பாவை போன்றவனும் எனது ஆவிக்கு அருந்துணைவனும் என்னை

மறக்காதவனும் என்றும் இறக்காதவனும் எனக்குள் ஐக்கியமாயிருப்பவனும் என்னை விழுங்கினவனுயு மிருக்கும் பிர்மரிஷியென்று நினைப்பாயாக. இதற்குக்காக்ஷியான சாக்ஷிவேண்டியிருப்பதால், நீ கோபத்தால் ஓங்கி வாங்கின இரண்டடிகளும் உன் மைந்தன் முதுகிற்பட்டதா பார்?" என்று திருவாய்மலர்ந்தருளினர். ஜிஜ்ஞாபீபி கபீர் முதுகைப்பார்த்து அதில் இல்லையென்று உரைக்கப் பகவான் என்முதுகிற் பார் என்று காட்டக் கடவுள் புரத்தில் இரண்டு அடிகளும்பட்டு பழுத்த தழும்புகளாய் எழும்பியிருக்கக்கண்டு முகத்தின்மேல் அறைந்துக்கொண்டு மிகவும் பதறிக்கதறித் தேகமெல்லாம் பதறி வாயுலர்ந்து பெருமூச்செறிந்து மூர்ச்சையாய் விழுந்து வாய்விட்டழுது பலதரந் தொழுது, ஐயோ! வந்துதே பழுது என்று பிரலாபித்துத் தெய்வமே! வீராதி வீரனுகிய இரணியாக்ஷனும், சூராதி சூரனுன இராவணனும், இந்திரனைச்செயித்த இந்திரசித்தன் முதலானவர்களும், பிரயோகித்த பாணங்களும், சூலங்களும், பிண்டி பாலங்களும், தண்டாயுதங்களும், படாதமேனியில் இக்கொடியபாவி அடித்த இரண்டடிகளும்பட்டதா. என்குலத்தைச் சுட்டதோ. ஓ வைகுந்தநாதா! லீலாவினேதா! உம்மையும் அடியாள் அடிக்கப்போமா. அடித்து இனி உயிருடன் இருக்கலாமா என்று தன் மத்தகத்தைப் பூமியிற் பலதரம் மோதிக்கொண்டு சாவுக்கிணையான மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டாள்.

கேட்டீர்களோ சித்தர்களே! இப்படி மூர்ச்சையாய் வீழ்ந்த ஜிஜ்ஞாபீபியை பக்தவச்சலனுகிய பகவான் தனது திவ்விய அஸ்தங்களாற்றடவி ஆதரணைசெய்து கருணைமழை பெய்து மூர்ச்சையைத் தெளிவித்து, "ஓ புனிதவதியே! மாசிலா மதியே! வீணுய் ஏன் உன்பிராணனை விடத் துணிந்தாய்? நீ நல்ல உத்தமியென்றல்லவோ என் பக்தனை மிகவும் பரிசுத்தனை உன்பால் ஒப்பித்தேன். உனக்குப் பாலும் உண்டாக்குவித்தேன். முதுகைக்காட்டி நானே கபீர் என்று மெய்ப்பித்தேன். உன் கணவனையும் உய்வித்தேன். ஆதலால் இன்றுடன் இந்தத் தூயனை எனக்குகந்த நேயனை நானுகப் பாவித்து அன்பாகச் சேவித்துப் பாதுகாப்பீரானுல் என் பதவியைப் பெறுவீர்கள். அகண்டானந்தவாழ்வையுறுவீர்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினர். பின்பு கபீரை நோக்கி, "ஓ அபீர்வாசனை வீசுங் கபீர்தாஸனே! உன்னுடைய ஸ்திரமான தியானத்தைக்கலக்கி ஓடிப்போகாமல் மடக்கி அடிகள் வாங்கிக்கொடுத்ததற்காக என்மேற் கோபஞ் செய்யாதே;

வாயில்வந்தபடி வையாதே; சகாதேவனைப்போற் கட்டாதே; அரவானைப்போலே தட்டாதே; பிருகுரிஷியைப்போற் சாபங் கொடுக்காதே; தந்தவக்ரனைப்போல் முடுக்காதே; தாமரைத்துவ ஜனைப்போல் அடக்காதே; தசமுகனைப்போல்மடக்காதே'' என்று பற்பல விதங்களாய் வேண்டிக்கொண்டார். அப்போது கபீர் பகவானது பாசாங்கு வார்த்தைகளைக்கேட்டு உள்ளமுருகி அன்பு பெருகிக் கரங்களைச்சேர்த்து சந்தேகங்களைப் பேர்த்துப் பாதத்தில்வீழ்ந்து பலதரந் தாழ்ந்து, "ஓ சுவாமி! என் தாயார் அடித்த அடிகள் என்மேற்படாமல் தாங்கிக்கொண்டாலும், தாய் கை நோகாதோ? நீர் நினைத்தால் களாசம் வெந்து நீருகாதோ? ஏழைக்காக ஏழைப் பகீரியாய்ப் புறப்பட்டீரோ? நான் பொறுக்க மாட்டேனென்று அடிகளும் பட்டீரோ? உமது மாயையும் விட்டீரோ? உமது அஸ்தங்களால் என்னையுந் தொட்டீரோ? ஓ என்னுண்டவனே! நீர் பகீரியாய் வந்தீரென்று அறியாமற்போனேனே? தர்க்கித்து அபசாரனுனேனே? வாயில் வந்தபடி வைதேனே? அடிகளும் படும்படி செய்தேனே? பிகாரியென்று அறைந்தேனே? கோபங் கொதித்திறைந்தேனே? ஓ கர்த்தனே! பரிசுத்தனே! நான் இயற்றிய குற்றங்களை நற்றவமாகக்கொண்டு காத்தாள்வாயா! அன்பர்கள் சகாயா! பிர்மக்ஞானிகள் நேயா! கபடநாடகனுகிய மாயா! நானுவித உபாயா! வெண்ணெயுண்ட வாயா! சகலருந் தொழுந்தூயா! கோபாலரைக்காத்த ஆயா! நிருபமாகிய ஆகாயா! நீலமேகச்சாயா! கௌசலையீன்ற சேயா! பச்சைவர்ணமுள்ள காயா! அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகா! ஓ பரந்தாயகா! ஓ விஷ்ணு! ஓ பகவான்! நீர் எளியேனை வஸ்திரங் கேட்கக்கூடுமா? என்று அனந்தம் விதங்களாகத் துதித்து ஆனந்தமேலீட்டால் குதித்து நின்று தயவு முற்றிலும் இப்படியே இருக்கும்படி வரந்தாருமையா; சங்குசக்ரக் கையா'' என்று வணங்கினர்.

அப்போது பகவான் "ஓ என் அப்பனே! நீ நினைக்காவிட்டாலும் உன் நிழல்போல உன்னைப் பிரியாமலிருக்கும் என்னைப் பிர்மானந்த மேலீட்டால் நீ மறக்காமலிருக்க வேண்டுமையா'' என்று அறைந்தார். கபீர் நிர்க்குணமே முக்கியமென்று திருவாய்மலர்ந்தருளிய பகவானை வணங்கி இணங்கி, "ஓ சுவாமி! ஸ்வப்னத்திலும் உன்னை மறப்பேனு? மறந்து இவ்வாக்கையோடிருப்பேனு? உம்முடைய திருநாமத்தைத் துறப்பேனு? துறந்து இனிமேலும் பிறப்பேனு? ஓ என் ஆண்டவனே! உம்முடைய

தியானம் மேன்மையானதோ? பிர்மக்ஞானம் மேன்மை யானதோ? உண்மையை உரைத்து என்னை ஆட்கொள்ளும் சுவாமி'' என்று சிரசாஷ்டாங்கமாய் வந்தனஞ் செய்தார். பகவான், "ஓ கபீர்! இதைக்குறித்து யான் ஒன்றுஞ் சொல்லமாட்டேன். ஏனெனில் சகலருக்கும் பொதுவான வேதாகம புராணங்களில் பக்தி வைராக்கிய ஞானமென்னும் மூன்றையும், அவரவர்கள் பக்குவத்துக்கு ஏற்றபடி யுரைக்கின்றது; அன்றித் தேகமே தானென்றிருப்பவன் கர்மக்கிரியைகள் செய்யவேண்டும்.

ஜீவனே தானென்றிருப்பவன் பக்திமார்க்கமான தவத்தைக் கைக்கொள்ளவேண்டும். ஆத்மாவே தானென்றிருப்பவன் பரமாத்மாவில் ஐக்கியப்பட்டுத் தேகஸ்மரணைவிட்டு மௌனசமாதியையடைந்து நான் நீயென்னும் துவிதபாவனையைக் கடந்து, துரியதிருஷ்டியை மேவியிருக்கவேண்டும். உன்மனி அவஸ்தையடைந்த பிரமக்ஞானிகள் மேன்மையான பிர்மக்ஞானத்தினுலும் நிர்க்குணத் தியானத்தினுலும் நிரூபமாயிருக்கும் பரப்பிர்மமாகிய என்னைப் பூசித்து, ஐந்தாம் பதவியாகிய கைவல்யத்தையே ஆசித்து, ஜீவன்முத்தர்களாயிருந்து இறுதியில் விதேக கைவல்யத்தை அடைவார்கள். மற்றவர் தர்மபக்தியினுல் சகுணமாகிய என்னைச் சந்தோஷித்துப் பரமபதமடைவார்கள். சிலருக்கு ஞானமே சுலபமாயிருக்கும். சிலருக்குப் பக்தியே சுலபமாயிருக்கும். ஆனுல், பிர்மக்ஞானம் அனந்த ஜென்மங்களில் என்னைப் பூசித்தவர்களுக்கே கிடைக்கும். ஆனந்த மாத்திரமா யிருக்கும் மௌன நிஷ்டையில் இருப்பது எளிதல்ல. திரிவுலகத்தாரில் ஒரு ஞானியென்று சாஸ்திரங்களில் முறையிடுகின்றது. கர்மபக்தி ஞானமென்னு மூன்றும் பிஞ்சு காய் கனியைப்போன்றதேயாம். மூன்னஞ் சத்கருமங்களால் என்னைச் சந்தோஷப்படுத்திப் பக்தியினுல் என் அருட்பிரசாதம்பெற்று அவ்வருள்விலாசத்தால் அதிசூட்சுமமாயிருக்கும் என்னை, அந்தரங்கத்தில் க்ஞானசட்சுவால் அறிந்து சகல சந்தேகங்களையுங் களைந்து நிர்க்குணத் தியானபரனுகிய ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்து சத்யக்ஞானுனந்தமாய்த் தழைத்துத் தன்னை மறந்து திக்குதிசாதிகள் இழந்து ஆரூடக்ஞானியாக வேண்டும். அப்படிக்கின்றி வாசாக்ஞானத்தால் அகம் பிர்மம் என்கிற பாவத்தையடைந்து, தேகாதிகளில் வாஞ்சை வைத்து கர்மபக்தியுமில்லாமல் மேன்மையான பிர்மானந்த லாபமுமில்லாமல் பிரஷ்டர்களாய் அனந்த ஜன்மங்களெடுத்து உழலும்

அஞ்ஞானிகளுக்கு என் அருட்பிரசாதம் பிர்மகற்பங்களிலும் கிடைக்க மாட்டாது. அன்றி முன்சொன்ன மூன்றுக்குஞ் ஜீவகாருண்ய விரதமே துணையா யிருக்கவேண்டும்.

அஹிம்ஸாபரமே தர்மமென்று சுருதியிலும் உரைக்கின்றது. தன் உயிரைப்போல மன்னுயிரைப் பார்க்கும் தவமே மேலான லாபத்தைக் கொடுக்கும் நிக்ஷேபமா யிருக்கின்றது. சமபாவமுள்ளவனே எல்லாரிலும் அதிசீக்கிரமாய் என்னை அந்தர் முகத்தில் நிர்க்குணமாகவும், பகிர்முகத்தில் சகுணமாகவும் தரிசிப்பான். ஊனக்கண்களுக்கு ரூபமாகவும், ஞானக்கண்களுக்கு அரூபமாகவுந் தோன்றப்பட்டு அகண்டானந்தத்தைத் தருபவன் நானேயாம். ஞானக்கண் துலங்காத அஞ்ஞானிகளானுலும், அன்புடன் என்னைத் தியானிப்பார்களாகில் உடனே பிரசன்னமாகி அகண்ட சாம்பிராச்சியத்தைக் கொடுப்பேன். என்னை நம்பினவர்கள்பால் வெளிவளியைப் பார்க்கிலும் சமீபமாய் இருப்பேன். பக்திமார்க்கத்தில் இருப்பவர்களைக் குழந்தைகளைக் காப்பாற்றுந் தாயைப்போலப் பாதுகாப்பேன். வைராக்கியமான யோகமார்க்கத்தில் இருப்பவர்களைப் பலவிதங்களாய்ச் சோதித்துச் சிநேகபாவமாய்ப் பார்ப்பேன். ஞானமார்க்கத்தில் இருப்பவர்களை எனக்குச் சமானமானவர்களைப்போலப் பாவிப்பேன். பக்திமார்க்கத்தில் இருப்பவர் குழந்தைகளாகும். வைராக்கிய முதலான அடயோகங்களில் இருப்பவர்கள் எவ்வனபுருஷர்களாகும். க்ஞானமார்க்கத்தில் இருப்பவர்கள் விருத்தாப்பியர்களாகும். குழந்தைகளுக்கும் விருத்தர்களுக்கும் நானென்பது குறைந்து இருப்பதுபோலப் பக்தர்களுக்கும் க்ஞானிகளுக்கும் அகம்பாவம் குறைந்து இருக்கும். வைராக்கியத்துடன் அடயோகங்களைச் சாதிப்பவர்களுக்கு நானென்பது மிகுதியாய் இருக்கும். அதினுலே அவர்கள் என்னுல் மிகவுஞ் சோதிக்கப்படுவார்கள். பக்தர்கள் என்னையே நம்பி எல்லாவற்றிற்கும் பகவானே துணையென்று அகம்பாவமடையாமல் சந்ததம் என் பாராயணத்தால் நாட்களைக் கழிப்பார்கள். க்ஞானிகள் பிராப்தாதீனமான இத்தனுவுக்குச் சுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் சந்தோஷமும் வாட்டமும் அடையாமல் எல்லாம் உள்ளபடி முடியுமென்று மௌனநாட்டத்தை யடைந்து யாதொன்றிற்கும் அகம்பாவங்கொள்ளாமல் நிராங்கார வஸ்துவில் லயப்பட்டு இருப்பார்கள். பக்தர்களுக்கு முக்கியமானது

அன்பேயாம். சித்தர்களுக்கு முக்கியமானது வைராக்கியமே யாம். முத்தர்களுக்கு முக்கியமானது மௌனமேயாம். அன்பில்லாத பக்தியும் வைராக்கியமில்லாத யோகமும், சாந்தமில்லாத க்ஞானமும் நிஷ்பலமென்று சொல்லப்படும். எல்லா தர்மங்களையும் நாசஞ்செய்வது நானெனு மகங்காரமும் எனதென்னு மமகாரமும் ஜீவஹிம்சையேயாம். சுபத்தை விருத்திக்கச் செய்தது நிராங்காரமும் அமோகமும் அஹிம்ஸையேயாம். ஆதலால் கர்மபக்தி ஞானமென்னும் மூன்றில் எதன்மேல் இச்சையோ அதையே உறுதியாய் நம்பவேண்டும். ஆனாலும் குழந்தைப்பருவமுள்ள உனக்குத் தாசத்வமான பக்திமார்க்கம் லபிக்குமானால் சீக்கிரத்தில் சகல லாபங்களையும் அடைவாய். ஆதலால் சாஸ்திரார்த்தங்களையும் அறிந்த ஓர் ஆசானைத் தேடிக்கண்டு உண்மையைத் தெரிந்துகொள்ளப்பா" என்று கபீருக்குச் சொல்லிப் பகவானானவர் மாயமாய் மறைந்துபோனார்.

பின்பு கபீர் கன்றைப்பிரிந்த காராம்பசுவைப்போலவும், கலையைப்பிரிந்த மானைப்போலவும், பதியையிழந்த பதிவிரதையைப்போலவும், படியையிழந்த பார்த்திபனைப்போலவும், பணத்தைப் பறிகொடுத்த பார்ப்பானைப்போலவும், தனயனை யிழந்த தாயைப்போலவும், கண்ணிழந்தவனைப்போலவும், கற்பழிந்தவளைப்போலவும் பரதவித்து, "ஓ பகவானே! எனக்கு ஓர் உறுதி கூறாமல் மறைந்துபோகலாமா? நான் சந்தேகத்தோடு இருக்கலாமா? ஓர் ஆசானையும் தேடலாமா? உமது இடமன்றி மற்றொருவர்பால் நான் உபதேசம் பெற்றுக்கொள்ளப்போமா? இப்படியும் நீர் விள்ளப்போமா? பகையாளியைப்போற் றள்ளப்போமா? மானிடரும் என்னை ஆட்கொள்ளப்போமா? ஓ பரந்தாமா! துளபத்தாமா! பரசுராமா! ஸ்ரீராமா! சகஸ்த்ரநாமா! சுதாமா! மேகஷ்யாமா! திரிவிக்கிரமா! புஜபலபராக்கிரமா! தேசிகோத்தமா! பரபுருஷோத்தமா! புண்ணியபுருஷா! புண்டரீகநயனா! சேஷசயனா! என்று ஸ்தோத்திரஞ் செய்துக்கொண்டே தாரைதாரையாய்க் கண்ணீர் ஒழுக அழுது புலம்பினார். அப்பொழுது ஜிஜ்ஜாபீபி பகவானைத் துதித்துக் கபீரை மார்புடன் அணைத்து, "அடா என்மகனே! அழகான முகனே! உன்மகிமையை அறியாமல் அடித்துவிட்டேனே! உன்பதியைக்கலைத்துவிட்டேனே! கோபத்துக்குட்பட்டேனே! ஆ கெட்டேனே! அடா என்புதல்வா! பக்தியில் முதல்வா! உன்னாலல்லவோ பகவானைத் தரிசித்தேன்; பாதங்களைப் பரிசித்தேன்; மோக்ஷமார்க்கத்தை யனுசரித்

தேன்; பின்பு உன்னை உபசரித்தேன்; சகல பாக்கியமும் பெற்றேன்; பிரமக்ஞானமும் கற்றேன்'' என்கிற பற்பல வார்த்தைகளை விண்டு, கபீரை ஏந்திக்கொண்டு துரிதமாய் நடந்து வீட்டையடைந்து கணவனைச் சூழ்ந்து பலதரம் தாழ்ந்து கபீருடைய பெருமையையும் கடவுள் காக்ஷியின் அருமையையும் உரைத்துக் கணவன் மனதைக் கரைத்து அனலிலிட்ட மெழுகு போல் கரைந்து அழத் தொடங்கினாள்.

அப்போது தமால், "ஆ பெண்ணே! என் இருகண்ணே! ஆண்டவனைக் கண்டாயா? ஆனந்தங்கொண்டாயா? நீ செய்த பாக்கியமேதோ? நான்செய்த அபாக்கியமேதோ? நீ யிழைத்த தவமேதோ? நானிழைத்த அவமேதோ? நீயிருந்த ஆசாரமேதோ? நானிருந்த அனுசாரமேதோ?'' என்கிற பற்பல வார்த்தைகளைப் புகன்று, கபீரை நோக்கி, "அடா என்கண்மணியே! சிகாமணியே! உன்தாய்க்குத் தரிசனந்தந்த கடவுள் எனக்குத் தரிசனந்தரமாட்டாரா? நீ வேண்டியழைத்தால் வரமாட்டாரா? பகவானை அழைப்பிக்க உன்னலாகாதா? அழைப்பித்தால் என் குறைகளெல்லாம் போகாதா? அஞ்ஞானம் நீங்காதா? மெய்ஞ்ஞானம் ஓங்காதா? நான் மாத்திரம் கொடிய பாவியானேனே? நரகத்துக்குள்ளாகும் ஆவியானேனே? ஓ பகவானே! நான் என்ன குறை செய்தேன்? ஓ வாசுதேவா! தேவாதிதேவா! ஆதிதேவா! மகானுபாவா! மாதவா! யாதவா! ராகவா! கேசவா! வசுதேவபுதல்வா! யாவர்க்கு முதல்வா!" என்று அனந்தம் விதங்களாய்த் துதித்துக் கபீரைப் பகவானென்றே மதித்து ஸ்திரமாய் மனதில் பதித்து, மகனென்னும் எண்ணத்தைச் சிதைந்து, மிகவும் வாஞ்சையாய்ப் பாதுகாத்துவந்தார். ஜிஜ்ஜா பீபியோ இந்தக் கபீரே ஸ்ரீமந்நாராயணரென்று உறுதியாய் நம்பி நாடோறும் பூசித்துக்கொண்டே வந்தாள். கேட்டீர்களோ சித்தர்களே என்று விரிஞ்சாவதாரரான நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

கபீருக்குப் பகவான் பகீரிரூபமாய் வந்து நிஜதரிசனங் கொடுத்த அத்தியாயம் முற்றிற்று.

---

## ஐந்தாவது

## கபீர்தாஸ் ராமானந்த சுவாமிகளின்

### பணிவிடைக்காரர்களால் அடிப்பட்ட அத்தியாயம்



ஓ சித்தர்களே! ஜீவன் முக்தர்களே! இவ்விதமாகத் தமாலும் ஜிஜ்ஜாபீபியும் கபீரைத் தங்கள் உயிரைப்போலவே பாதுகாத்து வருகிற நாளில், ஒருநாள் கபீர்தாஸ் பகவான் குருமுகத்தால் உண்மையை யறிந்துக்கொள்ளென்று திருவாய் மலர்ந்தருளியதை நினைத்துக்கொண்டு சிந்திக்கத்தொடங்கினர். அதாவது, இத்தாத்திரியில் கணவனில்லாக் கன்னியும், கர்த்தனைப் பணியாச்சென்னியும், திலகமணியா நெற்றியும், தெளிவில்லாத புத்தியும் அன்பில்லாத பத்தியும், அகத்திலில்லாச் சுத்தியும், ஜீவகாருண்ணியமில்லாத தவமும், சிந்தையிலூன்ருத ஜபமும், ஆறில்லாதவூரும், அரசனில்லாப்பாரும், ஞானமில்லாக் கல்வியும், மானமில்லாச் செல்வமும், பக்தியில்லாப் பூசையும், பணத்தின்மேல் மிகவாசையும், போர்செய்யும் வீடும், புனிதரில்லா நாடும், நீதியில்லா அரசும், நிழலேத்தரா அரசும், பிரியமில்லா மோகமும், பிணிபாற்சூழ்ந்த தேகமும், தர்மம்செய்யாக் கையும், சாந்தரைப் பணியா மெய்யும், ஜலமில்லா ஏரியும், சர்ச்சனரைச் சேர்க்கா ஓரியும், மலேபோற்பொழியும் மாரியும், மணுளனை வையும் நாரியும், விபசாரஞ்செய்யும் மங்கையும், வீட்டிற்றங்கா நங்கையும், என்றுந்தீராச் சங்கையும், எளியோரைமோதும் அங்கையும், சங்கம் நீங்காத்துறவும், சந்துருஷ்டியில்லா அறமும், குண்டுணிவேலேயால் ஜீவிப்பதும், குருவை மனிதனைகப் பாவிப்பதும், கொடியோர்செய்த சத்கன்மமும், குருவுபதேசமில்லா ஜென்மமும் தாழ்வடைவதுபோலக் குருவுபதேசமில்லா நாமும் தாழ்வடைவோமல்லவா. ஓ தெய்வமே! எனக்குற்ற சங்கைகள் எப்போது நீங்கும்? பிர்மானந்தம் எக்காலத்தில் ஓங்கும்? என்று தனக்கு இருக்கும் சங்கையை நிவர்த்திசெய்துக்கொள்ளும்பொருட்டு ஆசானைத் தேடப் புறப்பட்டுக் காசிதேசமெல்லாந் திரிந்து அகப்படாமையால் முகங்கரிந்து ராமானந்த ஸ்வாமிகளின் மேன்மையைக் கேள்விப்பட்டு, இனி கிருதார்த்தனுனேனெனச் சந்தோஷப்பட்டு ராமானந்த சுவாமிகளே நமக்கு ஆசானெனத் தீர்மானித்தார்.

பின்பு இவரே நாம் வணங்கத்தகுந்தவரெனத் தியானித்து அநேக மாணுக்கர்கள் பணிபவராயும், அருந்துளபத்தாரணி பவராயும், அடியார்களை ஆட்கொள்ளும் ஆண்டவராயும், அயிம்ஸாவிரதம் பூண்டவராயும், உபரதியிடத்தில் மிகுந்தவ ராயும், உபசாரணை செய்யத் தகுந்தவராயும், ஞானக்கொடியை நட்டவராயும், நாரியர்போகத்தை விட்டவராயும், அகங்காரத் தைக் கொன்றவராயும், அபிமானத்தை வென்றவராயும், என தென்னும் ஆசையைக் கிழித்தவராயும், இருளணுகாமல் அழித் தவர்ாயும், பிர்மதேசத்தில்விழித்தவராயும், பேதைமையோரைப் பழித்தவராயும், மகாவாக்கியங்க ளறிந்தவராயும் மர்மங்க ளெல்லாம் தெரிந்தவராயும் விளங்கா நின்ற ராமானந்த சுவாமி களை மனதிற் பூசித்து உபதேசம் பெற்றுக்கொள்ளலாம் என்கிற எண்ணம் மீறி குருஸ்வாமிகளின் தரிசனத்தைக்கோரி அடி யார்கள் நெருக்கத்தால் உள்ளேபோவதற்கு வேசாரி, மாலை மட்டுமிருந்தும் கூடாமல் தடுமாறி சமயம் நேரிடும் நேரிடும் என்றேமாறி சுவாமிகளைக் காணுமற்போனேமேயென நொந்து நாளைக்கு அதிகாலையில் வந்து காணலாமேன வீட்டையடை ந்து, மறுநாள் அதிகாலையில் எழுந்து அடியார் வருவதற்கு முன்பே காணலாமென்று சற்று இருட்டாயிருக்கும்போதே மடத்துள் பிரவேசித்தார்.

அப்போது ராமானந்த ஸ்வாமிகளின் பணிவிடைக்காரர்க ளாகிய அந்தணர்கள் கபீரைப்பார்த்து, "அடா துலுக்கப் பயலே! இராத்திரியில் இங்கு திருடவாவந்தாய்? நாங்கள் விழித் திருக்கிறோமென்று நொந்தாய்? இங்கே மூடரன்றி குருடரில் லையே? நீ நினைத்து வந்தது தொல்லையே; இனி உள்ளே வர வேண்டாம் சீக்கிரம் வெளியே போ" என்று பதட்டத்துடன் அதட்டினார்கள். கபீர், "ஐயா பிராமணோத்தமர்களே! உள்ளே வருவதற்கு முன்பே சள்ளென்று ஏன் விழுகிறீர்கள்? சாந்த குணமுள்ள வேதாந்திகளாகிய உங்களுக்கு இவ்வளவு கோப மிருக்கலாமா? தாபமிருக்கலாமா? சங்கதி தெரிந்துக்கொள்ளா மல் வெறுக்கலாமா? அன்புடன் வந்தவர்களை மறுக்கலாமா? வீணாய்க் கோபத்தைப் பெருக்கலாமா? கடினவாளால் நருக்க லாமா?" என்று பரிவுடன் பலதரம் வந்தனம் செய்தார்.

அதற்கு அந்த மறையோர் கபீரைநோக்கி, "அடாபோடா முழுமூடா! உன் விண்ணான வார்த்தைகள் இங்கு நடக்காது. உள்ளே விடுவோமா? வாயை அடக்கு என்று மிகவுங்கோபித்

துப் போவென்கிற வாக்கியத்தையே ஸ்தாபித்து அதிகாலையில் நீச்சனுகிய உன் முகத்தைக் காட்டாதே; போகாமல் எங்களை வாட்டாதே; சஷ்டகல்வி செல்லமாட்டாதே; கொல்லுங் கைகளை நீட்டாதே; கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமும், ஔவையாருக்கு அரசாங்கவிசாரணையும், கோசாயிக்குக் கூத்தாடும் வித்தையும், சாதுக்களுக்குச் சமர்செய்யும் யுத்தியும், விபசாரிக்கு மேன்மையான பக்தியும், கொடியனுக்குக் கூர்மையுள்ள புத்தியும் ஏன்? அதுபோலக் கொலைசெய்யும் குணயீனத் துலுக்க வம்சத்தில் பிறந்த துடுக்கனுன உனக்கு இவ்வளவு மூடுக்கான வார்த்தைகள் ஏன்? அல்லாமல் ஜீவகாருண்ணியமுள்ள பிராமணர்களிடத்தில் உனக்கு என்னகாரியம்? அடியார்கள் வருகிற வேளையுமாச்சுது? நீவந்தும் வெகுநேரமாய்ப் போச்சுது; வீணுய் ஏன் துன்பத்துக்குள்ளாகிருய்'' என்று கோபக்குறி காட்டினுர்கள்.

அதற்குக் கபீர், ''ஓ அந்தணர்களே! உங்களுக்குப் பலதரம் வந்தனம் செய்கிறேன்; உங்கள் கிருபையால் உய்கிறேன்; கோபஞ்செய்யாதீர்கள்; வாயில்வந்தபடி வையாதீர்கள்; அடியேனுகிய கொடியேன் பரமானந்த ஸ்வரூபிகளாகிய ராமானந்த ஸ்வாமிகளின் சொத்தைத் திருட வந்தேனென்று புண்ணிய புருடர்களாகிய நீங்கள் அறைந்தீர்களே; மிகவும் இறைந்தீர்களே; அடியேன் எங்கேயாவது களவுசெய்ததுண்டா? அப்படி யாராவது சொன்னதுண்டா? நீங்கள் கேள்விப்பட்டதுண்டா? அல்லது வேறு எண்ணங்கொண்டா? விப்பிரர்களாயிருந்தும் தப்புவார்த்தைகள் சொல்லலாமா? என்னைக் | கொல்லாமற் கொல்லலாமா? அவயவப்பழுதும் குலப்பழுதும் பாராமல் குணத்தை நன்ருய் ஓராமல் குணவானென்னும் குற்றமுள்ளவனென்றும் செப்பலாமா? ஒருவர் சொன்னுலும் ஒப்பலாமா? நீங்கள் அறியாதது ஒன்றுண்டோ? அடியேன் சொல்வதிற் பிசகுண்டா? ஆனல் பெரியோர்கள் என்னசொன்னுலும் சிறியோர்கள் பொறுக்கவேண்டியதே. அடியேன் வெகுநாளாய் ஸ்வாமிகளின் திவ்விய திருவுருவைத் தரிசனம்செய்யவேணும் என்கிற எண்ணங்கொண்டு நேற்றுக் காலையிலிருந்து மாலைமட்டுக்குங் காத்திருந்தும், அடியார்கள் நெருக்கத்தால் உள்ளே வருவதற்குக் கூடாமல் நேற்றைப்போலவே யின்றும் வாடாமல் அதிகாலையில் சந்தடியில்லாமல் இருக்குமென்று வந்தேன்; வந்து ஸ்வாமிகளைக் காணுமல் நொந்தேன், ஆதலால் மகானுபாவர்களாகிய

நீங்கள் அனைவோருஞ் சேர்ந்து. மிகவும் கருணைகூர்ந்து கோழையேனாகிய இந்த ஏழையன் ஸ்வாமிகளின் தரிசனஞ் செய்யும்படியாய்ச் செய்தால் உங்களுக்கு வெகு சுகிர்தமுண்டு" என்று பரிதாப முகத்துடன் புகன்று மிகவும் விண்ணப்பஞ் செய்துக்கொண்டார். அதற்கு மறையோர் கற்களைப்போன்ற பற்களைக்காட்டி கெக்கலிகொட்டி நகைத்துப் பதைத்து, "அடா மூடா! வனவேடா! முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டாற் கிட்டுமா? தென்னங்காயை பூமியிலிருந்து எட்டினால் எட்டுமா? சிறிய கன்றுக்குட்டியானது புலியை முட்டுமா? பழிபாவத்துக்கு அஞ்சாமல் சேகரித்த பொருள் ஒருவனுக்கு ஒட்டுமா? அதுபோல உன் வார்த்தைகள் சுவாமிகள்முன் நடக்கவே நடக்காது. சுவாமிகள் தரிசனம் கிடைக்கவே கிடைக்காது. நீயெங்கே? சுவாமிகளெங்கே? மேட்டான மேட்டிகளும் நன்றாய்த் தேறின கோஷ்டிகளும் வெகுநாளாய்க் காத்திருந்தும் வருவார் வருவாரென்று பார்த்திருந்தும், அவர் தரிசனம் அகப்படவில்லை. நீ நினைத்துவந்தது மிகவுந் தொல்லை. நீ என்ன, அவர் தரிசனம் பெறுகிறதென்ன? ஜாணுண்டு பயலாயிருந்தும் சஷ்டகல்விகளெல்லாம் பேசவந்தாய். எங்களைக் காணவே கூசிநொந்தாய். சேசே ஓடிப்போ" என்று அடிக்க வந்தார்கள்.

அதற்குக் கபீர், "ஓ மாதவர்களே! பிரக்யாதியர்களே! உங்கள் கைகளால் அடியேன் அடிபட என்னபாக்கியம் செய்தேன்; ஏது தவம்செய்தேன்; எவ்வளவு யோக்கியனானேன்; எவ்வளவு பாக்கியனானேன்; எவ்வளவு சிலாக்கியனானேன்" என்று வணங்கி இணங்கி, "ஓ சுவாமிகளே! மகாவிஷ்ணுவின் தரிசனத்தைக்காணுந் த்வாரபாலகரைப்போலவும், பரமேஸ்வரருடைய காக்ஷியைப்பார்க்கும் நந்திகேஸ்வரரைப்போலவும், நாடோறும் ஸ்ரீசத்குருஸ்வாமிகளின் தரிசனம்பெற்று மோக்ஷமார்க்கங் கற்று கோபலோப தாபசோப பாபசாப ரகிதர்களாய் பிர்மானந்தத்துக்குச் சகிதர்களாய் விளக்கமுற்றிருக்கும் நல்லவர்களே! தவத்தில் வல்லவர்களே! சுவாமிகளின் சேவையைக் கோரிய ஏழையேனாகிய கோழையேன் எண்ணத்தை முன்னம் முடித்து பின்பு உங்கள் கரங்களால் அடித்துத் துரத்திவிடக் கோருகிறேன்" என்று அவர்கள் தாட்களில் வீழ்ந்து ஆட்கொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதற்கு அந்தக் கொடிய மறைக்கொடியோர் "அடா கபீர்! ஸ்வாமிகளின் சேவையால் உனக்கு என்ன லாபம் வரும்? என்ன சுகந்தரும்? யாதுகார

ணத்தால் சுவாமிகளின் மாக்ஷிமையான காக்ஷியைக்கோரினுய்? வாதுசெய்ய மீறினுய்? உன் கருத்தை வெளிப்படுத்து?" என்று அதட்டிக் கேட்டார்கள். அதற்குக் கபீர், "ஓ புண்ணிய புருஷர் களே! அடியேன் சுவாமிகளிடம் உபதேசம் பெற்றுக்கொள்வ தற்கு ஆசித்திருக்கின்றேன்; ஆதலால் நீங்கள் எல்லோரும் இவ் வெளியேனைக்குறித்து அன்புடன் விரித்து சுவாமிகளுக்கு உரைத்து மெழுகைப்போல இருதயத்தைக் கரைத்து, எனக்கு அநுக்கிரகஞ் செய்யும்படியாய்க் கருணைகூறுங்கள்" என்று சிர சாஷ்டாங்கமாய் வந்தனஞ்செய்தார். அதற்கு ஆதிவருணர் தரித் திரன் இராஜபோஜனத்தையும், கர்மிதேவாமிர்தத்தையும், காமி சன்யாசத்தையும், லோபிசொர்க்கத்தையும், விபசாரிமோக்ஷத்தை யும், அகங்காரி ஞானத்தையும், மிலேச்சன் பிராமணத்துவத்தை யும் கோரினதைப்போல் இருக்கின்றது. நீ பசுவைக்கொல்லும் பாமரனுயிருக்க, உனக்குச் சுவாமிகள் உபதேசம் செய்வாரா? அஞ்ஞானத்தைக்கொய்வாரா? கருணைமழை பெய்வாரா? பிரஷ் டராய் நைவாரா? அடடா! செல்வத்தில் மிக்க புவிராஜர்களும், கல்வியிற் செழித்த கவிராஜர்களும், தவத்திற் சிறந்த புனிதர்க ளும், தர்மத்திற்றழைத்த மனிதர்களும், வல்லமையுள்ள சித்தர் களும், மறுமாசில்லாச் சுத்தர்களும், சுவாமிகளிடம் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று அநேகநாளாய் அலைகிருர் கள்; அவர்களுக்கே அனுக்கிரகஞ்செய்யாத தேசிகர் துடுக்க னுகிய உனக்கு உபதேசஞ் செய்வாரா? ஒருபோதும் செய்யமாட் டார். இதோ அடியார்களும் வந்துவிட்டார்கள். அவர்களை ஓர்வேளை தொடப்போகிருய்; தொட்டுத் துக்கப்படப்போகிருய்; சீக்கிரம் வெளியிற் போபோ" என்று அறைந்து மிகவு மிறைந்து பேசத்தொடங்கினுர்கள்.

அதற்குக் கபீர், "ஓ வேள்வியாளர்களே! அடியார்கள் வந் தாலென்ன? நானொரு பக்கமாய் நின்றிருந்து சுவாமிகளின் திருவுருவத்தைப் பார்த்துப் போய்விடுகின்றேன்" என்று ஒரு பக்கமாய் ஒதுங்கிநின்ருர். அதற்கு வேதியர் முனிவுடன் அடா துஷ்டப்பயலே எட்டப்போடா! பிரதஷ்டப்பயலே என்று உரை த்தால் மட்டிக் குணத்தால் கிட்டவேயிருக்கிருய். ஒருவேளை உன் னைத்தொட்டுக்கொண்டால் பிரஷ்டப்பட்டுப் பின்னும்ஸ்நானஞ் செய்துவரவேண்டும். பிராயச்சித்தம் பெறவேண்டும். நல்லதனத் தால்சொல்லுகிறதைக் கேளும். இல்லாவிட்டாற் கலகம் மூளும் என்று ஒரு கழியினுற் றள்ளத் தொடங்கினுர்கள். அதற்குக்

கபீர் "ஓ இருபிறப்பாளர்களே! மாட்டையோட்டுவதுபோல மனிதனுகிய என்னை ஓட்டவந்தீர்கள்; ஆயாசந்தந்தீர்கள்; அடியார்களைத் தொடாமல் ஒதுங்கியிருக்கின்றேன் ஒருவேளை என்னைத் தொட்டுக்கொண்டாலுங் கெட்டுப்போவதென்ன? நானும் ஸ்நானஞ்செய்து பரிசுத்தமாகவே வந்திருக்கிறேன்; இவ்வளவு அக்கிரமஞ் செய்வது உங்களுக்கு அடாது. அன்றி மடம் எல்லாருக்கும் பொதுவானயிடம்; நீங்களே உரியவர்களென்பது கூடாது. இனி என்னருகில் வராமல் உங்கள்வீட்டிலிருங்கள். நீங்கள்செய்த சகாயம் போதும் போதும்" என்று உரைத்து ஓர் சார்பில் நின்றிருந்தார்.

அப்போது அந்தப் பொருமையுள்ள பூசுரர்கள் மிகவும் வெகுண்டு பெருங்கோபங்கொண்டு தூஷண வார்த்தைகள் விண்டு "அடா மூர்க்கநாயே! ஆசாரமில்லாதபேயே! உனக்கு இவ்வாயேன் 'நல்ல மாட்டுக்கு ஒருசூடு, நற்பெண்டீருக்கு ஒரு வார்த்தை' என்கிற பழமொழி அறியாயோ? எங்கள் வல்லமையைக் குறியாயோ? வாயால் அதட்டியும் போகாதமாட்டை தடியால் அதட்டி ஓட்டவேண்டும்; தட்டியும் போகாத நந்தியை அடித்தே ஓட்டவேண்டும். அதுபோல மாட்டுக்குங் கீழ்மையான எருமை மாட்டுக்கு இணையானவனுதலால் பலதரஞ்சொல்லியுங் கோலாற்றள்ளியும் போகாமலிருக்கின்ருய். திருடனுக்கு மூடனே குருவென்பதுபோலவும், துஷ்டப்பிள்ளைக்கு ஊரார் புத்திசொல்வா ரென்பதுபோலவும், தலையிற்பட்டால் தாழ்வா ரென்பதைப்போலவும், உன்னை இத்தடியால் அடித்தாலொழிய போகமாட்டாய்" என்று ஓங்கி அடிக்க வந்தார்கள்.

அதற்குக் கபீர் ஓங்கின தண்டத்தைப் பறித்துக்கொண்டு, "ஓ ஜீவகாருண்ணியமில்லாத் தீயர்களே! மெய்ஞ்ஞானமில்லாப் பேயர்களே! நாய்போற் குலைக்கும் வாயர்களே! நன்று தீது அறியா அநியாயர்களே! தேளுக்கு அதிகாரங் கொடுத்தால் நாழிக்கு ஒருதரங் கொட்டும் என்னும் பழமொழிப்படி செய்தீர்கள். ஆனுல் துஷ்டர்களை சிக்ஷைசெய்வதே நியாயம் என்கிறபடி இந்தத் தடியாலடித்து உங்கள் உயிரைமுடித்து, அனைவரையுங் கொன்றுவிடுவேன். ஒருகணத்தில் வென்றுவிடுவேன் மித்திரன் வரவைத் தெரிவித்த சுத்தத்தின் அடிகளுக்கு முத்தமிட்ட பரிசுத்தனைப்போல் ஸ்வாமிகளின் பணிவிடைக்காரர்களென்று பணியநேரிட்டது. நீங்கள் செய்யும் அக்கிரமம் மிகவுங் கெட்டது" என்று பல நீதிவாக்கியங்களைப் புகன்று அக்

கழித்தடியைத் தெருவில் எறிந்துவிட்டு ஸ்வாமிகளிருக்குந் திசையைநோக்கித் தெண்டனிட்டு, சத்குருநாதனுடைய வரவுக்கு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அறுதொழிலாளர் கோலைத் தெருவிலெறிந்த கபீர்மேல் விழுந்து துள்ளிக் குதித்து எழுந்து, உதட்டைமடித்து, இரத்தம்புறப்படக் கடித்து, தன்னையறியாமற் றுடித்து, ஈனவார்த்தைகள் படித்து, அடியடியென் றடித்து, முழங்கைகளா லிடித்துத் தங்கள் வைராக்கியங்களை முடித்து, அவயவங்களை நெருங்கப்பிடித்து, கசக்கிக்கசக்கி நசுக்கித் தேகமெல்லாம் இளைக்கவும் நிற்கக்கூடாமல் களைக்கவும் செய்து மடத்துக்குள் தங்காமல் ஓட்டிவிட்டார்கள். தங்களுடைய பராக்கிரமங்களைக் காட்டிவிட்டார்கள்.

பின்பு கபீர் இவர்கள் சிஷ்டர்களென்றும், நமக்கு இஷ்டர்களென்றும், உள்ளேபோய் மானநஷ்டமடைந்தோம்; துஷ்டர்கள் கைகளால் இடிந்தோம்; சிறுவனாகிய நாம் இனி ஸ்வாமிகளைப்பார்ப்பது அரிதே. அரிதே. சந்தனமரத்தருகில் சர்ப்பமும், தாழையின்பால் முட்களும், தர்மர்களிடம் லோபியும், சந்திரனிடங்களங்கமும், புருஷருக்கு அவிவேகமும், ஸ்திரீகளுக்கு விபசாரமும், வாழ்மனைக்கு ஓர் வன்குரங்கும் இருந்து எப்படி நஷ்டத்தைத் தருகின்றதோ அப்படியே சத்குருநாதனிடம் இம் மூர்க்கரிருந்து நஷ்டத்தைக் கொடுத்தார்கள் என்று பற்பல யோசனைகளோடு நின்றிருந்து அநேக அடியார்கள் உள்ளே போகிறதைப் பார்த்து அவர்களுக்குக் கரங்களைச் சேர்த்து, தேகநோயைப் பாராமல், பணிவிடையாளர்களால் நைந்துஞ் சோராமல், தொண்டர்கள் கூட்டத்தில் நுழைந்து உள்ளே வந்துவிட்டோமெனத் தழைந்து, மடத்துட் பிரவேசித்து குரு சங்கீர்த்தனங்களைக் கோஷித்து, சந்தோஷ முகத்துடன் ஸ்வாமிகளின் வரவுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

அதுதெரிந்த துவேஷமுள்ள தொழுகுலத்தோர் அதிக ரோஷத்துடன் கபீருடைய மென்னியைப் பிடித்துத் தள்ளி நகங்களால் பீறிக்கிள்ளி, ஏண்டாகுதிக்கிறாய்? துள்ளி; எங்கட்கு நீயொரு சுள்ளி; நறுக்க நீருள்ள முள்ளி, ஒடிக்கப் பாலுள்ள கள்ளி; எதிர்க்க நீ யாவவாயா தெள்ளி? ஓடிப்போடா தொள்ளி என்று வெளியில் ஓட்டி வேணமட்டும் மாட்டி, பராக்கிரமங்களைக் காட்டி, நாம் சமர்த்தரென்று பாராட்டி, சிறுகுருவியின் மேல் பிர்மாஸ்திரம் போட்டதுபோலவும், அபிமன்னனைச் சூழ்ந்துக்கொண்ட கௌரவரைப்போலவும், அனுமாரைச்

சூழ்ந்துக்கொண்ட அவுணரைப்போலவும், இளையபெருமாளைச் சூழ்ந்துக்கொண்ட நாகபாசத்தைப்போலவும் சூழ்ந்துகொண்டு ஆளுக்கு ஓர் அடி அடித்து ஓட்டிவிட்டார்கள். அப்போது பரிசுத்தரான கபீர், "ஓ சத்குரு நாதனே! மெஞ்ஞான போதனே! உமக்கு அபயம்; உமது தரிசனஞ் செய்யவந்த அடியேனை இந்தத் துஷ்டப் பிராமணர்கள் அடித்து நஷ்டப் படுத்துகிறார்கள். எனக்கு யாருந் திக்கில்லையா" என்று முறையோ முறையென்று ஓலமிட்டு அழத்தொடங்கினர்.

அவ்வோசையைக்கேட்ட ராமானந்தஸ்வாமிகள் உடனே வெளியிலோடிவந்து கபீரைப்பார்த்து நொந்து, ஐயோ! இந்தச் சிறு குழந்தையை உதிரம்வடிய யாரடா அடித்தவர்கள்? யாரடா மடித்தவர்கள்?" எனச் சீற்றத்துடன் கேட்டார். அது விஷயத்தைக் கேட்ட மறையோர், "ஓ ஸ்வாமி! இவன் துலுக்க வம்சத்திற் பிறந்த துடுக்கனான நீச்சன்; முடுக்கான பேச்சன்; பசுவைத் தின்னும் பறையன்; கபடே நிறைந்த கையன்; அரியானைத்தூஷிக்கும் வாயன்; அல்லாவைப் பூஷிப்போர் சேயன் மேல் கிழாக்கும் விகடன்; வீணாய் அமர்செய்யக் கசடன்; கர்வத்தில் மிகுந்த கசடன்; களங்கமுள்ள கபடன்; தங்களிடம் உபதேசம் பெற்றுக்கொள்ள வந்தானாம்; ஆசாரியாரின்றி நொந்தானாம்; நாங்கள் தேவரீருடைய மேன்மைவிரித்துப் பலவிதங்களாய் உரைத்து உனக்கு உபதேசஞ் செய்யமாட்டார். தபவேஷந் தரமாட்டார்; என்பதாய் அறைந்து பலதரமிறைந்து, வெளியில் போகச்சொன்னால் கேட்காமல் ஸ்நானஞ்செய்து பரிசுத்தமாயிருக்கும் எங்கள்மேல் விழுந்து, முட்டிக்கால்மேல் உட்கார்ந்து எழுந்து, அவமரியாதை செய்து, வாயில்வந்தபடி வைது, இந்த மடம் பொதுவானயிடம்; உங்களுக்கு என்ன சொந்தம்? என்று அனந்தம் தொந்தம் செய்தபடியால் வைது தடியால் அடித்து வெளியில் தள்ளிவிட்டோம். ஈன்வார்த்தை கேட்கவும் உட்பட்டோம். தேவரீருக்கு இஷ்டமிருந்தால் இந்தத் துஷ்டனை நீச்சப்பிரஷ்டனை சிஷ்யனுக்கிக்கொண்டு அனுக்கிரகம் புரியுமையா" என்று விண்டு மௌனமாய் நின்றார்கள்.

அவ்வசனங்களைக்கேட்ட ராமானந்தஸ்வாமிகளுக்கு முகங் கருகி, கோபம்பெருகி, கோவைக் கொல்லுங் கொடியனுக்கா நான் உபதேசஞ் செய்யவேண்டும்? சபாஷ்! நல்லவார்த்தையைச் சொன்னீர்கள். பக்குவருக்கன்றி அபக்குவருக்கு உபதேசஞ் செய்யும் ஆசானும், அனுக்கிரகம் பெற்றுக்கொள்ளும்

மாணுக்கனும் இருநாகடைவதற்கு ஓர் இடையூறு உண்டா? சுர பியின் இறைச்சியைப் புசிப்போர் சொர்க்கமடைவது உண்டா? மந்திரம் என்பது கிள்ளுக்கீரையா? உபதேசஞ்செய்தலோரையா அனுக்கிரகம் பெற்றுக்கொள்பவன். இகபரபோக விராகனுய், மோகத்தின் மேலதிராகனுய், வேதமோதிய விவேகனுய், சர்வ சங்கபரித்தியாகனுய், ஆசான்மேன் மிகுமோகனுய், அஷ்ட யிஸ்வரியமுள்ள போகனுய், சாந்தகுணத்திற் சிறந்தவனுய், தாமசாதிகளற்றவனுய் இருக்கவேண்டும். அப்படிக்கில்லா அற்பசாதியில் உற்பவித்த சொற்பகுணமுடைய இந்தத் துச்ச னுக்கா நான் உபதேசிப்பேன்? இவனை நம்முடைய மடத்துக் குள் விட்டவர்களையும், உள்ளே வரப்பார்த்திருந்த துட்டர் கட் டர்களையும் உதைக்கிறேன்; வதைக்கச் சிதைக்கிறேன்" என்று சாந்தத்தை நீக்கினர். பிறகு கபீரை நோக்கி, "அடா துடுக்கா! வெகுமுடுக்காய் என்னிடம் அனுக்கிரகம் பெற்றுக்கொள்ள வும், மோக்ஷமார்க்கம் கற்றுக்கொள்ளவும் வந்தாயா? மடத்துக் குள் நுழைந்தாயா? இதுதான் உனக்குத் தகுதியானதீட்சை; உனக்கு ஈய எனக்குள்ள அபேட்சையென்று ஈனவார்த்தை களைப் புகன்று கற்களை மாறிமாறி வீசி, கக்கியுண்ட நாய் சீசீ யென்று மிகவும் ஏசி, நீ எனகொருதூசி; நீ பெறுவாயா என்னுசி; சமுசாரத்தை ரோசி; வராதவனைச் சேர்ப்பானு உபதேசி; சண்டாளனுக்கு உரைப்பானு சன்யாசி; கோஹத்திகாரனுவானு பரதேசி; ஆனுல் பொறுக்குமா காசி; புண்ணியக்ஷேத்திரமல்லவா வாரணுசி; துடுக்கரிடம்போய் நேசி; காஜிகளிடம்போயாசி; வித்தியாசாலையிற்போய் வாசி; எனக்குகந்த மாணுக்கன் நீயாவாயா யோசி; அவமரியாதைச் செய்ய வந்தாயோ தோஷி; அடா அற்பசந்தோஷி; அந்தணர்க ளோடு எதிர்த்த துவேசி; அறுத்துவிடச் சொல்லட்டுமா நாசி எனப் பற்பல வார்த்தைகள் பேசினர். பின்பு பிராமணர்களை நோக்கி "இக்கணமே இவனை நீக்கிவிடுங்கள்" என்று அறைந்து மிகவு மிறைந்து மடத்துட்போனர்.

அப்போது, கபீர் திடுதிடென்று ஓடி ராமானந்த ஸ்வாமி களை நாடி சேவடிகளில்விழுந்து முத்தமிட்டெழுந்து ஆய்ந் தோர் அடித்த அடிகளைக்காட்டி; "ஓ பரமேட்டி! ஓ கர்த்தனே! பரிசுத்தனே! ஜீவன்முத்தனே! அழியாநித்தனே! அன்பர் தொழுமத்தனே! முடிவான அர்த்தனே! அஞ்ஞான அர்த் தனே! கெடாத புத்தனே! வல்லமையுள்ள சித்தனே! ஞானு

நித்தனே! ஆனந்த சொரூபனே! சுயம்பிரகாச தீபனே! சத் சீடருக்கு உபதேசிக்குங் கியாபனே! மூவுலகேத்தும் பிரதாபனே! ஆனந்தலாபனே! துர்க்குணங்களை யகற்றுந் தூபனே! அழகுள்ளரூபனே! அகண்டமாகிய நிரூபனே!" என்று பற்பல விதங்களாய்த் தோத்திரஞ்செய்து எத்திக் கண்மலர்களைச் சாத்தி, யாருந் துதிக்குங் கீர்த்திவகித்த சத்குருமூர்த்தி, பந்தத்தில் அகப்பட்டுத் தொந்தரவுக்குட்பட்டு சிந்தாக்கினியால் தகிக்கப்பட்டு இந்தவேளையில் விடுபட்டு எந்தையேயென்று உந்தனையடைந்தால் மைந்தனைப் பாதுகாக்காமல் மந்தபுத்தியுடையோனென நிந்தை செய்யலாகுமா? இப்படியும் உம்முடைய மனது நோகுமா? என்று உரைத்தார். அப்போது ராமானந்த ஸ்வாமிகள் என்னடா கத்தரிக்காய்க்குக் கால்கை முளைத்தாப்போல் பிஞ்சிலே பழுத்து ராகத்தையிழுத்து, அத்தனே! யுத்தனே! முத்தனே! சித்தனே! என்று உளறுகிறாய்; வாயில் வந்தபடி குளறுகிறாய். நீயென்ன உன் வயதென்ன? உன் வர்னமென்ன? உன் கண்யமென்ன? மயிருள்ளவள் வாரிமுடிப்பதுபோலவும், வாயுள்ளவன் பாடுவதுபோலவும், சஷ்டகல்வியைக் காட்டவா வந்தாய். துஷ்ட கைகளை நீட்டவா வந்தாய். வெகுநேரமாய்க் கூச்சலில்லாமற் பேசும் நீச்சப்பயலே! இனி அரைக்கணந் தங்காது ஓடிப்போடா மூழுமூடா குடிகேடா வனவேடா நீயா உபதேசம் பெற்றுக்கொள்ளுகிறவன்? குருவேயென்று விள்ளுகிறவன்? "ஓ வேதியர்களே! இந்தத் துலுக்க நாயை, அறிவில்லாத பேயை, துஷ்டகுணமுள்ள சேயை, உதிரம் புசிக்கும் ஈயை அடித்துத் துரத்திவிடுங்கள்" என்று உரைத்து மடத்துட் போய்விட்டார்.

உடனே மேற்குலத்தோன் 'வல்லான் வகுத்ததே வாய்க்காலென்னும்' பழமொழிப்படி கண்களையுருட்டித் திடுக்கிடமிரட்டி புழுதிபடிய புரட்டித் தங்காமல் விரட்டி, "இந்த மடம் பொதுவானயிடம் என்று உரைத்த உன் வாயைப்பிளந்து மணிக்குடலெடுத்து பருந்துகளுக்கு விருந்திடப்போகிறோம்; இனியாவது பேசாமல் ஓடிப்போ" என்று கூசாமல் வைத்துக்கொண்டிருந்தார்கள். அவமானப்பட்டு ஓடும் கபீரோ அவதூதர்கள் எமதூதர்களானாற்போல இந்த முப்புரிநூலோர் தூளியென்றால் நிர்த்தூளியென்பவர்போ லிருக்கிறார்கள்.

அந்தோ! ஸ்வாமிகளைத் தரிசித்தும், பாதங்களைப் பரிசித்தும் அன்பாய்த் தோத்திரஞ் செய்யாமற் போனேனே; வீணாய்

துன்பத்திற்குள்ளானேமே; நாம் செய்த கர்மமென்னமோ; அல்லது நமது பக்தி பின்னமோ; 'கற்பகத்தைச் சார்ந்தோர்க்கும் காஞ்சிரங்கா ஈந்தது' என்னும் பழமொழிப்படி நேரிட்டது; தேகமெல்லாம் ரத்தம் பீரிட்டது: அடடா! இனி நாம் என்ன செய்வோம்; யாரை வைவோம் என்று இடைந்து வீட்டையடைந்து பரபுருஷனை நாடிய பரஸ்திரீ காவலில் அகப்பட்டதுபோலவும், பதியிறந்தானென்று செப்பக்கேட்ட பதிவிரதையைப்போலவும், யுத்தத்தில் அபஜெயமடைந்த வீரனைப்போலவும், மனையாள் விபசாரஞ் செய்தாளெனக்கேட்ட சூரனைப்போலவும், துக்கம் மேலிட்டு கக்கசத்துக்குட்பட்டுத் தந்தைதாயுடன் பேசாமலிருக்கும் குமாரனைப் பார்த்த தமால், "அடா மகனே! அழகான முகனே! உனக்கு ஏன் இக்குறை வந்தது? அடிகளால் தேகம் நைந்தது. யார் உன்னை இப்படி அடித்தவர்கள்? உயிர் நீங்கும்படி யடித்தார்கள்; சீக்கிரஞ் சொல்லடா சொல்லடா எனப் பலதரங் கேட்டும் பேசாமல் இருக்கும் தநுசனை வாரியெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு சரீரம் முழுதுங் காயமாய் இருக்கக் கண்டு ஓவென்று அலறிமிகவுங் கதறி உடலம் பதறி வாய் மொழிகள் குளறி, "அடா என் அருமை மைந்தா! உயிரிலுஞ் சொந்தா! யாரிடம் அடிப்பட்டு நொந்தாய்? எப்படி நடந்துவந்தாய்? உன்னை அடித்தவர்களின் கழுத்தைக் கடித்து இப்போதே வானுலகு அடையச் செய்கிறேன்; துண்டந் துண்டங்களாய்க் கொய்கிறேன்; காட்டடா என்று ஆர்ப்பரித்தார். அப்போது ஜிஜ்ஜாபீபி ஐயோவென்று புலம்பி மகனைத் தண்ணீரால் அலம்பி, "அடா என்கண்மணியே! சிகாமணியே! உன்னை என்னறியாமையால் இரண்டடி யடிக்க உன்மேற்படாமல் நாராயணர் மேற்பட்டதே; மாயாரூபத்தை நீக்கிவிட்டதே; இப்போது இந்த அடிகள் எப்படி பட்டது? நீ பேசாமல் இருப்பது மிகவுங் கெட்டது. உன்னை யார் இப்படி அலங்கோலஞ் செய்தார்களோ அவர்களை இக்கணங் காட்டுவா காட்டுவா?" என்று இழுக்கத் தொடங்கினாள்.

அதற்குக் கபீர், "ஓ என் தாய் தந்தையே! நான் சொல்லும் விந்தையைக் கேளுங்கள். நஷ்டப்படாமல் லாபங் கிடைக்குமா? சிஷ்யனாகாமல் உபதேசங் கிடைக்குமா? கஷ்டப்படாமல் சுகம் உண்டாகுமா? நிஷ்டை சாதிக்காமல் நித்தியானந்தம் உண்டாகுமா? அதுபோல ராமானந்த ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்

றுக்கொள்ளப்போய் அவருடைய ஏவலாளர்களால் இச் சிஷ்டையடைந்தேன்'' என்று நவின்றார். அதனைக் கேட்ட மாத்திரத்தில் தாய்தந்தையர் மனம் பதைத்துத் துடுக்கரைச் சேர்த்துக்கொண்டு தூஷணவார்த்தைகளை விண்டு, ராமானந்த ஸ்வாமிகளிடம்போகப் புறப்பட்டார்கள். அதையறிந்த கபீர் தாய் தந்தையர்க்கும், வந்த உறவாளிகளுக்கும் வந்தனம்புரிந்து, மிகவும் பரிந்து, "ஓ புண்ணியவான்களே! ராமானந்த ஸ்வாமிகளின் பணிவிடைக்காரர்களால் அடிப்பட்ட எனக்குற்ற பாக்கியமும், நான் அடையப்போகிற சிலாக்கியமும், பகவான் செய்த ஆசிர்வாத வாக்கியமும், இதுநாள்பரியந்தம் நான் இருந்த யோக்கியமும், ராமானந்த ஸ்வாமிகளால் பிரகாசிக்க விருக்கிற தால் நீங்கள் ஏன் இதை மறுக்கவந்தீர்கள்? எனக்கு ஏன் இடர் தந்தீர்கள்? வீணாய் ஏன் நொந்தீர்கள்? கோபாக்கினியில் வெந்தீர்கள்? 'ஆத்திரக்காரருக்குப் புத்திமட்டு' என்கிற பழமொழிப்படி செய்தீர்கள்'' என்று உரைத்தார். துலுக்கர், "அடா கபீர்! நீ மஹம்மது மதஸ்தனாயிருந்தும் பிராமணனிடமா யுபதேசம் பெற்றுக்கொள்ளப்போகிறாய்? 'அடாத காரியஞ் செய்தால் படாதபாடு படவேண்டும்' என்கிற பழமொழிப்படி உனக்கு நேரிட்டது. இதர மதத்திற் பிரவேசிக்க எண்ணங்கொண்ட உன்னைக் கடவுளே தண்டித்தார்; அதை நினையாமற் றண்டித்தார்; மறையோர்மேல் யாதொரு குற்றமில்லை; நீயே தேடிக்கொண்டாய் தொல்லை; உன்தலைமேல் ஏன் போடாமற் போனார்கள் பெரியகல்லை; உன்னை இரண்டுதுண்டாக ஏன் வெட்டவில்லை? உடைக்காமற் போனார்களே பல்லை; எங்கள் செவியாற் கேட்கவும் நேரிட்டதே இச்சொல்லை; நீ மோட்சமடைகிறவனல்லை; பதிவிரதை கடந்துபோவாளா தன்னெல்லை; புலி புசிக்குமா புல்லை என்னும் வார்த்தைகளாடி இவனுக்காக ஏன்வந்தோம் ஓடி'' என்று தங்கள் தங்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு தயாலும் ஜிஜ்ஜாபீபியும் கபீரை ஆதரணை செய்து இராமானந்தஸ்வாமிகளை வைது கண்ணீர்விட்டழுது, கடவுளேயென்று தொழுது, எங்களுக்கும் வருமா பழுது, இனி எப்படி போகும்பொழுது என்று புலம்பும் தாய்தந்தையரைப் பார்த்து கபீர் கரங்களைச் சேர்த்துத் துக்கத்தை யாற்றி இனிய வார்த்தைகளால் ஏத்தி எனக்குக் கடவுள் துணையா யிருப்பாரெனப்போற்றிப் பற்பல வார்த்தைகளாலே மாற்றி; அன்னமும் உண்டு தாய்

தந்தையர்க்குத் தொண்டு அன்பாய் செய்துக்கொண்டு உல்லாச மாய் விளையாடிக்கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்.

கபீர் ராமானந்தசுவாமிகளின் பணிவிடைக்காரர்களால் அடிபட்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆருவது

## கபீர் ராமானந்த சுவாமிகளின்

### ஆசீர்வாதம் பெற்ற அத்தியாயம்



இப்படி கபீர் சிலநாள்கழித்து வீணாள் கழிவதைக் குறித்துத் தன்னைத்தானே பழித்து ராமானந்தஸ்வாமிகளை நினைந்து கண்ணீரால் நனைந்து, ஐயோ! வீணாக நாட்கள் கழிந்து போகின்றதே; முயற்சியாலாகாக்காரியமுமாகின்றதே; யாதொரு வித்தையும் ஆசானின்றி பலிக்காதே; ஆசிரியர்மேல் உத்தமர்க்கு மனஞ்சலிக்காதே; ராமானந்த ஸ்வாமிகளே ஆசானெனத் தீர்மானித்தபின் வேறு ஆசானைத் தேடக்கூடுமா; மற்றொருவர்பால் நாடக்கூடுமா; இப்படி செய்வது உத்தம புருஷருக்கு அழகல்லவே; நல்லோர் செய்யுங் காரியமல்லவே; தேகம் நீர் மேற் குமிழியாயிற்றே; வீணாய் நாட்கள் கழிந்துபோயிற்றே; நாட்கள் கழிவதற்கு அவிவேகிகள் சந்தோஷமடைவார்கள். விவேகிகள் பெருமூச்சுவிட்டு இடைவார்கள். மானிடப் பிறப்பெடுக்க முற்பிறப்பில் என்ன தவஞ் செய்தோமோ, பசு, பட்சி, புலி, பூனை, நாய், பேய், நரி, கரி, அரி, பரி, புழு, பூண்டு, ஈ, எறும்பு, மச்சம், மான், மறை, மாடு முதலானதன்றி பிறவிக்கடலைக்கடக்கும் மனுஷப்பிறப்பெடுத்துத் துன்மார்க்கங்களையடுத்து மந்தபுத்தியினல் தந்தைதாய் பெண்டு பிள்ளை நாடு நகர் சொந்தமென நினைந்து, பந்தத்தில் நுழையலாகுமா? இதனற் பிறவிப் பிணி வெந்துப்போகுமா? எம்மார்க்கத்தா லின்பவேலையினுட் படலாம்? எவ்விதத்தால் அஞ்ஞானகுணங்களை விடலாம்? மோட்சமென்னும் நகரிற் புகுக; சரியை கிரியை யோகம் ஞானமெனுஞ் சதுர்நெறிகளிருக்கின்றனவே சரிதையைச் செய்யலாமெனின் எங்குமிருக்குங் கடவுள் எனக்கு உள்ளும் புறம்பிலும் இருப்பாரல்லவோ? இல்லையென்று அறையும் மொழிகள் நல்

லவோ? தனக்குள் ஆதியையறியச் சத்குருவேண்டுமே; கிரியை யியற்றுவோமெனின் சகலபிராணிகட்கு மூட்டியுறக்கி உபசரிக்குங் கர்த்தனுக்கு நாம் எவ்விதபூசை செய்யல்வேண்டுமோ அதை யுணர்தற்கும் ஆரியர்வேண்டுமோ? யோகம் புரிவோமெனின் விசுவாச நிவாசங்களையொடுக்கி பிர்மாந்திரத்தில் மூடுக்கி நாதத்தைக்கேட்டுச் சோதியைத் தரிசிப்போமெனின் அதுவும் வித்யாசம்பந்தமே யிருக்கின்றதே. இதைச் சோதித்து அறியவும் அடிகள்வேண்டுமே; ஞானசாதனஞ் செய்வோமெனின் தானே பிர்மம், பிர்மமே தான் என்கிற அத்துவிதபாவத்தையே யுணர்த்துகின்றதே.

தான் பிர்மமென்கிற சப்தார்த்தத்தின் மர்மந் தெரிதற்பொருட்டு காரணகுருவேண்டுமே; கர்மகாண்டப்படி நடப்போர்க்கே முக்தியுண்டு என்று சிலரும், பக்திமார்க்கத்திற் செல்பவர்க்கே பரமபதமுண்டென்று சிலரும், ஞானநிஷ்டையைச் சாதிப்பவர்க்கே கைவல்லியங் கிடைக்குமென்று சிலரும் நவில்கின்றார்கள். எதைமேன்மையானதென்று உணரலாம்? இதற்கும் ஆசிரியர் வேண்டுமே; கர்மானுஷ்டானங்களை தவறாமற் செய்பவர்க்குச் சத்தியலோகமும், தாசமார்க்கத்தில் நிற்பவர்க்கு வைகுந்தமும், சிவனை நாடித் தவஞ்செய்வோர்களுக்குக் கைலையும், அத்வைதபாவத்தில் இருப்பவர்க்கு மோக்ஷமுங் கிடைக்குமென்று அறையும் இப்பதவிகளில் எது மேன்மையானதோ? ஆனந்தமயமா யிருப்பதெதுவோ? இதை யுணர்தற்குத் தேசிகன் வேண்டுமே; குருவில்லாத வித்தையும், கொழுநனில்லாத மங்கையும் அபலமென்று உரைக்கின்றார்களே; இதற்கு என்ன செய்பலாம் என்கிற எண்ணமே மேலிட்டு மிக ஆயாசப்பட்டு முடிவான அர்த்தத்தை நாளைக் காலையிற்போய் ராமானந்த ஸ்வாமிகளைக் கேட்டு அறியலாம் என யோசித்து எப்போது இரவு ஒழியுமென்று ஆசித்து, மனதால் ராமானந்தஸ்வாமிகளைப் பூசித்து, இவரே நமக்கு ஆரியரென விசுவாசித்து, குருசங்கீர்த்தனங்களைக் கோஷித்து, உடனே மடத்தின் அருகிற் பிரவேசித்து, ஸ்வாமிகளின் ஏவலாளரைப் பூஷித்துத் தன்னைத்தானே தூஷித்து மடத்தினுள் வேதாந்தங்களை ஓதிக்கொண்டிருப்பதைக் கேட்டு, ஆனந்தக்கண்ணீர்சொரிய நிற்குந்தருவாயில்ராமானந்த ஸ்வாமிகள் சேவல் கூவும்வேளையில் பலமாணுக்கருடன் கங்கா ஸ்நானஞ்செய்யப் புறப்பட்டார். அதைக் கபீர்கண்டு ஆனந்தங் கொண்டு சுவாமிகளைச் சூழ்ந்து இருப்போரைத் தாழ்ந்து

ஆசிரியர் கழல்களில் வீழ்ந்து இன்பவேலையிலாழ்ந்து பலதரங் கும்பிட்டுப் பண்புடன் முத்தமிட்டு சுவாமியென முறையிட்டுத் துன்பத்திலிருந்து விடுபட்டு ஸ்மரணைகெட்டு காயத்தை யசைக் காமற் றன்னை மறந்திருந்தார். அப்போது ராமானந்த ஸ்வாமி கள் தாழ்ந்தவன் யாரடா? பாதங்களை விடடா? எழுந்திரடா? மிகவும் மூடா? தன்னை அறியாக் குருடா? இரவில்வந்த திருடா? சுகஜீவியாய் வாழ்த்திருடா என்று ஆசீர்வாதஞ் செய்தார்.

அதுகேட்ட கபீர் களிக்கடலில் குளித்தவராய், "ஓ சுவாமி! இன்றைக்கல்லவோ உமது ஆசீர்வசனம் பெற்றேன்; மோக்ஷ மார்க்கங் கற்றேன்; பந்தபாசங்கள் அற்றேன்; பிர்மானந்த வாழ் வுற்றேன்; ஓ என் சத்குருநாதனே! ஜெகந்நாதனே! வேதனே! வேதாதீதனே! மெய்ஞ்ஞானபோதனே! பந்தமில் லவ தூதனே! லீலாவினோதனே! கமலம்போன்ற பாதனே! பரி சுத்தமான நீதனே! நவநீதனே! நிர்ச்சேதனே! நிஷ்குரோ தனே! நிர்பேதனே! நிர்வாதனே! துரியாதீதனே!" என்று பற் பலவிதங்களாய்த் தோத்திரஞ் செய்தார்.

அப்போது ராமானந்தஸ்வாமிகள் ஏவலாளரை நோக்கி, "இந்தப்பாலன் யார்? நீங்கள் அறிவீர்களா" என்று வினவினர். அப்போது மறையோர் கபீரென்று அறிந்து, முகங்கரிந்து மிக வும் எரிந்து கோபம் விரிந்து ஓஹோ ஸ்வாமிகள் முன்வந்து இருந்த நீச்சப்பயலுக்குக் கூச்சமின்றி ஆசீர்வாதஞ் செய்தார்; கருணைமழை பெய்தார்; தம்முடைய விரதத்தைக் கொய்தார்; நாம் மெச்சும்பொருட்டு அந்நாள் வைதார்; இதற்கு என்ன செய் யலாம்? யாரைவையலாம்? இந்தத் துஷ்டப்பையனுற் பிரஷ்டர் களானோம்; கனிஷ்டராய்ப் போனோம்; என்று தங்கள் தங்கள் வாயைத்திறந்து ஆவெனப் பறந்து பேயைப்போல பிதற்றினர் கள். அப்போது ஸ்வாமிகட்கு சாந்தமிறந்து முனிவுபிறந்து மிக வும் நிறைந்து ஓசையாயிறைந்து. எட்டப்போடா என்று அறை ந்து கபீரைக் கன்னத்தி லறைந்து, "ஓ விப்பிரரே! நிசியில் வந்த இத்திருடனை பாதங்களைவிடாத மூடனை நைய அடித்து எலும்புகளை யொடித்து ஓட்டிவிடுங்கள்" என்று உரைத்து ஸ்நா னத்துக்கு எழுந்தருளினர். தொழுகுலத்தோர் கபீரைக் கயிற்ருற் பிணித்து வாயிற்றூசை திணித்து அஸ்திகள் முறிய அடித்துத் தங்கள் வைராக்கியத்தை முடித்து இக்கள்வனை சூரியோதயமா

னதே இராஜன்பால் அனுப்பலாமென்று தொழுவத்தில் மாட்டிப் பராக்கிரமங்களைக் காட்டி ஸ்நானஞ் செய்யப்போனார்கள்.

அப்போது கபீர் தேகநோய்க்கு ஆற்றமாட்டாமல் பகவானை நினைந்து கண்ணீரால் நனைந்து, ஓம் ஹரிஹரி! நரஹரி! முராஹரி! அம்புஜாக்ஷரி! பத்மநாபா! பரமபுருஷா! பக்தவச்சலா! வேணுகோபாலா! தேவரனுகூலா! ஆதிமூலா! சத்தசீலா! தேவகிதநயா! தசரததநயா! கௌசலை புத்திரா! முனிவர்கள் மித்திரா! புண்ணியக்ஷேத்ரா! ஆனந்தபாத்திரா! மாயாவிலாசா! வைகுண்டவாசா! சுயம்பிரகாசா! அன்பர்கள் நேசா! ருஷிகேசா! பாபவினசா! ஓ விஷ்ணு! ஓ பகவான்! ராமானந்த ஸ்வாமிகட்கு அடியேன்மீது இவ்வளவு வெறுப்பு ஏன்? அறுவறுப்பு ஏன்? நான் என்னகொடுமை செய்தேன்? யாரை வைதேன்? வீணாய் நாட்களைக் கழிக்கலாகுமா? ஸ்வாமிகளுக்கு என்மேலிருக்கும் கோபம்போகுமா? சகல சந்தேகங்களுந் தலையெடுக்காமற் சாகுமா? நான் இவ்வளவு இடருறல் உமக்கு உற்சாகமா? இது எனக்கு உற்றயோகமா? அனுபவிக்கவேண்டிய போகமா?" என்று அனந்த விதங்களாய்ப் பிரலாபித்து, ஓ தெய்வமே என்று அழுது தொழுது தலையெடுப்பதற்குமுன் தொண்டர்கள் சகாயனான விண்டுவானவர் கபீர் மஸ்தகத்தின் மேற் றமது அஸ்தகங்களை வைத்து ஆசிகள்கூறிக் கட்டையவிழ்த்து வாரி மடிமேலேந்திக்கொண்டு பயம்வேண்டாம் என்று விண்டு, "ஓ கபீர்தாஸனே! எனக்கு உகந்த நேசனே! ராமானந்தஸ்வாமிகளின் தொண்டர்களாகிய பண்டர்கள் கையால் அடிப்பட்டாயோ; தைரியம் விட்டாயோ; எனக்கு முறையிட்டாயோ; சிறைக்கு உடன்பட்டாயோ; என்று ஆகமெல்லாந் தடவிக் கண்ணீர் துடைத்துத் தோண்மேல் ஏந்திக்கொண்டு அரைக்கணத்தில் தமால்முன் விடுத்துத் தன்னை யாரும் பார்க்காமல்மாயையாற்றடுத்து அந்தரத்தில்மறைந்தார்.

கபீர் பகவான் தன்னிமித்தம் வந்து அரிதானசேவைதந்து செய்த உபசாரத்தையும் வீட்டிற் கொண்டுவந்து விட்ட உபகாரத்தையும் நினைத்துக் கண்ணீரால் ஆக்கையை நனைத்து "ஓ சீதாசமேதா! லீலாவினோதா! என்னோடு ஓர் வசனம் பேசலாகாதா; பேசினல் எனக்கு உற்ற குறைகளெல்லாம் போகாதா; பாவங்களெல்லாம்படுசூரணமாய் வெந்து நீருகாதா; சந்தேகக் கடலைக் காட்டாமற் சாகாதா" என்று புலம்பினர். அதைக் கேட்ட தமால் அடா என்சுதனே! அரியவற்புதனே! பகவான்

இங்கு வந்தாரா? பட்சமாய்ச் சேவைதந்தாரா? ஆண்டவனைக் கண்டாயா? ஆனந்தம் நீ கொண்டாயா? அரியை இன்று பார்த்தாயா? ஆயாசத்தைத் தீர்த்தாயா? மாதவனைப் பணிந்தாயா? மலரடிகளை அணிந்தாயா? அடியேன் பார்க்கலாகாதோ? அடியேன் செய்ததீதேதோ? மாயன்செய்யும் வகையேதோ? வறிட்டயேன் பாவத்தொகையேதோ? தெரிந்தும் நிருபம் ஆனரோ? தியங்கச் செய்து போனரோ? அடியேன் பாவியானேனே? அவலமாகிப் போனேனே? வந்துபார்க்கக் குறையேதோ? சேயே நீசெய்த தவமேதோ? கருணைக்கண்ணுற் பாரேனே? கவலைகளெல்லாந் தீரேனே? என்று அனந்தம் வார்த்தைகளாடிப் பல சங்கீர்த்தனங்களைப்பாடி மகனை வாரியெடுத்து மார்போடு அணைத்து அங்கமெல்லாந் தழும்புகளா யிருக்கப்பார்த்து ஆகமெல்லாம் வேர்த்து, அடா என்பாலனே! அரிதான சீலனே! தேகமெல்லாம் காயமாயிருக்குங் காரணமேன்? பேசாமலிருக்குங் கொள்கையேன்? என்று பலதரங் கேட்குந் தந்தைக்கு உண்மையுரைத்தால் முன்போல் விபரீதமுண்டாகுமென்று ஒன்றும் பேசாமலிருக்கும் கபீரைப்பார்த்த ஜிஜ்ஜாபீபி அடிகளின் வடுவையும் பாசத்தாற்பிணித்த குறியையுங்கண்டு ஆயாசங்கொண்டு, "அடா என்மைந்தா! ஆருயிரிலுஞ் சொந்தா! எங்களையேன் இழந்தாய்? எவணிவ்வடிபட்டு நொந்தாய்? எப்படி நடந்து வந்தாய்? இடானலால் ஏன் நொந்தாய்? எங்களுக்கே னிடர்தந்தாய்?" என்று அலரும்போது பேசாப் பிள்ளையைக் கொஞ்சுங்கிள்ளையைத் தமால் ஆதரணைசெய்து அடித்தவர்களைவைது புறம்போகாமற் கைதுசெய்து வைத்திருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் ஆசீர்வாதம்
பெற்ற அத்தியாயம் முற்றிற்று.

---

ஏழாவது

## கபீர் ராமானந்த ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்றுக்கொண்ட அத்தியாயம்

இப்படி சிலநாள் கழிய, தாய்தந்தையர் துக்கம் ஒழிய கர்மமெல்லாந் தன்னைவிட்டுக் கழிய கபீருக்கு ஆனந்தக்கண்ணீர் வழியப் பகவான் கருணைமழைபொழிய அஞ்ஞானம் அடியோ

டும் வெந்தழிய ஒருநாள் இரவில் கபீர் விழித்து, மந்தப்புத்தியை மாயக்கிழித்து ராமானந்த ஸ்வாமிகளிடம் ஓர் மொழியாவது கேட்டுக்கொள்ளவேண்டும். இதற்கு என்ன உபாயஞ் செய்யலாம்? என்று அனந்தம்விதங்களாய் யோசித்து ஆதித்தனைப்போற் பிரகாசித்து அறிவுள்ளவர்க்கு அரிய தொண்டர், முயற்சியுடையார் இகழ்ச்சியடைவதுண்டா? திக்கற்றவனுக்குத் தெய்வமே துணையல்லவா? தெய்வத்தை நம்பினோர்க்குத் தீங்கு அணுகாதல்லவா? இன்றைக்கு இதுநாள்பரியந்தம் ஆனபடி ஆனாலுமாகட்டும்; அல்லது இவ்வுயிர் பிரிந்துபோனாலும் போகட்டும்; ஸ்வாமிகளின் மனம் கோபாக்கினியால் வெந்தாலும் வேகட்டும்; ஏவலாளர் உதைத்துக்கொண்டு செத்தாலுஞ் சாகட்டும்; இக்கணமே ஸ்வாமிகளிடம்போய் அவர் அருள் வாக்கிலிருந்து எம்மொழி பிறப்படுகின்றதோ அதையே பிர்மோபதேசமாய்க் கொள்வோம் என்று மடத்தினருகிற் சென்று உல்லாசமடைந்து உட்போவதற்கிடைந்து புறத்தில் நின்றபடி ஸ்வாமிகளின் வாய்மொழியின்மேற் கவனம்வைத்துக்கொண்டு சேவல் கூவும்பரியந்தங் காத்திருந்தும் ஆரியர் ஓர் உரையும் பேசாமையால் இனி ஸ்வாமிகள் ஸ்நானத்துக்கு எழுந்தருளுவார். நாம் கட்டத்தின் படிக்கட்டில் படுத்துக்கொள்வோம். தேசிகர் தமது திருவடியை நமது சிரத்தின்மேல் வைத்துவிடுவார். ஏதாவது ஓர் மொழியுஞ் சொல்லிவிடுவார். இன்றைக்குப் பெறும்படியான பாக்கியமிதுவேயாமெனத் துணிந்து கங்கையின் அருகிற்சென்று மணிகர்ணிகை கட்டத்தின் படியின்மேற் படுத்துக்கொண்டிருந்தார். அப்போது ராமானந்தஸ்வாமிகள் ஸ்நானஞ்செய்யப் புறப்பட்டு மணிகர்ணிகையின் ஆரோகணத்தின்மே லிறங்குகையில் கபீர் அவரிறங்குவதற்கு நேராய்ச் சயனித்துக்கொள்ள அடிகள் தெரியாமல் கபீர் மஸ்தகத்தில் மிதியடியைவைத்து அழுத்தமாய் ஊன்றிவிட்டார். கபீர் அந்தோவென்று கூக்குரலிட்டு அழத்தொடங்கினர். ஸ்வாமிகள் அறியாமல் குழந்தையை மிதியடியால் மிதித்துவிட்டோமேயென்று கபீரைத் தன் திருவஸ்தங்களாலுந் தடவி தாம்தாம் ராம்ராம் என்றுரைத்து மற்றச் சோபானங்களிலிறங்கி பாகீரதியில் ஸ்நானஞ்செய்து மடத்துட் பிரவேசித்தார்.

கபீர் இன்றைக்கு நாம்செய்த பாக்கியமே பாக்கியம்; நமது பெரியோர்செய்த சிலாக்கியமே சிலாக்கியம்; நாம் கோரிவந்ததைப் பகவானே முடித்தார். அன்று மறையவனால் வந்தருளிய

தையே இன்று எமது ஆண்டவனும் உரைத்தார். வேதமுடிவான தாரகமந்திர மிதுவேயாகும்; இதனாலேயே சகல பாபங்களும் நசிந்துப்போகும்; எதையும் நம்பினல் வீடுண்டு; நம்பாதார்க்குக் கேடுண்டு; பரமேசன் பார்வதிக்கும், நாரதர் வால்மீகருக்கும், வால்மீகர் பரத்துவாசருக்கும், பாராசர் வேதவியாசருக்கும், வியாசர் சுகப்பிர்மரிஷிக்கும் சொல்லிய மந்திரம் இதுவேயல்லவா. அன்றி அநேக ரிஷீஸ்வரர்களெல்லாம் இதைத் தியானித்தே பரமபதமடைந்தார்களல்லவா? இதை யன்றி மேலான வாக்கியமும் உண்டா? இல்லை இல்லையெனச் சந்தோஷசாகரத்து அமிழ்ந்தவராய்ச் சானவியில் மூழ்கி, ஈரவஸ்திரமுடன் வீட்டையடைந்து தாய் தந்தையர்க்கு வந்தனந் தந்து, "ஓ என் அன்னையே! அத்தனே! இன்றைக்கு ராமானந்த ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்றுக்கொண்டேன்; மோக்ஷமார்க்கங் கற்றுக்கொண்டேன். ஆதலால் இன்றுடன் அவருடைய மூத்திரையைத் தரித்துக்கொள்ளுகிறேன். நீங்களும் அணிந்துக்கொள்ளுங்கள்" என்று உரைத்துப் பட்டுவஸ்திரம் அணிந்து ராமாநந்தஸ்வாமிகளிடும் திலகத்தை நெற்றியிற்றீட்டி, ஆரியர் பாதங்களில் மனதை நாட்டி, துளசிமாலைகளைப் புனைந்து, குருசுவாமிகளுக்குப் பூமாலைகளையும் பூசைக்குரிய வஸ்துக்களையும் ஏந்திக்கொண்டு 'ஜெயராம் சீதாராம்' என்று தியானஞ் செய்துக்கொண்டே மடத்தினுட் பிரவேசித்து குருசங்கீர்த்தனங்களைக் கோஷித்து, அடியார்க ளனைவருக்கும் சிரசாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டு, கோமான் இருக்குங் கோயிலை நோக்கிக் கும்பிட்டுத் தொண்டர்களுடன் தான் ஓர் தொண்டனாய்ச் சேர்ந்து, களிகூர்ந்து ஸ்ரீ ராமநாமத்தை ஜபமாலையால் ஜபித்துக்கொண்டிருந்தார்.

அதைப்பார்த்த தாசர் ஆச்சரியமாய் அடா! இதென்ன விபரீதமாயிருக்கின்றது. துலுக்கன் சுவாமிகளின்திலகமணிந்து நம்முடனொத்து வீற்றிருக்கின்றான். இவனுக்கு ஆரியர் அனுக்கிரகஞ் செய்தாராக்கும். இது தெரிந்துகொள்ள வேண்டுமென்று இறைவன் தொழும்பரை விளித்து கபீரிருக்குங் கோலத்தைக் காண்பிக்க, அந்தணர் அடடா! இந்தத் துஷ்டப்பயல் நம்மைப் பிரஷ்டராக்கவேண்டுமென்கிற நிஷ்டைபூண் டிருக்கிறதுபோற் காண்கின்றது. இக்கனிஷ்டனை இரண்டுதுண்டமாய்க் கண்டித்தாலன்றி நமது அண்டையில் வராமலிரான் என்று ஆர்ப்பரித்துக் கபீர்மேற் பாய்ந்து, "அடா நீச்சா! கோவைக் கொல்

னும் மிலேச்சா! அன்பர்கள் மத்தியி லின்புடன் வந்து அசுசி யாக்கிவிட்டாயே; நீ கெட்டாயே; என்று ஆளுக்கு ஓர் குட்டு குட்டி திடுக்கிட மிரட்டி எங்களை யேளனமா செய்யவந்தாய்? சுவாமிகளின் திலகத்தை ஏன் அணிந்தாய்? துளபமணிகளை ஏன் புனைந்தாய்? நீ என்செய்ய நினைத்தாய்?'' என்று வற்புறுத்திக் கேட்டார்கள். அப்போது கபீர், "ஓ பிராமணோத்தமர்களே! வீணாய் என்னை ஏன் இழுத்து அடித்து அலங்கோலஞ் செய்கி றீர்கள்? வேண்டாம் வேண்டாம். இன்று வைகறையில் சுவாமி கள் எனக்கு அனுக்கிரகஞ் செய்து ஆட்கொண்டார். இதில் உங்களுக்கு ஐயமிருக்குமாயின் தேசிகரை வினவித் தெரிந்துக் கொள்ளுங்கள்'' என்று சாற்றினர். உடனே தொழுகுலத்தோர் கபீரை இழுத்துக்கொண்டுபோய் ஆரியர்முன் நிறுத்தி, "ஓ சுவாமி! தேவரீர் இன்று காலையில் இந்தத் துடுக்கனுக்கு உபதே சஞ் செய்தீராமே நிச்சயமா?'' என்று வினவினர்கள். அதற்கு தீர்த்தன் மிகவுமுனிந்து கபீர்மேல் மிதியடியை வீசியெறிந் தார். அப்பாதுகம் கபீர் லலாடத்திற்பட்டு உதிரம் பெருகச் செய்ததற்கு கபீர் இடருறுமல் ஆனந்தவாரியில் அமிழ்ந்தவ னாய் ஆசிரியரைநோக்கி, "ஓ என்னாண்டவனே! உமது பாதுகை இவ்வேழையேன் நெற்றியிற்பட நான் என்ன நோன்பு இழைத் தேனே? என்னைப்போன்ற பாக்கியம் இவ்வன்பர்களில் யாரும் பெற்றிருக்கமாட்டார்கள்; எனக்குற்ற சிலாக்கியமே சிலாக்கியம்; இவ்வெளியேன்மீது இவ்வளவு கருணை யின்றுவந்த காரண மேதோ? ஓ எனதையனே! மிகவுந் துய்யனே! அழகான கையனே! ஆட்கொண்ட மெய்யனே! வீடளிக்குஞ் செய்யனே! நான்தொழுமீசனே! பரமேசனே! ஜகதீசனே! குணவாசனே! மிகுநேச நிமலேசனே!'' என்று தோத்திரஞ் செய்தார். அப் போது ராமானந்த ஸ்வாமிகட்குச் சற்றே மனதிரங்கி, "அடா கும்பிடுங்கள்ளா! உனக்கு நான் அனுக்கிரகஞ் செய்ததாகச் சொன்னுயாமே? எப்போது என்னிடத்து உபதேசம் பெற்றுக் கொண்டாய்? சொல்லடா?'' என்று கேட்டார். அதற்குக் கபீர், "ஓ சுவாமி! இன்று வைகறையில் தேவரீர் ஸ்நானஞ் செய்யப் போகையில் மணிகர்ணிகை கட்டத்தின் சோபானத்தில் படுத் திருந்த என் மத்தகத்தின்மேல் உமது உத்தமபாதத்தைவைத்து அழுத்தமாய் ஊன்றி உபதேசிக்கவில்லையா? சுவாமிகட்குக் கவனமில்லையா? இதற்குள்மறந்துவிட்டீரா?'' என்றுசிரசாஷ்டா ங்கமாய்த் தெண்டனிட்டு எழுந்து நின்று தோத்திரஞ் செய்தார்.

## பகவான் துணை



பூமாதிளையாளும் புரந்தரனாரணனரனும்
நாமாதுமையாளும் நசையோடுமனுதினமும்
ராமாவெனத்துதிப்பா ரதைநாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 1

தீமாரரிபடிந்தோர் ஜெபஞ்செய்யுந்திருநாமம்
தோமேமமுமேவற் றவிர்துறவோர்துதிநாமம்
ராமாவெனுநாமமதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 2

நேமாதிகளில்லாதவ நீதன்மிகுகுரோதன்
மாமாதையிலுழலும் வான்மீகமுனிநாதன்
ராமாவெனத்தேர்ந்தானதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 3

ஆமார்கடல்சூழும்புவி யாண்டதசரதனுர்
மாமோகமுமருண்மாதவர் வாட்டங்களுநீத்த
சீமான்றிருநாமந்தனை நீயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 4

காமாதிகளோங்கிக் ககனத்தோர்க்கிடரீந்து
தாமேபதியர்யன்றுறு தசகண்டனைவென்ற
தாமோதரனுமந்தனை தமியேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 5

கோமேதமுநரமேதமுங் குரைமேதமுமுடிப்போர்
மாமேவியதபமுஞ்செய வல்லோர்மிகநல்லோர்
ராமாவெனவுரைப்போதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 6

போமேபவமரணம்பிணி புரையும்மருட்டிரையும்
போமேமனக்கோட்டம்புவி நாட்டப்பலவாட்டம்
ராமாவெனவுரைத்தாலதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 7

பூமீதினிற்சுகமா யுறுவாயென் அபுகன்றே
தேமார்குமுதப்பாதமுஞ் ஜெயமீமிதியடியும்
ராமாவெனும்பொருளுங்கொடு நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. 8

*பாமாலைகள்புனைசாநவி கட்டப்படியடியில்*
*நாமேபடைந்தென்மத்தக மேற்றாட்களைவைத்தென்*
*ராமாவெனவுரைப்பாயென நாயேற்கருள்செய்தென்*
*ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே.* 9

*பூமான்களும்வானோர்களு மறியும்பொருட்டாக*
*சீமானுமதடிபாதுக மென்சென்னியிற்றாக்கி*
*நாமேகுருவெனக்காட்டியிங் நாயேற்கருள்செய்தென்*
*ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே.* 10

என்று இவ்விதமாய்த் தோத்திரஞ் செய்து உருகும் கபீர் மேல் ராமானந்த ஸ்வாமிகள் மிகவுங் கருணைகூர்ந்து, அடா! மோசஞ்செய்தாயே; நீதானா படுத்திருந்தவன்? நீசெய்யவேண்டுமென்றே செய்தாய். ஆனாலுங் குற்றமில்லை. முடிந்துபோன கருமத்தைக் குறித்து யோசிப்பதாற் பிரயோசனமில்லை என்று அந்தணரைநோக்கி, "ஓ சீஷர்களே! இவன் சொல்வது உண்மையே. ஆதலால் இன்றுடன் இவனை உம்முள் ஒருவனாய்ச் சேர்த்துக்கொண்டு பாதுகாத்து வருவீர்களாக?" எனத் திருவாய் மலர்ந்தருளினர். அதைக்கேட்ட மறையோர் குரோதங் கொண்டு, "ஓ எங்களாண்டவனே! தெரியாமல் யாரோவென்று வழக்கமான வார்த்தையைச் சொன்னீர். இதனால் இந்நீச்சன் உமக்கு மாணாக்கனாய் விட்டானா? பார்ப்பார் பறையனைச் சேர்த்துக்கொள்ளுவார்களா? சீஷனென்றும் விள்ளுவார்களா? இவ்வண்ணம் இவ்வுலகில் எங்கேயாவது நடந்ததுண்டா? நடப்பதுமுண்டா? இத்துடுக்கனைச் சேர்த்துக்கொள்வதால் நமக்கு அபகீர்த்தி யுண்டாகுமேயன்றி புகழுண்டாகவே யுண்டாகாது. ஆதலால் இவனை நமது மடத்துக்குள் வராமல் நீக்கிவைப்பதே யோக்கியம்" என்று உரைத்தார்கள். அதற்கு ஸ்வாமிகள் உங்கள் உங்கள் இஷ்டப்படியே செய்யுங்களென்று உரைத்தார்.

பிறகு கபீரை நோக்கி, "அடா கள்வா! சூதுசெய்து என்னிடம் தாரக மந்திரத்தைக் கேட்டுக்கொண்ட காரணத்தால் நீ மறைவா யிருத்தலே நன்மை; இராவிட்டால் வரும் தின்மை; நாளையோடு இம்மார்க்கமாய் மறந்தும் வரவேண்டாம்" என்று அனுப்பிவிட்டார். பின்பு சகலரையும் பார்த்து, "ஓ சாது பிராமணர்களே! இவன் சிறுகுழந்தையா யிருந்தும், பக்தி விசுவாசம் பரிபூரணமா யிருப்பதுமன்றி, சதுர்வேதங்களை யுணர்ந்த சதுர்முகனைப்போலவே பேசுகின்றான்; இவ்வளவு துன்பத்

துக்கு உடன்பட்டு என்னிடம் அனுக்கிரகஞ் செய்துக்கொண்டவர்கள் யாருமில்லை; இவன் மூற்பிறப்பில் யாதோ குற்றஞ் சற்று செய்திருப்பான்; அதனுலேயே மிலேச்சர் வம்சத்திற் பிறந்தான்; ஆனுலும் குணமே சிரேஷ்டம். இழிவான குலத்தோரான வால்மீகர் முதலானவர்களும் மகரிஷிகளாகவில்லையா? இச்சிறுவனுடைய குணம் குறி நடை நொடி பாவனைகள் யோசிக்குமளவில் மிகவும் விந்தையாக இருக்கின்றது. அன்றி ஓர் அவதாரப் புருஷனைப்போலத் தோன்றப்படுகின்றது. இராக்கதர் குலத்தில் உற்பவித்த விபீஷணன் பிரகலாதனன் மாபலி முதலானேர்கள் மகாபக்தர்களானதெல்லாம் அறிந்ததுதானே. பகவானுடைய லீலையை ஒருவரால் சொல்லக்கூடியதல்ல'' என்று அனந்தம் வார்த்தைகளாடி ஸ்ரீமந்நாராயணருடைய தியானத்தில் எழுந்தருளியிருந்தார். பின்பு கபீர் தன் வீட்டையடைந்து தாய் தந்தையர்க்கு நடந்த வர்த்தமானங்களை நவின்று, சந்ததமுந் தாரகமந்திரத்தைச் சிந்தனஞ் செய்துக்கொண்டு காலையிலெழுந்து சானவியிற் படிந்து, ராமானந்த சுவாமிகளின் திலகமணிந்து, துளபத் தாமங்களைப் புனைந்து ஸ்ரீமந் நாராயணருடைய திவ்விய திருநாமங்களை யெல்லாங் கோர்த்துப் பல கீர்த்தனையாகப் பாடி, பலருக்கும் விரித்துரைத்துக்கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னும் சொல்லத்தொடங்கினர்.

கபீர் ராமானந்த ஸ்வாமிகளிடம் உபதேசம்
பெற்றுக்கொண்ட அத்தியாயம்
முற்றிற்று.

---

எட்டாவது

## கபீர் துலுக்கமதத்தைக் கண்டித்த அத்தியாயம்

இப்படி கபீர் இருக்கையில் துலுக்கரெல்லாம் ஒன்ருய்ச் சேர்ந்து, தமாலையும் ஜிஜ்ஜாபீபியையும் விளித்து, ''நீங்கள் துலுக்காயிருந்தும் இந்துக்களைப்போல நாராயணு ஸ்ரீராமா என்று கூச்சலிட்டுக்கொண்டு எங்கள் தெருவிலிருப்பது தகுதியல்ல. இக்கணம் இவ்விடத்தைவிட்டுப் பேருங்கள். இந்துக்கள் வீதியிற் சேருங்கள்" என கடுகடுத்து அறைந்தார்கள். அதைக்

கேட்ட கபீர் துடுக்கரை நோக்கி நீங்களுரைத்தால் நாங்கள் போவோமோ? ராம் ரயிம் ஒன்றென்று அறியா உங்களுடன் வாது செய்வோமோ? என்றார். அதற்கு துலுக்கருள் மிகவுங் கற்ற காஜி கபீரைப் பார்த்துக் கரத்தைப் பிடித்தீர்த்து ராம் ரயிம் ஒன்றென்பது எப்படி? ராமனென்பவன் தசரதன் என்னும் ஓர் மனிதன் புத்திரனாகும். ரயிம் என்பது ஜனனமரண மில்லா நிருபமாகிய கடவுளாகும். உண்மையறியா உன்னுடன் பேசுவதால் ஓர் பயனுமில்லையென்றான். கபீர், அதற்கு ஓ சற்று மறிவில்லாக் காஜியே! நித்திய நிர்மல சொரூபமாகிய பரப்பிர மத்தின் அம்சத்தைப் பெற்று லோகங்களை ரக்ஷிக்குங் கர்த்தா வாகிய மஹாவிஷ்ணுவுக்கு சிஷ்டபரிபாலனந் துஷ்டநிக்கிரகஞ் செய்வதே தொழிலாதலால் துஷ்டனாகிய இராவணனைச் சம்மாரஞ்செய்யத் தசரதராஜனுக்குப் புத்திரனாய் அவதரித்தார். அவரை மானிடரென்று எந்தமதிகொண்டு அறைந்தாயென்றார். காஜி "அடா பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லவேண்டும். அப்படிக்கின்றி கடவுள் வேறு; உலகங்களை இரக்ஷிக்குங் கர்த்தாவேறு; என்று நீயொருவன் சொல்லவே கேட்டேன். ஆனால் வேதமே யில்லா இந்து மதத்திற் பிரவேசித்த உனக்கு உண்மைநெறி எங்ஙனந் தெரியப்போகின்றது? எட்டியுடன் சேர்ந்த இலவுந் தீப்பட்டதுபோல் இந்துக்களுடன் சேர்ந்த நீ நரகத்துக்கே யாளாகவேண்டும்" என்றான். அதற்குக் கபீர் என் வாயில் வந்தபடி பிதற்றுகிறீர்? நிருபமாகிய பரப்பிர்மமே ஆதிதெய்வமானாலும், அதிலிருந்து உண்டான பகவானாலேயே மானிடர் முதலான சமஸ்த லோகங்களும் உண்டாயிற்று. ஆனதால் ஆதியிலிருந்து சகலரும் திரிமூர்த்திகள் ரூபமான விக்கிரகங்களைப் பணிந்துகொண்டே வந்தார்கள். அதை மத்தியில் நிக்கிரகித்த இப்ராயீம் முதலானவர்களுக்குக் கொடிய ஆக்கினை கடவுளே கிடைக்கும்படியாய்ச் செய்தது அபத்தமோ? அன்றி ஆதியில் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவனால் உண்டாக்கப்பட்ட வேதங்களே மெய்யானது. அன்றி நடுவாந்தரத்திற்பிறந்த மஹம்மது என்னும் ஓர் மானிடனால் உண்டாக்கப்பட்ட வேதத்தை மெய்யென்று நம்பக்கூடுமா? இது தெரியாதா? நீ என்னுடன் வம்பு செய்யக்கூடுமா?" என்றார். காஜீ, நிருபமான கடவுள் நினைத்த மாத்திரத்தில் உண்டான இவ்வுலகத்தை ரூபமுள்ள பிர்மாவாற் செய்யப்பட்டதென்று உரைத்த உன் மூடத்தனத்தை எப்

படி தெளிவிப்பேன்? அன்றி எங்கள் சத்குருநாதனுகிய மஹம்மதுவுக்குக் கடவுள் உத்தாரப்படி தேவதூதர்களால் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட வாக்கியங்களே சத்தியவேதமாகும். அதிலுள்ள நுட்பார்த்தங்கள் உன்னைப்போன்ற உலுத்தர்களுக்குத் தெரியப்போகின்றதா?'' என்று நகைத்தான்.

கபீர் கடவுளுக்கு நினைப்பிருந்தால் மறப்புமுண்டே; இப்படி சங்கற்ப விகற்பமுள்ளவர்க்கு தேகமுமுண்டா யிருக்குமே; தேகத்துக்கு ஓர் ரூபமுண்டே; நிருபத்துக்கு ரூபமேது? நிர்ச்சங்கல்பத்துக்கு சங்கல்பமேது? நிர்விகற்பத்துக்கு விகற்பமேது? நிர்ச்சலனத்துக்குச் சலனமுள்ள தொழிலேது? சலனமில்லாமல் சகமுண்டாகுமா? ரூபமில்லாமல் நினைப்புண்டாகுமா? நீ சொல்வது ஆகாயத்தில் கப்பலோடுகிறதென்றும், அந்தரத்தில் மரங்களிருக்கிற தென்றும், வெளிக்குச் சலமுண் டென்றும், வளிக்கு ரூபமுண்டென்றும் சொல்வதுபோ லல்லவோ யிருக்கின்றது. அன்றி சங்கல்ப விகல்பமில்லா நிருவிகற்பராகிய கடவுளுக்கு ரூபமில்லாமலிருக்க தேவதூதர்களுக்கு வாக்கியங்களை எவ்விதமாய் எழுதிக்கொடுத்தார்? எள்ளுக்குள் எண்ணெய்போலவும் பாலுக்குள் வெண்ணெய்போலவும், எங்கும் பரிபூரணமாயிருக்கும் பரப்பிர்மம் எவ்விடத்தி லிருந்து தூதர்களுக்கு மஹம்மதிடம் போவென்று கட்டளையிட்டார்? மஹம்மது இருக்குமிடத்திற் பரப்பிர்மமில்லாமற் போச்சுதா? வடிவும் வாக்கு மில்லாதவர் கொண்டுபோவென்று எப்படி யறைந்தார்? ஆகாயத்திலிருந்து அனுப்பப் பூமியி லில்லாதவரோ? கடவுள் கருணையுடன் ஏற்படுத்திய வாக்கியங்களான வேதத்தில் ஜீவஹிம்சை செய்யும்படியான வாக்கியமிருக்குமோ? இவ்வாக்கியங்களிற் சிலதை இப்பிராயீம்பயம்பர் குமாரரில் ஒருவனுகிய இஸாக் என்பவன் தள்ளக்கூடுமோ? சத்தியவேதமல்லவென்று விள்ளக்கூடுமோ? துலுக்க வம்மிசத்துக்கு ஆதித்துணையான இப்பிராயீம்பயம்பர் என்பவர் பலவாறு விரித்து உரைத்தும் இஸாக் என்பவன் சொந்தக்குமாரனு யிருந்தும் பொய்வார்த்தைகளால் என்னை ஏமாற்றவேண்டாம் என்று தந்தையைப் பட்டணத்தைவிட்டு அகற்றக்கூடுமோ? ஓ காஜி! உலகத்தில் தங்கள் தங்கள் பேர் விளங்கும்பொருட்டு ஓர் மதத்தை ஏற்படுத்தி அதற்குத் தகுதியான வாக்கியங்களையெல்லாஞ் சேர்த்து வேதமென்று நாமமிட்டுத் தன்னைச் சகலருந் தொழும்படியாய் அதில் வரைந்து இதுவே சத்தியவேதமென்றும், இதுவே தேவ

னுடைய கட்டளையென்றும் உரைத்து மானிடர்களை எந்த வழி யாலும் நிற்காமல் கெடுத்தார்களன்றி மோக்ஷமார்க்கத்தைக் கற்பிக்கவில்லை.

இந்த மதபேதங்களால் மலமே விருத்தியாகின்றதே யல்லாமல் சம்மதமான சாந்தகுணம் பிறக்கப்போகிறதேயில்லை. மோக்ஷமடைபவன் மானிடனைத் தொழுவானேன்; தொழுது அழுவானேன்; ஜீவகாருண்ணியத்தை கைக்கொண்டு கடவுளை நோக்கத் தவஞ்செய்யாமற் கொலைபாதகத்துக்குட்பட்டு மாயையாற் பங்கப்பட்டு அதோகதிக்குஆளாகுங் காரியங்களைச்செய்தால் ஆண்டவனருளை யுகமுடிவிலும் அடைவதற்குக் கூடுமோ? என, காஜி சச்சிதானந்தக்கடவுளை விடுத்து மும்மூர்த்திகளைத் தியானிப்பது மூடமல்லவா? என, கபீர் மஹம்மது யென்னும் ஓர் மானிடனைப் பணிகிறதைவிட மும்மூர்த்திகளைப் பணிவது மூடமல்லவென, காஜி ரட்சகர்த்தனுகிய விஷ்ணு தானேவந்து ராவணனைக் கொல்லலாகாதோ? மானிடப் பிறப்பெடுக்குங் காரணமேதோ? என, கபீர் தேவர் மூவராற் சாகாவரம் பெற்றதற்காக மானிடனுய் அவதாரஞ்செய்ய நேரிட்டது என, காஜி ரட்சகன் சம்ஹாரஞ்செய்யக் கூடுமோவென, கபீர் ரட்சகனுகிய இராஜன் துஷ்டர்களை நிக்கிரகஞ் செய்கிறதைப்போல துஷ்டனுன இராக்கதனைக் கொல்ல நேரிட்டதென,

காஜி சிரேஷ்டமான இவ்வாக்கையின்மேன் மண்ணைக் குழைத்து அணிவது மடமையல்லவா? என, கபீர் அனித்தியமான இச்சரீரம் எத்தனை நாள் இருந்தாலும் மண்ணேயாய்ப் போகுமென்றும் இதை நம்பாதீர்களென்றும் உம்மைப்போலொத்தவர்க்கு அறிவுணர்த்து மடையாளமானது மடமையைத் தவிர்க்குமேயல்லாது மடமையைக் கொடுக்காது என, காஜி ஆனுலுங் கல்லைக்கும்பிடுவது அறிவீனமல்லவோ? என, கபீர் எங்கும் நிறைந்திருக்கும் பரப்பிரமம் கல்லிலுமிருக்கிருர்; இக்கடத்துள்ளு மிருக்கிருரென்றும் அபக்குவர்க்கு ரூபமுள்ள திரிமூர்த்திகளைப் புறம்பில் ஊனக்கண்ணுற் பார்த்துப் பணியவும், பக்குவர்க்கு நிரூபமாகிய பரப்பிர்மத்தை அகத்தில் ஞானசட்சுவாலறிந்து தொழவும், விதித்திருப்பது அறிவீனமல்ல. அசன் உசன் என்பவர்கள் செய்த அக்கிரமத்தைத் தேவர்கள் பொறுக்கமாட்டாமல் அவர்களைக் கண்டிக்கத் தேடுகையில், தடாகத்தில் மூழ்கியிறந்த அவர்களின் காங்களை வைத்துப் பூசிக்கும் மானிடர்களே அறிவீனர் என, காஜி உங்கள் வேதத்

தில் ஆதிமனிதன் யாரென்று உரைக்கின்றது? என, கபீர் பிர்மாவால் மனுவும், மனுவால் மானிடரும் உண்டாக்கப்பட்டார் என, காஜி அதற்கு திருஷ்டாந்தமேது? என, கபீர் மனுவாலுண்டானதால் மானிடரென்றும், மானிடர்க்குரைத்த நீதிகளை மனுநீதியென்றும் சொல்லப்படுகிறதே திருஷ்டாந்தம் என, காஜி கடவுளால் உண்டாக்கப்பட்ட ஆதாமே ஆதி மனுஷனன்றி மனுவல்லவென,

கபீர் கடவுளுக்கு ரூபமேயில்லையென்று உரைக்கும் நீ கடவுள் ஆதாமைச் சிருஷ்டித்தாரென்பது சாஸ்திர விரோதமாயிருக்கிறதன்றி அநேக சங்கைகட்கு மிடங்கொடுக்கிறது. பூதத்தாலுண்டாக்கப்பட்ட பாவையே ஆதாம்ரூபமென்றும், அவ்வோவியத்துக்குக் கடவுள் ஆவியை ஊதினரென்றும், ஆதாம் கடவுள் கட்டளையை மீறினரென்றும், பூதம் கடவுளுக்கு விரோதமா யிருக்கிறதென்றும், தன் கட்டளையைக் கடந்த ஆதாமை வானுலகத்திலிருந்து தள்ளிவிட்டா ரென்றும், கடவுள் வாக்கியத்துக்குப் பூதம் மாறுபட்டதென்றும் உரைக்குஞ் சொற்களெல்லாம் குற்றமாகவும், அபத்தமாகவுமே யிருக்கின்றது. எப்படியென்றால்? கடவுள் எந்தயிடத்தில் எந்த வுருவா யிருந்தார்? ஆவியை எப்படி ஊதினர்? எந்த வுலகத்திலிருந்து தள்ளினர்? எல்லா வல்லமையுள்ள கடவுளின் கட்டளையை மானிடன் தவிர்ந்ததென்ன? அற்பமான ஒருபூதம் கடவுளை எதிர்த்ததென்ன? அவருரைக்கு மாறுபட்டதென்ன? திரிகாலங்களையு முணர்ந்த கடவுள் பின் நடப்பதறியாமற் போனதென்ன? பூதத்தை அழிக்காமலிருந்த தென்ன? பூதத்தால் கெட்டவர்களுக்கெல்லாம் நரகத்தை யுண்டாக்கினதென்ன? நிரூபமாகிய கடவுள் எவ்வுலகிலிருக்கிறார்? மோக்ஷமென்பது எந்த லோகத்திலிருக்கின்றது? நரகம் எவ்வுலகிலிருக்கின்றது? என்று அநேக வினாக்களுக்கு இடமாயிருக்கின்றது? என, காஜி ஓ கபீர்! நீ பேசுவதெல்லாம் அகடவிகட வார்த்தைகளா யிருக்கின்றது. எப்படியெனின்? மோக்ஷமும் நரகமுமில்லையென்று உரைக்கலாமோ? என, கபீர் மறுஜென்மமெடுக்காமற் போவதே மோட்சம்; ஜென்மமெடுப்பதே நரகம் என, காஜி நகைத்து, ஓ கபீர்! கறந்தபால் முலையிற் பிரவேசிக்குமா? கடைந்த வெண்ணெய் மோரிற் புகுமா? கழிந்தநாள் பின்னும் வருமா? காய்ந்த இரும்பு உண்ட நீர் கக்குமா? இறந்து போய் பஞ்சபூதமயமாய்ப் போனபின் பிறக்கக்கூடுமா? என,

கபீர் க்ஷணசிருஷ்டி க்ஷணப்பிரளயம் தினசிருஷ்டி ஜீவப் பிரளயம் பிரமசிருஷ்டி பிரம்மப்பிரளயமென ஐந்திருக்க, நீர் ஒன்றுவது இல்லையென்று உரைக்கக்கூடுமோ? என, காஜி இந்த ஐந்தின் விபரமேது? என, கபீர் க்ஷணசிருஷ்டிப் பிரளயமாவது நினைத்தலும் மறைத்தலுமாம். தினசிருஷ்டிப் பிரளயமாவது ஜாக்ராவஸ்தையுஞ் சுழுத்தியுமாம். தேகசிருஷ்டிப் பிரளய மாவது ஜன்மித்தலும் மரித்தலுமாம். ஜீவசிருஷ்டிப் பிரளய மாவது தேகத்திற் பிரளயமாவது அண்டாண்டங்க ளுண்டாத லும் ஒடுங்குதலுமாமென, காஜி நீசொன்னதெல்லாஞ் சரியே; ஆனாலும் ஜீவன் மரித்தபின் ஜென்மித்தலென்பது மாத்திரங் கூடவேகூடாது என, கபீர் ஜீவனுக்கு ஜனனமரணமில்லை; தேகத்துக்கே ஜனன மரணமென்ன, காஜி மரித்ததேகம் பின் னுஞ் செனிக்குமாவென, கபீர் மரித்ததேகமே ஜெனிக்குமென் பது கூடாது; வினையின்படியே ஜீவர்களுக்கு சரீரமுண்டாகும் என, காஜி ஜீவர்கள் செய்த நற்றீககர்மப்படி நிறையமாவது மோக்ஷமாவது அடையவேண்டிய காரணமன்றி அடிக்கடி ஜென்மித்தலென்பது கூடாதென,

கபீர் மோக்ஷமடைந்தவர்ககள்தான் சுகத்திலிருக்கட்டும்; நர கத்தை யடைந்தவர்களுக்கு விமோசனமெப்போது? என, காஜி எப்போதுந் துன்பத்தையே நுகரவேண்டும் என, கபீர் சற்று தீங்குசெய்தார்க்கு என்னகெதியென, காஜி அவர்கட்கும் அக்கதி யேயென, கபீர் இப்படியுரைப்பது சாஸ்திர சித்தாந்தமா? உன் னுடைய யுக்தியோ? என, காஜி எங்கள் வேதத்திலிப்படியே யுரைக்கின்றதென, கபீர் நகைத்து இது நல்ல நியாயமா யிருக் கின்றது; சற்று வினைசெய்பவனுக்குத் தகுந்த தண்டனை கொடுத்து ஆட்கொள்ளாமல் எக்காலமும் நரகத்திற் றள்ளுவ தென்று உரைக்கலாமோ? ஓ காஜி! நான் சொல்லும் வார்த்தை யைக் கேளும். அதாவது தேகத்தையன்றி வேறு நரகமில்லை; தேகத்தையன்றி வேறுமுக்தியில்லை; நிச்சயமார்க்க மிதுவேயா மென, காஜி மரித்தபின் உற்பவிப்பதற்குக் காரணத்தைக் காட்டு வாயோ என; கபீர் உற்பவிக்கும்போதே குஷ்டவியாதி முத லான வியாதிகளுடன் பவமெடுப்பதே காரணமென, காஜி தாய் தந்தையின் சுக்ல சுரோணித குற்றத்தால் வந்த குறையேயன்றி முன்செய்வினை யென்பது கூடாதென,

கபீர் முன் யாதொரு தீங்குஞ்செய்யாச் சீவனுக்கு தாய் தந் தையரால் நூதனமாய் ஏன் இடர்வரும்? நோயாளிகள் கர்ப்பத்

திற் றங்கவேண்டிய காரணமேன்? ரணங்கள் நெருக்குண்ட அன்னை பிதாவுக்கு ஓர் பிணியுமில்லாப் பிள்ளை பிறப்பதே னென? காஜி இப்படி ஜனித்தல் ஜகதீஸ்வரனுடைய செய லென, கபீர் யாதொரு குற்றமுஞ் செய்யாக் குழவியின்மேற் பரமேசுவரனுடையஆக்கினை வந்த காரணமேது? என, காஜி இப்படி ஜெகதீஸ்வரன் செய்யாமற்போனால் ஜீவர்கள் அதிக பாவங்களைச் செய்வார்களென, கபீர் இப்படி ஒரு ஜீவனுக்கு இடர்தந்தால் பலஜீவர்கள் பாவஞ் செய்யாமலிருக்கிறார்களா? கருணாநிதியான கடவுள் ஓர் கிர்த்தியஞ் செய்வாராகில் அது பழுதாகுமா? அன்றி, குற்றமில்லாதவனைத் தண்டிக்கும் இராஜ னையே தூஷிப்பதற்கு இடமுண்டாயிருக்கின்றதேயென, காஜி எங்கள் வேதத்தில் அடிக்கடி ஜென்மிப்பதில்லை; கடைசி நாளில் சகலரையும் கடவுளானவர் எழுப்பிப் பாவிகளையெல் லாம் ஒருபக்கமும் புண்ணியவான்களை யெல்லாம் ஓர்பாலும் நிறுத்தி நரகமோக்ஷங் கொடுப்பாரென்று உரைக்கின்றதே யென, கபீர் மனிதனால் ஏற்படுத்திய புஸ்தகத்தில் இப்படியன்றி இனி எப்படித்தான் சொல்லும்? இப்படியாக அநேக கட்டுக் கதைகளின் புஸ்தகங்களிற் சொல்லியிருக்கின்றதுகளை மெய் யான வேதமென்றும்,நம்பி பிரஷ்டர்களானார்கள் என்று அறை ந்து நல்லது பாவிகளுக்கு நரகமும், புண்ணியவான்களுக்குச் சொர்க்கமும் என்று உரைக்கும் உங்கள் வேதத்தில் ஜன்மித்து ஐந்தாறு வயதில் மரிக்கும் குழவிகளுக்கு என்ன கெடுதியென்று உரைக்கின்றது? என, காஜி அவர்களுக்கு ஒன்றுமில்லையென,

கபீர் நரக சொர்க்கத்துக்கு உதவாச் சிருஷ்டி ஈஸ்வரன் செய்வாரோ? என, காஜி சகல ஜீவர்களுக்கும் தங்களுக்கு மரண முண்டென்று அறியவும் பயந்து நல்வழியில் நடக்கவும், அநித்திய வஸ்துக்களை அபேக்ஷிக்காமலிருக்கவும் செய்யுஞ் சிருஷ்டியென, கபீர் தனுசர் பிறக்கும்போதும் இருக்கும் போதும் இறக்கும்போதும் துன்பமாயிற்றே, முன்வினையே யில்லையெனின் பிறந்து மரிக்குங் குழவி இடையில் அநேகப் பிணிகளாற் றுன்பம் அடைந்து மரிக்குமாயின், கான்முளை யடைந்த துன்பதோஷம் யார்மேற் சுமத்துகிறது? என, காஜி இது ஈஸ்வரனுடைய லீலையாதலால் யார்மீதுஞ் சுமத்தக்கூடா தென, கபீர் அப்படியானால் நாமும் விளையாட்டாய் அநேகருக் குத் துன்பத்தைக் கொடுத்து லீலையென்று உரைப்போமென, காஜி குழந்தைகட்கு அபமிர்த்தியும், கொடிய வியாதியும்

வருவது எனெனின் தந்தை தாய் செய்கர்மம் சந்ததிக்கா மென்று உரைக்கக்கூடாதோ? என,

கபீர் முறுவல் காட்டித் தாய் தந்தை செய்கர்மம் சந்ததிக்கு உண்டாகுமாயின் பாபிகட்குப் புண்ணியவான் ஏன் உற்பவிக்கிறான்? புண்ணியவான்களுக்குத் துஷ்டன் ஏன் ஜன்மிக்கிறான்? பிரத்தியட்சப் பிரமாணமாய்த் தந்தை ஏவலாளனும், சுதன் தளகர்த்தனுமிருக்குங் காரணம் ஏன்? அவர்கள் செய்த கர்மம் அவரவர்களே அனுபவிக்கவேண்டும். அன்றி ஒருவர் செய்த கர்மதர்மம் ஒருவரை யடையாது. ஒருவனுக்கு சென்மித்த மைந்தர் நால்வரில் ஒருவன் ஜாரசோரனாகவும், ஒருவன் விவேகனாகவும், ஒருவன் மந்தபுத்தி யுடையவனாகவும், ஒருவன் பிணியாளனாகவுமிருக்குங் காரணம் ஏன்? ஒருவன் தனசம்பன்னனாகவும், ஒருவன் தரித்திரனாகவும், ஒருவன் பார்ப்பதற்கு அருவருப்புள்ள அங்கவீனனாகவும், ஒருவன் அழகுள்ளவனாகவும், ஒருவன் மாறுபட்டிருப்பதேன்? ஓ காஜி! அவரவர்கள் முன்செய் வினையின்படியே நடக்கின்றதன்றி ஈஸ்வரன்செய்யும் லீலையல்ல.

ஏகசொரூபனான கடவுளுக்கு ஒருபோதும் பட்சபாதமிராது, ஜீவர்கள் துன்பமடைதல் அவருடைய லீலையென்று உரைப்பது அவிவேகமேயாம். ஆதியில் பிர்மாவானவர் மனுவைச் சிருஷ்டித்து, அம்மனுவின் முன்னிலையில் மனுஷரை யுண்டாக்கி, மனுநீதிப்படி நடப்போர்க்கும் மறுஜென்மமில்லையென்று மற்றவர்களுக்கு மானிடஜென்மமுங் கிடைத்தல் அரிதென்று உரைத்த வாக்குப்படி சிலர் மனுநீதியை யனுசரித்துத் தேகாதிகள் அனித்தியமென்று அறிந்து நித்தியமான பொருளைத்தேடி உச்சிதமான தவத்தைநாடி அத்தபோபலத்தால் ஞானக்கண்ணைத் துலங்கி கரணங்களின் சேஷ்டையாற் கலங்கி, பிர்மானந்தத்தை ஆசித்து பெரியோர்களை நேசித்து அவர்கள் அருளால் சுகவாரிதியிலாழ்ந்து தொடர்பவச் சமுத்திரத்தைத் தாண்டி மோக்ஷமடைவார்கள்.

அநேகர் மனுநீதியை நிக்கிரகித்து, விஷயாதிபோகங்களை இச்சித்து, ராகத்துவேஷங்களாற் கட்டுப்பட்டு, ஜீவகாருண்ணிய முதலான நோன்புகளைப் பாதுகாக்காமல் விட்டு, அனித்திய மலபாண்ட தேகத்தை மெய்யென்று இறுமாந்து, அலக்கணுற்று ஆக்கையை வளர்க்க இதர ஜீவர்களை இம்சை செய்து, அப்பாவங்களாற் பீடிக்கப்பட்டு அபமிர்த்தியுவுக்கு ஆளாகி நால்வகை யோனியிற் ஜெனித்து, மாயாமோக சாக

ரத்தைக் கடந்து ஏறுவதற்கு ஓர் துறைகாணுமல் மயங்கித்தயங்கி மானிடயாக்கையும் பெறுவதற்கு அரிதாகி குறுக்கி யோனிகளில் உழன்று அலைந்து சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமதேவனுக்கும் இடர் கொடுத்தார்கள். முக்கியமான சத்தியவசனமாவது ஜீவர்கள் எதைக் கோருவார்களோ அதையே ஜகதீசுவரன் கொடுக்க ஆதியில் வாக்கையளித்தார். மனுஷ ஜென்மத்துக்கு உறுதியான மோட்சவாழ்வைக் கோரா மானிடர் அவிவேகத்தைக் குறித்து வாட்டமடைந்து அவித்தியா சம்பந்தமுள்ள ஜீவர்களின் இச்சையின்படி விஷயானந்த போகத்தையே விரும்பி யுழலும் மிருகாதி ஜென்மங்கள் எடுக்கும்படியாய்ச் செய்தார்.

ஜகதீஸ்வரனுடைய அருட்பிரசாதம் பெருமல் மாயா வாழ்க்கையிற் சிக்கிச் சொக்கி மலத்தை மணமென்று ஆசித்தது போல மாதராதிபோகங்களையே மேன்மேலும் அபேட்சித்து, மாயாந்தகாரக் குகையில் வீழ்ந்து, துக்கசாகரத்தி லாழ்ந்து, மரண ஜனனத்தளையாற் பிணிக்கப்பட்டார்களே யன்றி, ஆண்டவனுடைய பட்சபாதஞ் சற்றும் இல்லவேயில்லை. ஒரு தந்தைக்குப் பிறந்த பிள்ளைகளில் ஒருவனைச் சுமந்து செல்லவும், ஒருவனை ஊர்ந்துபோகவும் செய்யத் தந்தைக்கு மனம் வருமா? துஷ்டப்பிள்ளைகளைச் சிஷ்டை செய்து சிரேஷ்ட மைந்தர்களுக்கு இன்பமளிக்குந் தாதையைப்போலவே பரமேஸ்வரன் எவரெவர்கள் கர்மதர்மங்கள் எவ்வண்ணமா யிருக்கின்றனவோ அவ்வண்ணமான தேகாதிபோகங்களைக் கொடுக்கின்ருர். நிரேதுவாக ஜீவர்களுக்கு ஜனனமரணுதி துன்பங்களைக் கொடுப்பாரா? நன்ருய் யோசித்துப் பார்ப்பீர் என்று சாற்ற, காஜி தந்தை தாய் கூடும் வேளை எப்படியோ அப்படியே முடியுமென, கபீர் நல்ல வேளையிற் கூடும்போது உதாத்துள் தரிக்கவும் தீயவேளையிற் புணரும்போது தரிக்கவும் வினையே காரணமாகும்.

அது எப்படியென்பீரோ? நல்வினை முற்பிறப்பிற் செய்து இருப்பவன் நல்ல வேளையிலேயே தரிப்பான். தீவினை செய்து இருப்பவன் தீயவேளையிலேயே கர்ப்பத்திற் றரிப்பான். அல்லாமல் கர்மிகளுக்குப் பிறந்தவன் கர்மியாகவேயிருப்பான் எனின் இது தந்தை தாயின் குற்றமல்லவா? அப்படியிருக்க, மைந்தனைத் தண்டிப்பானேன்? அப்படி தண்டிக்கக் கூடாதாயின் இந்த மைந்தனைப்பெற்ற அன்னை அத்தனையுஞ் சிஷ்டைசெய்யக்கூடாது ஏதெனின்? அவர்களை யீன்ற தந்தைதாய்க் குற்றத்

தால் வந்தவர்களாதலால் அவர்களையும் கோபிக்கலாகாது. இறுதியில் அவர்களை யீன்ற மூதாதைகளையுந் தண்டிக்கக்கூடாமல் இருக்குந் தண்டனையே யில்லாமற்போய்விடும். இப்படி விவேகிகள் சங்கை செய்வாரோவென்று உரைத்து, ஓ காஜி! அவரவர்கள் முன்ஜென்மத்தில் செய்த நல்வினை தீவினையின் காரணத்தை தண்டிகையைச் சுமப்பவர்களையும், ஊர்ந்துச் செல்பவனையும், ராஜரீகஞ் செய்பவனையும், ஏவலாளர்களா யிருப்பவர்களையும், காட்சிப் பிரமாணமாய்க்கண்டு சந்தேகநிவர்த்தி செய்துக்கொள்ளும். அதுவுமன்றிப் பொதுவான கடவுளுக்கு இராஜன் செய்த நலமென்ன? மற்றவர்கள் செய்த கொடுமையென்ன? பட்சபாதமுள்ள ஈஸ்வரனுக்குப் பரிபூரணனென்றும் கருணாநிதியென்றும் சொல்லக்கூடுமோ? அகமுகமுள்ள ஞானிகட்கு அரூபமாகவும் பகிர்முகமுள்ள பக்தர்களுக்கு ரூபமாகவும் தோன்றுபவன் ஒருவனேயன்றி உபயரல்ல. ஆதலால் நீங்களும் ரூபமுள்ள பகவானை அகத்தியந் தொழுது அவன் ஆசியைப் பெறுவீர்களென, காஜி ரூபத்தைத் தொழுபவனுக்கு இரவுரவாதி நரகமென்றும் கடவுளுக்கு ரூபமுண்டு என்பவனை உடனே இரண்டு துண்டாக்க வேண்டுமென்றும் எங்கள் வேதத்திற் சொல்லியிருக்கின்றதேயென,

கபீர் இப்பிராயிம் பயம்பர் உற்பத்தியாகாமுன் இவ்வுலகில் உள்ள சமஸ்த மாந்தர்களும், மும்மூர்த்திகளின் சொரூபங்களைப் பணியவில்லையோ? என, காஜி அவிவேகத்தாற் பணிந்தார்கள். இப்ராயிம்பயம்பர் கடவுள் உத்தாரப்படி அவதரித்து அதைக் கண்டித்துக் கடவுளையே தியானிக்கும்படியாய்ச் செய்தாரென, கபீர் அந்த இப்பிராயிம் தந்தையானவர் விக்கிரங்களையே செய்து அதை விக்கிரயப்படுத்தி அவ்விக்கிரகங்களை அன்புடன் பூசிக்கும்படியாய்ப் போதித்துக்கொண் டிருந்தவர்க்குப் பிள்ளையாய்ப் பிறந்த இப்பிராமென்பவன் தந்தை மனம் நோக விக்கிரக பூசையை நிக்கிரகித்து அப்பட்டணத்தில் உள்ளோர்களால் அடிபட்டு வேறுதேசத்திற்கு ஓட்டமெடுத்து அத்தேசத்திற் சிறந்த ஓர் பட்டினத்தில் பிரவேசித்து தான் குருபரம்பரையில் உற்பவித்தவனுமிருந்தும், இராஜன் புத்திரி தனக்கும் புத்திரியென்று உரைக்கும் நீதியைத் துறந்து அந்நகருக்கு இறைவனுடைய மகளாகிய ஆஜராவென்பவளைக் கரவடமாய்க் கவர்ந்து, கள்வனாய் மறுதேசத்திற்கு ஓடி அப்பட்டினத்தரசன் புத்திரியான சாராவை மணந்து அவள்மீது இருக்கும் மோகத்

தால் அவள் சொற்படி பூரணகர்ப்பவதியாயிருக்கும் தன்னை நம்பிவந்த ஆஜாராவென்பவளைக் காட்டிற் கொண்டுபோய் விடுத்து, அப்பாவத்தாற் சூழப்பட்டு, பின்பு அவ்வாஜாரா இருக்குஞ் சவுக்கியத்தை யாசித்து சாராவுக்குச் செய்துக்கொடுத்த சத்தியத்தைக்கடந்து, ஆஜாராவைக்கூடி தலையும் முகமும் குறியும் மொட்டை யடிக்கப்பட்டு மேன்மைகெட்டு ஆஜாராவுக்குப் பிறந்த இஸ்மாயில் ஒருவழியாகவும், சாராவுக்குப் பிறந்த இஸாக் ஒரு மார்க்கத்திற் செல்லவும், பிரஷ்டத்வத்தையடைந்து இரண்டு மதங்களாகப் பிரிந்து நம்ருத்ராஜா முதலானவர்களால் துரத்தப்பட்டு நாட்டைவிட்டுக் காட்டையடைந்து தீவாந்தரங்களிற் சென்று, அங்கிருக்கும் மிருகத்துக்கிணையான கிராதகர்களுக்குக் குருக்களாகி மூக்கறுபட்டவன் பலர் மூக்கையும் அறுக்கத்துணிந்த கதைப்போல, அநேக மாந்தர்களைக் கெடுத்து, ஜீவகாருண்ணியத்தோ டிருப்பவர்களைத்தடுத்து, பாவம் பரவச்செய்து, யுக்திவார்த்தைகளால் புத்தகங்களைச் சேர்த்துக் குரானென்றும் சத்தியவேதமென்றும் பேரிட்டு,

இஸ்மாயில் இஸாக் என்னுமிருவரும் எங்கள் வேதமே சத்தியமென்றும், உங்கள் வேதம் அசத்தியமென்றுந் தர்க்கித்துக் குதர்க்க வார்த்தைகளாடி அம்மதத்தை நிலைப்படுத்துவதற்குத் தங்களால் ஆகாமல் மரிக்கும்போது தங்களை அண்டினவர்களுக்கு உபதேசித்து நரகத்தில் பிரவேசித்தார்கள். பின்பு அப்புத்தகங்கள் இரண்டையும் ஆதியிலிருந்து ஒருவிதமாகவேயிருக்கும் நீதியுள்ளோர் சமுத்திரத்தி லெறிந்துவிட அன்று முதல் அவர்களிலேயே தர்க்கம் விழுந்து, உங்கள் வேதம் சமுத்திரத்தில் எறியப்பட்டதென்றும், உங்கள் வேதமே சமுத்திரத்தில் மூழ்கிப்போயிற்றென்றும் குதர்க்கங்களாடி இந்துக்களால் நீக்கப்பட்ட நீச்சர் மிலேச்சர் என்னும் இருவரும் மறுபடி அவ்விந்துமதத்தில் பிரவேசிக்கக்கூடாமல் முன்மாதிரி மிருகங்களைப்போல் பாலைவனங்களில் அலைந்து திரிந்து இஸ்மாயிலைச் சார்ந்த நீச்சர் மாத்திரம் ஆஜாராயிருந்த இடத்தைமுக்கியஸ்தானமாக்கி மக்காவென்று பேரிட்டுஇறுதியில் உண்டான மகம்மதுவால் ஏற்படுத்தியபுத்தகத்தை வேதமென்றும், மகம்மதுவே குருவென்றும் நம்பி, இப்பிராயிமூக்கு உண்டான ஆக்கினைக்கு உட்பட்டார்கள். நீங்களும் அதுவே வழியானீர்கள். மற்ற இஸாக்கைச் சார்ந்தவளாகிய மிலேச்சர் நானே தெய்வ

மென்று அறைந்து கொடிய ஆக்கினைக்கு உட்பட்ட ஏசு வென்னும் ஓர் மானிடனைக் குருவென நம்பி, அவனுடைய சரித்திரங்களையே வேதமென்று உறுதிகொண்டு அலைகிறார்கள். இப்படி அலையவேண்டுங் காரணம் விக்கிரகத்தை நிக்கிரகித்த இப்பிராயிமாலால் வந்ததாம். நடுவாந்தரத்தில் வழிதப்பிப் பிசகினோர்க்கு மத்தியிலுண்டான புத்தகங்களும், வித்தையிலும் புத்தியிலும் சித்திவித்தையிலுஞ் சற்றுச் சிறந்தவர்களும், வேதங்களாகவும் குருக்களாகவும் இருக்கவேண்டியது முறைமையேயன்றி சற்றும் பிசகில்லை. ஏனெனில் மஹம்மதுவுக்கும் ஏசுவுக்கும் முன்னிருந்தவர்களுக்கெல்லாம் குரு யாரோ? வேதமேதோ? அதை உங்களால் அறியக்கூடியதுமல்ல. சொன்னால் நம்பத்தக்கதுமல்ல. முன்னமே குற்றவாளிகளென்று அகப்பட்டவர்கட்குப் போதிக்கவுங்கூடாது. கொலைஞனுக்குக் கொலை மறுத்தலைக் கூறினால் குற்றமாகவே யிருக்கும். அன்றி அனுசாரனுக்கு ஆசாரத்தையும், விபசாரிக்குக் கற்பின் மேன்மையும் விரித்துரைத்தால் கசப்பாகவே யிருப்பதன்றி போதிப்பவர்க்கு ஆயாசமேபிரயோசனமாகுமென்று உரைத்தார். அதைக்கேட்ட துலுக்கரெல்லாம் மிகவும் ஆக்கிரம குரோதர்களாய் கபீரை வெட்டு என்றும் குத்தென்றும் நெருங்கி வரக்கண்ட கபீர், ஓ துலுக்கரே! முன்பு பிரகலாதன் எங்கும் அரியே நிறைந்திருக்கிறார் என்று சொல்லக்கேட்ட இரணியன் இந்தத் தூணிலுமிருப்பானோவென்று அறைந்த அத்தூணிலிருந்து வெளிப்பட்ட பகவானலிறந்ததுபோல் உங்களுக்கும் நேரிடும்போலிருக்கிறதென்றார். துலுக்கர் ஏதோ அந்த அரியை அழைப்பியும் பார்ப்போம் என்று கற்களையும் கட்டைகளையும் ஏந்திக்கொண்டு நின்றார்கள்.

கபீர் காஜியைநோக்கி, "ஓ காஜி! இவர்களெல்லாம் உனக்குள் ஐக்யமானவர். ஆதலால் நீயொருவரே என்னருகில்வந்து, பரீட்சை செய்யவேண்டிய மனமுடையவரானல் பரிட்சித்துப் பாரும்; ஏதோ கைகொட்டித்தாரும்" என்று ஓர் துளபமணியைப் பிரயோகித்தார். அக்கினிச் சுவாலையாய் எறிந்துவரக் கண்ட துலுக்கரெல்லாம் மூலைக்கு ஒருவராய் ஓட்டமெடுத்து இனியிந்தத் துஷ்டனிருக்கு மிடத்தில் நாமிருக்கவே கூடாதெனத் தங்கடங்கள் வீடுகளைப் பிரித்துக்கொண்டு வேறிடம் போய்த் தமால் வீட்டைத் தனியாக்கிக் கபீர் மகா மந்திரவாதியெனத் தீர்மானித்து, கபீரைக் கண்டாற் பயந்து நயந்து

நடுங்கி ஒடுங்கி இருந்தார்கள். பின்பு கபீர் ஆனந்தமாய் ராம மந்திரத்தைத் தியானஞ் செய்துகொண்டு வீட்டைச் சூழ்ந்த நிலத்தில் துளபத்தோட்டமொன்று ஏற்படுத்தி நாள் கழிக்கத் தொடங்கினுர். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லலானுர்.

கபீர் துலுக்கமதத்தைக் கண்டித்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

## கபீர் கோரக்கரை வென்ற அத்தியாயம்



இவ்விதமாய்க் கபீர் சுவாசம் புறம் வருகையிலும், அகத்திற் செல்லுகையிலும், ராமநாமமென்னுந் தாரகமந்திரத்தை மனனஞ் செய்துக்கொண்டு ராமானந்த ஸ்வாமிகளின் பணிவிடைக் காளாவது என்றென்று வாட்டமுற்றிருக்குங் காலத்தில் மச்சேந்திரநாதருடைய மாணுக்கனுகிய கோரக்கநாதன் என்பவன் சத்திநாதர், சதேரகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர் என்னும் எண்மருடன் தானும் ஒரு சித்தனென்கிற பேர்பெற்று நவசித்தர்கள் என்னும் சூரியனுக்குமுன் நக்ஷத்திரங்களுக்கு இணையான தபசிகள் பிரகாசமடைவார்களோ வென்கிற அகமேலிட்டு, அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈஸத்துவம், வசித்துவமென்னும் அஷ்டசித்திகளையும் ஓர் விளையாடலாய் நினைத்து நீண்ட ஆயுளைப்படைத்து நாட்டிலுங் காட்டிலும் உலாவி அநேக ரிஷீஸ்வரர்களையெல்லாம் பங்கப்படுத்தித் தனக்குள் ஐக்கியமாக்கிக்கொண்டு காசியையடைந்து ராமானந்த ஸ்வாமிகளின் மேன்மையைக் கேள்விப்பட்டு மடத்தினருகிற் சென்று மடத்தின் விசாலத்தையும், அதுவிருக்கும் விலாசத்தையும் வேதகோஷ்டத்தையும் விஷ்ணு சங்கீர்த்தனங்களையுங் கேட்டு ஆச்சரிய மாச்சரியமுங்கொண்டு, மடத்தின் வாயிலினெதிரில் சூலத்தை நட்டு, அதின் நுனியில் வஸ்திரத்தை விரித்து, நிராதாரமான அவ்வஸ்திரத்தின்மேல் வீற்றிருந்து "அடா ராமானந்தா! ஆலையில்லாவூரில் இலுப்பைப்பூ சர்க்கரை என்பதுபோல் ஒன்றும் அறியா அந்தணர்களைச் சேர்த்துக்கொண்டு ஆசாரியனென்னும் பேர்பெற்று மடத்துக்குள் என்னசெய்கிருய்? உன்னுடைய தபோபலத்தை இப்போதே

காண்பித்தாலாயிற்று. இல்லாவிடின் நீயும் இம்மடமும் பஸ்பமாய்ப் போகச்செய்கிறேன் பார், கற்றறிமோழையாகிய நீயும் அநேகருக்கு ஆசாருனுயாமே; உன்னுடைய தேசிகத்தனத்தையும், நீ ஜெபிக்கும் மந்திரத்தின் கனத்தையும் அறிய நீயாவது உன் சிஷர்களாவது வெளிப்பட்டு என்னைப்போல சூலத்தின் மேல் இருந்துகொண்டு ஜெபஞ் செய்யவாருங்கள்; இல்லாவிடில் எமலோகத்தைச் சேருங்கள்" என்று மிகவும் ஆக்ரோஷத்துடன் அட்டகாசமிட்டுக்கொண்டு அனந்தமுறை இறைச்சலிட்டான். அப்படி இறைச்சலுடன் கூப்பிடுகிறதைக்கேட்ட ராமானந்த ஸ்வாமிகளின் ஏவலாளராகிய மறையோரும் மாணுக்கர்களும் அதிககோபதீப்தர்களாய் எரிந்து எரிந்து ஆடா! ஸ்வாமிகளைப்பேரிட்டு அழைப்பவன்? உன்னை இப்போதே எமலோக தரிசனத்துக்கு அனுப்புகிறோம் என்று அடங்காக் கோபத்தால் வீறிடும் யானையைப்போலவும், கர்ச்சிக்கும் சிங்கத்தைப்போலவும், புலியைப்போலவும் பராக்கிரமவார்த்தைகளாடிக்கொண்டு மடத்துள்ளிருந்து வெளிப்பட்டு சூலத்தின் மீதிருக்கும் கோரக்கநாதனைப் பார்த்து வேர்த்து பிரமித்து கம்பித்து அடங்கி ஒடுங்கி பயந்து நயந்து ஸ்வாமி! நீர் யாவர்? என்று வினவினர்கள். அதுகேட்ட கோரக்கன் முனிவுடன் "அடடா பிராமணப் பயல்களே! சாதுவென்று பேரெடுத்தவர்களுடன் வாதுசெய்து தோற்றவர்களைச் சிறைச்சாலையிலடைத்து வைக்குங் கோரப்பற்களையுடைய வியாக்கிரம பராக்ரம கோரக்க சித்தன்" என்று அறியீர்களோ? உங்கள் ஆவியை கொள்ளை கொள்ளும் எமனெனக் குறியீர்களோ? அந்த ராமானந்தனென்பவன் எங்கே ஒதுங்கிப் பதுங்கிக்கொண்டிருக்கின்றான்? அவனை என்முன் வரச்சொல்லுங்கள். ஓடாமற் சற்று நில்லுங்களெனத் தன் பெருங்குரலைத் திறந்து ஓசையுடன் அதட்டும்போது, அந்தணர் புலியைப்பார்த்து கிலியடைந்த பசுக்கூட்டத்தைப்போற் சிதறி அலக்கணுற்று ஓட்டமெடுத்து ராமானந்த ஸ்வாமிகளையடுத்து, பராக்கிரமங்களை விடுத்து, யாவரையும் வெளியிற்போகாமற்றடுத்து, "ஓ சுவாமி! கோரக்கனென்னும் இராக்கதன் வந்துவிட்டான். நமக்குத் துன்பத்தைத் தந்துவிட்டான்; இனி என்னசெய்யலாம் எவ்விடத்திற் பதுங்கலாம்" என்று மூலைவீடுகளைத்தேடினர்கள். அப்போது ராமானந்த ஸ்வாமிகள் கிடுகிடென நடுநடுங்கிக் கருடனைக்கண்ட சர்ப்பத்தைப்போலடங்கி அரிமாவைக்கண்ட யானையைப்போ லொடுங்கி, "அப்பப்பா

அந்தக் கோரக்கன் பொல்லாதவனாயிற்றே; நம்முடைய பெருமை இன்றுடன் அழிந்துபோயிற்றே" என்றார். பின் ஆதிவருணரை நோக்கி "ஓ விப்பிரர்களே! இப்போது நாம் செய்யும் உபாயம் என்ன? சாற்றுங்கள், என்னைக் காப்பாற்றுங்கள்" என்று வாயுலர்ந்து நாவு தடுமாறி மனந் திடுக்கிட்டுப் பீதிமேலிட்டு வாயில்வந்தபடி பிதற்றத் தொடங்கினார்.

அப்போது வேதியர், "ஓ ஸ்வாமி! தேவரீரே அச்சத்தால் இலச்சைவிட்டு கொச்சைமக்கள்போற் குளறிப் பேசும்போது நாங்கள் அவனை வெல்ல வல்லவர்களா? வெல்ல மேன்மையுள்ளவர்களா? இக்கணம் பின்மார்க்கமாய் அனைவரும் ஓட்டமெடுப்பதே மேன்மை. இல்லாவிட்டால் வருந் தீமை" என்று உரைத்தார்கள். அதற்கு ராமானந்தஸ்வாமிகள், "ஓ தொழு குலத்தோரே தபோபலத்தோரே! இத்தருணத்தில் உங்களுக்குள்ள திராணிகளை காட்டக்கூடாதோ? மந்திரோச்சாடனங்களால் மாட்டக்கூடாதோ? மாரண பேதத்தால் வாட்டக் கூடாதோ? கோரக்கனை இக்கணம் ஓட்டக்கூடாதோ" என்று வினவினார். அதற்குப் பார்ப்பார், "ஓ ஓ! சேனைக்கெல்லாந் தலைவனான உத்தரனென்பவன், வீட்டில் பெண்டுகளுக்குமுன் பராக்கிரமங்களைக் காட்டி யுத்தமுனையில் கௌரவருடைய ஆரவாரத்தைப் பார்த்து அச்சமுற்று ஓட்டமெடுக்க நினைத்ததுபோல நீர் இதுகாலவரையில் எனக்கு நிகரான ஆசிரியரில்லையென்று அனைவரையும் அவமதித்திருந்து அக்கோரக்கனுக்குப் பயந்து இங்குமங்குமாய் ஓடிப்பதுங்குகிறீர் வயிற்றைவளர்க்கவந்த எங்களைக்காட்டிக் கொடுக்கிறீர்! இனி யரைக்கணமும் இம்மடத்தில் இருக்கமாட்டோம்" என்று ஓடிப்போக எத்தனித்தார்கள்.

அப்போது ஸ்வாமிகள், "ஓ விப்பிரர்களே! நீங்களெல்லாம் மேலுக்குப்பக்தாளென்றுகாட்டி, நல்லோரியாருந் தங்காமலோட்டி, தவத்தில் வல்லவர்களெனப் பாராட்டி, இதுநாள் பரியந்தம் என்னைச் சீராட்டி, இப்போ வெளுத்த பற்களைக் காட்டி, வியாகுலத்தால் என்னைவாட்டி ஓட்டமெடுக்கவா நினைத்தீர்கள். யுத்தமுனையில் இராஜனை விடுத்து ஓடிப்போகும் இழிவான பேடிகளைப்போல என்னைக் காட்டிக்கொடுத்து ஓட்டமெடுப்பது நீதியா? பிரக்கியாதியா? இப்படி செய்தால் அனைவரும் நிந்தைசெய்யமாட்டார்களா? நகைக்கிடமாக்கி வாட்டார்களா? யுத்தமுனையிற் புறங்கொடுத்து ஓடுகிறதைப் பார்க்கிலும்

எதிர்த்து மரித்தல் புகழல்லவா? துன்பம் வருங்காலத்தில் துறவியாகிறதைவிட துன்பத்தையேனுகர்தல் தூய்மையல்லவா? ஓ எனக்குரிய அன்பர்களே! மிகவும் நண்பர்களே! 'சாக்ஷிக்காரன் காலில் விழுகிறதைவிட சண்டைக்காரனைச் சமாதானஞ் செய்துகொள்ளல் சள்ளையற்றதுபோல'' இந்தக்கோரக்கனை ஜெயிக்க வல்லமையில்லா நாம் அனைவரும் சரணுகதியாவோம், சரணமென்பவருக்கு மரணமில்லையென்று சாஸ்திரமும் முறையிடுகின்றதே; நீங்களறியாததுமல்லவே;

ஓ மனேநிடமில்லாச் சீஷர்களே! வேசிக்கு இணையான வேஷர்களே! ஓடிப்போதல் நன்மையல்ல நன்மையல்லவென்று மறுத்தார். அதைத் தீவளர்ப்போர் கேட்காமல் போமையா இம் மடத்துடன் நாங்களனைவோரும் பஸ்பமாய்ப் போகுங்காலம் நேரிட்டது. உமக்கென்ன கெட்டது. நீரும் எங்கள்மொழியைக் கடவாமல் ஓடிப்போகும் எங்களை மடக்காமல் கூடவே வந்துவிடும். இன்றேல் உமது ஆக்கை வெந்துவிடும். வீணுய் மரண காலம்வந்துவிடும். சமஸ்தமும் பகையாளிக்குத் தந்துவிடும் என்றுரைத்து இறைந்துக்கொண்டே புற்றினிலிருந்து புறப்படும் ஈசலைப்போல மடத்துட்பின்வழியாய்ப் புறப்பட்டு நாலுபக்கமுஞ் சிதறுண்டு ஓட்டமெடுத்துத் தனிமட மாக்கிவிட்டார்கள்.

அந்தணர்க்குள்ள அச்சத்தைக் காட்டிவிட்டார்கள். பின்பு ராமானந்தஸ்வாமிகள் பிரம்மாண்டமான மடத்தினிற்றனித்து இருக்க, வெறுவலுற்று, ஆஹா! ஆபத்துக்கு உதவாப் புத்திரனும், மித்திரனும், கஷ்டமறியாக் களத்திரமும், கலந்தவரும் பகையாளிகளெனத் தீர்மானிப்பதுபோலத் தன் மாணுக்கரையெண்ணி பல ஆலோசனைபண்ணி இனி கோரக்கநாதனை நண்ணி, பூசிப்போமென்று உன்னி மடத்தைச் சூழ்ந்து இருக்கும் மாந்தர்களைப் பார்த்து தேகமெல்லாம் வேர்த்து கரங்களைச் சேர்த்து கடவுளுக்குத் தேகாவியைத் தாரைவார்த்து, கர்த்தனே! காவெனத் தொழுது, கண்ணீர்பெருக அழுது எனக்கும் வராமா பழுது, யாருமில்லையா கழுது என்று அச்சப்பட்டுஉணர்வு கெட்டு துக்கம்மேலிட்டு கக்கசத்துக் குட்பட்டு கோரக்கனுக்குப் பயப்பட்டு பல பல எண்ணமிட்டுக்கொண்டு இருந்தார். அத் தருவாயில் கோரக்கர் வந்ததும், ராமானந்தஸ்வாமிகள் பயந்ததும், மாணுக்கரோடினதும், ஸ்வாமிகள் வாடினதும், பகவானை நாடினதும் பிரஜைகள் அங்குகூடினதுங் கேள்விப்பட்ட கபீர் பட்டுநூற் பந்துகள் கையுடன் ராமானந்த ஸ்வாமிகளைத்

தேடி காலடி பிட்டத்திற் படும்படியாயோடி ஸ்வாமிகளைநாடி கோரக்கனென்பவன் பேடி; நீர் ஏன் நைந்திர்வாடி; உமக்கு ஆயாசம் வரச்செய்யும் ஜீவர்களையும் தேவர்களையும் மூவர்களையும் மற்றியாவர்களையும் வெல்லுவேன்; எதிர்த்தாற் கொல்லுவேன் என்று ஆர்ப்பரித்து சிரித்து அந்தணரைத் தூஷித்து ஆரியரைப் பூஷித்து ஆதித்தனைப்போற் பிரகாசித்து கோரக்கன்மேற் துவேஷித்து தேசிகர் பாதங்களிற் பணிந்து திவ்விய வட்சிகளையணிந்து சற்றே கோபந்தணிந்து எழுந்து கரங்களைக் கூப்பிக்கொண்டு நின்று, "ஓ என்னுண்டவனே! ஆனந்தத்தாண்டவனே? ஏன் அழுகிறீர்? யாரைத்தொழுகிறீர்? இந்தக்கோரக்கனென்பவன் எமக்கு எம்மாத்திரம்? என்னைச்செயிக்க அவனப்பனாலு மாகாததாம். அடியேன் சொல்லும் வார்த்தை ஸ்திரம்; உமக்கு ஏன் இவ்வளவு உபத்திரம்; என்தலைமேற் கருணையுடன் வைப்பீர் உமதுகரம்; அவன் கழுத்தைக் கொய்யத் தாரக நாமமே அரம்; இப்பொழுதே கொய்து விடுகிறேன் அவன் சிரம்; உமதருளால் அடியேற்கிருக்கிறது அவ்வளவு உரம்; சிவன் நகைக்க எரிந்ததையா முப்புரம்; நீர் நினைத்தாற் சேர்வான் இவன் எமபுரம்; கோரக்கனை கொல்லச் சீக்கிரந்தாரும் வரம்; தேவரீரழுதால் போகாதோ நமது பரம்; காற்றினாற் சலிப்பதுமுண்டோ அம்பரம்" என்கிற வார்த்தைகளாடினர்.

அப்போது இராமானந்த ஸ்வாமிகள் "அடடா! நீயேன் இந்தவேளையில்வந்து தொந்தரவு செய்கிறாய்? அரம் பரம் சிரம் கரம் வரம் என்று உளறுகிறாய். கோரக்க னெம்மாத்திரமெனக் குளறுகிறாய். வெளிப்பட்டு ஏதேனும் வம்புசெய்யப் போகிறாய்? யானைக்குமுன் பூனை நிற்குமா? அரிமாவை யானை வெல்லுமா? செங்கோலுக்குமுன் சங்கீதஞ் செல்லுமா? புலியை புருவை கொல்லுமா? அந்தக் கோரக்கன் எரிந்து பொரிந்து முகங்கரிந்து கோபம் விரிந்து வந்திருக்கிறான். அவனை நானே சமாதானஞ் செய்யவேண்டும். எல்லோரு முய்யவேண்டும். நல்லதனத்தாற் பொல்லாங்கு நேரிடாது. வந்தனம் புரிவர் சந்ததம் வாழ்வார். சாந்தம் மேலான ஆபரணமாகும். உபாயத்தாலாகிற காரியம் பராக்கிரமத்தாலாகாது. சரணமென்பவர்க்கு மரணமேயில்லை. அபயமென்பவர் அபஜெயமடையார்கள். ஆதலால் இவ்விடத்தில் யாதொரு சந்தடிசெய்யாமல் உன்னிருப்பிடத்துக்குப் போ. ஏனெனின் எட்டியுடன் சேர்ந்த இலவுந்தீப்பட்டதுபோல் உன்னால் எனக்கும் இடர்வரும். மலை விழுங்குவோனுக்

கதவு ஓர் அப்பளம்போல் அஷ்டசித்தியில் மிகுந்த கோரக்கன் முன் நாம் ஓர் இடமேயாகும்.

நரி சந்தைக்குப் போனதுபோல நீ கோரக்கன் கண்முன் போகவேண்டாம்; கும்பிடத்தகுந்த குருவோடு வம்புசெய்யலாகாது. வந்தனஞ் செய்யத்தகுந்தவரை நிந்தைசெய்யப்போகாது. நீ கொடிய வம்புக்காரனாய் யிருக்கின்றாய். எறும்பு வீழ்ந்தாற் காயம்படாது. யானை வீழ்ந்தால் மிகவுமிடரும். இழிவுள்ளவர்க்கு ஈனமுமில்லை மானமுமில்லை. அதுபோல் நீ இழிவுக்கும் அழிவுக்கும் பயப்படாக் கடின நெஞ்சுடையவனாயிருக்கின்றாய். போர்புரியத் தென்புள்ளவனாயிருக்கிறாய். இதையறிந்தால் அக் கோரக்கன் மடத்துடன் பஸ்பமாக்கிவிடுவான். தன்கொடியை நடுவான். உன்வேலையைப் பார்த்துக்கொண்டு போ" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

அப்போது கபீர் ஸ்வாமிகளின் திருவடிகளிற் சிரசாஷ்டாங்கமாய் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து, "ஓ ஸ்வாமி! தங்களுக்குப் பிரதமசிஷ்யனாகிய நானிருக்கும்போது இந்தக் கோரக்கனைச் சொற்பமாயெண்ணாமல் சமானமாக நினைக்கலாமா? பணியப்போமோ? இன்னுஞ் சற்றுநேரத்தில் இக்காசியிலுள்ளோர் சிரிக்கவும், கோரக்கனுடைய வஸ்துக்களைப் பறிக்கவும், சகலரும் அவனுடன் வாதுசெய்து மரிக்கவும், அவனகந்தையை இல்லாமற்பிரிக்கவும், அவனுக்கையின்றோலையுரிக்கவும், அவன் திராணியை நாற்றிசையிலும் தவிர்க்கவும், எலும்புகளையெல்லாம் ஒருங்கே முறிக்கவும், பஸ்பமாய்ப்போக எரிக்கவும், தேவரீர் நாமதேயத்தைக் கேட்டால் அவன் நெஞ்சங்கரிக்கவும், அவனைத் துண்டந் துண்டமாய்த் தறிக்கவும் செய்யத் தங்கள் அடியேனிருக்கவும் தேவரீர் அவனை ஓர் அற்பமாகவுஞ் சொற்பமாகவுமெண்ணாமல் விற்பனசாலியென்று குப்புறவிழப் போகிறீர், வேண்டாம் வேண்டாம், அடியேன் வார்த்தை சத்தியமென்று நம்பும். என்னால் வாராது ஓர் வம்பும், என்று அடிகளினடிகளைத் தழுவிக் கண்ணீராற் கழுவி, ஓ எனதையனே! மிகவுந் தூய்யனே! அழிவில்லாமெய்யனே! அழகான கையனே! எனத் தோத்திரம் புரிந்தான். அப்போது இராமானந்த ஸ்வாமிகள் கடுங்கோபமடைந்து துன்பம் மேலிட்டிடைந்து, "அடா என்னைக் கெடுக்கவந்த துடுக்கப்பயலே! நீ யிவ்வேளையில் எங்கிருந்து வந்தாய்? எனக்கு இடரேன் தந்தாய்? கோரக்கனுக்கிருக்குஞ் சாமார்த்தியத்தில் ஆயிரத்தில் ஓர்பங்கு இவ்

வுலகில் யார்க்கு மில்லவேயில்லை. கேளடா என் சொல்லை. வந்ததே தொல்லை. உனை வேண்டிக்கொள்ளவில்லை. நீயெனக்கு உகந்தவனேயல்லை. உன் தலைமேற் போடட்டுமா கல்லை. உடைக்கிறேன் பார் உன்பல்லை. நீ சும்மாப்போகிறவனாகக் காணவில்லை. குருடனாற் காக்கக்கூடுமோ கொல்லை” என்று கடுகடுத்துப் பேசினார். அதையுங் கேட்காத கபீரைப் பார்த்து கரங்களைச் சேர்த்து அட அப்பா! உனக்கு வந்தனமாவது செய்கிறேன். இவ்விடம்விட்டுப் பெயர்ந்துவிடு. உன்னிருப்பிடத்தைச் சேர். வீணாய் என்னுடன் சண்டைசெய்யாதே. கழுத்தைக் கொய்யாதே. அந்தக் கோரக்கசித்தன் அயோனி சம்பந்தன், ஈசனோடு எதிர்த்தவன்; நவசித்தர்களிலும் மேலானவன்; அஷ்டசித்திகளிலுந் தேர்ந்தவன் என்று உரைத்தார்.

அப்போது கபீர் இராமானந்தஸ்வாமிகளைச் சூழ்ந்து பல தரம் தாழ்ந்து பாதங்களின்மேல் வீழ்ந்து கோரக்கனைத் துக்கஸாகரத்தி லாழ்ந்துபோகச் செய்கிறேன், இப்போதே கண்டங்கண்டமாய்க் கொய்கிறேன் என்று வெளிப்பட்டு ஜனநெருக்கத்தாலலைபட்டு கோரக்கனருகே சென்று எதிர்த்து நின்று. “அடா கோரக்கா? உன்னுடைய காரடி வித்தைகளெல்லாம் எனது சத்குருநாதனாகிய இராமானந்த ஸ்வாமிகளின் முன் செல்லாது. சிம்மத்தை யானை வெல்லாது. நீ வந்தவேளை பொல்லாது. சீக்கிரம் ஓடிப்போ நில்லாது. உன்னுடைய சித்துவித்தைகளைக் காட்டவாவந்தாய். வீண் சம்பத்தை நீட்டவாவந்தாய்? யாரை இங்கே ஆட்டவந்தாய்? கலகமாமூட்டவந்தாய்? நீயென்ன? உன்திராணியென்ன? என்னையறியாயோ? உன்னை வெல்பவனெனக் குறியாயோ? என்று உரைத்தார். அப்போது கோரக்கன் ஆரடா! அவன் பினத்துகிறவன்; தபோநிதிகளுக்கெல்லாம் அதிபதியான கோரக்கனை யறிவாயோ? என்னை யெதிர்த்தும் இவ்வுலகில் உயிருடனுருவாயோ? முகத்தைக்காட்டாமல் ஒளிந்து பேசுவானேன்; பேசி யேசுவானேன்; சீக்கிரம் என்முன் வருகிறாயா? சாபம் பெறுகிறாயா? என்று இரைச்சலிட்டுப் பேசினான்,

அப்படி பேசும் கோரக்கனைக் கபீர் நோக்கி, “அடா மூடா! குடிகேடா! நீ என்னெதிரில் வாடா? நீ எனக்கொரு சோடா? நான் இராமானந்த ஸ்வாமிகளின் சீஷனாக்கும்; உன்னைப் போன்ற மூடர்களைக் கீழாக்கும். எதிர்த்துப் பேசுவோரைப் பாழாக்கும், சிதலைப்போலுன்னித் தேய்க்கும்; இவ்வுலகிலில்லா

மல் நீக்கும்; எமலோகத்திற் சேர்க்கும்; தபசிகளின் றுயரத்தைத் தீர்க்கும்; இராமானந்த ஸ்வாமிகட்குக் கரங்களைச் சேர்க்கும்; உன்னை யோர் கொசுவாய்ப் பார்க்கும்; அபயமென்றவரைக் கார்க்கும் கபீரென்பவனே நான்; பினத்துகிறுய் ஏன்?" என்று உரைத்தார். அப்படி உரைத்தமொழிகள் நாராசங்களைப் போற் செவியிற் புகுந்தமாத்திரத்தில் கோரக்கன் கோபதீப்தனுயெரிந்துவிழுந்து, உதட்டைமடித்துப் பற்களை நறநறவெனக் கடித்து ஈனவார்த்தைகள் படித்து இக்காசியைப் பஸ்பமாயெரித்து விடுகிறேனென்று ஆர்ப்பரித்தான். அப்போது, பிரஜைகளெல்லாம் கபீர்மேலெரிந்து விழுந்து, "அடா கபீர்! தான் கெட்ட குரங்கு வனத்தையெல்லாங் கெடுத்ததுபோல நீ நாசமாவதன்றி இக்காசிதேசத்தை நாசமாக்கவா யோசித்தாய். ஒளிந்து பேசுவானேன்; கரங்களைவீசுவானேன்; எதிரில் நின்று கற்ற கல்வியைக் காட்டடா" என்று தலைமேற்குட்டி அதட்டிக் கோரக்கநாதனுக்கெதிரில் நிறுத்தி, இவன்தான் உம்முடன் அதிகப் பிரசங்கமாய்ப் பேசினவனெனக் காட்டினுர்கள். உடனே கோரக்கன், "அடா நீதானு செய்தாய் இவ்வளவு குறும்பு? சற்றே என் பக்கமாய்த் திரும்பு; நீயெனக்கோர் துரும்பு; நசுக்கச் சிறிய யெறும்பு; மெல்லுங் கரும்பு; பறக்குந் துரும்பு; மல்லிகையி னரும்பு; நீயாவாயா எனக்கு இணையான யிரும்பு என்றரற்றினுன்.

அதற்குக் கபீர், "அடா துன்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! சாந்தர்க ளியாருஞ் சேர்க்கா! அருட்கண்ணுற் பார்க்கா! அஞ்ஞானத்தைத் தீர்க்காது அகங்காரத்தைப் போக்காது எப்படியானுய் சாது? சீக்கிரமாக ஓது? யாருடன் செய்யவந்தாய் வாது? என்பால் நடக்காது உன்சூது? இப்படி செய்தல் உனக்குத் தீது? நீ யறிவில்லாமாது? ராமானந்த ஸ்வாமிகளை யனுப்பவந்ததூது; உன்னைக்கொண்டு போகிறேன் எமலோகத்துக்கு இப்போது; உனைக் கொல்வதாற் றப்பேது; இனி நீ தப்பிப்போகும் வகையேது; சூலத்தால் மோதினுலும் மோது; ஒன்றும் உன்னுலாகாது; இவ்வளவு அகங்காரமாகாது; ராமானந்த ஸ்வாமிகள் சாபம் வீணுய்ப்போகாது; இனி நீ தப்புவதில்லை சாகாது" என்று அரைந்தார். அதைக்கேட்ட ராமானந்த ஸ்வாமிகள் "அடா துலுக்கப்பயலே! நான் எப்போதடா சாபமிட்டேன்? வீணுய்க் கோரக்கநாதருக்குக் கோபமூட்டுகிறுய்; சகலரையும் வாட்டுகிறுய்; அறிவீனத்தைக் காட்டுகிறுய்;

அடிக்கடி கைகளை நீட்டுகிறாய்" என்று உரைத்துக்கொண்டே வெளிப்பட்டுக் கோரக்கநாதருக்குத் தெண்டனிடப்போயினர்.

அப்போது கபீர், "ஓ ஸ்வாமி! எனக்கு மாணுக்கனுகிய இந்தக் கோரக்கனுக்கு நீர் வந்தனஞ் செய்யக்கூடுமா?" என்று மறுத்தார். அதற்கு ராமானந்த ஸ்வாமிகள் மிகவும் முனிவு கொண்டு கபீரை எட்டியுதைத்து, "ஐயோ பாவி! வீணுய்க் கலகம்மூட்ட நினைத்தாயே; வந்தனம் புரிகிறதைத் தடுத்தாயே; என்னைக் கெடுத்தாயே; ஜலந்தொடுத்தாயே" என்று நவின்றார். அப்போது கபீர் ராமானந்தஸ்வாமிகளின் திருவடிகளில் வந்தனஞ்செய்து கோரக்கனிருக்கும் சூலத்திலறைந்து கீழ்விழும்படியாய்ச் செய்து தன் கையிலிருக்கும் பட்டுநூற்பந்தின்மேல் நுனியைப் பூமியிற் றுங்கவைத்துப் பந்தை ஆகாயத்தி லெறிந்து ஜே ராமானந்த சுவாமியென்று கீழ்மேலாதாரமில்லா நூல்வழியாய் யேறி ஆகாயத்திற் சென்று நூலின் முனைமேல் நின்று, "அடா கோரக்கா! கீழே என்ன செய்கிறாய்? யாரை வைகிறாய்? எந்த ஏழையின் தலையைக் கொய்கிறாய்? இப்போதே என்னால் நைகிறாய்? என்னை வெல்ல உனக்குத் திராணி இருக்குமாயின் எனக்கு நேரில்வந்து உட்காரும்; என்னைச் சோதித்துப்பாரும்; வாதித்துப்பாரும்; ஏதோ கைகொட்டித்தாரும்; சீக்கிரமாக வாரும்; எனக்குக் கோபம்மீறும்; உன்பிராணன் எமனுலகைச் சேரும்; ராமானந்த ஸ்வாமிகளின் ஆசீர்வாதப் பலனைப்பாரும்; அவரடிகளில் உனது தலையைச்சேரும்; என்னவரம்வேண்டுமோ கோரும்; இல்லாவிடில் இடர்வந்து நேரும்; இப்போதே எல்லாஞ் செய்வார் தாறுமாறும்; உன்சமர்த்தைக் காட்டினது போதும்; உனக்கு உதவியாய் வருபவரில்லை யாரும், ஸ்வாமிகளன்றி யாருமில்லை காப்பாரும்" என்று சொல்லினர்.

அதைக் கேட்ட கோரக்கன் தனக்கு அவ்வளவு சக்தியிருந்தும் அஷ்டசித்திகள் தெரிந்தும், கபீர்செய்த ஆச்சரியத்தைக் கண்டும் ஆச்சரியங்கொண்டு வெட்கி சுட்கி வேறுவிதத்தால் இக்கபீரை வெல்லவேண்டுமென்று யோசித்து, "ஓ கபீர்! ஆகாயத்திற் றனித்துப் பிரசங்கஞ்செய்தால் தோற்பு கெலிப்பு யாரறியப் போகிறார்கள்? கீழேவந்து உன் சமர்த்தைக் காட்டு" என்று உரைத்தான். அதற்குக் கபீர் மேல்வருவதற்குச் சக்தியில்லாமல் கீழே வரச்சொல்கின்றாயோ? நல்லது அப்படியேயாகட்டுமென்று இறங்கிவந்து ஸ்வாமிகட்கு வந்தனந்தந்து அஞ்சலி

யஸ்தனுய் நிற்க, கோரக்கன் "அடா கபீர்! என்னை வெல்லு தற்கு உன்னுற் கூடுமோ? என்று ராமானந்த ஸ்வாமிகளின் ரூப மெடுத்து நின்ருன். அதையறிந்த சகலருந் திடுக்கிட்டு இதேது இரண்டு ராமானந்த ஸ்வாமிகள் இருக்கின்ருர்? என்று அதிசய மாய்ப் பார்த்தார்கள். அப்போது ராமானந்த ஸ்வாமிகள் பய வாழியிலாழ்ந்து இந்தக் கோரக்கன் என்ன விபரீதஞ் செய்கி ருனே? இன்று காசி என்னென்ன துன்பப்படப்போகின்றதோ? இவனை வெல்லச் சிறுவனுகிய கபீராலாகுமா? ஆகாதே. நாம் இன்ருேடு நசித்துப் போகும்படியாய் நேரிட்டதே; இனி என்ன செய்வேன்? ஓ கர்த்தனே! ஓ பகவானே! இக்கோரக்கனை வெல் லும்படியான வலிமையை இக்கபீருக்கு அளித்து என்னையும் இக்காசியையும் இரட்சியும் ஸ்வாமியென்று தோத்திரஞ் செய் துக்கொண் டிருந்தார். அப்போது கபீருக்கு அளவற்ற தைரிய மும் வலிமையும் முன்விட எண்மடங்கு அதிகப்பட்டு சற்குருநாத னுக்குத் தெண்டனிட்டு ராமானந்த ஸ்வாமிகளைப்போல ரூப மெடுத்து நிற்கும் கோரக்கனை நோக்கி, "அடா கோரக்கா! என் னுடைய உருவைச் சற்றேபார்?" என்று மச்சேந்தாநாத ரூப மெடுத்து நின்ருர். கோரக்கன், அடா கபீர்! நீதொழுந் தெய்வ மாகிய விஷ்ணுவே நானுயிருக்க, என்னை உன்னுல் வெல்லக் கூடாதென்று பகவானுருவுடன் நின்று உன்னையும் உன் ஆசா னையும் இச்சக்கரத்தால் துண்டந் துண்டமாய்க் கண்டித்து விடு கிறேன்" என்று ஆர்ப்பரித்து அட்டகாசஞ்செய்தார். அதற்குக் கபீர்; அடா கோரக்கா! உன்மாயாவித்தைகளைக் காட்டாதே?" என்று அரனுருவாய் நீயேந்தும் ருத்திரனே நானென்றறி என்று உற்றுநோக்கி, "இப்பாசுபதாஸ்திரத்தால் உன்னைக் கண் டங்கண்டமாய்த் துண்டித்து விடுகிறேன். என்னண்டையில் வா" என்று அறைந்தார். அப்போது கோரக்கன் சிங்கரூபமாய்க் கர்ச் சிக்கையில், கபீர் யாளிரூபமாய்ச் சிங்கத்தினருகிற் செல்லக் கோரக்கன் அக்கினிச்சுவாலையை வீசி யாரும் அருகில் நிற்க வொட்டாமல் நாலுதிக்கும் திகுதிகுவென்று எரிக்கக்கபீர் மேக ரூபமாய் யானைத் துதிக்கைபோல் அக்கினியைத் தலைபெடுக்க வொட்டாமல் அவித்து கோடி சூரியரைப்போற் பிரகாசித்து கோரக்கனை சூழ்ந்துக்கொண்டு கிரணங்களால் வாட்டினுர்.

அப்போது கோரக்கன் தன்னை நீக்கக்கூடாமல் பாதவித்து, "ஓ ராமானந்தஸ்வாமி! உமக்கு அபயம் அபயம்" என்று முறை யிட்டான். அதைக்கேட்ட பிரஜைகளும் இராமானந்த ஸ்வாமி

களும் ஓ ஓ! கபீர் முறையிடுகிருனெனத் தீர்மானித்து இனி இக் காசி தேசம் பஸ்பமாகும் காலம் நேரிட்டதெனத் தத்தளிக்கும் போது, கபீர் நானே ஜெயித்தேன் ஜெயித்தேன் என்று சுவாலை யைக் குறைத்து, "அடா கோரக்கா! இப்போது என்ன உரைக் கின்ருயடா?" என்று வினவினர். கோரக்கனென்பவன் அயர்ந்து ராமானந்த ஸ்வாமிகளின் அருகிற்சென்று என்னைக் காப்பாற்றுமையாவென்று வணங்க, கபீர் தன் சுயரூபத்துடன் தேசிகாருகிற்போய் சிரசாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டெ ழுந்து, "ஓ ஸ்வாமி! தேவரீர் கட்டளையிட்டால் இக்கணம் இக் கோரக்கனை பஸ்பமா யெரித்துவிடுகிறேன்" என்று சாற்றினர். கோரக்கன் மடத்துட் பிரவேசித்து என்னை வேறுவிதத்தில் வென்ருலொழிய ஜெயம் உன்னதல்லவென்று நவின்ருன். கபீர் இனி எவ்வித தர்க்கஞ் செய்யலாம்? என்று அறைந்தார். அப் போது ராமானந்த சுவாமிகள் கபீரைக்கிட்டி இருகரங்களாலும் கட்டி யணைத்துக்கொண்டு சுகஜீவியாய் வாழக்கடவாயென்று விண்டு எங்களனைவோரையுங்காத்து இரட்சித்தற்கு என்ன கைம் மாறு செய்யப்போகிருேம்? எனப் புகழ்ந்து குருவை நம்பின பெரியோர்கட்கு அருமையான காரியமு மிருக்கின்றதா? உனது அரிதான தவத்தை யறியாமல், கோரக்கனை வெல்லுவாயென்று குறியாமல், துன்பத்திலிருந்து பிரியாமல், அகோதெரியாமல் இடர்வாரியி லமிழ்ந்திருந்தேன் என்று பலபல வார்த்தைக ளாடினர்.

அப்போது காசிதேசத்திலுள்ள சகலரும் கபீர் செய்தது விந்தை விந்தையென்று அறைந்து, ஜே ஜே! கபீர் கபீர்! என் றிசைந்து, புஷ்பங்களைச் சொரிந்து, மிகவும் பரிந்து பலவிதங் களாய்க் கொண்டாடி ஆனந்தமான கீர்த்தனங்களைப் பாடி கோரக்கனைத் திட்டவும், பலருஞ் சூழ்ந்து அதட்டவும் தொடங்கினர்கள். அப்போது ராமானந்தஸ்வாமிகள் அனை வரையும் விலக்கி இருவரையும் மடத்துட் கொண்டுபோய், "ஓ கோரக்க நாதரே! மிகவும் வினேதரே! இந்தக் கபீர் என் சொந்த மாணுக்கனுகும்; உம்மால் இவனை வெல்லக்கூடுமானல் எவ்விஷயத்திலுந் தர்க்கஞ் செய்யலாம்" எனத் திருவாய்மலர்ந் தருளினர். கோரக்கன் கபீரை நோக்கி, உனக்கு வயது என்ன? என்ருன். கபீர் அநேகங்கோடி பிர்மதேவர்களும், விஷ்ணுக் களும், ருத்திரர்களும் என் முன் இறந்துவிட்டார்கள். ஆதலால் என் ஆயுட்பிரமாணத்தை உன்னுல் அறியக்கூடுமோ? என்ருர்.

கோரக்கன் அநேகந்தரம் இக்காசிக்கு வந்தேன். நீ எங்கு இருந்தாய்? என்றான். கபீர் உன்னை நீயே யறியாமல் மறதியாயிருக்க, என் நீ அறியக்கூடுமோ? சத்யக்ஞானனந்த சொரூபமாகிய பரமாத்மாவே நானாகும். இம்மாட்சியான சூட்சுமமறியா நீ தாட்சியடையாமல் மோட்சமடைவாயோ? அன்றி இம்மலவுடலை நானென்று இறுமாந்து அநேகநாள் வைத்திருப்பதால் பெரியவனானையோ? என்றார். கோரக்கன் என்றும் இவ்வாக்கை அழியாமல் வைத்திருக்கும் வித்தையே பிரமவித்தை; மற்ற வித்தைகளெல்லாஞ் சொத்தையும் அவித்தையுமல்லவோ? ஆதலால் இச்சரீரத்தை எத்தனை நாளாய்ச் சித்திசெய்து வைத்திருக்கின்றாய்? என்றான். கபீர் நகைத்து, பிறந்தவர்க்கே இறந்து போந்தன்மையுண்டு. பிறக்காதவர்கள் இறத்தலுண்டோ? எக்காலத்திலும் ஜன்மமில்லாத எனக்கு மரணமேது? மரணமில்லாத என்க்கு உற்பவமேது? இம்மொழியின் இரகசியத்தை அறிந்தவர்களுக்கே பிரமவித்தை தெரியும். அல்லாது மற்றவர்களால் உணர்தற்கு அது அரிது என்றார். கோரக்கன் ஆக்கையை அழியாமல் வைத்திருப்பதே பிரமவித்தை யல்லாமல் வேறுவித்தை பிரமவித்தைக ளாகமாட்டாது. அன்றி பிரத்தியட்சமாய் உற்பவித்திருக்கும் நீ ஜென்மிக்கவில்லை யென்பது அபத்தமல்லவோ? என்றான்.

கபீர் பிர்ம்மத்தை யுணர்தலே பிரமவித்தையெனச் சொல்லப்படும். காயத்தைக் காத்தலே அவித்தையென்று உரைக்கப்படும். பிரம்மமாத்திரமாயிருப்பவனுக்கு சராமரணந் திரிகாலங்களிலுமில்லை. இதை அஞ்ஞானிகளால் அறியக்கூடியதல்ல என்றார். கோரக்கன் யோகதாரணையால் இக்காயசித்திசெய்து நெடுநாள் பிரமநிஷ்டாசாதனஞ் செய்தாலல்லவோ பிரமமாகலாம். அநித்தியதேகத்தால் மோட்சசாதனஞ் செய்யக்கூடுமோ? பிர்மமாகக்கூடுமோ? வாசாக்ஞானத்தால் நான் பிர்மமென்று அறைவதால் பிர்மம் இவனாய்ப்போவானோ? சிறந்த பிர்மக்ஞானிகளாற் சித்திகளைக் காட்டக்கூடுமோ? என்றான். கபீர் மலவுடல் முக்காலங்களிலும் அநித்தியமேயாம், பிர்மம் எப்போதும் நித்தியமேயாம். தேகம் மூன்றுகாலங்களிலுந் தானல்லவேயாம். பிர்மந்திரிகாலங்களிலுந் தானேயாம். தேகாதிகளைத் தானெனப் பிரமித்தல் மாயாசம்பந்தமாகும். பரப்பிர்மமே தானெனத் தெளிதல் பிர்மானந்தமாகும். பரப்பிர்மத்தை நோக்கித் தவஞ்செய்வோர்க்கே அநேக சித்திகள் விளங்குமாயின்

பிர்மமே தானுயிருப்பவர்கள்பால் சித்திகள் உண்டாகமற் போமா? ஆனல் அகமமதையற்றவர்கள் ஒரு வல்லமையுங் காட்டமார்கள். அவர்கள் அகமுகப்பட்டு அனந்தமாத்திரமா யிருந்தாலும் அவர்கள் அறியாமலே அநேக சித்திகள் விளங்கும். இதை ஒருவரால் வகுத்து உரைக்கக்கூடியதோ? என்றார். கோரக்கன் யோகதாரணையின்றி பிர்மஞானியாதல் வெகு துர்லபம்; பிர்மமாவது இலேசானதோ? என்றன்.

கபீர் குருமுகமானவன்றே பிர்மமென்று உணர்ந்துகொண்டு மௌனமாய் இருத்தலே பிர்மமாயிருக்கும் வகையன்றி வேறு சாதனை செய்யக் காரணமில்லை என்றார். கோரக்கன் குருமுகத்தால் தான்பிர்மமென்று உபதேசஞ் செய்துக்கொண்டதால் பிர்மமாய்ப் போவானே? என்றன். கபீர் குருமுகமாகா முன்னும் பிரமமேயாம்; ஆனபின்னும் பிர்மமேயாம். இத்தேகமிருந்தும் பிரேதமேயாம். மரித்தும் பிரேதமேயாம். எங்ஙனமெனின்: பூமியை வெட்டுதற்குமுன்னும் ஆகாயமிருந்தது. வெட்டினபின்னும் ஆகாயமே யிருந்தது. அன்றி அகழ்ந்தபின் ககனமுண்டாயிற்று என்பார் உண்டா? அன்றி பாத்திரம் உடையாம லிருக்கும்போதும் மண்ணேயாம். நொறுங்கினபின்னும் மண்ணேயாம். இதை ஒருவர் சொல்லவேண்டுமோ? பிரம சொரூபமான தன்னை இதுவென்று அறிவித்தலே அனுக்கிரகமாகும். பிரமமே நானென்பது எதாஸ்துவென்று உணர்ந்து கொள்ளுதலே பிரமஞானமாகும். இதில் சந்தேகஞ்சற்றுமில்லை என்றார். கோரக்கன் தான் பிர்மமென்று அறிந்துகொள்வதாற் பிரயோசனமேது? என்றார். கபீர் தான் பிர்மமென்று அறிந்து கொள்வதால் மரணமுண்டு என்கிற காலபயமும், சமுசாரசாகரத்தால் வருகிற அபஜயமும், சித்திகளால் வருகிற நயமும், ஜெயமுண்டென்கிற பபமும், நரகவேதனை யென்கிற சமஸ்த குறைகளும், மனோவிகற்பங்களும், மானபிமானங்களும், காமக்குரோதாதி சேஷ்டைகளும் யோகதாரணை முதலான வேஷ்டைகளு மில்லாமல் மௌனமாய் ஆனந்த சாகரமாய்க் களித்திருப்பதே பயன் என்றார். கோரக்கன் என்றைக்கும் இத்தேகத்தை அழியாமல் வைத்திருப்பதால் பிரயோசன மில்லையோ? என்றன்.

கபீர் மலவுடலை மரிக்காமல் வைத்திருப்பதால் இத்தனு மோக்கம் அடையப்போகின்றதா? அன்றி பிர்மாதி தேவர்களுக்கும் ஆயுட்பிரமாணமிருக்கையில் நீ செய்யோகத்தால் ஆக்கை

மண்ணுகாமலிருக்குமா? ஞானமில்லா யோகத்தால் ஓர் பிரயோசனமும் இல்லவேயில்லை என்றார். கோரக்கன் யோகப்பயிற்சியால் சரமண்டலமாதி நாதங்களைக்கேட்டு உல்லாசமடைந்து சோதியைக்கண்டு உடலம் பூரித்து நாதாந்தவசமா யிருப்பதன்றி கூடுவிட்டுக் கூடுபாய்தல் முதலான அஷ்டசித்திகளைப் பெற்று ஆனந்தமாயிருக்கலாமே என்றான்.

அதற்குக் கபீர் சொல்லும் பாடல்



நாதகீதவோசைகேட்கு நாதனாநீகவிலுவாய்
சோதிதன்னைபேதமின்றி தூயதென்றறிபவன்
ஏதமின்றியார்கொனீ யிசைத்திடென்றுரைக்கவப்
போதமுற்றமாதவர்க்குப் புன்மையாகுமியோகமே. 1

நாதநாதங்கேட்குநாத னவிலினீதிரண்டலோ
சோதிசோதிதன்னையறியுஞ் சோதியீதிரண்டலோ
பேதமாயினீதிபேத போதமாவதெங்ஙனிச்
சூதறிந்துகொள்ளுவாயெ னச்சொல்லிப்பின்மாதவன். 2

உலகமித்தையாயினுலக மெச்சும்வித்தைகற்பதேன்
உலகமித்தையாயினுலக மேவல்செய்யநினைவதேன்
உலகமித்தையாயினுலக வாழ்வைவேண்டிவாடலேன்
உலகமித்தையாயினுடல மழிவுறாதயோகமேன். 3

கூடுவிட்டுக்கூடுபாயின் விட்டகூடுபோன்றதக்
கூடலாதுவேறதோநீ கூறுபிராணநீங்கியோர்
கூடுவிட்டுக்கூடுசேர்வ தன்றிகூடெடுத்திடா
வீடுசேர்வதுள்ளதோ விளம்பிடென்றுகூறினன். 4

மருந்தையுண்டுநோய்கடம்மை மாய்ப்பரிச்சகந்தனில்
மருந்தையுண்டுநோயைவேண்டு வார்கள்போலநீயெனே
பெருந்தவங்கள்செய்துதேகப் பிணியைமாய்ப்பர்மாதவர்
பெருந்தவங்கள்செய்துதேகப் பிணிவளர்க்கவேண்டினாய். 5

அருந்தவங்கள்செய்வருலக மாள்வதற்குமானிடர்
அருந்தவங்கள்செய்துவறுமை யடையவேண்டினோர்கள்போல்
அருந்தவங்கள்செய்வர்நா னெனுமகந்தைநீங்கிட
அருந்தவங்கள்செய்துநீ யகந்தைவேண்டியலைகிறாய். 6

வேறு

ஞானமின்றியவில்லறமருண் ஞானமின்றியதுறவறம்
ஞானமின்றியகல்வியுமுயர் ஞானமின்றியசெல்வமும்
ஞானமின்றியசரிதையும்மிகு ஞானமின்றியகிரியையும்
ஞானமின்றியவஷ்டசித்தியும் ஞாயமாவங்கியாயமே. 7

ஞானமின்றியயோகமும்பர ஞானமின்றியயாகமும்
ஞானமின்றியதியாகமுஞ்சுப ஞானமின்றியபுந்தியும்
ஞானமின்றியதானமுஞ்சுசி ஞானமின்றியதியானமும்
ஞானமின்றியநற்றவங்களும் ஞாயமாவன்னியாயமே. 8

ஞானமின்றியபுத்தியுமெழில் ஞானமின்றியபக்தியும்
ஞானமின்றியசித்தியுஞ்சுக ஞானமின்றியவித்தையும்
ஞானமின்றியசுத்தியுஞ்சுய ஞானமின்றியமுத்தியும்
ஞானமின்றியநற்செபங்களும் ஞாயமாவன்னியாயமே. 9

ஞானமின்றியசிரவணந்தெருள் ஞானமின்றியமனனமும்
ஞானமின்றியதெளிவுடன்முடி ஞானமின்றியநிஷ்டையும்
ஞானமின்றியமோனமுஞ்சுடர் ஞானமின்றியவானமும்
ஞானமின்றியசாத்திரங்களும் ஞாயமாவன்னியாயமே. 10

என்று இவ்வண்ணமா யுரைத்து, "ஓ கோரக்கநாதரே! பிரமக்ஞானிகள் சர்வம் பிர்மமயமாப் பார்த்துத் தம்மை யறிந்தவர்கட்கே கரங்களைச் சேர்த்து, அகம்பாவம் வராமற் காத்து, சர்வ சந்தேகங்களையும் பேர்த்து. சின்மயமாய்த் தேஜோமயமாய் சித்களானந்தமாயிருப்பார்கள். அன்றி யோகமே மேலானதென குமாரசுவாமிகளுடன் அத்திரி, ஆங்கீரசன், சிருங்கி, பிருங்கி, மார்க்கண்டன், வசிஷ்டன், புலத்தியன் முதலான முனிவர்களிற் சிறந்த அகஸ்தியமுனிவர் பன்னிரண்டாண்டு வாதித்து, ஞானமே முக்கியமானதென்று அறிந்தார். அன்றி ஓர்காலத்தில் பிர்மதேவன் தனது ஆயுளுக்கிணையானவர் இவ்வுலகத்தில் யாருமில்லையென்று இறுமாப்புற்று அரியின் பக்கலடைந்து எனக்கு நிகரான ஆயுள் பெற்றவர்கள் இருக்கிறார்களோ?" எனக் கேட்டான். அதற்குப் பகவான் குஞ்சிரிப்புடன் அறைந்த கவி,

வேறு

உலகநீபடைத்திடுவையாதலா லுன்னதாயுளுக்கணியிலை
பலயுகங்கணீயுறுவையுன்னுயர் பராக்ரமங்களையென்னொருவனாற்
சொலுவதாலொருபயனிலையுனைப் போன்றதூயர்களிருப்பிடம்
நலமதாகநாம்போய்வினவவந் நாதருன்புகழ்கூறுவார். 1

என்னவேபிரமனன்னதேசெயவு மெண்ணினன்கலுழன்மேலரி
அன்னமேற்பிரமனூர்ந்துபோயருள் விலாசரோமரிஷிதன்னையே
முன்னமேத்தவம்முனிவிழித்தரியை முந்தியேத்திநல்லயனையும்
பின்னையேத்திநீர்வந்தகாட்சிநற் பிரமவின்பினைத்தந்ததே. 2

என்னுமாமுனியைநோக்கிமாதவன் இன்பவீட்டினையடைந்தவர்
உன்னதாயுளின்அளவிவற்குரைத் தருள்வாயெனவுமம்முனி
என்னதாயுளோர்பிரமன்மாய்ந்திடி னெனதுரோமமொன்றென்னகந்
தன்னைவிட்டுதிர்ந்திடுமிவ்வண்ணமே தமியனுக்கைக்கேசங்களே. 3

கோடிமூன்றரையுதிரமூன்றரைக் கோடிபிர்மரும்மாண்டபின்
நாடியேயுனைத்தொழுதுமோக்ஷநா னண்ணுவேனெனவிண்டுவும்
கோடிபிரமருமாளுமட்டுமுன் கூடிருத்தலுக்கோர்சிறு
விடுகட்டிடாதேனெனச்சொல மேன்மைமாதவனோதுவான். 4

விடுகட்டியிவ்வுடலைக்காப்பதே விசிதமாயினேனதையவிக்
கூடுநீர்க்குமிழாமிதற்கொரு கூடும்வேண்டுவதோவுனை
நாடினோர்களிவ்வாக்கைமேனசை நண்ணுவார்களோபலயுகங்
கூடிருப்பதாலென்னமேன்மையோ கூறுவீர்தயவொடாளுவீர். 5

ஆளுவீரெனும்மாமுனிக்கருள் வாக்கியம்பலவியம்பிமா
வேளைதந்தருளாயனார்முனி விடைகொடுத்தருளென்னவெந்
நாளினுன்றனைக்காண்பனோவென னைந்திடைந்தெழின்முனிபெரு
மானையேத்திநற்றாளில்வீழ்ந்துபின் மாயனுக்குவிடைதந்தனன். 6

தந்தையரியுமயனுடனருட் சத்தகோணரிஷிவாழ்ந்திடும்
விந்தையானகான்மேவவேகல மேன்மைமாதவன்புளகமாய்த்
தந்தையுமகனும்வந்தவாச்சரிய மென்னமோதமியனறிகிலேன்
பந்தநீக்கெனையாளுமெந்தையுன் பாதமேகதியென்றனன். 7

பாவமேசெயும்பண்பினேனுனைப் பார்க்கவென்செய்தேன்பாக்கியம்
தேவரீரெனையுன்னுவீரெனிற் றேவர்லோகநான்வருவனே
பாவியேனிடந்தேவரீர்வரும் பண்பியாதியானறிவதற்
காவலாகினேனையனேயதை யருள்செய்வாயெனக்கண்ணனும். 8

உன்னதாயுளினளவையானறிந் திடவுரைத்தியென்றோதவே
என்னதாயுளின்முடிவுநீயறி யாததோவுரைப்பேனினி
என்னதாயுளோவென்னகந்தனி லேயிருந்திடுஞ்சத்தகூன்
அன்னதானதோநிமிருறும்பொழு தாயுளென்றனுக்கந்தமே. 9

சத்தக்கூனுனக்கெவணநீங்கிடுஞ் சாற்றெனச்சொலினுன்றனற்
புத்திரர்பலர்மாழ்குவாரெனின் போகும்ரோமரிஷிதன்னுயிர்
சத்தரோமருற்பவமெடுத்திடிற் றமியனேனுனதுகருணையால்
சுத்தபிர்மவுருவாயிருப்பனெனத் தூயமாயனிவைசொல்லுவான். 10

பெரியவாயுளைப்படைத்தவாவிரு பேதவேதையையுடைத்தவா
பிரமமோருருவானவாவருட் பேறெனும்பொருளானவா
சருமமாகுமித்தேகமோடுநீர் தரணிதன்னிலுற்றிடுமள
வொருமையாகவோர்பர்னசாலையி லுகந்திருத்தியென்றோதவே. 11

நீரின்மேலெழுத்தாகுமிவ்வுட னித்யமென்றிதற்கிதமதாய்ப்
பாரின்மீதிலோர்பர்னசாலையைப் பண்ணவேயடியனெண்ணினல்
நீரெலாவுயிரைக்காத்திடுங்கட னிச்சயமிலாதாகுமே
தாரமார்பனேமேகவண்ணனே சங்குசக்ரனேயென்றுபின். 12

உடலைநானெனவுன்னியேயிதை யொருமையோடுநான்காத்திடின்
மடமைநீங்குமோவென்னதாயுளோர் மாதரையேயலதுபெரியதோ
சடமதாகுமிவ்வாக்கைநானெனச் சாற்றினேபிரமநானெனத்
திடமதாயிருப்பாயென்றோதிய தீக்கையைமறப்பாக்குமே. 13

நானெனுமகமுடையபேர்க்கிரு ணரகமின்றியருள்வாய்க்குமோ
தீனரேத்திடுஞானவாதவா தேவதேவமிகுமாதவா
ஞானமென்பதற்குரையகந்தை நாஸ்திசெய்தலென்றோதினு
யானதாலுடற்கிடமியற்றிலே னையனேயெனவுரைத்தனன். 14

உரைத்திடுமிகவாயுளுள்ளமா முனிவனுக்குபசாரமாம்
பரத்தைமேவிடும்மோனவார்த்தைகள் பலவுரைத்தரிமுனிவனே
இருத்தியிவ்விடம்போவநாமென விசைக்கமாமுனியுமின்னமோர்
தரத்திலுங்களைக்காண்பதென்றெனச் சரணமாயிரஞ்செய்தனன். 15

சரணமாயிரஞ்செய்தபின்னர்போ மென்றுசாற்றவேமாயவன்
கரணமற்றவாபுரணமுற்றவா காட்சிபெற்றிருடாட்சியா
பரணமற்றவாமரணமற்றவா பத்தியோடுநற்சித்தியா
பரணமுற்றவாயிங்கிருத்தியே லென்றுதம்பதஞ்சேர்ந்தரோ. 16

சேர்ந்துநாரணனயனைநோக்கினன் தேவதேவனென்றுங்களி
கூர்ந்தெனக்கிணையாயுளுள்ளபேர் கூறினில்லையென்றோதினேய்
தேர்ந்துஞானமுற்றதுவுமின்றருள் சேர்ந்ததுமடியார்களை
சார்ந்துமின்பமுற்றதுவுநீமுனஞ் செய்தபோபலமென்றனன். 17

வேறு

நானெனுமகங்காரத்தாற் பரனிலைநண்ணினார்யார்
நானெனுமகங்காரத்தா லின்பினைநண்ணினார்யார்
நானெனுமகங்காரத்தா னரகத்தையடைந்தாரன்றி
நானெனுமகங்காரத்தா னல்லுணர்வடைந்தாருண்டோ. 18

அகமதைவிடுவாயென்றே யரிசொலவயனுந்தாழ்ந்தென்
னகமதைநீக்கியாண்ட வண்ணலேநின்னுற்றாய
புகழுடனருளும்பெற்றேன் புராதனர்சேவைபெற்றேன்
இகபரத்திச்சையற்றே னின்பவீடடைந்தேனென்றான். 19

ஆதலாற்கோரக்காநீ யகந்தையையழித்துஞான
மாதபோதனரைப்போற்றி மகிழ்வுடனிருத்தியென்று
போதனைசெய்யப்பின்னும் புகலுவன்சித்தநாதன்
நீதிநீயெனக்குரைத்த னியாயமன்றெனவிசைப்பான். 20

"ஓ கபீர்! அக்ஷர லக்ஷணமுதல் அவஸ்தைப் பிரயோகம் ஈருக ஆகிய 64-கலைக்ஞானங்களை அறிந்த என்முன் சின்னஞ் சிறுவனுகிய நீ அண்டத்தைக்குஞ்சி ஏளனம் செய்வதுபோல ஏதேதோ சொல்ல ஆரம்பித்தாய். இது பிரமாவை எதிர்த்த பிராமணனைப்போ லிருக்கின்றது" என்று அாற்றினுன். கபீர் "ஓ கோரக்கனே! அறுபத்துநான்கு சித்திகளிற் றேர்ந்த சித்த னென்று உன்மத்த மடையவேண்டாம். ஏனெனில்: உன்னைப் போன்ற சகல வித்தைகளிலுந் தேர்ந்த நவகோடிசித்தர்களி ருப்பதன்றி, பிர்மசிருஷ்டிக்கு எதிர் சிருஷ்டிசெய்யும் அநேக ரிஷீஸ்வரர்களு மிருக்கிருர்கள். இதை நீ நன்ருயறிந்தவனே. முற்காலத்தில் சற்று விஸ்வாமித்திரர் அகங்கொண்டதால் தேவ சபைக்கு வரவுங்கூடாமல் நெடுநாள் தலைமறைவாயிருக்க நேரிட் டது. அன்றி, பிரமா சிருஷ்டிகர்த்தனுயிருந்தும் குற்றஞ் செய்த தால் ஓர்தலை வெட்டுண்டு அதைச் சிருஷ்டித்துக் கொள்ளத் தன்னுலாகாமல் தாழ்வடைந்தான். ஆதலால் பிரமாதி தேவர்க ளாயினுங் குற்றஞ்செய்வாராயின் ஜகதீஸ்வரனுடைய ஆக்கி னைக் குள்ளாக வேண்டும். குறைசெய்யாதோர்க்கு என்றும் பய மில்லை. இது உண்மையானது. ஆதலால் நீ மகாசித்தனென்று அகம்மேலிட்டுத் தபோதனர்களைப் பங்கப்படுத்திக்கொண்டுவந்த காரணத்தால் குற்றத்துக்குட்பட்டாய். இது நிவர்த்தியாகும் பொருட்டு எங்கள் ஆசானுக்குப் பனிரெண்டாண்டு பணி விடை செய்துக்கொண்டிரு" என்று உரைத்தார். அதை கேட்ட ராமானந்த சுவாமிகள் கபீரை நோக்கி, "அப்பா கபீர்! நல்லோருக்கு நெல்லத்தனை ஈனச்சொல்லே மேலான தண்டனையாம். அப்படியிருக்க இப்படிச் சொல்லலாமா" என்று அறைந்தார். அதைக்கேட்ட கோரக்கன் நல்லதாகட்டும். இக் கபீரைச் சிலநாளில் விசாரித்துக்கொள்ளுவேனென்று மாயமாய் மறைந்து தன்னிருப்பிடஞ் சேர்ந்து, கபீரை வெல்லவேண்டு மென்னும் காஞ்சனையால் மகாவுக்கிரமான தபஞ்செய்யத்தொட ங்கினுன். இங்கே ராமானந்தசுவாமிகள் கோரக்கநாதன் கபீருக்கு அச்சமுற்று மறைந்துபோனுன். அவனை ஓர்கடிகையிற்செயித்த கபீர் நமக்கு மாணுக்கனுயிருக்க என்ன தவஞ்செய்தோமோ? எது பாக்கியஞ் செய்தோமோ? என்று கபீரைப் பலதரம் ஆலிங் கனஞ் செய்துக்கொண்டு "என்கண்மணியே! உன்னுலல்லவோ கொடிய கோரக்கனைச் செயித்தேன்; ஆசானென்னும் பெயரை யும் வகித்தேன்; உன்பெருமைபறியாது இகழ்ந்த என் அறிவீ

னத்தை க்ஷமித்துக்கொள்ளவேண்டும்" என்று இரந்து கூறி னுர். கபீர் அப்போது தேசிகரின் அடிகளில் தன் முடியைச் சாய்த்து, "ஓ என் சற்குருநாதனே! மெய்ஞ்ஞான போதனே! உம்முடைய ஆசிர்வாதபலத்தால் கோரக்கனை வென்றதன்றி இவ்வேழைக் குழந்தையால் வெல்லக்கூடுமோ? உமது மகி மையை நீரறியாமல் என்னைப் புகழ்தல் நீதியாகுமா? எனையாட் கொண்ட தெய்வமே! முற்றிலும் என்னை ரக்ஷித்தருள வேண் டும்'' எனத் தொழுதேத்தினுர். அப்போது ராமானந்த ஸ்வாமி கள் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவராய் கபீர் தாய்தந்தையை அழைப்பித்துக் கபீர் அகப்பட்டதுமுதல் சகலமுங் கேட்டறி ந்து மகாத்மாவெனத்தெரிந்து,"ஓ தமால்! நீசெய்த பாக்கியமே பாக்கியம்; உன் மைந்தனுடைய யோக்கியமே யோக்கியம்; நான் செய்த சிலாக்கியமே சிலாக்கியம்; இவன் வாய்மொழி களே மகாவாக்கியம்; ஆ ஹா! பன்றி பல குட்டிகள்போட்ட தாற் பிரயோசனமென்ன? யானையின்குட்டி யொன்றேபோதும். பல நட்சத்திரங்களாற் பிரகாசமுண்டாகாது. ஒரு சந்திரனு லேயே பிரகாச முண்டாகும். அதுபோல் உலகத்தில் அநேக மைந்தர்களைப் பெறுகிறதைப் பார்க்கிலும் இப்பேர்க்கொத்த ஒரு குழவியால் சகல லாபங்களையும் பெறலாம்" எனப் புகழ்ந்து மிகவும் மனமகிழ்ந்து ஓர் நிமைநேரமுங் கபீரை மறவாமலிருந் தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜி சித்தர் சொல்லத் தொடங்கினுர்.

கபீர் கோரக்கரைவென்ற அத்தியாயம் முற்றிற்று.

---

பத்தாவது

## கபீர் விவாக அத்தியாயம்



இப்பால் தமாலும் ஜிஜ்ஜாபீபியும் ராமானந்த ஸ்வாமி களின் திருவடிகளிற் பணிந்து விடைபெற்றுக்கொண்டு கபீரை நோக்கி, "அப்பா புத்திரசிகாமணி! வீட்டுக்குவந்து எங்களைப் புனிதராக்கக் கடவாய்'' என்று நவின்றனர். கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் திருவடிகளிற் பணிந்து அடியேனுக்கு என்ன கட்டளை? என்று அஞ்சலியஸ்தனுய் நின்ருர். சுவாமிகள் "காலை மாலை வந்து தரிசனந் தந்துபோம்" என்று திருவாய் மலர்ந் தருளினுர். கபீர் நாம் செய்த பாக்கியமே பாக்கியம் என்று சிர சாஷ்டாங்கமாய் வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து தந்தை

தாயுடன்போய் ஆசாரியர் கட்டளைப்படி அந்திசந்தி வந்து தேசிகரைத் தாழ்ந்து, பல சங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டு நாள் கழிக்கத் தொடங்கினர். பின்பு கபீர் பதினறு வயதை யடையவே பகவான் கபீருக்கு அரம்பாவதாரமான சுந்தராவை பாணிக்கிரகணம் செய்யவேண்டு மென்றுன்னி ஒருநாள் தமால் கனவிலடைந்து, “ஓ தமால்! உனது மைந்தனுக்கு மணஞ்செய் யப்பேசின சுந்தராவென்னும் பெண்ணின் தாய் தந்தையரை நேசித்துக் கலியாண காரியத்தை சீக்கிரம் முடிப்பாய்” என்று அறைந்து மறைந்து போயினர். உடனே தமால் விழித்துத் தன் நாயகியை விளித்து, “அடி பெண்ணே! நமது காண் முளைக்கு வேட்டல் செய்யும்படியாய்க் கடவுள் என் கனவில் வந்து உரைத்தார். ஆதலால் முன் நமது தனுசனுக்குத் தங்கள் புத்ரியை யளிக்கின்றேமென வாக்கைக் கொடுத்தவர்கள்பாற் போய்கேட்டு அவர்கள் அபிப்பிராயம் அறிந்துவா” என் றுரைத்தார். ஜீஜ்ஜபீபி மகாபாக்கியமென்று வைகறையி லெழுந்து போய் சம்பந்தியின் வீட்டையடைந்து க்ஷேமவார்த் தைக ளாடினபின் பெண்ணைக் குறித்துப்பேச, அவர்கள் சுன் னத்துசெய்துகொள்ளாப் பிரஷ்டனுக்குக் கொடுப்பதில்லை யென்று மறுத்தார்கள்.

ஜிஜ்ஜாபீபி அதற்கு உத்தாஞ் சொல்லக்கூடாக் குறையால் வாட்டத்துடன் தன்வீட்டையடைந்து கொழுனனைத் தொழுது சம்பந்திகளின் வாய்மையை யுரைக்கக்கேட்ட தமால் வேஷ்டை மேலிட்டு இனி என்னசெய்யலாம் என்று எல்லாவற்றிற்கும் நம்முடைய பகவானே முன்னின்று முடிப்பிக்கவேண்டுமென்று ஆகுலத்துடனே நாட்களைக் கழிக்கத் தொடங்கினர். பின்பு அரம்பாவதாரமான சுந்தராவின் தந்தைதாய் பருவமடைந்த நமது பெண்ணை யாருக்காவது வதுவை செய்துக்கொடுக்க வேண்டும் என்று உன்னி கன்னிகையைக் கேட்கும் பலபேர்க் குள் ஒருவனுக்குக் கொடுக்கச் சம்மதித்து மங்களத்துக்குரிய சகலவித சாமக்கிரியைகளையெல்லாஞ் சேகரஞ் செய்யத்தொடங் கினர்கள். அன்று இரவில் பகவானனவர் ஓர் பகீரி ரூபத்துடன் அவர்களின் கனவிலடைந்து மாதை கபீருக்கன்றி மற்றவர்க்கு அளிப்பீரேல் உமது வம்மிசம் நாசமாய்ப்போகும் என்று உரை த்து மறைந்தார். உடனே சதிபதிக ளிருவரும் துயிலொழிந்து தாங்கள் கண்ட கனவை ஒருவரோடொருவர் உரைத்து உசாவி அச்சமுற்று அதிகாலையில் தன்னினத்தோரைக்கூவித் தாங்கள்

கண்ட சொர்ப்பனத்தைப் புகல, இனத்தோர் கடவுள்வந்து உங்கள்சொர்ப்பனத்திற் கபீருக்கு அளிக்கச்சாதித்தாலும் நமதுமாபுக்கு ஓர் குறைவறச் செய்யலாகாது" என்று மறுத்தனர். அவ்வசனங்களைக்கேட்ட சுந்தரா மிகவும் முனிவுடன் சொல்லும் மொழிகளாவது: "முன்னம் கபீருக்கு என்னை மனைவியாக வாக்கை யளித்து, மற்றொருவனுக்கு மணஞ்செய்யக்கருதுவது மஹா குற்றமாகும். அன்றி அக்கபீரை நீக்கி மற்றொருவரை நான் விவாகஞ் செய்யமாட்டேன். ஏனெனின் கபீரை நமக்குக் கணவனெனத் தீர்மானித்த நான், வேறுபுருடனை மணஞ்செய்ய ஆசிப்பேனாகில் பெண்தன்மைக்குரிய கற்பழிந்து நிறையத்துக்குள்ளாவேன். பதிவிரதையிற் சிறந்த சதியானவள் ஒருவனைப் பதியெனத் தீர்மானித்துப் பின்பு அநுமானித்து வேறு ஆடவனைக்கருதுவாளா? கருதுபவள் கற்புள்ளவளாவாளா? இவனே நமக்குகந்த மணாளனெனச் சிந்தித்து வந்தித்து வேறு எண்ணங்கொள்வாளாகில் வேசைக்குங் கீழ்மையான விபசாரியிலும் அபசாரியென்றே சொல்லவேண்டும்" என்று நவின்றாள். அதைக்கேட்ட சகலரும் ஆச்சரியங்கொண்டு இப்பெண் பருவமடைந்து ஓர் ஆண்டு ஆகவில்லை. இப்போழ்தே சதியென்றும் பதியென்றும் வாஞ்சையுடன் பேசுகின்றாள். இதை நன்றாயோசிக்கையில் விபரீதமாக விருக்கின்றது என்று அறையும்போது அக்கன்னிகை இனத்தோரை நோக்கி, "ஓ புனிதர்களே! ஒருவனை மணவாளனென்று உன்னிப் பின்பு ஒருவனை நண்ணின மங்கையின் அங்கையினாற் சலபானஞ் செய்யவேகூடாது. ஏனெனில், இவனே நமக்குக் கணவனெனப் பாவித்து, மனதாரச் சேவித்துத் தன்னாக்கையை அவனுக்குத் தாரைவார்த்து ஐக்யமானபின் மற்றொருவனை வாஞ்சிப்பாளாகில் அவளை நான்கறிவுள்ள மிருகங்களில் இழிவான கர்த்தபமென்றே உன்னவேண்டும். ஐந்தறிவுள்ள மனிதஜென்மமெனப் புகலத்தகாது. பத்மினி தன்னுயிர் நீங்கினும் ஒரு புருஷனையன்றி மறுபுருஷனை வாஞ்சிக்காள். கனவிலுங் கடிசெய நினையாள். உத்தமிக்கு ஓர் புருஷனேயாம். சித்தினிக்குப் பல புருஷர்களேயாம். இனிப் பலவாறு நான் செப்புதலாற் பயனின்று. முடிவு அக்கபீரையன்றி வேறு புருஷனை என்னுயுள் பரியந்தம் இச்சிப்பதேயில்லை. இது சத்தியவசனமாகும். கபீரைவிட மற்றுமுள்ள மாந்தர்களெல்லாம் எனக்குத் தந்தைகளுஞ் சகோதரர்களுமாக வேண்டும். ஆதலால் அக்கபீருக்கே என்னை மன்றல் செய்ய

வேண்டும். கபீரே எனக்குப் பதியன்றி வேறுகதியில்லை'' என்று இயம்பினுள். இனத்தோர், “ஓ சுந்தரா! தாய் தந்தையரும், உற்ருேரும், மற்ருேருஞ் சேர்ந்து யாருக்கு மணஞ்செய்கிருர்களோ அவனையே காவலனெனப் பாவிக்க வேண்டுமேயல்லது நீயா ஓர் புருடனைக் கருதுவது மகா குற்றமாயிற்றே. உன்ஞல் பந்துக்களின் மானம்போயிற்றே. இனி இப்படி பேசாமல் பெண்மைக்குரிய நாணத்துடன் இருப்பாய்'' என விளம்பினுர்கள். சுந்தரா எப்போது என் தாய்தந்தை கபீருக்கு என்னை வேட்டல் செய்ய வாக்கையளித்தாரோ, அன்றே நான் அவருக்குரிய மனைவியாய் விட்டேன். ஆனபின் சொட்டேன். மனமணமே மணமன்றி இனமணத்தால் ஓர் பிரயோசனமுமில்லை. பத்தினிக்கு ஓர் பதியாம். இப்பண்பிளாளே நற்சதியாம். கபீரைக் கோருவது என் விதியாம். விதியின்படி நடப்பதே மதியாம். ஆதலால் நீங்கள் என் விரதத்தைக் கெடுக்காதீர்கள், கெடுத்து எனக்கு இடர்கொடுக்காதீர்கள் என்கிற வார்த்தைகளாடும் போது, இனத்தோர் “ஓஒ! அக்கபீர் இவளழகுக்காக மோகித்து ஏதோ வித்தையைப் பிரயோகித்ததுபோற் ருேன்றுகின்றது. இனி இவள் யார்மொழியையும் கேட்கமாட்டாள். தாய் தந்தையரையும் பார்க்கமாட்டாளென்று அறைந்து அவள் தாய் தந்தையை நோக்கி, இவளை வெகு பத்திரமாய் காக்கவேண்டுமென்றுரைத்துத் தங்கள் வீட்டையடைந்தார்கள். பின்பு அச்சுந்தராவின் தந்தைதாய் புத்திரியை நோக்கி, “அடி சுந்தரா! நீயென்ன? உன் வயதென்ன? உன் விவேகமென்ன? நமது வர்ணத்திற்கு விகற்பமாய் நடக்கும் இந்துமதத்தைச் சார்ந்தவனை வாஞ்சித்தாய். உன் வசனம்கேட்கும் பலருக்கும் நகைக்கிடமாய் விட்டது. எங்களுக்கிருந்த பெருமை போய்விட்டது. உனது எண்ணம் மிகவும் கெட்டது. இனத்தோர் மனதைச் சுட்டது. அடி துர்மார்க்கி! பெண்மைக்குரிய நாணத்தை நீக்கி வாயில் வந்தபடி பிதற்றுகின்ருய். ஈனவார்த்தைகளும் புகன்ருய். வேசியாய்ப் புறப்பட்டாய். நீ கெட்டாய். இனி இவ்வார்த்தைகளைக் கூசாமல் பேசுவையாகில் இரண்டு துண்டமாக வெட்டி விடுவோம்; வாயில் வந்தபடி திட்டிவிடுவோம்'' என்று அதட்டி ஓரறையிலடைத்துக் காவல் வைத்தார்கள்.

பின்பு அந்த சுந்தரா பகவானை நோக்கித் தவஞ்செய்பத் தொடங்கினுள். இப்படி சிலநாள் கழிய, ஒருநாள் பகவான் ஓர் பகீர்வடிவமாய் பல மாணுக்கர் சூழ, சுந்தராவின் வீட்டை

யடைந்து அவள் தந்தை பணிய, ஆசீர்வதித்து எங்களுக்கு உன்னால் விருந்து செய்யக்கூடுமோ? என்றார். அதற்கு அவன் தடையின்றி அனைவரும் என் வீட்டில் உண்டு களிப்புடன் போகலாமென்றான். மாயாபகீரி, ஆ ஆ! இவ்வாரணாசியில் நமது குலத்திற் சிறந்த தர்மப்பிரபு தமால் ஒருவனே யிருக்கிறானென நினைத்திருந்தேன். அவனைவிட நீ மேலானவனா யிருக்கின்றாய். அவனுக்குச் சம்பந்தியான உன்பாலும், நற்குணமிருப்பதற்கு ஐயமில்லையென்றார். அவ்வார்த்தையைக் கேட்ட சம்பந்தி நான் அப்பிரஷ்டனுக்கு எப்படி சம்பந்தியாவேன்? இனி அவன் நாமத்தை என் வீட்டிலிருந்து வெளிப்படும் வரையில் சொல்லாதீர்கள் கவனம் வைத்துக்கொள்ளுமென்றான். பகீரி தமால் மிகவும் சிரேஷ்டனாயிருக்கப் பிரஷ்டனென்று ஏன் உரைத்தீர்? என்றார். அதற்கவன் நமது குலமுறை தர்மத்தைக் கடந்து, சுன்னத்து செய்துகொள்ளக் கபீர் எண்ணப்படி நடந்து, இந்துமதத்தை யடைந்து குலத்தோர்பால் வருவதற்கு இடைந்து இருப்பவன் பிரஷ்டனல்லவோ? என்றான். பகீரி தமாலிடம் நாங்கள் அனைவரும் ஐந்தாறு ஆண்டுக்குமுன் போயிருந்தோம். அப்பொழுது அவன் எங்களைவேண்டி விருந்திடப் புசிக்குந் தருவாயில் ஓர் பகீரிவந்து தமால் புத்திரன் சுன்னத்து செய்துக்கொள்ளா மிலேச்சனாயிருக்கின்றான். இவன் வீட்டில் அன்னமுண்ணத் தகாது என்று மறுக்க நாங்களும் நிச்சயந்தானென்று உண்ணாதெழுந்த தருணத்தில் கபீருடனே சுன்னத்து செய்துக்கொண்டு எங்களுக்கு அன்னமூட்டினான். பின்பு நாங்கள் அனைவரும் கபீரைநோக்கி, “நீ இந்துக்களைப்போல் திருநாமமணிந்துக்கொள்ளத் தகாது என்றுரைக்க அன்றுடன் திலகமு மணியாமல் சந்தன மணிந்து அரிநாராயணாவெனத் தியானிக்காமல் அல்லாவையே தியானித்துக்கொண்டிருக்கிறான். இதை நீர் அறியமாட்டீரோ? இனி ஏன் கபீருக்குப் புத்திரியைத் தரமாட்டீரோ? என்று அனந்தம் பகீரிகளைக் கொண்டு அவன் மனதைக் கரைத்து, இனிய வார்த்தைகளுரைத்து கபீருக்கு அளிக்கும்படியாய்ச்செய்து, அவனுக்குற்ற சந்தேகங்களைக் கொய்து, துலுக்கரையும் காஜிமௌலியையும் வரவழைத்து, அவர்களுக்கு முன்னுரைத்தவண்ணம் உரைத்து உங்கள் அனைவோருக்குஞ் சுந்தராவைக் கபீருக்குக் கொடுத்து வேட்டல்செய்யசம்மதிதானோ? எனக்கேட்டான். மௌலி முன் இந்துமதத்தைச்சார்ந்து இப்போது நம்முடன் சேர்ந்து பெண்

கேட்டால்கொடுக்கலாமா? என்ருன். பகீரி மதத்தைவிடுத்து நம் மதத்தையடுத்து வெகுநாளாயிற்றே என்ருன். மௌலி அவன் சுன்னத்து செய்துக்கொண்டது உண்மைதானு? என்ருன். பகீரி சுன்னத் சுன்னத்தென்று பலதரங் கேட்கின்றீர்; நங்குலத்துக்கு ஆதியான ஆதாமுக்குச் சுன்னத்து செய்ததுண்டோ? என்ருன்.

மௌலி ஆதாமுக்கு இல்லாவிடினும் அவர் பின்னுண் டான இப்ராயீம் பயம்பர்காலத்திலிருந்து நம் பாம்பரைக்கு உண்டாச்சுதல்லவோ? என்ருன். பகீரி ஷயாம்-காபூல்-பகாரா-அரப்-பஞ்சாப்-டில்லி-ரூம் முதலான சப்த நகாங்களிற் சிறந்த நமது சக்ரவர்த்தியின் ஸ்தானமான ரூம் நகருக்கு இறைவனுகச் செய்யும் அரையர்களெல்லாம் அங்கலனுடைய பரிசங்கொள் ளாமல் சுன்னத்துஞ் செய்துக்கொள்ளாமல் சிம்மாசனமேறி சகலர்மீதும் ஆக்கினை செலுத்தவில்லையோ? நம்முடைய மர் மத்தை நாம் வெளிப்படுத்தல் தர்மமோ? இப்ராயீம் பயம்பர் இளையமனைவிக்குச் செய்துகொடுத்த வாக்கைக் கடந்தபடியால் இவ்வாக்கினைக்கு நாம் அனைவோரும் உட்பட்டு நடக்கும்படி யாய் நேரிட்டது. அப்படியே கபீரும் உட்பட்டான். இனி அவனுக்குச் சுந்தாாவை விவாகஞ்செய்கிறதை மறுத்து தமாலை வருத்துவது தகாதென்ருன். மௌலி, தாய் தந்தையர் நிச்ச யிக்காமுன்னம் ஒருவனை யிச்சிப்பவள் மணத்துக்குவர எங்க ளுக்கு இஷ்டமில்லவே யில்லையென்ருன்.

பகீரி நமது பாம்பரைக்கு முதல்வனுன இஸ்மாயில் பயம் பர் மாதாவாகிய ஆஜராவென்னும் உத்தமி தன் தாய் தந்தை உற்ருேர் மற்ருேரும் மறுத்துங் கேட்காமல், இப்பிராயீம் பயம் பரை தன் எண்ணப்படி இச்சித்தவர்பின் ஏகவில்லையா? அப் படி செய்ததால் ஆஜராவை நாம் வெறுக்கலாமோ? அன்றி நமக்குப் பூர்வ தாயாதிகளான இசாக்பயம்பர் பாம்பரையோர் இக்காலத்திலும் ஸ்திரீ எவனை யிச்சிக்கின்ருளோ அவனுக்கே மணஞ் செய்துக் கொடுக்கவேண்டும் என்று விதித்திருக்கிருர் கள் அல்லவோ. அன்றி, ஓர் ஆடவனையிச்சித்தவட்கு வேருெரு புருஷனை மணஞ்செய்தல் மகா குற்றமல்லவோ. சகலமும் தெரி ந்த உமக்கும் விரித்துச் சொல்லவோ என்று அநேக நீதிவாக் கியங்களை யுரைத்து எல்லோரையும் மாயையால் மயக்கி சம்ம திக்கச் செய்து, சந்தேகங்களைக்கொய்து, மன்றல் செய்யும் நாள் நாளைக்கெனத்தீர்மானித்துத் தன்னுடன்வந்த பகீரிகளை அவ்வி டம் விட்டுத் தான் பேர்ந்து தமால் வீட்டைச் சேர்ந்து தமாலைக்

கூப்பிட்டார். உடனே அவன் வந்து வணங்கி இணங்க, "ஓ தமால்! நீங்கள் கபீருக்கு வேட்டல் செய்யக்கேட்ட சுந்தராவுக்கு நாளைக்கு வதுவையாவதற்கு உங்களை இன்றைக்கே வரும்படியாய்ச் சொன்னார்கள். நான் அச்சுந்தராவுக்கு பெரிய தந்தையாகவேணும்" என்று நவின்றார். அதைக்கேட்டு தமாலும் ஜிஜ்ஜாபீபியும் மிகவும் வாட்டமுற்று, ஐயையோ! அந்தச் சுந்தரவதியை வேறொருவனுக்கு அளித்தால் நமது மைந்தனுக்கு உகந்த ரதி அகப்படுவது அரிது அரிதென்று கண்ணீரொழுக அழுதார். அப்படி அழும்போது மாயாவினோதனான பகவான் "ஓ தமால்! சுபகாரியத்துக்கு அழைத்தால் ஏன் அழுகிறீர்? பிரம்மா நினைத்தால் ஆயுளுக்குக் குறைவில்லாததுபோல நான் நினைத்தால் அப்பெண்ணை உமது தனுசனுக்கே கொடுப்பிப்பேன். அப்படி கொடுப்பித்தால் எனக்கு என்ன கொடுக்கிறீர்?" என்றார். அவ்வாக்கியத்தைக்கேட்ட தமால் மிகவும் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவனாகிப் பெண்ணை எங்கள் கான்முளைக்கு அளிப்பீரேல் என் ஆயுள்பரியந்தம் உமக்கு ஏவல் செய்கிறேன். இது உறுதிவசனம் என்று இயம்பினன். மாயாதுலுக்கன் ஈது உண்மையாயின் இன்றுடன் விஷ்ணுநாமத்தைத் துதியாமலிருங்களென்றான். அவ்வசனத்தைக் கேட்ட கபீர் அத்துலுக்கனை நோக்கி, "அப்பெண்ணும் வேண்டாம்; உங்கள் சம்பந்தமும் வேண்டாம்; போ போ" என்றிசைந்தார். நாராயணனாகிய பகீரி முன்னம் வாக்கைபளித்துப் பின்பு ஓர் போக்கைக்காட்டுவோர் படுபோக்கிரிகளல்லவா? உனக்கே அப்பெண்ணைக் கொடுப்பிப்பேன்; என் வாக்கை மெய்ப்பிப்பேன்; நீங்கள் எனக்கு இன்றுடன் ஏவல் செய்யவேண்டுமென்றான். கபீர், என் தந்தை வாக்களித்தபடி ஏவல் செய்வோமல்லது ஸ்ரீராமநாமத்தைத் துதிக்காமலிருக்கமாட்டோமென்றான்.

பகீரி நிரூபமான பரப்பிர்மத்தைவிட்டு ஓர் மனிதன்பேரையுன்னிக்கேட்டு நிறையத்துக்காளாவது அழகோ? என்றார். கபீர் என்னுண்டவனை மனிதனென்று இப்போது உரைத்ததுபோல் இனி யுரைப்பையாயின் உன் மென்னியைக் கடித்து, உதிரங் குடிப்பேன் என்றார். மாயாதாரி, தன் மனைவியை இராக்கத னெடுத்துப்போகச் சீதா சீதாவென்று அடவியில் அலைந்து திரிந்த அறிவில்லா மானிடனைத் தெய்வமென நம்பல் அறிவீனமல்லவோ? உள்ளதைச் சொன்னால் சள்ளென்று விழுவது அழகோ? என்றான். கபீர் அம்மொழியைக்கேட்டு அதிக கோப

நிப்தனுப் எரிந்து அப்பக்கிரியின்மேல் வீழ்ந்து, "அடா! இனி யரைக்கணம் ஈண்டு இருப்பையாயின் எமலோக தரிசனத்துக்கு வருவாய்" என்றான். கபடநாடகனாகிய பகவான். "அடா பிரஷ்டப்பயலே! துஷ்டப்பயலே! நான் சுபத்தைச்செய்ய நினைத்தால் விபத்து செய்யவந்தாய். அச்சுந்தராவினுடன் கூடிச் சுகமனுபவிப்பது நானா? நீயா? அடா பேயா?" என்று ஏசிப் பேசத் தொடங்கினார்.

கபீர் அச்சுந்தராவைத் தீண்டேன்; அவட்கா யுன்னையும் வேண்டேன். இனி வம்புசெய்யாமல் உன்னிருப்பிடஞ் சேரென்றான். அவ்வேஷதாரி, அச்சுந்தராவை நீ மிகவும் வேண்டவும், அவட்காயென்னடிகளைத் தீண்டவும் செய்கிறேன் பாரென்றார். கபீர் குலுங்க நகைத்து, ஆ ஹா! என்ன ஆச்சரியமான வார்த்தையைப் புகன்றாய். அவளைத் தீண்டேனென்றும் அவட்கா யுன்னை வேண்டேனென்றும் உறுதிகூறல் வேண்டுமோவென்றான். அச்சுதன் பேசப்பேசப் பிழையென்பதுபோல இவன் அச்சுந்தராவைத் தீண்டேனென்று சத்தியஞ் செய்தாலுஞ் செய்வான்; இவன் எண்ணத்தை ஒருவரால் மாற்றக்கூடியதல்ல. இவனை அங்கு கொண்டுபோகும்படியான சூட்சிசெய்யவேண்டுமென்று யோசித்து, நாரதரை நினைத்து, "ஓ யாழ்வல்லோனே! நீயும் பரமபாகவதர்களும் ராமானந்தஸ்வாமிகளும் மாணாக்கருமாய் வாருங்கள்" என்றார். அப்படியே அவர்கள் சூரியன் அஸ்தமனமாகுஞ் சமயத்தில் ராமானந்தஸ்வாமிகளின் வடிவுடன் பல மாணாக்கர்சூழ தமால் வீட்டையடைந்து, ஓ கபீர்! ஓ கபீரெனக் கூவினார். உடனே சற்குரு ஸ்வாமிகளின் குரலைக் கேட்ட கபீர் திடுக்கென்று ஓடிவந்து ஸ்வாமிகளின் திருவடிகளிற்பணிந்து நாங்கள் இன்றுசெய்த பாக்கியமே பாக்கியம் என்று இல்லிற்கொண்டுபோய் உபசாரஞ் செய்யத் தொடங்கினார். அப்போது ராமானந்த ஸ்வாமிகள் தமாலை நோக்கி, "நாளைய உதயத்தில் உமது மைந்தனுக்கு விவாகமெனக் கேட்டேன். நீங்கள் ஏன் இப்படி இருக்கின்றீர்கள்?" என்றார். தமால் மணப்பெண்ணின் பெரியதந்தை வந்து இக்கபீருக்கு அப்பெண்ணை மன்றல்செய்யப் பேசி அவமரியாதை யடைந்து நிற்கின்றார். இனி அவ்வனிதை கிடைத்தலரிது என்றார். ராமானந்தஸ்வாமிகள், முன்னங் கொடுப்பதாக வாக்களித்து பின்பு எப்படி மறுக்கின்றார்கள்? என்னுடன் வாரும்; நானே பேசி முடிப்பிக்கிறேன்" என்றார். தமால் இச்சாதுக்கள் கூட்டத்

துடன் அங்குசென்ருல் அவமரியாதை நேரிடுமென்ருர். சுவாமிகள் அப்படியாவென்று பகிரி வேடங்களைப்பூண்டு வாரணுசியின் ராஜனை அழைப்பித்து கபீருக்கே அப்பெண்ணை மணஞ் செய்விக்கிறேனென்று ஓர் சீஷனை இராஜன்பாலனுப்ப, உடனே பகவான் மாயையால் வாரணுசியின் இறைவன்போலாகி, பல தாளமேளங்கள் தாம்தாமென்று முழங்கத் தமால் வீட்டையடைந்து, சமஸ்த சம்பிரமத்துடன் இராமானந்த ஸ்வாமிகளைக் கண்டு வணங்கி நின்ருன்,

மாயா ராமானந்த ஸ்வாமிகள் மாயா இறைவனை நோக்கி, "எனக்குகந்த மாணுக்கனுகிய கபீரை நாம் அனைவோரும் அழைத்துக்கொண்டு போய் விவாகஞ் செய்துவரலாம்" என்று கபீரை மணக்கோலஞ் செய்து அநேக துலுக்கர் சூழப் புறப்பட்டுச் சுந்தராவின் வீட்டையடைந்து அங்கிருக்கும் சகலரும் தங்களுக்கு மரியாதை செய்து வணங்க, இதோ ராஜன் வந்துவிட்டானென்றிணங்கச் சுந்தராவைச் சிங்காரித்து இருவர்க்குஞ் செய்யவேண்டிய சடங்குகளெல்லாஞ் செய்து சூரியோதயமானவுடன் விவாகத்தை முடித்துத் தங்கள் தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு தமால் களிப்படைந்து சுந்தராவை அழைத்துக்கொண்டு தன்வீடுசேர்ந்து சகல பந்துஜனங்களுக்கும் விருந்து செய்து ஆனந்தமாயிருந்தார். இவர் இப்படியிருக்கக் கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் தரிசனத்துக்கு என்றும்போவதுபோல் அன்றும் போக, அப்போது சுந்தரா கபீரை வணங்கி, "ஓ ஸ்வாமி! ராமானந்த ஸ்வாமிகளின் தரிசனஞ்செய்ய வெகு நாளாய் வாஞ்சித்திருக்கிறேன். இன்றைக்கு அவருடைய தரிசனந் தருவித்து என்னைக் காக்கவேண்டும்" எனப் பணிந்தாள். அவ்வாக்கியத்தைக் கேட்ட கபீர் புளகாங்கிதமடைந்து, "ஓ சுந்தரா! நீ துலுக்க வம்மிசத்திற் பிறந்தவளாயிருந்தும் ராமானந்த சுவாமிகளின் தரிசனத்தைக் கோரினை; உனக்கு அவர்மீது பக்தி வந்ததைக் குறித்து வெகு சந்தோஷமடைந்தேன். ஆனுல் என்னுடன் கூடியிருக்கிறவளாகில் என் வாக்குக்கு மறுவாக்கு உரைக்காமலிரு. இதுவே உன்பால் யான் கேட்டுக்கொள்ளும் வாக்கு. இதை உன் உயிருள்ள பரியந்தம் காப்பாற்றக்கூடுமோ?" என்ருர்.

சுந்தரா, "ஓ சுவாமி! பதிவாக்கை மறுத்த சதிக்கு நற்கதியுமுண்டா? பதிவிரதையின் வாக்கு இரண்டா? பதி வார்த்தையை மறுத்தவருமுண்டா? இப்படி கேட்டது உமக்கு ஐயங்கொண்டா?

பதிமொழியின்படி நடிக்காதவளும் ஒரு பெண்டா? பதிவாக்கைக் கடவாமல் இராவணன்பின் பார்வதி போனுளெனச் சாஸ்திரங் களில் முறையிடுகிறதைக் கேள்விப்பட்ட நான் உமது வாக்கைக் கடப்பேனே? பதிவிரதையல்லவென்கிற பேரை யெடுப்பேனே? ஓ என் பிராணநாயகா! ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராகிய ஸ்ரீரகுநாதர் ஒருதாமன்றி இருதாம் கொல்லும் அக்கினியிற்குளித்து வாவென்று உரைத்த சீதாபிராட்டி கோ தண்ட அஸ்தனைத் துதித்து அக்கினிகுண்டத்திற் குதித்து, அக்கினிதேவனையெரித்துத் திரிலோகங்களிலும் தன்கீர்த்தியை விரித்துக் காட்டியதைச் சிரவணஞ்செய்த அடியாள் உமது வாக்கை மறுப்பேனே? மறுத்து இவ்வுலகிலிருப்பேனே? ஓ பிராணவல்லபா! பதிவார்த்தையைக்கடக்காசதியே! பதிவிரதை யன்றி கடந்தவள் பதிவிரதை யாவாளா? கணவன் வாக்கியத் தைக் கடந்த காந்தை கற்பழிந்தவளன்றி கணிகைக்குங் கீழ்மை யானவளென்றே யுரைக்கத்தகும்'' என்கிற பற்பல வாக்கியங்கள் உரைத்தாள். அதைக்கேட்ட கபீர் சந்தோஷசாகரத்தில் அமிழ்ந்தவராய், "ஓ சுந்தரா! நீ நல்ல பத்தினியென்றே மணஞ்செய்ய ஒத்துக்கொண்டேன்; சாதுக்கள் சேவையிற் சிறந்த உத்தமியே! எனது சற்குருநாதனைப் பணியவா?'' என்று அன்புடன் அழைத்துக்கொண்டு இன்புடன்போய் ராமானந்த ஸ்வாமிகளின் திருவடிகளிற் பணிந்து நயனங்களை யணிந்து பயபக்தியுடன் நிற்க, சுந்தரா ஸ்வாமிகளின் திருவடிகளிற் சிர சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுப் பலதாம் முத்தமிட்டு இவ ரே பகவானென நினைத்துக் கண்ணீரால் அவர் பாதங்களை நனைத்து வெகுநேரம் அடிகளைத் தழுவினபடி கிடந்தாள். அப் போது ராமானந்த ஸ்வாமிகள் அதிசயித்து எழுந்திருக்கக் கடவாயம்மாவென்று அறைந்து கபீரை நோக்கி, "ஓ புனித னே! சூரியாஸ்தமானவேளையில் யாருடைய ஸ்திரீயை அழைத் துக்கொண்டு இங்கு அடைந்தாய்?'' எனக் கேட்டார். கபீர், "ஓ சுவாமி! தாங்களே நேற்றுமாலையில் மாணுக்கருடன் எழுந்தருளி வந்து இக்கன்னியை எனக்கு மணம் செய்துவைத்து அறி யாதவர்போல் கேட்குங் காரணமேதோ?'' என்று வணங்கினன்.

சுவாமிகள் ஆச்சரியப்பட்டவராய் "ஓ கபீர்! நான் உனக்கு வதுவையானதும் அறியேன்; இம்மங்கை உன் மனைவியென் றுந் தெரியேன்'' என்ருர். கபீர், "ஓ சுவாமி! தேவரீர் திருக்

கூட்டத்தோடு எழுந்தருளினதுமன்றி இராஜனையும் அழைப்பித்து இன்று காலையிற்றானே வேட்டல் செய்தீர்; இதற்குள் மறந்துவிட்டீரோ'' என்று பணிந்தான். சுவாமிகள், "ஓ அபத்திகனே! நான் உன்பால் வரவுமில்லை; இராஜனை விளிக்கவுமில்லை; வதுவைசெய்து முடிக்கவுமில்லை'' என்று அறைந்தார். பின் சுந்தராவை நோக்கி, "ஓ அம்மா பாக்கியவதி! நான் உங்கள் விவாகத்துக்கு வந்தேனா? நீ என்னைப் பார்த்தாயா? நிச்சய வார்த்தையைச் சொல்லும்'' என்றார். அதற்கு அந்த உத்தமி தன் கணவனை வணங்கி, "ஓ சுவாமி! நமது சத்குருநாதன் நிச்சயத்தைக் கேட்கின்றாரே சொல்லட்டுமா?" என்றாள். கபீர் சதிக்குப் பதியே தெய்வம் பதிக்குப் பரமாசாரியரே ஒப்பம். ஆதலால் சற்குரு முன்னிலையில் அசத்தியம் பேசுவோர் சண்டாளர். ஆதலால் உண்மையையே யுரைப்பாய் என்றான். சுந்தரா சுவாமிகளைத்தொழுது, "ஓ சுவாமி! ஓர் பகீரி பல மாணாக்கருடன் வந்து கலியாணத்தை முடித்தார்கள்.

அப்போது இராஜனும் வந்திருந்தான். ஈதுண்மைவசனம் என்று சொல்லினள். கபீர் பகீரியாய் பல மாணாக்கருடன் எழுந்தருளினவரே நீர். என்னுயிர் நீங்கினும் அசத்தியம் பேசமாட்டேனெனத் தொழுதான். ராமானந்தஸ்வாமிகள், "ஓ கபீர்! இப்பெண்ணிருக்கும் அழகைக்குறித்து ஆசைப்பட்டு விவாகஞ் செய்துக்கொண்ட மோகத்தாலல்லவோ தன்னை மறந்து பொய்மொழி பேசத்தொடங்கினாய். ஆரம்பத்திலே இப்படியான நீ சமுசாரஞ் சிலநாள் செய்வையாயின் பல துர்க்குணங்கள் நிறைந்து அபகீர்த்திக்குள்ளாவாய்'' என்றறைந்தார். அப்போது கபடநாடகனாகிய பகவான் ராமானந்த ஸ்வாமிகளின் முன் எழுந்தருளி காட்சிகொடுத்து, "ஓ ராமானந்தா! நானே உன்னுருகொண்டு என் பக்தனுக்கு மணஞ்செய்துவைத்தேன். ஈதுண்மை" என்று அறைந்து தன் திவ்ய அஸ்தங்களால் கபீருக்கும் சுந்தராவுக்கும் பூமாலைகள்சூட்டி, தனக்கிருக்கும் அன்பை வெளிப்படக்காட்டி, கபீர் என் கண்மணிக்கிணையானவனெனப் பாராட்டி, ஜகதீசுவரனாகிய பரமேட்டி அந்தரத்தில் மறைந்தார். அவ்வற்புதத்தைக்கண்ட ராமானந்தஸ்வாமிகள் களிக்கடலில் அமிழ்ந்தவராய், "ஓ ஓ! ஸ்ரீமந்நாராயணரை இன்று காணும்படியான பாக்கியம் என்ன செய்தேனோ! ஓ என் ஆண்டவனே! உன் அருமைப்பக்தன் வார்த்தையை மெப்பிக்க வந்தாயோ! அரிதான சேவை தந்தாயோ! கண்ணு

ரக்கண்டும் ஆனந்தங்கொண்டும் அன்புடன் துதிக்காமற் போனேனே! வாயில்லா வூமையானேனே! எனப் பற்பல வார்த்தைகளாடிச் சங்கீர்த்தனங்களைப்பாடி கபீரை ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு தனயன் நீயேயென விண்டு, "ஓ அரிபக்தனே! ஜீவன்முக்தனே! நீ அசத்தியனென்று உரைத்த என்மேல் முனிவுகொள்ளாதே; உண்மை யறியாதவனெனத் தள்ளாதே என்று பணிவாக உரைத்தார். கபீர் அவர் அம்புயவடிகளில் வணங்கி, "ஓ என்னுண்டவனே! உம்முடைய பாதமே கதி யென்று நம்பி யிருக்குமென்னை இப்படி துதிக்கலாமோ?" என்று கரைந்தழுது பகவான் கருணையை நினைத்து ஒன்றுந் தோன்ருதவரா யிருந்தார். அப்போது சுந்தரா ஒருநாளும் பார்க்காப் பெருமாளைப் பார்த்த நமது பாக்கியமே பாக்கியம்; நமது கணவனுடைய யோக்கியமே யோக்கியம்; இந்தச் சுவாமிகளின் வாக்கியமே மாவாக்கியம்; நாம் இன்று அடைந்த சிலாக்கியமே சிலாக்கியம் எனத் தன்னை மறந்து நின்ருள். இப்படி நிற்கும் சதிபதிகளை ஆரியர் ஆசீர்வதித்து நாடோறும் உங்களிருவருடைய தரிசனந் தரல் வேண்டுமென விடைகொடுத்து அனுப்பினர். கேட்டீர்களோ சித்தர்களே என்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லுவார்.

கபீர் விவாக அத்தியாயம் முற்றிற்று.

---

பதினோராவது

## கபீர் பசுவின்கன்றை கொல்லாமல் மறுத்த அத்தியாயம்



ஆக்கத்திற் சிறந்தவரும், ஊக்கத்தில் நிறைந்தவரும், ஏக்கமுந் தூக்கமும் நீங்கினவரும், நீக்கமும் நோக்கமும் ஓங்கினவரும், வாழுமிடமாகிய வாரணசியென்னுங் காசிப்பட்டணத்தில் ஜீவவதை செய்கிறதை விலக்கி, சகலருக்கும் மெய்ஞ்ஞானத்தைத் துலக்கி, அஞ்ஞானிகளின் மனதைக் கலக்கி, பிர்மத்திலொன்றுபட்டிருக்கும் நிலைக்கு பலவந்தமாய் அநேகரை வரும்படியாகச்செய்து பந்தபாசங்களைக் கொய்து அகமென்னும் வியாக்கிரமமேல் அம்பெய்து அயிம்ஸையானவஸ்திரம்நெய்து சகல சீவர்கள்மீதுங் கருணைமழை பெய்து, நட்சத்திரங்களிற் சிறந்த சந்திரனைப்போலவும், பசுக்களிற் சிறந்த காமதேனு

வைப்போலவும், விருட்சங்களிற் சிறந்த கற்பகத்தைப்போலவும் மாந்தரிற் சிறந்த தருமவானைப்போலவும், ஸ்திரீகளிற் சிறந்த கற்புள்ளவளைப்போலவும், விரதத்திற் சிறந்த ஜீவகாருண்ணியத் தைப்போலவும், பூசையிற் சிறந்த மானச பூசையைப்போலவும், விவேகத்திற் சிறந்த சாந்தத்தைப்போலவும், பிரமக் ஞானிகளிற் சிறந்த கபீரானவர் தனக்கு மணமானபின் தன் சிறியதந்தை யானவர் தன் மாதா பிதா மனையாள் முதலானோரையும் விருந் துக்கு அழைத்துத் தன்னைக் கூப்பிடாக் குறையால் மிகவும் வாடி தாய்தந்தையரை நாடி கூப்பிட்டுக்கொண்டே யோடி தெருக்கள் எல்லாமோடி விஷ்ணு சங்கீர்த்தனங்களைப்பாடி சிறியதந்தை செய்தது மோடி என்று எழுந்தெழுந்து கூத்தாடி சிறியதந்தை யின் வீட்டினுட் புகுந்து என்னை ஏன் விளிக்கவில்லை என்று அறைந்து அங்கு கூட்டமாயிருக்கக் கண்டு ஆச்சரியமேதென்று அவாக்கொண்டு கணத்துட் புகுந்துநின்று அனியாயமீதெனப் புகன்று நின்றார். அப்போது பசுவின் கன்று நாலுபேர் பிடிக்க நின்று கண்ணீரொழுக நின்று இவர்கள் நம்மைக்கொன்று பல் லாற் கடித்து மென்று ருசிருசியெனவே தின்று இன்புறுவர்கள் இது நன்று. வீணாய்ப்போதல் நன்றன்று. நமக்குத் துணையா மொன்று. நாமறியாமல் தொன்றுசெய்த தீவினையாமொன்று. இதற்குச் சாக்ஷி ஓர் குன்று. இனி நான் மனதை வென்று சேர லாஞ் சிற்சுகமன்று என்னுஞ் சொற்களைப் புகன்று பகவான் ஸ்ம ரணையோடு நிற்பதையும், துடுக்கர் கொல்ல நிற்பதையும் பார்த் தார். அப்போது அவர் தேகமெல்லாம் வேர்த்து கோதனத்தை மார்புடன் சேர்த்து அபயந் தந்தேனெனப் பேர்த்து, கொல்வது அழகல்லவென ஈர்த்துத் தன்னுயிர் அதற்குத் தாரைவார்த்து உயிர்பெற்று உய்வாயெனக் காத்து, இபிலீஷ் தனக்குத் தோர்த்து ஓடிப்போகிறதை நோக்கி துலுக்கரைக் கொலைக்குள்ளாக்கி ஜீவ காருண்யவிரதத்தை நீக்கி, மோட்சமார்க்கத்தைப் போக்கி, உன் வசத்திலானோரைப் பாழாக்கி, ஈடேருமற் கீழாக்கி, நரகஞ் சேர் தற்கு ஆளாக்கிச் செய்தாய். இம்மையே சாக்கி, ஆதலால் உன்னை இப்போது தூக்கி, இவ்வனலிற்போட்டுக் கரியாக்கிவிடுவேன் பார் என்று ஓங்கி முகம்மீது ஓர் அறை வாங்கிவிட்டார். இபிலீஷ் ஏங்கி உயிர் போனதுபோற் றேங்கி உம்மால் என்னுயிர் நீங்கிப் போதல் நன்றோ? அருட்சீலனே! அகட்டிற் பிறக்காப் பாலனே! கருணைக்கடற்கோர்மூலனே! சகலஜீவர்களுக்கும்அனுகூலனே! துடுக்கரை வெல்லுங் கோலனே! எனக்குக் காலனே!

திரிசூலனே! கதிர்வேலனே! பரிபாலனே! என்று தோத்திரம் புரிந்து மிகவும் பரிந்து அருவாயிருந்ததோ ருருவாகி, "ஓ அருட்சொரூப தர்மமே! ஓ சுகபரப்பிரமமே! இது நீயறியா மர்மமே. இது முன்செய்த கர்மமேயென்று தன்னநந் தன்னை யிழுத்துத் தாடிகளெல்லாம் பழுத்துநிற்போரே! இதன் கழுத்து அறுப்பீர். இது முன்கொழுத்து செய்துக்கொண்ட வெழுத்து. அதனாற் படிமீதழுத்து. காஜி கடவுளை வழுத்து" என்றார்.

அதைக்கேட்ட துடுக்கர் சொல்லுமுன் கொல்லும் மூடுக்கர் அங்கே வந்து உரைக்கும் பூதத்தின்முகத்தில் பொட்டில்லாமல் நீண்ட சொக்காயும், நீண்ட குல்லாவும் வெளுத்த முகமும், வெளுத்த நரையும், பல்லிற் கறையும், சொல்லிற் குறையும் உள்ளவனா யிருக்கவும், மொசல்மான்கள் தன் குலத்தில் உற்பவித்த முத்தகிழவனெனத் தீர்மானித்து நிற்போரிற் றமால்மாத்திரம் அனுமானித்துக் குலத்தோரைப் பார்த்து கரங்களைச் சேர்த்து "ஓ அன்பர்களே! எனக்குகந்த நண்பர்களே! இவ்விருத்தன் யாதோ விபரீதபூதத்தைப்போற் காண்கின்றது. ஆதலால் கிஞ்சிற்று அடியேன்மேல் கருணைகூர்ந்து இக்கன்றுக்குட்டியைக் கொல்லாமலிருங்கள்" என்று வேண்டினார். அதற்கு அக்கிழவன் நகைத்துத் தமாலைப் பகைத்து, "ஓ தமால்! நீ துலுக்கனா யிருந்தும்,சகலமுந் தெரிந்தும், அல்லா செய்கிறதை வெறுக்கின்றாய். குரான் மொழியை மறுக்கின்றாய். சகல ஜீவர்களையும் மனிதர் உபயோகத்திற்காகவே கடவுள் படைத்தார். அதில் ஆடு மாடு முதலாகியதைப் புசிக்கவே உண்டாக்கினார். இப்படி கடவுளால் அனுப்பப்பட்ட வேதத்தில் முறையிடுகின்றது. இதோ இக்காஜியும் மௌலியும் ஆதிவேதமான குரானைத் தீர்க்கமாய் வாசித்து, சகல மார்க்கத்திலுந் தேர்ந்திருக்கின்றார்கள். இவர்களைவிட நீயும் உன் சுதனும் ஓதினவர்களோ? வேதத்தின் இரகசியத்தை அறியா வுங்களுடன் வாது செய்வதற்கு இவர்களே போதும். நீங்கள் அகட விகடஞ் செய்கிறீர்களெப்போதும்" என்று நவின்றார். அதைக்கேட்ட கபீர், "ஓ மாயா பூதமே! நீ யுரைப்பது அபவாதமே; உன்னை நம்பினோர்க்கு அபராதமே; நீ செய்ததெல்லாம் அநீதமே; நல்லோர்க்கு மிகவும் பேதமே; விரோதமே வெகுசேதமே, மலிகுரோதமே; மருட்போதமே; என்னையா வெருவச்செய்ய வந்தாய் கலியே; நீ இன்றைக்கானுப் பலியே; ஞானப்பூசையுண்ணெலியே; துடுக்கருக்கெல்லாம் புலியே; இப்போது உனக்கு

நான் புலியே; சற்றுமுன் அடைந்தாய் கிலியே; என்முன் செல்லாது உன் வலியே; கொலைஞரைக் கொள்ளைகொண்ட நலியே; ஆணும் பெண்ணுமல்லா அலியே என்று அக்கன்றை நோக்கி, இடர் வேண்டாமெனப் போக்கி, பசு மஸ்தகத்தின்மேல் தனது அஸ்தத்தைத் தாக்கி, கொற்றிக்குச் சுகமுண்டாக்கி, மார்புடன் அணைத்துக்கொண்டு, ராமா ராமாவென விண்டு, என்ன கர்மஞ் செய்தாய் பண்டு, ஆனாலும் பகவானை அண்டு, பயமில்லை என் வாக்கல்ல இரண்டு, காசியில் நட்டிருக்கிறேனிண்டு, இந்த இபிலீஷ் எனக்கோர் பெண்டு, வெட்டுதற்குத் துரும்பின் துண்டு, உனக்குச் செய்யச்சொல்லுகிறேன் தொண்டு, அஹிம்ஸா விரதம் கொண்டு, இருகைபாற் கொலுமித் தண்டு என்று அங்கிருக்கும் ஓர் கோலையெடுத்து வீசினார்; சுவ்வரென்று பேசினார்; கன்றுக்கு சந்தனம் பூசினார்; நானெனல் நமக்கேனெனக் கூசினார்.

அப்போது அந்தத் தடியானது சரேலென்றெழும்பி வருவதால் இபிலீஷ் மனம்குழம்பி மௌலியின் பின்னாலோடி, நீங்களெல்லாங்கூடிக் கொடுத்துவிட்டீர் தாடி, ஆதலாலானீர் பேடி, ஆகாவிடி னீண்டோடித் தடியைப் பிடியுங்கள் நாடி, தமால் கபீரைக் கொண்டாடி, இவ்விதஞ் செய்தானென வாடி, குரான் சுலோகங்களைப் பாடி, அலால்செய் வார்த்தைகளாடி, கொலை செய்வோர்களைத் தேடி அதிசீக்கிரமாய் ஓடிப்போய்விட்டான். அப்படிப் போய்விடவே மொசல்மான்களெல்லாம் கோபதீப்தர்களாய் எரிந்து பொரிந்து, கபீரைப் பார்த்துக் கரத்தைப் பிடித்திர்த்து, "அடா கபீர்! எங்குலத்தி லுற்பவித்த விருத்தனை வருத்தப்படுத்தி என் ஓட்டிவிட்டாய்? நீ கெட்டாய். கோதனத்தை அலால்செய்வதைத் தடுத்தாய். அனைவரும் உண்பதைக் கெடுத்தாய். சுயமதத்தைவிடுத்தாய். இந்துமதத்தை யடுத்தாய். எங்களை வெல்லவோ சலந்தொடுத்தாய். அநேக துன்பங்களைக் கொடுத்தாய். நீ இங்கு என் வந்தாய்? வம்பு என் தந்தாய்?" என்று முடுக்கிச் சகலரும் மடக்கி வாயில்வந்தபடி பிதற்றத் தொடங்கினார்கள்.

அதற்குக் கபீர், "ஓ கொலைஞரே! ஜீவகாருண்யமில்லா வலைஞரே! ஓர் சீவனைப் பதைக்க வதைக்கலாமா? உயிர் நீங்கச் சிதைக்கலாமா? பஞ்சமா பாதகத்தில் முந்தினது கொலையல்லவா? பலதரம் சொல்லவா? கொலைபாதகமொன்று செய்பவன் களவு கட் காம குரு நிந்தையுஞ் செய்தவனாமே. ஜீவகாருண்யத்தால் மோட்சமடையலாமே. ஜீவஹிம்ஸை செய்பவருக்கு முத்தியில்லையெனல் சத்தியமா? அசத்தியமா? ஐயையோ! ஓ தேறித்

தெளிந்த மௌலியே! கல்வியில் வல்ல காஜியே! நீங்களாவது போதிக்கலாகாதா? உமக்கு அருளுண்டாகாதா? ஓர் பிராணியைக் கொல்லுவதுஞ் சந்தோஷமா? கொல்லென்றுரைப்பதும் சந்தோஷமா?" எனப் பல பரிதாப வார்த்தைகளாடினர். அப்போது மௌலி, "எங்கள் வேதத்தில் விதித்து இருக்கிறபடியே அலால்செய்வதை கன்றின் கழுத்தைக் கொய்வதை மறுத்தல் உனக்குத் தகவேதகாது. ஜீவகாருண்யமொழிகள் எங்கள் செவியில் புகவேபுகாது. ஏனெனின் பசுவின் உதிரஞ் சுண்டுதலால் உண்டாகும் பாலையுண்போர் தசையைப் புசிக்கலாகாதோ?" என்ருன். அதற்குக் கபீர், தாயின் பாலையுண்ணுஞ் சகலரும் அவ்வன்னையின் மேதையையும் உண்ணலாமோ? என்ருர். மௌலி, "மானிடருக்கும் மிருகங்களுக்கும் பேதமில்லையா? அன்றி மாந்தருக்காகவே படைத்த மிருகங்களைக் கொல்வதால் பழுதில்லவேயில்லை" என்ருன். கபீர் "சகல ஜீவர்களையும் ஏகக்கண்ணுற்பார்க்கும் ஜகதீசுவரன் பாரபட்சமாய்ப் பார்ப்பாரா? பாரபட்சமாய்க் காப்பாரா? மிருகங்களுக்கு இருக்கின்ற விவேகம் மானிடர்களுக்கு இருக்கின்றதா? அதை ஒருவரால் அறிந்துக்கொள்ளத் தக்கதா? நம்மைப்போல் மிருகமும் யுக்தியுஞ் சத்தியுங் காட்டுமாயின் நம்மாற் கொல்லக்கூடுமோ? கொல்லென்று சொல்லக் கூடுமா? கோவாலல்லவோ பல தானியங்களும் வெகு மானியங்களும் பெறலாம். பால் தயிர் நெய் மூசர் முதலானது உண்டு சுகமுறலாம். சகாயஞ் செய்வதைக் கோறல் நலமோ? வதைத்தல் நமக்குற்ற பலமோ? அல்லது ஆணவமலமோ? பாவஞ் செய்தலுஞ் சலமோ? அலால் செய்தலே குலமோ? ஆச்சரியம்! தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்க்கத் தேவையில்லையா? ஜீவகாருண்யம் மேலான தவம் அல்லவா? இதற்குத் தகுதியான உத்தரஞ் சொல்லையா? சொல்லி என்னை வெல்லையா? என்று இக்கோதனத்தைக் கொல்லையா?" என்ருர். மௌலி கடவுளைத் துதித்து உயிர்வதை செய்வதால் பாபமில்லை என்ருன்.

கபீர் மனே வாக்குக் காயமென்னுந் திரிகரண சுத்தியோடுங் கூடிக் கடவுளைத் துதிக்கவேண்டுமே யல்லது கொலைபாதகஞ் செய்யும்போ துன்னல் மிகவும் அபராதம் என்ருர். மௌலி கடவுளைத் தியானித்தலால் செய்ததே புசிப்பதற்கு யோக்கியமானதன்றி மற்றது கூடாது என்ருன். கபீர் நாற்காலிருகாலுள்ள ஜீவர்களை அலால்செய்ததால் அதன் கர்ப்பத்துக்குற்ற குட்டியும் முட்டையும் அலாலானதல்லவே; அதைப் புசிப்பது என்?

என்றூர். மௌலி கருவிலுருங் கொற்றியையு மண்டத்தையும் அலால்செய்யக் கடவுள் விதிக்கவில்லையே யென்றுன்.

கபீர் நிருபமாய் நிஷ்களமா யிருக்குங் கருணுகரக்கடவுள் ஓர் பிராணியைப் பதைபதைக்கச் சிதைத்து வதைக்கக் கட்டளை கொடுப்பாரா? கொடுத்துக் கருணுநிதியென்கிற தன் பேரைக் கெடுப்பாரா? கொலைசெய்தோர் நரகத்திற்புகுவதைத் தடுப்பாரா? ஜீவரட்சணையை விடுப்பாரா? கொல்லக் கட்டளையிட்டவர்க்குக் கருணுகரனென்கிற பேர்கூடுமா? அவர் ஆக்கினைக்கு உட்படுவது ஆடு மாடுமா? ஓ காஜி! நான் சொல்லுவதைக் கேளும். அதாவது ஜலம் அசாஜீவன்களுக்கு சரஜீவன் சரஜீவர்களுக்கு ஆகாரமாகப் பகவான் செய்திருக்க, அதைவிடுத்து அதோ கதிக்கு ஆளாக்குங் கொலைசெய்து உண்ணக் கட்டளையிட்டா ரென்று உரைக்கும் மொழி விபரீதமாயிருப்பதன்றி மிகவும் அபாாதத்துக்கும் ரவுரவாதி நரகத்தை யடைவதற்கும் இடமா யிருக்கின்றதே என்றூர். மௌலி கடவுள் கொலைசெய்யும் கொடிய மிருகங்களை உண்டாக்கின காரணமேது? என்றுன். கபீர் தன் தாயைப் புணரு மிருகத்தின் செய்கையைச் சாத்திரத் திற் பேசக்கூடுமோ? என்றூர். மௌலி ஜீவன் எல்லாவற்றிற்கு முண்டோ? என்றுன்.' கபீர் சரவசரங்களிற் பேதமில்லையே? என்றுன். மௌலி ஜலமெல்லாம் ஜீவமயமா யிருக்கின்றதே என்றுன். கபீர் ஈதுண்மையாயின் அலால்செய்யுங் காரண மேது? என்றூர். மௌலி கொலைசெயல் கொடிய பாபமாயின் இந்துக்கள் பலியிடுவது பாபமல்லவோ? என்றுன். கபீர் பாமரர்கள் இஷ்டகாமியார்த்த நிமித்தம் துஷ்டதேவதைகட்குப் பலியிடுகின்றூர்கள். அதுவும் கொடியர் செய்யுங் கொடுங் காரியமே. அவர்கட்கு நரகமே பிராப்தியாகும் என்றூர். மௌலி தேவதைகளிலும் இரண்டுவிதமுண்டோ? என்றுன்.

கபீர் பிரமருத்திராதியர் சிரேஷ்ட தேவதைகளென்றும், காளி வராகி சத்திகள் துஷ்டதேவதைகள் என்று சொல்லப் படும். அதில் துஷ்டதேவதைகளைப்போல் சிரேஷ்ட தேவதைகள் பலியைக்கோராமல் தூபதீப நைவேத்தியங்களாற் சந்தோஷப்படுகின்றூர்கள்" என்றுன். மௌலி அஸ்வமேதாதி யாகங் களிற் கொன்ற பிராணியின் அவிர்ப்பாகத்தை விஷ்ணு முதலானவர்கள் இச்சிக்கவில்லையோ? என்றுன். கபீர் பிரமம், தெய்வம், பூதம், பிதுர், மானுஷமென்று ஐந்து யாகமுண்டு. அதில்

வேதமோதல் பிரமயாகம், ஓமம் வளர்த்தல் தெய்வயாகம், பலி யிடல் பூதயாகம், தர்ப்பணமுடித்தல் பிதுர்யாகம், இரப் போர்க்கு உணவு முதலியவை யீதல் மனுஷயாகம் என்று ஆதிவேதத்தில் முறையிடுகின்றது. ஆனுற் பலியேற்றுக்கொள் ளுதல் பூதத்தின் கொள்கையாம். பிரம்மாதி தேவர்கள் மந்தி ரோச்சாடனங்களால் மரித்த ஜீவனை அக்கினிஷ்டோமங்களாற் பஸ்பமாக்கி அப்பூதியையும் மற்ற வஸ்துக்களையும் அவிர்ப் பாகமாகக்கொண்டும் பின்னும் அச்சீவனை மந்திரபலத்தால் எழுப்பவேண்டும். இன்றேல் அதற்கு மேலான பதவியைக் கொடுக்கவேண்டும். கொல்லவும் எழுப்பவும் வல்லவர்கள் பூத யாகஞ் செய்யவேண்டும். யாகமந்திரஞ் செபிக்கும் பூசுரன் அவ்யாக முடியும்பரியந்தம் நித்திராகாரமின்றி யிருக்கவேண்டு மென்றும், பூதயாகத்தைக் காமியார்த்தத்தின் நிமித்தமே யென் றும், மதுமாமிசத்தின்மேல் இச்சையுள்ளவர்க்கே உரியதென் றும், இதற்கு உடன்படுவோர் மாயாசம்பந்த முடையவர்களே யென்றும், இதை எவ்வளவு சிறப்புடன் செய்தாலும் சாகினி டாகினி முதலான பூதங்கள் களிப்படையும் பூதயாகமே யென் றும் சொல்லும் வேதத்தின் கருத்து. பலியிடும் யாகத்தை விலக் கியதன்றி செய்யச் சொல்லவில்லையே. உங்கள் குரானிலோ மாயாரகிதமாய் நிருபமாய் நிர்ப்பேதமாய் இருக்கும் பரப்பிர்மத் தைத் தியானித்து உயிர்வதை செய்தால் பாபம் இல்லை யென் றும் இது கடவுள் கட்டளையென்றும் உரைக்கின்றதே; அதை மெய்யென்று நம்பி பேதைமையுடைய மானிடர்கள் கொல்லும் புழுவைப்போல் நாளொன்றுக்கு அனேகங் கோஹத்தி செய்து நிரையத்துக்காளாய் இருக்கிறார்களே? இந்துக்கள் சகஸ்திர வருஷங்களில் ஓர் யாகஞ் செய்தல் அரிதாயிருக்கின் றதே? நீங்கள் அரை நாழிகையிற் சகஸ்திர கோக்களைக் கொல் லுகிறீர்களே? அன்றிப் பசுவைத்தானு வதைசெய்து உண்ண வேண்டும்; கோமேதமாதி யாகங்களைச் செய்வோர்க்கு மாயா சம்பந்தமான லோகங்களின் பிராப்தியே யல்லது மோட்ச மில்லையென்றும், சுரபியானது பயிர் தின்றல் முதலான தீங்கு செய்யுமாயின் அதை வாயால் அதட்டி ஓட்டவேண்டுமென்றும், கையாற்றட்டி ஓட்டக்கூடாதென்றும், ஓர் வேளை தட்டியோட்டு வதால் ஒரு ரோமம் உதிருமாயின் அதனுல் நிரையத்துக்கு ஆளாகவேண்டுமென்றும், ஆதிவேதத்தில் முறையிடுகின்றதே. அல்லாமல் அசரமான விதையையே புசிக்கவேண்டாமென்றும்

ஆதாமுக்குத் திருவாய்மலர்ந்த கருணாலயன், அலால் செய்யுங்களென்றும், செய்யும்போது என்னைத் துதியுங்களென்றும், துதித்தால் பாபம் உமக்கில்லையென்றும் உரைத்திருப்பாரா? வாயில்லா யேழை மிருகங்களை வெறுப்பாரா? கொலை பாதகம் ஒருவரைவிட்டு நீங்குமா? அதிலும் கோஹத்தி கொடியநரகத்திலமிழ்ந்தாமல்விடுமா? ஐயையோ! உங்கள் குரானில் இவ்வனீதத்தைச் சொல்லியிருப்பதன்றி இசாக் என்பவனுக்கு உரிய வேதத்தில் நிர்க்குணமாய் நிர்மலமாய் நிராங்காரமா யிருக்கும் பராபரத்துக்கு மிருகங்களைப் பலியிடவேண்டுமென்றும், அப்படி பலியிடுவதால் மாந்தர்களின் பாபவிமோசனமாய்ப் பரிசுத்தமாவார்களென்றும், இது தேவனுடைய கட்டளையென்றும் சொல்லியிருக்கின்றதே அனியாயம் அனியாயம் மிருகங்கள் பயன்படுவதென்ன? மனுஷர் பரிசுத்தமாவதென்ன? அந்தோ! இதை மெய்யென்றும், தேவனுடைய கட்டளையென்றும் நம்பலாமா? நம்புவோர் மோட்சமடையப்போமா? பூதமேற்றுக் கொள்ளும் பலியை கருணாசாகரனை பரமேஸ்வரன் ஏற்றுக் கொள்ளுவாரா? மிகவும் பரிசுத்தமான பரப்பிரமக்கடவுள் மிகவும் அசுத்தமான உதிரத்தை யிச்சிப்பாரா? கொலைசெய்யும் கொடியபாவிகளை ரட்சிப்பாரா? அன்றி கொலைசெய்யவும் பலியிடவும் உண்டாகிய கட்டளை தீனதயாபரனை பரமேஸ்வரன் இட்ட கட்டளையா? ஆதாமைக்கெடுத்த பைசாசத்தின் கட்டளையா? மாமிசேச்சையுள்ள மாந்தர்கள் எழுதிவைத்த கட்டளையா? நன்றாயோசிக்குமிடத்துக் கொடிய மூதேவிக்குணமுள்ள பூதத்தினுடைய மாயைக்குட்பட்ட மனிதர் வரைந்த கட்டளையாகவே யிருக்கும்; இதிற் சந்தேகமேயில்லை. அப்படிக்கு ஐயமிருக்குமாயின் சொல்லும் மௌலியென்றார்.

அதற்கு மௌலி கடவுளிட்ட கட்டளையே யன்றி மற்றவர்களின் கற்பனையேயல்ல. இக்கட்டளை இப்பிராயிம்பயம்பர் காலத்திலேயே உண்டாயிற்று. இதற்கு அநேக திருஷ்டாந்தங்கள் குரானிற் சொல்லியிருக்கிறது என்றான். கபீர் இக்கொடிய கட்டளை இப்ராயிம் காலத்தில் உண்டானது உண்மையேயாம். எப்படியெனின்? ஆஜராவின் குமாரனாகிய இஸ்மாயிலைப் பலி கேட்க, அவன் தந்தையாகிய இப்ராயிம் ஆட்டைப் பலிகொடுத்துத் தன்னைச் சேர்ந்தவர்களைக் கூட்டிப் பிரஷ்டர்களாக்கினான். அதை இஸ்மாயில் இனிமேல் எப்போதும் இப்பலி தன்மதத்தோர் கடவுளுக்குக் கொடுக்கும்படியாய் அந்தரங்கமாய் போதி

த்து வந்தனன். அதாவது கடவுளைத் துதித்து ஒருயிரை வதைத்தால் கடவுளுக்குப் பலியானதேயன்றி வீணுகவில்லை. எப்படியென்ருல் சகலரும் கேட்க, "ஓ கடவுளே! உனக்குப் பலி கொடுக்கிறேனென் றுரைத்தலும், ஒருவருங் கேட்காமல் கடவுளைத் தியானித்தறுத்தலும், ஓர் அர்த்தமின்றி உபயமல்ல. எப்போது ஜகதீசுவரனுடைய திருநாமத்தை வழுத்தி வதை செய்தானே அது ஈசுவரனுக்கே அர்ப்பணமாயிற்று. இதை மெய்யென்று உறுதிப்படுத்த இஸாக்கால் உண்டாகிய வேதமே போதுமான சாட்சியா யிருக்கின்றது. அதேதென்ருல் இப்பிராயீம் இளைய மனைவியாகிய சாராவென்பவள் தன்னுயிர்போல் பாதுகாத்து வளர்த்த பசுவின் கன்றைப் பலிகொடுத்து இஸாக் என்பவனைப் பெற்ருள். அவன் வயதுமேலிட்டு, சிலருக்கு ஆசாருகித் தன் தாய் கொடுத்தபடி தன்னைச் சார்ந்தவர்கள் அனைவரையுங் கடவுளுக்குப் பலியிடும்படியாகக் கற்பித்தான். அன்று முதல் அவர்கள் பலியிடத்தொடங்கினுர்கள்.

இசாக்கென்பவன் பகிரங்கமாய்ப் பலி யிடும்படியாகக் கட்டளையிட்டான். சகலருமறிய விபசாரம் செய்பவளைப் பார்க்கிலும், ரகசியமாய் விபசாரஞ் செய்பவள் மிகவுங் குற்றத்துக்குட்பட்டவளாவாள். அதுபோல் அந்தரங்கமாகப் பலியிடும் உங்களுக்கு அதிக ஆக்கினை கிடைக்காமற்போகாது. இவ்வித குற்றங்களுக்கு ஆளாக்கிவிட்டது ஆதாமைக் கெடுத்த மாயாபூதமேயாம். துஷ்டர்கள் இஷ்டகாமியார்த்தமாகக் கனிஷ்ட தேவதைகளுக்கு இடும்பலியைச் சிரேஷ்டமான மாயாதீத பரப்பிரமத்துக்கிடல் மாயா சம்பந்தமன்றி ஞானசம்பந்த மல்லவேயல்ல. எங்ஙனமெனின் எள்ளுக்கு ளெண்ணெபோலவும் பாலுக்குள் வெண்ணெபோலவும், பரிபூரணமாய் நிறைந்திருக்கும் நிரூப நிராங்கார நிர்விகார நிர்மல நிரதிசயானந்த கடவுளுக்குப் பலியிடல் கொடிய செய்கையல்லவா? பலதாஞ் சொல்லவா? உங்கள் தாயாதிகளான இசாக்மதத்தோர் பராபரமான பரிசுத்த பரமேசுவரனுக்கு ஒரோர்காலத்தில் நரபலியுமிடுகிருர்கள். அதுவே பூதத்தின் செய்கையெனக் காட்டப் போதுமான சாட்சியாயிருக்கின்றது. துஷ்ட தேவதைகளுக்குப் பலியிடவும், கடவுளுக்குப் பலியிடவும், நேரிட்டகாரணம் நரகம் புகலவும் பலர்வேண்டியதைக் குறித்தேயாம். 'நோன்பென்பது கொன்றுதின்னுமை,பரமாத்மா ஸர்வஜீவாத்மா அமிம்ஸா பரமோதர்மா தன்னுயிரைப்போல் மன்னுயிரைக்காத்தலே தவம்

என்கிற வாக்கியங்களை நன்றாயோசித்துப்பாரும். குறளில் நான் காம் வகுப்பை வாசித்துப் பாருமென்று உரைத்தார். ஓ மௌலவி! கொலை செய்வோருக்குக் கொடியநரக மென்பதற்கு மாட்சிமை யான காட்சிகொடுக்கிறேன் பாருமென்று அக்கன்றின் மஸ்தகத் தின்மேல் தனது அஸ்தத்தை வைத்து, "ஓ கொற்றியே! கொலை செய்வோர்களுக்குக் கொடிய நரகம் பிராப்தியாதல் சத்தியமா? அசத்தியமா? சொல்வாயெனத் திருவாய்மலர்ந்தருளினர்.

அக்கோதனமானது கபீர் உபயபாதங்களின்மேல் தன் தலை யைச் சாய்த்து வந்தனஞ்செய்து கண்ணீர்விட்டழுது, "ஓ ஸ்வாமி! என்னுடைய சரித்திரத்தைச் சற்றே கருணைகூர்ந்து கேட்டருள்வீரேல் அதுவே தேவரீர் வினவுக்குப் போதுமான சாட்சியாகும். நரகமென்பது வேறிடத்திலில்லை. தசை என்பு நரம்பு தோல் மயிர் பச்சை மலசலம் பீளை முதலானவைகளும் நிறைந்திருக்கும் இத்தேகமே நரகமென்னப்படும். இதற்குற்ற குன்மம் குஷ்டம் க்ஷயம் வாதவிரோதம் முதலான கொடிய ரண வியாதிகளே எமதண்டனையெனச் சொல்லப்படும். ஈது உமக்குத் தெரிந்ததே. இனி என் வரலாற்றைச் சொல்ல வெகு ஆச்சரிய மும் பெருந்துக்கமுமா யிருக்கும். அதாவது நான் முற்பிறப்பில் மிகவுங் கற்றறிந்த பிராமணனாகும். நான் ஓர் காலத்தில் இமோற் பர்வதத்தின் சமீபமாக ஓர் காரியார்த்தமாய்ப் போகையில் அங்கு சிலமாந்தர்கள் ஓர் மானைக்கொன்று அதின் சதைகளை வகிர்ந்து பங்கிட்டுக்கொண் டிருந்தார்கள். அதைக்கண்ட என் கண்களின் வழியாய் மாயா சம்பந்தமான மனம் வெளிப்பட்டு அந்த அரிணத்தின் ஊன்மே லிச்சைகொண்டு என்னைப் போக விடாமல் நிறுத்திவிட்டது. பின்பு அம்மனதை எதிர்த்து நான்சொன்ன வாக்கியங்களாவன: "ஓ மாயாமனதே! உன் தே கத்தின்மேல் உனக்கு எவ்வளவு இச்சையோ அப்படியே சகல ஜீவர்களுக்கும் இச்சையிருக்குமல்லவா? அது பதைக்கக் கொன்று தின்று பருத்தும் பெருத்துக் கொழுத்து இவ்வுலகில் எத்தனை நா ளிருக்கப்போகிறாய்? புல்லைப் புசித்து வளர்ந்த பிரா ணியையறுத்து உண்பதால் உனக்கு நிரையமன்றி பிணிகளாற் சூழப்பட்டு வாத பித்த சிலேட்டுமங்க ளென்கிற காலன் எமதூத னென்பவர்க்கு ஐக்யமாய்த் தாழப்போகிறாய். ஓர் சீவன் மேதை தனக்குற்ற ஓர் புண் ணுக்கிணையானதென்று உன் கண்ணாற் பார்த் தும் அஞ்ஞான சம்மந்தத்தால் வாஞ்சித்தாய். ஐயோ! கொல் பவர்க்கு ஒருபங்கும், உண்பவர்க்கு எண்பங்குபாபமென்று உரைக்

கும் வேதங்களை யோதியிருந்தும், மதுமாமிசங்களை மறந்து நினையாமலிருப்பதே பிராமணராசாரமென் றறிந்தும் மடமைக் குணத்தால் மாங்கிஷத்தை இச்சித்தாயே. இச்சித்தபோதே பட்சித்தாயே. அந்தோ! ஒருநாளன்றி மறுநாள் புசிக்கத்தகா புழுக்கள் நெளிந்த புலாலைப் புசிப்போர்மீது புங்கவன் பூரணகடாக்ஷம் வருமோ? ஓ பேதமைமனதே! யானைத்துதிக்கைபோல் நெய்சொரிந்து கோடி ராஜசூயயாகம் செய்வதிலும், ஓர் உயிரைக்கொன்று தின்னுதிருக்கும் ஜீவகாருண்ணிய விரதம் மேலானதல்லவோ? என்னும் இவ்வித நீதிகளைப் பலவாறோதி என் மதிக்குப் போதித்துக் கொண்டிருந்தேன். அப்போது அதைக் கேட்ட சாரங்கத்தின் தசையைப் பங்கிட்டுக் கொண்டிருந்த மிலேச்சருக்கு மேன்மையான ஜீவகாருண்ணியம் பிறந்து, ஐயோ! அறியாமையால் அரிணத்தைக் கொன்று பாவத்துக்காளானோமே. இப்பழி எவ்விதத்தால் நீக்கிக்கொள்ளப் போகிறோமென்று அலக்கணுற்று அயர்ந்து பெருமூச்சுவிட்டு என்னை நோக்கி, "ஓ பிராமணோத்தமா! நீ இச்சித்த மேதையை நீயே யேற்றுக்கொள்" என்று என்மேலெறிந்து தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள். பின்பு நான் என்மேலெறிந்த மாமிசங்களைப் பார்ப்பதற்கு அசங்கியமும் அச்சமுற்றவனுப் கண்களை மூடிக் கொண்டு நிற்கையில், அங்கொரு கலைமான் வந்து பிரலாபித்துத் தன் பிணையைக்கொன்றவன் நானேயெனத் தீர்மானித்துக் கூர்மையான கொம்பால் என்னைக் குத்தி வீழ்த்திக் கதறிக் கொண்டே போய்விட்டது. பின்பு நானெழுந்து நடக்கச் சக்தியற்றவனுய் அம்மலையருகில் நகர்ந்துக்கொண்டே போய் ஓர் குகையிற் றங்கியிருக்க, அர்த்தராத்திரியில் ஓர் தவயோகி அக்குகைக்குள்ளிருந்து வெளிப்பட்டு என்னுடைய தேகமெல்லாம் உதிரமயமாய் இருப்பதைப்பார்த்து அருகில் வந்து என்னை யாதரணைசெய்து நீயார்? இவ்விதத் துன்பம் ஏன் வந்தது? என்று வினவினர்.

அவரைக்கண்டு ஓ ஸ்வாமி! நான் வேதபாராயணஞ் செய்யும் வேதியன். என் வரலாறு இவ்விதமென மேல்நடந்த யாவுஞ் சொல்லவே, அத் தபோதனன் மறையோனு யிருந்து மாங்கிசத்தை இச்சித்தாயா? நீ இக்குகையிலிருந்தால் எனக்கும் பாபம் வந்து நேரிடுமெனத் தன் சூலத்தாற் குத்தித் தூரமாய் எறிந்துவிட்டான். பின்பு ஓர் மூட்புதரில் வீழ்ந்து நான் கதறியழுது, "ஓ ஸ்வாமி! யான்செய்த தீவினை தீரவும் சீக்கிரம் என்

பிராணன் நீங்கவும் கருணைபுரியுமையா" என்று தோத்திரஞ் செய்தேன். அப்போது அக்கருணாசாகரனை முனிசிரேஷ்டன் யாது காரணத்தாலோ அதிசீக்கிரமாய் என்னருகில் ஓடிவந்து, "ஓ பிராமணோத்தமா! யான் செய்த குற்றத்தை மன்னியும்; தவத்துக்கு ஜீவகாருண்யமே விரதமெனத்தெரிந்திருந்தும் உன் தீவினையானது எனக்கு முனிவு வரும்படியாகச் செய்து உனக்குற்ற பாபத்தில் எனக்குப் பாதிவந்தடைந்தது. அதை நீக்கிக்கொள்ளும்பொருட்டுக் கங்காதீரத்தில் தவஞ்செய்யப் போகிறேன். உனக்கு ஏதாவது உபதேசஞ் செய்வேனாகில் மற்றப் பாதிபாவமும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாகும்; இனி உன்பால் அரைக்கணமும் தங்கேன்" என்று உரைத்துக்கொண்டே வாரணாசியை நோக்கி, ஓ காசிவிசுவநாதா! பூதகணநாதா! என்று ஓடத்தொடங்கினார். உடனே என் பிராணனும் அக்காசிநாதரைத் தியானித்துக்கொண்டே உடலைவிட்டு நீங்கிக் காசியைபடைந்து புண்ணிய ஜென்மமான கோவின் கர்ப்பத்திற் பிரவேசித்து 10-மாதங்கள் பரியந்தம் விஸ்வநாதரைப் பூசித்துப் பின்பு இப் பூவுலகிற் பிறந்து யாவும் மறந்து மாமிசத்தை இச்சித்த குற்றத்தால் இந்தத் துடுக்கர் கையில் அகப்பட்டுக் கக்கசத்துக்குட்பட்டு நிற்குந் தருவாயில் பிரமமே ஒருருவான நீர்வர உம்மைத் தரிசித்துப் பூர்வக்ஞானம் பிறந்து கண்ணீர்விட்டு அழுதேன்; கடவுளையுந் தொழுதேன்; பின்பு உமது அஸ்தம் என் மஸ்தகத்தின்மேல் வைக்கவே எல்லாப் பாவங்களும் நீங்கிப் பரிசவேதியால் நவலோகங்கள் களங்கம் நீங்கிப் பசும்பொன்னானது போலப் புண்ணியவானானேன்.

ஓ பரமபுருஷா! பரமசொரூபா! என்மேல் உமக்குக் கருணை வந்த காரணம் முற்பிறப்பில் பிராணன் நீங்குங்காலத்தில், தவயோகியின் தரிசனங்கண்ட பலனல்லவோ. இனி நான் மோக்ஷ வாழ்வைப் பெற்றேன்; பாசபந்தங்களற்றேன். ஓ சுகயோகியே! ஆனந்தபோகியே! ஜீவகாருண்யத்தைக் கைவிடாதே; ஜீவ யிம்சை செய்வோர்களைத் தொடாதே; காருண்யமிலார்க் குன் பாதங் கொடாதே; காருண்யமிலாருக்குக் கையெடாதே; என்கிற வாக்கியங்களை யுரைத்துக்கொண்டே மாயமாக மறைந்து பரம பதத்தை யடைந்தது.

கேட்டீர்களோ சித்தர்களே! இவ்விதமாகக் கோதனம் மறைந்தபின் அங்கு நிற்கும் பலரும் கபீரும் கன்றுக்கு உண்டான பாக்கியத்தைக் குறித்து ஆனந்தபரவசராய்த் தன்னை மறந்து சற்று

நேரமிருந்து பின்பு தெளிந்து தோத்திரஞ்செய்யும் மௌலிமுத லானவர்களை நோக்கி, "ஓ சீலர்களே! கொற்றியுரைத்த வாக்கி யங்களைக் கேட்டீர்களா? சீவகாருண்யத்தைக் குறித்து முற்காலத் தில் ஓர் விசித்திரயான கதை நடந்திருக்கின்றது. அதாவது நேபாள நகரத்துக்கு அருகாயிராநின்ற ஓர் பட்டணத்துக்கு இறையவனும் அமைச்சனும் தன்னகருக்கு இருகாததூரத்தி லிருக்கும் ஓர் பத்திரகாளியின் கோயிலுக்கு இரவில் இருஜாமங் கழிந்தபின் இருவரும் போய்க் காளியைப் பூசித்துத் தங்கள் இஷ்டகாமியார்த்தத்தை முடிப்பிக்கவேண்டுமென்று பிரார்த் தனை செய்துக்கொண்டே வந்தார்கள். இப்படிப் பனிரெண்டு வருஷங்கள்கழிய ஒருதினம் பத்ரகாளி நராதிபன்முன் பிரசன்ன மாகி இக்கணத்தில் எனக்கு ஓர் நரபலி கொடுப்பையாகின் உன் னிஷ்டகாமியார்த்தம் முடியுமென்று நவின்றனள். அரசன் அதற்கு அமைச்சனை நோக்கி, "ஓ மந்திரி! இதற்கு என்னசெய் யலாமென, அமாத்தியன் நாம் நகரிற்போய்க் கொண்டுவருவ தற்குள் சூரியோதயமாகும். தடையின்றி என்னைப் பலிகொடுத்து உமது இஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளுமெனப், பார்த்தி பன் நாமிருவரல்லோ சுக மனுபவிக்கப் பனிரெண்டு வருஷ மாய்ப் பூசித்து வந்தோம். அப்படியிருக்க நீர் இப்படிச் சொல் வது தகாது. வேறுமனிதனையே தேடவேண்டுமெனத் துணை வன் நாமிருவரன்றி வேறுமனிதரில்லை. என்ன செய்யலாமென் னப் பூபதி அர்ச்சனைசெய்யும் அந்தணன் இருக்கின்றான். அவ னைப் பலியிடுவோமெனத் துண்ணியன் ஸ்ரீஹத்தியிலும் சிசு வத்தி கொடியது. சிசுவத்தியிலும் கோஹத்தி கெட்டது. இதனி லும் குருஹத்தி தீயது. இதனிலும் பிர்மஹத்தி பொல்லா தென்று உரைக்கும் நீதிநூலைக் கற்றறிந்த நாம் பிர்மஹத்திக்கு உட்படலாமோ வென்றான். நரேந்திரன் நீர் சொல்லுவது நிச் சயமானாலும், விருத்தப் பிராமணனைக் கொல்வதால் வரும் பாபம் அவன் தனயனுக்கு நமக்குக் கிடைக்கும் வரத்திற் பாதி கொடுப்பதால் விமோசனமாகாதோ? என்றான். எனாதியன் அர்ச்சகனை விளித்து இராஜன் கருத்தை யறிவித்தனன். வேதியன் அரசனும் அமைச்சனும் ஒன்றானபின் நம்மொழி நடப்பதரிதென்று ஒன்றும் உரைக்கா திருந்தனன். நிரு பன், "ஓ பூசுரனே! எங்கள் மொழிக் கிணங்குவையாயின் உனது தனயனுக்கு என் இராச்சியத்திற் பாதிகொடுப்ப தன்றி இப்போது பெறும் வரத்திற் பாதி கொடுக்கின்றேன்.

மறுக்கவேண்டா மென்முன். ஆதிவருணன் இனிநமக்கு முடிவு காலம் வந்ததாயினும் நெடுநாளாய் அன்புடன் பூசித்துவரும் என்னைத்தானு இக்காளி பலிகொள்ள வேண்டுமென்று உன்னிக் கோயிலிற் பிரவேசித்துக் கோபமேலீட்டால் காளியின் கன்னத்திலறைந்து, அடீ சாமுண்டி! சண்டிகை! காளி! வேதாளி! திரிசூலி! மிகுநீடி! ஏழாண்டிலிருந் தெழுபதாண்டு வரையிற் பூசித்த என்னைத்தானு பலிகொள்ள ஆசித்தாய். நீயுமுன் கோயிலும் பாழாய்ப்போகவென் றிறைந்தறைந்தான்.

அப்போது அம்மறையோன்முன் காளி பிரசன்னமாகி, "ஓ விப்பிரனே! நீ முன்பிறப்பில் சூத்திரனுயிருந்து உன்னிஷ்டகாமியார்த்தமாய் இரண்டு ஆடுகளைக் கொண்டுவந்து என்முன் னிறுத்தி வாளாலிரண்டையும் ஒரேவெட்டாய் வெட்டி மடித்தாய். அவ்விரண்டும் இவ்வூருக்கு அரசனும் அமைச்சனுமாகி இப்போது உன்னை வெட்டத் துணிந்தார்கள். அவர்களிருவரும் ஏககாலத்தில் உன்னைப் பலிகொடுக்காவிடின் இன்னம் ஓர் ஜென்மமெடுத்துப் பலியாகவேண்டியதாய் நேரிடும். அதினுலேயே நீ எனக்குப் பலியானுய்; வீணுய்க் கோபஞ்செய்யாதே" என்றுரைத்து எதாவுருவாய் நின்முள். உடனே அம்முப்புரி நூலோன் ஆலயத்திலிருந்து வெளிப்பட்டு அரசன் அமைச்சனைநோக்கி "நீங்களிருவரும் ஏககாலத்தில் என்னை வெட்டுகிறேனென்று வாக்கைக் கொடுத்தால் உங்களிஷ்டத்துக்கு உட்படுகிறேன்" என்முன். அமைச்சன் அரையனை நோக்கி, "ஓ ஸ்வாமி! அருணமிரண்டும் அரசனும் அமைச்சனுமானதும் அவைகளை வெட்டினவன் அந்தணனுய்ப் பிறந்தும் ஏழுவயதிலிருந்து எழுபது வயதுமட்டும் பூசித்தும், கொலைபாதகம் விடாமல் அவ்வாட்டின் பிறப்பான நம்மிருவரால் பலிக்கு உட்படும்படியாய் நேரிட்டதே. ஐந்தறிவுள்ள மறையோனை மாரணஞ்செய்யவும் பாவம் நம்மை எக்கதியிற் கொண்டுபோய் விடுமோ? நமக்கு வரமும் வேண்டாம்; வாழ்வும் வேண்டாமென்று உரைத்தான். அதைக்கேட்ட அதிபன் நம்மால் இம்மறையோன் மரணமிப்போது தகாமல் இனி ஓர் காலத்திலாவான். ஆதலால் துணிந்து வெட்டலே நலம். பின்பு இவ்வேதியன் நம்மைக் கொல்லாமற் செய்துக்கொள்ளும் உபாயம் உரைக்கின்றேனென்று அமைச்சனைச் சம்மதிக்கச்செய்து வேதபாரகனை இருவரும் ஒரே வெட்டாய் வெட்டிக் காளியைத் துதித்தார்கள், உடனே திரிசூலி பிரசன்னமாகி என்னவரம்

வேண்டுங் கேளுங்களென்று நவின்றாள். அதற்கு அண்ணல் எனக்கு இவ்வந்தணனை யெழுப்ப வரந்தாரும் என் மந்திரிக்கு இஷ்டகாமியார்த்தத்தைத் தாருமென்று பணிந்தான். காளி அதிபனுடைய யுக்தியைக்குறித்து அம்மாதங்கி மிகவுஞ் சந்தோஷமுற்று இரண்டு வரமுந் தந்தேன். இனி ஓர் வரங்கேள் என்றாள். பூபாலன் வணங்கி, "ஓ அம்மணி! எங்கள் மூவர்க்கும் மோக்ஷபாக்கியம் கொடுப்பாய்" என்றான். அக்கங்காளி "அப்படியே கொடுத்தேன். இன்றுடன் இம்மந்திரத்தை தியானஞ் செய்துக்கொண்டு வாருங்கள்" என்று ஓர் மந்திரத்தை யுபதேசித்து மறையோனையும் எழுப்பி மறைந்தாள். பின்பு அம்மூவருங் களிக்கடலி லமிழ்ந்து தம்நகரை யடைந்து தமது பட்டணத்தில் யாராவது ஜீவயிம்சை செய்வார்களாகில், அவர்களைக் காளிக்குப் பலியிடுவேனென்று பறையறைவித்து ஜீவகாருண்ய விரதத்தைக் கைக்கொண்டு மூவரும் ஒத்திருந்து இறுதியில் மோக்ஷவீட்டை யடைந்தார்கள். ஆதலால் ஜீவகாருண்யமே மேலானவிரதமென்று உரைக்கத்தகும். அன்றி ஜடபாதர் சிவகாருண்யத்தாலேயே பிர்மானந்தத்தை அடைந்தாரெனத் தமால் அதெப்படியென, கபீர் ஜடபாதர் கதையை சொல்லத்தொடங்கினர்.

## பாடல்

முன்னமோர்காலந்தன்னில் முனிவுகொண்டையோதீய
மன்னவன்சிவிகைதாங்கு மாசடபரதன்றன்னைத்
தன்னகவலியான்மேன்மேற் றயவிலாதடிக்கும்போழ்தில்
தன்னையுந்தலைவன்றன்னைத் தரிசித்தோனுதலாலே. 1

சடபரதனெனுந்தூயோன் றண்டிகைசுமந்துகொண்டே
அடிபலமிகவும்பட்டே யங்கமேலாசைவிட்டு
முடியுடைமன்னன்மீது முனிவிலாதுறவிகடம்
மடியுமாயிடினென்செய்வே னென்றவன்மயங்கிநின்றான். 2

மயங்கியோர்ஜீவனெனும் மாழ்குறுதிருக்கவெண்ணித்
தயங்கியேபுழுங்கியந்தச் சற்குணனுற்றனுகி
முயங்கியாரடித்தபோழ்தும் முடியினையரிந்தபோதும்
நயங்கொடாச்சிவயிம்சை நாயினேன்செய்வதுண்டோ. 3

தன்னுயிர்போலேயிந்தச் சகந்தனிலிருக்குமெல்லா
மன்னுயிர்தன்னைநோக்கி மாதவமுயல்வதன்றி
இன்னலீயெனதாகத்தி லிச்சைவைத்தசையுமாவி
தன்னைமாய்த்தென்பெறற்கென் றருட்சடபரதன்சொன்னன். 4

சொன்னபினருளிலாத்தீத் தோன்றலுமச்சமாகித்
தன்னையாய்ந்தறிவையுற்ற சாந்தனென்றவனையேத்தி
என்னைநீர்முனியாவண்ண மெனக்கொருவரமேதந்துன்
பொன்னருட்பாதம்போற்றும் போதமீயெனவேதூயோன். 5

வம்பையீக்கொலையாற்றாய வானவரானாலுமிவ்
வம்புவிதன்னின்மாள்வா ராதலாலருள்கைக்கொண்டு
தம்பிநீகொலையைஎன்றுந் தவிர்த்திடென்றுரைத்துத்தன்னை
நம்பினபேரைக்கொல்வோர் நரகத்திலமிழ்வதென்றான். 6

தன்னைச்சிற்றுறவிதீண்டின் தக்கணமதனைக்கொல்வார்
தன்னகநொந்ததைப்போற் சகலமுநோகுமென்றே
உன்னியேநோக்கமாட்டா ருலகத்தின்மாந்தரந்தோ
என்னவாறடைவார்முத்தி யிறைவனேசொல்லக்கேளே. 7

சீவகாருண்யமின்றி சீவனைவதைத்தபேர்கள்
பாவநீங்குவதுமில்லை பரத்துவமடைதலில்லை
சீவனைவதைத்தையோதான் றேகத்தைக்காத்தலாலே
ஆவிதொன்றுளதோவிந்த வாக்கையாலென்றுரைத்தே. 8

திமிரினையகற்றித்தன்னைத் தெரிவித்துப்போவென்றோத
நிமிச்சக்ரவர்த்தியென்னு நிருபன்றாழ்ந்தகலப்பின்னர்
அமைவுளவுளத்தனுன வருட்சடபரதன்பிர்ம
நமைவிடவேறேவென்னு நாட்டத்திலிருந்தான்றானே. 9

ஆரண்யந்தன்னிற்சென்று மரையன்றண்டிகைசுமந்தும்
காருண்யமில்லாமன்னன் கதையினாற்புடைக்கநொந்தும்
காருண்யந்தனைவிடாமற் காத்தனனதனுனீவிர்
காருண்யந்தன்னைக்கொண்டே கதிபெறவேண்டுமென்றான். 10

அயன்றலையறுத்தானன்றோ னலைந்தனன்பலநாண்முன்னே
பயன்றவம்வாலிதன்னைப் பதுங்கிருந்தம்பாற்கொன்ற
நயந்தருமிராமர்தன்னை நன்கதாமறுஜென்மத்தில்
ஜெயமுளவேடனாகிக் கிருஷ்ணனைச்செகுத்திட்டானே. 11

குருபத்தன்றனையயோத்தி மன்னவன்செகுத்ததாலே
அரியவென்மைந்தாமைந்தா வென்றருளுயிரிழந்தான்
அரிணமாப்புணருந்திவ்ய வமுதந்திமுனியைக்கொன்றே
உரியநல்லுயிரிழந்தா னுத்தமப்பாண்டுராஜன். 12

சீவகாருண்யமின்றி சிறுவயதினிற்செய்தீமை
மேவிமாண்டவ்யர்பொல்லா வேதனைக்கழுவினுற்றார்
பூவுலகினிற்றவஞ்செய் புனிதனைக்கொன்றதாலே
ஆவிநீங்கிடவாதாபி யகத்தியற்குணவானானே. 13

சிவகாருண்யமில்லார் செயுந்தவமவமாப்போகும்
சிவகாருண்யமில்லார் செயுமறம்மறமதாகும்
சிவகாருண்யமில்லார் சேருவரந்தகாரம்
சிவகாருண்யமில்லார் தீமைசெய்கிருதராமே. 14

சிவகாருண்யமில்லாச் சென்மமேமிருகஜென்மம்
சிவகாருண்யமில்லாத் தியரேபிணியாற்சூழ்வர்
சிவகாருண்யமுள்ளோர் தமைத்தொழும்ஜீவன்யாவும்
சிவகாருண்யமுள்ளோர் சேருவர்மோக்கந்தானே. 15

சிவகாருண்யமுள்ளோர் செய்வதேன்றபஞ்ஜபங்கள்
சிவகாருண்யமுள்ளோர் செய்வதேன்றியானந்தானஞ்
சிவகாருண்யமுள்ளோர் செய்வதேன்யாகம்யோகம்
சிவகாருண்யமுண்டேற் சிற்சுகமடையலாமே. 16

ஆவியையேத்தினுலென் ஞதித்தன்மயமானுலென்
சேவைசெய்தின்புற்றுலென் திருக்குவாம்விழிபெற்றுலென்
ஓவியம்போலுற்றுலென் னுத்தமோத்தமனுனுலென்
சிவகாருண்யமின்றேற் றீயனென்றுரைக்கலாமே. 17

ஆவியைக்கொன்றுற்றோர்க ளாக்கையைக்காத்தலாலே
ஆவிநீங்கிடும்போதுற்ற வல்லற்றீர்த்தின்பீவாரோ
ஆவிநீங்கிடினுந்திய வழல்புகுந்திடினுங்கொன்மா
பாவியென்கிறபேர்வேண்டாம் படிதனின்முடிவிதாமே. 18

என்று இங்ஙனமுரைக்கும் ஜீவகாருண்ய வாக்கியங்களைக் கேட்ட தமால் ஆனந்தசாகரத்தில் அழுந்தினவனுய்க் கபீரைக் கட்டி யணைத்து முத்தமிட்டு என்னையனே! உன் மதுரமொழிக ளைக் கேட்டு இன்பமடையாதவர்களு முண்டோ? என்று அக்க ணம் மனையாள் முதலானவர்களுடன் தன் வீட்டையடைந்து ஜீவகாருண்ணிய விரதத்தைத் தன்னுயிரைப்போல் காத்துப் பகவஸ்மரணையால் காலங்கழிக்கத் தொடங்கினுர்கள்.

துலுக்கரோ கபீர் நவின்ற மொழிகளெல்லாம் உத்தமமா கவேயிருக்கின்றதென் றுன்னி ஜீவயிம்ஸை செய்வதற் கிடைந் திருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே கபீருரைத்த ஜீவ காருண்யமொழிகளைக் கேட்பவர்களுக்கு இம்ஸை செய்யும்படி யான மனம்வருமோ வராது. வருமாயின் தீவினைக்காளாவார் களே யென நாபாஜிசித்தருரைத்துப் பின்னுஞ் சொல்லத் தொடங்கினுர்.

கபீர் பசுவின் கன்றைக் கொல்லாமல் மறுத்த
அத்தியாயம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

## கபீர் தன் மனைவியை வர்த்தகனுக்களித்த அத்தியாயம்



இப்பால் கபீர் சிலநாளில் தர்மவிஷயத்தில் தன் தந்தை சம்பாதித்து வைத்திருந்த ஆஸ்தியையெல்லாம் நாஸ்திசெய்து நெய்யுந் தொழிலால் ஜீவனம் செய்துக்கொண்டிருக்கிற காலத்தில், ஒருநாள் வஸ்திரமும் விலைபோகாமல் புசிப்புக்கு மொன்றுமில்லாமல் காலையிலிருந்து மாலைமட்டும் பட்டினியா யிருந்தார். அப்போது, பகவான் கபீரைச் சோதிக்கவெண்ணி நூறுசாதுக்களாய்க் கபீர் வீட்டையடைந்து, "ஓ புண்ணியவானே! இன்றையத்திவசம் சூரியோதயமான முதற்கொண்டு எங்களுக்கு எங்கும் அன்னம் அகப்படாக்குறையால் பலவிடங்களிற் றிரிந்து மிகவும் நொந்து தருமத்திற்சிறந்த பிரபு நீரெனக் கேள்விப்பட்டு உம்மிடம் அடைந்தோம். ஓ சீமானே! இக்ஷணம் பக்ஷத்துடன் எங்கள் குட்சி நிறையப் பக்ஷணமிடுமையா" எனத் துதித்தார். அப்போது கபீர் தன்னுயகியை விளித்து, "ஓ என்னுயிர்த்துணைவியே! தாய் தந்தையர் பட்டினியால் வாட்டமடைந்திருப்பதற்கு ஆபாசமேலிட்டிருக்கும் நம்பால் அநேக சாதுக்கள் வந்து அன்னங் கேட்கிறார்களே? இல்லையென்போற் கில்லையென வில்லறத்தாற் குரிய தர்மமல்லவே; இரந்தும் பரத்துக்கிடுவெனத் தர்மசாஸ்திரம் முறையிடுகின்றதே? ஓ மாதரசே! இச்சாதுக்களின் குட்சிபாதை நீங்குவதற்கு ஏதேனும் பொருளிருந்தால் விக்கிரையஞ்செய்து அடியார்களுக்கு அன்னம்படைப்பாய்" என்றார். சுந்தரா, "ஓசுவாமி! உம்மையறியாமலும் ஒருவஸ்துவை நானொளித்து வைத்திருக்கின்றேனா? இல்லையே. இவ்வீட்டை விற்றுத் தொண்டர்களுக்குத் தொழும்பு செய்யலாமென்றாலும், ஒருவருக்கு அடமானமாக விருக்கின்றதே. மங்கிலியத்தைக் கொடுப்போமென்றால் குழாயன்றி மற்றதெல்லாம் விக்கிரையப்படுத்திவிட்டோமே. மாங்கிலியக் குழாயைக் கொண்டுபோய் விற்றால் இத்தனை சாதுக்களுக்குத் தேவையான பதார்த்தங்கள் அகப்படமாட்டாதே" என்னும் பற்பல வார்த்தைகளுரைத்தாள். பின் முடிவில், "ஓ என் பிராணவல்லபா! அடியாள் கடைத்தெருவுக்குப் போகும்போதும் வரும்போதும் ஓர்

வர்த்தகன் என்மேற் சிறியகல்லை யெறிவதன்றி, "ஓ பெண்ணே! நீ என்னிடம் ஓர் நாள் வருவையாகில் தேவையான திரவிய மளிக்கிறேன் என்று சொல்லிவருகிருன். அவனுக்கென்னை விற்பனை செய்வீராகில் தேவையான திரவியம் அகப்படும். சாதுக்கள் குறையும் தங்கள் வியாகூலமும் நீங்கும். மனைவியை விற்பது மானபங்கமெனக் கருதவேண்டாம் நவகண்டங்களை யாண்ட அரிச்சந்திர மகாராஜன் தருமார்த்தமாய்த் தன் நாயகி யையும் கான்முளையையும் விற்றுப் புலையனுக்கு அடிமையாய்ப் போனுர்" எனப் புராணங்களில் முறையிடுவது நீரறியாததல்ல வென்று உரைத்தாள்.

அதுகேட்ட கபீர் சந்தோஷசாகரத்திற் படிந்தவராய்த் தன் காந்தையைப் பலதரம் ஆலிங்கனஞ் செய்து அன்புடன் முத்த மிட்டு, "ஓ என் குலவிளக்கே! கோதிலாமதியே! தீதிலாவமுதே! குணபூஷணமே! மலையாமணமே! சுந்தரமே! சோபிதமே! நீ நல்ல உத்தமபத்தினியாதலால் இத்தருணத்திற் பரிசுத்த மொழி யைப் புகன்று என்னைக் காத்தாய்; அடியார்கள் பசியைத் தீர்த் தாய்; வாழ்க்கைக்குத் துணையான மனையாளிருக்கும் வீடு கற்பக விருக்ஷங்களடர்ந்த சுரநாடு எனச் சொல்லப்படும். அருந்ததிக் கிணையான திருந்திய தேவியாகிய நீ எனக்கு அருந்துணைவியாயி ருக்க எனக்கு ஓர் குறைவுமுண்டாகுமோ? ஓ மதியிற்சிறந்த புனித வதியே! இக்கணம் அவ்வர்த்தகனைக் காட்டி என்வியாகுலத்தை யோட்டிப் பக்தர்களைப் பாராட்டி விருத்தாப்பிய தாய் தந்தைய ரைச் சீராட்டி, இல்லற தருமத்தை நிலைநாட்டிவைக்கச் சீக்கிரம் புறப்படும்" என்றுரைத்தார். அவ்வாறு அழைக்கும் கணவனைச் சூழ்ந்து பலதரந்தாழ்ந்து வியாபாரியைக் காண்பிக்கிறேன் வாரு மென்று அழைத்துக்கொண்டுபோய் தன்மேற் காதலாயிருக்கும் வர்த்தகனைச்சுட்டிக்காட்டினுள். கபீர் அவ்வணிகன்பாற்சென்று "ஓ தனவானே! கனவானே! இவள் என் மனையாளாகும்; தாங் கள் இவ்வனிதையின்மேற் கொண்டிருக்கு மவா நீங்க, இவளை உமக்கு ஒருநாள் கொடுக்கிறேன்; பதில் சத்புருஷர்கள் புசிக்கத் தகுந்த தவசங்களளித்து என்னைக்காப்பாற்றுமையா" எனத் துதி த்தார். வர்த்தகன் "காமத்துக்குக் கண்ணில்லை காமிக்கு முறை யில்லை" என்னும் பழமொழிப்படி காமாந்தகாரத்தால் சுந்தரா தன்னருகில் நிற்பதைக் கண்டு, அடங்கா விகாரங்கொண்டு, கும் பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தாற்போலவும், மார்க்கத்தில் மாணிக்கங் கிடைத்தாற்போலவும் பூரித்துக் கபீரை நோக்கி, "ஓ

கபீர்! நூறுபேருக்கு அளிப்பேன். இப்பெண்ணை என்னிடம் ஒருதாஞ் சயனித்திருக்கக் கருணைகூறுவாய்' எனத் துதித்தான்.

கபீர் ஒருதாமே நின்று இராத்திரிக்கெல்லாம் வைத்திருந்து மறுநாளனுப்பலாம். இது சத்தியமென நம்பும் என்று உரைத்து நூறு சாதுக்களுக்குத் தேவையான பதார்த்தங்களைக் கொண்டுபோய் மனைவியைத் துரிதமாகப் பாகஞ் செய்யும்படியாகச்செய்து சாதுக்களின் பசியாறப் படைத்துத் தாய்தந்தையரைநோக்கி, "ஓமாதாபிதாவே! சாதுக்களுக்கு இன்னஞ்செய்ய வேண்டிய பணிவிடை செய்துக்கொண்டிருங்கள். ஓர்கணத்தில் வருகிறேன்" என்று அறைந்தார். பின் தன்மனையாளை நன்ருய்ச் சிங்காரித்துக்கொள்ளச்செய்து அழைத்துக்கொண்டு துரிதமாய் வர்த்தகன் வீட்டை நோக்கிவந்தார். அப்படி வருகையில், வர்த்தகன் தன் பள்ளியறையை நன்ருய்ச் சிங்காரிக்கச் செய்து தானும் ஆடையாபரண அலங்கிர்தனுகச் சாந்து சவ்வாதுகளைப் பூசிக்கொண்டு, சுந்தரா எப்போது வருவாளோவெனக் காத்திருக்குந் தருணத்தில், கபீரும் சந்தோஷசித்தனுய் அங்கடைந்தார். அவரையும் சுந்தபாவையுங் கண்ட வணிகன் சந்தோஷசித்தனுக வாருமென்று அழைத்துக்கொண்டுபோய் பள்ளியறையிற் பிரவேசித்துக் கபீருக்கு ஓர் மோகனமாலையைக் கொடுக்கவந்தான்.

கபீர் "ஓ புண்ணியவானே! சத்சாதுக்களுக்கு அன்னமளித்த உமது குணத்தை நான் எக்காலத்தில் தீர்க்கப்போகிறேனே? என்கிற வாட்டத்துடன் இருக்குமெனக்கு ஈதளித்து மனக்கோட்ட மடையச்செய்யாமல் உமது மனேபீஷ்டத்தை முடித்துக் காமவேஷ்டையை நிவர்த்தி செய்துக் கொள்ளுமையா" எனப் பகர்ந்து அவ்விடம் விட்டு நகர்ந்துபோக எண்ணங்கொண்டனர். பின்பு தன்னுயகியை விளித்து, "ஓ மாதரசே! இன்று இராத்திரி இவரிஷ்டத்துக்கு ஓர் நஷ்டம் வாாமல் நடந்துக்கொள் என்று உரைத்துத் தன் வீட்டை யடைந்து சாதுக்களுக்குக் கால்சேவை முதலானதுஞ் செய்துக்கொண்டிருந்தார். வர்த்தகனே முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டாற்போலவும், லோபி சொர்க்கத்தை வாஞ்சித்தாற்போலவும், விபசாரி பரமபதத்தைக் கோரியதைப்போலவும், துரோபதையை யிச்சித்த கீசகனைப்போலவும், தமயந்தியை யிச்சித்த கிராதனைப்போலவும்; புரூரவச்சக்கரவர்த்தியின் காந்தையை யிச்சித்த ஓர் வர்த்தகனைப்போலவும், கபீர் மனைவியின்மேல்

மோகங்கொண்டு, "ஓ பெண்ணே! என்னிருகண்ணே! அன்புள்ளமானே! இன்பந்தருந் தேனே! பஞ்சுபோன்ற பாதங்கள் நோக என் நிற்கின்றாய்? பஞ்சணைமேல் வீற்றிருப்பாயாக; எனக்குற்ற காமதாகத்தைத் தீர்ப்பாயாக" என்றுரைத்துக்கொண்டே அவ்வறையின் கதவை மூடினான். உடனே பகவான் அவ்வூர் கொத்தவால் வேஷத்துடன் வந்து, "அடா துன்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! கதவைத்திறடா? பரஸ்திரீ கமனஞ் செய்யுந் திருடா?" என்று அக்கபாடத்தை எட்டியுதைத்து அதட்டினார். வணிகன் சுந்தராவைக் கட்டிலின்கீழ் ஒளித்துக்கொள்ளென்று உரைத்துப் பயங்காத்துடன் அரணத்தைத் திறந்து புறம்போந்து கொத்தவாலைக்காணமல் கதவை மூடிக் கபீர் மனைவியினருகிற் சென்றான், பகவான் முன்போலவே அதட்டினார். பின்னும் அவ்வாணிபன் அச்சமுற்றவனாய் வெளிப்பட்டுச் சுற்றுப் பக்கங்களிலும் பார்த்துப் பின்னும் உட்போய் அடங்காக் காம விகாரத்தால் அப்பத்தினியை ஆலிங்கனஞ் செய்யப்போனான். பகவான் கொத்தவாலுருவுடன் அக்கதவு உடையும்படியாயுதைத்துத்தள்ளி வர்த்தகன்மேல் குதித்து கீழேதள்ளி மிதித்து அடா பஞ்சமாபாதகா! எமகாதகா! சத்குருவின் மனைவியும் சாதுவின் மனைவியும் தன் தாயல்லவோ? இவ்வுத்தமியைக் காம விகாரத்தோடும் பார்த்த உன்னிரண்டு கண்களையும் பிடுங்கி யெறிவேன்; ஆலிங்கனஞ்செய்ய வெத்தனித்த கரங்களைத் துண்டிப்பேன்; இப்போதே உன் சிரத்தைக் கண்டிப்பேன்; பெண்ணேயென்று அழைத்தவாயைப் பிளந்து மணிக்குடலெடுத்து எமலோகத்துக் கனுப்புவேனென மாறி மாறியடித்து முழங்கைகளாலிடித்து மூர்ச்சையாய் விழச்செய்து சுந்தராவின் கரத்தைப் பிடித்து இழுத்துக்கொண்டே போய்க் கபீர் வீட்டினுள்தள்ளி மாயமாய் மறைந்து காற்றுமழையுங் கலந்தடிக்கச் செய்தார்.

சுந்தரா, ஐயோ! அர்த்தமளித்த வர்த்தகன் அனியாயமாய் அடிபட்டானே, மானங்கெட்டானே, பழிவந்து நேரிட்டதே, என்னவென்று பதிக்கு உரைப்பேன், சங்கதி எப்படி தெரிவிப்பேன் என்கிற அச்சத்தால் சற்றுநேரம் நின்று ஒன்றுந் தோன்றாதவளாய் உள்ளபடி முடியட்டுமென்று பிரவேசித்தாள். சாதுக்களுக்குப் பணிவிடை செய்துக்கொண்டு இருக்கும் கபீர் தன்னாயகியைக் கண்டு பெருங்கோபங்கொண்டு வெளியில் அழைத்துவந்து மிகவும் நொந்து, "அடி பேதாய்! அறிவில்லாக் கோதாய்! வர்த்தகனை மோசஞ்செய்து என்னிடமேன் வந்தாய்?

எனக்கே னிடர்தந்தாய்? ஆ! ஹா! என் வாக்கைத்தடுத்தாயே? துன்பத்தைக் கெடுத்தாயே? பதிவிரதத்தன்மையை விடுத்தாயே? தைரியத்துடனென்னை யடுத்தாயே? நெடுநாளாய்ச் செய்துவந்த நோன்பைக் கெடுத்தாயே? பஞ்சமா பாதகங்களுக்கு விமோசன முண்டு. வாக்கைமறுக்கும்பேர்க்கு ஓர் போக்குங்காணேமே; வாக்கைக் காப்பாற்றும் நிமித்தம் அரிச்சந்திரன் வெகு கஷ்டப்பட்டுத் தன் மனைவியை வெட்டத்துணிந்தான். தசரதனும் கர்னனும் தன் பிராணனை யிழந்தார்கள். பரமசிவன் பத்மாசுரன் துரத்த வோட்டமெடுத்தான். அருச்சுனன் கிருஷ்ணனுடன் போர்புரிந்தான். வாக்கைக் காப்பாற்றுததின் நிமித்தமேயல்லவோ பாஞ்சாலன் கட்டுண்டான். அடிபாதகி! எமகாதகி! என் வாக்கை வீணாக்கி நரகத்துக்காளாக்கி வந்துவிட்டாயே. நீ கெட்டாயே?" எனப் பற்பல வார்த்தைகளாடி நிந்தித்தார். அப்போது, சுந்தரா காவலனடிகளில் வணங்கி, "ஓ ஸ்வாமி! சத்புத்திரனுக்கு மாதாபிதாக்களே தெய்வம்; சத்சீடனுக்கு ஆரியனே தெய்வம்; இராஜனுக்கு நீதியே தெய்வம்; பதிவிரதைகளுக்குப் பதியே தெய்வம்; நற்புதல்வனுக்குத் தந்தை தாய் வாக்கே வேதம்; மாணாக்கனுக்குக் குருவாக்கே வேதம்; இறைவனுக்கு நீதிவாக்கியமே வேதம்; பதிவிரதைக்குக் கொழுனன் வாக்கே வேதம். எனத் தெரிந்திருந்தும் உம்முடைய வாக்கை மரணம் வந்தாலும் மறுப்பேனா? தாங்கள் என்னை வர்த்தகன் வீட்டில்விட்டுவந்ததும் உளவறிந்த இவ்வூர்கொத்தவால் வர்த்தகனையடித்து மூர்ச்சையாய் விழச்செய்து என்னைப் பரபரவென்று இழுத்துக்கொண்டு இவ்விடம்விட்டுப்போய்விட்டான். நானென் செய்யட்டும்" என்று முறையிட்டு ஓவெனக் கூவியழுதாள்.

அவ்வழு குரலோசையைச் சாதுக்களும் தாய் தந்தையுங் கேட்டு ஓடோடியும் வந்து, என்னகுறை நேரிட்டது? எனக் கேட்டார்கள். கபீர் அடங்காக் குரோதங்கொண்டு ஓர் பெரிய தண்டத்தைக் கையிலேந்திக்கொண்டு என்மனையாளை நானொருவனுக்குப் பிரியத்துடன் கூட்டிக்கொடுத்தால் இந்தவூர் கொத்தவால் தடுக்கும்படியான காரணமென்ன? இக்கணமே அவனைக் கொல்லாமல் சற்றும் பொறுக்கமாட்டேனென்று மனையாளை யழைத்துக்கொண்டு ஓர் கணத்திற்சென்று கொத்தவால் வீட்டின் கதவைத் தடியாலடித்து உடைத்து, "அடா துன்மார்க்கக் கொத்தவாலே! நான் என் மனையாட்டியை வர்த்தகனுக்குக் கூட்டிக்கொடுத்தால் நீயாரடா மறுக்கிறவன்? வணிகன் பதைக்க

அடிக்கிறவன்? சீக்கிரம் வெளியிற்புறப்படு? இல்லாவிட்டால் உன்னையும் உன் களத்திர புத்திர மித்திரர்களையும் இத்தடியாற் கொன்று ஒருகணத்தில் வென்று என்பராக்கிரமத்தைக் காட்டி விடுவேன்? எமலோகஞ் சேர வாட்டிவிடுவேன்" என்றிரைந்து உரைத்து முனிவனறைந்து அதட்டும்போது, அப்பேதமைக் கொத்தவால் திடுக்கென்றெழுந்து அவர் சேவடியில் விழுந்து, அப்பனே சரணம், ஒப்பிலா ஞான வுத்தமாசரணம், செப்புதற்கரிய செல்வனேசரணம், இப்புவியோர்க ளேத்துவோய் சரணம், அற்புதாசரணம், அரியனேசரணம், விற்பனமெய்த்தவ விமலனேசரணம், தப்பிதஞ்செய்யாத் தமியனை நீர் கோபிப்பது நலனோ? பிரானேசரணம், சரணமெனத் துதித்து ஓ மாதவனே! நானொரு சேதியும் அறியேனே என்னகாரணம்? யார்செய்தார் குறைகள்? என்னையேன் வீணுச் சபிக்கவந்தீர்? துன்பந்தந்தீர் என்று சேவகருடன் புறப்பட்டு வர்த்தகன் வீட்டையடைந்து மூர்ச்சையாய் வீழ்ந்துகிடக்கும் வர்த்தகனுக்கு உபசாரணை செய்து எழுப்பி என்னகாரணம்? என்று கேட்டான். அதற்கு வணிகன் கொத்தவாலைக் கண்டவுடன் கிடுகிடென்று நடுநடுங்கி என்னைக் கொல்லப் பின்னும் வந்தாயாவெனக் கூவிப் பலபக்கங்களிற்ருவி மூர்ச்சையடையவே, கபீர் ஆக்கிரகதிக்குரோதராய் ருத்திரரூபத்தைக்காட்டி, "அடா கொத்தவாலே! நீயே இக்காரியஞ் செய்தாயே, இதற்கு இவ்விருவரும் சாக்ஷி. இதோ இத்தண்டத்தால் உன்மண்டையைச் சிதறப்புடைக்கிறேன் பார்" எனத் தடியை ஓங்கினர். அப்போது ஸ்ரீமந்நாராயணர் பிரசன்னமாகி, "ஓ கோசதீபத்தில் மிகுந்த கபீர்தாஸனே! முகவிலாசனே! அந்தக் கொத்தவால் வர்த்தகனை அடிக்கவில்லை. இந்தக் கொத்தவாலே அடித்தானதலால் அவன்மேல் ஓங்கின தடியை என்மேல் ஓங்கியடித்து உன் வைராக்கியத்தை முடித்துக்கொள்" என்று நவரத்தின கசிதமான கிரீடத்தைத் தாழ்த்தி முதுகைக்காட்டிக் குனிந்து நின்ருர். ஸ்ரீமந்நாராயணனைக்கண்ட கபீர் கையிலிருந்த தடியை எறிந்துவிட்டுப் பலதரஞ் சூழ்ந்து பாதங்களிற்ருழ்ந்து, "ஓ அனுதாக்ஷகா! அகிலாண்டகோடி பிரமாண்டநாயகா! ஸ்ரீராமா! பரந்தாமா! சகஸ்திரநாமா! ஓ பகவான்! ஓ தெய்வமே! அடியேனுக்காகக் கொத்தவால் வேஷமுந் தரித்தீரோ? வர்த்தகன்மேலார்ப்பரித்தீரோ? வர்த்தகன் உமது கரங்களாலடிபட என்ன பாக்கியஞ் செய்தானே? எதுதவஞ் செய்தானே? அடியேனை ஓர்

அடி அடிக்கலாகாதா? எனக்குற்ற குறைகளெல்லாம் நீங்கிப் போகாதோ? அடியேன்முன் குனிந்து நிற்கலாமோ? யாவரும் வணங்காமுடியைத் தாழ்த்தப்போமோ? சுந்தராவைக் காக்கவந் தாயோ? அரிதான சேவை தந்தாயோ" எனப் பாதங்களிற் பணிந்தபடி பலபலவிதங்களாகத் தோத்திரஞ்செய்தார். அப் போது பகவான், "ஓ கபீர்! உலகில் தன் ஸ்திரீயை ஒருவன் தொடுவானானால் அவனைக் கொல்லத் துணிவார்கள் கொன்று விடுவர். அப்படியிருக்க நீர் இப்படி செய்யலாமா? உனக்கு மானமில்லையா? ஈனமில்லையா? நீ புருஷனல்லவா? விரித்துச் சொல்லவா? தர்மார்த்தமாய்த் தன் ஸ்திரீயைப் பலவந்தமாய்க் கூட்டிக் கொடுக்கலாமா? புருஷனுக்குள்ள அபிமானத்தை விடுக்கலாமா? பதிவிரதையைக் கெடுக்கலாமா? அபகீர்த்தியை யடுக்கலாமா? இப்படி பரமசிவனும் ரகுராமனும் பிறருக்குத் தன் மனைவியர்களைக் கொடுக்கவில்லையா? எனச் சங்கை செய் வீரோ? அவர்கள் ஒருவர் வாஞ்சித்த வஸ்துவை வைக்கலாகா தெனக் கொடுத்துவிட்டார்கள். அப்படி செய்ததும் அவர்க ளுக்குற்ற ஞானப்பைத்தியமாகும். நீர் ஒருவர் கேட்காமலிருக் கப் பலவந்தமாகக் கூட்டிக்கொடுத்தாய். தாரணத்தை விடுத் தாய். சொற்பமான தானிப தவசங்களுக்காகத் தாரத்தைக் கொடுத்தவர்களும் உண்டா? அடியார்களுக் கன்னமிட அருந் ததிக்கிணையான அரிவையை மனந்துணிந்து பிறனுக்களிக்க லாமா? இப்படி இவ்வுலகில் நடந்திருக்குமா?" எனப் பற்பல வார்த்தைகளாடினார்.

அப்போது கபீர் பகவானை நோக்கி, "ஓ மாதவனே! என் மானம், உன்மானம், நான் நீ, எனதுனது என்னும் விகற்பங்க ளெல்லாம் உமது லீலையான மாயாசம்பந்தமல்லவோ? வாசாக் ஞானத்தால் உம்மை வெல்லவோ உமதரிய சேவைபெற்றவர்க ளுக்கு ஞானாந்தகார கூபத்தில் அமிழ்ந்திருக்கும் அகக்கிரந்தி யுள்ளவர்களுக்கு இயல்பான மானவீனமுமிருக்குமோ? அருச்சு னனுக்கு உடன்பிறந்தாளை பலராமருக்குந் தெரியாம லிணங்க வைத்த தீனனல்லவோ? அப்பார்த்தனை அசுவத்துடன் பூ பிர தக்ஷணஞ்செய்தகாலத்தில் ஓர் தினம் இரவில் காமவிகாரத்தால் கலக்கமுற்றிருக்க, சுமித்திரைபோய் அவனை உல்லாசப்படுத்தி னது ஈனமல்லவோ? உமது கபடநாடகத்தை விரித்துச்சொல் லவோ? மர்மமறிந்தவர்களுக்கு மானமில்லை, இச்சை யிறந்தவர் களுக்கு ஈனமில்லை என்னும் பழமொழி மெய்யா? பொய்யா?

இது இருக்கட்டும்; சாதுக்களுக்கு உதவிய வர்த்தகனை வீணாய் என் அடித்தீர்? என் வாக்குத்தத்தத்தை ஏன் கெடுத்தீர்? என்று பணிந்தான்.

அப்போது பகவான், "ஓ கபீர்! சாதுக்களுக்கு அன்ன மளித்த இவ்வர்த்தகன் உமது மனைவியைத் தொடுவானானல் உடனே பஸ்பமாயெரிந்துபோவதற்கு ஓர் ஐயமுளதோ? உமக்கு உதவி செய்தவ னுயிர்நீங்குதல் தர்மமோ? உமது மனைவியை யடுத்து உயிர்விடுத்து எமபுரம்போதலைத் தடுத்து அடித்தது கர்மமோ? உமக்குந் தெரியாத மர்மமோ?" எனப்புகன்றார். அதற்குக் கபீர் "ஓ ஸ்வாமி! அடியேனிசைந்து கொடுத்தபின் வணிகன்மேற் குற்றமென்ன? அவனென்றும் பலாத்காரம் செய்யவில்லையே?" என்று தொழுதான். பகவான், "ஓ அரிபக்தனே! அவனுக்கு விருப்பமிருந்த காரணத்தாலல்லவோ நீ கொடுக்க நேரிட்டது. அன்றி எரியும் நெருப்பை விருப்பத்துடன் தொட்டால் சுடாமலிருக்குமா? நீ அவனுக்குச் சொந்தமாகக்கொடுத்தாலும் சொந்த விளக்கென்று முத்தமிடலாமா? பரஸ்திரீயை விகாரத்துடன் தொடலாமா? பரஸ்திரீகமனஞ் செய்தவர்களெல்லாம் வாழ்விழந்து தாழ்வடைந்தார்களேயன்றி மேன்மை யடைந்தது உண்டோ? பலவந்தமாய் அணையவரும் ஸ்திரீ பாத்தையென்றும், அவள் முகம் பார்க்கவேகூடாதென்றும் வேதமுறையிடுவது பொய்யா? பரஸ்திரீயை இச்சித்தமாத்திரத்தில் மலைப்பாம்பாய்ப் போகும் சாபத்தைப்பெற்ற நகுஷராஜனுடைய சரித்திரமறியாதவரோ? பரஸ்திரீகமனஞ் செய்பவன் இகபரத்துக்கு உதவாதவனென்றும் பரஸ்திரீ கமனஞ் செய்பவன் பாவிகளிற் சிறந்த கொடும்பாவியென்றும், பரதார கமனன் குடும்பம் பாழாய்ப் போகுமென்றும், பரதாரகமனனுக்கு இரவுரவாதி நிரையமே பிராப்தியாகுமென்றும், பிறர்மனையாளைப் புணர்ந்தவனே பேடியாய்ப் பிறப்பானென்றும், பிறர்மனையாளை விகாரமாய்ப் பார்த்தவனே கண்ணிழந்திறப்பானென்றும், அயலான் மனைவியை ஆலிங்கனஞ் செய்தவனே அறத்தால் கரங்களறுபட்டு மடிவானென்றும், அயலான் மனைவிக் கர்த்தமீந்து அவள் கற்பையழிப்பவனே அநீதமாய்க் கொலைக்குட்பட் டழிவானென்றும், பெரியோர்களா லுரைக்கப்பட்ட வாக்கியங்கள் அபத்தமோ? ஒருவர் குடும்பத்தை இடும்பாலலக்கணுறச்செய்வது நீதியோ? கற்பழிந்த காந்தை கர்த்தபமென்பது பொய்யோ? நீ சாதுக்கு அன்னமளித்துப் புனித

ணுய். வர்த்தகன் உனது நாயகியின்மேல் மோகித்து நரகத்துக் காளானுன். பலவந்தமாய் வணிகனுக்கு உனது மனைவியைக் கொடுத்தவனை அந்தகாரத்துக்காளாக்குதல் நன்மையோ?'' எனத் திருவாய்மலர்ந்தருளினுர். அதற்குக் கபீர், என்னுண்டவனே! உமது காங்களா லடிபட்டவனுக்கும் நிரையத் துன்பமுண்டா? அநேககாலந் தவஞ்செய்தவர்களுக்குங் கிடைத்தற்கு அரிதான உம்மைக் கண்ணாரக் கண்டவர்களுக்கும் ஓர் குறையுண்டா? ஓ அச்சுதனே! உச்சிதனே! என் வாக்கை எவ்விதமாய்க் காப்பாற்றுவேன்? அதற்கு ஓர் மார்க்கம் உரைக்க வேண்டும்'' எனப் பணிந்தான். அப்போது பகவான் "ஓ மாதவனே! உனக்குச் சொந்தமான முத்திக்காந்தையை அவனுக்களித்து அவளுடன் கூடி இன்புற்றிருக்கும்படியாகச் செய்வீர். ஏனெனில்: உத்தமர்களைப் பகைத்தவர்களும் முத்தர்களாவரெனும் மொழி யறியாதவனே?'' என்றறைந்து மறைந்து போயினுர்.

பின்பு அவ்வர்த்தகன் கபீர் திருவடிகளிற் பணிந்து, நயனங்களை யணிந்து, "ஓ என் சற்குருநாதனே! மெய்ஞ்ஞானபோதனே! உமது மகிமையை யறியாமல் யானியற்றிய குற்றத்தை நற்றவமாகக்கொண்டு என்னை யாட்கொள்ளுமையா?'' எனத் துதித்தான். பின்பு சுந்தராவின் தாட்டாமரைகளிற் சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, "ஓ என்னையீன்றதாயே! நின்னைப் பார்த்த கண்கள் இன்னம் கெடாமலிருக்கின்றனவே? ஆச்சரியம்! உம்மைப்போலொத்த பத்தினி யிருப்பதினுலேயல்லவோ கரையிலாமற் கடலும் நிற்கின்றதே. கணிதப்படி சூரியனும் உதயமாகின்ருன். ஓ என்னம்மணி! உன் பொறுமைக்கு ஆகாயத்தையும் அளவிடப்போமோ! தாத்திரியின் கனத்துக்கு இணையான ஓர் வரையுமுண்டோ? ஸ்ரீமந்நாராயணருடைய அரியசேவையை அரைக்கணத்திற் றருவித்த என் மாதாவே! என்மேல் முனிவுகொள்ளாமல் இட்சணமே ரட்சியும் ரட்சியும்'' எனத் தொழுதான். அப்போது சுந்தரா கருணைக்கண்களைச் சாத்திப் பரமபக்தனுகக் கடவாய் என வாழ்த்தித் தன் கணவனைப்பார்த்துக் கரங்களைச் சேர்த்து, "ஓ சுவாமி! மணுளனுய் வந்து மகனுய் முடிந்தானென்னுங் கதையின்படி நமக்குப் புதல்வனுகச் சரணமடைந்த இவ்வர்த்தகனை அன்புடன் நோக்கித் துன்பங்களைப் போக்கிக் காத்தாட்கொள்ளுமையா'' என்று வணங்கினுள். அதற்குக் கபீர் அவ்வணிகன் நாக்கினில் தாரகவாக்கியத்தை

எழுதி நிஷ்காமியாகக் கடவாயென்று ஆசீர்வதித்து மோட்ச வனிதையைக்கூடும் மார்க்கத்தைப் போதித்துப் பேரின்பவாரி யில் மூழ்கி யிருக்கும்படியாய்ச் செய்து பந்தபாசங்களைக்கொய்து மனைவியுடன் வீட்டையடைந்தார். அங்கு நாரதாதி முனீசுவரர் களுடன் எழுந்தருளியிருக்கும் பகவானைக் கண்டு ஆனந்தங் கொண்டு, ஆ ஹா! இப்போது அங்கு மாயமாய் மறைந்து, உடனே இங்கு நாரதாதி முனீசுவரர்களுடனிறைந்து காட்சி கொடுத்த கருணையேதோ! நான்செய்த தவமேதோ! எனத் துதித்து உருகிக் கண்ணீர்பெருகிக் களிப்பின்மேலிட்டு ஆனந்த மாய் அரிபாந்தாமனைத் தோத்திரம் புரியும்போது, பகவான் கபீர் மஸ்தகத்தின்மேல் தன் அஸ்தத்தைத் தாக்கி, "ஓபரமபாக வதனே! நீ இல்லறதர்மத்துக்கு உறுதித்துணையான தர்மத்தைக் காப்பாற்றுகின்றாயோ? இல்லையோ?" எனச் சோதிக்கவேண்டி நானே இந்த முனீஸ்வரர்களுடன் வந்து உன்னை அன்னங் கேட்டும் மனைவியை அயலானுக்கு அளிக்கும்படியாகச்செய்து ஆனந்தமடைந்தேன்.

சுராசுரருக்கு ஓரோர்காலத்தில் சுரலோகத்தைக் கொடுத் ததுபோலப் பரதாரகமனம் முதலான பாவஞ் செய்வோர்களுக் கும் உம்மால் இக்காலத்தில் மாட்சிமையான என் காட்சியைக் கொடுக்க நேரிட்டதென்று உரைத்து ஜிஜ்ஞாபீபியையும் தமாலை யும் நோக்கி, "ஓ புனிதர்களே! இனி இந்நாட்டைவிட்டுக் காட் டையடைந்து தபத்தால் என் பதவியை யடையுங்கள்" என்று ஆக்கியாபித்து மறைந்தருளினர். பின்பு தமால் மாதா பிதா மறையோர் துறவோர் பத்தர் சித்தர் பரப்பிரமக்ஞானிகளாகிய முத்தர் முதலானோருடைய வாக்கிற் சிறந்தது குருவாக்கியம். குருவாக்கிற் சிறந்தது தேவ வாக்கியம். ஆதலால் ஸ்ரீமந் நாராயணருடைய வாக்கியத்தைக் கடந்தவர்களும் உண்டோ?" என்று அன்புள்ளமகனை வாரியெடுத்து மடிமீதிருத்திக்கொண்டு சில நியாயங்களைச் சொல்லத் தொடங்கினர். அது ஏதென்றால்: ஆ என்மகனே! அழகானமுகனே! பகவான் நமக்கு அடிக்கடி பிரசன்னமாகிறாரென எண்ணங்கொள்ளாதே; தெய்வசகாயத்தி னாலாவது குரு சகாயத்தினாலாவது மோட்சமார்க்கந் தெரியு மன்றி மற்றை யோகம் த்யாகம் தியானம் தானம் மோனம் ஞானம் தபம் ஜபம் மந்த்ரம் யந்த்ரம் முதலானவைகளால் தன்னையறிவது கூடாது. ஆரியர் கிருபையன்றி ஞானதிருஷ்டி யில் மனது நாடாது. உபாயத்தாலாகிற காரியம் பராக்கிரமத்தா

லாகாதென்கிற நியாயம் உனக்குத் தெரிந்ததே. சிலர் நீர்மேல் குமிழியான இத்தேகத்தைச் சுழுத்தி யவஸ்தையிற் பிரேதமாய்ப் பார்ப்பார்களன்றிச் சாக்ராவஸ்தையிற் பார்க்கமாட்டார்கள். எதினுலென்பையோ மல மூத்திர மாம்சக்கிருமிகள் சீழிரத்த நரம்பு என்பு தோல் மச்சை மயிர் மூளை கோளை நஞ்சு குடர் களுஞ் சேர்ந்து ஓர் உருவாயிருக்கும் இந்த ஸ்தூலதேகத்தை நானென்கிற அபிமானம்பூண்டு தன்னை மறந்திருக்கும் அவிவேகிகள் அஞ்ஞானந்தகாரக் குகையிற்சிக்கி நாகவீடாகிய இத்தனுசிற்சொக்கி வியாதிகளால் முக்கி அன்னப்பாலுந்தக்காமல் கக்கி எமனுக்கினைக்குள் புக்கிச் சிருஷ்டிகர்த்தன்முன் வெட்கி அன்னக்கருவினுள் மட்கித் தாசனென்று பேரெடுத்து உற்பவித்தவதூதன் சீரெடுத்து மானசாதிகள் வளர மனமென்னும் மாயையும் வளர்ந்து பயவழியும் விடுத்துப் பாலப்பருவமடுத்து நாருசிக்கே போர்கொடுத்துக் கௌமார தசையையடுத்து விளையாடலாதிகளைத் தொடுத்து எவ்வனமெடுத்துக் காந்தையால் பகவான் ஸ்மரணையைக் கெடுத்து மாயாசம்சார பாரத்தையெடுத்துத் தனைமறக்கும் பிர்மஞானத்தைத் தடுத்து விருத்தாப்பியமடுத்துத் தாரபுத்ர மோகத்தைக் கொடுத்து எமனுக்குரிய சொத்தாகி மறுஜென்மத்துக்கு வித்தாகி யிருப்பார்கள்.

அவர்களே ஆயுளின்னமிருக்க, மோட்சார்த்தத்தை இப்போதே அபேட்சித்தல் சுயேட்சையல்லவென்று காட்சிப்பிரமாணத்தில் சுடுகாட்டுக்குப்போகும் காயத்தை என்ன மாயத்தால் நம்புகிறீர்களோ அவர்களுக்கே வருஷப்பிரமாணம்,வாசாக்ஞானிகளுக்கு மகிப்பிரமாணம், முமுட்சுகளுக்கு நாட்பிரமாணம், அப்பியாசிகட்குக் கடிகைப்பிரமாணம், ஆருடர்களுக்கு மூச்சுப்பிரமாணம். ஆதலால் பகவான் ஓர் முகூர்த்தத்துக்குள் முப்பத்தாறு தரம் பிரசன்னமானாலும் போதாதென்றே யிருக்கவேண்டும். மாயையானது தன்னிழல்போற் பிரியாதிருந்துக்கொண்டு எக்காரியத்தால் நமக்குள் உதயமாவானோ நமது பிரபஞ்சரூப நாமத்தைக் கடக்கும் மார்க்கத்தைத் தேடுவானோவென்கிற எண்ணத்தாற் கற்சேருவதுபோல நம்மைக்கலக்கி மோட்சமார்க்கத்தை விலக்கிச் சுழல்காற்றிலகப்பட்டு உழலும் சருகைப்போல ஜனன மரண தரங்கங்கள் வீசும் வாரிதியிற் படிந்திருக்கும்படியான வகைக்குரிய காரியங்களைச் செய்து களித்திருக்கும்படியாய்ச் செய்கின்றது. அதையே மாயாபூதமெனச் சொல்லப்படும். அன்றி, அப்பா ஒப்பிலாமகனே! தெய்வத்திலுங் குருவே! பெரி

யவனென்றே சாஸ்திரசித்தாந்தஞ் சத்தியமேயாம். பகவான் முனிவு பரமாசாரியராற் றீர்ந்துபோம்; குருசாபத்தை அரியாற் றீர்ப்பதரிதாகும். ஆயினும் காரிய காரணங்களென்கிற உபய மார்க்கத்தைத் தெரிவிக்கும் ஆரியர்களில் காரணகுருவே கர்த்தனாகும். காரணக்குருவின் லட்சணம் சுலட்சணமானவர்களுக்கே தெரியுமெனப் பெரியோர்கள் உரைக்கின்றார்கள். இகவெண்ணங்களிறந்து தன்னை மறந்திருக்கும் காரணகுருவே பரப்பிரமமென்று சொல்லத்தகும்.

மாத்ருதுரோகி பித்ருதுரோகி தெய்வதுரோகி யென்று உரைக்காமல் குருத்துரோகியென்றே உலகத்தில் மிகவும் வழங்குங் காரணம் தனுமனதனங்களைத் தாரைவார்த்து, நிமையும் பிரியாமற் கட்டிக்காத்துக் காற்சேவை முதலானவைகளாற் றேகம் வேர்த்து எப்போதும் மஸ்தகத்தின்மேல் அஸ்தங்களைச் சேர்த்துக் குருநாமத்தை மனோசூத்திரத்திற்கோர்த்து வாஞ்சனை விஷயத்திற் போகும் மனதை யீர்த்து நிர்ச்சங்கல்பனாய், நிர்விகல்பனாய், நிர்நாம பரப்பிர்மமாய், மனதுக்கெட்டா மர்மமாய், வாக்காலுரைக்கத் தர்மமாய், திரிகரணங்களாற் செய்பா நிஷ்கர்மமாய் ஆனந்தமாத்திரமாகி யிருக்கும் நிலையைத் தெரிவித்த நிர்மலகுருவுக்குச் செய்யுங் கைம்மாறு மொன்றுளதோ? ஆரியர் பணிவிடையைவிடப் பிர்மநிஷ்டை மேலானதோ? நாவுகுய்யமென்னும் உபய விஷயானந்தத்துக்காக காக்கையைப் போலவும் சுணங்கனைப்போலவும் சுழலுஞ் சீவர்கள் தேகசுகத்திலும் இந்திரியசுகமே மேலானதென்று அறிந்தபடி மனோசுகத்திலும் சிவசுகமே மேன்மையென்று உணர்தல் கூடாதோ? சிவசுகம் பிர்மானந்தமேயன்றி வேறோர் பிர்மானந்தத்தை யளிக்கும் ஆசாரியர்க்காய் உழைக்கலாகாதோ? பாபங்களெல்லாம் படுசூர்ணமாய் வெந்துபோகாதோ? தேகசுகம் ஸ்மரணை தப்பும் பரியந்தமல்லவோ இந்திரியசுகம்; மயக்கமட்டுமல்லவோ மனோசுகம்; மறதிமட்டுக்குமல்லவோ சிவசுகம்; மரணமட்டுமல்லவோ மரணகாலத்தில் தேகசுகம்; இந்திரியசுகம் மனோசுகத்தையும் வாஞ்சிக்காமல் ஜீவசுகத்தைத் தேடுதல் பொய்யோ? சுழுத்தியில் பிர்மானந்த சுகமன்றி வேறுமொன்றுமுண்டோ? அச்சுகத்தை யிப்போதே தேடுதல் நன்றன்றோ? சங்கல்பமே பிறப்பு விகல்பமே இறப்பு என்னும் வாக்கியம் சத்தியமோ? தேக மசத்தியமென் றிருந்தவர்கள் அரைநிமை யிவ்வுலகில் நாட்டத்திலிருப்பார்களோ? காட்டத்திற்சென்று ஏகநோட்டத்தி

லிருப்போர்க்கு இனியோர் வாட்டமுண்டோ? அவாங்கோஷ்டமும் மனோவேஷ்டையும் நீங்கினோர்களுக்கு ஓர் சேஷ்டையிருக்குமோ? காஷ்ட மௌனத்துக்கு அப்பாற்பட்டவர்கட்கன்றோ கைவல்யஞ் சித்திக்குமெனத் தித்திக்கும் உத்தரஞ் சொல்லுங் கர்த்தவ்ய காரணகுரு உபதேசிக்கின்றார். அத்துவித வஸ்துவை கைத்தல நெல்லிக்கனிபோற் காட்டுங் கருணாநிதி அவரல்லவோ? திரிகாணங்கள் அசைவற நிற்கும் சூட்சுமமார்க்கத்தால் மோட்சமடையச்செய்பவர் எப்பேர்க்கொத்தவரென்றால் என்னைக் காட்டிற்போய்த் தவஞ்செய்ய உத்தரவளித்த இப்பேர்க்கொத்தவரென்று அறைந்து கபீர் பின் மறைந்து நிற்கும் மகாவிஷ்ணுவைச் சுட்டிக்காட்டினர்.

உடனே கபீர் பின் திரும்பிப் பகவான் சீதாசமேதனாகவிருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு தந்தையைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து, "ஓ எனதையனே! அன்னமூட்டின கையனே! என்னைப் பிரிந்துபோக வெண்ணங் கொண்டீரோ? இப்பகவானையன்றி நமக்குப் பரசுகமும் பரமுத்தியும் அளிப்பவ ரொருவருண்டோ? இங்கும் அங்கும் எங்குந் தங்கியிருப்பவர் இத்துங்கனல்லவோ? என்றுரைத்தார். அப்போது தமால், "ஓ என்னப்பனே! எங்கு மிருப்பவர் இப்புங்கவனானாலும் இகலோகத்துக்கும் பரலோகத்துக்கும் எவ்வளவு பேதமுண்டோ? அப்படியே நாடு நாடு என்பதிலும் பேதமுண்டு. இனிச் சுகசீவியாய் வாழ்ந்திருக்கக் கடவாயென்று உரைவழங்கி எழுந்துபோகையில், கபீர் பிதாவுக்குத் தன்மேல் எவ்வளவு வாஞ்சனை யிருக்கின்றதோ அவ்வளவு வாஞ்சனை தனக்கு மிருக்குங்காரணத்தால் சரேலெனப் போவதற்குக் கூடாமல் மனம் மகன்மீது தனு தபசியின் மீது மிருக்கின்றதெனக் காட்டும் பிதாவின் பின்னோடி ஆலிங்கனம்செய்துக்கொண்டு அழும்போது "கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கள்மேல் காதல்" என்னும் பழமொழிப்படி தமால் மகன் மீது தனக்குற்ற அன்பைப் பலருமறிய கண்ணீரா லலம்பினர்.

அப்போது ஜிஜ்ஜாபீபியைச் சுந்தரா ஆலிங்கனஞ்செய்து நளமகாராஜனைப் பிரிந்த தமயந்தியைப்போற் புலம்பினள். இப்படி நால்வருங் கலந்தழும்போது, ஸ்ரீராமபிரானும் சீதாபிராட்டியாரும் அவர்களுடன் தாங்களும் தொந்தமுடையவர்போல் கலந்து பகவான் கபீரையும் தமாலையும் கட்டிக்கொண்டு மகாலட்சுமி சுந்தராவையும் ஜிஜ்ஜாபீபியையுங் கட்டிக்கொண்டு ஓவெனக்கூக்குரலிட்டு அழத்தொடங்கினர்கள். தாத்திரி யசைந்

தால் சகலமும் அசைவதுபோலக் காசியிலுள்ள மாந்தர்களெல்லாரும் கிடந்தபடி நடந்தபடி ஓவென வாய்திறந்து அழத்தொடங்கினர்கள். இப்படி வாரணாசியிலுள்ள பசுபட்சிகள் முதலானவைகளும் கண்ணீர்விட்டு அழுதுக்கொண்டிருந்தால் இவர்களைத் தேற்றுவார் யார்? இப்படி இரண்டுசாமபரியந்தம் இருக்கும்போது ஸ்ரீகாசிவிஸ்வநாதர் பார்வதி சமேதராய்க் கபீர் வீட்டையடைந்து பகவானையும் பார்க்கவியையும் நோக்கி, "ஓ திரிலோகநாயகா! தேவாதிதேவா! செல்வத்திற் சிறந்த சீதாதேவியே! பெருமையிற்சிறந்த பூமாதேவியே! இதுவென்ன கபடநாடகம்? இதுவென்ன மாயம்? அம்பெய்தவதையோ வென்பதைப்போல இவர்களுக்கு உன் மாயமோகத்தைக் கொடுத்துத் துக்கத்தையெடுத்து அழச்செய்ததுமன்றி நீரும் மோகமுள்ளவர்போலழுது இக்காசியில் இருஜாமமாய் அழுகுரலுண்டாக்கினீர். இன்பத்தைப் போக்கினீர். உம்மை நீர் மறந்தீரோ? நாராயணனென்கிறதைத் துறந்தீரோ? நீரே தமாலுக்குப் பிறந்தீரோ? காசியில் துக்கமயமாய் நிறைந்தீரோ? இவ்வித லீலை செய்வது நான் மெச்சவா? தேவர் தமால் மெச்சவா? கபீர் மெச்சவா? சொல்லும்; பகவானே எனப் பலதரம் கேட்டும் பேசாத பீதாம்பரனை விலக்கிக் கபீர்தாசனை நோக்கி, ''"ஓ நிராசையிற் சிறந்த நிர்மலனே! மோகமில்லா விவேகனே! தந்தையாசை சாதுக்களுக்கிருக்கலாமா? இப்படியும் துக்கத்தைப் பெருக்கலாமா? உன்னுடன் பகவானும் வெகுநேரமா யழுதுக்கொண்டிருக்கின்றாரே? அவரையும் என்னையும் பார்க்கலாகாதோ?" எனத் திருவாய்மலர்ந்தருளினர். அம்மாத்திரத்தில் கபீர் கண்ணைத்திறந்து ஆலிங்கனஞ் செய்திருந்த பிரியாத தந்தையையும் அன்புள்ள தாயையும் காணமல் ஒன்றுந் தோன்றாமல் ஓ ஓ! தாய் தந்தை கானகத்தை யடைந்தாரென்று அலரும்போது பகவான், "ஓ கபீர்! உன் தாய் தந்தை கானகத்தை யடையவில்லை; என்னுடைய வானகத்தை யடைந்தார்கள். நானே உன் தந்தையாகும். இலக்குமியே உன் தாயாகும். அவர்களை மானிடர்களென்றே வறிந்தாய். உன்னை நீயறிவாயாகில் உன் மனைவியையும் இன்னாளென்றறிவாய். நீ இப்புவியிற் பிறப்பதற்கு முன்பே அன்னை வயிற்றிற் பிறக்க, உன்னை உன்னிதமாய் வளர்க்க, அன்னை தாதையாய்ப் பிறந்திருந்தோம்; அவ்வுருவை இன்னம் ஓர்தரம் பார்ப்பாயாக" எனத்தமாலுரு வெடுத்து நின்றார். உடனே இலக்குமி ஜிஜ்ஜாபீபியாகத் தரிசனந்தந்

தாள். அப்போது பரமசிவனும் பார்வதியும் பகவான் செய்யுந் திருக்கூத்தைக் குறித்து ஆனந்தமடைந்து மாயா நடனத்தைக் கற்றுக்கொள்ள வாஞ்சித்தவர்போல அசைவற்று நின்றிருந்தார்கள். அப்போது பகவானும் பார்க்கவியும், தமால் ஜிஜ்ஞாபீபிரூபமாய்த் தரிசனந்தந்தபின் மாயமாய் மறைந்தார்கள். கபீர் பகவானும் இலக்குமியும் நமக்குத் தாய்தந்தையராய்ப் பிறந்திருந்தார்கள். இனி நாமன்னை யத்துனுக்காயமுவ தக்ஞானமே யாமெனத்துணிந்து துக்கந்தணிந்து பரமேசுவரனையும் பார்வதியையும் பணிந்து இருநயனங்களையு மணிந்து, "ஓ ஸ்வாமி! நீலகண்டா! நிடலாட்சா! அன்னை தந்தை யாசையாலழுந்தாட்சியுள்ளவனுக்கு மாட்சிமையான காட்சி கொடுக்கலாமோ!" எனத் துதித்தார். பின்பு ஓ விசாலாட்சி! அன்னபூரணி! நாரணி! காரணி! எனப் பார்வதியைத் துதித்து உருகும்போது விசுவநாதரும் பகவதியும் பல ஆசிகள் செய்து "ஓ பரமபக்தனே! ஜீவமுக்தனே! இனி பிரமக்ஞான திருஷ்டியாற் பரமானந்த சாகரத்திற் படிந்திருக்கக்கடவாய்" என்று அந்தர்த்தானமானார்கள். பின்பு கபீர் தாய்தந்தையர் பிரிவாற்றாமையாற் கலக்கமுற்றிருந்து மறுநாள் ராமானந்த சுவாமிகளாற் றேர்ந்து களிகூர்ந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே! எனப் பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

கபீர் மனைவியை வர்த்தகனுக்களித்த அத்தியாயம்

முற்றிற்று,

---

பதின்மூன்றாவது

## கபீர் குமாரனாகிய கமால் யாத்திரை

அத்தியாயம்

---

இப்படி கபீர் நாள் கழிக்குங்காலத்தில் பகவானுடைய மாயையாலும், சுந்தராவின் அபேட்சையாலும், முன் அரம்பைக்கு உன் இஷ்டத்தை ஓர் காலத்தில் நிறைவேற்றுகிறேன் என வாக்களித்திருந்ததாலும், சுந்தராவின் அழகினாலும் மோகமோங்கி மருவித் தெரிவையின் மனங்களிக்கச் செய்யச் சுந்தரா கர்ப்பவதியாகிப் பூரணமானபின் நாரதரின் அம்சமே அந்த முப்பத்திரண் டிலக்கணங்களும் வாய்த்த ஓர் புத்திரனைப் பெற்

ருள். அக்குழவியைக்கண்ட தாயுந் தந்தையும் மிகவுங் களிப்புற்று, அருமையுடன் வளர்த்து கான்முளையின் முகங் கமலம் போலிருப்பதால் கமாலென்று பேரிட்டு, அடியார்களுக்கு விருந்திட்டு, நெய்யுந்தொழிலாற் சீவனஞ் செய்துக்கொண் டிருந்தார்கள். இப்படி ஏழுவருஷங்களாக, ஒருநாள் கமால் தன் தந்தையை வணங்கி, "ஓ என்னையனே! அடியேன் தீர்த்தயாத்திரை செய்துவரவேண்டு மென்கிற எண்ணங்கொண்டேன்; கருணையுடன் விடைகொடுத் தருளல்வேண்டும்" எனத் துதித்தான். அப்போது கபீர் மகனைவாரித் தன் மடிமேல் வைத்துக் கொண்டு, "ஓ என்னப்பனே! நீ அறியாத குழந்தையாயிற்றே; தீர்த்தயாத்திரை செய்துவர உன்னாலாகுமா? துணையின்றித் தனியாய் உன்னையனுப்ப என் மனந்துணியுமா? இன்னஞ் சில நாள் பொறுத்து யாத்திரைசெய்யப் போகலாம்" என்று மறுத்தனர். கமால் தாதையின் பாதங்களை முத்தமிட்டு, "ஓ என்னையாவே! நீர்மேற் குமிழியான இக்காயத்தை நிலையென்று நம்பியிருப்போரல்லவோ நினைத்த காரியத்தை நிமைக்குப்பின் செய்யலாமென யோசிப்பார்கள். க்ஷணபங்குரமென விச்சரீரத்தைத் தீர்மானித்து அரைக்கணமும் வீண்காலத்தைக் கழிப்பார்களோ? இப்படி என்னைச் சோதிக்காமல் அன்புடன் விடை கொடுத்தருளல்வேண்டும்" எனப் பணிந்தான். அதற்குக் கபீர், "ஓ என் கண்மணியே! எள்ளுக்குள் எண்ணெய் போலவும், பாலுக்குள் வெண்ணெய்போலவும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் பகவானை யிருப்பிடத்திற் கண்டு களிப்புறுமல் தேசங்கள் தோறும் ஓடித்திரிவதா லுண்டாகும் பயனென்றுளதோ? என்று மறுத்தார். அதற்குக் கமால், "ஓ என் தாதையே! தாங்கள் உரைப்பது சத்தியமே. ஆயினும் புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்தால் புண்ணியமேலிடுமென்று சொல்லும் பரிசுத்த தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தால் பாபம் க்ஷீணமாகுமென்றும், சாதுக்களைத் தரிசித்தால் சகல சங்கைகளும் நீங்குமென்றும், பல தேசங்களைப் பார்ப்பவர்களுக்குப் புத்தி விளக்கமடையுமென்று சொல்லும் வாக்கியம் மெய்மையாதலால் யாத்திரை செய்ய யோசித்தேன். தடைசெய்யாமல் தயவுகூர்ந்து அனுப்ப வேண்டும்" எனத் துதித்தார். அப்போது கபீர் மகனுரைக்கும் வாக்கியங்களுக்கு மகிழ்ந்தவராய், "ஓஎன் அருமைப்புத்திரனே! தனித்து அன்னியர் வீட்டுக்குட்போகும் அரிவையும், தனித்து அன்னியர் தேசத்துக்குப்போகும் ஆடவனும், அலக்கணுறு

வார் ஆதலால் ஒரு சாதுவின் துணைப்பற்றிச் சந்தோஷமாய்ப் போய்வரலாம்" என்று அறைந்தார். அதைக்கேட்ட கமால் ஓ என் அரும்பிதாவே! ஸ்ரீராம நாமமென்கிற வாளும், சத்குணங்களென்கிற தோழர்களும் எனக்கு அருந்துணைவர்களாயிருக்க வேறு துணையும் வேண்டுவதோ? நீர் இப்படிச் சொல்வது என் மேலிருக்கும் அன்பின் மேலீட்டாலல்லவோவென்று அத்தனடிகளில் அன்புடன் பணிந்து, அன்னையைத் தொழுது போய்வருகிறேன்" என்று துதித்தான். அப்போது சுந்தரா, "ஓ என்னருட்பாலனே! தவத்திற்சிறந்த சீலனே! சத்கருமத்தைத் தடுக்கக் கூடாது. ஆதலால் நீ யாத்திரை செய்ய யோசித்ததைத் தோத்திரஞ்செய்ய நான் எம்மாத்திரம், தாதாவைக்கேட்டு உத்தரவு பெற்றுக்கொண்டபின் மாதாவைக் கேட்கவேண்டுமோ? சுபமங்களத்துடன் போய்வாருமப்பாவென விடைகொடுத்து அனுப்பி விட்டுத் தன் தனயன் சிறுபிராயத்தில் யாத்திரைசெய்யப் போனதைக்குறித்து ஆச்சரியப்பட்டுத் தன் கணவனை நோக்கி, "ஓ ஸ்வாமி! இவ்வுலகில் இவ்வளவு சிறுகுழந்தை தனித்து யாத்திரை செய்யப்போனதுண்டா? நீர் கேள்விப்பட்டதும் உண்டா? தேவரீர் ஐந்துவயதில் ஆதாம்வருணத்தாருடன் தர்க்கஞ்செய்து வென்றதைப்போலவே உமது மைந்தன் ஏழுவயதில் பலதேசங்களிற்போய் பல மதபேதங்களைக் கண்டித்துவர எண்ணங்கொண்டான். தன்னூரில் தந்தை பேரெடுத்தால் அயலூரில் தனயன் பேரெடுக்கப்போனான். இப்பேர்க்கொத்த விந்தை எந்தயுகத்திலும் நடந்திருக்கமாட்டாதென்றே நினைக்கிறேன்" எனத்தொழுதாள். அப்போது கபீர் "ஓபெண்ணே! தசரததனயனாகிய ஸ்ரீரகுநாயகர் பனிரெண்டுவயதானபின்பே யாத்திரைசெய்யப்போனார் நமது மைந்தன் சிந்தையால் நினைந்தது விந்தையாகவே யிருக்கின்றது. ஆயினும் பதிவிரதா சிரோமணியாகிய உன் ஆசிபெற்றுப்போன தனயன் யாதொரு சங்கடமுமடையாமல் சந்தோஷத்துடன் யாத்திரைசெய்து வரக்கடவன்" என்று உரைத்துப் பகவானைத் தியானஞ் செய்துக்கொண்டிருந்தார். இவர்களிப்படி யிருக்க, கமால் நாட்டைக்கடந்து கங்காதீரத்தை யடைந்து அக்கரையிற் செல்வதற்கு யோசித்துப் பாகிரதியைப்பூசித்து, "ஓ ஸ்ரீமந் நாராயணருடைய திவ்யபாதத்தை விட்டுப் பிரிந்தோமென்கிற ஏக்கங்கொண்டிருக்குந் திரிபதகையே! பார்வதியின் பயத்தால் சங்கர சடாபாரத்திற் பதுங்கிக்கொண்டிருக்கும் கங்காபவானியே! கார்த்திகேயனைப் பெற்றுப் புத்திரவாஞ்சை நீக்கிக்

கொண்ட மந்தாகினியே! பார்த்தன் பப்பிரவாகனுக்குத் தோற்றுப் போகும்படியாய் சாபமிட்ட சானவியே! பகிரதனுடைய தவத்துக்கிரங்கி அவன்பின் தொடர்ந்துவந்த பாகிரதியே! சகாராஜன் புதல்வர்களின் சாபத்தை நிவர்த்திசெய்த சாநதியே! ஆவுருவா யண்டத்தைக்கடித்த இரணியனுல் பாருலகில் வந்த ஆகாயகங்கையே! எனக்குள் மூழ்குவோர் பாபத்தை நீக்குவேன் எனப் பகிரதனுக்கு வரமளித்த வரநதியே! என் தந்தையை யிக்கரையிற் சேர்த்து ரக்ஷித்தபடியே என்னை அக்கரையிற் சேர்த்துக் காப்பாயாக'' என்று அக்கங்கையில் இறங்கிப்போனுர்.

அப்படிப் போவதைக் கண்ட பிரஜைகள் "அடா கமால்! ஆழியை நீந்துவதும், இக்கங்கையை நீந்துவதும், ஒன்றென்றே நினை; ஆழியினுழத்திலு மாழமுள்ள கங்கையில் நடந்து கடந்து போனவர்களுமுண்டோ? வேண்டாம்; வேண்டாம். ஓடத்தின் மேற் சகலரும் எறிப்போவதுபோல் நீயும்அக்கரையிற் செல்லு. இல்லாவிடின் கங்கைக்கிரையாவாய்"என்றிரைந்தறைந்தார்கள். அவ்வாறு அறைந்துக்கொண்டிருக்கும்போதே கங்கையிற் சற்று தூரம்போய் அப்பால் போவதற்குக் கூடாமல் அசந்து நிற்கையில், அப்போது கங்காதேவி பிரசன்னமாகிக் கமாலுக்குக் காக்ஷிகொடுத்து, எனது அஸ்தங்கள்மேல் நடந்துபோய்க் கரையேறுவாய் என்று அழைத்துக் கமால் பாதங்களைத் தாங்கினுள். அதனுல் கமால் களிக்கடலி லமிழ்ந்தினவனுய்க் கெம்பீரத்துடன் கங்கையின் அங்கைகளின்மேல் இருகாலேயும் ஊன்ற வைத்துத் தன்னைக் கூவும் பிரஜைகளைநோக்கி, "ஓ சிலர்களே! யுத்தஞ்செய்யப் புறப்பட்டு எதிர்த்துவரும் சேனுபலத்தைப் பார்த்துப் பின்னிடைபவன் வீரனுகுவானு? கற்பைக்காக்க விரதம்பூண்டு மாரனெய்யும் பஞ்சபாணங்களாற் கலக்கமுற்றவள் பதிவிரதையாவாளா? சன்னியாசியாய்ப் புறப்பட்டுச் சரீராதி வாதனைகளுக்கு அயர்ந்து சபதங்களைவிட்டவன் அவதூதனுவானு? அதுபோல், கங்கையின் துணையால் அக்கரையேறுவேனெனத் துணிந்திறங்கி ஆழத்துக்கு அச்சமுற்றுப் பின் திரும்புவேனுயின் கபீருக்குரிய புத்திரனுவேனு? என்றறைந்து பாகிரதியைத் துதித்துக்கொண்டே அத்தீரத்திலேறிப்போனுர். அப்படிப் போகும்போது பகவான் நாரதாதி முனீஸ்வரார்களுடன் சாதுவேஷங்கள் தரித்துக்கொண்டு கமால் பக்கலடைந்து, 'அடா கமால்! எங்கேபோகிருய்? சொல்லடா' என்று மறுத்தார்.

கமால் பணிந்து, "ஓ ஸ்வாமி! அயோத்தியா கயா பதரி நாராயணம் பிருந்தாவனம் அரித்துவாரம் முதலான புண்ணிய ஸ்தலங்களிற் சென்று ஸ்ரீபகவானைத் தரிசித்து, அங்கிருக்கும் பரமபாகவதர்களின் பாதங்களைப் பரிசித்துப் பரிசுத்தனுகவேணு மென்கிற எண்ணங்கொண்டு போகிறேன்" என்று பணிவாக வுரைத்தான். பகவான் சாதுக்களை நோக்கி, "ஓ சாதுக்களே! இச் சிறுவனை நீங்களறிவீர்களா? இவன் துலுக்கரிலும் இந்துக்களி லும் கூடாமல் நடுநாடனுயிருக்கும் கபீரென்பவனுடைய புத் திரனுகும். அக்கபீருடைய தாய் தந்தை தாரம் துலுக்கராகும். ஆசானே ராமானந்தனுகும். குலமோ துலுக்கக்குலம். மதமோ இந்துமதம். வேஷமோ துலுக்கர்வேஷம். ஆசாரமோ பிராம ணுசாரம். பேசுவதோ பிர்மக்ஞானம். செய்வதோ பகவத்தியா னம். சிஷர்களுக்கு உரைப்பதோ அத்வைதம். தானிருப்பதோ த்வைதம். இப்படி இரண்டு வழியிலுமில்லாப் பிரஷ்டனுக்குப் பிறந்த பிள்ளையாகிய இவன் கத்திரிக்காய்க்குக் கால்கைகள் முளைத்தாற்போல ஜானுண்டு பயலாயிருந்தபோதிலும் ஒருவர் துணையும் வேண்டாமல் தனியனுய்ப் புறப்பட்டுப் பல தேசங் களிற் சென்று அங்கங்கிருக்குஞ் சாதுக்களுடன் வாதுசெய்து வென்று ஷண்மதங்களையுங் கண்டித்து அத்வைதத்தை ஸ்தா பித்துவரப் போகிருனும். இது கலிகால மகிமையல்லவோ? உங் களுக்கும் விரித்துச் சொல்லவோ? என்று அறைந்து முப்பத் திரண்டு பற்களைக் காட்டிக் கெக்கலிகொட்டி நகைத்துப் பல பரியாசவார்த்தைகளாடினர். அப்போது கமால் சற்றே முனிவு கொண்டு, "ஓகோ கள்ளச்சாதுவே! நீர் ஓதியது ஒரு விஷயத் தில் நீதியாகவும் ஒருவிதத்தில் அநீதியாகவும் இருக்கின்றது. எப்படியெனில்? உம்முடைய வாக்கிலிருந்து புறப்பட்ட சொற் களையெல்லாம் பூஷணமாகவும் தூஷணமாகவும் பிறருக்குங் காட்டியதன்றி அகடவிகடமாகவும் தோன்றப்பட்டது. ஆனல் உள்ளதைச்சொன்னல் சள்ளென்று விழுபவன் வெள்ளறிவனு கும். நீர் உரைத்ததெல்லாம் உண்மையே. எப்படியென்பீரோ? எங்களுக்குஞ் சாதிபேத மில்லை. யாங்கள் தொழும் பகவானுக்கு ஜாதிபேதமில்லை; காரணம் மச்சகந்தியின் புத்திரனுகிய வியாச ருக்குப் பேரனுகிய அர்ச்சுனனுக்கு ஆயர்குலத்தி லுற்பவித்த எங்கள்பகவான் பெண்கொடுத்தார் சாதிபேதமிருந்தால் கொடுப் பாரா என்ருன். பகவான், 'அடா கமால்! ஓர் க்ஷத்திரியனுடைய வீரியத்தை ஓர் மச்சம் விழுங்கிக் கெர்ப்பமடைந்து மச்சகந்தியை

யின்றதால் அம்மச்சகந்தி வலையர்குலத்தாளாவாளா? க்ஷத்திரியனுகிய வசுதேவருக்குப் பிறந்த கிருஷ்ணரை ஆயர் வளர்த்ததால் இடையனுவானே?'' என்றூர்.

கமால் "அயோனிசம்பந்தராகிய எனது பிதாவைத் துலுக்கர் எடுத்து வளர்த்ததனுல் துலுக்கனுகி விட்டானு? சாதியிற் கெட்டானு? ஆஹா! சாதுக்கள் சாதிபேதங்களைப் பேசலாமா? கௌசிகர்செய்த பல கொடுமைகளையும் அனுபவித்த அரிச்சந்திரன் அவ்விஸ்வாமித்திரரைத் தூஷித்திருப்பானு? லௌகிகத்தைநாடிய அரசனே தூஷணைசெய்யப் பயந்திருக்க, வைதிக தர்மத்தை நாடிய நீர், பரமசாதுவாகிய என் தந்தையை நிந்தை செய்யப்போகுமா? சாதிபேதம் இவ்வுலகுக்கன்றி பரமார்த்தத்துக்குண்டோ? பேதமற்றவன் பிர்மக்கியானியல்லவா? ஆசாரமே குலமல்லவா? அபேதமே அத்விதமல்லவா? எங்களிஷ்ட தெய்வமாகிய பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்த பகவத்கீதையில் துவிதத்தையும் அத்வைதத்தையும் கலந்து பேசவில்லையா? துவிதமே முக்கியமாயின் அத்விதத்தை ஏன் கண்டிக்கவில்லை? அத்வைதமே முக்கியமாயின் துவிதத்தை ஏன் கண்டிக்கவில்லை. இரண்டையுங் கண்டிக்காமல் சமமாய்ப்பேசின பகவத்வாக்கியம் பொய்யோ? அத்வைதத்தைப் பேசினுலும் தன்னை மறக்கும் பரியந்தம் துவிதத்தி லிருந்தவனே யல்லவோ சாக்ர சுழுப்தி நிலை வந்தவன் ஓர் தியானஞ்செய்யக்கூடுமோ? அந்நிலை வராதவன் அத்வைத பாவமடைந்தவனே? வேதவியாசரா லுரைக்கப்பட்ட பாகவதத்திலும், துவிதாத்விதங்களைச் சமமாய்ப் பேசவில்லையா? தேகஸ்மரணமா யிருக்கும்பரியந்தம் இஷ்ட தெய்வத்தையும் ஆரியரையும் மறக்கலாகுமோ? நீர் நியாயமான சாதுவானுல் இப்படிப்பேசுவீரோ? அகங்காரத்தைக் காட்டுவீரோ? என்னைவாட்டுவீரோ? ஜம்பத்தை நீட்டுவீரோ? சிவாம்ஸமான சுகப்ரமரிஷியே என் தந்தையல்லவோ? தேவரம்பையே என்தாயல்லவோ? சட்சக்ரேஸ்வர ரறுவரும் ஒருருவான ஷண்முகராம்ஸனே நானல்லவோ? அபிமன்னனுக்குச் சுந்தரியைக் கூட்டிக்கொடுத்த ஸ்ரீமந் நாராயணர் நீரல்லவோ? இவர்களெல்லாம் நாரதாதி முனீஸ்வரர்களல்லவோ? இன்னம் விரித்துச்சொல்லவோ? சுத்த அத்வைதமான பகவத்கிதையில் துவிதபாவத்தையும் வைத்திருப்பது உம்முடைய சூதல்லவோ? உமது ரூபம் மச்சமா? கச்சமா? வாரகமா? நரசிங்கமா? வாமனமா? பாசுராம, ஸ்ரீராம, பலபத்ராம, கிருஷ்ண, பரமாத்ம ஸ்வரூபமா? மோகினிரூபமா?

உமக்கு எந்தரூபம் மெய்யெனச்சொல்வது? சொல்லி யாரை வெல்வது? உம்மையன்றி வேறுவஸ்து ஒன்றுண்டானுற் காட்டும்? ஏதோ உமதஸ்தத்தை நீட்டும்? ஒரு ராமர் பலராமராய் நின்று மூலபலத்தை வென்றபோது அப்பலராமர் எங்கிருந்து முளைத்தார். ஒரு கிருஷ்ணரோ பல கிருஷ்ணராய்ப் பதினறுயிரங் கோபியர் வீட்டிற்றங்கி நாரதரை நாணமடையச் செய்தபோது, அப்பால் கிருஷ்ணர் எங்கிருந்து கிளைத்தார்? துரியோதனன் சூதுசெய்து பாதாளத்தி லமிழ்த்தினபோது உமக்கு விஸ்வரூபம் எப்படிவந்தது? அயனரனாதியர் நடுங்கத்தகுந்த ரூபத்தைக் கண்ணாரக் கண்டும் கௌரவர் விரோதித்திருந்த சூது யார்செய்தது? ஒரு புத்திரனுக்காயயர்ந்த அர்ச்சுனனுக்குப் பதினாயிரம் புத்திரராகிய வெண்கல ரதக்காரரைப் பறிகொடுத்த நீர் தைரியமுரைத்த காரணமென்ன? உமக்குப் புத்திரரிருந்தாற் சோகமுண்டாகாதோ? நீர் விஷயானந்த சகிதரானுல் பாலபிரமசாரி யென்கிற பேருண்டாகுமோ? உமது கர்ப்பத்தில் இலவண்ட பிண்ட பிர்மாண்டங்களெல்லாம் ஓர் அணுமாத்திரமாயிருந்தால் இலங்கை உமது கர்ப்பத்திலில்லாமல் வேறே யிருந்ததோ? லோகநாயகியை இராவணனெடுத்துக்கொண்டு போக எங்கிருந்து வந்தானே? ஏகாலியனுரைத்த வாக்கியத்தாற் குரோதித்து இரண்டு துண்டாய் இச்சானகியை வெட்டி வாருமென்றுரைத்த நீர் இராவணனெடுத்துப்போன காலத்தில் காட்டினில் வேஷ்டையா யழுதீரெனுமொழி மெய்யென்று நம்பத்தக்கதோ? இராமாயணம் பாரதம் முதலானவைகள் பிள்ளைகள் மணலால் வீடுகட்டி விளையாடுவதற்கு இணையானதல்லவோ? எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் நீர் அயோத்தியில் மதுரா பிருந்தாவனத்திலேயே யிருந்தீரென்று உரைக்கப்போமோ? இப்படி மாந்தர்களின் மதியை மயக்கினதும் உமது மாயையல்லவோ? நிரூபமாய் நிர்நாமமாய் நிர்க்குணமாயிருக்கும் உமது ரூபநாமகுணங்க ளேற்படுத்தியது உமது மாயையல்லவோ? பரப்பிர்மமே நீயன்றி வேறென்று உரைக்கத்தகுந்ததோ? வேறென்றுரைக்க எந்தரூபமுள்ளவரோ? காலத்துக்குத் தகுந்த வேஷந்தரித்துக் கபட நாடகமாடும் உமது மாயையு மறிந்தவருண்டோ? அறியாக்குழந்தையை சோதிக்கவும் வாதிக்கவும் வரலாமோ? தரிசனந் தரலாமோ? ஓ அனுதரட்சகா! அகிலாண்டகோடி பிமாண்டநாயகா! ஆதிமத்யாந்தரகிதா! சோதிநித்யானந்தசகிதா! ஓ பகவான்! ஓ

விஷ்ணு" எனத் துதித்து உருகினர். அப்படி உருகும்போது, பகவான் கருடவாகனரூடராய் சீதாசமேதராய் பாதசத்துருக்க லட்சுமணருடன் காட்சிகொடுத்து, அஸ்தமஸ்த சையோகஞ் செய்து கருணைமழைபெய்து, "ஓ தமால்போனுகிய கமால்! தந்தைக்கு உபதேசித்த கார்த்திகேயனைப்போல் கபீருக்கு உபதேசிக்கும்படியான மர்மங்களெல்லாம் உனக்குத் தெரியும்படியான வரமளித்தேன். இனி ஓர் தடையுமின்றிச் சகலரையும் வென்று சாதுவிருத்தியைப் புகன்று எனக்குத் தேவையான காணிக்கையைக் கொண்டுவாக் கடவாய்" என்று அறைந்து மறைந்தருளினர்.

பின்பு கமால் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவராய் நைமிசாரண்யமுதலான வனங்களிலும், இமயகிரி முதலான பர்வதங்களிலும், அரித்துவாரம் முதலான ஸ்தலங்களிலும் சென்று, தர்க்கித்தவர்களைவென்று, வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம், முதலான ஷட்சமயங்களையும், உலகாயுதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பட்டாசாரியம் முதலான பகிர்சமயங்களாறையும் அத்வைதத்தாற் கண்டித்து, அனுபவமில்லாதவர்களைத் தண்டித்து, இறந்தவர்களையெழுப்பி மறந்தவர்களையு மெழுப்பி, "ஓ பண்டிதர்களே! ஜீவனென்பது எது? ஜீவனை யுண்டாக்கினவன் யார்? ஜீவனுக்கு மரணமுண்டா? இல்லையா? ஜீவன் இத்தனுவுடன் கூடினகாரணமென்ன? ஜீவனுக்குப் பந்தம் வந்த காரணமென்ன? ஜீவன் பலரூபமடையு முபாயமென்ன? கைவல்யம் எந்த லோகத்திலிருக்கின்றது? ஜீவன் எவ்விதமிருந்தால் இன்பமடையலாம்? ஜீவசப்தத்துக்கு அர்த்தமென்ன? ஜீவன் மாயாசம்பந்தமா? பிர்மசம்பந்தமா? ஜீவன் எந்த ஸ்தானத்திலிருந்து வருகின்றது? எந்த ஸ்தானத்தை யடைகின்றது? ஜீவன் போச்சுது வந்ததென்றுரைக்கும் விந்தையென்ன? நரக சொர்க்கமடைவது ஜீவனு? தேகமா? தேகமென்று உரைப்பவருமுண்டா? ஜீவனெனின் அதற்கு ரூபமுண்டா? சுத்த சூன்யமான ஆகாயத்தை வெட்டிப் பிளக்கக்கூடுமோ? அப்படி செய்பவனுக்கு ஆயாசமே பலனல்லவா? ஜென்மமே நாகம், ஜென்மரகிதமே முக்தியல்லவா? பிராந்தியே பந்தம் பிராந்திரகிதமே மோசனமென்று உரைக்கும் தேவவாக்கியம் பொய்யா? பிர்மப்பிரளயமாயும் ஜீவனுக்கு ஜென்மவிமோசன மில்லையென்பதின் கருத்து அகம்பாவத்தை நாசஞ்செய்ய வல்லவர் அகம்பாவ நீத்தலே மாயா

நாஸ்தியாகுமே. சூன்யமான மாயைகடந்தவர்களல்லவோ பூரணமான பிர்மத்தி லயிக்கியப்படுவார்கள். அருண னுதயமானதே இருளெப்படி நீங்குமோ அப்படியே அகம்பாவமென்னும் அந்தகாரம் நீங்கினமாத்திரத்தில் பூரணஜோதிதோன்றப்படும்.

அபேதமான பரஞ்சோதியில் ஐக்யப்பட்டபின் இருளைத் தேடினுலு மிருக்கின்றதோ? சூரியனுல் பிரகாசிக்குங் கண்கள் புண்களல்லவோ? ஆரியனுல் பிரகாசிக்குங் கண் அகண்டமல்லவோ? ஊனக்கண்களுக்குத் திரையுண்டு; ஞானக்கண்ணுக்குத் திரையுண்டோ? ஞானசட்சுவை மறைந்திருக்குந் திரையே மாயையென்று உரைக்கப்படுமெல்லவா? அத்திரையின் மறைப்பாலல்லவோ மதிமயங்கிப் பிரமதேவன் தலையிழந்தான். ஸ்ரீமகாவிஷ்ணு வாலி சுக்ரீவன் என்பதறியாமல் தயங்கி நின்ருன். மகாதேவன் மோகினியாய்வந்த மாதவனை மருவ விச்சித்தான். அண்ட பிண்ட பிர்மாண்டங்களும் மாயாவிலாசமல்லவோ? அகண்ட பரப்பிர்மத்தில் அத்துவிதமாய் இருப்பவர்க்கு அண்டாண்ட மனேகம் லவலேசமல்லவோ? க்ஷணபங்குரமான அங்கம் பங்கமெனப் பங்கமடையலாமோ? அனித்தியமல துக்கமயமான தேகாதிகளை நானென்று இறுமாப்படையலாமோ? திரிகரணங்களையும் அசைவற நிறுத்தி அரைநிமை பிர்ம்மமயமாய் இருப்பதும், திரிகரணங்களால் ஆயிரம் சதுர்யுகம் அருந்தவம்புரிதலும் சமானமாகுமல்லவோ? சற்றே யிச்சையுள்ளோர் சாக்ராவத்தையிலும் மிகவும் வாஞ்சையுள்ளோர் சாக்ர சொப்பன அவஸ்த்தையிலும் ஜபம் செய்வார்கள். சுழுப்தியிற் ஜபஞ் செய்யக்கூடுமோ? திரியவஸ்தைகளிலும் அலுப்பின்றி உலாவிக்கொண்டிருக்கும் அம்ஸமே அஜபா மந்திரத்தை அனேகந்தரம் ஜபித்துக்கொண்டிருக்க அதையறியாமல் சஞ்சலமுள்ள நெஞ்சகத்தோடு ஜெபிக்கும் மந்திரத்துக்கருள்பூர்பவர் யாரோ? நமன் கைக்குத்தப்பி மீள்பவர் யாரோ? சரீரமே நானென்று இறுமாந்து எமன் கையாலே மாய்த்துப் போகலாமோ? இந்திரிய போகங்களை யிச்சித்து இதர ஜீவர்களைப் பக்ஷித்துஇடரடையலாமோ? மனதிலெண்ணப்படி நடந்து மாயாவாரிதியிற் கிடந்து மறதியுற் றிருக்கலாமோ? அந்தந்த இந்திரிய அந்தக்கரணங்களில் அந்தந்தத் தேவதைகளிருந்தாட்டி எமனுக்குக் காட்டிவைப்பதை மறக்கத் தகுந்ததோ! பூஜைசெய்பவனுக்கு மறுயோசனையைத்தொடுக்கும் அகக்கரண

புறக்கான தேவதைகளின் சமர்த்தை எதிர்த்தழைக்கு முபாயம் மௌனநிஷ்டையன்றி ஸ்நானம் கானம் தியானமென்னுந் திரிகாணங்களாற் செய்யுங் கர்மங்களாகுமோ? கர்மங்களுக்கு மேலானது நிஷ்கர்மம், நிஷ்கர்மங்களுக்கு மேலானது தர்மம். தயாதர்மங்களுக்கு மேலானது மர்மம், அகங்காரக் கிரந்தியோர்க்கு உரைக்கக்கூடா அதிகுப்த மர்மத்துக்கு மேலானது பிரமம்.

ஆனந்தமாத்திரமாயிருக்கும் அகண்ட பரப்பிரமமே தானுயிருக்க, அதனை வேறுபடுத்தியுரைக்கத் தான் ஓர் முதலுண்டாயிருந்தாலல்லவோ அவாங்க மனோ கோசரமான வஸ்துவென்றுரைத்தும், அதைத் தியானித்து மோக்ஷமடைய வேண்டுமென்கிற எண்ணங்கொள்ள நாணமாயில்லையோ? தியானிக்கும் மானசத்திலில்லாதவரோ? என்று அனந்தம் வார்த்தைகளால் மறுவார்த்தை பேசாமலடக்கிக் கபீர் அனுக்கிரகம் பெற்றுக்கொள்ளுங்களென்று மடக்கி, ஸ்ரீராமருடைய பராக்கிரமத்தை இராவணனுக்குக் காட்டி, இராக்கதரை வாலால் மாட்டியிழுத்த அனுமாரைப்போலவும், அரியென்னுந் திருநாமத்தின் மகிமையை இரணியனுக்குப் புலப்படக் காட்டிய பிரகலாதனைப்போலவும், தன் பிதாவின் பரிபூரண க்ஞானத்தைப் பலருமறியக் காட்டி எதிர்த்தவர்களை யெல்லாம் வாட்டி, ரூம்-ஷாம்-காபூல்-பஞ்சாப் - மக்கா - அரப்முதலான பட்டணங்களிற் பிரவேசித்து அங்கிருக்கும் மகம்மது மதஸ்தர்களை நோக்கி, ஆனையினடி சப்தத்தையும் எறும்பூருஞ் சப்தத்தையுங் கேட்கும் கடவுளுக்குக் காது செவிடு என்றோ வாயை ஆவெனத் திறந்து ஊவெனக் கூவுகின்றீர்கள். நிர்நாமமான வஸ்துவுக்கு நாமமுண்டாக்கினவர்கள் யார்? எள்ளினு ளெண்ணெய்போலவும், பாலினுள் வெண்ணெய்போலவும், எங்கும் பரிபூரணமாயிருக்கும் பரப்பிரமம் ஏழாமண்டலத்தி லிருக்கின்றாரென்று எழுதினவன் யார்? வாயுமண்டலம், வருணமண்டலம், சந்திரமண்டலம், சூரியமண்டலம், நக்ஷத்திரமண்டலம், அக்கினிமண்டலமென்னும் ஆறுக்கு அப்பாற்பட்டது திரிச்சங்கு மண்டலமாகும். அம்மண்டலத்துக்கு அதிபதியான விஸ்வாமித்திரனையே சுட்டிக் காட்டுகின்றீர்களோ? உமது வம்சத்துக்கு ஆதியான கௌசிகனால் காக்ஷியடைய யோசிக்கின்றீர்களோ? பிரமத்தை நோக்கி மர்மமாயிருக்காமல் உங்களுக்கும் பல தர்மங்களேற்படுத்தினது மாயையல்லவோ? ஏகக்கடவுளிலே இலௌகீகபாவமாயிருக்கும்

மார்க்கமறியாமல் மோட்சமடைதற் கிலேசானதோ? மேற்கே நோக்கித் தீர்க்கதெண்டனிடும் உமது மார்க்கத்தில் கிழக்கில் கடவுள் இல்லையென வழக்கைக் காண்பித்ததோ? மதியிலுற்ற மயக்க சங்கல்பமே மாயாபூதங்களென் றறியாமல் வலதிடது தோளை மாறிமாறிப் பார்ப்பதென்ன மதிமோசமோ? பசுபாசமோ? குணரகிதனான கடவுளை வழுத்திக்குக்கிட முதலானதுகளின்கழுத்தை யறுத்தலென்ன மாயாசம்பந்தமோ? ஈது யாருக்குத்தான் ஒப்பந்தமோ? வாக்கில்லாக் கடவுள் மஹம்மது முதலான பயம்பர்களுடன் எப்படிபேசினார்? வாழ்த்துதல் எப்படிசெய்தார்? மறைந்திருந்து எப்படி யுத்தரந் தந்தார்? வாக்கிருந்தால் நாக்குமுண்டே? நாக்கிருந்தால் நானு வவயவமுண்டே; அவயவத்துக்கு ரூபம் உண்டே; ரூபத்திற்கு ஜென்மமுண்டே; என்கிற சங்கைகள் பல செய்து அனுபவார்த்த அம்புகளெய்து, "ஓ மொசல்மான்களே! ஆணும் பெண்ணுமல்லவா அலியென்னும் அகண்ட வஸ்துவில் ஐக்யப்பட்டிருக்கும். வலியென்னும் பிரமக்ஞானிக ளனுபவத்தைச் சற்றே விசாரித்து அறியலாகாதோ? அதனல் அனுபவக்ஞானம் தெரிந்து போகாதோ? ஆமைபோ லூமைபோலிருக்கும் ஆனந்தாவேசமேலிட்டு அவர்கள் அனுபோக மார்க்கத்தை நீக்கி மேற்கேநோக்கி ஆயுளைப் போக்கிவிடலாமோ? வீணாக்கி விடலாமோ? அனுபவக்ஞானமின்றிமோட்சமடையப்போமோ? ஆனந்தமூறப்போமோ? மஹம்மத் என்னும் வாக்கியார்த்தம் மஹா பெரிய மத்மதம் ஆக மகாமதம் பிடித்தனென்கிற அர்த்தத்தைக் காட்டுகின்றதறியீரோ? அகம்பாவ மாகாதென்பதனைக் குறியீரோ? அகங்காரமுள்ள ஓர் அரசன் மாயமான் பின்றொடர்ந்து காட்டையடைந்து வேஷ்டையாற் கிடந்திருக்கையில் அவனை மறுதேசத்துக் காவலர் வந்து சூழ்ந்து பிணித்துக் கட்டிப் பட்டணத்திற் கொண்டுபோய்க் கள்வனெனக் கரங்கால்களை வெட்டியெறிய அவ்வரசன் அகந்தையைக் கடந்து சாந்தத்தில் நடந்து வரும்போது தனக்குத் தானே வெட்டுண்ட கைகள் வளர்ந்தன வென்று உங்கள் சாஸ்திரங்களில் முறையிடுவது அபத்தமோ? அப்படியிருக்க சில நாளுக்குமுன் ஓர் ஏழைக்குடும்பத்தில் உற்பத்தியான மகம்மதுயென்பவன் இடும்பால் கொடும்பாவக் கொலைத்தொழிலை இயற்றும்படி எழுதிவைத்ததைச் சத்தியமென்று நம்பி நிறையத்துக்குள்ளாகுதல் நன்மையோ? சகல சிவராசிகளையும் மானிடர் புசிக்கவே கடவுள் படைத்திருக்

கின்ருரென்கிற கட்டளை மெய்யென்று ஒத்துக்கொண்ட நீங்கள் மானிடர்களைப் புசிக்கும் மிருகங்களைக் கடவுள் ஏன் சிருஷ்டித்தாரென்று உங்களுக்குள் ஒத்துப்பார்த்துக்கொண்டு இது தப்பென்றும் அயிம்ஸையே நமக்குரிய ஒப்பென்றும் உணர்ந்து கொள்ளக்கூடாதோ?கோடிநாள் தவஞ்செய்து கொலையொன்று செய்யின் தபமெல்லாம் ஓடி வித்தையாய்ப் போகாதோ? அக்கிரமமான குரானில்எழுதியிருக்குங்கட்டளைப்படி அனுபவக் ஞானியாகிய யமன் உன்னைச் சூலத்தின் மேலேற்றி அவர் வாக்கினுற் சொல்லும் மகாவாக்கியத்தை மாற்றும் உபாயம் பலசெய்தும் அவர் அங்கத்திலிருந்து உதிர்ந்த உதிரத் துளிகளெல்லாம் அனுபவ மகாவாக்கியத்தை யுரைக்க, அவரங்கத்தையும் சிந்தின உதிரத்தையும் சேர்த்து எரித்துச் சாம்பலாக்கினபின் அவ்விபூதியும் வேதமா வாக்கியத்தைப் புகல அதை ஓர் கும்பத்தில் அடைத்துவைத்திருக்க, அப்பட்டணத்து அரசன்புத்திரி அதை மோர்ந்ததே கர்ப்பவதியாய்க் கர்ப்பத்திலும் அச்சப்தமே உச்சரித்துக்கொண்டு இருந்து உற்பவித்து அவ்வாக்கன்றி மறு வாக்கை யுரைக்காமல் அப்பட்டணத்து அரசன் புதல்வன் மடிந்துபோக, அச்சுதனை அவ்வாக்கியத்தால் எழுப்பின துடுக்கர் செய்யுந் துன்பத்துக்காகத் தேகத்தின் சர்மத்தை வாங்கி மொசல்மான்களுக் கொப்பித்துச் சூரியனை வரவழைத்து மெய்ப்பித்து, உங்கள் குரான் தப்பிதமெனக் காட்டவில்லையோ? அப்பட்டணத்தை உஷ்ணத்தால் வாட்டவில்லையோ? என்கிற பற்பல கதைகளைக் காட்சிப் பிரமாணமாகக்காட்டி அனுபவக் ஞானமொழிகளால் மாட்டிக் கபீரைப் பாராட்டித் தந்தை பெருமையை நீட்டி ஜகத்தை உத்தாரணம்செய்யும் நிமித்தம் சுகப்பிரமமே சப்தலோகங்களெல்லாம் திரண்டு ஓர் உருவமாய் இவ்வுலகத்தில் வந்து இருக்கின்ருர். அவருக்குத் தாய்தந்தையில்லை; ஜாதிபேதம்இல்லை; மானயீனம்இல்லை; நம்புங்களென் சொல்லையென்று உரைத்துச் சமஸ்த மதாபிமானிகளையுங் கரைத்து, அங்கிருந்து புறப்பட்டுத் தந்தையிருக்கும் வாரணாசியை நோக்கி வரும் மார்க்கத்திலுள்ள ஓர் பட்டணத்திற் றங்கினர்.

அப்போது அப்பட்டணவாசியாகிய ஓர் வர்த்தகன் கமால் மகிமையைக் கேள்விப்பட்டு அவரைப் பார்த்து வரும் பிரஜைகளை நோக்கி, "ஓ மாந்தர்களே! அறியாக் குழந்தையாகிய கமால் என்பவனிடம் என்ன மகிமை யிருக்கின்றதென்று போகின்றீர்கள்? அவனிடம் போனுல் பிணி நீங்குமா? பீடை

நீங்குமா? பெருமை யுண்டாகுமா? திரவியமகப்படுமா? ஜென்ம சாபல்யமாகுமா? ஓரெறும்பின்பின் பல பிபீலிகைபோகுங் காரணத்தைப்போல் அவிவேகி ஒருவன் மெச்சினுல் பலரும் மெச்சிப் பட்டணமெல்லாந் திரண்டு கும்பல் கும்பலாய்ப் போகின்றீர்கள். போன பலருக்குள் எவன் குறையாவது நீங்கிற்ரு? இன்பமெவனுக்காவ தோங்கிற்ரு சொல்லுங்கள்" எனக் கேட்டான். அதற்குப் பிரஜைகள், "ஓ கனவானே! கற்பகத்தருவைச் சார்ந்த காகமும் அமிர்தமுண்ணும்' என்னும் பழமொழிப்படியே கமாலைத் தரிசித்துக் குறைநீக்கிக் கொள்ளாதவர்களுமுண்டா? எனக்குக் குறை தீர்ந்தது எனக்கிவ் வாஞ்சனை நீங்கிற்று என்று உரைத்தார். அப்போது, அவ்வர்த்தக னதிசயித்து எனக்குற்ற பவுத்திர வியாதியை நீக்குவாராயின் அவருக்கு ஆயிரம் பொன் விலையுள்ள ஓர் பச்சையைக் கொடுக்கிறேனென்று உரைத்தான். அப்போதே அப்பிணி நீங்கிற்று.

உடனே சிறைநீங்கினவன்போல் களிப்படைந்து நவநிதிகளிற் சிறந்த விலையுயர்ந்த ஓர் பச்சையை ஓர் தட்டிலேந்திக் கொண்டு கமாலிடம் போய் மிகவும் உபசரித்துப் பேசுஞ் சாதுரியத்தைக்கண்டு அதிசயித்துச் சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டெழுந்து நின்று, பெற்ருல் இப்பேர்க்கொத்த பிள்ளையல்லவோ பெறல்வேண்டும். பிள்ளையென்பதில் அணிப்பிள்ளை கீரிப்பிள்ளை கிளிப்பிள்ளை முதலான பிள்ளைபட்டம் பெற்றதற்கு இணையான பிள்ளைகள் பிறந்தால் பிரயோசனமுண்டோ? பால் கொடாத பசுக்கள் பலவிருந்தாற் பயன் ஏதேனுமுண்டோ? உன்மத்தமுள்ள பத்துப்பிள்ளைகள் பிறந்திருப்பதால் கணக்கிடுவதற்கே யல்லவோ வித்தையிற் சிறந்த உத்தமமைந்த னொருவனிருந்தா னுலகத்தை யாளலாம். இப்பேர்க்கொத்த புத்திரனைப்பெருத நாம் எப்பேர்க்கொத்த பாக்கியத்தில் நிறைந்திருந்தாலும் குறையற்றவனே யென்கிற பற்பலவெண்ணங்களோடுங் கூடிநிற்கையில், கமால் அவ்வர்த்தகனை நோக்கி, "ஓ தனவானே! உனக்குற்றபிணி நீங்கிற்ரு? என்னைப் போன்ற புத்திராபேட்சையால் தன்னை மறந்து நிற்கின்றீரோ? என்னை உமது புத்திரனுகப் பாவித்துக் கொள்ளலாகாதோ? உமது குறை நீங்கிப்போகாதோ?" என்று அவ்வணிகனை ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு ஆசனத்தின்மீதி லிருத்திக்கொண்டு அன்புள்ள வார்த்தைகளாடினுர். அப்போது அவ்வர்த்தகன் தான் பெற்ற புத்திரனுகவே யெண்ணி, இனி இக்குழந்தையைப் பிரி

வது கூடாதென நண்ணி, உச்சிமோந்து முத்தமிட்டு இனி நமது வீட்டுக்கு வாருமப்பாவென்று அழைத்தார். அதற்குக் கமால் சம்மதித்து அவ்வணிகன் மனைக்கு எழுந்தருளி, "ஓ மகானுபாவனே! உமது தந்தை இவ்விடத்தில் உமக்காகச் சில பச்சைகள் புதைத்திருக்கின்றார். அதைக்கெல்லி யெடுமையா" எனத் திருவாய்மலர்ந்தருளினார். அப்படியே அவ்விடத்தில் வெட்டிப் பார்க்கையில் சிறுகுழந்தை யணியத்தகுந்த பச்சைக் கற்கள் பதித்து செய்திருக்கும் பல ஆபரணங்களகப்பட அதைக் கண்ட வணிகன் ஆனந்தமடைந்தவனாய் இப்பணிகள் அணியும்படியான சிறுகுழவியில்லாத ஏழையேனுக்கு இதை ஏன் காணுறச் செய்தீர்? எனக் கண்கலங்கி நின்றான். அவ்வாறு நிற்கையில் கமால் பணிகளணியத்தகுந்த சிறுகுழந்தையாயழுகிற குரலோசையென்னும் நாதாநந்தத்தில் அவ்வர்த்தகனைச் சொக்கும்படியாகச் செய்தார்.

அவ்வணிகன் கமாலைக் காணாமல் கான்முளையைக் கண்டு ஆனந்தங்கொண்டு, கமாலே நமது புத்திரவாஞ்சையைத் தீர்த்தருளினாரென்று பாலனை வாரியெடுத்து மார்புடனணைத்துத் தனது நாயகியை விளித்து, "ஓ பெண்ணே! என்னிருகண்ணே! நமக்குற்ற புத்திரபாக்கியம் நீங்க விசித்திரமான மகன் உற்பவித்தான்; பசியாற் கதறுகிறான்; பணியாலுதறுகிறான்; அங்கையாற் சீக்கிரமெடுத்துக் கொங்கையையூட்டி அனங்கனைக் காப்பாற்று" என்று போற்றினான். உடனே அவ்வரிவை தனையனாசையால் அதிசீக்கிரமாய் வந்தெடுத்து மார்புடனணைத்துக் கலையை நீக்கி ஸ்தனத்தைக் கொடுக்கக் கடவுளருளால் பாலுண்டாகக் கான்முளை அகடுநிறையப் பாலுண்டு அன்னைதந்தையின் வதனங்களைப் பார்த்து, அவர்களகம் அக்கினியைக் கண்ட அரக்குபோ லிருக்கும்படியாய்ச் சிரித்து அளவிலா மோகக்கடலிலமிழ்த்தித் தன்னை மறக்கச்செய்தார். அப்போது அவ்வர்த்தகன் சந்தோஷமேலீட்டால் சகலருக்கும் பஞ்சதாரையைப் பங்கிடும்போது பலரும் என்னகாரணத்தால் சர்க்கரையைப் பங்கிடுகிறார்களெனக் கேட்டார்கள். கமால் வர்த்தகனுக்குப் புத்திரனாகச் சிறுகுழந்தை வடிவுட னிருக்கின்றாரென்று விந்தையுரைக்கக் களித்துக் கமால் வீற்றிருக்கு மிடம்போய் அங்கு எதாவுருவோடிருப்பதைக் கண்டு ஆச்சரியங்கொண்டு புத்திரபாக்கிய மில்லாதவர்க ளெல்லோரும்போய், "ஓ கமால்! எனக்குப் புத்திரனாகக்கடவாய்; எனக்கு மைந்தனாக வரக்கட

வாய்" எனத் தோத்திரஞ்செய்து உருகினார்கள். அப்போது பணிகள் பூட்டிய பல புத்திரராய்க்காட்டிச் சகலருடைய புத்திரவாஞ்சையையும் நீக்கிக் குறைவென்பதைப் போக்கி, வாரணாசியை நோக்கிப்போகையில், வணிகன் கேள்விப்பட்டு கமாலுக்கென்று எடுத்துக்கொண்டுபோன பச்சையை இச்சையுடன் வைத்திருக்கலாமா? இப்பேர்க்கொத்த புண்ணியவானுக்கல்லவோ நமது உடல் பொருள் ஆவியைத் தாரைவார்த்தல் வேண்டும். புத்திர பாக்கியமில்லா மாந்தாதாவுக்குப் புத்திரபாக்கியமளிக்க நாரதராற் கூடாமற்போயிற்று. தசரதனுக்குப் புத்திரகாமேஷ்டியாக முன்னிலையில் வதிஷ்டர் புத்திரபாக்கியமளித்தார். அதுவுங் கலைக்கோட்டு முனிவரால் நடந்தது. இவ்வளவு அரிதாகக் கிடைக்கும் புத்திரபாக்கியத்தை அனேகருக்கு அளித்துக் களிக்கும்படியாய்ச்செய்த கமாலை நானினிப்பிரிந்து உயிர்தரிப்பேனா? கமால் காருண்யம் பெற்றவன் காயத்துடன் சுவர்க்கம் அடைவதற்கு ஓர் தடையுண்டோ? பெருத்த மேடைகட்டி வாழ்வதால் உயிர்போந்தருணத்தில் கூடவரப்போகின்றதா? பெண்டுபிள்ளைகளைத் தன்னுயிர்போல் காக்கினும் நமது பாப புண்ணியத்துக்கு உடன்படப் போகின்றார்களா? எல்லோரும் பணமிருந்தால் மணமாய்ப் பார்ப்பார்கள். பணமில்லாவிடின் பிணமேயென்று யாரும் பேசமாட்டார்கள். கனகமிருந்தால் தாய்தந்தை அண்ணன் தம்பி புத்திர மித்திராதிகள் பட்சமாய்ப் பாராட்டுவார்கள். அன்றி மிகவுஞ் சீராட்டுவார்கள். அதுவில்லாவிடில் எங்கிருக்கிறாயென்று வாய்ப்பேச்சும் பேசமாட்டார்களல்லவா? மாந்தர் துர்விஷயத்திற் செலவழிப்பதுபோல நல்விஷயத்திற் செலவழிக்கமாட்டார்கள்.

எவர்களுந் தங்கள் தங்கள் தாரபுத்திராதிகளைக் குறித்துத் தழைத்துழலுகின்றார்களே யல்லாமல் பகவத்பக்தர்களைக் குறித்து அரைக்கணங் கஷ்டமெடுத்துக் கொள்ளமாட்டார்களல்லவா? தனுமன தனங்களைச் சாதுக்களுக்கு தாரைவார்த்து இகபோக வாஞ்சையை நீத்துப் பரலோக சாம்பிராச்சியத்தை ஆசிப்பவர்களே, மாந்தரிற் சிறந்த மகானுபாவர்களென்று உரைக்கத்தகும். தன் பராக்கிரமத்தால் காட்டுக்கு அதிபதி யாதொரு சஞ்சலமற்று உழலும் அரிமாவைப்போலத் தனமிகுதியால் நாட்டுக்கு அதிபதியாகவும், எதேச்சையுடனே ஸ்திரீயாதி போகங்களில் ரமித்துக் கொழுத்துப் பழுத்துக் கொக்கொக்கென்கிற இருமல் முதலான பலவித வியாதிகளாற் பீடிக்கப்

பட்டு, இகபரங்கெட்டு, குறுக்கி யோனிகளிற் சிக்கி எமவாதனை யாற் சொக்கி, அலக்கணுறல் நன்மையோ?'' என்று அவ்விதங் களா யோசித்துத் தன்மனைவியை நோக்கி, "நீ இக்குழவியுடன் உன் தந்தைவீடு சேர்ந்து சுகமாயிரு; நான் கமால்பின் போய் வருகிறேன்'' என்று உரைத்துத் தனது ஆஸ்தியெல்லாம் தர்ம விஷயத்தில் நாஸ்திசெய்து மேடை மாளிகைகளையும் உத்த மர்க்குத் தாரைவார்த்துக் கமாலுக்குரிய பச்சை ஒன்றுமாத்தி ரம் எந்திக்கொண்டு அதிதுரிதமாய்க் கமால் பக்கலடைந்து வந்தனம்புரிந்து மிகவும்பரிந்து, "ஓ என்னுண்டவனே! ஆனந் தத் தாண்டவனே! என்னைவிட்டேக உமக்கு மனமும் வந் ததோ'' என்று அழத்தொடங்கினன்.

கமால், "ஓ தனவானே! கனவானே! நானே குழந்தையுரு வாகி உமதகமிருக்கப் பிரிந்து போவதாக நினைக்கலாமோ? நீர் வந்துவிட்டால் அங்கு என்னைக் காப்பாற்றுவார் யார்? என் மொழியை மறுக்காமல் என்னம்சமாகிய குழவியை ஆதரணை செய்யச் சீக்கிரம் புறப்பட்டுப்போம்" என்று உரைத்தார். அப் போது வர்த்தகன் நீர்வந்தாலன்றி நான்போகமாட்டேனென்று உரைத்தான். அதற்குக் கமால் உன்னைப்போலவே இச்சரீரத் தைப்பெற்ற கபீர் வாஞ்சைகொண்டிருக்கின்றார். அவருக்கு இவ்வுருவைக் காண்பித்து அகத்தியம் வருகின்றேன். நீர் என் வாய்மையை மறுக்காமல் வீட்டைச் சேருமென்று உரைத்தார், வர்த்தகன் உமதிஷ்டப்படியேசெய்கிறேன். இக்காணிக்கையை எற்றுக்கொள்ளுமென்றான். அதற்குக் கமால், "ஓ மகானு பாவனே! நானிதை யிச்சித்தேனாகில் ரவ்ரவாதி நரகத்துக்கு ஆளாவதற்கு ஓர் தடையுண்டோ? உமக்குற்ற ஆஸ்தியை யெல்லாம் தர்மவிஷயத்தில் நாஸ்தி செய்துவிட்டீர். தாரித்ரி யத்துக் குட்பட்டீர். இதை யாதரவாய் வைத்துக்கொண்டு சிவனார்த்தம் நடப்பித்துக் கொண்டிரும். சிலநாளில் வரு கிறேன்" என்று அகன்றார். அப்படி அகலும்போது வர்த்தகன் கமாலுடன் பேசிக்கொண்டே அவருக்குத் தெரியாமல் அப் பச்சையை முந்தாணியில் முடிந்து, போய்வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு, தன் மாமனார் வீட்டை யடைந்து கமால் கருணையா லுற்பவித்த மைந்தன்மீதிருக்கும் நகைகளிற் சிலதை விக்கிரயப்படுத்தி, அதனால் வியாபாரத்தை நடத்தி, முன்னிலும் மேடைமாளிகை முதலானவைகளிற் செழித்துக் கமால் வரவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார். இங்கிப்படி

யிருக்கக் கமால் தந்தைதாய்மேலுற்ற அவாவால் பச்சையை முடிந்திருக்கும் விந்தையைச் சிந்தையுட்கொள்ளாமல் நடந்து கன்றைநாடிச் செல்லும் பசுவைப்போலப் பாகீரதியைக் கடந்து, வீட்டையடைந்து, தந்தைதாயை வலம்வந்து வந்தனஞ்செய்து யாத்திரை போய்வந்த விருத்தாந்தங்களைச் சவிஸ்தாரமாய்ச் சொல்லத்தொடங்கினர். கபீர் தனயன்மேலிருக்கும் பேரன்பால் பலதரந் தழுவியணைத்து அங்கவஸ்திர முந்தானியில் முடிந்திருக்கும் பச்சையை யவிழ்த்துப்பார்த்துத் தேகமெல்லாம்வேர்த்து முகந்திருப்பிக்கொண்டு, பூசாவிக்கிரகத்தின் முன்னின்று துக்க சாகரத்தில் மூழ்கி ஓவென்று அழத்தொடங்கினர். சுந்தரா என்னகாரணமென வாய்விட்டு பிரலாபிக்கத் தொடங்கினள். காரணந் தெரியாக் கமாலும் அழத்தொடங்கினர்.

அப்போது கபடநாடகனாகிய ஸ்ரீமந் நாராயணன் ராமலட்சுமண பரதசத்துருக்ந சீதாசமேதராய் வந்து, கமால் கபீர் சுந்தராவையுங் கட்டிக்கொண்டு ஓவென்று அழுது புலம்பத்தொடங்கினர். இதுசங்கதிதெரிந்தராமானந்தசுவாமிகள்தனதுமாணாக்கருடன் புறப்பட்டுக் கபீர் வீட்டையடைந்து "ஓ கபீர்! கதவை மூடிக்கொண்டு யார் கூப்பிட்டாலும் பேசாமல் வெகுநேரமாய் என் அழுதுக்கொண்டிருக்கின்றீர்? நான் கூப்பிட்டுப் பேசாமல் இருக்கலாமோ?" எனக்கூவினர். அதைக்கேட்டகபீர் இதோவந்தேன் ஸ்வாமியென்று கண்களைத் திறந்து கடவுளமும் பாசாங்கைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து அதிசீக்கிரமாயோடி அரணந் திறந்து ராமானந்தஸ்வாமிகளைத் துதித்து உள்ளே வாருமென்று அழைக்க, அகத்தில் வந்த ராமானந்த ஸ்வாமிகள் ஸ்ரீராமலட்சுமண பரதசத்துருக்கன சீதாபிராட்டியைக் கண்டு, ஆனந்தங்கொண்டு, இன்று உம்மைக் காணும்படியான பாக்கியமேதோ? நாம் செய்த சிலாக்கியமேதோ? இக்கபீருடன்கூடி நீர் அழுங்காரணம் ஏதோ? அவ்விருத்தாந்தம் உமக்குத் தெரியாததோ? உம்மால் நீங்காக் குறையுமுண்டோ? ஓ பகவானே! என்று உருகினர். அப்படி உருகும்போது, "ஓ இராமானந்தா! என்னுடைய மார்பகத்தில் அணிந்துக்கொண்டிருக்கும் இப்பதக்கத்தில் நடுநாயகமாகப் பதிக்கப் பச்சையொன்று அகப்படாமல் வெகுகாலமாய் வாஞ்சை கொண்டிருந்தது. இக்கமால் யாத்திரை போகும்போது காணிக்கை கொண்டு வரும்படிச் சொல்லி யனுப்பினேன். என் வாக்கை மறுக்காமல் இப்பச்சை கொண்டு வந்தான். அதற்காகவே இக்கபீர்

அழுதான்; நாங்களுமமுதோம். இப்பச்சையை நீர் தருவிப்பீரேல் எக்காலமும் உமது ஞாபகமிருக்கும்'' என்று உரைத்தார். அப்போது கபீர் கரத்திலிருக்கும் பச்சையை ராமானந்தஸ்வாமிகளுக்குக்காண்பித்து, ''ஓ ஸ்வாமி!பகவான் பச்சையைக்கொண்டு வந்த கமாலைப் பரியாசஞ் செய்கிறீரேயன்றி உண்மையாய் நம்பத் தக்கதல்ல; இல்லாதவரல்ல'' என்று சொல்லினர். அதற்குக் கபீர்''ஓ என்னுண்டவனே! கஸ்தூரியைக்கொடுத்துப் புழுதியும், வேதாந்த சாஸ்திரங் கொடுத்துக் களாசாஸ்திரமும், :கங்கையை ஊற்றிவிட்டுச் சுராபானமும், சந்தனக்கட்டையைக் கொடுத்து எட்டியையும், அசுவத்தைக்கொடுத்துக் கர்த்தபத்தையும், அமிர்தத்தைக்கொடுத்து விஷத்தையுங் கொண்டுவந்ததைப்போலப் பகவான் திருநாமங்களை விற்பனைசெய்து அற்பமான கல்லைக் கொண்டுவந்தான். இதனுல் நிரையத்துக் குள்ளாகும்படியாய் நேரிட்டது. எவ்வளவு உயரப்பறந்தாலும் பருந்து கருடனும், தீபங்களெத்தனையானுலுஞ் சூரியனும், நட்சத்திரங்களெத்தனையானுலும் சந்திரனும், பசுக்களெல்லாங் காமதேனுவும், விருட்சங்களெல்லாங்கற்பகமும் ஆகாது. அதுபோலஇக்கமால் எவ்வளவு பிரயாசைப்பட்டுயாத்திரை செய்துவந்தாலும் நிராசையுள்ளோனுக்குச் சமானமாகான். இனி இவன் முகத்தில் விழிக்கலாகாது. நம்முடன் இவன் கூடியிருக்கத்தகாது. ஓ சுந்தரா! இக்கமாலினை வெளியிலனுப்பிவிடும் என்று உரைத்தார்.

அதுகேட்ட கமால், ''ஓ என்தந்தையே! நீர் உரைத்தது வெகு விந்தையே. இந்தஅற்பக்கல்லின்மேல் அவாக்கொண்டேனென்று நிச்சயமாய் நினைக்காதீர். புலிஎவ்வளவுபசியாயிருந்தாலும் புல்லைத்தின்னுது. சிங்கம்எவ்வளவு உதராக்கினியால் வாட்டமுற்றிருந்தாலும் நரியிறைச்சியை யுண்ணுது. விவேகி எவ்வளவு சங்கடமடைந்தாலும் லோபியைக் கேளான். புண்ணியவானுக்கு எவ்வளவு வறுமைவந்தாலும் தர்மஞ்செய்ய யிடையான். வீரன்மேல் எவ்வளவு சேனைகள் திரண்டு வந்தாலும் முதுகு காட்டி ஓடான். பதிவிரதைக்கு எவ்வளவு காமவிகாரம் மேலிட்டாலும் பரபுருடனை நாடாள். யோகி தனக்கெவ்வளவு மதமிருந்தாலும் ஸ்திரீமுகம் பாரான்.அதுபோலவே விராகமுள்ள நான் இச்சொற்பக் கல்லின்மேல் இராகங் கொள்ளுவேனு? எனக்குத் தெரியாமல் என்மேல் வாஞ்சையுள்ள ஓர் வர்த்தகன் முடிந்திருப்பான். அறியாமலும் ஒருவர்சொத்தை அபகரிக்கக்கூடாது. இக்

கல்லினாலல்லவோ சகலரும் அழும்படியாய்நேரிட்டது. இதோ அரைக்கணத்திற் கொண்டுபோய்க் கொடுத்து வருகிறேன். சகலருக்கும் சந்தோஷந் தருகிறேன்" என்று அக்கல்லை வாங்கிக் கொண்டு அதிசீக்கிரமாய் நடந்து வர்த்தகனிருக்கும் ஊரையடைந்து வர்த்தகன்பாற்சென்று, "ஓ தனவானே! இப்பச்சையை நானறியாமல் முடிந்து என்னை அவமானப்படுத்தினீர். இப்படி செய்யலாமோ? என் மிடற்றைக் கொய்யாமல் கொய்யலாமோ? என்றீந்தார். பின் அரைக்கணத்தில் தந்தைபாற் சேர்ந்து, "ஓ என்னையனே! பச்சையை வர்த்தகனுக்கு அளித்து வந்தேன், இனி உமது ஆயாசம் நீங்கிற்றோ? துக்கம்போயிற்றோ? என்றார். கபீர், "ஓ கமால்! ஒரு முகூர்த்தத்துக்குள் வர்த்தகன்பாற்சென்று வந்தாயா? நிச்சயமா? என்றார். பகவான் "ஓ கபீர்! நானிச்சித்த பச்சை நிச்சயமாய்க் கொண்டுபோய்க் கொடுத்துவந்தான். நான் சந்துஷ்டி யடைவதைப்பார்க்கிலும் உங்களுடைய வைராக்கியம் மேலானதோ?" என்று அறைந்தார். கமால், "ஓ பகவானே! கடைத்தேங்காயைத் திருடி வழிப்பிள்ளையார்க்கு உடைத்தால் பிரயோசனமில்லாததுபோல் வர்த்தகன் சொத்தை உமக்கு அளிப்பதால் யாங்கள் அடையும்பயன் ஏது? நீர் இத்துச்சமான பச்சைமேல் இச்சைகொண்டது நிச்சயமோ? என்றதையும் மகனைப்பார்த்த கபீர் இறந்த மக்கள் எழுந்துவரக் கண்டவர்களைப்போலவும், முழுகிப்போன கப்பல் கரையில் வரக் கண்ட வர்த்தகனைப்போலவும் களிப்புற்று விருப்புற்று, "ஓ என் அருங்குழந்தாய்! உன்னை நான்பெறும்படியானபாக்கியமேதோ" என்று ஆலிங்கனஞ்செய்தார். பின் ஸ்ரீமந்நாராயணரைநோக்கி "ஓ என்னாண்டவனே! உமக்கு அப்பச்சையின்மேல் இச்சையிருந்தாற் சொல்லும். இப்போதே அடியேன்போய் அவ்வர்த்தகனுக்கு ஏவல்செய்து கொண்டுவருகிறேன்" எனப் பணிந்தார். பகவான், "ஓ கபீர்! உங்களைச்சோதித்தேனன்றி மற்றப்படி இச்சைகொண்டவனல்ல. உங்களுடைய அன்பே இன்புள்ளது" என்று அறைந்து மறைந்துபோனார். பின்பு ராமானந்தஸ்வாமிகள் கபீர்வீட்டில் நடக்கும் விந்தையைக் குறித்து மிகவும் வியந்து விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சேர்ந்தார். கபீருங் கமாலுஞ் சுந்தராவும் சாதுக்களுக்குப் போதுமான வஸ்துக்களைக் கொடுத்துக்கொண்டு பகவத்தியானத்திலும் பிர்மஞானத்திலும் சிறப்புற்றிருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே! என்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினார்.

கமால் யாத்திரை அத்தியாயம் முற்றிற்று.

பின்பு கபீர்தாசர் தர்மார்த்தமாய் தனயன் தலையை யரிந்ததும், முண்டம் கூத்தாடினதும், பகவான் அருளால் உயிர்த்தெழுந்ததும், பின்னும் கோரக்கர்வந்து காசியில் எங்கும் ஜலமில்லாமற் செய்ய, கபீர் இருந்தவிடத்தில் பெருவிரலால் பூமியை அழுத்துவோர்க்கெல்லாம் ஜலம் புறப்படச்செய்ததும், மரித்த தந்தையர்க்கு அர்க்கிய நீராளிக்கும் ஓர் பண்டிதனுடைய தந்தை வாரணாசியிலுள்ள ஓர் வணிகன்வீட்டில் இருகண்ணிழந்த ரிஷபமாயிருப்பதைக்காட்டி, அந்தப் பண்டிதனை யாட்கொண்டதும், நீயும் சம்சாரி நானும் சம்சாரி எனக்கேன் பகவத்தரிசனங்கிடைக்கவில்லையென்று கேட்க, ஓர்பிராமணனுக்குத் தன்மனைவிமக்களின் குணாத்மத்தைவெளிப்படுத்தி அப்பிராமணனை யாட்கொண்டதும், நானக்ஷாவோடு தர்க்கஞ்செய்ததும், ரோயிதாசரோடு தர்க்கஞ்செய்து கணபதி பிரம்மா ஆதிசத்தி ருத்திரனையும் சீதாராமென்று சொல்லச்சொன்னதும், ராமதாசருக்கு பகவானின் தரிசனந் தருவித்ததும் முதலான அத்தியாயங்கள் பின்வரும் பக்தர்கள் சரித்திரங்களின் தொந்தார்த்தமாய் வரும். அதை அங்கங்கே காணலாம்.

கபீர்தாசர் திருவடிகளே சரணம்.

---






---

☞ இச்சரித்திரத்தின் பிற்பாதியை எம்மால் வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீநிவாசய்யங்காரால் எழுதியுள்ள ஸ்ரீமகா பக்தவிஜயம் இரண்டாம்பாகத்தில் பரக்கக்காணலாம்.

ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்.

மூன்றாவது

# துளசிதாசர் சரித்திரம்

### பகவான் துதி

விருத்தம்

உலகமளிக்குஞ் சதுர்முகனை யுந்திக்கமலத் தளித்துலகை
இலகவளிக்கும் பெரும்பார மேற்றுக்கொண்ட தயையெவராற்
சொல்லுதற்காகு மீன்றழித்தல் சுலபங்காத்த லரிதென்றே
அலையிற்றுயிலு மச்சுதனே யடியேனுன்ற னடைக்கலமே.




### துளசிதாசர் துதி

விருத்தம்

அளவில்காமத் திருந்தவனை அரியைத்தேடித் திரிந்தவனைக்
களவாயனுமான் றனைக்கண்டு கட்டியிழுத்த மாதவனைத்
துளசிதரனைப் பார்த்தவனைத் தொண்டுசெய்ய வைத்தவனைத்
துளசிதாஸ னெனுநாமத் தோன்றலுபய னடிதொழுவாம்.

## துளசிதாசர் உற்பத்தி அத்தியாயம்



மூலாதாரமுதல் ஆருதாரங்களையுந் தரிசித்து, நாதானந்த வசமாகி சோதியைக்கண்டு அச்சோதியைக்காணும்பரஞ்சோதி யாகிய பரப்பிரம்மத்தைக் காணுமற்கண்டு, பரமானந்தக்கடலிற் படிந்திருக்கும் உத்தவசித்தர் முதலானவர்களும் மறுநாட் காலை யில் ஸ்நானஞ்செய்து சபதபங்களை முடித்துக்கொண்டு வால்மீகர் அவதாரமான துளசிதாசருடைய கதையைக் கேட்கவேண்டு மென்கிற அவாவால் விரிஞ்சாவதாரமான நாபாஜிசித்தரிடம் போய்ப்பணிய, அவர் மனக்களிப்புடன் துளசிதாசருடைய சரிதையைச் சொல்லத்தொடங்கினர்,

“ஓ சித்தர்களே! ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு உகந்த அன்பர் களாகிய பாண்டவர்கள் அரசுபுரிந்த இடமாகியும், ஸ்ரீவாசுதே

வர் தன் சுயரூபமாகிய விசுவரூபங் காட்டின ஸ்தானமாகியும் விளங்காநின்ற அஸ்தினபுரமென்னும் டில்லி நகரத்திலிருப்பவர்; திவ்ய திருநாமந் தரிப்பவர்; உத்தம பிராமண குலத்திற் பிறந்தவர்; சாதுக்கள் சங்கமே சாயுச்சியபதமெனத் தெளிந்தவர்; சாந்தர் சேவைக்குகந்தவர்; வேதாந்தத் தெளிவில் மிகுந்தவர்; சந்தோஷவாரியிற் றோய்ந்தவர்; இந்தாவென்று அதிதி கட்கீந்தவர்; கல்வியில் மிகவுஞ் சிறந்தவர்; செல்வந்தன்னில் நிறைந்தவர்; துரியந்தன்னில் விழித்தவர்; துரிசுகளெல்லாம் அழித்தவர்; தயாரசத்தால் மகிழ்ந்தவர்; ஜெயாவெனப் பலரும் புகழ்ந்தவர்; ஆகிய ஓர் பிராமணர், துலுக்கர் முதலாகிய சகலருக்கும் ஆத்மாவே அல்லா; நான் சொல்வது பொய்யல்லா; ஆத்மாவே மகாதேவன்; ஆத்மாவே வாசுதேவன்; ஆத்மாவே அழியாப்பொருள்; ஆத்மாவே அழியாவருள்; ஆத்மாவே அஷ்டாட்சரத்துக்காதி; ஆத்மாவே பஞ்சாக்ஷரம் பிரக்கியாதி; ஆத்மாவே சைவ வைஷ்ணவரகசியம்; ஆத்மாக்களே இனியேன் உங்களுக்குச் சமுசயம். ஆத்மாவே மனுவெழுத்தென்னும் மவ்யோமம்; ஆத்மாவே தாரகம் என்னு நாமம். என்றும் ஆத்மாவே ராமா வேறொன்றுலகந்தைபோமா வென்றுஞ் சொல்லிக்கொண்டே யிருப்பதால் சகலரும் அப்பிராமணனைத் தமரை ஆத்மாராம் என்று அழைத்துக்கொண்டு இருந்தார்கள்.

அப்போது டில்லிநகருக்கரசனான அக்பர் பாதுஷாவென்பவன் அந்த ஆத்மாராம் என்பவருடைய வித்வத்திறத்தையும் சத்குணத் திறத்தையும் சாதுரியத்தையும் அத்வைத க்ஞானத்தையும் சகலரையும் அனுபவக்ஞானத்தால் அடக்குகிறதையும் மாறுத்தரஞ் சொல்லாமல் மடக்குகிறதையும் கேள்விப்பட்டு, ஆத்மாராமை யழைப்பித்துத் தன்னிடத்தில் யோசனைக்குரிய பிரதானியாக வைத்துக்கொண்டு ஆத்மக்ஞானத்தைப் பயபக்தியுடன் சிரவணஞ்செய்துக்கொண்டு நமக்குக் காரணகுருவானவர் இவரேயென விண்டு, ஆத்மக்ஞானத்தை மனனம் பண்ணிக்கொண்டு அத்தியந்தபக்தியுடனிருந்துகொண்டு, யாதொருகாரியத்துக்கும் ஆத்மாராமை ஆதாரபுருஷனெனச் சொல்லிக்கொண்டு வெகுஉபசரணையோடும்பராமரித்துக்கொண்டு மாதாந்தரம் ஆயிரம்பொன் சம்பளங் கொடுத்துக்கொண்டு வந்தார். அப்படி வருகிற காலத்தில் மராமராவென்னும் மந்திரத்தாற்றேர்ந்தவர்; தராதலத்தில் அழியாத தபசைச் சார்ந்தவர்; சகல சாஸ்திரங்களையும் பார்த்தவர்; சகல சந்தேகங்களையும் பேர்த்தவர்; ராமா

வெனும் மொழிவராமல் வைதவர்; ராமாயணத்தைச் சுலோக மாகச் செய்தவர்; பரத்துவத்தை யறிந்தோர்களில் முன்னவர்; பரத்துவாசருக்கு அருள்வாசிஷ்டஞ் சொன்னவர். ஆகிய நால்வேத முணர்ந்த வால்மீகமுனியானவர் பகவான் உத்தர வின்படி இவ்வுலகை யிரட்சிக்கும் நிமித்தியம் ஆத்மாராம் பத்தினியாகிய உத்தமியின் கர்ப்பத்திற்றங்கி பூரணமானபின் பூரணச்சந்திரனைப்போல் அழகுடன் பிறந்தார்.

அப்போது ஆத்மாராமென்பவர் அழகுள்ள மைந்தனைப் பார்த்து, கண்களில் சேர்த்து, ஆனந்தவாரியிற் குளித்தவராய் ஆனந்தப்பிரமத்திற் களித்தவராய் அன்பாய்ப்பாராட்டி, இன்ப மாய்ச் சீராட்டி, ஆசையாற்பொங்கி, அனுசன்பால் தங்கி 'கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கள்மேல் காதல்' என்பதைப்போல மிகவுங் காதலாய் வளர்த்து அருங்கொழுந்துபோற் றளிர்ந்து துளசிதாசனெனப் பேரிட்டுச் சகலருக்கும் விருந்திட்டு உபநயனஞ்செய்து கருணைமழை பெய்து நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பல இதிகாச வியாகாணம் முதலானவற்றையும் உணர்த்தி, வயது முதிர்ந்தபின் தன்குலத்தின் நீண்டகுழலும், நிறைமதி முகமும் கமலக்கண்களும் கற்கண்டுமொழிகளும் பவளவாயும் பரிமளவுடலும் அன்னநடையும் சின்னயிடையும் அதிகச் செல்வமும் அதிகக் கல்வியுமுள்ள மமதாதேவி யென்னும் ஓர் கன்னிகையைப் பேசி, சகலர்க்குஞ் சவ்வாது பூசி, உறவோர் மற்றப் பெரியோருடனே சகலரும் மெச்ச சந்தோஷத்துடனே அரசனும் வரிசையன்பாய்க்கொண்டு அருகினில் நிற்கப் பல நரர் மொய்க்க உறவினர் களிக்க பன்னீரிற் குளிக்க விந்தையாக ஸ்ரீராமன் திருமணம்போலக் கலியாணஞ் செய்து நாடோறும் துளசிதாசனை அரசனிட மழைத்துக்கொண்டுபோய் அரசநீதி களையும் பார்த்துக்கொண்டு வரும்படியாகச் செய்தான். அப்படி பார்த்துக்கொண்டுவந்த வேளைபோக மற்றவேளையில் அருகில் இருத்திக்கொண்டு, "அப்பா துளசிதாசா! அரசர்களும் பாம்பும் சரியென்று சொல்லப்படும். ஆதலால் அக்கினியிடங் குளிர்காய்வதுபோல மிகவும் ஒற்றுமையாய்ச் சேராமல் வெறுப் புடனும் பேராமல் சமமாயிருக்கவேண்டும். கொலுமண்டபத் திற் சென்றபின் அரசநீதிகளிலேயே மனதை நிலைத்திருக்கச் செய்யவேண்டும். நியாயத்தீர்ப்புகளில் எளியோர் வலியோ ரென்கிற பாரபட்சம் பார்க்காமல் அநியாயமாய்த் தீர்க்காமல் அறத்தைக் காக்கவேண்டும். இராஜன் ஏதாவது ஓர் வார்த்தை

யைக் கேட்டாராயின் அதைத் தீர்க்கமாய் யோசித்து உரைக்க வேண்டும். ஏனெனின், அநீதியான மந்திரியால் ராஜாங்கம் குன்றிப்போம். ஓர் அரசாட்சியை நிலைநிறுத்துவது வெகு துர்லபம்; அழித்தல் சுலபம். தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்த்துப் பாதுகாப்பதே பிரதானிக்குரிய தர்மம். அரசன் அநீதிக்குட்படுவானாயின் பலவித திருஷ்டாந்தங்கள் எடுத்துக் காட்டித் தர்மத்தை நிலைநாட்டிச் சகலரும் புகழும்படியான கீர்த்தியைச் சம்பாதிக்கவேண்டும். உத்தமர்க்கு அரும்பொருள் கிடைத்தால் அதனால் சத்கருமங்கள் செய்து எப்படி மேன்மையும் புகழும் சம்பாதித்துக்கொள்வாரோ அப்படியே தனக்கு அதிகாரமிருக்கும்போதே நாட்டைச் சீர்படுத்தி, தர்மவிஷயத்தைப் பெருக்கிக் கர்மங்களியாருஞ் செய்யாமற் றடுத்து, நியம நிஷ்டையுள்ளோரை மிகவும் விசுவாசித்து, இறைவன் முதல் சகலரும் சத்காலத்தில் காலங்கழிக்கும்படியாய்ச் செய்து, கொலை களவு காமம் குருநிந்தை முதலான துஷ்டகாரியங்கள் நடக்காமல் தன் ஆக்கினையைச்செலுத்தி யதார்த்தவானெனப் பேரெடுத்து அதிதிகளை ஆதரணைசெய்து யதீசுவரர்களுக்கு ஸ்தானங்களேற்படுத்தி அவர்கள் மனங் குறைவுறாமல் பாதுகாத்து அவர்கள் ஆசிர்வாதம் அரசனுக்குத் தருவித்து அரசர் மாபுக்குக் குற்றம்வாராமல் நிலைக்கச் செய்யவேண்டும்.

ஏனெனின்: இல்லறத்தோர்களுக்குத் துறவறத்தோர் செய்யுந் தபமே துணையென்று உரைக்கத்தகும். தபத்துக்கு சம்சாரிகளின் தர்மமே துணையென்று உரைக்கத்தகும். ஆதலால் பக்தர் சித்தர் முக்தர் சித்தங்கலங்குமாயின் பட்டணம் பாழாய்ப் போவதற்கு ஓர் குறைவில்லை. மேலோர் ஆசீர்வாதத்தால் சூனியமான நகர் துலக்கமடையும். சந்திரர் சூரியர்களால் பட்டணம் பிரகாசிப்பதல்ல. சாதுக்களாலேயே பட்டணம் பிரகாசிக்கும். வசிஷ்ட பகவான் அயோத்தியில் இருந்தபடியால் தசரதமகாராஜனை அநேகநாள் பாதுகாத்தார். சாதுக்கள் இல்லா நாடு நரி புலி வாழுங் காடென்றே சொல்லத்தகும். சாதுக்கள்கூட்டமே சந்தோஷ கோஷ்டமென்று பெரியோர்கள் உரைப்பார்கள். முக்கியமாய் அமைச்சனுக்குப் பொறுமையும், சூசனபுத்தியும் யுக்தியும் இருக்கவேண்டும். சாந்தஞ் சாகரத்திலும் பெரிதென்று ஓர் மகாத்மா எழுதிக்கொடுத்த ஓர் சீட்டாலும் பிரதானியின் உத்தியாலும் ஓர் அரசன் அதிக சந்தோஷமடைந்ததன்றி ஸ்ரீஹத்திக்குள்ளாகாமல் புகழ்பெற்றான். அதெப்படியெனின்? ஓர் பட்

டணத்தில் ஓர் சாது சமுசாரத்திலிருந்தே பிரமநிஷ்டையைச் சாதித்துப் பிர்மானந்தத்தை யனுபவித்துக்கொண்டிருந்து நிரியாணதிசை யடையுங்காலத்தில், அவர் தனயான்விவேகத்தால் "ஓ என் தந்தையே! என் சீவனுர்த்தத்துக்கும் மனத்தூக்கும் அரைப் பணஞ் சம்பாதித்து வைக்காமற்போனீரே? இனி நான் எவ்விதமாய்ச் சீவனஞ்செய்வேன்" என்று பிரலாபித்தான். அதற்கு அச்சாதுவானவர் சாந்தஞ் சாகரமென் றெழுதிக்கொடுத்து இதைப் பத்திரமாக வைத்திருந்து உனக்கு ஓர் குறைவருங்காலத்தில் இப்பட்டணத்துக்கு அதிபதியினிடம் இதைக் கொடுப்பையாயின் உன் குறைநீங்கும்" என்று உரைத்துப் பரமசமாதியடைந்தார். பின்பு அவர் தனயன் தந்தைக்குச் செய்யவேண்டிய கிரியைகளை யெல்லாஞ் செய்துமுடித்து மறுநாள் சீட்டைக்கொண்டுபோய் அரையனிடங்கொடுத்தான். அத்தோன்றல் சாந்தஞ் சாகாத்திலு மதிகமென் றெழுதியிருக்கும் சாதுவின் கையெழுத்தைத் தன் சந்திராயுத உறையிற்சொருகி, அச்சாதுவின் மைந்தனுக்குத் தேவையானது அளித்து அனுப்பினான். அரசன் நெடுநாள் சென்றபின் ஒருநாள் வேட்டையாட நாட்டைவிட்டுக் காட்டிற் செல்ல, நாட்டில் வேந்தன் படுக்கையைச் சிங்காரிக்கும் வேவுகாரன் வெகுநாளாய் நரபதியின் மலரணைமேற் சயனிக்க வெண்ணங்கொண் டிருந்தவனாதலால், அன்று வெகு விநோதமாயலங்கரித்து அப்பஞ்சணைமேற்படுத்து மெதுவான பீதாம்பரத்தைப் போர்த்துக்கொண்டதே, என்றுமறியாத இன்பத்தை யனுபவிப்பதுபோலத் துயிலாற் றன்னை மறந்து நித்திரைசெய்தான்.

அத்தருணத்தில் இராஜபத்தினி அரசன் அறையிற்சென்று இறைவர் அனந்தல் செய்கிறாரென்று அவன்பக்கத்திற் சயனித்து அனந்தல் மேலீட்டால் தன்னை மறந்தாள். அத்தருவாயில் காட்டில் வேட்டையாடப்போன பூபாலன் நாட்டையடைந்து மந்திரியுடன் அரண்மனையிற் பிரவேசித்துச் சயன அறையிற் சென்று தன்னணையின்மேற் றூங்குஞ் சதியையும் ஆடவனையும் பார்த்துத் தேகம் வேர்த்து அடங்காக் கோபத்தால் இவர்களிருவரையும் இரண்டுதுண்டாக வெட்டிப் பலியிடுகிறேன் என்று சரேலென்று சந்திராயுதத்தை யுருவினான். அப்போது உறையிலிருந்த சாதுவின் சீட்டு ஆகாயத்திலிருந்து வீழ்ந்ததைப்போல் அந்நரபதி அதிசயிக்க முன்னே வீழ்ந்தது. அதிபதி அச்சீட்டைக் கையிலெடுத்துச் 'சாந்தம் சாகரத்தினும்

பெரியது' என்று எழுதியிருப்பதை நோக்கிச் சாதுவின் கைச்சீட்டென்னுங் ஞாபகமின்றி இது அந்தரத்திலிருந்து வந்ததென்றே தீர்மானித்து வெட்டுதற்கு அச்சமுற்றவனுய்ச் சந்தடியின்றிப் புறம்போந்து தன் மந்திரியை விளித்து யாவும் புகன்று தண்டிக்குந் தருணத்தில் ககனத்திலிருந்து இச்சீட்டு விழுந்ததெனப் புகன்ருன். அம்மதிமந்திரி யூகித்து, "ஓ அண்ணலே! உமது சங்கைநீங்க ஓர் உபாயஞ் செய்கிறேன். பார்ப்பீராக" என்று ஓர்பக்கமாய் வரையனை நிறுத்தித் தான் பள்ளியறையின் வாயிலில் நின்று மெதுவாய்க் கையைத் தட்டினுன். அக்கையொலியைக்கேட்ட ராஜஸ்திரீ விழித்து, மந்திரியை நோக்கி அதிசீக்கிரமாக வெழுந்து குன்றின குரலோடு இராஜனும் நானும் சயனித்திருக்கும் அறைக்குள் அச்சமின்றி வரலாமா? இது உத்தமர்க்கழகா? என்றுரைத்துக்கொண்டே தன் அறைக்குப் போகத்தொடங்கினுள்.

மந்திரி அப்பதிவிரதையின் பின்சென்று காட்டிற்போன காவலர் நாட்டில் எப்போது வந்தார்? தெரியச்சொல்லுமென்ருன். இராணி அரசர் முதற்சாமத்திலேயேவந்து சயனித்துக்கொண்டாரென்ருள். மந்திரி, நிருபன்வந்ததை நீர் பார்த்திராவென்ருன். அவ்வுத்தமி அவர் வந்தது நானறியேன். காட்டிற்போன ஆயாசத்தால் எவ்வழியாகவந்தோ தன்னைமறந்து தூங்குகின்ருர். நீர் நல்ல விவேகியாயிருந்தும் அறியாதவர்போல் அந்தப்புரத்தில் வந்ததன்றி என்னைத் தொடர்ந்து இவைகளெல்லாங் கேட்கத்தகாது. எவ்வளவு துரிதமானகாரிய மிருந்தாலும் ஏவலாளரால் எழுப்பவேண்டு மன்றித் தனித்து வரலுமாகாது. இராஜனே அயர்ந்து நித்திரைசெய்வதால் எழுப்பவுந்தகாது. தகாக்கருமமாயிருந்தா லெழுப்பலாமென்று தன்னறையிற் பிரவேசித்தாள்.

பின்பு துண்ணியன் இவள் மகாபதிவிரதையெனத் தெரிந்துகொண்டு பஞ்சணையிற்றுயிலும் வேவுகாரனைத்தட்டி யெழுப்பினுன். உடனே பணியாளனெழுந்து அமைச்சனை நோக்கிக் கிடுகிடென்று நடுநடுங்கினுன். அமாத்தியன் உன்பக்கத்தில் யார் சயனித்திருந்தார்கள்? உண்மைசொல்? என்று அச்சங்காட்டினுன். தொழும்பன் நானொருவனே துயின்றேன். அன்றி மற்றொருவரு மிதிற் படுக்கவில்லையே யென்ருன். ஏனுதியன் நீ என் இறைவனணையிற் படுத்தாயென்ருன். ஏவலாளன் எனக்கு நெடுநாளாயிருந்த விச்சையாற் படுத்தேனென்ருன். தேர்ச்சித்

துணைவன் அவனைக்காவலுக்குள் அனுப்பி அரையனை நோக்கி, "உமக்குற்ற சங்கை நீங்கிற்றோ?" என்று பணிந்தான். இன்னஞ் சோதிக்க நினைத்த தோன்றல் என் ஐயம் இன்னம் நீங்கவில்லையென்று இராணியை விளித்துப் "பரிசாரகனோடு நீ துயின்ற காரணத்தால் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பறையில் நீ குளித்து வந்தால் என்னுடன் கூடியிருக்கலாம். இன்றேல் உன் தந்தை வீட்டைச் சேரலாம்" என்றான். அதற்கு அவ்வுத்தமி அன்னிய புருஷனாற் றீண்டப்பட்ட இத்தேகம் இருந்தாற் பழுது; ஆதலால் அனலில் மூழ்குவதேஉத்தமமென்று அக்கணமேஎண்ணெயைக் கொதிக்கவைத்து அதிற்குதிக்க எத்தனித்தாள். கோமான் தன் தேவியின் திடத்துக்கு இரக்கமுற்று, "ஓ பெண்ணே! உனக்காக இச்சீட்டு பகவானருளால் என்முன் வீழ்ந்தபடியால் உன் பேரில் குற்றமிராது. நீ இதிற் குதிக்கவேண்டாம்" என்று மறுத்தான். அப்பதிவிரதை அன்னியபுருஷனாற் றொடப்பட்ட அசுத்தமான இத்தேகத்தைப் பரிசுத்தமான நீர் தொடாமலிருமென்று வணங்கி அதிற் பாய்வதற்கு ஆயத்தமானாள்.

ஏந்தல் தன் தேவியைப் பாங்கிகளாற் றடுத்து உனக்காகவே இச்சீட்டு என்முன் தெய்வகடாக்ஷத்தால் வீழ்ந்தபடியால் இதைத் தீயாற் கொதிக்கும் எண்ணெயிற்போட்டு பரீட்சிக்கிறேனென்று அதைத் தயிலத்திற் போடப்போனான். அப்போது மந்திரி "ஓ பூபதியே! இச்சீட்டு ஓர் சாதுவின் நந்தனன் உமக்குக் கொடுத்ததாகுமே. அதை இதிற்போட்டு எரிந்துபோமாயின் உமக்கு அதிக சங்கைக்கு இடங்கொடுக்கும். அப்படியல்ல; 'சாந்தம் சாகரத்தினும் பெரிது' என்னும் வாக்கியமும், இப்பத்தினி கற்பழியா உத்தமியும் சத்தியமானால் போட்டபடியே யிருக்கக் கடவது என்றுப் போடுவதே உத்தமம்" என்று உரைத்தான். அதற்கு அரையன் இதுவே சரியென்று தனது இஷ்டதெய்வத்தைச் சிந்தித்து வந்தித்து அதைத் தயிலத்தில் எரிந்தான். அது போட்டபடியே கொதிக்குங் கொப்பறை எண்ணெயில் மிதந்துகொண்டு இருந்தது. அவ்வாச்சரியத்தைச் சகலரும் பார்த்துக்கொண்டு இருக்குஞ் சமயத்தில் அரசன்தேவி சீட்டு அப்படி யிருப்பதால் நான் பரிசுத்தமானேனா? இல்லையே; என்று அக் கொப்பறையில் பாய்ந்தாள். உடனே அக்கனற்றயிலம் பனிநீர்போல் குளிர்ச்சியடைந்து எரியும் அனலும் அவிந்து போயிற்று. ஆகாயவாசிகள் பூமாரி சலசலவென்று பொழிந்தார்கள். தேவதுந்துபி தாம்தாம் என்று முழங்கிற்று. பின்பு

அவ்விறைவன் தன்னுயகியைக் கட்டி யணைத்து உன்னைப் போன்ற உத்தமிகள் இவ்வுலகி லிருப்பதனுலேயே சந்திரசூரி யர் பிசகின்றி உதிக்கிருர்கள். பருவகாலந் தப்பாமல் மழையும் பொழிகின்றது. பூமியும் அந்தாத்தில் நிற்கின்றதெனத் துதித் தான். பின் மதிமந்திரியை நோக்கி, யூகத்தில் ஒப்பிலா வென் னப்பனே! நீ என் சந்தேகம் நீங்கும்படியான யுக்தி செய்யா திருந்தால் இப்பத்தினியை என் வாளுக்கு அப்போதே இறை கொடுத்திருப்பேனே யெனத் துதித்து, சாந்தம் சாகரத்திலும் பெரிதென்று எழுதிக்கொடுத்த சாதுவின் குமாரனுக்குப் பாதி ராச்சியமளித்து மிகவுங் களித்திருந்தார்கள். ஆதலால் "ஓ துளசிதாசனே! பிரதானிகள் அதிக யுக்தி புத்திகளிற் சிறந்தவ ராக விருப்பதன்றிச் சாந்தமென்னும் ஆபரணத்தையே பூஷண மாக அணிந்திருக்கவேண்டும்" என்று இவ்வித பல நீதிக்கதை களை ஓதிச் சாதுக்களுடன் கூடித் தீர்த்தயாத்திரை செய்யப் போனுர். பின்பு துளசிதாசன் அக்பர்பாதுஷாவினிடத்தில் அத்தியந்த பக்தியுடனிருந்துகொண்டு, தன் பராக்கிரமத்தால் முக்கிய பிரதானியாகித் தன்னையே அரசனுகச் சகலரும் நினைக் கும்படியான நீதிச்செங்கோல் செலுத்தி, அன்னசத்திரங்கள்- சாதுக்கள் வாசஸ்தானமான மடங்கள்-விசாலமான குளங்கள்- நீண்ட கோபுரங்கள் முதலானவைகளியற்றித் தன் தந்தை யிலும் சமர்த்தனெனப் பேரெடுத்துச் சாதுக்கள் சங்கத்தை படுத்து நாள்கழிக்கத் தொடங்கினுர். கேட்டீர்களோ சித்தர் களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லுகிருர்.

துளசிதாசர் உற்பத்தி அத்தியாயம் முற்றிற்று.

---

இரண்டாவது

## பகவான் துளசிதாசனை காமத்தில்

### அழுத்திய அத்தியாயம்

---

இப்படி நீதியுடன் முக்கிய பிரதானியாயிருக்குங்காலத்தில், பகவானுடைய மாயையால் துளசிதாசன் சத்சங்கத்தை விடுத்து, துர்ச்சங்கத்தையடுத்து, துஷ்டர்கள் கூட்டுறவாலும், எவ்வர்ன பருவத்தாலும், தாசிகள்வீடே கெதியாய் வீட்டுக்கும் வராமல் அரசாங்கத்துக்கும் போகாமலிருந்தார். அதையறிந்த ஆத்மா

ராம் பத்தினி மிகவும் நொந்து துளசிதாசனைத் தேடிக்கொண்டேபோய்த் தாசியின் வீட்டிலிருக்கக்கண்டு மாச்சரியங்கொண்டு, "அடா மகனே! அழகானமுகனே! உன் தந்தையானவர் மகா யோக்கியரென்றுபேரெடுத்திருக்க; நீ இப்பேர்க்கொத்த அயோக்கியமான பேரெடுக்கலாமா? வேசையர் வீட்டுக்குப்போகலாமா? காசாசையால் அதிகபாசமாயிருக்கும் வேசியர் வெகுமோசக்காரிகளாயிற்றே? ஐயோ! நமது மானம் போயிற்றே! பலருக்குப் பிணைப்பட்டிருக்கும் பாத்தையர்மேற் சிரத்தை கொள்ளலாமா? மாதாவாக்கியத்தைத் தள்ளலாமா? பணமில்லாவிட்டால் ஏன் பிணமேயென்று இக்கணிகையர் கேட்பார்களே? வீட்டிலுஞ் சேர்ப்பார்களா? முற்பிறப்பில் பலபுருஷர்கள்மேல் இச்சைகொண்டு பதிமுதலானோர் அச்சத்தால் துச்சகுணத்தோடும் பிறரறியாமற் புணர்ந்து தன்னிச்சை நிறைவேறாமல் ஏக்கங்கொண்டிருந்து இறப்பவளன்றோ மறுபிறப்பில் பலர் வாங்கும் விலைமகளாய்ப் பிறந்து, நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்னும் பெண்மைக்குரிய குணங்களின்றிப் பயனிலாப் பெண்ணெனப் பேரெடுத்துத் துஷ்டகுணங்களிற் சிறந்த ஆடவரால் வேசிதாசியென்று அழைக்கப்பட்டு மானவீனமன்றிப்பொருளை விழித்திருக்கும்போதே கொள்ளைகொள்ளும் பொதுமடந்தையரைத் தொடலாமா? வைராக்கியத்தை விடலாமா? யாத்திரை செய்து உன் தந்தைவந்து இச்சங்கதியைக் கேட்டால் உன் பற்களைத் தட்டிவிடுவாரே? இரண்டு துண்டாக வெட்டிவிடுவாரே? பலரும் அறியாமுன்னமே வீட்டுக்கு வந்துவிடு" என்று வெகு பணிவாய் உரைத்தாள். அப்போது துளசிதாசன் ஒன்றுஞ்சொல்லாமலிருக்க, அத்தாய் மிகவும் முனிவுகொண்டு "அடா துஷ்டா! தாசிகளைப் புணரும் பிரஷ்டா! வேசிகள் வலையிற்சிக்கின பேயா! நான் வந்தழைத்தும் வீட்டிற்கு வாராமலிருக்கிறாயா வென்று அதட்டியும் வாராமையால் இனி நம்மால் இவனைத்தேற்றக் கூடாது" என்று வாட்டத்துடன் வீட்டையடைந்தாள். பின்பு மிகவுமிடைந்து பெற்ற தாயாதலால் மறுநாளும்வந்து துளசிதாசனைப்பார்த்து நொந்து, "அடா என்கண்மணியே! சிகாமணியே! அனலானது புனலாலவிந்துபோம். இக்காமக்கனல் வரைமீதேறி யொளிப்பினுஞ் சுடுமே; விசாலமான தடாகத்திற் குளித்திருப்பினுஞ் சுடுமே; சப்தமெழுந்ததே குப்தமாய் வந்து கொல்லுங் குண்டுக்கிணையான கோதையர் மாயையிற் பட்டுப் பேதையாய்ப்போனாயே" என்கிற பல வார்த்தைகளுரைத்தாள்.

அதற்கும் வாரமைந்தனை நிந்தைசெய்து சொந்தவீடு சேர்ந்து சிந்தாகுலத்தால் மிகவும் நைந்திருந்தாள்.

துளசிதாசனே பகவானுடைய லீலாவிநோதத்தால் காமதுரந்தரனாய், தாசிகள் மயக்கத்திற்சிக்கி மிகவுஞ் சொக்கித் தாயை மறந்திருந்தார். இவரிப்படி இருக்கிறநாளில் யாத்திரைக்குப்போன ஆத்மாராம் சொந்தநாட்டிற் பிரவேசித்து, வீட்டையடைந்து, மைந்தனிருக்கும் விந்தையைக் கேட்டிடைந்து துளசிதாசனிருக்கும் தாசியின் வீட்டுக்குப்போய் மருமானிருக்குங் கோலத்தைப் பார்த்து தூலமெல்லாம் வேர்த்து, "அடே துன்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! என்று மிகவும் கோபித்துத் தனயனை யழைத்துக்கொண்டு நாட்டிற்போக நாணமடைந்து பாதுஷாவின் சோலையிற் பிரவேசித்து, அனேக ஏவலாளர்களால் ஸ்திரீகளை உள்ளேவிடாமல் காவல்வைத்துத் துளசிதாசனைப்போன்ற சில எவ்வன பிராமண வாலிபர்களை அழைப்பித்து வேதாத்தியானம் பண்ணிக்கொண்டு சதாகாலமும் ஜபதபங்களைச் செய்துக்கொண்டு வரும்படியாய்த் திட்டஞ் செய்து தானும் பிரம்மநிஷ்டையைச் சாதித்துக்கொண்டிருந்தார். இப்படி யிருக்கிறகாலத்தில் பகவான் துளசிதாசனைச் சோதிக்கவேண்டி ஓர்தேவகன்னிகையைவிளித்து, "ஓமாதரசே! நீ இக்கணம் டில்லிநகருக்குப்போய் பெருஞ்சோலையில் தபஞ்செய்துகொண்டிருக்கும் துளசிதாசனைப் பங்கப்படுத்தி நீதிவாக்கியங்களுரைத்து வாரும்" என்று அனுப்பினர். அக்கன்னிகை மகாபாக்கியமென்று அக்கோடாரத்திற்போய் அனேகருடன் தவஞ்செய்துகொண்டிருக்கும் துளசிதாசனை எவ்விதமாய்க் காணலாமென்று யார் கண்ணுக்கும் புலப்படாமல் அப்பொழிலில் உலாவிக்கொண்டிருந்தாள். அத்தருணத்தில் துளசிதாசனும் வாலிபத்தோழர்களும் ஸ்நானஞ் செய்யவேண்டி அவ்வுத்தியானத்திலுள்ள ஓர் தடாகத்திற் பிரவேசித்தார்கள். அத்தருவாயில் சுரமாது அச்சரசினருகிலிருக்கும் ஓர் விருட்சத்தின்கீழ் பார்ப்போர் மதிமயங்கும்படியாய் நிற்க, இப்படி சரசசல்லாப உல்லாச ஒயிலுடன் நிற்கும் இளம்பிடியைக் கண்ணுற்ற துளசிதாசன் மதிமயங்கி மிகவும் தயங்கி ஆ! ஆ! என்ன ஆச்சரியம்! ஓ ஓ! என்னருமைத்தோழர்களே! இதோ மனோரஞ்சிதமான வஞ்சியென்னும் ஓர் புட்பக்கொடி நிற்கின்றதைப் பாத்திர்களா? ஆ ஆ! முப்பத்திரண்டு லட்சணங்களும்வாய்ந்த சிற்பசாஸ்திரிகளால் எழுதுவதற்கு அரிதானபதுமையைப் பார்த்தீர்

களா? ஆனந்தம் ஆனந்தமென்று உரைத்துக்கொண்டே அக்காந்தையினருகிற் சென்ருர். அதற்கந்த காரிகை சினந்தவள் போல் ஆத்மாராமிருக்கும் ஷ்தானத்தை நீங்கித் தருக்கள் நெருக்கமான விடத்திற்போய் நின்ருள். துளசிதாசன் அவள் பின் சாயைபோற்ருெடர்ந்து அச்சுந்தரியின் சமீபத்தில் நின்று தன்னுடன்வந்த தோழர்களை நோக்கி "ஓ என் அன்பர்களே! இதோ சகல விசித்திர வர்னங்களால் சூழப்பட்டு அழகோங்கி விளங்கிய ஓர் தோகை நிற்கிறது பார்த்தீர்களா? ஆ! ஆ! புலவராற் புகழ்வதற்கரிதான ஓர் மங்கை இங்கே நிற்கின்ருள் பார்த்தீர்களா? இவ்வுலகிலுள்ள அழகெல்லாம் திரண்டு ஒரு உருவாகி மின்னற்கொடிபோன்ற ஓர் ஒய்யாரி நிற்கின்ருள் பார்த்தீர்களா? தேவர் மூவர் மற்றியாவருடைய மதியையும் மயக்கும்படியான ஓர் மோகனங்கி வந்திருக்கிருள் பார்த்தீர்களா? தன்னை மறந்து திக்கு தேசாதிகளிழந்து அந்தர்முகத்திற் சென்று பிரமானந்தத்தை யனுபவிக்கும் பிர்மக்ஞானிகளு மிச்சிக்கும் ஓர் சோபிதமான சுந்தரம் வந்திருக்கின்றது பார்த்தீர்களா? சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கும் அம்புயக்கண்ணளான அரம்பை இதோ வந்து நிற்கின்ருள் பார்த்தீர்களா? பார்த்தீர்களா? புற்புதம்போல் அற்புதமாயிருக்கும் திரண்ட கொங்கைகளைச் சுமக்கக்கூடாமல் துவண்டு நிற்கும் அங்கனை மேல் அன்பைச் சேர்த்தீர்களா? என்று பற்பல வார்த்தைகள் சொல்லி புளகாங்கமாய் மயிர்க்குச்செறிந்து ஷ்மரணை தப்பி மூர்ச்சையடைந்தார். ஓ சித்தர்களே! இப்படி அம்மாதைப் புகழுவதும், அத்தெரிவை நீதியுரைக்கும்

சந்த விருத்தம்

மண்ணின்மீதரைநாழிமூர்ச்சை வசத்தனுகிவிழித்தெழில்
விண்ணுறும்மதியோமுகங்குழன் மேகமோநுதல்பிறையதோ
கண்ணருங்கதிர்வாளதோமொழி கன்னலோவாய்ப்பவளமோ
கண்ணினுலிவடன்னைக்காணுதன் முற்பவத்தவமென்றனன். 1

தேவலோகவரம்பையோதிகழ் மின்னலோவிந்திராணியோ
ஆவியுண்வலிகாலனேவென தாவியுண்டிடவந்தவிப்
பாவையாரெனவறிவமென்றவள் பக்கமுற்றனமேயென
தாவியேயிவண்வந்தவாறடி யேற்கியம்புகவென்றனன். 2

என்றபோதவடுளசிதாசனை யேத்தியான்சுரகன்னிகை
உன்றன்றந்தையினடிவணங்கிட வுன்னியிவ்விடம்வந்தனன்
என்றபோதெழிலன்னமேயெளி யேனையாட்கொளுஞ்சொர்னமே
என்றன்கண்மணியேயிவ்வேளை யெனக்கிணங்குகவென்றுபின். 3

வேறு

என்னமாதவஞ்செய்தேனோ விங்குநீவருவதற்கந்தோ
தன்னைநேருற்றபெண்ணே தயவுகூர்ந்தாளவாவா
என்னவேதேவாம்பை யிந்தவன்யாயவார்த்தை
என்னிடஞ்சொல்லலாமோ வென்றிறைஞ்சியம்பலுற்றாள். 4

யானுன்றன்றந்தைதன்னை யிறைஞ்சிழிவகற்றவெண்ணி
வானுலககன்றிங்குற்றேன் மாதவனருள்குமாரா
ஆனதாலடியாண்மீதி லருள்செய்வதன்றிநல்ல
மோனவார்த்தைகளாலென்றன் மூடத்தைநீக்குமென்றாள். 5

நீக்குமென்றோதும்பெண்ணே நினக்குறுமஞ்ஞானத்தைப்
போக்குவனன்றிவிஞ்சை போதிப்பனெளியேன்றன்னை
நீக்கிடாதிணங்கியின்ப நிறைவித்தாற்கண்ணேபெண்ணே
மோக்கநீசேர்வையென்று மொழிந்திடமறுத்துச்சொல்வாள். 6

வேறு

அயலான்றன்னைப்புணர்ந்ததனா லடைந்தாள்பழியைத்தாராவும்
அயலான்றனைப்பார்த்திசயித்தே யதமாய்ப்போனாள்ரேணுகையும்
அயலான்றனையாசித்ததனா லடைந்தான்பழிசுக்கிரன்மகளும்
அயலான்றனைக்கண்ணாற்பார்க்கா தடைந்தாள்பெருமைசீதையுமே. 7

அயலான்றன்னையாசித்த வரக்கியானசூர்ப்பனகை
அயலான்றன்னாற்செவிமூக்கு மறுபட்டையோமிகநொந்தாள்
மயலீவிண்டுசலந்தரனாய் வந்துமயக்கமயங்காமல்
அயலானென்றேயறிந்துகொண்டா ளறிவிலுயர்ந்தபிருந்தையுமே. 8

தேவர்முனிவர்புகழ்ந்தவளாய்த் திருப்பாற்கடலிற்பிறந்தவளாய்த்
தேவபஞ்சகன்னியரிற் சிரும்பேருமுள்ளவளாய்த்
தேவராஜன்கௌதமருந் திகழ்மாதவமாயிரவருடம்
பாவையெனக்கென்றெனக்கென்றே பயிலவைத்ததூயவளாய். 9

இருவர்தம்மிற்கௌதமரு மீரைஞ்ஞூறாயுண்டொருமனதாய்
மருவித்தவத்தைச்செய்தபின்னர் மகிழ்ந்துமணஞ்செய்திட்டவளாய்த்
தரணிதனில்வாழ்தையலரிற் றானேயழகிற்சிறந்தவளாய்த்
தெரிவையென்னுமகலிகையாள் சேதிசொலக்கேளெனச்சொல்வாள். 10

பொல்லாவிந்த்ரன்றனைமருவிப் போகித்ததனாற்கௌதமராற்
கல்லாயமைந்தாளிப்போதுங் கலியாணஞ்செய்வோர்களெலாம்
பொல்லாவிபசாரஞ்செய்தே போனாள்சிலையாயாதலினால்
நல்லாயுதைப்பாயகலிகையாங் கல்லையென்றுநவில்கின்றார். 11

நீசன்புதல்வியானாலு நிமலக்கற்பினதனாலே
தேசம்போற்றவருந்ததிதன் றிகழ்கின்றாள்வான்றனிலுருவாய்த்

தேசுளவவ்வடமீனைச் சிறப்புற்றின் றுமணவரையிற்
பாசமுடையமனைப்பெண்ணே பாரென் றுடுவைக்காட்டுகிறார். 12

வேறு

புருடனேதெய்வமென் று புகலுநான்மறைபுராணம்
புருடனையன் றிவேறோர் புருடனைச்சேர்ந்தகன்னி
இருணரகடைவதன் றி லெழிலருட்பெறுவதுண்டா
இருளிலாதவன்குமாரா வியம்பெனவியம்பலுற்றாள். 13

இணங்கியென்னுசைதீர்த்தா லெழின்மயிலேயிப்பாவம்
கணந்தனிற்றீர்க்குமார்க்கங் கழறுவேனென் றுசொல்லி
அணைந்திடவந்தபோழ்தி லாம்பையுமுனிந்துதீயக்
குணந்தவிர்க்காதோய்தூர நில்லெனக்கூறலுற்றாள். 14

புத்தியில்லாதவட்குப் புத்தியையுரைத்துமேலாம்
முத்தியையளிப்பாயென் று முன்னின்றேன்மோகமாகிப்
பித்தரைப்போலென்மீது வீழ்ந்துநீபிதற்றலானற்
புத்திகளுனக்கின்றோங்கப் புகலுவேன்கேளுமென்றாள். 15

அயலான்மனைவிதனையாசித் ததமாய்ப்போனான்றசக்ரீவன்
அயலான்மனைவிதனைப்பார்த்தே யழிந்ததொருமத்தகமயனுக்
கயலான்மனைவிதனையாள ஆவியிழந்தான்கீசகனும்
அயலான்மனைவிதனைப்பார்த்தே யளகேசன்றன்கண்ணிழந்தான். 16

சுரகன்னிகையாற்சுந்தோப சுந்தரனுவித்துறந்தார்கள்
சுரலிந்த்ராணிதனைப்புணர துணிந்தேநகுஷன்பணியானன்
குருவின்மனைவிதனைக்கூடிக் குஷ்டமானன்சந்திரனும்
அரியின்மனைவிகளையாசித் தழிந்தானரகாசுரனன்றே. 17

பரதாரத்தையிச்சித்திப் பாரிலழிந்தான்கிம்மீர்னன்
பரதாரத்தையிச்சித்திப் படியின்முடிந்தான்வலிவாலி
பரதாரத்தையிச்சித்துப் பஸ்பமானனடல்வேடன்
பரதாரத்தையிச்சித்திப் பதியிலிறந்தோர்க்கிலக்குண்டோ. 18

வேறு

தானமும்யாகமும்பலசெய்துந் தவமிகச்செய்தடைகின்ற
வானவர்வாழுஞ்சொர்க்கலோகத்து மன்னவனுகுமிந்திரனும்
ஞானவானனகௌதமரிஷியி னன்மனையாடனைப்புணர்ந்தோர்
யோனியாசையினலுடலெலாநாறும் யோனியையடைந்தனனென்றாள். 19

வேறு

இவ்விதவனேகநீதி யிசைத்திடத்துளசிதாசன்
கொவ்வையங்கனிவாயாளின் கோதிலாமுகத்தைநோக்கித்
திவ்வியநீதிகற்றுத் தேசினைப்பெற்றபெண்ணே
எவ்விதமேனுமென்னை யிணங்கெனவருகிற்சென்றான். 20

அருகுறத்தேவரம்பை யறிவிலார்க்கறிவுணர்த்த
அரனரியயனலாகா தாதலானுனக்குமுன்னே
அரைநிறையிருக்கலாகா தென்றருதேவலோகம்
விரைவுடன்போனுள்பின்னர் நடந்ததைவிளம்புவோமே. 21

கன்னிகைசினந்துபோகக் கனமுளதுளசிதாசன்
தன்னையுமறந்தான்பெற்ற தந்தையையுமறந்தான்சிந்தை
பின்னமதாகிநொந்தான் பித்தரைப்போலலேந்தான்
என்னமாயிருப்பேனென்பா னேங்கியேபதைபதைப்பான். 22

மலரணிகுழலாளென்முன் வருவளோவென்பானெந்தத்
தலமதிலிருக்கின்றளோ தமியனேனறியேனென்பான்
கலைமதிமுகத்தாடன்னைக் காண்பனோவென்பான்கும்ப
முலையுளமாதேமாதே யென்றுமூர்ச்சித்துவீழ்வான். 23

இப்படிதுளசிதாச னேங்கியேயிருக்கக்கூட
ஒப்பமாய்வந்ததோழ ரோலமிட்டழுதுநொந்து
செப்பருங்கலைகள்கற்ற திவ்வியகுணனேயெங்கள்
சொற்படிகேட்கவேண்டு மென்றொருதோழன்சொல்வான். 24

காமத்தைநீக்கிநித்ய கருமத்தைமுடிக்கவேண்டித்
தாமரைக்குளத்தில்ஸ்நானஞ் செயயெனத்துளசிதாசன்
காமமென்னுந்தடாக மதிற்களித்திருப்பதாலே
தாமரைத்தடாகந்தனைச் சார்ந்திலேனென்றுசொன்னன். 25

மற்றொருதோழன்காம மயக்கத்தைநீக்கமேலா
நற்றவஞ்செய்வாயென்று நவின்றிடத்துளசிதாசன்
மற்றொருநினைவிலாதவ் வனிதையைக்கூடவேண்டி
நற்றவஞ்செய்வேனென்று நவின்றனனசையிலானே. 26

அந்தமாதியுமிலாத வாண்டவன்பாதத்திற்கு
வந்தனஞ்செய்வாயென்ன மகிழ்ந்தந்தத்துளசிதாசன்
சுந்தரவதனமுள்ள தோகையிவ்விடம்வந்தெய்த
வந்தனஞ்செய்வேனென்ருன் மற்றொருதோழன்சொல்வான். 27

மேலவனுயிருந்தும் வெட்கமில்லாமலிந்தக்
கோலத்தையடையலாமோ கூறெனத்துளசிதாசன்
மேலவனதாலே வெட்கப்பூட்டினையுடைத்திக்
கோலத்தையடைந்தேனென்று கூறிடமற்றோர்தோழன். 28

பாமனர்தமக்குநீயும் பயப்படாமையினுற்றீய
நாகத்தையடைவாயென்று நவின்றிடத்துளசிதாசன்
சுரகன்னிகையினலென்னைச் சூழ்ந்தவக்கினியினலே
நரகத்தையெரிப்பேனென்ன நவிலுவன்மற்றோர்தோழன். 29

மோக்ஷமடையவேண்டின் மோகத்தையிப்போதேநீ
நீக்குவாயென்றுசொல்ல நேயனுந்துளசிதாசன்

மோக்கமுமடைவேனன்றி முன்வந்தகன்னிவந்தால்
பாக்கியனாவேனென்னப் பகருவன்மற்றோர்தோழன். 30

திவ்வியம்போன்றவுன்றன் சிந்தையெங்கொளித்ததையோ
திவ்வியவருட்குமாரா செப்பெனத்துளசிதாசன்
திவ்வியசிந்தைதன்னை திருடிக்கொண்டகன்றாளல்ல
திவ்வியகன்னியென்னச் செப்புவன்மற்றோர்தோழன். 31

கந்தமாதிகளைவென்று கர்த்தனைத்துதிக்குமுன்றன்
தந்தைபால்வாவாவென்னத் தாழ்ந்தந்தத்துளசிதாசன்
கந்தம்வீசியமெய்யானைக் கண்டவிவ்விடத்தைவிட்டுத்
தந்தைபாலணுகேனென்று சாற்றினன்றோழரெல்லாம். 32

ஓ சித்தர்களே! துளசிதாசனுக்கு அருந்துணையான தோழர் இன்னம் பலபல நீதிவாக்கியங்களை உரைத்தும் பயன்படாமல், “ஓ துளசிதாசனே! இச்சங்கதியை உன் தந்தையினிடம் போய் உரைத்து இக்கணம் அழைத்துக்கொண்டு வருகிறோம்” என்று ஒருநொடியிற்போய் பிரமநிஷ்டையால் தன்னை மறந்திருக்கும் ஆத்மாராமைப் பணிந்து, “ஓசுவாமி! தங்களுடைய குமாரனாகிய துளசிதாசன் ஆகாயத்திலிருந்து வந்த ஓர் கன்னிகையின்மேல் மோகித்து அவளைப் பலவந்தம் செய்தான். அம்மாது பல நீதிவாக்கியங்களைப் போதித்து ககன மார்க்கமாய்ப் போனாள். பின்பு துளசிதாசன் அந்த ரம்பையின் மோகத்தாற் றன்னை மறந்து, வாயில்வந்தபடி பிதற்றிக்கொண்டிருக்கின்றான்; ஆதலால் சீக்கிரம் தேவரீர் வந்து மயக்கத்தை நீத்து ஆட்கொள்ளுமையா” என்றார்கள். அதைக்கேட்ட ஆத்மாராம் ஆச்சரியமு மாச்சரியமுங்கொண்டு அதிதுரிதமா யோடி காமாக்கினியாற் றகிக்கப்பட்டு, ஸ்மரணைகெட்டு பெண்ணே கண்ணே யென்று வார்த்தைகளாடிக்கொண்டிருக்கும் அழகான புதல்வன் வதனத்தை ஆசையோடும் பார்த்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லுவார்.

துளசிதாசரைக் காமத்திலழுத்திய அத்தியாயம்

முற்றிற்று.

---

மூன்றாவது

# இராகம் நீக்கு அத்தியாயம்



ஓ சித்தர்களே! பகவான் முன்னம் தாசிகள் மயக்கத்தில் விழச்செய்து வேசிகளைக் கனவிலும் நினைக்காமல் மறுத்து, இனி பரஸ்திரீகமனந் தீதென்றறிந்து நீங்க, மாயவலையாற் பிணிக்க, அதனால் சொக்கியிருக்கும் துளசிதாசன் முகத்தை ஆத்மாராம் அன்புடன் பார்த்துச் சொல்லும்,

கவி

பார்த்தெனதருள்குமாரா பரசுகமடைந்ததூயோர்
ஏத்திடுங்கண்ணேபெண்ணா லிப்படியலையலாமோ
ஊத்தையுமுதிரஞ்சீயு மொழுகிடும்புண்ணாந்தோலை
நாற்றமென்றகற்றிடாதே நண்ணிடலாமோவென்றான். 1

குடல்வழும்பென்புந்தோலுங் குருதியுநரம்பிறைச்சி
கொடுமலசலமுமீனக் கோழையுங்கொழுப்புமுற்றுச்
சுடுபிணமணத்திற்கெட்ட துர்க்கந்தம்வீசாநின்ற
மடந்தைமீதாசையாதல் வளமதோமகனேயென்றான். 2

அப்பனேமகனேயென்ற னரியமாதவத்தால்வந்த
ஒப்பிலாநிதியேதூய வுணர்வுளதுளசிதாசா
செப்பருங்கலைகள்கற்ற செல்வமேபெண்ணினால்நீ
இப்படியலையலாகா தினியிதையகற்றுவாயே. 3

முன்னொருகாலந்தன்னிற் பிருகுமாமுனிவனிஷ்டை
தன்னையுற்றிருக்குங்காலந் தனிலவன்மைந்தனானோன்
துன்னருங்கலைகள்கற்றோன் சுக்கிரனென்போன்றேவ
கன்னியைக்கண்டுகாமக் கடலில்வீழ்ந்தவசமுற்றான். 4

அவசரீத்தெழுந்தத்தூய வரம்பையைக்காணாநொந்து
சவந்தனைப்பிதாப்பால்வைத்தோர் சடத்தினோடண்டஞ்சென்று
உவமையிற்றேவமாதை யொப்புடனணைந்தனேகப்
பவமெடுத்துழன்றானந்தப் பாவனைபோனீசெய்தாய். 5

மூவருமறையுணர்ந்த முனிவருஞ்சொர்க்கலோக
தேவருமஞ்சத்தக்க திவ்வியவிசுவாமித்ரன்
பாவையையோர்நாட்கூடிப் பண்ணியதவமிழந்து
மூவர்மாமுனிவர்தேவர் முன்செலநாணமுற்றான். 6

சுரர்குருபுதல்வனான கஜமுனிசுக்கிரன்பால்
உரியநற்பணிகளாற்றி யுயிர்தருமந்திரத்தைப்
பிரியமாய்ப்புகரளிக்கப் பெற்றுவானேகும்போ
தருள்புகர்புதல்விதன்பா லனுகுவதறிந்துநின்றான். 7

நின்றிடமாதுசொல்வா னின்னைநானணையவேண்டி
யுன்றன்பாலடைந்தேன்மாற்ற முரைத்திடா திணங்கென்றோத
என்றனையீன்றதாயே யிம்மொழிக்கிணங்கேனென்று
சென்றபோதுயிரையீயுந் திருமந்த்ரம்பலிக்காதென்றாள். 8

பக்குவக்கஜன்பயந்து பாவியென்றழுதுநொந்து
சுக்கிரன்பாற்போய்சொல்லித் துன்பத்தைநீக்கிக்கொண்டு
சொர்க்கத்தையடைந்துநல்ல சுகந்தனையடைந்தாற்போலப்
பக்குவத்துளசிதாசா பாவைமாமயனீக்கென்றான். 9

சுகப்பிர்மரிஷிதவத்தைத் தொலைத்திடுவோமென்றெண்ணி
அகப்பிர்மையோடுதேவ ரரம்பையையனுப்பக்கன்னி
சுகப்பிர்மரிஷியைச்சூழ்ந்த தொண்டர்கடவமழித்து
சுகப்பிர்மரிஷிமுன்னின்றாள் தூயனுமவளைக்கண்டான். 10

கண்டுநீயாரென்றோதக் கதிதருமரம்பையென்ன
அண்டரைநீக்கியென்பா லணுகினதேதோவென்றான்
ஒண்டியாயிருந்துநீசெய் யுயர்தபோபலத்தாலென்றுங்
கண்டமில்பரப்பிர்மத்தின் காட்சியையுணராயென்றாள். 11

ஒண்டியாயிருப்பதன்றி யுதவியும்வேண்டுமோசொல்
கண்டமில்பரப்பிர்மத்தின் காட்சியையுணர்தற்கென்றான்
அண்டர்கள்ரிஷிகணீல கண்டனோயன்மால்தூய
விண்டுவுஞ்சமுசாரத்தின் மேன்மையாற்காட்சிபெற்றார். 12

ஆதலாலெனைநீகூடி யணைந்தின்பமடைந்தவ்வில்ல
நீதியாற்பிரமானந்த நேயனைக்காண்குவாயென்
றோதிடமுனிமுனிந்துன் னுதிரமாந்துர்க்கந்தத்தை
மாதவர்நோக்கார்யாரை மயக்கிடவந்தாயென்றான். 13

வந்தனன்மயக்கமீய மயக்கத்தைநீத்தார்யாவர்
உந்தமைவலிந்தணைந்தே யும்பர்பாற்செல்வேனென்று
பந்தமாமொழிகண்மெத்தப் பகர்ந்தொருபயன்படாமல்
இந்தநற்றாயதேக மின்பமீசுகந்தமென்றாள். 14

உகிரினால்வயிற்றைக்கீறி யுத்தமமுனிக்குக்காட்டிச்
சுகந்தவீசிடுமென்றேகந் துர்க்கந்தமென்றுசொன்னை
சுகந்தத்தைக்கண்டதானீ சுகந்தரவணையவாவென்
றுகந்தருகினிற்செல்போதி லுத்தமமுனிவனானேன். 15

தோகையர்களிலேநீநற் றாயவளாயினும்மென்
ஆகநீங்கிடினுமுன்னை யணைந்திடமாட்டேனென்று
மோகமில்லாமலந்த மோகினிதன்னைநீத்தான்
மோகினிமோசம்போனே னென்றவண்மொழியலுற்றாள். 16

அரிவையர்மோகமாயி னணைந்திடவேண்டுமென்ன
உரியமாமறைகள்சொல்ல வுத்தமமுனியேயென்னைப்
பிரியமாயணைந்திடாமற் பின்னிடறருமமாமோ
பிரியமாயணைவாயென்று பித்தரைப்போன்மேல்விழுந்தாள். 17

பித்தரைப்போலவிழுந்த பேதையைமுனிவன்கோபித்
தித்தலத்துற்றுயென்று விடுவனுன்சாபமென்றுன்
மற்றொருமொழிபேசாமன் மங்கைவானுலகடைந்தாள்
உத்தமசுகர்சமாதி யுற்றருள்வடிவாய்நின்றார். 18

துரியமாநிலையுணர்ந்த தூயமாமுனிவர்போற்ற
உரியநற்சொர்க்கலோகத் தும்பர்களெல்லாம்வாழ்த்த
புரமெரித்தோன்மால்வேதன் போற்றிநின்றேவல்செய்து
கரங்குவித்திருந்தாரென்றாற் சுகர்கனமென்னசொல்வேன். 19

சுகர்போன்றபிள்ளையன்றோ துரியமாம்பொருட்குச்சொந்தம்
இகபரபோகநீத்த வினையிலாச்சுகர்போனீயும்
மிகுமயலீந்தகன்னி மேலிச்சைவிடுத்துஞானச்
சுகந்தனையடைவாயென்று தூயமாதவனுரைத்தே. 20

வருகவென்றழைக்கமைந்தன் மறுமொழிசொல்வாயின்றி
சுரகன்னிநினைவினோடுந் தூயமாதவன்பின்செல்ல
சுரகன்னிமேல்விருப்பந் தொலைந்ததேயில்லையென்று
அருள்வடிவானவாத்மா ராமருளாற்கண்டானே. 21

வேறு

கண்டுசோகமடைந்துதொண்டர் கருத்திவற்கெந்நாளிலே
அண்டர்கோனருளால்வருமென வாத்மாராமன்றனினைந்
தண்டரும்பலமுனிவருமய னாதியோர்களுமேத்திடுங்
கண்டமின்றியகர்த்தனேகரு ணாலயத்துறசுத்தனே. 22

தற்பதந்தனையுறுபுதல்வனைப் பெறுவர்மாதவரென்றுமா
நற்பதந்தருமாரணஞ்சொலு நாயினேற்கென்பாவமோ
வற்பவறிவினர்தனிலுமீன மடைந்தபுத்ரனமைந்தனன்
ஒப்பிலாப்பரமேசனேயுய ரடிகளுளமதில்வாசனே. 23

எங்குமோரியல்பாய்நிறைந்தரு ளிறைவனேயெளியேற்கரு
டங்கவருளியமெய்யனேயுப சாந்தனேவேதாந்தனே
எங்குமாரற்கிந்தவிதிவர லேதுவோவிதுநீதியோ
சங்கரன்மாவேதனும்பணி சாமியேயெனநைந்தனன். 24

இவ்விதமாக ஆத்மாராம் நொந்து இனி நமது மைந்தனுக்குற்ற மோகத்தை எவ்வித உபாயத்தால் நீக்கலாமெனப் பலவாருக யோசித்து, ஆ! ஆ! இப்போது அந்தத் தேவகன்னிகை

வருவாளா? இனி இவனுக்கிருக்கும் காமமயக்கத்தை ஓர் கணத்தில் மாற்றுவேனென்று உன்னும்போது பக்தர்களைக்காக்கவே கங்கணம் பூண்டிருக்கும் பகவான் துளசிதாசனை மோகத்திலமிழ்த்திவந்த கோதையைவிளித்து நீ இக்கணம்போய் துளசிதாசனை மன்மதநோயினுற் றகிக்கச்செய்து வருவாயென்றனுப்ப மகாபாக்கியமென்று அம்மாது சோதிமின்னலைப்போல துளசிதாசனெதிர் வந்து நிற்க, ஆத்மாராம் அக்காரிகையை நோக்கிப் பிரமித்து நீயாரென்று வினுவ, அவ்வொய்யாரி வணங்கி, "ஓ மகாத்மாவே! நான் தேவலோகத்துக் கன்னிகை; நாடோறும் இச்சோலையிற் சஞ்சரிப்பவள்; ஆதலால் இன்றும் வந்தேன்" என்று சொல்லினுள். அப்போது அம்மங்கையைப்பார்த்த துளசிதாசன் அதிக மோகமாய் ஸ்மரணையின்றி மூர்ச்சையாய் நிலத்திற் சாய்ந்து விட்டார். உடனே வாலிபப் பிராமணர்கள் ஆத்மாராமை வணங்கி ஓ சுவாமி! இக்கன்னிகையே முன்வந்து துளசிதாசனை மயக்கிப் போனவளென்றறைய, ஆத்மாராம் அம்மாதரசை வினயத்துடன் அருகிலழைத்து இருத்திக்கொண்டு தனக்குத் தெரிந்த தந்திரங்களில் ஓர் தந்திரத்தால் அச்சுந்தரியின் ஆக்கையிலிருக்கும் உதிரத்தையெல்லாம் வாங்கி ஓர் பாத்திரத்தில் நிறைத்தவுடனே அத்தையலின் அழகுகுன்றிக் கன்னம் ஸ்தனம் யாவும் வற்றி வெளுத்துப் பிரேதத்துக்கு இணையாகிச் சிங்கார நடையும் மெலிவான இடையுந்தளர்ந்து அடி பெயர்த்து வைத்து நடப்பதற்கும் கைகால்களை மடக்குவதற்குங் கூடாமல் ஓர் உலர்ந்த விருட்சத்தைப்போல் அசைவற நின்றுவிட்டாள். அப்போது ஆத்மாராம் துளசிதாசனுடைய மூர்ச்சையைத் தெளிவித்துக் கன்னிகையி னருகில் நிறுத்திச் சொல்லும்.

கவி

உதிரமுற்றிடுபாண்டமும்மகன் முன்னம்வைத்துயர்மைந்தனே
மதுரமாகியமாதைநீமிக மனமகிழ்ந்தணைகுவையென
அதிகவச்சமசங்கியம்முட னுழ்ந்தகண்ணுடன்வற்றிய
அதரகன்னமுந்தனமும்பார்த்தவ ளாசைவிட்டவனுணமாய். 25

என்னசெய்தனமென்றயர்ந்திட வென்றன்மைந்தனேகன்னிகை
கன்னமுங்கனதனமும்பார்த்தலோ காமமாகினையிப்பொழு
தென்னமாயிக்கன்னியாகின ளென்றிரத்துருவாகிய
கன்னியாகியபிரேதமீதினில் காமமாகினையேனடா. 26

அசங்கியமுளரக்தமீதினி லாசையாகினையேனடா
அசங்கியமுளதசையின்மேன்மிக வாசையாகினையேனடா

அசங்கியச்சலதாரையில்விழ வாசைபாகினையேனடா
அசங்கியமலகாகில்மூழ்கிட வாசையாகினையேனடா. 27

வேறு

பெண்ணாசையுளோர்க்கறிவில்லை பெண்ணாற்றவமுஞ்சுகமுமில்லை
பெண்ணாசையுளோர்க்கறமில்லை பெண்ணாற்சற்சங்கமுமில்லை
பெண்ணாசையினாற்றுறவில்லை பெண்ணாற்சிறும்பேருமில்லை
பெண்ணாசைக்கோர்துறையில்லை பெண்ணாற்றீங்கேவருமகனே. 28

பெண்ணான்மானமுண்டாகும் பெண்ணாலீனமுண்டாகும்
பெண்ணான்முறைகண்மாறிவிடும் பேதஞ்சூதுமுண்டாகும்
பெண்ணால்வினைகளேறியிடும் பிறப்புமிறப்புமுண்டாகும்
பெண்ணாலன்றோபாரதமும் பெரியராமாயணமாச்சே. 29

பெண்களாலேவருங்கஷ்டம் பெண்களாலேவருநஷ்டம்
பெண்களாலேவருங்குஷ்டம் பெண்ணானரகம்வந்தொட்டும்
பெண்களாலேபெருஞ்சண்டை பெண்ணாலுடையுந்தலைமண்டை
பெண்களாலேகெட்டவர்கள் பேரையுரைக்கவிலக்குண்டோ. 30

அரியநூல்களுணர்ந்தாலென் ஊக்யபாவமறிந்தாலென்
துரியபானைத்துதித்தாலென் தூயஜெபங்கள்செய்தாலென்
உரியமனைவிதனையன்றி யுவகையோடுமயலானுக்
குரியஸ்திரியைப்புணர்ந்தானே லோகோகொடியபாவியே. 31

பரஸ்திரிகமனந்தனைச்செய்தே பாவியானோரனேகராம்
பரஸ்திரிகமனந்தனைநீத்துப் பரத்தையடைந்தோராரியராம்
பரஸ்திரிதன்றாயெனுமெண்ண முடையோன்றனக்குப்பணிசெயலாம்
பரஸ்திரிகமனம்பண்ணும்பாவி முகத்தைப்பார்க்கலாகாதே. 32

பரஸ்திரிகமனந்தனைச்செய்வோன் பண்ணுந்தவங்கள்பலிக்காவாம்
பரஸ்திரிகமனந்தனைச்செய்வோன் பண்ணுந்தர்மங்கர்மமாம்
பரஸ்திரிகமனந்தனைச்செய்தே பரத்தையடைந்தாராரையோ
பரஸ்திரிகமனமில்லாதோன் பரமஞானியெனலாமே. 33

பரஸ்திரிகமனஞ்செய்தோர்க்குப் பரமுமிகமுமிலவாகும்
பரஸ்திரிதன்னைப்பார்த்தவனே படியிற்குருடனாய்ப்பிறப்பன்
பரஸ்திரிதன்னைப்புணர்ந்தவனே பாரிலலியாய்ப்பிறப்பானேல்
பரஸ்திரிகமனந்தீதன்றோ பண்பிற்சிறந்தபாலகனே. 34

வேறு

பரபுருஷனைப்பார்க்காத பத்தினிதனையிச்சித்தால்
எரிவிழுங்கிடுமேதீய விடாணுகிடுமேயென்றும்
நரகணுகிடுமேகொல்லும் நமனணுகுவனேயிந்தத்
துர்சினையகற்றிக்காமத் துகளினையகற்றுவாயே. 35

பத்தினிமனதுநோகப் பாழாச்சோர்யாகமப்பா
பத்தினிநினைக்கப்பூமி படீலெனவெடித்ததப்பா
பத்தினியுரையால்வன்னி படிகமாஞ்சலமாச்சப்பா
பத்தினிமுனிவால்வேடன் பஸ்பமாய்ப்போனனப்பா. 36

உத்தமிகளினாலன்றோ வுலகத்தின்மழைபெய்கின்ற
துத்தமிகளினாலன்றோ வுயர்தவந்தானமோங்கும்
உத்தமிகளினாலன்றோ வுலகரசாட்சியோங்கும்
உத்தமிகளினாற்சந்த்ர சூரியருதிக்கின்றாரே. 37

மதிகதிர்மறைந்திட்டாலும் மண்டலைகீழானாலும்
பதியரசளித்திட்டாலும் பரமன்வந்துரைத்திட்டாலும்
நிதிமிகவளித்திட்டாலும் நியமநிட்டைகள்சொன்னாலும்
பதிவிரதத்தைநீங்கார் பத்தினிமார்களென்றான். 38

என்று இவ்விதமாகிய பல நீதி வாக்கியங்களைத் துளசிதாசனுக்கு ஆத்மாராம் ஓதிக்கொண்டிருக்கையில், அசைவற்று நிற்கும் தேவகன்னிகை ஆத்மாராம் செய்த தந்திரத்துக்கு ஆச்சரியமும் மாச்சரியமுங்கொண்டு ஆயாசமடைந்து மனமிடைந்து ஸ்ரீமந் நாராயணரை உள்ளத்திற் சிந்தித்து வந்தித்து "ஓ பகவானே! ஆதரவற்றிருக்கும் அடியாளை இப்போதே ஆட்கொள்ளாமற் போனால் வெகு துன்பத்துக்குள்ளாவேன்" என்று முறையிடுவதறிந்த கபட நாடகனாகிய பகவான், அம்மாதுக்குப் போதுமான ரக்தபுஷ்டியை யளித்தமாத்திரத்தில் தேகவலிவந்து ஆத்மாராம் முன்னிற்பதற்குப் பயந்து நயந்து சரேலென் றெழும்பி ககனத்தில் மறைந்தாள். பின்பு ஆத்மாராம் துளசிதாசனுக்கு நீதிமார்க்கங்களை யோதிட, தேவகன்னிகையின் மயக்கத்தைப் போக்கி மகாவிஷ்ணுவின் மாயையை நீக்கி, "அப்பா மகனே! இன்றுடன் உன் மனைவியையன்றி வேறு ஸ்திரீயைக் கருதாதே; கருதி மிகவும் உருகாதே; என் வாக்கியத்தைத் தள்ளாதே; பரஸ்திரீகமனங் கொள்ளாதே; கொண்டால் மிகவும்பொல்லாதே; தாசிகள் தெருவில் நில்லாதே; மறந்தும் அத்தெருவில் செல்லாதே; எப்போதும் பொய்சொல்லாதே; ஒருசீவனையுங் கொல்லாதே; பாவம்முன் தன்வலிசெல்லாதே; மிகவும் ஸ்திரீயைக் கூடாதே; கூடிப்பின்னால் வாடாதே; அழியும் பொருளைத் தேடாதே; தேடிப்புவியில் ஓடாதே; ஜபதபங்களை மறக்காதே; தெய்வபக்தியைத் துறக்காதே; காமத்தொழில்கள் செய்யாதே; கபடால்வாடி நையாதே; தர்மகுணத்தை நீக்காதே; சண்டாளர் தமைச் சேர்க்காதே; தெருக்கள்தோறுந் திரியாதே; தீனர்கள்

தம்மைப் பிரியாதே; குருக்கள்மாரை வையாதே; குமாரவென் சொல் மெய்யீதே'' என்கிற வாக்கியங்களை யுரைத்துத் துளசி தாசனுடைய மனதைக் கரைத்து அக்பர் பாதுஷாவினிடத்தில் இவனை யினி யிருத்தக்கூடாதென்று தானும் தங்கள் பெரியோரும் வாழ்ந்த ஊராகிய ராஜாபூருக்குச் சமுசாரத்துடன் பிரயாணப்பட்டுப் போய்ச்சேர்ந்து, தன் மனைவியை நோக்கி, "ஓ பெண்ணே! உன் குமாரனை வெகு பத்திரமாய்க் காப்பாற்றுவதன்றி நமது மருமகளாகிய மமதாதேவியை யழைப்பித்துக்கொண்டு சுகமாயிருங்கள்; நான் அநேக சாதுக்கள்வாழும் நைமிசாரண்யத்திற்போய்த் தபஞ்செய்யவேண்டும்" என்று உரைத்தார். அதற்கு அவர் மனைவி, "ஓ சுவாமி! உம்மைவிட்டு அடியாள் பிரிந்திருக்கமாட்டேன்" என்று தானும் பிரயாணத்துக்கு ஆயத்தமானுள். ஆத்மாராம் அவளைப்பார்த்து "ஓபெண்ணே! நமது மைந்தனே சிறுவயதுடையவனு யிருக்கின்றுன்; நீயும் என்னுடன் வந்துவிட்டால் குமாரனை யார் ஆதரிப்பார்கள்? என்வார்த்தையைத் தள்ளாமல் மறுமொழிவிள்ளாமல் மைந்தனைப் பாதுகாப்பாயாக; என் சொற்படி நடப்பதே உனக்கு முக்கியமான தவமும் விரதமும் பதிவார்த்தையைக் கடவாத சதிக்குப் பரமபதமும் உண்டு என்று பலசாஸ்திரங்கள் முறையிடுகின்றது. நானே சகல சாஸ்திரார்த்தங்க ளறிந்தும், ஓதினபடியே சாதனஞ்செய்யாமல் கோதுக்குள்ளாயிருந்தேன்; இனி என்னுடன் வாதிக்கவேண்டாம்; சமுசாரத்திலிருந்து அடைந்தபலன் எனக்குப் போதும்; உனக்கு ஓர் குறை நேரிடுமாயின் நைமிசாரண்யத்திற்குத் தடையின்றிவரலாம், சாதுக்கள் தரிசனம்பெறலாம், பிரமானந்தமுறலாம், எனது ஆசிரியரால் போதிக்கப் பெற்றுக் கொண்ட ஞானநிட்டைக்கும் இல்லறதர்மத்துக்கும் வெகுதூரம், எனக்கோ தன்னைமறந்து திக்குதேசாதிகளிறந்து பிரமானந்தவாரியில் மூழ்கி யிருக்கும்படியான ஞாபகம் மேலிட்டு மானிடப்பிறப்புக்கு உறுதித்துணையான தவஞ்செய்யாதவர்கள் சவத்துக்குச்சமானம்; தேகமோ நீர்மேற்குமிழி; ஓதாத பேதைமானிடரைப்போல நானிருப்பது அழகல்ல, பவசாகரத்தைக் கடக்கும் புணையானது தவமேயாம், தேகேந்திரிய பிராண காரண சிவவிருளைக்கடந்து சுழுப்திநிலையை யடைந்து ஆத்மா மாத்திரமாயிருக்கும் சமாதிநிஷ்டை சமுசாரத்திலிருந்து சாதித்தல் வெகுதுர்லபம், மனமிரும்பொருளைப் பற்றமாட்டாது, சாதுக்கள் கூட்டத்திலிருந்து தேர்ந்தாலன்றிச் சகஜக்ஞானத்தை

யடையக்கூடாது. அற்பமான சொர்க்காதி போகங்களுக்கே அற்புதமான தவஞ்செய்வார்களாகில் செப்புதற்கரிய ஒப்பிலாக் கைவல்யமடைவதற்கு எத்தனை பாடுபடவேண்டும்? திரிவுலகத் தரிதொரு க்ஞானியென்று உரைக்கும் பழமொழிப் பொய்யா மெய்யாவென்றுரைத்து நைமிசாரண்யத்தை நாடிப்போகையில் துளசிதாசன் தந்தையுரைத்த விரக்திவார்த்தையைக்கேட்டு மனந்துலக்கமுற்றுத் தந்தையினிடம் போய் அவரம்புயவடிகளிற் பணிந்து நயனங்களை யணிந்து, “ஓ என் தந்தையே! அடியேனும் உம்முடன் வருகிறேன்” என்று பின்தொடர்ந்தான். அதைப்பார்த்த ஆத்மாராம், “ஓ என் அருமைக்குழந்தாய்! நீ என்னுடன்வர இச்சித்தது நன்மையே; ஆனாலும் சகல விஷய போகங்களையும் அனுபவித்து விரக்தியடைந்து சன்யாசியாக வேண்டும்; அன்றி ஒருவர் போதனையால் விரக்தியடைந்தவன் சிலநாளில் விஷயபோக எண்ணங்களாற் பீடிக்கப்பட்டு இல்லறதர்மமுங்கெட்டு பிரஷ்டத்துவ மடைவான்” அது எப்படியென்றால்,

அபசாரத்திற் சிறந்த விபசாரி ஒருவர் போதனையால் விபசாரஞ் செய்யாதிருந்தாலும், சிலநாளில் தன் சுயகுணத்தையே யடைவாள். தானே இது கூடாதென்றும், இச்செய்கையால் நரகத்தை யடைவோமென்றும், அற்பமான ஓர் இந்திரிய சொற்பசுகத்தையே வெல்லாத நாம் வஞ்சகமான சஞ்சலமுள்ள நெஞ்சகத்தை வெல்வதெங்கே? பகவான் திருவடிகளை யடைவதெங்கே? தசேந்திரியங்களில் ஓர் இந்திரியத்தை யடக்காமல் மானமிழந்து ஈனமடைந்து திரியும் நாம் தசேந்திரியங்களை வெல்வதெப்போ? பரிசுத்த மனதுடன் பகவானைத் தியானிப்பதெப்போ? இனி கற்பைக் காப்பதே நமக்குரிய தபம், செபம், ஓமம், நியமம், விரதம், சீலம் என்று திடநிச்சயங்கொண்டவள் தன்னுயிர் நீங்கும் பரியந்தம் பதிவிரதைத் தன்மையைக் காத்து சஞ்சலமனதைப் பேர்த்து லேசில் பரமபதத்தை யடைவாள்; உண்மை இப்படியாகும். நீ சிறுபிள்ளை; விஷய ஞாபகமுள்ளவன்; உன்னுடைய ஸ்திரீயோ அறியாதவள்; அவளைவிட்டு என்னுடன் வருவது கூடாது. இன்னஞ் சிலவருஷங்கள் உன்னுடைய ஸ்திரீயுடன் கூடியிருந்து விரக்தியடைந்து மோட்ச மார்க்கத்தில் நடந்து சமுசாரசாகரத்தைக் கடந்து விஷயாதி போகங்களுக் கிடைந்து சாதுக்களுடன் றொடர்ந்து உண்மை நிலையையறிந்து ஆனந்தத்தை யடைவதே உனக்குகந்த யோக்

கியமென் றறைந்து தனயனைப்பிரிந்து நைமிசாரண்யஞ் சேர்ந்து சாதுக்களுடன்கூடி களிகூர்ந்து பந்தபாசங்களி லிருந்து பேர்ந்து பிரமநிஷ்டையைச் சார்ந்து நிர்ச்சலசமாதி யிற்றேர்ந்து சகல சந்தேகங்களுந் தீர்ந்து பிரமானந்தவாரி யிற் படிந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

இராகம் நீங்கு அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காவது

## துளசிதாசர் ஸ்திரீவாஞ்சறு அத்தியாயம்



ஆத்மாராம் நைமிசாரண்யமடைந்தபின் அவர் மனைவி தன் மருகியை யழைப்பித்துக் குமாரன்பால் ஒப்பித்து, "அப்பா மகனே! இன்றுடன் உன் மனைவியையன்றி வேறு ஸ்திரீயைக் கனவிலும் நினைக்காதே" என்று உரைத்துப் பதிபதங்களை மதி யிற் பதித்துத் துதித்துக்கொண்டே நாள்கழிக்கத் தொடங்கி னள். துளசிதாசர் பகவானுடைய மாயையால் தன் மனைவியின் மோகத்தி லமிழ்ந்து தேவரம்பையே இவளாமென்று மேடை விட்டு வெளிவாராமல், ஒருவருக்குந் தரிசனந்தராமல், சிற்றின் பமே பேரின்பமென்று காமக்கடலில் மூழ்கி ஒன்றுந் தோன்று மல் மாழ்கி நாள்களைக் கழிக்கத் தொடங்கினர். இப்படிச் சில நாள் கழிய, அக்பர்பாதுஷா நடந்த யாவும் கேள்விப்பட்டுத் துளசிதாசனைப் பார்க்கவேண்டுமென்று ஆசைகொண்டு தண் டிகையையும் பல ஏவலாளரையும் அனுப்பினன். அவர்கள் ராஜாபூருக்குப் போய்த் துளசிதாசனைப் பணிந்து, "பாதுஷா உம்மை அழைத்துக்கொண்டு வரும்படியாகக் கட்டளையிட்டார்" எனச் சாற்றினர்கள். அதற்குத் துளசிதாசன் பாதுஷாவிடம் போனல் பின்னும் இங்கு வருவதற்கு நாள்செல்லும்; அது வரையில் நமது மனையாளைப் பிரிந்து நம்மாலிருக்கக்கூடுமா வென்கிற தாற்பரியத்தாற் காவலரை நோக்கி, இப்போது வரக் கூடியதல்ல போமென்றுர். தொழும்பர் மகாபாக்கியமென்று டில்லியடைந்து பாதுஷாவுக்கு உரைத்துத் தொழுதார்கள். அரசன் சிலநாள் சென்றபின் முன்போலவே காவலரை யனுப் பினன். வந்தழைக்கும் காவலருக்கு முன்போலவே துளசிதாசர்

விடைகொடுத்தார். இப்படி பலதரம் இராஜன் அனுப்பியும் துளசிதாசன் மறுத்த காரணத்தால் நிருபன் ஆச்சரியமு மாச்சரியமுங்கொண்டு யோசிக்கின்ருன்: இவ்வுலகில் ராஜனென்ருல் எப்பேர்க்கொத்தவர்களும் அச்சப்படுவார்கள்; பயந்து வருவார்கள்; அல்லாமல் பூமியினுசைபாலாவது, கன்னியத்தைக் குறித்தாவது, தனத்தை நாடியாவது, ஆக்கினைக்காவது வாராதவர்களில்லை. "ஓ மந்திரி பிரதானிகளே! சாது சற்சனர்களே! நான் துளசிதாசனை பலதரம் வரவழைத்தும் வராமலிருக்குங் காரணமென்ன? இப்படி மறுப்பது சிறுவயதாலோ? ஐசுவரிய கர்வத்தாலோ? வித்தியாமதத்தாலோ? அவித்யா சம்பந்தத்தாலோ? தந்தையைப் பிரிந்த சிந்தையாலோ? யாராவது செய்த நிந்தையாலோ? என்ன விந்தையாலோ? நிர்ச்சிந்தையாலோ? என்னுல் ஏதாவது குறை நேரிட்டதோ? மாசாந்தரங் கொடுக்கும் ஆயிரம் பொன்னை நிறுத்திவிட்டீர்களோ? குரோதங் கொண்டீர்களோ? விரோதங் கொண்டீர்களோ? தெரியச்சொல்லுங்கள்" என்று கேட்டான்.

அதற்குப் பிரதானிகள் வணங்கி, "ஓ ராஜராஜாதிபா! துளசிதாசன் வித்தையுக்தியிற் சிறத்தவனுயிருந்தும், புத்தியிற் குறைந்தவனு யிருக்கின்ருன். புத்தியில்லாதவனுக்கு வித்தையும் யுக்தியும் அபிவிர்த்தியா யிருந்தாலும் சிரத்தையில்லா பக்திக்கு இணையானதல்லவோ! அவரிங்கு வராமலிருப்பது தன் ஸ்திரீயின்மேல் இருக்கும் மோகமே காரணமாம். முன்னம் தந்தைக்குப் பயப்படாமல் தாசிகள்வீடே கெதியாய் இருந்தான். அந்தத் துர்க்குணத்தை நீக்கும்பொருட்டு ஆத்மாராம் நமது சோலையிற் கொண்டுபோய் வைத்திருக்கையில் அங்கேயும் ஓர் மங்கைமேல் மோகித்துத் தந்தையைச் சிந்தாகுலத்தால் நைந்து போகும்படி செய்தான். அதனுலேயே ஆத்மாராம் சமுசாரத்தோடு ராஜாபூருக்குப்போய் விரக்தியடைந்து நைமிசாரண்யத்தை யடைந்தார். அவர் போனபின் இக்கோலத்தை யடைந்திருக்கிருன்" என்று சாற்றினர். பாதுஷா ஆச்சரியப்பட்டு, ஆ ஆ! நீங்கள் சொல்லும் மொழிகள் வெகுவிந்தையா யிருக்கின்றன; ஓர் நாழிகையும் நாயகியைப் பிரியாமலிருப்பது நிச்சயந்தானு?" என்றறைந்து இதைச் சோதித்துப் பார்க்க வேண்டுமென்கிற யோசனையோடுங் கூடியிருந்தார்.

அப்போது ஆத்மாராம் மனைவி துளசிதாசனை விளித்து, 'அப்பா ஒப்பில்லாமகனே! ஒளிவானமுகனே! இராஜன் உன்

ஊனப் பார்க்கும்பொருட்டுப் பலதாந் தண்டிகையை யனுப்புகின்ருரே; நீ போகாமலிருக்கலாமா? பலதரங் காவலரைத் திருப்பலாமா? உப்பிட்டவரை உள்ளளவும் மறக்கலாகாதென்கிற பழமொழி யறியாயோ? மாசாந்தரம் ஆயிரம்பொன் கொடுப்பதைக் குறியாயோ? நெடுநாளாய் நம்மைக்காக்கும் தர்மப்பிரபு வேண்டியழைத்தால் போகாமல் இருப்பதழகோ? உன்னுயுஊயெல்லாம் காமாந்தகாரத்திலேயே கழித்துக்கொண்டிருக்கின்ருயே? நன்ரு யோதியுணர்ந்தவனுயிருந்தும் சகல நியாயங்களுந் தெரிந்தும் இப்பேர்க்கொத்த அபகீர்த்திக்கு உள்ளாகலாமா? சகலரும் உன் நடத்தையைக் குறித்து நிந்தையாய்ப் பேசுகிருர்களே; பேசி ஏசுகிருர்களே; சதிபுருஷர்கள் சேர்ந்திருப்பது பிராறியலாமா? அரசன்மனமும் முறியலாமா? புண்ணியவான்கள் காக்கையைப் போன்றவர்களென்றும், பாபிகள் நாயைப்போன்றவர்களென்றும், சிலர் கருடனைப் போன்றவர்களென்றும், சிலமிலார் குக்கிடத்தைப்போன்றவர்களென்றும், சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றதே; நீயதை யறியாதவனல்லவே'' என்று உரைத்தாள். பின் மனவாட்டத்துடன் மமதாதேவியைக்கூவி, "அடிபாவி! நீ இக்கணம் உன் தந்தை வீட்டுக்குப்போ'' என்று ஆக்யாபித்தாள். மமதாதேவி மகாபாக்கியமென்று கணவன் பக்கலடைந்து, மாமியார் கட்டளையை யுரைக்கத் துளசிதாசன் சிந்தாக்கிராந்தனுய்ப் பெருமூச்சுவிட்டு உணர்வுகெட்டு, "ஓபெண்ணே! என்னிருகண்ணே! உன் தந்தை வீட்டிலிருந்து அழைப்பித்த நாள்முதற்கொண்டு உன்னை அரை நிமைபிரிந்தேனு? அரையன் பலதாமழைப்பித்தும் போனேனு? இப்பேர்க்கொத்த காமியென்றறிந்திருந்தும் என்னை விட்டுப் பிரியலாமா? நீபோனுல் உயிர்தரித்திருப்பேனு? ஓ மனோரஞ்சிதமே! மாதுசிரோமணியே! மாணிக்கப் பொக்கிஷமே! மன்மதசொரூபமே! மாகதக்குன்றே! என் மாமியாருடைய கோபத்தை க்ஷமித்திருக்கக் கடவாய்'' என்று வேண்டிக்கொண்டார்.

அதற்கு அந்த உத்தமி பதிவாக்கைக் கடவாப் பத்தினியாதலால் தாய் தந்தையரை மறந்திருந்தாள். இப்படி சதியும்பதியும் ஒற்றுமையோ டிருக்கிறநாளில் அக்பர்பாதுஷா துளசிதாசனைப் பார்க்க எண்ணங்கொண்டு சதுரங்கசேனைகளுஞ் சூழப் பிரயாணப்பட்டு ராஜாபூருக்கு அருகாயிருக்கும் ஓர் சோலையிலிறங்கி மந்திரிகளை நோக்கி "துளசிதாசனுக்கு என் வரவைத் தெரிவித்துச் சீக்கிரம் அழைத்துக்கொண்டு வாருங்கள்'' என்று அனுப்

பினுன். மந்திரிகள் மகாபாக்கியமென்று துளசிதாசன் மேடைக்குப்போய்ப் பாதுஷாவானவர் உம்மைப்பார்க்க வந்திருக்கின்ருர்; வாருமையாவென்று கூப்பிட்டார்கள். துளசிதாசர் நாம் போவோமானுல் அதிபதி டில்லிக்கு அழைத்துக்கொண்டுபோய் விடுவான்; இங்கு வருவதற்கு நாள்செல்லும் என்கிற எண்ணத்தாலும், காமமயக்கத்தாலும் வரமாட்டேனென்று மறுத்துவிட்டார். அதற்கு அந்த அமைச்சர்கள் குரோதங்கொண்டு தூஷண வார்த்தைகளை விண்டு, அரையன் பக்கலடைந்து, நாங்கள் துளசிதாசனைப் பலவித வுபசாரணையோடும் அழைத்தும் வராமற்போனுன். ஆதலால் அத்துஷ்டன் முகத்தைத் தேவரீர் பார்க்கலாகாதென்று உரைத்தார்கள். பாதுஷா பிரதானிகள் மேல் முனிந்து பரஸ்திரீகமனஞ்செய்யும் பாவிகள் முகத்தைப் பார்க்கக்கூடாதேயல்லாமல் குலஸ்திரீயின்மேல் மோகித்திருப்பவன் முகத்தைப் பார்ப்பதற்கு யாதொரு குற்றமுமில்லை" என்று தன் பட்டத்து யானைமீது ஊர்ந்துகொண்டு சகலசேனைகளுஞ் சூழத் துளசிதாசன் மேடைக்குப் போகும்போது யோசிக்கின்ருர். ஆச்சரியம்! இவ்வுலகில் இவ்வளவு காமக்குணமுடையவர்கள் யாருமிருக்கமாட்டார்கள். ஆத்மாராமுக்கு இப்பேர்க்கொத்த புதல்வனு பிறந்தான். அவர் மிகவும் விவேகமுடையவராயிற்றே; அவ்ரைவிட இவர் கல்வியிற் சிறந்தவராயிற்றே; புலியின் அகட்டிற் பிறந்தகுட்டி பூனையாகுமா? 'பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியுமென்று' சாஸ்திரங்கள் முறையிடுகின்றதே; ஒருவேளை நாமே வந்து அழைக்கவில்லையென்ற எண்ணமிருக்குமோ? அதுவும் இன்றைக்குச் சோதித்துவிடுவோமென்று துளசிதாசன் மேடைக்கருகில் வந்து, "ஓ சுவாமி! என் சத்குரு நாதன் தனயனே! உம்முடைய தரிசனத்தைக்கோரிய எனக்கும் அரியசேவை தாராமலிருக்கலாமா? உம்முடைய தந்தை என் மீது அதிக பிரீதியோடிருந்தது நீரறியமாட்டீரா? என்மேல் இவ்வளவு கோபமா யிருக்கலாமோ? என்னுல் வந்த குறையேதோ? அவையாவது சொல்லலாகாதோ?"" என்கிற பற்பல வார்த்தைகளாடி பரிவுடன் கூப்பிட்டார்.

அப்போது அந்தத் துளசிதாசன் ஓ ஓ! இன்றைக்கு நமது மனைவியைப் பிரியும்படி நேரிட்டதோ! நான் பாதுஷாவிடம் போனுல் அவர் தம் பட்டணத்துக்கு அழைத்துக்கொண்டு போகாமல் விடுவாரோ என்கிற கருத்தால் பாதுஷாவைப் பார்ப்பதற்கும் வாராமல் ஓர் அறையிற் புகுந்துகொண்டார்.

அதுசேதி ஆத்மாராம் மனைவிக்குத் தெரிந்து துளசிதாசன் மேடையிற்போய் "அடா துஷ்டா! காமத்தால் கைநந்த பிரஷ்டா! இவ்வுலகையாளும் பாதுஷா நெடுநேரமாகக் கூப்பிடுகிறாரே? ஒருவார்த்தையும் பேசாம லிருக்கலாமா?" என்று கடிந்து பேசினாள். பின் அங்கு நிற்கும் மமதாதேவியைப் பார்த்துக் கோபத்தால் வேர்த்து, "அடி பஞ்சமாபாதகி! என் மைந்தனைக் கெடுத்த தோதகி! நீயாவது உரைத்து அனுப்பக் கூடாதோ?" என்று அதட்டிக் கடின வார்த்தைகளாடினாள். உடனே மமதாதேவி பொறுக்கமாட்டாமல் கணவனருகிற் சென்று, "ஓ சுவாமி! நீர் இன்று இராஜனைக்கண்டு பேசிவாரா விட்டால் இக்கணமே என் பிராணனை விட்டுவிடுவேன்" என்று சத்தியஞ் செய்தாள். அதுகேட்ட துளசிதாசன் திடுக்கிட்டு, ஓ ஓ! பிராணனைவிட்டால் நமது தந்தை சொற்படி வேறு ஸ்திரீயைத் தொடக்கூடாதே; இன்று இவளைப் பிரியலாச்சுதே வென்கிற எக்கத்துடன் பாதுஷாவின் அருகிற் போனார். உடனே அக்பர்பாதுஷா ஆனந்தமடைந்து ஆத்மாராமென்றே நினைந்து தன் பட்டத்து யானையின்மேல் துளசிதாசனை ஏற்றிக் கொண்டு டில்லியை நோக்கிப் பிரயாணப்பட்டார்.

அப்போது துளசிதாசன் தன்னைப்போன்ற வாலிபர் பலர் புடைசூழ்ந்து வருகிறதைப் பார்த்தும், காமச்சிந்தையாலும், காந்தையைப் பிரிந்ததாலும் மிகவும் நொந்து; பாதுஷாவிடத்தில் யாதொரு வார்த்தையும் பேசாமல் மௌனமாய்ச் செல்வாராயினர். அங்கே ஆத்மாராம் மனைவி மமதாதேவியை நோக்கி, "அடி மமதாதேவி! நீ இக்கணம் உன் தாய்வீடுபோய்ச் சேர்" என்று ஆக்யாபித்தாள். மமதாதேவி மகா பாக்கியமென்று உடனே தந்தைவீடுபோய்ச் சேர்ந்து தாய்தந்தையரை வணங்கி க்ஷேமவார்த்தைகள் பேசிக்கொண்டு இருந்தாள். அப்போது மமதாதேவியை முன்னமறிந்த தோழிகள் வந்து சூழ்ந்து, "ஆ ஆ! நீ உன் மணவாளனைப் பிரிந்து வந்தது மிகவும் விந்தையாயிருக்கின்றது; உன்னைப்பிரிந்து உன்னாயகன் உயிர்தரித்திருப்பானா? நீ உன்னாயகனைப்பிரிந்து ஓர் நாழிகையிருப்பாயா? உங்களைப்போன்ற காமிகள் இவ்வுலகில் இல்லவேயில்லை. உலகத்தில் ஸ்திரீபுருஷர்கள் சேர்ந்திருப்பதிப்படியா? நாயைப் போல நாலுபேர் நகைக்கப் பேர் எடுப்பதா? பெருந்தகைமையோர்க்கு அழகன்று என்று உரைத்ததன்றியுந் தோழிகளாதலால் பல பரியாசவார்த்தைகளும் ஆடத்தொடங்கினார்கள்.

அதற்கு மமதாதேவி, "ஓ பாங்கிகளே! என்றைக்கு ஓர் புருஷனுக்குத் தாய்தந்தையர் தத்தஞ் செய்தாரோ அன்றுமுதல் புருஷனே தெய்வம்; கணவன் மொழியே வேதம்; காவலனிச்சைப்படி நடப்பதே விரதம் என வேதங்கள் முறையிடுகின்றனவே; மணாளனெண்ணப்படி நடக்கும் என்னைப் பரபுருஷனைக்கூடும் பாவியைப் நிந்திப்பதுபோல் ஏன் நிந்திக்கிறீர்கள்?" எனக் கேட்டாள். அதற்கு அந்தத் தாதிகள் நகைத்து, "ஓ அம்மணி! எந்நேரமும் சதிபுருஷாள் கூடிக் காம இச்சையினாலேயே நாள் கழிக்கவேண்டுமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றனவா? பருவகாலமன்றி மற்றகாலங்களில் சதிபுருஷாள் சேரலாமா? வேதவாக்கியத்தை மீறலாமா? மிருகமும் அகாலத்திற் கூடுகிறதில்லையே? உங்களை யிவ்வுலகெல்லாம் நிந்திக்கின்றதே? உன்னை விட்டு உன் நாயகன் ஓர் கணமும் பிரிந்திருக்கமாட்டாராமே? புருஷன் அவிவேகியாயிருந்தாலும் கற்புள்ள ஸ்திரீ தர்மாதர்மங்களைப் போதித்து சகலமுஞ் சாதித்து நன்மார்க்கத்திற் கொண்டுவர வேண்டாமா? இப்படி யனேகம் பெண்கள் தங்கடங்கள் பத்தாவுக்கு அறிவுணர்த்தி விவேகிகளாக்கவில்லையா? நீ மாத்திரஞ் செய்வது தொல்லையா" என்று உரைத்து க்ஷேமவார்த்தைகளாடித் தங்கள் தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு மமதாதேவி வாட்டமடைந்து, "ஓ பகவானே! என்னை யெல்லாரும் ஏளிதஞ்செய்து நகைக்கும்படி செய்துவிட்டாயே. ஐயோ! எனது கணவன் செய்யும் கர்மானுஷ்டானம், சந்தியாவந்தனம், வேதமோதுதல், ஓமம்வளர்த்தல் முதலான ஒரு நற்கிரியையும் ஒருநாளுஞ் செய்ததில்லையே. இப்பேர்க்கொத்த விகாரத்தை என் பத்தாவுக்கு அளிக்கலாமோ! வீணாக நாளைக் கழிக்கலாமோ! இவ்வுலகில் இவ்வளவு காமக்குணமுடையவர்களுமுண்டோ? ஓ தெய்வமே! வேதவிதிப்படி நடந்தால் ஆடவர்க்கு அபவருக்கமும், கேள்வனெண்ணப்படி நடந்தால் அரிவையர்க்கு முத்தியும் கிடைக்குமென்றல்லவோ வேதம் முறையிடுகின்றது. எப்போது பலர் தூஷிக்கத்தொடங்கினார்களோ அப்போது நிறையமடைந்ததற்குச் சமானமல்லவா? என்மீதிருக்கும் மோகத்தினாலல்லவோ நாலுபேர் நகைக்க வுடம்பெடுத்தாரெனத் தொழுது, கண்ணீர்விட்டழுது இனி யெவ்வித உபாயத்தாலாவது நமது துணைவனை நன்மார்க்கத்திற் கொண்டுவர வேண்டும்" என்று உறுதிகொண்டு இருந்தாள். அங்கே பாதுஷாவுடன் போகும் அந்தத் துளசிதாசர் தனது நாயகியை

நினைந்து நினைந்து மிகவுமுருகி முகங்கருகிப் பாதுஷாவினிடம் பலவந்தமாகச் செல்லும் மார்க்கத்திலேயே செலவு பெற்றுக் கொண்டு கன்றை நாடிவரும் பசுவைப்போலவும், இனத்தைத் தேடிவரும் மானைப்போலவும், அதிசீக்கிரமாய் தன்மேடையிற் பிரவேசித்து மனைவியை நாடிப் பலவிடங்களில்தேடிக் காணுமல் வாடித் தாயிடம் வோடி மமதாதேவி எங்கே? எனக்கேட்டார். அதற்கு அந்த அம்மணி, "அப்பா ஒப்பிலா மகனே! உன் மனையாள் தன் தாய் தந்தையைப் பார்க்கப்போனுள்; நாளைக்கு வருவாள்; அதற்குள் என் பதைத்து உதைத்துக் கொள்ளுகிருய்?" என்று அதட்டினுள். துளசிதாசர் கரையெடுக்கவந்தால் திரையலைக்குங் கப்பலென்பதைப்போல் சிற்றின்பம் நீங்கிப் பேரின்பம் ஓங்குங் காரணம்வந்தாலும், மனைவியைப் பிரிந்துபோகும் நாள் அன்றேயானதாலும், தாயுரைத்த மொழியைக்கேட்டு வாட்டத்துடன் வீட்டைவிட்டு வெளியிற்புறப்பட்டுக் காமநோய்க் காற்ருதவனுய், ஸ்திரீவாஞ்சையை மாற்ருதவனுய், வலைக்குளகப்பட்டு விடுபட்டோடுங் கலைமானைப்போலவும், நெருப்பை மிதித்தவனைப்போலவும், தன்மனைவியிருக்கும் ஊரை நாடி கால்நடையாய் அதிக பாபரப்போடும் ஓடத்தொடங்கினுர்.

அப்போது பகவான் காந்தையைப் பிரியும்நாள் இந்நாளேயாம். சமுசாரத்தளையைத் தறிக்குந்தினம் இத்தினமேயாம். ஆதலால் ஆகாயகங்கையில் ஸ்நானம் செய்வாயென்று காற்றும்மழையும் கலந்தடிக்கும்படியாகச் செய்தார். அதை அந்தப் பரமபாகவதன் சட்டைசெய்யாமல் காலடி பிட்டத்திற் படும்படியாய் ஓடத் தொடங்கினுர். இப்படி ஓடுந் துளசிதாசனைப்பார்த்த சகலரும் என் இப்படி ஓடுகிறீர்? என்று தடைசெய்யவும், மன்மதன் இன்றன்றி மறுநாள் நமது ஜெபஞ் செல்லாதென்று வலிகொண்டு பஞ்சபாணங்க ளெய்யவும், மழையானது தடைசெய்து மேன்மேலு மிகவும் பெய்யவும், காமநோயைக் கழிக்கும் நாளாதலால் துளசிதாசனுக்கு மனமிகவும் நையவும்,மெய்மறந்து வெட்கமுதலானதுந் துறந்து மதனநோயினுல் தானிறந்து வயினதேயனைப் போற் பறந்து முத்துமாலைகள் கழன்றுவிழவும், முகத்தைப்பார்த்தோரெல்லாந் தொழவும், அங்கவஸ்திரம் சேற்றில் புரளவும், அகமும் நாவும்வரளவும் ஊரைக்கடந்து ஒட்டமாய்நடந்து யமுனுநதியை யடைந்து, அதைக் கடப்பதற் கிடைந்து பொழுதுபோய் ஜாமமானதாலும் நிலவில்லாத காலமானதாலும் மேகக்

கூட்டத்தின் இருளாலும் காற்றுமழையுங் கலந்தடிக்கு மருளாலும்,கறையழிந்துஜலம்பெருகிப்போவதாலும் எப்பேர்க்கொத்தவர்களுக்கும் நதியை நீந்தத் தடையாவதாலும், யமுனைநதியிலிறங்கித் தயங்கி என்னசெய்யலாமென் றியங்கிஅக்கரைசேர்க்க இங்கு யாருமில்லையாவென வழங்கி ஆற்றிலடித்துக்கொண்டு போகும்பிரேதத்தைமுயங்கி ஆற்றிலிறங்கி அலற்றுற்றியங்கிமன் மதநோய்மீறி மமதாதேவியைக்கோரி சுயகுணங்கள்மாறி துரிதத்துக்குத் தடையாச்சென்றே மாறி ஆற்றில்விழுந்து அமிழ்ந்தெழுந்து ஏகாந்தியாய் நீந்திக்கொண்டு இன்னம் எவ்வளவு தூரம் புனலிருக்கின்றதென விண்டு ஆயாசந் தெரியாதவனுய் அரியின் லீலையை யறியாதவனுய் ஆற்றைக்கடந்து அதிவேகமாய் நடந்து மாமனூர் வீட்டையடைந்து உட்போகவழியில்லாததற் கிடைந்து நடுராத்திரியென்றறிந்தும் மமதாதேவியைப் பிரிந்து எப்படி யிருப்போமென நொந்து அம்மனையைப் பலதரம் வலம்வந்து கதவுகளெல்லாம் அடைபட்டிருக்கின்றனவே; மாரி மென்மேலும் பெய்கின்றனவே; காமாக்கினி தகிக்கின்றதே; கதவுகள் தடுக்கின்றதே; எப்படிப்போவோம்? நாயகியை எப்போது பார்ப்போம்?அவாவை எப்போது தீர்ப்போம்? மனதை யின்பத்தில் எப்போது சேர்ப்போம்? மமதாதேவியைக் கூப்பிட்டு பார்ப்போம் என்று, "ஓ மமதாதேவி! மமதாதேவி!" எனப் பலதரங் கூப்பிட்டும் பேசாக்குறையால், ஓ ஓ! காற்று மழையுங் கலந்தடிக்கும் வோசையாற் கேட்கவில்லையாக்கும். கேட்டால் வாராமலிருப்பாளா? நான் மாரியால் நனைகின்றதைப் பார்த்து உயிர்தரிப்பாளா? இனி யென்ன செய்வோம்? எவ்வித உபாயத்தால் உள்ளேபோவோம்? என்று மேடையின் சுற்றிலுமிருக்கும் சாளரங்களாவது திறந்திருக்கின்றனவா? எனப் பார்த்துக்கொண்டு வருகையில் ஓர் பலகணி திறந்திருக்கக் கண்டு ஆனந்தங்கொண்டு உற்றுநோக்கிப் பார்த்து இவ்வளவு உயரமான சுவற்றின்பேரில் ஏறுவது எப்படியென்று எண்ணமிட்டுக் கொண்டே நிற்கையில் அவருடைய பரிதாபமறிந்த பகவான், ஓர் நீண்ட சர்ப்பமாகிச் சாளரத்துக்கும் துளசிதாசனிருக்கும் ஸ்தானத்துக்கும் ஓர் கயிற்றைப்போற் றொங்கினர். அதைச் சர்ப்பமென்றறியாத் துளசிதாசன் கயிறென்றே தீர்மானித்து அதைப் பிடித்துக்கொண்டேறி உள்ளே குதித்து, அங்கு சயனித்திருப்பவரை மிதித்து, "ஓ மமதாதேவியே! என் சொந்த ஆவியே! மயிலே! குயிலே! மானே! தேனே! மதியே! கதியே!

மணியே! அணியே! மலரே! தளிரே! மனமே! கனமே! மங்கையே! நங்கையே! மணமே! குணமே! வண்டே! செண்டே! மையலே! தையலே! அன்னமே! சொர்னமே! அரிவையே! தெரிவையே! அன்பே! இன்பே! பாசக்கயிறே! பட்சமாமுயிரே! ரதியே! சதியே! கோதையே! பேதையே! பாவையே! பூவையே! கொடியே! பிடியே!" என்று காமமயக்கத்தால் ஓசையாகப் பேசத்தொடங்கினர். இப்படி கூசாமற் பேசும் துளசிதாசன் தங்கமயமான அங்கமெல்லாஞ் சேற்றால் நிறைந்திருப்பதாலும், தலைவிரி கோலமாயிருப்பதாலும், மாமன் மாமி மைத்துனர் முதலானவர்களும் இதுவென்ன பேதமோ? பூதமோ? பேயோ? நாயோ? காளியோ? கூளியோ? என்று மூலைக்கொருவராய் எழுந்தோடத் தொடங்கினர்கள்.

அப்போது மமதாதேவி கணவனென்றறிந்து மிகவும் நாணமடைந்து நாமினி கூசத்தாற் பேசாமலிருந்தால் பசாசமேயாய்விடுவார் என்று திக்கென் றெழுந்து சேவடியில் விழுந்து, நாதனே! வாரும்; பிராணநாதனே! வாரும்; நீதனே! வாரும்; கமலபாதனே! வாரும்; எனத் தோத்திரஞ்செய்யும் மமதாதேவியைத் துளசிதாசன் தன் மாமன் மாமி மைத்துனர் முதலானவர்களு மருகி லிருக்கவும் கிஞ்சித்தேனும் நாணமின்றி மோகாந்தகாரத்தால் "அடிபெண்ணே! என்னிரு கண்ணே! அழகு சுந்தரமே! என் மோகனமே! பரிமளமருவே! பாக்கியத்திருவே! கற்பகத்தருவே! களங்கமில்லுருவே! கொஞ்சுங் கிளியே! கோதிலா வொளியே! மல்லிகையரும்பே! ரசமுள்ள கரும்பே! இதுகாலபரியந்தம் என்னைவிட்டு எப்படிப் பிரிந்திருந்தாய்? சீக்கிரமென் மோகத்தைத் தீர்க்கவா? இப்போதே என்னைக் காக்கவாவெனக் கரத்தைப் பிடித்திழுக்கும் துளசிதாசனைப் பார்த்த சகலரும் வாயில்வந்தபடி பேசி மிகவுமேசிக் கீழறைக்குட் போய்விட்டார்கள்.

அப்போது மமதாதேவி நாணமும் லச்சையும் அடைந்து கூடுவதற்கிடைந்து, "ஓ சுவாமி! நீர் எவ்விதமாய் இம்மேடைக்குட் பிரவேசித்தீர்?" என்றாள். துளசிதாசன் "ஓ என் குலவிளக்கே! என்னுருயிரே! நான்வந்து வெகுநேரமாய் உள்ளே வருவதற்குத் தடையாய் நின்று பின்பு இச்சாளரத்திற் றொங்கும் வடத்தைப்பிடித்துக்கொண்டேறி காமம் மிகவும் மீறிவந்தேன். ஆதலால் இக்கணமே என்னை யாட்கொள்வாய்" என மிகவும் கெஞ்சினர். அப்படி கெஞ்சும் நாயகனைப்பார்த்து மமதாதேவி

"ஓ ஸ்வாமி! இந்நுழைவாயிற் பழுதை தொங்குவதேது? பார்க்கலாம் வாருமென்று அவ்வாதாயனத்திற் பார்க்கையில் பருத்து நீண்ட ஓர் சர்ப்பந் தொங்கக்கண்டு அச்சங்கொண்டு, ஆ என்னுசை நாயகனே! பிராணநாதனே! என்மீதிருக்கும் வாஞ்சையாலல்லவோ மழையால் நனைந்து காற்றுலலைந்து ஆற்றைக் கடந்து அதிவேகமாக நடந்து காமம் மீறிடக் கட்செவியின் மீதேறிட வீட்டில் நுழைந்து பலபேர்விழுந்து மான நாணமின்றி எழுந்து நானிலையென நொந்து, மிகவும் நைந்து, பின்பு என்னைக்கண்டு மிகு மோகங்கொண்டு வாயில் வந்தபடி பிதற்றினீர். என்பேரிலிருக்கும் வேட்கையை நீத்து விகாரத்தைப் பேர்த்து ஸ்ரீமந்நாராயணன்மேல் அன்புடையீராகுல் ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராகிய பகவான் பிரசன்னமாகிக் காமக்கவலையை நீக்கிக் களங்க நெஞ்சினைப்போக்கிப் பாமரத்தைத் தூளாக்கிப் பரமானந்த பதத்தைத் தாக்கி மேலான பேரின்பத்தைக் கொடுப்பார்; நிறையத்து ஏமிழ்வதைத் தடுப்பார்; சிற்றின்பத்திலும் பேரின்பமல்லவோ மேன்மையானது; முனிவர் தேவர் புகழும் பிரமானந்த போகத்தை விடுத்துத் துர்க்கந்தமான வென்னையடுத்து வேத வாக்கியத்தைத் தடுக்கலாமா? வைராக்கியத்தைக் கெடுக்கலாமா? பலர் நகைக்க உடம்பெடுக்கலாமா? இப்படியுஞ் சலந்தொடுக்கலாமா? 800-வருஷம் பெண்போகமின்றி வைராக்கியத்தால் பீஷ்மரென்று பேரெடுத்த பீஷ்மாசாரியின் வைராக்கியத்தையும், பலவந்தமா யணையவந்த அரம்பையின் அபிப்பிராயத்துக்கு இடங்கொடுக்காமல் பேடியாகச் சாபம்பெற்ற அர்ச்சுனனுடைய வயிரத்தையும், நாளதுவரைக்கும் ஸ்திரீமயக்கத்திற் சிக்காதிருக்கும் அனுமார் திடத்தையும், இதுகாலபரியந்தம் மணமும் மோகமில்லாதிருக்கும் விக்நேசுவரனுடைய அடத்தையும், நன்ருய் ஊகித்துப்பாரும்; மாயாவிலாசனுன பகவான் மன்மதனென்னும் புத்திரனுலல்லவோ மாதவஞ் செய்யும் முனீசுவரர்களையும் தன்மாயையி லமிழ்த்தி மயக்கித் தன் பதவியை யடையாமல் மறுத்திருக்கின்ருர். அம்மாரனை ஞானக் கண்ணுலெரித்த பரமசிவனுடைய மாட்சிமையை ஒருவராற் புகழத்தக்கதோ? சகல தாட்சிகளையுங் கொடுக்கும் சம்பராரியை உம்மைப்போன்றவர்களால் வெல்லத்தக்கதோ? காமமென்னும் மதயானையை லேசிற்கொல்லத்தக்கதோ? சித்தசனை ஜெயிக்கும் வித்தையீதென்று ஒருவராற் சொல்லத்தக்கதோ? காமத்தால்

தேவாமிர்தத்தை இராக்கதர் இழந்துபோகவில்லையோ? காமத்தாற் பாண்டுராஜன் களேபரமாகப் போகவில்லையோ? காமத்தால் யயாதிராஜன் முதுமையுங் கபரோகமு மடையவில்லையோ? காமத்தால் அட்டவசுக்களும் கர்மத்துக்குள்ளாகவில்லையோ? அன்றிக் காமமே நரகம், பந்தம், ரோகம், சோகம், மாணம் முதலியவை கொடுக்கும் என்பதற்கோர் ஐயமுண்டோ? வலியாற் சிறந்த மதகரியானது காமத்தாலல்லவோ படுகுழியில் வீழ்ந்து மானிடரைத் தாழ்ந்து ஆனையென்னும் பேர்மாறிப் பூனையென்னும் பேர் பெற்றிருக்கின்றது. காமவலையிற் சிக்கின பேர்களுக்குப் பாகதியடையும் மார்க்கந்தெரிவது ஓர்காலத்திலுமுண்டோ? 'விந்துவிட்டனை நைந்துகெட்டனை' யென்னும் பழமொழி மெய்யோ பொய்யோ? எனப் பற்பல நீதிவாக்கியங்களை ஓதினாள்" என்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லுவார்.

ஸ்திரீ வாஞ்சனு அத்தியாயம் முற்றிற்று.

---

ஐந்தாவது

## துளசிதாசர் வைராக்கிய அத்தியாயம்



ஓ சித்தர்களே! சிரவணத்துக்குகந்த பக்தர்களே! மமதா தேவி இவ்வித நீதிகளை ஓதியதைக்கேட்ட துளசிதாசன் கலுழனொலியைக்கேட்ட உரகமும், கேசரியின் கெர்ச்சனையைக்கேட்ட குஞ்சாமும், தாக்குவின் முழக்கத்தைக் கேட்ட பசுக்கூட்டமும், கலங்குகிறதைப்போலக் கலங்கி மனந்துலங்கி, ஆ ஆ! என்னுடைய மந்தபுத்தியாலல்லவோ சகலரும் வாயில்வந்தபடி பேசவும் பேசி ஏசவும் உடம்பெடுத்தேன்; தந்தைசொல்லியவாக்கியத்தையும் தடுத்தேன்; மாதாவுக்கு அளவிலாத் துன்பங் கொடுத்தேன்; நாணமும் மானமும் விடுத்தேன்; முன்னம் நம் தந்தை விந்தையான ஓர் சுந்தரியின் மோகத்தைத் தந்திரத்தால் பிந்தச் செய்து அந்த ரம்பையைச் சொற்பனத்திலும் நினைக்காமற்செய்தார். அன்றியும் சற்சங்கத்தால் தாசிகளினாசையை நீக்கிப் பல நீதிவாக்கியங்கள் உரைத்து, அரக்கைப்போல் மனதைக் கரைத்து, விஷயபோகங்களை வெறுத்து, பந்தபாசங்களை யறுத்து, தேகம் அனித்தியமெனக் கானகத்திற்சென்றுகருவிகரணாதிகளை வென்று தவயோகியானார். இகத்தைத் திரணமாக நினைத்துப்

போனர். அப்பேர்க்கொத்த தந்தை நிந்தைசெய்யவும், தாயார் மனம் நையவும், மனையாள் வெறுக்கவும் நீதிவாக்கியங்கள் உரைக்கவும் நேரிட்டதல்லவா? ஓ ஓ! அஞ்ஞான மனதே! உன்னு லல்லவா அபகீர்த்திக்குள்ளானேன்; பேதையாய்ப் போனேன்; உன்மீதுங் குற்றமில்லை, நானே தேடிக்கொண்டேன் தொல்லை; எனக்கெதன்மே லிச்சையோ அதையே அடிக்கடி நினைத்து என்னைக் கெடுத்தாய். இப்போதே எனக்கு ஸ்ரீமந்நாராயணன் மேல் ஆசையாய்விட்டது; உன் எண்ணப்படி நடப்பது கெட்டது; இனிமேல் மரணபரியந்தம் கொஞ்சிப் பேசும் வஞ்சியரைக் கனவிலும் நினைக்காதே; கோதையரைப் பார்த்துக் களைக்காதே; அரியின் திருநாமங்களை மறக்காதே; தாதையோதிய நீதியைத் துறக்காதே என்று பற்பல வார்த்தைகள் பகர்ந்து, காமவிகாரமிறந்து கர்த்தன்பக்தி நிறைந்து பாமர குணங்கள் குறைந்து பாவியானேனெனப் பறந்து, மமதா தேவிக்கு வந்தனம் புரிந்து, நீயே குருவெனப் பரிந்து இன்றுடன் நீ தாயென்றறிந்து இகவின்பமெல்லாந் துறந்து, கச்சிதக் கதவைத்திறந்து கர்த்தனைக்காண நடந்து வீதியிற் போயினர். உடனே மமதாதேவி நாயகா! எனக் கூவி, அன்பன்பால் மேவி, ஆர்வலா! நீரென்னாவி; அடியாள் மிகவும் பாவி; என்று அவரைப் பலதாஞ் சூழ்ந்து பாதங்களில் வீழ்ந்து பண்புடன் தாழ்ந்து, "ஓ சுவாமி! பக்திமார்க்கத்தை யுரைத்தால் என்னைத் தாயென வெறுக்கலாமா? அளவிலா அன்பைச் சுருக்கலாமா? அடியாள்கழுத்தை நறுக்கலாமா? இப்படியும் அடத்தைப் பெருக்கலாமா? இல்லற தர்மத்தை மறுக்கலாமா?" என்று அயர்ந்தாள்.

அப்போது துளசிதாசன், "ஓ மமதாதேவி! இன்றுடன் உனக்கும் எனக்குமுள்ள சம்பந்தம் போய்விட்டது; காமவிகாரம் மிகவுங் கெட்டது; என் மனதைச் சுட்டது; பகவத்தியானம் நேரிட்டது; ஆ ஆ! நான்செய்தது அபசாரம்; நீ செய்தது உபகாரம்; நானியற்றியது அபசாரம்; நீ யியற்றியது உபகாரம்; உன்னை மறப்பேனோ? உயிருள்ளமட்டும் வெறுப்பேனா? நீ தாயென்பது உறுதி; நீ நன்றாகப்பார் கருதி; இதுவென் மனவுறுதி: இது வேதத்தினிறுதி; இனி என்னாசையை விடுத்து இழிவுள்ள மனதைத்தடுத்து இகபோகத்தைக் கெடுத்து இறைவன் பாதத்தைப் பிடித்து இருப்பாய்?" என்று மறுத்துப் பெண்ணாசையில்லாதறுத்து அடவைராக்கியத்தைப் பூண்டு அரியைப்

பார்க்க அவாக்கொண்டு நாட்டைக் கடந்து காட்டில் நடக்கத் தொடங்கினர். இவ்வாச்சரியத்தைப் பார்த்து மாமன் மாமி மைத்துனர் பந்துக்கள் முதலான சகலரும் துளசிதாசனைப் புகழ்ந்து மிகவும் மனமகிழ்ந்து மமதாதேவியை யிகழ்ந்து, விந்தை யீதெனத் திகழ்ந்து ஒன்றுந் தோன்றாதவர்களாய் நின்றார்கள். மமதா தேவியோ கணவன் முன்சென்று பட்சவார்த்தைகளைப் புகன்று, "ஓ பிராணநாயகா! பிராணவல்லபா! என்னைவிட்டுப் பிரியவும் மனம்வந்ததோ? நான் உரைத்த கடுஞ்சொற்களால் மனம் வெந்ததோ? வீட்டுக்குவாரும்; அன்புடன் சேரும்; இன்பத்தைத் தாரும்; கிருபைகூறும்" என்று போகாமற் றடுத்தாள். விடாச் சலந் தொடுத்தாள். துளசிதாசன் "ஓ மமதாதேவி! நான் தாயென வெறுத்தபின் நீ மறுத்து வருந்துவதால் என் கருத்து பிறழாதெனச் சிரித்துக் காமனை யெரித்தவன்போல் காந்தையை நோக்கிச் சாந்தத்தை நீக்கி இக்கணம் உன் தந்தை வீடுசேரு; பகவான் பாதத்தைக்கோரு; பதியே தெய்வமெனுஞ் சதி நீயானால் என்வார்த்தை தள்ளாதே; யாதொரு மொழியும் விள்ளாதே;" என்று உரைத்தார். அப்படி உரைக்கும் பதியின் பாதங்களிற் பணிந்து நயனங்களை யணிந்து பலதரம் முத்தமிட்டு உம்மையும் விட்டு நான் உயிருடனிருப்பேனா? மனமும் பொறுப்பேனா? உமக்கும் எனக்குமுள்ள சம்பந்தம் இன்றுடன் தீர்ந்து விட்டதோ? நான் உரைத்த கடினசொற்கள் உம்மைச் சுட்டதோ? எவ்விதமாக மறந்திருப்பேன்? துக்கந்தணிந்து எப்படி யிருப்பேன்? தனித்து எப்படி உயிருடனிருப்பேன்? பட்சமாய் இனி யாருடன் பேசுவேன்? சந்தனாதிகளெவர்க்குப் பூசுவேன்? யாருடன் ஆடுவேன்? எவருடன் பாடுவேன்? நாயகாவென்று யாரை யழைப்பேன்? எப்படி பிழைப்பேன்? யாருடன் நகைப்பேன்? எவருடன் பகைப்பேன் யாருடன் கொஞ்சுவேன்? எவர்பால் கொஞ்சுவேன்? இனியெனக்குப் பூமாலைகளேன்? முத்துமாலைகளேன்? சிங்காரக்கொண்டையேன்? செஞ்சதங்கைத் தண்டையேன்? என்னழகைப் புகழ்பவர் யார்? புகழ்ந்து மகிழ்பவர் யார்? எனப் பெருமூச்சுவிட்டு அயர்ந்து ஆயாசத்தால் மூர்ச்சையாய் நிலத்தில் சாய்ந்துவிட்டாள்.

இதுகளையெல்லாம் பார்த்திருந்த துளசிதாசன் சற்றுமிடருறாமல் அரிவையின்காமம் நீங்கி அரிமேற் காமம் ஓங்கி அச்சுதனைப்பார்க்க ஏங்கி அரைக்கணம் நிற்கப் பின்வாங்கித் தன் எதிரில் யார்வந்து மறித்தாலும், "ஓ ஐயமாரே! நீங்கள் ஆனந்தமா

யிருக்கிறீர்களே அரியைப்பார்த்தீர்களா? அவரடியிற் றலையைச் சேர்த்தீர்களா? ஆசைகளையெல்லாம் மாய்த்தீர்களா? அடியோடகந்தையைச் சாய்த்தீர்களா? அரி இவ்வழியாய் வந்தாரா? அரியசேவை தந்தாரா? அரியைக்கண்டு புகழ்ந்தீரா? அன்பாயுருகி மகிழ்ந்தீரா? அரி நீயென்முன் வாராயோ? அரியசேவை தாராயோ? அடியேன்மேற் கிருபை கூருயோ? அருட்கண்ணலெனைப் பாராயோ? ஐயோ வீணுய் நாள்போச்சு; அடியேன் ஆயுள் வீணுச்சு; மெய்யோர்க்கிது மிகவுமேச்சு; விதியோ'' என்று பெருமூச்சு அடிக்கடி விட்டுக்கொண்டே பேயன்போலவும், பித்தன்போலவும், பேசிக்கொண்டே கன்றையிழந்த பசுவைப்போலவும், புதல்வனை யிழந்த பூவையைப்போலவும், பதியை யிழந்த பதிவிரதையைப்போலவும் பதறிக் கதறிக்கொண்டு அரி ஹரி யென்கிற வார்த்தையல்லாமல் வேறு வார்த்தை சொல்லாமல் எங்குந்தங்கி நிற்காமல் கற்களென்றும் முட்களென்றும் பாராமல் காடென்றும் நாடென்றும் தேருமல் கர்த்தனைக்காண நடந்தார். அப்போது மமதாதேவி மூர்ச்சைதெளிந்தெழுந்து கணவனைக்காணுமல் பின்னும் பூமியில் வீழ்ந்து புரண்டு மருண்டு கதறிப் பதறி ஓலமிட்டழுது ஓ கர்த்தனே எனத்தொழுது, ஐயோ செய்தேனே பழுது, இனி எப்படிப்போகும் பொழுது எனப் புலம்பிக் கண்ணீராற் றேகத்தை யலம்பிக் கணவனைக்காணக் காட்டை நாடிப்போகத் தொடங்கினுள். அப்போது அவ்வுத்தமியின் தந்தை தாய் பலவாருகத் தேற்றித் துக்கத்தையாற்றி நீ வீட்டிலிரு சற்றேபொறு, நாங்கள் அழைத்துக்கொண்டு வருகிறேமெனத் திடப்படுத்தினர்கள். அதற்கு மமதாதேவி நீங்கள்போய் எனது மாமியாரை அழைத்துக் கொண்டுவந்தால் அவ்வம்மணி தன்சுதனை மறித்து நாட்டுக்கு அழைத்துக்கொண்டு வருவாளென்றுரைத்தாள். உடனே மமதாதேவி சகோதரர் க்ஷணத்தில் அழைத்துக்கொண்டு வருகிறேமென்று ஓடி யமுனுநதியைக் கடக்கக்கூடாமல் வாடிச் சூரியோதயத்தை நாடி நின்ருர்கள். துளசிதாசனே இரவிலேயே நாட்டைக்கடந்து காட்டிற் புகுந்தும் சேற்றிற் புதைந்தும் புதருகளாற் சிதைந்தும் சூரியாஸ்தமனமாவதற்குமுன் ஓர் மலைமேற் பிரவேசித்து ஆயாசமேலீட்டால் அயர்ந்து சற்று தங்கியிருந்து பகலவன் வந்ததே அம்மலையை யிழிந்து பல நாடுகளிலும் காடுகளிலும் புகுந்து இன்றைக்கு அரியைக்காண்பேனு? இன்பாபரணம் பூண்பேனு? இன்றைக்கு என்முன்வருவாரா? எளியேன்

விரதம் முடிப்பாரா? எனக் காலையிலிருந்து உச்சிமட்டும் பல விடங்களிலுஞ் சொல்லிக்கொண்டே திரிந்து மனம் நொந்து இப்போது பதினைந்து நாழிகையாய்விட்டதே; இனிமேல் கமலக்கண்ணன் வருவானோ? விமலபதத்தைப் புகழ்வேனோ? மேலாம் இன்பமடைவேனோ? என்று தேவாலயங்களிற் பிரவேசித்துப் பகவான் இவரே யாவாரா? பகவானனுற் பேசாரா? மகிழ்வோடெழுந்து வாராரா? மலர்ப்பாதங்கள்தாராரா? என வெகுநேரந் தோத்திரம் புரிந்து அசையாத விக்கிரகங்களைப்பார்த்து மார்புடன் சேர்த்து, "ஓ சுவாமி! நான் உம்மைக் காணவேண்டி காடு நாடும் அலைந்து திரிகின்றேனே; கால்கள் மிகவும் நோவுகின்றனவே; பாதங்கள் தேய்ந்துபோயினவே; பொழுதும்இதோபோச்சுதே; நீர் அசையாமலிருக்கின்றீரே; நான் இரவும்பகலும்ஓலமிட்டுக் கூப்பிடுகின்றேனே; நீர் வாய்திறந்து பேசாமலிருக்கின்றீரே; இது உமக்குத் தர்மமோ? அல்லது வேறே மர்மமோ? நான் செய்த கர்மமோ? நீர் அசையாப் பிரமமோ? எனத் துதித்துச் சூரியாஸ்தமானதே ஆலயத்திலேயே சயனித்து; அரி என் கனவில் வருவாரா? அரியசேவை தருவாரா? உரிமையாக்கிக்கொள்வாரா? உபதேசஞ் செய்வாரா? கமலபாதங்கள் பார்ப்பேனோ? களிசாகரத்திற் குளிப்பேனோ? நிமலாவென்று துதிப்பேனோ? நிச்சலனாகி யிருப்பேனோ? பண்ணோடுருகிப் பணிவேனோ? பவசாகரத்தைக் கடப்பேனோ? கண்ணாற்பார்ப்பதெந்நாளோ? கவலைகள் தீர்ப்பதெந்நாளோ" எனத் தியானஞ் செய்துகொண்டே நித்திரைசெய்து பாதியிரவிலேயே விழித்துக் கோயிலிலிருந்து வெளிப்பட்டு, "ஓ ஓ! பகவானே! நீ என்னெதிரிற் பிரசன்னமாய்ச் சேவைதரல் வேண்டும்; கண்களாற் பார்த்து மகிழவேண்டும்; மனங்குளிரப் பேசவேண்டும்; என்மனவாட்டங்களற வேண்டும்; ஆனந்தமுறவேண்டும்; நிர்த்தனஞ்செய்யவேண்டும்; தன்னை மறந்து திரியவேண்டும்" எனப் புகன்று பகவானைக் கனவிலும் மறக்காமல் அரி ஹரி யென்கிற வாக்கியத்தைத் துறக்காமல் அநேக நூதன பஜனைகள் பாடிக்கொண்டே பல தேசங்களிற் றிரிந்து மிகவும் பரிந்து கால்களெரிந்து முகங் கரிந்து, காசிப்பட்டணத்திற் பிரவேசித்து விஸ்வநாதரைப் பூசித்துச் சாதுக்களை நேசித்து, அரியின் கதைகளை வாசித்து விஷ்ணுசங்கீர்த்தனங்களைக் கோஷித்துப் பக்தியில் விசேஷித்து நாள்களைக் கழிக்கத் தொடங்கினர். இவர் இப்படி யிருக்கத் துளசிதாசன் தாய் சூரியோதயமாகியும் புதல்வன் வரக் காணாமையால் வாடி

வீதிகளிற் போய்த் தேடிப் பலதிசையிலும் வோடி, பாலனைக் காணுதற்கு நாடி யமுனநதியின் கரைக்குவந்து கடந்துபோவ தற்கு நொந்து, துக்காக்கினியால் வெந்து மிகவுஞ் சிந்தை நைந்து ஓடத்தின்மீதேறி மகனைக்காணக்கோரிஇக்கரைகடந்து அக்கரையை யடைந்து சம்பந்தியின் புதல்வரைப்பார்த்து என் அருமைக்குமாரன் வந்தானு? எனக்கேட்டாள். அதற்கு அவர் கள் சகலமும் சவிஸ்தாரமாக வுரைக்க, அவ்வசனத்தைக்கேட்ட தாய் பூமியில் விழுந்து புரண்டெழுந்து அதிசீக்கிரமாகச் சம்பந்தியின் வீட்டிற் சென்று மமதாதேவியைக் கூப்பிட்டாள். உடனே மமதாதேவி மாமியைத்தொழுது ஓவென்று அழுது நீர் என்னை யிங்கே அனுப்பாமல் இருந்தால் இக்குறை எனக்கு வருமா? துன்பந் தருமா? எனத் துக்கித்து அலறினள். அப் போது அத்தாயும் கூடவே புலம்பி, "ஆ என்மகனே! அழ கானமுகனே! என்னையும் மறந்தாயோ? உன் மனைவியைத் துறந் தாயோ? எத்திசையிற் சென்ருயோ? எங்கே யிருக்கின்ருயோ? பசிவேதனைக்கு எப்படி பொறுப்பாய்? கால்கள்நோக நடந்து எப்படி உயிர் தரிப்பாய்? மோகஜன்னி மேலிட்டதோ? மனைவி யின் வாய்மொழிகள் சுட்டதோ? இல்லறங் கசப்பாய் விட்ட தோ? மதி மயங்கிவிட்டதோ? விதி பிரிந்துவிட்டதோ? இவ்வூர் தான் கெட்டதோ? உன்முகத்தைக் காட்டாமற் போய்விட் டாயே? என்னைப் பாவியாக்கி விட்டாயே? உன்னைப் பார்க்காமல் எப்படியிருப்பேன்? எவ்விதமாய்ப் பொறுப்பேன்? ஓ ஓ! மோசஞ் செய்தாயே? என் கழுத்தைக் கொய்தாயே?" எனப் புலம்பிக் கொண்டிருந்தாள். அப்போ சம்பந்தி அத்தாயை அன்புடன் நோக்கி, "இதோ என் புதல்வர்களால் இப்போதே அழைப்பிக் கிறேன்; துன்பப்படவேண்டாம்" எனத் தேற்றித் துன்பத்தை யாற்றிப் புதல்வரையும் ஏவலாளரையும் துளசிதாசனைத் தேடி யழைத்துக்கொண்டு வரும்படியாக அனுப்பினர்.

அவர்கள் காடு நாடு மலை வனந்தரங்களிலெல்லாம் அலை ந்து திரிந்து அங்கங்கே துளசிதாசனுடைய சங்கதியைக் கேள் விப்பட்டு வாரணசியை யடைந்து அங்குள்ள துளசிதாசனைக் கண்டு பித்தனய்விட்டானென்று தன்னூரிற்சென்று துளசிதாச னிருக்குங் கோலத்தைப்புகன்று முறையிட்டார்கள். அதுகேட்ட தாய் மிகவும் பிரலாபித்துத் தானும் மருகியும் தண்டிகைகளின் மேல் ஊர்ந்து ஏவலாளருடன் பிரயாணப்பட்டு வாரணசியை யடைந்து தேகத்தின்மீதும், வஸ்திரம்முதலான சகல சொகுசு

களின்மீதும், வாஞ்சையின்றி ஓரிடத்திலும் நில்லாமல் அரி ஹரி யென்கிற மொழியல்லாமல் வேறு வார்த்தை சொல்லாமல் பாதேசியைப்போற் கிழிந்த ஆடையைத் தரித்துக்கொண்டு குடுமியை விரித்துக்கொண்டு பாதங்கள் வெடித்து உதிரம் புறப் பட நடந்துக்கொண்டு பகவானை ஓசையுடன் கூப்பிட்டுக் கொண்டு மஸ்தகத்தின்மேல் அஸ்தகங்களை கூப்பிக்கொண்டு தெருக்களிற் றிரிந்துக்கொண்டு மழையென்றும் வெயிலென் றும் பாராமல் யாரிடத்தும் பேசாமல் ஊமையாகி அங்கங் கறுத்து கோடைக்குப் பொறுத்து எறும்புமாத்திரமாகி நிச்சல சித்தனாகி மேடை மாளிகையிலிருந்ததுபோய் மடஞ் சத்திரங்க ளிற்றங்கிப் பஞ்சணைமேற் சயனிப்பதுபோய் புழுதியி லனந்தற் செய்து பேய்பிடித்தவன்போலும் சேயிருப்பதுபோலும் இருக் கும் மைந்தனைக்கண்ட தாயானவள் தாரை தாரையாய்க் கண் ணீர்விட் டழுதாள். பின் பாதங்களின்மேல் வீழ்ந்து தொழுது, "ஓ என்னருமைப்பாலனே! தவத்திற்சிறந்த சீலனே! உனக்கு இப்பேர்க்கொத்த விதிவந்ததோ? உன் மனைவிசொன்ன கடுஞ் சொல்லால் மனம் நொந்ததோ? சிங்கார மேடையிலிருந்து தியானஞ் செய்யலாகாதோ? அஞ்ஞானம் நாசமாய்ப் போகா தோ? ஓ என் அருமைக் குழந்தாய்! உன் தாதையு மெனைப் பிரிந்தாரே? நீயும் பிரிந்துவிட்டாயே? நான் தனித்திருப் பேனு? உன்னைப்பிரிந்து உயிர்தரிப்பேனு?" எனப் பற்பல மொழிகளைப் புகன்று இரண்டுகரங்களையும் பிடித்துக்கொண்டு வயிற்றிற் றலையைவைத்து ஓவென்று அழத்தொடங்கினள்.

அதற்கு அந்தப் பரமபாகவதன் பணிந்து, "ஓ என்தாயே! நாராயணனைப் பார்த்தாயா? நயனங்களவர் பதத்திற் சேர்த்தா யா? இழிவான எண்ணங்களைப் பேர்த்தாயா? எல்லா ஆயாசங் களையுந் தீர்த்தாயா? அடியேன் அரியைக் காணவில்லை; அதனுல் ஒன்றுந் தோணவில்லை; கொடியன்மேல் அருள் கூறவில்லை; கோதுகளின் னுந்திரவில்லை; பச்சைவண்ணனை கமலக்கண்ணனை அச்சுதாற்புதனை அரசனுர் சுதனை கோதண்ட அஸ்தனை குறை விலாச்சொஸ்தனை சீதைமணவாளனை தேவர்கண்ணுளனை பத்ம நாபனை பரமசொரூபனை கதிதருமுதல்வனை கௌசலைபுதல்வனை ஆதிமூலனை அன்பரனுகூலனை யாதவர்நேயனை மதிதரும் மாய னைக் கண்குளிரக்கண்டு ஆனந்தங்கொண்டு பலவரங்களைப் பெற் றுக்கொண்டு இதோ வருகிறேன்; இன்றைக்கு அகத்தியம் பக வான்வருவார்; தரிசனந்தருவார்; இன்றைக்கு என்விரதம் நிறை

வேறும்; சமஸ்தகுறைகளுந்தீரும்" எனப்பற்பல வசனங்களாடி அரியைத்தேடிக் காணுமல் வாடிப் பலகீர்த்தனங்களைப் பாடிக் கொண்டிருந்தார்.

அப்போது மமதாதேவி கணவனைச்சூழ்ந்து அடிகள்மேல் வீழ்ந்து பலதாந்தாழ்ந்து, "ஓ ஸ்வாமி! நான் செய்த குறையை க்ஷமித்து வீட்டுக்குவாரும், தாயைக்காரும்; ஆ ஆ! இத்திவ்ய திருவடிகள் நோக நடக்கவும் நேரிட்டதோ? புழுதியிலுஞ் சப னிக்கலாச்சுதோ? பித்தனென்றும் உன்மத்தனென்றும் மானிடர் நகைக்கலாச்சுதோ? உமக்குள்ள அபிமானமெங்கே பிரிந்து போச்சுதோ? இப்பேர்க்கொத்த விதியும் வாச்சுதோ? ஓ கொடுங் காலமே! ஓ கடுந்தெய்வமே! என்னை இப்படியும் சோதிக்கலாமோ" எனப் பன்முறை முகத்திலறைந்துக்கொண்டு கல்லும் உருகக்கரைந்து அழத்தொடங்கினுள். அதற்கு அந்த ஹரிதாசன், "ஓ மமதாதேவி! நீ செய்த உபதேசப்படி இன்னும் ஹரி ஏன் வரவில்லை? என் அவர் தரிசனந்தரவில்லை? இன்னும் எத்தனை நாள் செல்லும்? எனக்கோருபாயம் நீ சொல்லும்? என்று விபீஷணனைக் காத்தவனை ராவணனை மாய்த்தவனை கும்பர்ணனை வென்றவனை மூலபலத்தைக் கொன்றவனை அயோத்தியையாண்டவனை எனக்கு முனக்கு மாண்டவனை இதோபார்த்து வருகிறேன்; நீ மனைக்கேகென்று உரைத்து, ஸ்ரீராமா! பரந்தாமா! துளசிராமா! சகஸ்திரநாமா! பரசுராமா! பலபத்ரராமா! நீலமேகஸ்யாமா! புஜபலபராக்கிரம! திரிவிக்கிரமா! புருஷோத்தமா! நரசிம்மா! எனத்தோத்திரஞ் செய்துக்கொண்டே இச்சைப்படி பலவிடங்களிலுந் திரியும் காவலனை மமதாதேவி மறுக்காமல் மாமியாரை நோக்கி, இனி இவரை நாம் அழைத்துக்கொண்டு போவது அருமையாதலால் இவ்வாரணுசியில் ஓர் பெரிய மடம் ஏற்படுத்தி அதில் நாமிருந்துக்கொண்டு இவருடைய தரிசனஞ் செய்துக்கொண்டிருக்கலாம் எனப் புகல அதற்கு அவ்வம்மணி, "ஓ மமதாதேவி! நீ நமக்குள்ள ஆஸ்தியையெல்லாம் அழைப்பித்து உன் இஷ்டப்படியே செய்து துளசிதாசனுக்கு அன்னவஸ்திர முதலானதுகளுக்குக் குறை வராமற் பாதுகாத்துக்கொண்டிரு; நான் உனது மாமனுரிடஞ் சென்று அவரை யிங்கு அழைத்துக்கொண்டு வருகிறேன்; வாராவிடின் அவரிடத்திலேயே மரணமடைகிறேன். ஏனெனின், என்னருமைப்பாலன் முன்னிருந்த சிங்காரத்தைக் கண்டு களிப்புற்ற கண்கள் இப்போதிருக்குங் கோலத்தைக்கண்டு பொறுக்க

மாட்டே னென்கின்றது; பெற்றவயிறே பற்றியெரிகின்றது; உடல் பதறுகின்றது; மனம் நடுங்குகின்றது; துயரமோ ஆறே னென்கிறது" என்று உரைத்தாள். பின் மகனைக் கட்டியணைந்து முத்தமிட்டுப் பிரியாத்துயரால் ஓவென்றழுதாள். பின் காசி விஸ்வநாதனைத் தொழுது, "ஓ பரமேசுவரா! ஜகதீசுவரா! நீயாவதுஎன்பாலனுக்குற்ற சிரத்தாபத்திக்கு இரங்கலாகாதோ? காட்சி கொடுக்கலாகாதோ? என்னுயுளெல்லாம் துன்பத்தி லேயே கழிந்ததே?" என்று துதித்துப் பல காவலர்கள்சூழ சிவிகைமேல் ஊர்ந்துக்கொண்டு நைமிசாரண்யத்தை நோக்கிப் போய் காவலனிடஞ்சேர்ந்து பாதங்கள்மேல் வீழ்ந்து பிரலா பிக்கத் தொடங்கினாள்.

ஆத்மாராம் திடுக்கிட்டுக் கண்களைத்திறந்து மனைவியை நோக்கி, "ஓபெண்ணே! துளசிதாசனெங்கே? மைந்தனைப் பிரிந்து என்பால் வந்த காரணமென்ன? சீக்கிரஞ்சொல்வாய்" என்று கேட்டார். அதற்கு அவ்வுத்தமி துளசிதாசனுடைய வரலாற்றை ஆதியோடந்தமாகப் புகன்று முறையிட்டாள். அதுகேட்ட ஆத்மாராம் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவராய் ஆனந்தம்! ஆனந்தம்! என்ன சுபவார்த்தை புகன்றாய்; நமது மைந்தனும் இகபோகங்களை வெறுத்துச் சஞ்சலமனதை மறுத்து அரியைத்தேடி திரிகின்றானா? தேடிக்காணுமலுறுகின் றானா? எதோ பார்ப்போம்; வாவென்று ஆரண்ணியத்தைக் கடந்து வாரணாசியை யடைந்து துளசிதாசனைக் கண்டு ஆனந் தங்கொண்டு மயக்கத்தைப் பேர்த்து மார்புடன் சேர்த்து, மக வாசையோங்கி மனம் மிகத்தேங்கி "அப்பா மகனே! அழகான முகனே! நீயும் விஷயபோகங்களை வெறுத்தாயா? இவ்வள விடருக்கும் பொறுத்தாயா? ஆ என் கண்மணியே! ஆ சிகா மணியே! ஆ என் புத்திரா! அடியார்க்கு மித்திரா! ஆசைப் பெருக்கே! அடியேனன்பே! என்னுருயிரே! என்மனத் தெளி வே! ஜீவசஞ்சீவியே! தெருள்சிரஞ்சீவியே! மாசிலாவுருவே! மகிழ்வருதிருவே! நீ யிப்படி யலைவதாற் பஞ்சுபோன்ற பாதங் கள் நோகாதா? என் னுயிர் பிரிந்துபோகாதோ? சும்மா விருக்கலாகாதோ! துரிசுகளெல்லாஞ் சாகாதோ! நீயு மென்போலானாயோ! எலும்பாய் வாடிப்போனாயோ! நீயுமிச் சீரை யணியலாமா! எளியேன் கண்களாற் பார்க்கப்போமா! ஐயோ தேகமெல்லாம் புழுதியாயிருக்கின்றதே; என்தேகம் மிக வும் பதறுகின்றதே; உன்னைப்பெறும் பாக்கியமென்ன செய்

தேனே; அதிக சிலாக்கியனுனேனே; அரியைத் தேடித்திரிகின்ருயோ? அரியைக்காண வருகுகின்ருயோ? இப்போதல்லவோ என் தவம் பலித்தது; இப்போதல்லவோ மோட்சசாம்பிராஜ்ஜியத்தை யடைந்தேன்; இனி இவ்வுலகி லெனக்கு ஓர் ஆசையுமுண்டோ? உன்னைப்பெற்ற எனக்கு ஓர் குறையுமுண்டோ? என்னை உன் மார்பிறுகத் தழுவிக்கொண்டே என்னுவியை விடுவதே நன்மை; இப்படி விடுவதால் வாராதொருவின்மை; ஆ ஆ! ஆனந்தமடைந்தேன்; ஆக்கையோடிருக்க விடைந்தேன்; பந்த பாசங்களற்றேன்; பரமானந்தத்தைப் பெற்றேன்; உன் திவ்விய அஸ்தங்களா லென்னைப் பாகீரதியி லெறிந்துவிடு; இனியுனக்கு ஓர் குறையுமில்லை; ஸ்ரீமந்நாராயணரைப் பார்க்கக்கடவாய்; பரிபூரண க்ஞானியாகக்கடவாய்; பிரமானந்தத்தாற் றன்னை மறந்திருக்கக்கடவாய்; மோட்சபாக்கியத்தைப் பெறக்கடவாய்'' என்று பல ஆசிகள் செய்தார். மைந்தனைக்கண்ட சந்தோஷத்தாலே ஆக்கைமேலுற்ற நிராசையாலோ, விதேக கைவல்ய மடையும்படியான எண்ணத்தாலோ, மகனை மார்புடன் புல்லிக்கொண்டிருக்கு மானந்தத்தாலோ, தனயனிருக்கும் அலங்கோலத்தைப் பார்க்கக்கூடாமையாலோ, சுதன்மீதிருக்கும் வாஞ்சையாலோ, விதியின் முடிவாலோ, யாதுகாரணத்தாலோ, துளசிதாசனைத் தழுவினபடியே தேகேந்திரிய கரண சீவவிருளையுங் கடந்து ஆத்மஸ்வரூபமாகிய விராட்டிரண்ணிய கர்ப்ப அவ்யாகிர்தத்தையும் கடந்து பரமாத்மாவில் ஐக்யப்பட்டு ஸ்மரணைகெட்டு தாத்திரியிற்சாய்ந்து ஆனந்தம்- ஆனந்தம்!'' என்று உரைத்துக்கொண்டு ஆவியை விட்டுவிட்டார்.

அப்பிராணனுனது குளிர்ந்த பூரணச்சந்திரன்போல் பிரகாசித்துக் ககனத்தில் மறைந்துவிட்டது. அப்போது அவர் மனைவி, ஆ! இதென்ன பிள்ளைவரத்துக்குப் போய்ப் புருஷனைப் பறிகொடுத்தாப்போலாச்சுது எனப் பதை பதைப்புடன் மெய்மறந்து மூர்ச்சையடைந்தாள். அப்போது அந்தத் துளசிதாசனுக்கு உற்ற துயரத்தை ஒருவராற் சொல்லமுடியுமோ? மாதா பிதாவும் மனையாளும் அடைந்த துயரம் ஓரணுவும்; அவ்வரிதாச னடைந்த துன்பம் மகமேருவென்றே சொல்லலாம். எப்படியெனில்? கரைகாணுவிடர்க் கடலில் மூழ்கித் தந்தையின்மேல் வீழ்ந்து, "ஓ என் தந்தையே! இதுவென்ன விந்தையே! ஆலிங்கனஞ் செய்துக்கொண்டே உயிர்விட்டவர்களு மிவ்வுலகிலுண்டோ? தேரித்தெளிந்த ஞானியாயிருந்தும்

சமஸ்த தர்மங்களறிந்தும் அடியேன்மீது இவ்வளவு ஆசை யுட னிருக்கலாமா? அரைக்கணத்தில் உமதாவியை விடுக்கப் போமா? என்பால் வருவதே தடையாயிருந்ததோ? முகம் பார்த் ததே ஆயுளின்முடிவு வந்ததோ? பாவியின் பரிசமே மரணந் தந்ததோ? பந்தத்தில் நானிருந்தபோதும் நிந்தைசெய்யாமற் போனுயே; ஆக்கையை ஆரண்யத்திலும் ஆவியை என்னிடத் திலும் வைத்திருந்தாயோ? ஆ! பட்சத்துடன் ரட்சித்த தந் தையே! என்னை இழந்தையே! இனியென்னை மகனேயென்று அழைப்பவர் யார்? நீதிகளைப் புகல்பவர் யார்? யாரென்று ஓவென்று அழத்தொடங்கினர். இப்படித் துளசிதாசன் பிரலா பித்த காரணம் தந்தைமீது வைத்திருந்த தயவேயாம். பட்ச முள்ள தந்தையை மறந்தவருமுண்டோ? தந்தை மரித்தால் அழாத மைந்தருமுண்டோ? ஓ சித்தர்களே! துளசிதாசன் இப் படியாயிருக்க, ஆத்மாராம் மனைவி மூர்ச்சை தெளிந்தெழுந்து கணவன்மேல் விழுந்து, கல்லும் வருகக் கரைந்து அழுவதைக் கண்ட ஹரிதாசன் இனி தமது பிதா உரைத்தபடி கங்கையிற் போடாவிட்டால் துக்கமிகுந்து மாதாவும் மரிப்பாளென்கிற எண்ணத்தாலும் ‘தந்தைசொன்மிக்க மந்திரமில்லை’ என்னும் வாக்கியம் அறிந்தவராதலாலும், பிதாவைத் தோள்மேல் ஏந்திக் கொண்டுபோய்ப் பாகீரதியைத் துதித்துக் கங்கையில் விட்டு விட்டார். விட்டு தன்சுயநிலை கெட்டார்; கண்ணீரைப் பெருக்கி னர்; சகலருடைய மனதையும் உருக்கினர்.

அப்போது துளசிதாசன் தாய் பதியுடன் பாகீரதியிற் குதித்து இறக்க எண்ணங்கொண்டு மகனைக் கட்டியணைத்துப் பலதரம் முத்தமிட்டு, “ஓ என்னருமைப் பாலனே! தவத்திற் சிறந்த சீலனே! நீ முன்னமிருந்த சிங்காரத்தைக் கண்டுகளித்த கண்கள் இப்போது இருக்குங் கோலத்தைப் பார்த்துப் பொறு க்கமாட்டே னென்கின்றதே; அங்கமெல்லாம் என்பாய்விட் டதே; முகங் கருகிப் போய்விட்டதே; இப்பேர்க்கொத்த உன் துயரத்தையும் பார்த்தும் உன் தந்தைபோல் நானும் மரிக்கா மல் கடின நெஞ்சத்துடன் இருக்குங் காரணமென்னமோ? நீ பரதேசியாய் அலைந்து திரிவதைப்பார்த்தும் என்னுயிர் பிரியா திருக்குமோ? நீ இச்சைகொண்ட அச்சுதனுக்கு ஆளாகக்கட வது; பிரமக்ஞானியாகக்கடவது” என்று உரைத்துக் கங்கை யிற் குதித்து மறைந்துவிட்டாள். ஓ சித்தர்களே! அத்தருணத் தில் அந்தத்தாசன் எவ்விதமாய்ப் புலம்பி அழுதானே? அதை

என்னுல் உரைக்கப்போமோ? இவ்வளவு உருக்கமுள்ள சரிதையை நீங்கள்கேட்டதுண்டோ? மகனேமகனேயென்று மாதா பிதாக்கள் மரித்தபின் ஹரிதாசன் கங்கையின் கரையில் வெகு நேரம் மரம்போல நின்றிருந்து ஒன்றுந் தோன்ருதவராய் நாமும் இக்கங்கையில் விழுந்து மரிப்போமா வென்பார், அரியைத்தேடப்போவோமா வென்பார்; சற்றுதூரம் போவார்; பின்னும் அவ்விடத்தில் வருவார்; நமது மாதா நிச்சயமாய் இதில் வீழ்ந்திறந்தாளா வென்பார்; ஒருமொழியாவது பேசாமல் போனேமேயென்பார்; மாதுர் துரோகியானேமே யென்பார்; மறலி நாமேயானேமேயென்பார்; மாதாமரித்த காரணமேனென்பார்; இவ்வயணம் நமக்குத் தெரியாமற் போனதேனென்பார் என்றிவ்வித பற்பலமொழிகள் பகர்ந்துக்கொண்டிருந்தார்.

ஓ சித்தர்களே! "இவ்வுலகில் பிள்ளையின்மீது இவ்வளவு பிரியம் வைத்தவர்களுமுண்டோ? இவர்கள் இப்படியிறந்த காரணம் ஏனெனின், பரமபாகவதோத்தமனுகிய துளசிதாசனுக்கு இவ்வுலகிலுள்ள எல்லாப்பற்றுகள் நீங்கியும் தந்தை தாயிருவருந் தன்முன் சமாப்தமாக வேண்டுமென்கிற வாதனையொன்று மாத்திரம் வேதனை செய்துக்கொண்டிருந்தது. ஆதலால் அப்படியே பக்தவச்சலனுகிய பகவான் முடித்துவிட்டார். ஓ சித்தர்களே! துளசிதாசன் கங்கையிற் குதித்து இறப்போமென்று எண்ணங்கொள்ளுகிறதும், இன்றைக்குப் பகவானைப் பார்த்து நாளைக்கிறப்போமென விள்ளுகிறதுமாய் வெகுநேர மிருந்து பகவானைப்பார்த்தே மரிக்கவேண்டும்" எனத் திடச்சித்தஞ் செய்துக்கொண்டார். பின்பு ஆ! ஆ! நமது தாதை நெடுநாள் தவத்தி லிருந்தபடியால் மேலானபதவியே யடைந்திருப்பார்; நமது தாயோ நம்மால் நாளதுபரியந்தம் வாட்டத்தை யடைந்திருந்தாள். அன்றி ஓர் தவஞ்செபம் செய்யவேயில்லை; தனயன் முற்றுந் துறந்த சன்னியாசியானலல்லவோ தாய்க்கு மோட்சமுண்டு எனச் சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றது. அப்படி தன்னைமறந்த சன்னியாசியாகாமற் போனேமே. அதிகபட்சம் வைத்திருந்த அன்னைக்கு என்ன கைம்மாறு செய்வோம்? எனப் பற்பலவிதங்களாய் யோசித்து முடிவில் கங்கையை நோக்கி, "ஓ பவானி! நீயறிய எனையீன்ருட்கு இதுகாலபரியந்தஞ் செய்த தவமெல்லாந் தாரைவார்த்தேன். ஆதலால் எனைப் பயந்தவளை என் தந்தையடைந்த லோகத்திற்சேர்ப்பாய்" என்று உரைத்தார். அதற்கு அந்தப் பாகீரதி அசரீரியாய் "நீ இன்னும் இப்

பேர்க்கொத்த தவம் பனிரெண்டாண்டு செய்தாலொழிய உன் தந்தையடைந்த கைவல்யத்தை உன் தாய் அடையமாட்டாள்" என்று அறைய அவ்வாக்கியத்தைக்கேட்ட துளசிதாசன் இதோ இன்று நாளைக்குள் பகவானைப்பார்த்து சமஸ்த குறைகளுந் தீர்த்துக் கொள்ளுகிறேனென்று அவ்விடம் விட்டுப்பேர்ந்து தந்தைதாய் கிலேசந்தீர்த்து, முன்போலவே பகவானைத் தேடத் தொடங்கினர். அப்போது அக்காசியிலுள்ள ஓர் விப்பிரர் துளசிதாசன் மகாபக்தனென்று அவரைப் பலவந்தமாய் அழைத்து வந்து தன்மனையி லிருத்திக்கொண்டு, "ஓ அரிபக்தனே! என்வீட்டில் ஒருவருமில்லை உன்னைப்போல் நானும் ஓர் தியாகிதான்; ஆதலால் கருணையுடன் இங்கு எழுந்தருளிப் பகவானைப் பஜனைசெய்யுமையா" எனப் பணிந்தான். துளசிதாசன் சாதுக்கள்சங்கம் நலமெனச் சம்மதித்துப் பகலெல்லாம் பலவிடங்களிற் றிரிந்தாலும் இரவில் அவ்வீட்டில் வந்து தங்குவார், இவர் இப்படியிருக்க ராஜாபூருக்குப் போயிருந்த மமதாதேவி காசியையடைந்து மாமன் மாமி மரித்துப்போனதைக் கேள்விப்பட்டு மிகவும் வியாகுலப்பட்டு இவைகளெல்லாம் நம்மால் வந்ததேயெனத் துக்கித்து முன் தான் நினைத்தபடியே ஓர் விசாலமான மடமொன்று ஏற்படுத்தி அதில் அநேக சாதுக்கள் தங்கும்படியாகச் செய்ததன்றி தன் கொழுநனுக்கு யாதொரு விஷயத்திலுங் குறைவராமற் பாதுகாத்துக்கொண்டிருந்தாள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லுவார்.

துளசிதாசர் வைராக்கிய அத்தியாயம் முற்றிற்று.

---

ஆருவது

## துளசிதாசர் பூததரிசன அத்தியாயம்



ஓ சித்தர்களே! துளசிதாசர் அப்பிராமணோத்தமர் வீட்டில் பனிரெண்டு வருஷகாலமா யிருந்துக்கொண்டு பகவானைப் பிரார்த்தனை செய்யுங்காலத்தில் ஒருநாள் நாடோறும் போல் மலோபாதைக்குப்போய் மிகுந்த ஜலத்தால் வழக்கப்படி அங்கிருக்கும் ஓர் பெருத்த கல்லின்மேல் நின்று காலலம்பும்போது அக்கல்லிலிருந்து ஓர் பூதம் வெளிப்பட்டுத் துளசிதாசரைக்கும்

பிட்டு, "ஓ பிராமணோத்தமா! உமக்கு என்னவரம் வேண்டுமோ? கேளுந் தருகிறேன்" என்று உரைத்தது. அதற்குப் பாகவதன் நீயார்? என்று வினவினன். வெறி "ஓ வேதியரே! நான் இக் கல்லிலிருந்த பூதமாகும்; நீர் பனிரெண்டு வருஷங்களாய் எனக் குற்றசாபம் நீங்கும்படி நான்வாசமாயிருந்த இப்பாஷாணத்தின் மேல் உமது திவ்யசரணங்களை அலம்பிக்கொண்டே வந்தபடி யால் உம்மீது எனக்குக் கருணைவந்தது; உமக்கழகு சுந்தரமான கன்னிகைவேண்டுமா? இராஜரீகம் வேண்டுமா? சப்த சமுத்திரத் துக்கப்பாற் கொண்டுபோக வேண்டுமா? திரவியக் குவியல் வேண்டுமா? மாணிக்கங்கள் வேண்டுமா? எதுவேண்டுமோ சீக் கிரஞ் சொல்லுமையா" என்று பணிந்தன. துளசிதாசர் நகை த்து, "நீயா எனக்கு வரமும் பொருளுந் தருகிறவன்? கற்ப கத்தை நாடினவன் காஞ்சிரங்கொடியையும், காமதேனுவை இச் சித்தவன் கழுதையையும், சொர்க்கத்தை யாசித்தவன் நிறையத் தையும், விரதசீலனை பிரமசாரி வேசையையும், ஆசாரமுள்ள வன் விபசாரஞ்செய்யவும், கற்புடைய சதியானவள் பதிவஞ் சனை செய்யவும் வாஞ்சிப்பார்களா? அதுபோல ஸ்ரீமந்நாரா யணரை நாடின நான் நாய்க்குங் கீழ்மையுள்ள பேயான உன்னை ஆசரிப்பேனா? அன்றிப் பேரின்பத்தை அபேட்சித்தவன் சிற் றின்பத்தையும், அமிர்தத்தைக் கோரினவன் விஷத்தையும், பிர புத்துவத்தை வாஞ்சித்தவன் யாசகத்தையும் கோருவானா? அது போல மோக்ஷார்த்தத்தை விரும்பின நான் கொடுக்கிறேனெனப் பகர்ந்த அற்பபொருளுக்கு ஆசிப்பேனோ? போ போ! பயித்தி யம்பிடித்த பேயே! கடைகெட்ட நாயே" எனப் புகன்றார். பேயானது, "ஓ மாதவனே! என்மீது முனிவுகொள்ளவேண் டாம், உமக்கு ஸ்ரீமந்நாராயணன் சேவைதானே வேண்டும்; அவன் சேவை உனக்குக் கிடைக்கும்படியாகச் செய்கிறேன் என் பின் வா" என்று அழைத்தன. அரிபக்தன் சித்தினிவார்த்தை யைப் பத்தினியும், கற்பழிந்தவள் மாற்றத்தைக் கற்புள்ளவளும் அக்ஞானியின் மொழியைச் சுக்ஞானியும், பொய்யன் பேச்சை மெய்யனும், லோபியின் வாய்மையை தர்மியும்; கோளன் நீதி யைக் குணவானும், குரோதியினுக்தியை அவிரோதியும் கேட் பானா? அல்லது நம்புவானா? அதுபோல உன் உரையைக்கேட் கவுமாட்டேன், நம்பவுமாட்டேன், வீணாய் என் வற்புறுத்திப் பேசுகின்றனை, உன்காரியத்தைப்பார்த்துக்கொண்டுபோ, என்னை மறிக்கவேண்டாம், வீணான வார்த்தைகள் விரிக்கவேண்டாம்,

நான் அரியைத் தேடப்போகவேண்டும், வீணாகப் பொழுதைப் போக்கிவிட்டேன், ஆயுளை வீணாக்கிவிட்டேன்; துன்மார்க்கர் சேர்க்கை மிகவுங் கெட்டது. சீ சீ! என்னருகில்வராதே, எனச் செப்பினான். அலகையானது, "ஓ பிராமணோத்தமரே! சிறிய கண்ணினால் பெரியமலையைப்பார்ப்பதும், சிறிய ஒரு அக்கினிப் பொறியினால் மலையையொத்த பஞ்சுமூட்டைகளை யெரிப்பது போல அற்பமான என்னால் ஸ்ரீமந்நாராயணனைத் தரிசிப்பீர், இதில் எவ்வளவுஞ் சந்தேகமிராது. நான் பலவாறு உமக்குப் பகர்வதிற் பயனில்லை. இக்கணம் என்பின் வருவீரேல் எங்களுக்கு இறைவனாகிய வேதாளத்தினிடத்திற் கொண்டுபோகிறேன். அவரால் உமக்கு அரிதரிசனங் கிடைக்கும்" என்று அறைந்தது.

துளசிதாசர், "ஓ பூதமே! எனக்கு நாராயணனைக் காட்டுவது அபத்தமேயாம். பேயை நாடினவன் நாய்க்குச் சமானமாகும். நாய்க்கு வேண்டுவது பசையிலா எலும்பு. அதைப் போல உனக்கு இணையான துஷ்டதேவதைகளைப் பூஜித்துக் கனிஷ்ட வஸ்துக்கள்மேலிஷ்டமாகும் பிரஷ்டர்களை ஏமாற்றப் பலியை அபேட்சிப்பாயாக; என்னை மோசஞ்செய்ய நீ நேசித்தால் உன்னை விசுவாசிப்பேனா? ஸ்ரீமந்நாராயரைக்காட்டும் உபாயம் உனக்குத் தெரிந்திருந்தால் உனக்குற்ற பேய்த்தனத்தைத் தீர்த்துக்கொள்ளமாட்டாயா? பரமபதம் பெறமாட்டாயா? பயங்கர வுருவுடனிருப்பாயா? அசுத்தவிடத்தில் வாசஞ் செய்வாயா? போபோ" என்றார்,

பிசாசம் "ஓ அந்தணரே! அவரவர்கள்செய்த வினையை அவரவர்களல்லவோ அனுபவித்து நீக்கவேண்டும். இராஜன் அரண்மனைக்குப் போகும்வழி தெரிந்திருந்தாலும் குற்றமுள்ளவன் போகக்கூடுமா? மோட்சசாதன மறிந்திருந்தாலும் விஷயாபேக்ஷயுள்ளவன் அதைச் சாதிக்கக்கூடுமா? சமஸ்த நியாயங்களில் தெளிந்திருந்தாலும் திரவியவாஞ்சையுள்ளவன் நன்மார்க்கத்தில் நடுவுநிலைமையாகத் தீர்க்கக்கூடுமா? சகல நீதிகள் அறிந்திருந்தாலும் அநீதியுள்ளவன் நன்மார்க்கத்தில் நடக்கக்கூடுமா? வேதாந்தத்திற்றேர்ந்த நிபுணனானாலும் சமுசாரத்திற் சஞ்சலமற்றிருக்கக்கூடுமா? கற்பின் மேன்மையை எவ்வளவு விஸ்தரித்துரைத்தாலும் விபசாரி பதிவிரதத் தன்மையைக் காப்பாற்றக்கூடுமா? அதுபோலவே எனக்கு ஸ்ரீமந்நாராயணனைத் தரிசிக்கும்படியான உபாயந் தெரிந்திருந்தாலும் யான் முற்பிறப்பிற் செய்த குற்றத்தால் பகவானைச்சிந்திக்க நாணமாய்

இருக்கின்றது. உம்மால் இப்போது பரிசுத்தமாகினேன். இனி மேலானபதவிக்கும் போகின்றேன்" என்றார். துளசிதாசன் "ஓ கிருத்திமமே! முற்பிறப்பிற்செய்த குற்றமென்ன? பேயானவயனை மென்ன? என்னுல் நீ புனிதமான காரணமென்ன? தெரியப் படுத்து'' என்று வினவினர். குணபாசி "ஓ விப்பிரனே! நான் இந்த வீட்டுக்குடையேனுகிய பிராமணனுடைய மனையாளாகும்; நான் என் எவ்வர்னகாலத்தில் அதிககாமக்குணமுடையவளாய்க் கணவனைச் சட்டைசெய்யாமல் மோகத்தால் கண்ணுக்கு இனிய புருஷர்களைப் புணர்ந்து, பதிக்கும் பகவானுக்கும் பயப்படாமல், பதிவிரதைகட்குரிய நீதிக் குட்படாமல், மானவீனமாகுமென்று உணராமல், பாமரமனதைச் செயிக்காமல் அற்பமான விஷயானந்தத்தைக் கருதி, உழன்றுக்கொண்டிருந்தேன். இதனுல் என் கொழுனன் அன்புடன் என்னை யழைத்து அருகிலிருத்திக்கொண்டு, "ஓ பெண்ணே! உன்னுடைய கொடிய செய்கையானது என்னை வெளியிற் போகாலும் ஒருவனுடன் பேசாமலும் செய்தது. அன்றிச் சகலரும் கெக்கலிகொட்டி நகைக்கும்படியாயுமாய் விட்டன. எல்லாவற்றிலும் விபசாரங் கெட்டது. என்மீதுனக்கு அன்பு இருக்குமாயின் இனிமேலாவது நற்குண நற்செய்கை யுடையவளாய்ப் பகவானுக்குப் பயந்து நயந்து இல்லறதர்மம் நடாத்து. இல்லையெனில், என் வீட்டைவிட்டு உனக்கு இஷ்டமான விடத்திற் போயிரு. ஏனெனில் காலையிலெழுந்து விபசாரியின் வதனத்தைப்பார்ப்பவனுக்கு வேசரியின்குணம்நேரிடுமென்றும், பதிவிரதா பங்கமானவளிருக்கும் வீடு பரத்தையர்வீட்டிலும் இழிவானதென்றும், கற்பழிந்தவளுடன் கூடியிருப்பவனுக்குக் கர்மம் பலிதமாகுமென்றும், விபசாரியினுல் அப்பரம்பரையின் விர்த்தி நாசமடையுமென்றும் பதியை வஞ்சிப்பவள் பரம்பரைக்குக் குற்றமுண்டாகுமென்றும், விபசாரி வேசைக்குங் கீழ்மையானவளென்றும், விபசாரியின்பால் கொலை - களவு - கள் - காமம்-பொய்-நிந்தை-வெறுப்பு - அருவருப்பு-சஞ்சலம்-வாது-சூது-தாரித்திரம்-நோய்-வஞ்சனை-நாணமின்மை - மூதேவி முதலானவைகள் குடியிருக்குமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. அன்றி மானமில்லா மங்கையுடன் இங்கிதமாயிருந்து ஈனமடைவதைப் பார்க்கிலும், கானகமடைந்து பகவத்தியானத்தால் ஞானியாகி மோனமாயிருப்பதே உத்தமமல்லவோ. நீ இம்மனையைவிடுத்து ஏகுவையாகில் நான் சகலபற்றுக்களுமற்ற நற்றுறவியேயாம். இனி மானத்துடன் இல்லறஞ் செய்கின்ருயா? ஈனத்து

டன் பிறர்மனைக்கேகின்றாயா" எனக்கேட்டார். அப்படி கேட்கும் பதிக்கு வந்தனஞ்செய்து நான் உரைத்ததாவது 'இனி எனக்கு மதிவந்தது; பதிவிரதத் தன்மையைக் காக்கின்றேன்' என்று சாற்றினேன். அதற்குமணாளன் களித்து,"நீஇன்றுடன் வீட்டை விட்டு என் ஆக்கினையைக்கடந்து பிறர்மனைக்குஏகாதே; ஆடவர் முன்போகாதே; நாணமின்றிப் பேசாதே; என்னை யேசாதே; தெருக்களிற்போய் நிற்காதே; சூதுவார்த்தைகள் கற்காதே எனப் பல நீதிகளுரைத்துத் தெய்வமும் ஜலமும் அரனும் ஆசானும் மூன்றுபிழை பொறுப்பதுபோல் நானும் உன் துர்நடத்தை நீங்கப் பலதரங் கோபக்குறி காட்டினேன்; ஜாடைவார்த்தைகளால் வாட்டினேன்; ஒரு சாக்கிட்டுப் பல கடுஞ்சொற்களால் மாட்டினேன்; இன்றைக்கு வாய்திறந்து என் அபிப்பிராயத்தை நிலை நாட்டினேன்; இனிமேல் குற்றஞ்செய்வாயாயின் சற்றும் பொறுக்கமாட்டேன்" என்று உறுதிகூறி, என்னைப் புறம்போகாமலும், ஆடவருடன் பேசாமலும், கட்டுதிட்டஞ் செய்து அன்புடன் வைத்துக்கொண்டிருந்தார். அப்படி யிருக்குங்காலத்தில் நான் சிலநாள் என்மணாளன் போதித்த நீதியிலிருந்து பின்பு தவிர்ந்து என்கொழுநன் குட்சியினிமித்தம் பிச்சைக்குப்போய் வருவதற்குள் தாதிகளால் எனக்கு இஷ்டமான புருஷனை அழைப்பித்து என் இச்சையை நிறைவேற்றிக்கொண்டு என் நாயகன் வந்ததே வெகு நன்னடத்தையும் ஒடுக்கமும் அடக்கமுமுள்ளவளைப்போல் அபிநயித்துப் பதிவஞ்சகஞ் செய்துக்கொண்டிருந்தேன். அவ்வாறிருக்கிற நாளில், ஒருநாள் நானும் என் கள்ள புருஷனும்கூடிக் குலாவிக்கொண்டிருக்கும்வேளையில் என் காந்தன் வந்துபார்த்து மிகவும் வெகுண்டு, "ஓ காமப்பேயே! நீபேயாய்ப்போகக்கடவது" என்றுசபித்து வாட்டத்துடன் காட்டை நோக்கிப் போகையில் நான் அதிதுரிதமாயோடி என் காதலனை மறித்துப் பாதங்களில் வீழ்ந்து "எனக்கிட்ட சாப நிவர்த்திக்கு ஓர் உபாயஞ் செய்யாமல் முனிவுடன் போகலாமோ? யான் செய்த தீவினையால் பாவியாய்ப் பைசாசமானேன்; நிறையத் துக்காளாய்ப் போனேன்" என்று முறையிட்டழுதேன். அவ்வாறு நான் அழும்போது சாந்தகுணமுள்ள என் காதலன் கோபந்தணிந்து, "ஐயோ! கோபஞ் சண்டாளமென்கிற பாபத்தாற் சாபமிட்டேனே; ஆகெட்டேனே;" என்று அறைந்து வியாகுலமடைந்து, "ஓ பெண்ணே! உன்னுடைய தீமையே எனக்குக் கோபம்வரும்படிசெய்தது; என் தவமெல்லாம் பாழா

கப்போகச்செய்தது; அடி பேதையே! அறிவிலாக் கோதையே! நீ இக்கங்கையிற் குதித்து இறந்து பேயுருவாகி நமது வீட்டிலிருக்கும் பெருங்கல்லில் தங்கியிருந்து நல்லோர் பாதநீரிற் ஸ்நானஞ்செய்து பாதபரிசத்துக்குப் பாத்திரமாய்ப் பன்னிரண்டாண்டு இருப்பாயாகின், உனக்குற்ற சாபநிவர்த்தியாகும்'' என்று உரைத்துக் காட்டை நாடிப்போகாமல் நாட்டையடைந்து வீட்டிற் பிரவேசித்து என் சாபநிவர்த்திக்கு ஏது செய்யக் கருத்தைக்கொண்டார்.

நானே தலையிற்பட்டாற் ருழ்வாரென்பது போலவும், கண் கெட்டபின் சூரியநமஸ்காரஞ்செய்ய வாரம்பித்தது போலவும், என் பதியின் பதங்களையும் மதியிற் பதித்துத் துதித்துக் கங்கையிற் குதித்துப் பேயுருவாகி இக்கல்லிற் பிரவேசித்து சாபநிவர்த்தியை ஆசித்திருக்க, என் காவலன் இவ்வீட்டைச் சாதுக்களுக்குரிய பொதுமடமாக்கி, அநேக சாதுக்களைச் சேர்த்து இக்கல்லின்மீது காலலம்பும்படியாகச் செய்தார். மகாத்மாவாகிய நீர் 30-வருஷங்களாய் இக்கல்லிலிருந்த என்னைப் பனிரெண்டு வருடம் இங்கிருந்து காலலம்பிப் பாதபரிசமும் எனக்குக் கொடுத்ததால் எனக்குற்ற சாபநிவர்த்தியாய்ப் புண்ணிய லோகத்துக்குப் போகின்றேன். இவ்வளவு உபசாரஞ்செய்த உமக்கு ஓர் சகாயஞ் செய்யாமற்போக மனம் வாராமையால் உம்மை வருந்தி என்பின் வரும்படி வேண்டுகிறேன்; தடையில்லாமல் வாருமையா ''என்று அழைத்தன. துளசிதாசர் இது பூதமாய் இருந்தும் அநேக நீதி வாக்கியங்கள்உரைத்தது;நமக்கு யாராலாவது பகவான்தரிசனங் கிடைத்தால் போதும்; ஜன்மத்தினுலும் அவயவப்பழுதினுலும் ஒருவனை யிகழலாகாது; குணத்தைப்பார்த்தே நிக்கிரகிக்கவேண்டும். அன்றி தசரதமகாராஜனுக்குற்ற புத்திரபாக்கியம் ஓர்பூதம் ஏந்திக்கொண்டுவந்த பாயாசத்தினுலல்லவோ நீங்கிற்று என்று யோசித்தார். பின்பு "ஓ மண்ணையே! வேதாளத்தினிடம் போகலாம் வா'' என்று அழைத்தார். உடனே அக்குணுங்கானது அரிதாசனையழைத்துக்கொண்டு வேதாளமிருக்கும் ஓர்காட்டிற் பிரவேசித்து வேதாளத்தைத் தோத்திரஞ் செய்தது. அது "ஓ குணபாசியே! என்னை ஏன் துதிக்கின்ருய்? உனக்குற்ற குறையேது?'' என்றது. பிரேதம் "ஓ ராஜபூதமே! என்னைப் பவித்திரமாக்கிய இவ்விப்பிரருக்கு உன் தரிசனந் தந்து ஸ்ரீமந் நாராயணனைத் தரிசிக்கும்படியான உபாயஞ் சொல்லவேண்டும்"

என்று கேட்டுக்கொண்டன. அதற்கு அந்தச்சோகு என்னுல் அனுமாரைக்காட்டிக்கொடுக்கும்படியான சக்தியுண்டு, அன்றிப் பகவானைத் தரிசிக்கும்படியான உபாயஞ் சொல்ல என்னுற் கூடாது; இது மாருதியாலாகும். ஆனாலும் அவ்வாஞ்சநேயர் தரிசனம் தவத்திற் சிறந்த புண்ணியவான்களுக்கே கிடைக்கும். ஆதலால் அனுமாரைச் சேவிக்கும்படியான தவம் இவ்வேதியர் செய்திருக்கின்றாரா? எனக்கேட்டன. அதற்கு சோகு "ஓ இறைவனே! இவர் பனிரெண்டாண்டாய் அரிதான தவஞ்செய்துக் கொண்டிருக்கிறார். இதுசத்தியம்" என்று சொல்லிற்று. கழுகு அப்படியாவென்று துளசிதாசர்முன் பிரசன்னமாய்ப் பணிந்து "ஓ பூசுரரே! பெண்ணாசையால் அலையும் பேயருக்கும், மண்ணாசையால் உழலும் மாந்தருக்கும், பொன்னாசையாற்றிரியும் புருடருக்கும், அஞ்சனைகுமாரன் தரிசனங் கிடைக்கமாட்டாது; இம்மூன்றையும் அகற்றினவரோ" என்று கேட்டது.

துளசிதாசர் "ஓ மருளே! மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை உலகாசை தேகாசை முதலானவைகளும் நீங்கி துவாதச வருஷங்களுக்கு மேலாய்விட்டது. இப்பனிரெண்டாண்டாய்ப் பகவான் ஆசையே பெரிதாய்விட்டது. இது அப்பகவானுக்கே தெரியும்" என்றார். சோகு சந்தோஷத்துடன் "ஓ சுவாமி! இக்காசியில் அசியென்னும் வீதியில் ஓர் புராணிகர் வால்மீகரால் உண்டாக்கப்பட்ட இராமாயணத்துக்கெல்லாம் ஞானார்த்தமே செய்துக்கொண்டு வருகிறார்; அவர் சொல்லும் வாக்கியங்கள் பரமானந்தத்தைத் தருதலால், அதைச்சிரவணஞ்செய்ய அனுமார் ஓர் பிராமணரூபமாய் வருகிறார்; அவ்விடத்தில் அனுமாரைத்தரிசிக்கலாம்" என்றார். அதற்குத் துளசிதாசர் நகைத்து நவவியாகரண பண்டிதராகியும், அறுபத்துநான்கு சித்திகளில் வல்லவராகியும், வேதாந்தத்தெளிவில் நிபுணராகியும் விளங்காநின்ற ஆஞ்சநேயர் ஓர் மறையோன் சொல்லும் ராமாயணத்தைக் கேட்கவருவாரா? மித்தையான வார்த்தையைச் சொல்லவந்தாய்; 'பேயை நாடினவன் நாய்க்குச்சமானம்' என்கிற பழமொழியை நிலைநிறுத்தினாய்" என்று அறைந்தார். பூதாதிபன் வணங்கி "ஓ புண்ணியவானே! எவ்விடத்திற் சாதுக்கள் கூடிப் பகவானுக்குப் பிரீதியான வசனங்களைப் பேசுகின்றார்களோ அவ்விடத்தில் ஸ்ரீமந் நாராயணனே மாறுரூபங்கொண்டு வந்திருப்பாரென்பது பொய்யா? மெய்யா? காரணந்தெரியாமல் கோபிப்பது நீதியா? நான் ஒருபோதும்

பொய்சொல்லமாட்டேன்; நீர் பகவானைத் தரிசிக்கும்பொருட்டுப் பூண்டவிரதம் உன்னுமிடத்தில் மிகவும் விந்தையாயிருக்கின்றது; அகத்தியம் இன்னும் இரண்டுமூன்றுநாளிற் பகவானைத் தரிசிப்பீர்; பாதங்களைப் பரிசிப்பீர்" என்று உரைத்தார். அவ்வாக்கியத்தைக்கேட்ட துளசிதாசர் பகவானைத் தரிசித்தது போலவே புளகாங்கமடைந்து, மயிர்க்குச்செறிந்து ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்து 'ஓ வியந்தரமே! பலமறையோர் வருமிடத்தில் அனுமாரைக்கண்டு பிடிப்பது எப்படி?" என்றார். அதற்கு அறிவழி, "ஓ மாதவனே! அனுமார் நாடோறும் எல்லாப் பூசுராருக்கு முன்வருவதும், பாராயணம் முடிந்தபின் எல்லோருக்கும் பின்போவதும் வழக்கம். அன்றி தாரகமந்திரம் பலர்கேட்கப் பலதரம் சொல்வதன்றி ஆனந்தமேலீட்டால் நடக்கும்போது தங்கித்தங்கி நடப்பார். இதுவே அவரைக் கண்டுபிடிக்கும் அடையாளம் என்று உரைத்துத் துளசிதாசருக்கு வந்தனம்புரிந்து இரண்டுபேய்களும் மறைந்துவிட்டது. கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னுஞ் சொல்லுவார்.

துளசிதாசர் பூததரிசன அத்தியாயம் முற்றிற்று.

---

ஏழாவது

## துளசிதாசருக்கு அனுமார் தரிசனந்தந்த அத்தியாயம்



கேளுங்கள் சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் சொல்லுவார்: அலகைகளிரண்டும் மறைந்தபின் துளசிதாசர் மாலைபரியந்தம் மாதவனைத் தேடித்திரிந்து சூரியாஸ்தமாகும் தருணத்தில், பாராயணமாகும் வீட்டுக்கெதிரில் இருந்துக்கொண்டு அனுமார் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அத்தருவாயில் அனுமார் யதாப்பிரகாரம் ஓர் விருத்தப்பிராமணர்போல் வேதாளஞ் சொன்ன குறிகளுடன்வர, அவரைக்கண்ட துளசிதாசர் வேதாளமுரைத்தது மெய்யென்று நம்பி, அவ்வேதியனை வலம்வந்து பணிந்து, "ஓ சுவாமி! நீர் எவ்வீதியி லிருக்கிறவர்?" என்று வினவினர். அதற்கு அனுமார் மாறுத்தரஞ் சொல்லாது பாராயணம் நடக்கும் வீட்டுக்குட் பிரவேசித்தார். துளசிதாசர் பாராயணமாகுமட்டும் காத்திருந்து எல்லா வேதியர்க்கும்

பின்போகும் அந்தணரை மறித்து, "ஓ சுவாமி! உம்மை நோக்கின் மிகவும் புண்ணியபுருஷராகத்தோன்றுகின்றது. ஆதலால் உம் இருப்பிடத்துக்கு அடியேனும் வருகிறேன்" என்று பணிந்தார். ஆஞ்சநேயர், "என்னிருப்பிடம் வெகுதூரம்; அன்றி நான் தனித்திருக்கிறவன்; ஒருவனுடைய சங்கஞ் செய்வதேயில்லை" என்றார். அரிதாஸர், "ஓ மாதவனே! உமதிடம் அனுக்கிரகம் பெற்றுக்கொள்ள வாஞ்சித்தேன், ஆதலால் என்னைக் கருணையுடன் உமது ஆசிர்மத்துக்கு அழைத்துக்கொண்டு போமையா" என்று வணங்கினான். இராகவதூதன், "நான் ஏழைப்பிராமணன்; எனக்கு ஏன் வந்தனஞ் செய்கிறாய்? அல்லாமல் எனக்கு ஓர் மந்திரமுந் தெரியாது; இப்புராணிகர் மகாக்ஞானவான்; அனேகருக்கு உபதேசஞ் செய்கிறார்; அவரை யடுத்தாயானால் உன்னிஷ்டப்படி நடக்கும்" என்று அறைந்து பிராமணக்கூட்டத்திற் புகுந்து மறைந்துபோனார்.

உடனே அரிபக்தன் மறையோர் கணத்திற் புகுந்து ஒவ்வொருவராய்ப் பார்த்துக்கொண்டேவர, அந்தணர்கள் என்னடா மூடனாயிருக்கின்றாய்? எல்லாரையும் மறித்து மறித்து முகத்தை யுன்னியுன்னிப் பார்த்துக்கொண்டே வருகிறாயென்று வாயில்வந்தபடி பேசத்தொடங்கினார்கள். துளசிதாசர் அவர் உரைக்கும் ஈனமொழிகளைக் காதுகொடுத்துக் கேட்காமல் எல்லாரையும் பார்த்தும் விருத்தரைக் காணாமையால், அம் முதுமறையோன் அனுமாரேயாமென நிச்சயித்துக்கொண்டு, மறுநாள் அந்திவேளைவந்து அனுமார் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அனுமார் வழக்கப்படியேவந்து துளசிதாசரைப்பார்த்து, "அடா! இவன் இன்றைக்கு இவ்விடத்தில்எமனைப் போலக் காத்துக்கொண்டிருக்கிறான்" என்று வதனத்தைக்காட்டாமல் அப்பக்கமாகத் திரும்பிக்கொண்டு அதிதுரிதமாய்ப்புராணிகர் வீட்டுக்குட் புகப்போனார். துளசிதாசர் இதோ நம்மைப் பார்க்காமல் அதோபோகின்ற அந்தணரே அனுமாரென்று அவாருகிற்சென்று, பாதங்களைப் பிடித்துக்கொண்டு "ஓ சுவாமி! நீர் நேற்று மோசஞ்செய்து பிராமணக் கூட்டத்திற் புகுந்து மாயமாய்ப் போய்விட்டதுபோல இன்றைக்குப் போகின்றதைப் பார்க்கின்றேன்" என்று அசையாமல் நிறுத்திவிட்டார். அதற்கு அஞ்சனைப்புதல்வன் முனிவுகொண்டு "அடா மூடா! புராணங் கேட்கப்போகும் என்னை ஏன் மறித்து வருத்துகிறாய்? என் அடிகளை விட்டுவிடு; நான் உனக்கு உபதேசஞ்செய்ய ஏதாவது ஓர்

மந்திரம் இப்புராணிகரிடங் கற்றுக்கொண்டு வருகிறேன்" என்ருர். அரிதாசர் "ஓ சுவாமி! நீர் யார்? எவ்விடத்தில் இருக்கிறவர்? உமது பெயரென்ன? பகவானறிய உண்மையைச் சொல்லுமையா"? என்று வருந்திக் கேட்டார். அனுமார் அடா! இதென்ன வல்லடி வழக்காயிருக்கின்றது. நான் யாரானுல் உனக்கென்ன? உனக்கும் எனக்கும் ஏதாவது ஓர் சம்பந்தமிருந்தாலல்லவோ இப்படி கேட்கவேண்டும். நடுக்கொள்ளைக்காரன்போல் இரண்டு நாளாய் இவ்விடத்தி லிருந்துக்கொண்டு தொந்தரவு செய்கிருய்; சீ போ" என்று கடினவார்த்தைகளாடினுர், பாகவதன் உம்முடைய எதார்த்தத்தை நான் அறிந்துக்கொள்ளுகிற பரியந்தம் விடமாட்டேனென்று பலாத்காரஞ் செய்தார்.

அனுமார் கோபித்துக் கால்களைத் திமிறிப் பிடுங்கிக்கொண்டு, மிகவும் பதைத்துத் தூரமாகக் குதித்து மனங்கொதித்து, "நான் புராணங் கேட்கப்போவதைத் தடுக்கிருயா? சலத்தைக் தொடுக்கிருயா? என் விரதத்தைக் கெடுக்கிருயா? துன்பத்தைக் கொடுக்கிருயா? பலவந்தமா யடுக்கிருயா? இனி இப்படி செய்வையாயின் வாயில்வந்தபடி திட்டிவிடுவேன்; பற்களைத் தட்டிவிடுவேன்; தலையிற் குட்டிவிடுவேன்; துண்டாக வெட்டிவிடுவேன்" என்றுரைத்தார். உடனே புராணிகர் வீட்டுக்குட் போய் விட்டார். துளசிதாசர் இவர் அனுமாரே யாமென நிச்சயித்துக் கொண்டு பாராயணங் கேட்டுவரும்போது தொடர்ந்து உண்மை யறிந்துக்கொள்ளலாமென்று ஆஞ்சநேயர் வரவைப் பார்த்துக் கொண்டு இருந்தார். மாருதி புராணபாராயணம் முடிந்ததும், மறையோரெல்லாம் போனபின்பும் வெகுநேரமிருந்து துளசிதாச னிருக்கின்ருனே? இல்லையோவென்று எட்டிப்பார்த்தார். பரமபாகவதன் "வாரும் சுவாமி! நான் வெகுநேரமாய் உமது வரவுக்கு எதிர்நோக்குற்றிருக்கிறேன்" என்று புராணிகர் வீட்டுக்குட்புகுந்தார். அனுமார் "ஓ ஓ! இவன் சூதறிந்த கள்ளனுயிருக்கின்ருன்; இவ்விடத்தில் என்ன விபரீதஞ்செய்வானே" என வெளிப்பட்டு மாயமாய் மறைந்தார். துளசிதாசர் பலபக்கங்களிற் றேடிப்பார்த்துக் காணுக்குறையால் நல்லதாகட்டும், நாளைக்கு ஓர்மார்க்கம் ஏற்படுத்திக் கொள்ளுகிறேனென்று அறைந்து தன்னிருப்பிடஞ்சேர்ந்து, மறுநாள் மாலையில் அங்கு வந்திருந்தார். அனுமார் நேர்வழியிற் சென்ருல் துளசிதாசர் வம்புசெய்வாரென்று மாயமாய்ப் புராணிகர் வீட்டிற் பிரவேசித்து இராமாயணத்தை அன்புடன் கேட்டுக்கொண்டிருந்தார்.

அரிபக்தன் வெகுநேரங் காத்திருந்தும் விருத்தப்பிராமணர் வரக் காணுமையால் வியாகுலத்துடன் புராணிகர் வீட்டில் எட்டிப்பார்த்து முதுமறையோர் இருக்கக்கண்டு ஆனந்தங் கொண்டு அவரருகிற் சென்று, சுவாமியெனப் புகன்று வந்தனஞ்செய்து, "ஓ சுவாமி! நேற்று எந்தவழியாய்ப் போனீர்? இன்று எவ்வழியாக வந்தீர்? கருணையுடன் சொல்லுமையா?" எனப் பணிந்தார்.

அதற்கு அனுமார் அடடா! இவன் உள்ளேயும் வந்துவிட்டானே யென்று உடல்நெளிந்து முகஞ்சுளித்து கண்வெறித்து மனங்கொதித்து மிகப்பதைத்து தலையையசைத்து முழங்கையா லிடித்து, துளசிதாசருக்கு முதுகைக்காட்டி; துளசிதாசரைப் பார்க்காமலும் மாறுத்தாஞ் சொல்லாமலும் கண்களை மூடிக் கொண்டு ஸ்ரீராமகாதையை சிரவணஞ் செய்துக்கொண்டிருந்தார்; பாகவதன் அனுமார் காதருகிற் றலையைச்சாய்த்து, "ஓ சுவாமி! அடியேன்மீது இவ்வளவு வெறுப்பேன்? அருவருப்பேன்? சற்றே கண்களைத்திறந்து முனிவைத் துறந்து சொல்லலாகாதோ?" என்ருர்.

மாருதி சிரவணத்துக்கு விரோதம் வருகிறதெனக் குரோதங்கொண்டு மௌனமாகவே யிருந்தார். துளசிதாசர் முன்போலவே பலதரங்கேட்டார். அனுமார் "அடடா முட்டாளே! பக்தியுடன் இராமாயணத்தைக் கேட்கும்போது முணமுணென்று என்னென்னமோ உளறிக்கொண்டிருக்கின்ருய்? எட்டப் போய் உட்காரும் பிள்ளாய்" என்ருர். துளசிதாசர் "எளியேன் எட்டப்போனுல் நீர் பொட்டெனப் போய்விடுவீர். உம்மை விட்டுப் பிரியாமல் கிட்டவேயிருப்பேன்" என்று உரைத்தார். ஆஞ்சநேயர் இதென்னடா சள்ளையாயிருக்கின்றது; கொள்ளப் போனவிடத்திற் பிள்ளையைப் பறிகொடுத்தால்போல இக்கள்ளனிடம் அகப்பட்டுக்கொண்டு வெள்ளறிவனுனே மெனச் சள்ளென்று விழுந்து கிழே தள்ளி யெழுந்து வேறிடத்திற் போயிருந்தார். அரிதாசர் சாயைப்போல கூடவே தொடர்ந்து அவரருகில் வீற்றிருந்து ஏழையின்மீது இவ்வளவு கோபமேனையாவென்று முன்போலவே எந்த வழியாக வந்தீர்? எனக் கேட்கத் தொடங்கினர். இராகவதூதன், அடா! இதென்ன கோரமாயிருக்கின்றது; நான்எந்தவழியாவது வருகிறேன்; எம்மார்க்கமாயாவது போகிறேன்; இதைக்குறித்து நீயாரடா கேட்கிறவன்? சிரவணத்தை மீட்கிறவன்; எட்டிக்கிணை

யான மட்டிப்பயலே யென்றறைந்து இராமாயணங் கேட்பதில் சித்தத்தை வைத்திருந்தார்.

அரிதாசர் "ஓ ஸ்வாமி! இன்றைக்காவது கருணைகூர்ந்து ஆட்கொள்ளும்; நேற்றைப்போல் காற்ருய் மறைந்து போக வேண்டாம்" எனப் பலதரங் கெஞ்சத்தொடங்கினர். அனுமார் என்னடா முழுமூடனு யிருக்கின்ருய்; வஞ்சியர்பால் கொஞ்சுவது போற் கெஞ்சுகிருய்; அன்புடன்கேட்டு இன்பமடையும் வேளை யில் தென்புடையவனுப்த் துன்பங் கொடுத்துக் கொண்டிருக்கி ருய்; எலும்புகள் முறிய முன்போலுதைத்துப் பின்பாவது கேட் கட்டுமா?" என்று எழுந்து வேறிடத்தில் உட்கார்ந்தார். அரிதா சர் கூடவே தொடர்ந்து அவரருகில் உட்கார்ந்து, "ஓ ஸ்வாமி! நிஷ்காமி! முனிவுகொள்ள வேண்டாம்; நீர் அனுமார் என்ப திற் சந்தேகமேயில்லை. அடியேன்பன்னிரெண்டாண்டாகப் பக வானைக் காணும்பொருட்டு அவாக்கொண்டிருக்கிறேன். ஆத லால் அப்பராத்பரனுடைய தரிசனம் எனக்குக் கிடைக்கும்படி யாகக் கருணை கூறல்வேண்டும்" என்று மிகவும் பிரார்த்தித்தார். அனுமார் அடடா! இதென்ன கர்மமாயிருக்கின்றது; இவனு க்கு எத்தனைவிதங்களா யுரைத்தபோதிலும் கேட்காமல் சளசள வளவளவென்று ஓயாமல் என்னென்னமோ பிதற்றிக்கொண் டிருக்கிருன். ராமராம! இதற்கு நான் என்னசெய்யட்டும்" என வாட்டமுற்ருர். அரிபக்தன் "ஓ சுவாமி! இப்போது தாங்கள் துதித்தது எந்த மகானுபாவரையோ அவரையே யான் காணும் பொருட்டு அதிக அவாக்கொண்டிருக்கிறேன். அவருடைய தரி சனம் எனக்குக் கிடைக்கும்படியாய் செய்வீரேல் உம்மை என்னு யுட்பரியந்தம் மறக்கவேமாட்டேன்" எனச் சத்தியஞ்செய்தார். அதற்கு ஆஞ்சநேயர் "அடேயப்பா! உனக்கு வந்தனமாவது செய்கிறேன்; சற்றுநேரம் பேசாமலிரு; பாராயண முடிந்தபின் கூசாமற் பலவார்த்தைகள் பேசலாம்" என்ருர். துளசிதாசர் வந் தனஞ்செய்து, "ஓ மகானுபாவா! சத்தியநாவா! நீரே இராமா யணத்துக்கு ஆதிகாரணராயிருந்தும் ஒருவர் சொல்லக் கேட்க வும் வேண்டுமோ!" எனக் கேட்டார். அவ்வாக்கியத்தைக் கேட்ட வாயுகுமாரன் பிரமித்து, "ஓஓ! இவன் நமது மர்மமெல் லாம் அறிந்த பிர்மதேவனைப்போல் பேசுகின்ருன்; ஒருவேளை இச்சபையில் உள்ளோர்க்கு நாம் அனுமானெனத் தெரிந்தால் இவனைப்போலவே நமக்கு வேஷ்டையுண்டாக்குவார்கள். இவ னுக்கு எவ்வித உபாயஞ் சொல்லி தப்பித்துக்கொள்ளலாம்"

என்கிற யோசனைகளோடு கூடியிருந்து மறுமொழியுரைக்காமல் புராணம் முடிந்தபின் பிராமணக் கூட்டத்திற் புகுந்து மாய மாக மறைந்தருளினர்.

உடனே அரிதாசன் அந்தணர்கணத்தில்புகுந்து ஓடி வாயி லின் மத்தியில் நின்றுக்கொண்டு ஒவ்வொருவருடைய வதன த்தை யுன்னிப்பார்த்து நீரல்ல நீரல்லவென்று உரைக்கும் போது, ஆதிவருணர் முடிவுகொண்டு தூஷண வார்த்தைகள் விண்டு, "இவனென்ன சுங்கக்காரனைப்போல் தடுத்து எல்லா ரையும் சோதனைசெய்து விட்டுக்கொண்டிருக்கிறுன். இவன் கன்னத்தில் அறைந்து மென்னியைப் பிடித்துத் தள்ளிவிடுங் கள். நகங்களாற் பீறிக் கிள்ளிவிடுங்கள். ஆளுக்கோர் உதை கொடுங்கள். பஸ்பமாய்ப்போகச் சாபமிடுங்கள்; நெருக்கிக் கட்டிக்கொண்டுபோய் சூலத்தில் நடுங்கள்" என்று உரைத்தார். அம்மொழிகளை அரிபக்தன் செவிகொடுத்துக் கேட்காமல் அனு மாரைக் காணவேண்டுமென்னு மவாவால் திரமுள்ள வீரனுய், ஒருவரையன்றி இருவரை விடாமல் அனுமாரை நாடிக் காணு மல் வாடி விரைவாயோடி பல பக்கங்களிற்றேடி எல்லாருடைய கண்களையும் மூடி எத்திசை போனுரோடி எனப் பலவார்த்தைக ளாடித் தன்னிருப்பிடம் வந்து மிகவும் நொந்து துக்காக்கினி யால் வெந்து நாளைக்குக் கட்டிப்பிடிக்கிறேன்" என்று வந்து மறுநாள் அந்திவேளையிற் போய்க் காத்துக்கொண்டிருந்தார். அப்போது அனுமார் எப்போதும்போல் புராணிகர் வீட்டுக் குள் வந்து ராமாயணத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். துளசி தாசர் ஓர்புறத்தில் வெகுநேரங் காத்துக்கொண்டிருந்து, பின்பு பாராயணச்சபையிற் புகுந்து விருத்த விப்பிரரைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து, "ஓ மாயா விநோதனே! உம்மைக் கண்டு பிடிக்க என்னுலாகுமோ? உம்மாலன்றிப் பிறரால் என்றுயர் போகுமோ? கருணைகூர்ந்து இன்றையதினமாவது ஸ்ரீராமரு டைய தரிசனம் அடியேன் பெறும்படியாகச் செய்யவேண்டும் என் கர்த்தனே" என்று அவர் தாள்களில் வீழ்ந்து என்னை ஆட் கொள்ளவேண்டும் எனத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர்.

மாருதி "அடா மட்டிப் பிராமணு! கொடாக்கண்டனை விடாக்கண்டன் பிடித்தாற்போல என்பின் தொடர்ந்தாய். ஸ்ரீ ராமர் வைகுந்தத்திலிருக்கிறுர். நீ அவர்மீது அதிகபக்தியுடைய வனுமிருப்பது மெய்யானுல் வைகுந்தத்திற்போய்ப் பார்த்துவா; இவ்விடத்தில் ஸ்ரீராமர் எங்கிருக்கிறுர்? உனக்குச் சமித்தியம்

மேலிட்டுப் பயித்தியம் பிடித்திருக்கின்றது. இது தீர வயித்திய ரிடத்திற்போ? என்னருகில் வரவேண்டாம். ஒருவார்த்தையும் பேசவேண்டாம். எதிரிலும் நிற்கவேண்டாம். போ போ'' என்று உரைத்தார். துளசிதாசர், "ஓ என் சற்குரு நாதனே! மெய்ஞ்ஞானபோதனே! உமது கருணையினால் வைகுந்தத்திற் குப்போய் ஸ்ரீமகாவிஷ்ணுவையும் பார்த்து வருவேன். இது ஓர் பெரிய காரியமா? வைகுந்தம் கைலாயம் நிடதகிரி இமயகிரி முதலானதுகளைத் தாண்டிப்போய்ப் பூமியில் ஆயிரம்யோசனை தூரம்பதிந்தும், விண்ணில் ஆயிரம்யோசனைதூரம் உயர்ந்தும் மிகவும் விசாலம்பொருந்தியுமிருக்கும் சஞ்சீவிபர்வதத்தை ஓர் கரத்தில் தாங்கிக்கொண்டு ஓர்கணத்தில் வந்து, இராம லட்சும ணுதியரைக் காத்த வீராதிவீரன் நீயல்லவா? இப்பேர்க்கொத்த அதிசூரனாகிய உம்மை யடைக்கலம் புகுந்த எனக்கு ஓர் குறையு முள்ளதோ?" என்று தும்தும் எனக் குதித்துக் கூத்தாடினார்; பல சங்கீர்த்தனங்களைப்பாடினார்; அப்போது அஞ்சனைகுமாரன் "அடா! ஏன் துள்ளிக்குதிக்கிறாய்; வேண்டாம் வேண்டாம்; நீ கற்ற சஷ்டகல்வியையும் புஷ்டிபலத்தையும் துஷ்டகுணத்தை யும் பிரஷ்டத்தனத்தையும் என்னிடந்தானா காட்டவந்தாய். ஜம்பத்தை நீட்டவந்தாய். போதும்போதும். இனி இவ்விடத்தி லிருந்து எழுந்து சட்டமாய் வெளியிற்போய் உன்னைப்போன்ற வர்களிடம் உன் சிரேஷ்டத்தைக் காட்டு" என்று கடுகடுத்து உரைத்தார். துளசிதாசர் "ஓ மாதவனே! இனி உம்மைவிட்டு நான் உயிருடன் பிரிவேனோ? நீர் மிகவும் பூததயாளமுடைய வரா யிருந்தும் வெகுநாளாய் அலைந்துதிரியும் என்னை வெறுக் கலாமா? அருளான மனதைச் சுருக்கலாமா? அடத்தைப் பெருக்கலாமா? எளியேன் செய்த அபசாரத்தை உபசாரமாகக் கொண்டு எவ்விதமேனும் இன்று பகவானைக் காண்பித்தருளல் வேண்டும்; என்னையனே! அழிவிலா மெய்யனே! அழகுள்ள கையனே! பொய்சொல்லா மெய்யனே! மிகவுந் துய்யனே! அஞ்சனாதேவியின் புத்திரனே! நல்லோர்மேலதிக மித்திரனே! வலிமையில் வீரபத்திரனே! சகல சங்கைகளை நீக்குமுத்தரனே" எனப் பற்பலவிதங்களாகத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினார். அதற்கு இராகவதூதன் ஏதேது பக்தி மிஞ்சிப்போய்விட்டது; யார் உரைக்கினுந் தடைபடாதுபோல் இருக்கிறதே. இருக்க விருக்க விண்ணான வார்த்தைகள் புறப்படுகின்றதே. இம்மட்டும் வஞ்சியைப்போற் கொஞ்சிக் கொஞ்சிக் கெஞ்சினது போதும்

போதும் எனப் புகன்று புராணிகர் சமீபத்தில் வெகு நெருக்கமான விடத்திற்போய் வீற்றிருந்தார்.

அரிபக்தன் "ஓ ஓ! இவர் நேற்றைப்போலவே மோசஞ் செய்து காற்ருய்ப் பறந்தோடிப்போக யோசித்திருக்கிருப்போற்ருேன்றுகின்றது" என்று கூடவே சென்று அவரருகில் நின்று அன்பாய் மொழிகளைப் புகன்று நம்பிக்கையில்லாக் காரணத்தால் தனது அங்கவஸ்திரத்தால் அவர் இடதுகையைக் கட்டத்தொடங்கினர். அதற்கு அனுமார் "ஓ ஓ! மோசம்வந்தது; இதென்ன நாராயணனைப் பாராயணஞ் செய்யுங்காலத்தில் திருடனைக் கட்டுவதுபோல் என்னை இம்மூடன் கட்டவந்தான். யாருக்கும் இவ்வளவு துணிவிருக்கலாகாது. நானிஷ்டமாய்க் கேட்பதை நஷ்டப்படுத்தவந்த கனிஷ்டனே! இதுபரியந்தம் என் கைமுஷ்டியாற் சாகாமற் றப்பியிருப்பது உன் நல்லதிர்ஷ்டமே. இனியாகிலும் என் கிட்டவாராமல் எட்டப்போடாவென படபடெனத் தலைமேற்குட்டி, வாயில்வந்தபடி திட்டி, மென்னியைப் பிடித்து நெட்டி, கீழேவிழும்படி எட்டியுதைத்தார். அரிதாசர் பக்கத்திலிருந்த வேதியர்மேல் விழுந்து, உடனே யெழுந்து, உடல்பூரித்து, மயிர்க்குச்செறிந்து, அஞ்சலியஸ்தனாய் நின்றுக்கொண்டு, ஆ ஆ! இனி கிருதார்த்தனானேனென்று எழுந்தெழுந்து கூத்தாடி, விஷ்ணு சங்கீர்த்தனங்களைப் பாடி, அங்குமிங்குமாயோடி, அனுமாரைக் கொண்டாடி, இனியும்மை விடமாட்டேனென நாடிப் பின்னும் அவர் கரத்தைச் சிரத்தையுடன் கட்டத் தொடங்கினர்.

அப்போது அருகுற்ற தொழுகுலத்தோர் துளசிதாசரை நோக்கி, "என்னடா! விருத்தப் பிராமணனோடு போராடுகிருய்; வாயில்வந்தபடி பாடுகிருய்; அங்குமிங்குமா யோடுகிருய்; வேசியைப்போற்கூத்தாடுகிருய்; சீ நாயேபேயே நாளையோடு இச்சபைக்குள் வரவேண்டாம்" என்று அதட்டத்தொடங்கினர்கள். அதற்குத்துளசிதாசர்மாறுத்தாஞ்சொல்லாமல்அனுமார்கையைத்தன் வஸ்திரத்தால் இறுக்கிக்கட்டிக் கெட்டியாய்ப்பிடித்துக்கொண்டு "ஓசுவாமி! நீர் இனிவேண்டிப்போவதைப் பார்க்கிறேன்" எனச் சந்தோஷமேலீட்டால் சிரித்தார். ஆஞ்சநேயர் "ஓ ஓ! இவன் சூதறிந்த கள்ளனுமிருக்கின்ருன். நம்முடையசூதை யாரோ இவனுக்கு உரைத்ததுபோற் காண்கிறது. இனி நம்மை இவன்விடப் போகிறதில்லை. சகாதேவனிடமும் அரவானிடமும் அகப்பட்டுக் கொண்ட ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவைப்போல நாம் இவனிடம்

அகப்பட்டுக்கொண்டோம். இனிச் சாந்தமாகவே யிருந்து தப்பித்துக் கொள்ளவேண்டும்" என்று எண்ணினர். பின் துளசிதாசரை நோக்கி, "ஓ பிராமணோத்தமா! பாராயணகாலத்திற் பேசினுல் தோஷம் வரும்; சீதாராமென்று தியானஞ் செய்துக்கொண்டு சந்தடி செய்யாமலிரு; புராண முடியும்பரியந்தம் பொறு; பகவத் பாராயணமே சகல பாக்கியமுந்தரும் கற்பகத்தரு; சகலருக்கும் ஸ்ரீமந்நாராயணரே பரமகுரு" என்று உரைத்துச் சிரவணத்தில் சித்தத்தைப் பக்தியுடன் வைத்திருந்தார்.

அரிதாசர் "ஓ சுவாமி! ஸ்ரீமந்நாராயணரை நீர் போகும்போது எனக்குத் தரிசனந்தரும்படியாகச் செய்கிறீரா? என்று வணங்கினர். வாயுகுமாரன் "இப்போது ஒன்றும்பேசாதே, எல்லாம் புராணம் முடிந்தபின் பார்த்துக்கொள்ளலாம்" என்றார். பரமபாகவதன் போகும்போது பார்த்துக்கொள்வோமென்பது சந்தேகவார்த்தையல்லவா? நிச்சயமாய்ப் புராணம் முடிந்தபின் ஸ்ரீபரமாத்மாவைக் காட்டுகிறேனெனச் சத்தியஞ்செய்தாலொழிய எனக்குத் திருப்தியாகாது. ஆதலால் ஸ்ரீமந் நாராயணர் மேல் ஆணையிடுமையாவெனப் பலாத்காரஞ்செய்தார். அதற்கு இராகவதூதன் இது நல்ல அகட விகட சாமார்த்தியந்தான். கூடியமட்டும் இவன் கெட்டிக்காரன்தான். இருக்கவிருக்க ஆபாசத்தையே கொடுத்துக்கொண்டு வருகின்றான். இனி இவனிடம் பேசாமலிருப்பதே உத்தமமென்று ஓர் மொழியு மாடாமலிருந்தார். துளசிதாசன் "ஓ சீதாபிராட்டியின் சோகநாசனே! இப்படி பேசாமற் பாசாங்கு செய்துதானே என்னை மோசஞ்செய்துக்கொண்டே வந்தீர். உம்முடைய வேஷத்தை நான் அறிந்துக்கொண்டேன். இனி துவேஷமில்லாமல் ரிஷிகேசனைக் காண்பித்தே நீர் போகவேண்டும்" என்று மற்றொரு காத்தையுங் கட்டத் தொடங்கினர். ஆஞ்சநேயர் அதிக கோபத்துடன் துளசிதாசர் முகத்திற் காறி யுமிழ்ந்து, "அடா எமகாதகா! பஞ்சமாபாதகா! உன்னைப்போற் சீயுஞ் சுரணையுமில்லா மட்டிச்சென்மத்தை நான் பார்த்ததேயில்லை" என வைதார். பின் நோக்கி "ஓ இராமாயணத்தை அத்தியந்த பக்தியுடன் கேட்கும் பூசுரரே! இந்த முரடன் இரண்டு மூன்று நாளாய் இவ்விடத்தில் பலாத்காரமாக வந்து என்னை இராமாயணத்தைக் கேட்கவிடாமல் தொந்திரவு செய்கிறான். இவனை யாருந் தண்டிக்கிறவர்களில்லையா? கண்டிக்கிறவர்களில்லையா? இவனுக்கு என்னையன்றி யாரும் அகப்படவில்லையா?

நான் செய்துக்கொண்ட தொல்லையா?" எனக் கூக்குரலிடத் தொடங்கினர்.

அப்போது அருகிலிருந்த மறையோர் துளசிதாசரைப் பார்த்து காத்தைப்பிடித்தீர்த்து, "நீ இரண்டு மூன்றுநாளாக விருத்தமறையோனை அலங்கோலஞ் செய்வதன்றிச் சிரவணத் தைப் பங்கப்படுத்திக்கொண்டு வருகின்றாய். உன்னை இவ்விடத் தில் மரியாதையுடன் அழைத்துக்கொண்டுவந்தவனையும்,உன்னை யும் இப்போது வெளியிற்றள்ளி விடுகிறோம்" எனப் புகன்றார் கள். அப்போது புராணிகர் ஆம்ஆம்! இந்தப் பிராமணன் வெகு இடக்கனாகவேயிருக்கின்றான்; ஆதலால் இவனுடைய கெர்வத் தை நீங்கள் அனைவோருங்கூடி யடக்கி வெளியிற்றள்ளிவிடுவதே நன்மையென்று அறையச் சபையிலுள்ள யாவரும் என்ன சந் தடியென்று இருவரையும் வெளியிற்றள்ள ஆரம்பித்தார்கள். அப்போது அனுமார் "ஓ பிராமணோத்தமர்களே! விருத்தாப் பியமுள்ள என்னை இந்தத் துஷ்டனிடத்திற் காட்டிக் கொடுப் பது உங்களுக்கு அழகோ" என்று அம்மறையோர் கூட்டத்தில் நுழைந்து அங்குமிங்குமாய் ஓடத்தொடங்கினர். துளசிதாசர் ஆஞ்சநேயர் கைகளிற் கட்டியிருக்கும் வஸ்திரத்தை விடாமல் உறுதியாய்ப் பிடித்துக்கொண்டு கூடவே ஓடத்தொடங்கினர். அனுமார் துளசிதாசரைச் சோதிக்கவேண்டி அதிக வேகத்து டன் அந்தணர்களைக் கீழே தள்ளிக்கொண்டே பல பக்கங்களில் ஓடும்போது துளசிதாசருக்கு வீட்டின் சுவரும் ஸ்தம்பங்களும் பூசுரர் மஸ்தகங்களுமிடிபட்டு ஊத்திலும் சிரத்திலும் இரத்தம் புறப்பட்டுத் தட்டுகெட்டுத் தடுமாறிக்கொண்டே வஸ்திரத்தை விடாமல் கூடவே தொடர்ந்தார். அனுமார் புராணிகர் வீட்டில் ஓவென்னுங் கூக்குரலுண்டாக்கி வெளிப்பட்டு வாயுவேகத்தைப் பார்க்கிலும் அதிவேகமாய் ஓடும்போது அரிதாசர் அவருடன் ஓடுவதற்குக் கூடாமல் வஸ்திரத்தை விடாமல் கீழேவீழ்ந்து தரையில் தேகமெல்லாம் உராய்ந்து தேய்ந்து ஒய்ந்து சாய்ந்து ஸ்மரணைகெட்டு ஒருபக்கத்தில் மூர்ச்சையாய் விழுந்துவிட்டார். உடனே மாருதி மாயமாய் மறைந்து துளசிதாசரடைந்த ஆயா சத்துக்கயர்ந்து, வைராக்கியத்தைக் குறித்து வியந்து இனி தரி சனந்தரல் வேண்டுமென நயந்து ஒருபக்கத்தில் நின்றிருந்தார். பின்பு துளசிதாசர் நெடுநேரம் மூர்ச்சையடைந்திருந்து அனு மாரைக் காணவேண்டுமென்னும் அவாவாற்றெளிந்து ஆஞ்சநே யரைக்காணாமல் நொந்து, சோகம்மிகுந்து இனி இத்தேகத்தை

வைத்திருப்பதிலும் மரணமாவதே உத்தமமெனத் துணிந்து, தரையிற் றலையை மோதிக்கொள்ளப்போனூர். உடனே கருணு நிதியாகிய மாருதி தனது இரு அஸ்தங்களால் துளசிதாசருடைய மஸ்தகத்தைத் தாங்கிக்கொண்டு "அப்பா! ஒப்பில்லா பக்தனே! என்னைக் காணும்படியான யுக்தனே! எனக்குள்ள வழக்கமான மூாட்டுத்தனத்தைக் காண்பித்து உனக்கு அதிக துக்கத்தைக்கொடுத்தேன். இதைக்குறித்து என்மேல் முனிவு கொள்ளாமல் க்ஷமிப்பாய்" என்று அன்பான உரையாடினூர். அப்போது துளசிதாசருக்குற்ற ஆயாசங்களெல்லாம் நீங்கி ஆனந்தமோங்கி திக்கென்றெழுந்து சேவடியில் விழுந்து, "ஓ மாதவனே! கொடியேனுகிய வடியேனுக்கு உம்முடைய தரிசனந்தந்தீரோ? ஆட்கொள்ளமுவந்தீரோ? ஆ ஆ! உம்மை இன்று தரிசனஞ்செய்ய என்னபாக்கியஞ் செய்தேனே? எத் தவஞ்செய்தேனே? எவ்வளவு யோக்கியனுனேன்? எவ்வளவு சிலாக்கியனுனேன்?" என்கிற பற்பலவுரைகள் பகன்ருர். அப்போது அனுமார் அதிக சந்தோஷசித்தராய்த் துளசிதாசரை மார்புடன் அணைத்துக்கொண்டு, "ஐயா துளசிதாசனே! முக விலாசனே! என்னுலாகவேண்டிய காரியமென்னவோ தெரியச் சொல்லும்" என்ருர். அரிதாசர் "ஓ என் ஆண்டவனே! ஸ்ரீராமருடைய தரிசனமே எனக்கு வேண்டியது" என்ருர். அஞ்சனை தனயன் "நீர் நெடுநாளாகத் தவஞ்செய்தும் பிரசன்னமாகாப் பகவான் நான் சொல்லுவதாற் றரிசனந்தருவாரா?" என்ருர். பரமபாகவதன், "பகவான் தரிசனம் பார்க்காப் பாவியேனுடைய ஆவியிருந்ததாற் பிரயோசனமேது?" என்ருர். வாயுகுமாரன் "பகவான் அநேக அவதாரங்களெடுத்தாலும் அரூபமா யிருக்கிறவராயிற்றே; நிரூபமாயிருக்கிற பரமாத்மாவை எப்படி தரிசிக்கக்கூடும்?" என்ருர். அரிபக்தர் "பகவான் பக்தன் நினைத்தவண்ணமான ரூபத்துடன் தரிசனந்தருவார். ஆதலால் தேவரீர் உபதேசித்த ஸ்ரீராமர் சீதாசமேதனுய்க் கருடவாகனரூடனுய்ப் பரத சத்துருக்கருடன் வந்து காட்சிகொடுத்தாலொழிய என்தாட்சி நீங்காது" என்ருர். அனுமார் "திரேதாயுகத்திலெடுத்த அவதாரத்தை இக்கலியுகத்தில் எப்படி காணக் கூடும்" என்ருர். அரிதாசர் "பிரகலாதனுக்காய் நரசிங்கரூபமுடன் ஓர் தூணிலிருந்து வெளிப்பட்ட பகவான் ஸ்ரீராமாவதாரத்துடன் வருவது துர்லபமோ? அன்றி, மச்ச-கச்ச-வராக-வாமனமாகவும், மோகினியாகவும், மூலபல நாசத்துக்காக அநேக

ராமராகவும், நாரதரைப் பங்கஞ்செய்யப் பல கிருஷ்ணராகவும், இன்னம் அநேக வடிவங்களாகவும் அவதாரஞ்செய்த மாயா விலாசன், அடியேன்கோரிய ரூபத்துடன் வருவதற்கு ஓர் தடையுண்டோ? சீக்கிரம் பகவானை வரவழையுமையா" என்றார். "அனுமார் நினைத்தமாத்திரத்தில் கபடநாடகனாகிய பகவான் பிரசன்னமாக லேசானவரோ?" என்றார். "துளசிதாசர் இக்கணம் அந்தப் பராத்பரனுடைய தரிசனங் கிடைக்காவிடின் என்னுயிர் தரியாது, உமக்கு இது தெரியாதோ" என்றார். ஆஞ்சநேயர் துளசிதாசருடைய திவிரத்துக்கு மெச்சி, "ஓ புண்ணியவானே! நாளையத்தினம் நீரிருக்கும் தெருவில் பகவானை வரும்படியாகச் செய்கிறேன். ஸ்ரீராமரைத் தரிசனஞ் செய்து ஆனந்தமடையலாம்" என்று அறைந்து மறைந்து தன்னிருப்பிடஞ் சேர்ந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினார்.

அனுமார் தரிசன அத்தியாயம் முற்றிற்று.

---

எட்டாவது

## துளசிதாசருக்கு ஸ்ரீராமர் தரிசன அத்தியாயம்

கேளுங்கள் சித்தர்களே! பிர்மபட்டத்துக்கு எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் ஆஞ்சநேயர் மறைந்தபின் துளசிதாசர் ஆனந்தவாரியில் மூழ்கினவராய்த் தன்னிருப்பிடஞ் சேர்ந்து, எப்போது சூரியோதயமாகும்? பகவான் எப்போது பிரசன்னமாவார்? பிரசன்னமானால் என்னவென்று துதிப்பேன்? யாருக்கிணையென மதிப்பேன்? பகவானைப்பார்க்க மூற்பிறப்பில் என்னதவஞ் செய்தேன்? எப்புண்ணியஞ் செய்தேன்? உண்மையாய் நமக்குப் பராத்பரனுடைய தரிசனங் கிடைக்குமா? கருணையுடன் கடவுள் நம்முன் பிரசன்னமாவாரா? நாட்டைவிட்டுக் காட்டிற் சென்று நரிபோல் அனேகவருஷம் தவஞ்செய்யும் தபோதனர்களுக்குந் தரிசனந்தராப்பகவான் யாதொரு நற்கிரியையுஞ்செய்யாக்கொடியோனாகிய வடியேன்முன் வருவாரா? ஆண்டவனைக் காணும்படியாகச் செய்யும் ஆஞ்சநேயருக்கு என்ன கைம்மாறு செய்வேன்? அனுமாரை அறிவித்த பூதத்துக்கு என்ன வுபகாரஞ்

செய்யப்போகிறேன்? அனுமார் உரைத்துப்போன வாக்கியம் மெய்யாகவிருக்குமா? மிகவும் உத்தமமாகிய ஆஞ்சநேயர் பொய் சொல்வாரா? பிரமருத்திராதியருங் காணுதற்கரிய ஸ்ரீமந் நாராயணர் அனுமாருரைக்கு உடன்படுவாரா" என்கிற பற்பலவார்த்தைகளாடிக்கொண்டே இராவெல்லாம் நித்திரைசெய்யாமல் தெருவில்வந்து பார்ப்பதும் வீட்டினுட் புகுவதுமா யிருந்தார்.

இவர் இப்படியிருக்கச் சூரியோதயமானவுடன் அனுமார் வைகுந்தத்திற்கு எழுந்தருளி, விரஜாநதியில் ஸ்நானஞ்செய்து ஜபதபங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணருடைய பக்கலடைந்து வலம்வந்து பணிந்து திவ்விய பாதாம்புயங்களில் தனது திருநயனங்களையணிந்து, "ஓ சுவாமி! உமக்கு அத்யந்த பக்தராகிய வால்மீகாவதாரமான துளசிதாசர் கோரிய ஸ்ரீராமாவதாரத்துடன் இன்றையத்தினம் பிரசன்னமாய் அவரை ரட்சிக்காமற்போனுல் உமது பக்தன் உயிர்தரியான். இது நிச்சயம். உமக்கில்லா அக்கரை எனக்கேனோ" என்று பலபல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர். அதற்கு ஸ்ரீமந்நாராயணர் புன்னகைகாட்டி "ஓ ஆஞ்சநேயா! பக்தன் பதைக்க எட்டியுதைக்க உனக்கு மனமும் வந்ததோ? வெகுநாளாகத் தவஞ்செய்தும் உனக்குள்ள முரட்டுக்குணம் இன்னம் நீங்காம விருக்கின்றதே?" என்கிற பல பரியாசவார்த்தைகளாடினர். அனுமார் வெட்கி, "ஓ சுவாமி! அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்து மகானுபாவராகிய துளசிதாசருக்கு உம்முடைய திவ்விய தரிசனந்தரச் சீக்கிரம் வாரும் என்னையனே" என்று வணங்கினர். பகவான் பின்னும் நகைத்து லட்சுமியை நோக்கி, "ஓ மாதரசே! இந்த அனுமார் யாதொரு குற்றமுஞ் செய்யாத துளசிதாசரை யுதைத்தகாரணம் உனக்குத்தெரியுமா? அதென்னவென்றால் துளசிதாசர் முற்பிறப்பில் வால்மீக ராமாயணத்தை இருபத்துநான்காயிரம் சுலோகத்தில் முடித்திருந்தார். அதை இந்த அனுமார் இரட்டித்துப்பாடி வால்மீக ராமாயணத்தை யாரும் பார்க்காமற் செய்தார். அதையறிந்த வால்மீகர் என்னிடம் முறையிட்டார். நானே இந்த அனுமாரையழைத்து நீர் பாடிய ராமாயணத்தில் சுந்தரகாண்டத்தை ஓதுங் கேட்போமென்றேன். இவர் தன்னைத்தானே புகழ்ந்துக்கொண்டே வந்தார். அதற்கு நான் நகைத்தேன். இவர் ஏன் சுவாமி நகைக்கின்றீர்? என்று பலதரங்கேட்டார். நான் உம்மை நீரே புகழ்ந்

துக்கொள்வது நியாயமோ? என்று கேட்டேன். அதற்கு இவர் நானமுற்று இவர்பாடிய ராமாயணத்தைச் சமுத்திரத்தில் எறிந்துவிட்டு இவ்வால்மீகர் ஓர்காலத்தில் எனக்கு மாணுக்கனுக வேண்டுமென உன்னினுர். அப்படியே இப்போது நேரிடத் துளசிதாசரைப் பலவிதங்களாகச் சோதித்து மிகவும் போதித்து தன்கோபம் நீங்க உதைத்துத் தன் பகையைத் தீர்த்துக்கொண் டார். இது ஞாயமா" என்று குலுங்கக் கலகலவென நகைத்தருளினுர். கூடவே இலட்சுமி கலீலென்று நகைத்தாள். அப்போது சபையிலுள்ள தேவரிஷிகள் யாவரும் பெருநகை புரிந்தார்கள். அதற்கு அநுமார் மிகவும் லச்சையடைந்து பகவானைப் பணிந்து, "ஓ என் ஆண்டவனே! தேவரீரே என்னைப் பரியாசஞ் செய்து மத்தகாசஞ் செய்தால் மற்ற யார்தாம் எளிதஞ் செய்ய மாட்டார்கள். ஆயினுங் குற்றமில்லை. தேவரீர் இத்தினம் துளசிதாசர்முன் பிரசன்னமாய் ரட்சித்தருளல்வேண்டும்" எனத் தொழுதார். பரந்தாமன் "எனக்கில்லா அக்கரை உமக்கேன்? நீர் உம்மிடத்திற்போம்; எனக்கு இஷ்டமானபோது என் பக்தனுக்குத் தரிசனந்தருகிறேன்" என்றுர். அநுமார் "அடியேன் இன்றைக்கு உனக்குப் பகவான் தரிசனந்தருவார் எனத் துளசிதாசரிடத்திற் சொல்லிவிட்டேன். ஆதலால் என்வசனம் பொய்யாகாமல் அகத்தியம் இன்று தரிசனந் தரல்வேண்டும் ஸ்வாமி!" என்று பணிந்தார். பகவான் என் அபிப்பிராயந் தெரிந்துக் கொள்ளாமல் நீர் எப்படி வாக்குத்தத்தஞ்செய்தீர்? எனத் திருவாய்மலர்ந்தருளிப் பின்னுஞ் சொல்லுவார். "ஓ அஞ்சனை தனயா! அந்தத் துளசிதாசன் மிகவும் காமக்குணமுடையவனன்றிக் கொடிய செய்கையுள்ளவன். ஆதலால் இன்னம் பனிரெண்டாண்டு தவஞ்செய்தாலொழிய என்னுடைய தரிசனந் தரமாட்டேன்; போ போ!" என்று உரைத்தார்.

அதுகேட்ட இலட்சுமி அநுமாரை நோக்கி, "ஓ என் அரும்புதல்வனே! சிரஞ்சீவிகளில் முதல்வனே! உன் எண்ணப்படியே இன்று பரமபக்தனுகிய துளசிதாசனுக்கு எங்கள் தரிசனந்தருகிறேும். இனி உன்னிருப்பிடத்துக்குப் போ" என்று அறைந்தாள். அநுமார் பகவானுக்கும் பார்க்கவிக்கும் வந்தனம்புரிந்து தன்னிருப்பிடஞ் சேர்ந்தார். பின்பு பகவானை இலக்குமி நோக்கி, "ஓ ஸ்வாமி! பனிரெண்டாண்டாய் நம்மை நோக்கித் தவஞ்செய்யும் துளசிதாசர்முன் இன்று அகத்தியம் பிரசன்னமாகவேண்டும்" என வணங்கினுள். உடனே சீதை

யுருவெடுத்து நின்ருள். அப்போது பக்தவச்சலனுகிய பகவான் கபட கியாபகத்தோடு ஸ்ரீராம லட்சுமண பாத சத்துருக்கரின் வடிவெடுத்துக் கருடனை விளித்து, அதன்மேல் ஊர்ந்துக் கொண்டு துளசிதாசரிருக்கும் வீதியில் யாருக்கும் புலப்படாமல் வந்தார். இதற்குமுன்பே பகவானைத் தரிசிக்க அவாக்கொண்டு வீதியில்வந்து நிற்குந் துளசிதாசர் இன்றைக்கு அகத்தியம் பகவானுடைய தரிசனங் கிடைக்கும். அந்தப் பராத்பரனுடைய அழகு சுந்தரமும், கோதண்ட அஸ்தமும், பச்சை மேனியும், கமலக் கண்களும், கமல பாதமும் பார்க்கும்படியான பாக்கிய மேதோவென்று ஸ்ரீராமாவதாரத்தை வர்ணிக்கத்தொடங்கினர். எப்படியென்ருல்: "ஓ தேவர்க்கு முதல்வா! தசரதன்புதல்வா! கோதண்டகையா! கோதிலாமெய்யா! வசிஷ்டவிசுவாசா! விசுவாமித்திரநேசா! தாடகையை யழித்தவா! அகலிகையை யளித்தவா! ஜனகர் கண்ணளா! சீதை மணவாளா! பரசுராம பங்கா! பசியமாவங்கா! தந்தைமொழிக்குகந்தவா! தாயுரைக்கு மகிழ்ந்தவா! மகுடம்புனைய மறுத்தவா! மரவுரிதரிக்கப் பொறுத்தவா! கௌசலையுருக நைத்தவா! காந்தையுருக நொந்தவா! லட்சுமணனேடு நடந்தவா! நல்ல வயோத்தியைக் கடந்தவா! நடந்தறியாத நாரணு! நற்குகன் போற்றும் பூரணு! விதிதுணையென்று விண்டவா! நதிகடந்தின்பங்கொண்டவா! பாதம்பணியும் முன்னவா! பட்டணம் போவெனச் சொன்னவா! அத்திரிபோற்ற மகிழ்ந்தவா! அகஸ்தியர் தம்மைப் புகழ்ந்தவா! காக்கையின் கண்ணைக் கழித்தவா! கவந்தனுயிரை யழித்தவா! கன்னியிச்சிக்கப் பழித்தவா! கரதூஷணர்தமை யொழித்தவா! மாரீசனைக் கொன்றவா! வஞ்சிக்கா யயர்ந்து நின்றவா! சடாயுவைக்கண்டு மூச்செறிந்தவா! சடாயுவாற் சகலமுமறிந்தவா! சவரியினெச்சிலைத்தின்றவா! சந்தோஷமொழிகளைப் புகன்றவா! அனுமான் மேற் களிகூர்ந்தவா! அரிய கிஷ்கிந்தையிற் சேர்ந்தவா! மரங்களேழையுந் துளைத்தவா! வாலி வீழ்ந்தேத்த இளைத்தவா! அனுமான் றனக்குரை விரித்தவா! அவனுலிலங்கையை யெரித்தவா! விபீஷணன்றனக் கருள்செய்தவா! மேலா மருண்மழை பெய்தவா! அசுரர்மே லம்புக ளெய்தவா! அவுணர் சிரங்களைக் கொய்தவா! கும்பகர்னனைக் கொன்றவா! கொடிய மாபலங்களை வென்றவா! அரிவையைக்கண்டவா! ஆனந்தங்கொண்டவா! அயோத்தியை யாண்டவா! அறநோன்பு பூண்டவா!" என்று ஸ்ரீராம அவதாரத்தை வர்ணித்துக்கொண்டே வீதியில் வருகிறவர்கள்

போகிறவர்களாகிய யாரையும் பார்க்காமல் பகவானுடைய வரவையே நோக்கிக்கொண்டு புளகாங்கத்துடன் அஞ்சலியஸ்தராய், ஜெயம்! சீதாராம்! ஜேஜேராம்!! எனத் தியானஞ் செய்துக்கொண்டே யிருந்தார்.

அப்போது பகவான் துளசிதாசரின் பக்திக்கு இரக்கமுற்றும் அவரைச் சோதிக்கவேண்டி அவரருகில் வரும்போது ஸ்ரீராமரூபத்தை மறைத்து கோணற்பாகையும், நீண்டதாடியும், கற்களின் தாவடங்களுமுள்ள துலுக்கரூபமானார். உடனே பாத சத்துருக்க லட்சுமணரும் அப்படியே யாய்விட்டார்கள். கருடனே அசுவமாய்விட்டது. இலட்சுமியோ ஸ்ரீராமாவதாரத்தை வர்ணித்துநிற்கும் துளசிதாசனுக்கு இரக்கமுற்று இப்பரம பாகவதனுக்கு என்னவரம் அளிக்கலாம் என்கிற யோசனையோடுங் கூடியிருந்தார். இப்படி சற்றுநேரம் துளசிதாசன்முன் பகவான் நின்று இலட்சுமியை நோக்கி, "ஓ மாதரசே! இந்தத் துளசிதாசனுடைய மடைமையை யறிந்துகொண்டாயா? என்னைப்பார்க்காவிட்டாலும் உன்னைப்பார்க்கவாவது அருகில் வராமற் போனான். இனி இவன்முன் நிற்கவே கூடாது" என்று உரைத்து அந்தர்த்தானமானார். துளசிதாசர் தன்முன்வந்து நின்றவர்கள் யாரோ துலுக்கரெனத் தீர்மானித்துப் பராமுகமாயிருந்து பகவான் மாயை யறியாமல் பகவான் வருவார் வருவாரென்று ஒருசாமம் ராத்திரிமட்டுங் காத்திருந்து, ஓ ஓ! அனுமார் வாக்கியப்படி ஸ்ரீமந்நாராயணன் வாராமலிருக்குங் காரணமேதோ? என்று சரேலெனப் பாராயணச் சபையைமேவி அனுமாராகிய விருத்தப்பிராமணருடைய பாதங்களில் வீழ்ந்து பலதரந் தாழ்ந்து முறையோவென்று ஓலமிட்டு அழத்தொடங்கினார். அவ்வழுகுரலோசையைக் கேட்ட சகலரும் அச்சமுற்றவர்களாய் இதுவென்ன விபரீதமென்று பாராயணத்தைவிட்டு விருத்தப்பிராமணரை நோக்கி, இதுவென்ன கூக்குரல்? என்று ஒசையாய்ப் பேசத்தொடங்கினார்கள்.

துளசிதாசருடைய மகிமையைப் பலருக்கும் புலப்படக் காட்ட எண்ணங்கொண்ட அனுமார், "அப்பா துளசிதாசா! பகவானை இன்று தரிசனஞ் செய்யவில்லையா?" என்றார். துளசிதாசர் "காலையிலிருந்து மாலைபரியந்தங் காத்திருந்தும் கர்த்தன் வரவில்லை" என்று அலக்கணுற்றார். அனுமார் "ஓ ஓ! மோசம் போனையே; அசுவத்தின்மீதிலூர்ந்து சீதாசமேதராகத் துலுக்க வேஷமாய்வந்து உன்முன் சற்று நின்று மறைந்தவர் பகவா

பிடியாகப் பிடிக்கவேண்டுமென்கிற துவேஷத்தாற் பல பக்கங்களிலுந் தேடலுற்றார்கள்.

துளசிதாசர் காவலரைத் தேடும் வேதபாலகரை விளித்து, "உங்களைத் தடுத்து அடித்தவர்களின் மண்டை சிதறப்புடைக்கிறேன்; சீக்கிரங்காட்டுங்கள்" என்று ஆக்ரோஷத்துடன் அட்டகாசஞ்செய்து தெருவீதியில் நின்றிருந்தார். மேற்குலத்தோர் நாற்றிசையினுந் தேடிக்காணாமல் அரிதாசர்பக்கலடைந்து காவலரைக் காணோமென்றார்கள். பரமபாகவதன் அந்தக் காவலர்கள் எவ்வித ரூபமுடையவர்கள்? என்ன ஆயுதத்தைப் பிடித்துக் கொண்டு இருக்கிறவர்கள்?" என்று கேட்டார். அப்படி கேட்கும் போது இவ்வித ரூபமுடையவர்கள்தா னப்பாவென்று ஸ்ரீராம லட்சுமண பரதசத்துருக்கர் நால்வரும் துளசிதாசர் முன்னின்று "நாங்களே உம்முடைய அன்பர்களை மறித்தவர்கள். ஆதலால் எங்களை உமது கைவாளால் வெட்டிவிடும்" என்று உரைத்துத் தங்கள் கையிலிருக்கும் அம்புவில்லுகளை கீழேவைத்து குனிந்து நின்றார்கள். அப்போது அரிதாசர் தன் கையிலிருந்த வாளைக் கீழெறிந்து அஞ்சலியஸ்தராய் நின்றுக்கொண்டு ஓம் அரிஅரி! முரகரி! நரகரி! அம்புஜாக்ஷரி! மாதவா! யாதவா! ராகவா! கேசவா! ஸ்ரீராமா! பரந்தாமா! பத்மநாபா! பரமசொரூபா! கார்வண்ணா! கமலக்கண்ணா! அனாதரக்ஷகா! அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகா! இராவணமர்த்தனா! ஓ ஜனார்த்தனா!" எனப் பற்பல விதங்களாகத் தோத்திரம் புரிந்தார். அவ்வாறு தோத்திரம் புரிந்து மிகவும் பரிந்து, "ஓ என் தெய்வமே! நீயென்றறியாமற் போனேனே? ஆதரமற்றவனானேனே? முன் உனக்கு உட்பட்டேனே? இப்போது மறந்துவிட்டேனே? கோபத்துக்குட்பட்டேனே? ஆ கெட்டேனே?" என்று பற்பல வார்த்தைகள் புகன்று பாதங்கள்மேல் வீழ்ந்து ஓவென்று ஓலமிட்டார். அப்படி அழுந் துளசிதாசரை ஸ்ரீராமர் வாரியெடுத்து மார்புடனணைத்துக்கொண்டு, "ஓ மெய்ஞ்ஞானவிலாசனே! எனக்குரிய நேசனே! சுயம் பிரகாசனே! துளசிதாசனே! பிரம்மக்ஞானத்தா லென்னை மறந்துவிட்டாயா? ஆனந்தமேலீட்டால் என்னைத் துறந்துவிட்டாயா?" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதற்குத்துளசிதாசர் "ஓ தெய்வமே! நீயன்றிப் பிரமமென்பது வேறுண்டோ? உமது வக்ஷஸ்தலத்தில் வீற்றிருக்கும் சீதாபிராட்டியன்றி ஆனந்தமென்பது வேறொன்றுண்டோ? வேறுண்டென்பவர்க்கு மோட்சவீடுண்டா? உம்மை நம்பினோர்க்குங் கேடுண்டா? உம்மை

வெட்டும்படியான வாளுண்டா? உம்மைப்பிரிந்த நாளுண்டா? ஓ பகவானே! பகவானே! அடியேனியற்றிய குற்றங்களை நற்றவமாகவும், அடியேன்செய்த தூஷணைகளைப் பூஷணமாகவும் கொண்டு, என்னை யாட்கொண்டு, உமக்குகந்த தொண்டு செய்வதேது? அதை விண்டு கருணைகூறுமென்று பலதரம் வணங்கும் அரிதாசரைப் பகவான் கருணையுடன் நோக்கி, "ஓ பரமபாகவதனே! பரப்பிரமக்ஞானியே! உம்மை யறியாமல் உமது சொத்துக்களைக் களவுசெய்துக் கொண்டுபோகுங் கள்வரை மறித்தோமேயல்லது வேறோர் அபசாரஞ் செய்யவில்லையே? ஓ உபகாரபுருஷனே! நன்மை செய்தவர்கட்குத் துன்மை செய்வது போல எங்களை வாளால் வெட்டத்துணிந்து வரலாமோ? நாங்கள் துன்பமுறலாமோ? ஓ சிவகாருண்யமுள்ள சீமானே! உமக்கு இவ்வளவு கோபமிருக்கலாமோ?" என்று கேட்டார்.

அரிபக்தன், ஓ அரிபாந்தாமா! ஸ்ரீரகுராமா! என்று உள்ளமுருகி ஆனந்தக்கண்ணீர்பெருகிப் பலதரஞ்சூழ்ந்து பாதங்களிற்றாழ்ந்து, "ஓசுவாமி! புண்டரீகாக்ஷா! பூரணமருள்ருக்ஷா! அநேககோடிகாலந் தவஞ்செய்தாலுங் கிடைப்பதற்கு அரிதான உமது திவ்விய தரிசனந்தந்து திருவாயால்வைது உத்தமஅஸ்தங்களாலடித்து ஆட்கொண்ட புனிதர்களான இந்தச்சுதர்களோ அற்பமான சொத்துக்கு உரியவர்களாகமாட்டார்களோ? உம்முடைய அரியதரிசனத்திலும்இச்சொற்பவஸ்துக்களுயர்ந்ததோ?உமது திவ்வியகரங்களால் அடிபட்ட இவ்விப்பிரர்கள் செய்த ஒப்பிலா மெய்த்தவமேதோ? என்னையனே! நின்னுடைய திருவிளையாட்டைப் பிரமாதிதேவர்களாலுந் தெரிந்துகொள்ளக் கூடாதென்றால் என்னால் அறிந்துகொள்ளக் கூடுமோ? இவ்வுத்தமர்களை அடித்த திவ்யாஸ்தங்களால் என்னை ஓரடி அடிக்கலாகாதோ? அடித்தால்சகலகர்மங்களும்நீங்கிப்போகாதோ?இவர்கள்செய்த புண்ணியமேதோ? நான் செய்த பாவமேதோ?" என்னும் பற்பல வார்த்தைகளாடினர். அவ்வாறு வார்த்தைகளாடும் பரமபாகவதனை ஸ்ரீமந் நாராயணன் அஸ்தமஸ்த சையோகஞ்செய்து கருணைமழைபெய்து "ஓ துளசிதாசரே! இந்தப்பார்ப்பார் நெடுநாளாக உம்மைச் சேர்ந்து பின்னும் உலகியலைச்சார்ந்து கர்மிகளாய்ப்போகாமற்றடுத்தோம். ஆட்கொள்ள சலந்தொடுத்தோம். அல்லாமல் நல்லோரை யடுத்தவர்கள் பொல்லா நரகமடையலாமா? ருக்மாங்கதன் பட்டணத்தி லிருந்தவர்களெல்லாம் பரமபதமடையவில்லையா? உமக்குத் தெரியாததும் ஒன்றுண்டோ?"

என்று உரைத்தார். துளசிதாசர், "ஓ மாதவனே! அடியேனாகிய கொடியேன்மீது உமது கருணை இப்படியுமிருக்க நானியற்றிய தவமேதோ? என்னைப்போல்பாக்கியமுடையவர்கள் இவ்வுலகில் ஒருவருண்டோ? ஓ தெய்வமே! அரூபமாகியும் ஆனந்த மாத்திர மாகியும் இரானின்ற பரப்பிரமமும், அடியார்கள் நினைத்தவண்ணமான ரூபமெடுத்து ஆட்கொள்பவரும் நீரன்றி வேறொன்றுண்டா? பாலில்லாமல் நீருண்டா? உம்மையன்றி மெய்த்தெய்வமொன்றுண்டா? உண்டெனச் சொல்வாருண்டா? அப்படியுரைத்து உமது மாயையை வெல்வாருண்டா? வெல்வதற்கு ஒருவர் ஆதாவுண்டா? ஓ தேவாதிதேவா! வாசுதேவா! மகானுபாவா!" என்று துதித்து உருகினர். அவ்வாறு உருகும்போது பகவான் மிகவும் மகிழ்ந்து, "ஓ என் அன்பனே! மேலான யின்பனே! இனிமேல் உன்சொத்தை யாருக்காவது கொடு; நாங்கள் தடைசெய்யமாட்டோம்" எனப்பகர்ந்து அந்தர்த்தானமானார்கள். பின்பு அரிதாசர் அரியின் திருக்கரங்களால் அடிப்பட்ட சாதுக்களின் அடிகளிற்றாழ்ந்து ஸ்ரீமந்நாராயணருடைய அஸ்தங்களால் அடிபட்ட கனவான்களே! அரியின் அரிதான தரிசனம் பெற்ற தனவான்களே! ஆண்டவன் திருவாக்கால் ஏசக்கேட்கும்படியான உங்கள் செய்தவமேதோ? உங்கள்மீது இவ்வளவு காருண்யம் பகவானுக்கு வந்த காரணமேதோ? ஓ சுவாமிகளே! நிஷ்காமிகளே! நெடுநாளாய்ப் பகவானைப் பார்க்காதிருந்த இக்கொடியேனுக்கு அரியின் தரிசனந் தருவிக்கவும், உமது தபோமகிமையைச் சகலருக்குந் தெரிவிக்கவும், அற்பமான இச்சொத்துக்களைக் கவர்ந்தீர்களோ? உங்களுடைய அற்புதமான தவத்தை யறியாப் பாவியானேனே! தெரியாமையால் உங்களுக்குச் சேவை செய்யாமற் போனேனே? இனிமேலாவது என்னுற்றொண்டு அன்புடன் செய்வித்துக்கொண்டு பேரின்பமொழிகளை விண்டு முழுதும் என்னை யாட்கொண்டு கிருபை கூறுங்களென விண்டு அவர்கள் கரங்களைப் பிடித்துக் கொண்டு மடத்தினுள் வாருங்களென வேண்டிக்கொண்டு மடாதிபதிகள் நீங்களே யெனப்பகர்ந்து ஸ்ரீமந்நாராயணனைத் துதித்து ஆனந்தமேலீட்டாற் குதித்துப் பிரமானந்தத்திற் சொக்கி மோட்சவீட்டிற்புக்கி தன்னை மறந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

பகவான் காவலாயிருந்த அத்தியாயம் முற்றிற்று.

பதினோராவது

## துளசிதாசரை சோதித்த அத்தியாயம்



கேளுஞ் சித்தர்களே! துளசிதாசர் இப்படியிருக்குங் காலத்தில் ஓர்நாள் மமதாதேவி அநேக சாதுக்களுக்கு அன்னமிட எண்ணங்கொண்டு சுத்த ஏகாதசியின் மறுநாள் இரண்டாயிரம் பிராமணர்களுக்குச் சந்தர்ப்பணஞ்செய்து சகலரும் அன்னம் புசிக்குந்தருவாயில், பகவான் ஓர் அந்தணனாகி மடத்துட் பிரவேசித்துத் துளசிதாசருக்கு வந்தனஞ்செய்து, "ஓ சுவாமி! ஏழைப்பிராமணனாகிய அடியேன் மிகவும் பசியோடும் வந்திருக்கின்றேன்; அன்னமகப்படுமா?" என்று கேட்டார். உடனே மறையோர் குலமுறை விசாரித்துப் பந்தியில் வைத்துக்கொண்டு உண்ணப் போகையில் மாயாமறையோன் சகலரையும் நோக்கி, "ஓ சாதுக்களே! நீங்களெல்லாம் மிகவும் புனிதர்களாயிருக்கின்றீர்கள்; நானே மிகவும் பாவியாயிருக்கின்றேன்; அதேனென்று கேட்பீரோ; நான் பிரமக்ஞானியாகிய ஓர் விப்பிரனை அறிவீனத்தாற் கொன்று அப்பிரமஹத்தியை மேற்கொண்டு அநுதின இக்கங்கையில் ஸ்நானஞ் செய்து, பசிவேதனை பொறுக்கமாட்டாமல் இங்கடைந்தேன். ஆதலால் அடியேன் உங்களுடன் உண்ணும்படியாக ஒப்புக்கொள்வீர்களோ? அல்லது தள்ளிவிடுவீர்களோ? 'உற்றது சொன்னா லற்றதுபொருந்தும்' என்கிறபடி உண்மையைச் சொல்லிவிட்டேன்" என்று உரைத்தார். அம்மாத்திரத்தில் பூசுரரெல்லாம் எழுந்து அம்மறையோன்மேல் விழுந்து அடித்து இடித்து அவமரியாதை செய்து வெளியிற் போகும்படியாக விரைந்து பேசத்தொடங்கினார்கள். அதற்குத் துளசிதாசர் சாதுக்களையமர்த்தி வந்த வேதியனைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து, "ஓ பிராமணோத்தமா! சீக்கிரஞ்ஜெயசீதாராமென்றுசொல்லும், உம்மைபடைந்த பிரமஹத்தி முதலான மகாபாதகங்களெல்லாம் நிவர்த்தியாய்ப் பரிசுத்தமாவீர்" என்று அறைந்தார். அதற்கு அம்மாயாவேதியன் சற்றுநேரம் மௌனமுற்றிருந்து, "ஐயா துளசிதாசரே! ஏழைகட்கு நேசரே! இப்போது நீர் உரைத்த வாக்கியத்தை என் வாக்கினாற் சொல்லவேமாட்டேன்; சொல்லவே நாவெழாது; ஏனென்பீரேல் நான் அநேக வேதசாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்தேன். அதில் இந்த நாமமில்லவேயில்லை.

அன்றி இவ்வளவு சிக்கானவார்த்தையை இதுபரியந்தம் நான் கேட்டதேயில்லை; சொல்லலாமென்றால் தடமாட்டமாயிருக்கின்றது. இதற்கு நானென்ன செய்யபட்டுமென்று ஆயாசமடைந்தவர்போல் அபிநயித்திருந்தார்.

அதுகேட்ட சாதுப்பிராமணர்கள் சகலரும் வெகு லேசாயுரைக்கும் ஜெயசீதாராமாவென்னுந் திவ்விய திருநாமத்தைக் கொடும்பாவியான உன் நாக்கிற் சொல்வாயா? பிரமத்தி சூழ்ந்த உனக்குச் சொல்லவும் வருமா? சொன்னாலும் பயன் தருமா? சீக்கிரம் இவ்விடம்விட்டு வெளியிற் போடா துஷ்டா? எங்களுட னுண்ணத்தகாத பிரஷ்டா? பஞ்சமர்களிலுங் கனிஷ்டாவென்றுரைத்தார். வைததைக்கேட்ட துளசிதாசர் சாதுக்கள் மேல் முனிவுகொண்டு அப்பூசுரனருகிற் சென்று, "ஓ பிராமணோத்தமா! வேதங்கள் புகழுந் தாரகமந்திரத்தை யாருஞ் சொல நீர் கேட்டதில்லையோ? அப்படி கேட்டிருக்காவிட்டால் அடியேன் இன்னம் ஓர்தரஞ் சொல்லுகின்றேன். கேளுமென்று அவர் காதருகில் தன் வாயைவைத்து ஜெயசீதாராமென்று சொல்லுமையா" என்றார். அதுகேட்ட மாயாவேதியன் ஜெயவென்பது நல்ல வார்த்தையே. அதற்குப்பின் சொன்னமொழிகள் மிகவும் கெட்டதா யிருக்கின்றது. ஆதலால் அதை நீரும் மற்றியாரும் நினைக்கவேகூடாதென்று உரைத்தார். துளசிதாசர் வியப்புற்றவராய், "ஓ பிராமணோத்தமா! இக்காசியில் மரிக்கும் பரிசுத்தன் வலது காதில் பரமசிவனுருபதேசிக்கும் திவ்விய திருநாமத்தை ஏன் நினைக்கக்கூடாது" என்று மறுக்கின்றீரென விப்பிரன் மரித்த பிரேதத்தைச் சுமந்துகொண்டு ஏகும்போதும் மரிக்கும்போதும் ஓதும் இழிவான வார்த்தையைச் சுபமாக ஜீவித்திருக்குங் காலத்தில் நினைக்கலாகுமா? அவ்வார்த்தை அமங்கலத்துக் குதவுவது சுமங்கலத்துக் குதவுமா? சீ சீ! இனி அவ்வார்த்தையைச் சொல்லவேவேண்டாம்" என, துளசிதாசர் அனுதினம் பரமசிவனாதியோர் தியானிக்கும் திவ்விய நாமத்தை வெறுக்கலாமா? மற்றென்றால் பிரமத்திபாவம் நீங்குமா? சீக்கிரம் இத்திருமந்திரத்தைச்சொல்லுமையாவென மறையோன் வேண்டாமென்கிறவள் கழுத்தில் லிங்கம் கட்டுவதுபோல நான் மறுத்தும் நீர் இரட்டித்து உரைத்தால் என்மதி திரும்பமாட்டாது, நான் சொல்லமாட்டேன்" என்றார். அரிதாசன் அச்சமுற்று நீர் எந்த தெய்வத்தைத் தியானிக்கின்றீரெனப் பூசுரன் பரமசிவனை பஜிக்கின்றேனென்ன அரிபக்தன் சிவபக்தரானால் விபூதி

யணியாமல் திருநாமமணிந்திருக்குங் காரணமேனென ஆதிவரு ணன் என்னமோ மறந்து குறுக்காயிடுவதை நெடுக்காயிட்டு விட்டேன் என்றார்.

முக்கியமாக நான் ஈசுவரனையே தியானிக்கின்றேனெனப் பரமபாகவதன் சிவநாமமான அராவென்றும், சத்தி நாமமான உமாவென்றுஞ் சொல்லுமையாவென முப்புரிநூலோன் மிகவுஞ் சந்தோஷித்து, அர அரா! உமா உமா! என்று பலதாஞ் சொல்லினார். அரிபக்தன் அ உ என்பதை நீக்கி மற்றிரண்டக்ஷரங்களையுங் கூட்டிச் சொல்லுமையாவென, மேற்குலத்தோன் இதென்ன விபரீதம் உயிரெழுத்துக்களை நீக்கி நிற்கச் சீவமான எழுத்துக்களைக் கூட்டி எதையோ சொல்லும்படி யுரைக்கிறீர். சீ சீ! உயிரெழுத்தில்லாப்பேரை நான் கனவிலும் நினைக்கமாட்டேனென, இனி சாதுக்கள் பொறுக்கமாட்டார்களென்று துளசிதாசர் பகவானுடைய திருநாமத்தை யுரைக்காவிட்டாலும் அன்புடன் கேட்டாற் போதுமெனப் பலதர முரைத்து இனியும்முடைய பாவங்களெல்லாம் பஸ்பமாய்ப் போய்விட்டது. கிருதார்த்தனாய் விட்டீரென் றறைந்து பலவந்தமாகப் பார்ப்பானைத் தன்னருகில் வீற்றிருக்கச்செய்து சகலரையு மன்ன முண்ணும்படி ஆக்கியாபித்தார். அதற்கந்தச் சாதுப்பிராமணர்கள் சம்மதிக்காமல் ஓ சுவாமி! ஜெயசீதாராமெனச் சொல்லுவதாலும் கேட்பதாலும் சகல பாவங்களுக்கும் மேலான பாபமாகிய பிரமத்தி நீங்குமா? இது நீங்க அநேகநாள் ஜெபஞ் செய்யவேண்டும்; ஓமம் வளர்க்கவேண்டும்; பிராயச்சித்தஞ் செய்யவேண்டும்; பிறகல்லவோ நம்முட னுண்ணவேண்டும்; அப்படிக்கிருக்க இப்படிசெய்வது நியாயமல்லவென்று மறுக்க.

துளசிதாசர் ஒருதரம் இராமாவென்று உரைத்தாலும் அல்லது கேட்டாலும் சகல பாவங்களும் நிவாரணமாகுமெனச் சுருதி ஸ்மிருதி இதிகாசங்களும் முறையிடுகின்றன. இம்மறையோன் பலதரம் இராமாவென்று உரைத்ததைக் கேட்டாரே. இன்னம் பிரமத்திபாவம் நீங்காம லிருக்கின்றதா? என்றார். சாதுக்கள் யாவரும் ஒரு சிவனைக் கொல்லலாகாது; கொன்றால் அதற்குத் தகுதியான பிராயச்சித்தஞ் செய்துகொள்வதன்றி அநேகநாள் ஜெபஞ் செய்யவேண்டுமென்று வேதம் முறையிடுகின்றது. அன்றி, ஸ்திரீஹத்தி-சிசுஹத்தி-கோஹத்தி முதலான பாபங்களிலுங் கொடிய பாவமல்லவா பிரமஹத்தி. அன்றிப் பதிவிரதை தன்னையறிந்த சிவன்மூத்தன் பரமபக்தனாகிய இவர்

களின் மனதையே நோகவைக்கலாகாது. அப்படியிருக்க, இவனது பிரமத்தையுணர்ந்த பிராமணனைக்கொன்ற கொடிய பாவியாயிற்றே? இவனைத் தீண்டலாமா? அன்னமுண்ண வேண்டலாமா? அதிபாதகனாகிய இவனுடைய நாக்கில் இராமாவென்கிற வாக்கியம் புறப்படுமோ? என்றார். அரிதாசர் இம்மறையோன் அரா அரா! உமா உமா! எனப் பலதரம் உரைத்ததை நீங்கள் காதினால் கேட்கவில்லையோ? அரா உமா என்பதே இராமாவென்னுந் தாரகமந்த்ரமாகும்.

எப்படியென்றால்: தசரதமகாராஜனுக்குப் புதல்வனாகப் பிறந்த ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு என்ன நாமகரண மிடலாம்? என யோசித்த வசிஷ்டர் அராவென்னும் ஈசுரநாமத்தையும், உமாவென்னும் பார்வதியின் நாமத்தையும் ஒன்றாகச் சேர்த்து ராமாவென்கிற நாமதேயமிட்டார். அன்றி நீங்கள் ராமநாமத்தின் மகிமையை யறிந்தவர்கள். ஆதலால் வெகுநேரமாக வாதுசெய்யத் தொடங்கினீர்கள். அன்பர்களது மனதில் ரமிப்பவராகிய ஸ்ரீராமருடைய நாமதேயத்தின் பலனையுரைக்க வெகுவிரிவாகும். அதேனெனின்: ரா-சகலபாபங்களையும் வெளிப்படுத்தும், மா-வெளிப்பட்ட பாபங்கள் தன்னையடையாமல் நிக்கிரகிக்கும். அதற்குத் திருஷ்டாந்தம்: ரா-என்றால் வாய்திறக்கும், மா-என்றால் வாய்மூடுவதேயாம். ஓ சாதுக்களே! ரா-ஆதிசிவன், மா-ஆதிசத்தி. ரா-பரப்பிரம்மம், மா-சிற்சத்தி. ரா-ஆத்மா, மா-சீவன். ரா-என்றால் பரப்பிரமத்தை துதித்ததாகும். மா-என்றால் மும்மூர்த்திகளை நினைத்ததாகும். ரா - என்றால் பாபங்களணுகாது, மா-என்றால் சாபங்களணுகாது. ராமாவென்றால் எமன் நடுங்குவான். ராமாவென்றால் எமபாசந் துகளாகும், ராமாவென்றால் நரகவேதனை நீங்கிப்போம், ராமாவென்றால் குஷ்டமுதலான வியாதிகள் அகன்றுபோம், ராமாவென்றால் வறுமை சிறுமைநீங்கி அஷ்ட அயிசுவரியமும் உண்டாகும், ராமாவென்றால் கோரிய எண்ணங்களெல்லாம் பலிதமாகும், ராமாவென்றால் பிரமத்தி முதலான சகல பாபங்களும் நீங்கி மோட்ச சாம்பிராச்சியத்தை யடையலாம், ராமாவென்றால் ஆயுள்விர்த்தியாய்ச் சகல வித்தைகளும் சம்பவிக்கும், ராமாவென்பதே சகல கன்மங்களையும் ஒட்டும்மந்திரம், ராமாவென்பதே மோட்சமடையும் தந்திரம், ராமாவென்பதே அண்ட சராசரங்களிலும் நிறைந்திருக்கும் நிரந்தரம் என்று சொல்லியும், அந்தச் சாதுக்களின் சந்தேகம் நீங்காமையால்

பிரம்மத்திசெய்த பிராமணருக்கு வட்டித்திருக்கும் பாத்திரத்தை தன் காங்களால் எந்திக்கொண்டு, "ஓ சாதுக்களே! ராமாவென்னுந் திருமந்திரத்தின் பலனை உங்களுக்குக்காட்டுகிறேன் வாருங்கள்" என்று ஸ்ரீகைலாசவாசராகிய விசுவநாதர் திருக்கோயிலிற் பிரவேசித்து கல்லுருவான ரிஷபத்தின்முன்பத்திரத்தை வைத்துப் பலதரம் பரமசிவனைச் சூழ்ந்து சிரசாஷ்டாங்கமாகத் தாழ்ந்து, ஓம் அரகரா! மஹாதேவா! வாமதேவா! நீலகண்டா! நீறணி முதல்வா! சாம்பவா! சங்கரா! மசானவாசா! கயிலாசவாசா! உமாபதி! பசுபதி! திரிநேத்ரா! திரிபுரதகனா! சர்வேஸ்வரா! பரமேஸ்வரா! சர்ப்பாபரணா! சர்வபாபஹரணா! காலகால! திரிசூலா! ஆதிமூர்த்தி! கபாலமூர்த்தி! விஸ்வநாதா! பூதகணநாதா! சசிதரா! சடாதரா! நந்திவாகனா! கங்கைமோஹனா! தாண்டவா! ஆண்டவா! என்று பற்பல விதங்களாகத்துதித்து ஆனந்தமேலீட்டாற் குதித்து லிங்கமூர்த்தியின் எதிரிலிருக்கும் நந்திகேசுவரரைப் பணிந்து, அவரது பாதங்களில் தன் திருநயனங்களையணிந்து, "ஓ நந்திகேசுவரா! ரா-என்பது பரமசிவம், மா-என்பது ஆதிசத்தியுமாகி இந்தச் சத்திசிவனே ஆதிமூலப்பொருளாகிய ஸ்ரீமந்நாராயணராகிய ரா-என்னும் ஓர் அட்சரத்தினாலேயே பிரம்மத்திமுதலான மகா பாதகங்களெல்லாம் நிவாரணமாகுமென்பதும், சத்தியமானால், இந்தப்பாத்திரத்திலுள்ள அன்னம்முதலான பதார்த்தங்களையும் புசித்து, இந்தச் சாதுக்களின் சந்தேகத்தை நீக்கி, பிரமத்திசெய்த பிராமணனைக் கிருதார்த்தனாக்கி, ராமமந்திரத்தின் பலனை பலருமறியக்காட்டி என்னை யாட்கொள்வாய்" என்று உரைத்தார். அம்மாத்திரத்தில் கல்லுருவாயிருந்தரிஷபமானது எழுந்து நின்று, பலதரம் உக்காரம்போட்டுப் பிராமணரூபமாய் நிற்கும் பகவானைப்பார்த்து, முன் கால்களைச்சேர்த்து வந்தனஞ்செய்து, அன்னமுதலான சகல பதார்த்தங்களையும் உண்டு, பத்திரத்தையு முட்கொண்டு, சரணம்போட்டு, ராமநாம மகிமையைப் பலருமறியக்காட்டி, பழையபடி கல்லுருவான மாத்திரத்தில் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். தேவதுந்துமி தாம் தாமென முழங்கிற்று. பின்பு துளசிதாசர் நந்திகேசுவரனையும் பரமேசுவரனையும் தொழுது, இன்னமும் இவர்க்குண்டா பழுது சொல்லுங்கள் சாதுக்களேயென்று உரைத்துக் கடின நெஞ்சத்தைக் கரைத்து, ஓ சாது பிராமணர்களே! ரா-என்னும் ஓர் அட்சரத்தினாலேயே சகல பாபங்களும் நிவாரணமாகுமென்று இந்த ரிஷபம் பகர்ந்து பத்திரத்தோடு சகல

பதார்த்தங்களும் உண்ட விந்தையைப் பார்த்தீர்களா? உங்களுக் குற்ற ஆச்சரியத்தைத் தீர்த்தீர்களா? வெண்ணெயைவிட்டு நெய்யைத் தேடுவதுபோலவும், உள்ளங்கையைவிட்டு முழங் கையை நக்குவதைப்போலவும், ராமாவென்னுந் திவ்ய திருமந் திரத்தை நம்பாமல் ஓமம் வளர்க்கவேண்டும்; பிராயச்சித்தம் செய்யவேண்டுமென்று வெகுநேரம் தர்க்கஞ்செய்தீர்களே? பூசுரனை வாயில்வந்தபடி வைதீர்களே? அடியேன் மொழியை நம்பாமற் போனீர்களே? சந்தேகத்துக்குள்ளானீர்களே? ரா- என்னும் ஓர் அட்சரத்தின் மகிமையே இவ்வளவு இருக்கு மாயின் ராமா என்னும் இரண்டு அட்சரத்தினல் எவ்வளவு மேன்மையை யடையலாகும். ஜெயசீதாராமென்று அன் போடுந் துதிப்பவர்பால் பாபமெட்டிப் பார்க்கக்கூடுமோ? ராம நாமத்தை நம்பினவர்களை எமன் பாசத்தாற் கட்டிப் பிடிக்கக் கூடுமோ'' என்று பற்பல வார்த்தைகளாடி ராமசங்கீர்த்தனம் பாடி ஆனந்த நிர்த்தனஞ் செய்யத்தொடங்கினர்.

சாதுக்கள் ஆச்சரியப்பட்டுத் தங்களுக்குற்ற மாச்சரியங் கெட்டு, ஜெயசீதாராம் எனத் தோத்திரஞ் செய்துக்கொண்டே இன்பநடனஞ் செய்தார்கள். இப்படி வெகுநேரம் தாண்டவம் புரிந்து துளசிதாசரைப் பணிந்து, "ஓ சுவாமி! ராமநாம மகி மையை இன்றையத்தினம் அறிந்தோம்; பற்பல பாபங்களும் பஸ்பமாகுமெனத் தெரிந்தோம்; இனி இப்பிராமணோத்தமரு டன் அன்னம் புசிப்பதற்கு வாரும் சுவாமி" என்று அழைத் துக்கொண்டு மடத்திற் பிரவேசித்தார். பின்பு பிரமத்தி செய்து வந்த வேதியர்க்கு வந்தனம்புரிந்து மிகவும் பரிந்து துளசிதாச ரைப் பகவானெனத் தீர்மானித்து, அப்பூசுரர்க்கு ஓர் பத்திரம் போட்டுச் சகல பதார்த்தங்களையும் வட்டித்துத் தங்கடங்கள் பத்திரங்களில் வீற்றிருந்து நமக்குச் சமானமானவர்க ளில்லை யென்று இறுமாப்படைந்து, இது துளசிதாசருடைய பிரசாத மென்று சந்தோஷத்துடன் தின்று, சகல தீவினைகளையும் வென்று, அடைக்காயிலைகளை மென்று, ஒருவருக்கொருவர் சந் தனம் பூசிவந்த அந்தணர்க்கு சவ்வாது பூசி விசிறியால் வீசித் துளசிதாசரைக் கொண்டாடி விஷ்ணுசங்கீர்த்தனங் களைப்பாடி பிரமக்ஞானத்தை நாடிப் பரமானந்தத்தைத்தேடி, அரிதாசர் கீர்த்தியைக் கொண்டாடத் தடுமாடி, நம்மாலாகா தென வாய்மூடி, அஞ்ஞானங்களைச் சாடி, பிரம்மத்தி லிரண் டறக்கூடி, வீணாள் கழித்ததற்கு வாடி, பிர்மானந்த மேலீட்

டாற் கூத்தாடி, நாம் செய்த தவமே கோடானு கோடி எனச் சங்கல்ப விகல்பமற்று சகசானந்தத்தையுற்று என்று மடையா வின்பினைப்பெற்று நானென்பது செற்று சித்திர தீபத்தைப்போல அசைவற்றிருந்தார்கள்.

அப்போது கபட நாடக சூஸ்த்ராவதாரியாகிய ஸ்ரீமந்நாராயணரும் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவராய் க்ஞானதிருஷ்டியால் நம்மை யறிந்துகொள்ளுவார்களோ வென்கிற சந்தேகத்தால் சஞ்சலமனதோடுங்கூடி அடிக்கடி கண்களைத் திறந்து பார்ப்பதும் மூடுவதுமா யிருந்தார். இப்படி அந்திவேளை பரியந்தம் நிஷ்டையிலிருந்து பிறகு தெளிந்து சாதுக்கள் அனைவோரும் சேர்ந்து சந்தியாவந்தன முதலானதுஞ் செய்யப் பாகீரதியை யடைந்தார்கள். அத்தருவாயில் மமதாதேவி நாடோறுந் துளசிதாசரைக் காலைமாலை பணிந்துபோகும் வழக்கப்படிவந்து வந்தனந்தந்து அருகே வீற்றிருக்கும் மாயாமறையோனையும் வணங்கினுள். அந்தணர் மமதாதேவியின்மேல் மோகித்தவர் போல் அபிநயித்து பெருமூச்செறிந்து, "ஓ பெண்ணே! என் இருகண்ணே! எனக்கு உன்மீதுற்ற ஆசையைத் தீர்த்து இப்போதே என்னைக் காத்து ரட்சிக்கவேண்டும் என் ஆவியே! மமதாதேவியே!" என்று உரைத்துக்கொண்டே மூர்ச்சையாய் விழுந்துவிட்டார்.

உடனே துளசிதாசர் திடுக்கென்றெழுந்து அவரது சேவடியில் விழுந்து, மமதாதேவியினல் பன்னீரை வரவழைத்து உபசாரணை செய்து எழுப்பவே, அப்பூசுரன் "ஓ அரிதாசரே! இந்த மங்கையின்மேல் எனக்கு இச்சையாய்விட்டது; காமவிகாரங் கெட்டது; இவளியாருடைய மனைவியாயிருந்தபோதைக்கும் நீர் கருணைகூர்ந்து எனக்கு இணங்கும்படியாகச் செய்யவேண்டும்" என்று மிகவும் பரிதாபத்துடன் பன்முறை வேண்டிக்கொண்டார். துளசிதாசர் சாதுக்களறிந்தால் இவருடன் வாதுசெய்வார்களெனச் சுற்றுப்பக்கமும் பார்த்து யாருமில்லாமையால் கரங்களைச் சேர்த்து, "ஓ பிராமணோத்தமா! சந்தடி செய்யாதே; சாதுக்க ளறிந்தால் விபரீதத்துக் கிடமாகும். உமதுயிர் பிரிந்து போகும். ஜாமராத்திரியானபின் இந்தமங்கையை உமக்கு இணங்கச்செய்கிறேன். அவசரப்படாமல் பொறுத்திருமையா" என்று உபசரித்தார். அவ்வேதியர் சற்றுநேரமிருந்து சந்தியாவந்தனஞ் செய்யப்போன சாதுக்களெல்லாம் வந்ததே துளசிதாசரைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து, "ஓஜயா! பேதமிறந்த பிர்மக்

ஞானியே! கோபமில்லா நிதானியே! எனக்கோ காமவிகாரம் மேலிட்டது. அங்கத்தை யெல்லாஞ் சுட்டது. இனியென்னுற் பொறுக்கக்கூடாது. இப்போதுவந்த மாதிருக்கும் வீடெது? சீக்கிரஞ் சொல்லுமையா" என்ருர். துளசிதாசர் சாதுக்களறிந்துக் கொள்ளப் போகிருர்களென்று கண்ணுலுங் கையாலுஞ் சாடை காட்டி மௌனமாயிருக்கும்படி வேண்டிக்கொண்டார். விப்பிரன் ஐயோ! மன்மதனை யெரித்த மகாதேவனும், கங்கையின்மேல் மோகமாகித் தயக்கமற்ருரென்ருல் என்னுல் பொறுக்கக்கூடுமோ? இதுதெரிந்த நீர் என்னை இப்படி வெறுக்கக்கூடுமோ? அந்த மமதாதேவி எங்கேபோனுள்? எனக்கு மோகமுண்டாக்கி எங்கே மறைந்தாள்? எங்கே பறந்தாள்? எனக்கு வந்தகாமம் இச்சாதுக்களுக்கு வரலாகாதா? துன்பந்தரலாகாதா?" என்று பரபரப் போடும் வெறிகொண்ட மர்க்கடம்போலவும், பலவிதமான சொறியுற்ற சுணங்கனைப்போலவும், சாமர்த்தியமான ஆசியக் கூத்தனைப்போலவும், கோளன் நாக்கைப்போலவும், குதமிலாக் குடுமிபோலவும், பித்தனைப்போலவும், சித்தினியைப்போலவும் பதைபதைத்து, அங்குமிங்குமாயோடி மமதாதேவியைத் தேடத் தொடங்கினுர். சாதுக்கள் அந்தணன்மேல் முனிவுகொண்டு தூஷண வார்த்தைகள் விண்டு, "அடா மூர்க்கா! துன்மார்க்கா! உண்டவீட்டில் இரண்டகஞ்செய்யும் கண்டகனுகிய உன்னை இப்போதே துண்டந் துண்டமாய்க் கண்டங்கண்டமாக வெட்டிப் பலியிடுகிருேம். பார் என்று துள்ளிக் கீழேதள்ளி நகங்களாற் பீறிக்கிள்ளி, அடா தொள்ளி" எனத் தாருமாறுஞ் செய்யத்தொடங்கினுர்கள். துளசிதாசர் சாதுக்கள்மேல் மிகவும் வெகுண்டு பெருங்கோபங்கொண்டு அந்தணனை யழைத்துக் கொண்டு தன் மனைவிபாலடைந்து மமதாதேவியிடஞ் சொல்வதற்கிடைந்து மௌனமாய் நின்ருர். மமதாதேவி மணுளனை வணங்கிப் பதிவார்த்தைக்கிணங்கி, "ஓ சுவாமி! இப்பிராமணுேத் தமரை என்பால் அழைத்துக்கொண்டு வந்தவிதமறியேன். ஆதலால் உமது அபிப்பிராயத்தைப் புலப்படுத்துமையா" என்று பணிந்துநின்ருள். அரிதாசர், "ஓ மமதாதேவியே! இவர்சொந்த ஆவியே! என்னுடைய அன்பு உனக்குத் தேவையா யிருக்குமானுல், நீ நல்லகுலஸ்திரீயானுல், பதியின் வார்த்தையைக்கடக்கா பதிவிரதையானுல், மோக்ஷார்த்தம் வேண்டியிருக்குமானுல், இந்த அந்தணருடைய அவா நீங்கும்படி கூடிக்குலாவி யிருப்பாயாக" என்று அறைந்தார். மமதாதேவி பனிரெண்டாண்டா

கப் பட்சமாகப் பேசாமலிருந்து இப்போது பட்சமாகப் பேசும் பதியைத் துதித்து, "என் ஆர்வலனே! உமக்குரிய வஸ்துவை ஒருவருக்குத் தானஞ்செய்தால் மறுப்பவருமுண்டோ? மனைவி பதிக்கு வேருனதுண்டோ? உம்மிஷ்டப்படி நடந்துக்கொள்ள எனக்கோர்தடையும் இராது; ஏனென்ருல் பரமசிவன் பார் வதியை இராவணனுக்களிக்க அப்பத்தினி மறுத்து உரைத்த துண்டா? ஆனுல்மடத்திலிருக்கும் சாதுப் பிராமணர்களால் இவ் விப்பிரருக்கு ஓர் இடையூறு வாராமல் பாதுகாக்க வேண்டிய பாரம் உம்மதாகும்" என்று அறைந்தாள். பின் வேதியர் பாதங் களில் வந்தனஞ்செய்து, "ஓ சுவாமி! நிஷ்காமி! ஐயமின்றி சையோகஞ்செய்யச் சீக்கிரம் வாருமென்று அழைத்தாள்.

அப்போது சாதுக்கள் ஆளுக்கோர் தடியெடுத்துக்கொண்டு அந்தமாயாபிராமணர்மேல்வீழ்ந்து, அடாபரமதுரோகி! அடா உன்மத்த துரோகி! பதியின் வார்த்தையைக் கடவா இப்பத்தினி யையா பெண்டாளப் போகின்ருய். சீசி நாயே! அறிவில்லா பேயே! சீக்கிரம் இம்மடத்தைவிட்டு ஓடிப்போ. இல்லாவிட் டால் உன் தலைமண்டையை யுடைத்து மூளைசிதறப்புடைத்து கொன்றுவிடுவோம் ஒருகணத்தில் வென்றுவிடுவோம் என்று ஆர்ப்பரித்து அட்டகாசஞ்செய்து தடிகளைச்சுழற்றி யெறிந்தார் கள். துளசிதாசர் அத்தண்டங்களைக் கரத்தால் மறித்து சாதுக் கள்மேல் மிகவும் முனிவுகொண்டு, ஓர் வாளையெடுத்துக் கொண்டு, "ஓ சாதுக்களே! உங்களுடைய பிராணன்மீது உங்க ளுக்கு அவாவிருக்குமாயின் இக்கணமே இவ்விடம்விட்டுப் பேர்ந்து ஓடிப்போய்க் களிகூர்ந்து சீவனைக் காப்பாற்றிக் கொள் ளுங்கள். இல்லாவிடில் என் வாளுக்கு இரையாகுங்களென்று அதட்டிச் சாதுக்கள்மேல் குதித்து மிதித்து வதைக்கிறேன்" என்று ஆர்ப்பரித்தார். சாதுப்பிராமணர்கள் "ஓ சுவாமி! உமது கைவாளால் எங்களை வெட்டினுலும் இந்தத் துஷ்டனை மாத்திரம் மமதாதேவியின் அருகிற் போகவிடமாட்டோம்" என்று அம்மறையோன் குடுமியைப் பிடித்திழுத்து முழங்கை களாலிடித்துப் பற்களாற் கடித்துத் தண்டங்களாலடித்து மூர்ச்சையாய் விழும்படி செய்தார்கள்.

அரிபக்தர் மிகவுங் கோபதிப்தனுய் எரிந்துபொரிந்து முகங் கரிந்து அந்தணர்மேல் விழுந்து ஆக்கிரம நிக்ரோதனுய்ப் பல்லை நறநறவெனக்கடித்து மீசைகள் படபடவெனத் துடிக்கும் படியாய் மிகவும் உக்கிராகாரனுய்க் காலருத்திரனைப்போலாகித்

தன்னை மறந்து ஜீவகாருண்யமிறந்து தப்பிதஞ்செய்த விப்பிரர்களின் தாள்களையுந் தோள்களையும் கரங்களையும் சிரங்களையுங் கண்டங்கண்டமாகத் துண்டந் துண்டமாக வாளால் வெட்டிச்சாய்த்து, மூடுகளைப்போலத்தேய்த்து, உதிரப்பிரவாகத்திற்றோய்த்து, ஒருவரைவிடாமல் மாய்த்து, மாயப்பிராமணர் மூர்ச்சையடைந்ததைக் குறித்துப் பாதவித்துக் கரங்களைக்குவித்துத் தன் மனைவியை யழைத்து, "ஓ கற்புள்ள மாதே! சீக்கிரம் இவ்வேதியரின் மூர்ச்சையைத் தெளிவித்து பன்னீரிற் குளிப்பித்து அவரிச்சைப்படி நடந்துக்கொள்" என்று உரைத்தார். அன்பான மொழிகளால் மமதாதேவியின் மனதைக் கரைத்துப் பார்வதி வாசமாயிருந்த பன்னகசாலையில் யாரும் போகாமற் காவலிருந்த விக்கினேஸ்வரரைப்போலவும், வாணாசுரன் வாயிலைக்காத்த வாமதேவனைப்போலவும், மாபலியின் வாயிலிற் காப்புசெய்த வாசுதேவனைப்போலவும், பஞ்சபாண்டவர்களைப் பாதுகாத்து இரட்சித்த பத்மநாபனைப்போலவும், பிறகு மயிலிராவணன் இராமலட்சுமணரை மோசஞ் செய்துவிடப் போகிறானெனக் காவலிருந்த அநுமானைப்போலவும், புஜத்தின்மேல் வாளை ஏந்திக்கொண்டு மகிமைபெற்ற துளசிதாசர் காவலிருக்குந் தருவாயில் மமதாதேவி மூர்ச்சையடைந்திருக்கும் முதியோர்மேல் பன்னீரை வீசி, விசிறிகொண்டு வீசி, ஓ சுவாமி! எனப் பலதரங் கூப்பிட்டும் பேசாமலிருக்கும் அந்தணரை அரிதாசர் வீட்டினுட் கொண்டுபோய் மலரணைமேற் படுக்கவைத்து உபசாரணைசெய்து வெளியேவந்து நந்திகேசுவரரைப்போலவும், துவாரபாலகரைப்போலவும் காவலிருந்தார். மமதாதேவி மணாளன் வாக்கியப்படி கதவை மூடிக்கொண்டு நடுராத்திரிபரியந்தம் அப்பூசுரருக்கு அநேகவிதங்களாக உபசரணை செய்யச்செய்ய அம்மாயாமறையோன் பிரேதம்போல் அசைவற்றிருந்தார். மமதாதேவி கணவனை விளித்து, "ஓ சுவாமி! இவ்வேதியர் மரித்துப்போனதுபோற் றோன்றுகின்றது" என்றிரைந்து அழத்தொடங்கினாள். பரமபாகவதன்வீட்டினுட்போய்ப் பூசுரனைப் புரட்டிப்பார்த்து அங்கம் வேர்த்துப் பிராணன் போய்விட்டதெனத் தீர்மானித்து, இடும்பு செய்யும் கொடும்பாவிகளாகிய முப்புரிநூலோர் தண்டத்தால் அடித்துக் கொன்றுவிட்டார்கள்; நன்றி கெட்டார்கள்; இனி நானென்ன செய்வேன் தெய்வமே! என்று தொழுது, கோவென்றழுது, வந்ததேபழுது, இனி யிருப்பதேன் கழுது என்று புலம்பி கண்

ளிராற் றேகத்தையலம்பி ஒன்றுந் தோன்ருதவராய்த் தன் கைவாளால் தன் கழுத்தை யறுத்துக் கொள்ளப்போனுர்.

அதுதெரிந்த பக்தவச்சலனுகிய பகவான் பிரேதம்போல் அசைவற்றிருந்ததுபோய்த் திக்கென்றெழுந்து ஸ்ரீராமாவதாரத்துடன் பிரசன்னமாகித் துளசிதாசனுடைய கரத்தைப் பிடித்துக்கொண்டு “ஓ மனைவியைக் கூட்டிக்கொடுக்க மனமுவந்த மாதவனே! சுயம்பிரகாச ஆதவனே! உன்னை எந்தவிஷயத்தைக் குறித்துக் கொண்டாடுவேன்? ஓ! ஓ! உன்னைப்போன்ற தயாள குணமுடைய பக்தனை எந்தயுகத்திலும் அறியேன்? உனக்கு என்னவாமீயலாமெனத் தெரியேன்? பட்சத்துடன் பாரியைக் கொடுக்க மனம்வருதல் லேசானதா?” என்று பற்பலவார்த்தைகள் பகர்ந்து அரிதாசரை மார்புடன் அணைத்துக்கொண்டு சுகஜீவியாய் வாழ்ந்திருக்கக்கடவாய்” எனவிண்டு இறந்துகிடக்கும் அந்தணர்களையெல்லாம் எழுப்பி, “ஓ துளசிதாசா! உன்னைச் சோதிக்கும்பொருட்டு இவ்வித வேஷமெடுத்து பற்பல விதங்களாக நடித்தேன். இதைக்குறித்து ஆயாசப்படவேண்டாம். இனி உன் மனையாளுடன் கூடிச் சுகபோகங்களை அனுபவித்து இறுதியில் நீங்கள் இருவரும் என் பதவியைப் பெறுங்கள்” என்று திருவாய்மலர்ந்தருளினுர். அதற்கு அரிபக்தர் “ஓ பகவானே! பனிரெண்டுவருஷங்களாய் மனைவியுடன் பேசாமலிருந்த என் வைராக்கியத்தைக்கெடுத்து மதிமருளும்படியாகத் தொடுத்துக் கபடஞ்செய்த காகுத்தனே! கக்கினது பாயாசமானுலும் நக்குவாருண்டோ? சன்யாசமானபின் சமுசாரத்துக் குட்பட்டவருமுண்டா? பூண்டவிரதங் கெடலாமா? பேரின்பத்தின்மேல் இச்சையானபின் சிற்றின்பத்தைக் கனவிலும் நினைக்கலாமா? சொர்க்கத்தைநாடினவன் நரகத்தை நாடுவதுபோலும், கற்பைக் காக்கும் விரதம்பூண்டவள் கணிகையானதுபோலவும் அல்லவோ இருக்கின்றது. ஓ தெய்வமே! உன் திருவடிகளை நாடின அடியேன் கொடியேனுனுலும் இவ்விஷயபோகத்தைக் கனவிலும் நினைப்பேனு? ஸ்திரீயை மறந்தும் உபசரிப்பேனு? என்றைக்கு வீட்டைவிட்டுப் புறப்பட்டேனே அன்றே சிற்றின்பத்தை மறந்தேன்; மயக்கவலையைத் துறந்தேன்; யான் அனுபவித்த விஷயபோகத்தால் வந்த சுகம் போதும் போதும். அப்பப்பா! கன்னியர் மாயையிற் சிக்கினவனுக்குப் பரமபக்தியுமுண்டா? பாரந் தலைகொண்டவர்க்கு அல்லல்விடும் பரிசமுண்டா? கோதையர் மாயையிற் சிக்கின பேதையர்க்கு வேதை

யின் பலனன்றி வேறு சுகமனுபவிப்பதுண்டா? அசுணப்பட்சி யானை விட்டிற்பூச்சி மீன் வண்டென்னும் ஐந்தும், சப்த ஸ்பரிச ரூப ரச கந்தமென்னும் ஐந்து விஷயங்களில் ஒன்றொன்றினால் தன் பிராணனுக்குக் கேடுவருவித்துக் கொள்ளுமானால் ஐம்புலனும் மயங்கச்செய்யும் ஆயிழையார்மேல் அவாக்கொண்டிருப்போன் அழிவதற்கு ஓர் தடையுண்டா? சிலந்தியை வருட அப்போது சுகமாயிருந்து பின்பு பெருவாதனைக்கு உட்படுத்துவது போல நிமைநேர சுகத்தை யிச்சித்த ஆடவன் அக்காமத்தால் பலநாளுந் துன்ப மனுபவிப்பதற்கோ ரையமுண்டா? உமது சிருஷ்டியை காமாந்தகாரத்தால் விர்த்தியடையச்செய்து தெரிந்த அடியேன் உமது பூரணகடாட்சம் பெற்றிருந்தும் நரகக் குழியிற் புகுவேனா? ஜலதாரையில் ஸ்நானஞ் செய்வாருமுண்டா? மலத்தில் அழுந்துவாருமுண்டா? குஷ்டம் முதலான வியாதிகளால் நஷ்டப்படுத்துவது காமமேயல்லவா? பரந்தாமனாகிய உமது நாமருசியை யனுபவித்தோர்கள் காமரசத்தை இச்சிப்பார்களா? தெரிந்தும் விஷத்தைப் பட்சிப்பார்களா? உமது கபடநாடகத்தை நானும் சற்றறிந்தவனே? உமது மாயையைக் கடக்கும் மார்க்கம் கிரகித்துத் தெரிந்தவனே. ஆதலால் இவ்வார்த்தையை இனிச் சொல்லாமல் சந்திர சூரியர் உள்ளமட்டும் ஸ்திரீயைப் புல்லாமல் நின்னுமபஜனையல்லாமல் வேறு வார்த்தை சொல்லாமல் காலங்கழிக்கும்படியாகக் கருணைகூர்ந்து ஆட்கொள்ளுமையா" என்று பணிந்து பற்பலவிதங்களாகத் துதிக்கத்தொடங்கினார்.

பகவான் பரமபாகவதன் இருகரங்களையும் பிடித்துக்கொண்டு தந்தை வாக்கை மறுக்காமல் தாயைவெட்டின பரசுராமர் போலவும், தாய்வார்த்தையைத் தள்ளாமல் சகோதரர் மனைவியரைக்கூடிய வேதவியாசனைப்போலவும், துரோபதையைக் கூடினபஞ்சபாண்டவர்களைப்போலவும், தன்னுயிரைக்கொடுத்த கர்னமகாராஜனைப்போலவும், என் வார்த்தையைத் தள்ளாமல் யாதொரு மொழியும் விள்ளாமல் பதிவிரதாசிரோமணியாகிய மமதாவேவியுடன் கூடிச் சிலநாள் இல்லற தர்மத்திலிருந்து பின்பு என் பதவியை யடைவாயப்பா" என இரந்து கூறினார். அவ்வாறு கூறும் பகவான் பாதங்களில் அரிபக்தர் வணங்கி, "ஓ என் ஆண்டவனே! இதையன்றி வேறெது சொன்னாலும் கேட்பேன். அன்றி உன் திருவடிசாட்சியாக ஸ்திரீபோகத்தை மாத்திரம் இச்சிக்கவேமாட்டேன். தேவரீரை நம்பின மமதா

தேவியை இப்போதே தேவரீர் பரமபதத்துக்குக் கொண்டுபோ மையா" என்று பணிந்தார். பகவான் இனி எவ்விதமாக உரைத் தாலும் துளசிதாசர் சமுசாரத்திற்கு உடன்படமாட்டார் என்று அறிந்திருந்தும் பின்னுஞ் சொல்லுவார்: "அப்பா துளசி தாசா! முற்பிறப்பில் நீ மரா மரா வெனத் தியானஞ் செய்துக் கொண்டே தவத்திலிருந்தபொழுது உன்மனைவி உன்பாலடை ந்து காமவிகாரங்கொண்டு உன்னைப் பலவந்தஞ்செய்ய, நீ இவ் விஷயபோகம் பொல்லாதென்று இகழ்ந்து கூற, உன் மனைவி கூடாதெனப் பலவந்தஞ் செய்ய, நீ சிலநாட்சென்றபின் உன் இஷ்டப்படி நடக்கின்றேனென்று உரைத்து அப்பொழுது தப்பித்துக்கொண்டு அவள் கண்ணுக்குப் புலப்படாமல் காட் டில் மறைந்து, அடர்ந்த புதறுகள் சூழ்ந்த ஓரிடத்தில் தவ நிலையி லிருந்துவிட்டாய். உன் மனையாள் உன்மே லிருக்கும் மோகத்தால் பல திசைகளிலும் தேடித்தேடித் திரிந்து கலை பிரிந்த மான்போற் கதறிக் கதறி பதறிப் பதறி ஆவியை விட்டு என் பதவியை யடைந்து, நீ துளசிதாசர் அவதார மெடுத்ததே, தான் மமதாதேவியாய்ப் பிறந்தாள். ஆதலால் இவளிச்சைதீர நீ முற்பிறப்பிற் சொன்ன வாக்கியத்தின்படி கூடியிருக்கவேண்டு மல்லவா" என்றார். அரிபக்தன், "ஓ தெய்வமே! நான் முற்பிறப் பிற் சொன்ன வாக்கியப்படியே இம்மமதாதேவி வெறுக்குங்கால பரியந்தங் கூடியிருந்து அவளாய் வெறுத்தபின் நானும் வெறு த்து விராகத்தை யடைந்தேன். பிளந்த கல் கூடாததுபோல் இனியொருபொழுதுங் கூடாதென்று வணங்கினர். பகவான் துளசிதாசர்மேல் மிகவும் வாஞ்சையாயிருக்கும் மமதாதேவி யம்மையாரை நோக்கி, "ஓ அம்மா பாக்கியவதி! உனக்கு இக போகம் வேண்டுமா? பரபோகம் வேண்டுமா? உனது அபிப்பிரா யத்தை வெளிப்படுத்து?" என்று கேட்டார். மமதாதேவி, "ஓ பகவானே! வேண்டா மென்கிறவர் கழுத்தில் லிங்கங்கட்டுவ தாற் பிரயோசன மேதேனுமுண்டா? அதுபோல் மிகவும் விர க்தியடைந்திருக்கும் என் கணவனை வேண்டி என்னைச் சேர்ந்த போதிலும் அவர் ஒற்றுமையா யிருக்கப்போறதில்லை. ஆயி னும் அவரை இணைபிரியாமல் பார்த்திருப்பதே எனக்குப் போதுமான இன்பம்" என்று வணங்கினள். துளசிதாசர், "ஓ மமதாதேவி! நீ என் சொற்படி பரமபதத்தைச் சேரும்; சில நாட்சென்றபின் நானும் வருகின்றேன்; என்வாக்கியத்தை மறுத் தல் உனக்கழகல்ல" என்றார். மமதாதேவி "உமதிஷ்டப்படியே

நடக்கின்றேன்" எனப் பணிந்து நின்ருள். பகவான் தாரகனை நினைக்க, உடனே அத்தாரகன் ஓர்புஷ்பவிமானத்தைக் கொண்டு வந்து நிறுத்தப் பகவான் அதிலெழுந்தருள மமதாதேவி மகா பாக்கியமென்று தன் கொழுனன் திருவடிகளிற் பணிந்து, "ஓ ஸ்வாமி! இதுநாள்பரியந்தம் நானறியாமலியற்றிய குற்றங்களை யெல்லாம் நற்றவமாகக்கொண்டு முற்றிலும் என்னை யாட்கொள் வீர்" எனப் பற்பலவிதங்களாகத் தோத்திரஞ்செய்து, உம்மை விட்டு எப்படி பிரிவேனென்று அழுதகண்ணுந் தொழுத கையு மாய் நின்ருள். அவ்வாறு நிற்கும் மமதாதேவியை துளசிதாசர் "ஓ பாக்கியவதி! எனக்குகந்த யோக்கியவதி! நீ நல்ல உத்தமி யானபடியினுலேயே உனக்காகப் பகவான் வந்து எனக்குத் தரி சனந் தந்து பலரும் பார்க்கப் புஷ்பவிமானத்தை வரவழைத் துப் பரமபதத்துக்கு வரும்படியாய்த் திருவாய்மலர்ந்தருளினுர். இப்பேர்க்கொத்தபேறு இப்புவியில் யாருக்குங் கிடைக்கமாட்டா தென்று உரைத்துச் சீக்கிரம் பகவான் லோகத்துக்குப்போ; நானும் வருகிறேன். இதுசத்தியம்" என்ருர். மமதாதேவி இன்று உம்மைப் பிரியலாச்சுதோவென்று ஓலமிட்டு அழுதுக் கொண்டும், பதிவாக்கைக் கடக்கக்கூடாதகுறையால் விமானத் தில் ஏறின மாத்திரத்தில் தேவதுந்துபி தாம்தாமென்று முழங் கிற்று. தேவர்கள் பூமாரிபொழிந்தார்கள். பகவான் துளசிதாச ருக்கு ஆசிகள்செய்து தாரகனை எச்சரித்தார். தாரகன் அரைக் கணத்தில் வைகுந்தத்திற் கொண்டுபோனுர்.

இவ்வாச்சரியத்தை யறிந்து மடத்திலுள்ள சாதுப்பிரா மணர்கள் என்றும் அடையா வியப்படைந்து, துளசிதாசர் முன்னிற்பதற்கு இடைந்து மமதாதேவியையும் புகழ்ந்து, அரி தாசரைப் பற்பலவிதங்களாகக் கொண்டாடி மகிழ்ந்து, ஐயோ! பகவானென்று அறியாமல் இப்படி வருமெனக்குறியாமல் ஸ்ரீமந் நாராயணரைப் பதைபதைக்க அடித்தோமே. ஒரே வைராக்யம் பிடித்தோமேயென்று தங்களைத் தாங்களே யிகழ் ந்து துளசிதாசருடைய மகிமையையும், மமதாதேவி வைகுந் தத்தை யடைந்த விந்தையையும், பலவிடங்களிற் சொல்லிக் கொண்டே திரிந்தார்கள். அதுகேட்ட காசிதேசத்தரசன் முத லானவர்களும் அதிசயித்து துளசிதாசர் பக்கலடைந்து பற்பல விதங்களாகத் துதித்து நீர் இப்பட்டணத்தில் எழுந்தருளி யிருக்கும்படியான பாக்கியம் நாங்களென்ன செய்தோமோ? நாங்கள் செய்ததவமே மாதவம் என்றுரைத்து அவரை அரைக்

கணமும் பிரியாமலிருந்தார்கள். துளசிதாசரோ பகவான்வந்து செய்துப்போன விந்தைகளை நினைந்து நினைந்து ஒன்றுந் தோன்றாதவராய் ஆனந்தவாரியில் மூழ்கித் தன்னை மறந்திருந் தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின் னுஞ் சொல்லத்தொடங்கினர்.

துளசிதாசரைப் பகவான் சோதித்த அத்தியாயம்

முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

## பகவான் துளசிதாச னுருவாய் வந்து

பிரேதமான பிராமணனை எழுப்பிய

அத்தியாயம்

---

கேளுங்கள் சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் சொல்லு வார்: இவ்விதமாகத் துளசிதாசர் பற்பல தேசங்களில் தன்பேர் விளங்கப் புகழ்பெற்றிருக்குங் காலத்தில், டில்லிநகருக்கு அரச னான அக்பர்பாதுஷா துளசிதாசருடைய மகிமையைப் பலருஞ் சொல்லக் கேள்விப்பட்டுப் பார்க்கவேண்டுமென்கிற வாஞ்சை யால் வாரணாசியையடைந்து, அரிபக்தரைத் தரிசித்துப் பாதங் களைப்பரிசித்து மகானுபாவரெனப் பூசித்து, அத்தியந்த பத்தி யுடன் விசுவாசித்து, அவருரைக்கும் பிரமக்ஞானத்தைச் சிர வணஞ் செய்துக்கொண்டிருக்குங் காலத்தில், அக்காசியில் ஓர் உத்தமபிராமணர் பிராரப்தபோகம் அனுபவித்துத் தீர்ந்ததே இவ்வாக்கை அரை நிமை யிருக்காதென்கிற வேதவாக்கியப்படி தேகவியோகமடைந்து பிதுர்லோகத்தில் பிரவேசித்தார். அவர் மீது தன்னுயிர்போல வாஞ்சைகொண்டிருந்ததுமன்றி இன் னஞ் சுகபோகங்களை யனுபவிக்க வேண்டுமென்கிற அதிக அவாக்கொண்டிருந்த மகாபதிவிரதையாகிய அவர் பத்தினி தன் காவலன் மரித்ததைக்குறித்து மிகவும் புலம்பிக் கண்ணீ ராற் கணவனையலம்பிப் புருஷனின்றி இனி எப்படிபோகும் பொழுது? விதவையானபின் இவ்வுலகிலிருப்பது மிகவும் பழு தென்று பகவானைத் தொழுது தேம்பித்தேம்பியழுது, "ஓ தெய் வமே! சின்னஞ்சிறுவயதுள்ள கன்னிகையாகிய என்னை கைமை யாக்கிவிட்டாயே. இவ்வேழையைக்கைசோரவிட்டாயே; பதியே

தெய்வமென்றும், பதிசேவையே மோட்சமென்றும், பழமறையி லெழுதிய பகவானே இனி யாரைத் தெய்வமாகப் பாவிப்பேன்? யாருக்கு சேவைசெய்து பூசிப்பேன்? இப்படி பல சீவர் புலம்பி யழுவது உனக்குச் சந்தோஷமோ? துக்கமயமான இப்பிரபஞ் சத்தைச் சிருஷ்டித்துப் பட்சியினிறகுபோல் பன்முறை பரதவிக் கும்படியாகச் செய்வதால் உனக்குவரும் மேன்மை யேதோ? என் னைப்போல் ஏழ்மையையுடைய மாதர்கள் எத்தனைபேர் வேதைக் குட்பட்டிருக்கின்றார்களோ? அரி அரி! ஆண்பால் பெண்பா லெனச் சிருஷ்டித்து அதிற் பெண்பால் ஆடவனுக்கு அடக்க வொடுக்கமா யிருக்கச்செய்து, ஒருவரைவிட்டு ஒருவர் நிமைபிரி யாமலிருக்க அத்தியந்த இச்சையை யுண்டாக்கி ஒருவரை அழை த்துக்கொண்டு ஒருவரை அயர்ந்து அலரும்படியாகச் செய்வது காருண்யக்கடவுளாகிய உமக்கு அழகோ? இப்படி ஒருவரை விட்டு ஒருவர் பிரிவாற்றமல் பேய்பிடித்தவர்போல் மதிமயங்கிப் பிரேதத்துக் கிணையாயிருக்கும்படிச் செய்வதால் உமக்கு வரும் பயன் யாதோ? ஓ தெய்வமே! பூதபவுஷிய வர்த்தமானமென்னுந் திரிகாலங்களிலும் நடக்குஞ் செயல்களெல்லாம் அறிந்த நீரே சீதையை இராவணனெடுத்துக்கொண்டு போனபோது சொல் வதற்கு அபாரமான துக்கசமுத்திரத்தில் அமிழ்ந்தீரென்றல் அறியாப்பேதையான நான் இப்பிராணநாயகனைப் பிரிந்து பிரா ணனுடன் எப்படியிருப்பேன்? சகலசத்திகளிலும்வல்லமையான சீதாபிராட்டி உமது பிரிவாற்றமல் அழலில்வைத்த மெழுகைப் போல் கதறிக்கதறிப் பதறிப்பதறிக் கரைந்தழுதிருப்பாளானல் ஒரு வல்லமையுமில்லாத என்னல் பிராணநாயகனைப் பிரிந்து உயிருடனிருக்கலாகுமோ? என் உயிர் உன்னலன்றிப் பிறரால் நீங்கிப்போகுமோ? ஓ என் ஆண்டவனே! என்னைப்போல் பல சீவர்கள் கலக்கமடைய நீர் ஆனந்தமாயிருந்தால் நலனே? இப் படி ஜீவர்கள் துயரடைவது தீவினைப்பலனே? நீபடைத்த ஜீவர் களுக்கு நீயறியாமல் தீவினைவந்தணுகுமோ? அப்படியடைய நீ பூர்ணத்திற் குறைந்தவனே? ஆ! ஆ! உன்னுடைய மாயை செய்யும் விந்தைக்கு வியப்படையாதவர்களுமுண்டோ? ஓ பராத்பரா! துன்பத்திலிருந்து உயிர்தரிப்பதிலும் இறத்தல் அழகல்லவோ? பிராணநாயகனைப் பிரிந்த பதிவிரதைகள் அரை நிமை பிராணனுட னிருப்பார்களோ? பின்வரும் பழிக்கு உட்படுவார்களோ? பதினைந்து வயது பருவமுள்ள நான் பதி யிழந்தபின் இவ்வுலகிலிருந்தாலும் பழிவந்தடையாதோ? காம

விகாரத்துக்குந் தடையேதோ? பிர்மாதி தேவர்களாலும் ஜயிக்கக்கூடா மாரனை என்னுற் ஜெயிக்கக்கூடுமோ? காமக்கடலைக் கடக்க லேசானதோ? பதியின் பட்சத்தைப் பட்சிகளே சகிக்காமல் தட்சணம் மரிக்குமாயின் ஐந்தறிவுள்ள நான் மரணமடையாமலிருந்து இவ்வுலகில் இடையாமல் ஓர் ஏதுதேடவேண்டியதே முக்கிய காரணமல்லவோ என்று கங்கையில் போடக்கொண்டுபோகும் கணவனுடன்போய் நானும் பாகீரதியிற் குதித்திறப்பதே சத்தியம். இறவாமலிருப்பதே பயித்தியம். இத்தேகம் எத்தனை நாளிருந்தாலும் அனித்தியம். பதியுடனிறத்தலே நித்தியம். எனத்துணிந்து துக்கந்தணிந்து கங்கையை நாடிப் போகின்றவள்; துளசிதாசருடைய மடத்தில் அக்பர் பாதுஷா முதலானவர்களுங்கூடி ஏககூட்டமாயிருக்கக்கண்டு, இந்த மகாத்மாவைத் தரிசனஞ்செய்துக்கொண்டு பதியைத் துதித்துக் கங்கையிற்குதித்து மோட்சகாட்சியை யடைவேனென்று மகாசபையில் நாணமில்லாமற் சென்று துளசிதாசர் முன்னின்று பகவானேயெனப் புகன்று சிரசாஷ்டாங்கமாகத் தெண்டஞ்செய்தாள். அப்போது அக்பர்பாதுஷாவுடன் பிரமக்ஞான வார்த்தைகளை ஆனந்தத்தோடும் பேசிக்கொண்டிருக்கும் துளசிதாசர் சந்தோஷமேலீட்டால் அந்தப் பிராமண ஸ்திரீயை நோக்கி, "ஓ அம்மணி! நீ அஷ்டயிசுவரியமும் அஷ்டபுத்திர பாக்கியமும்பெற்றுச் சுபமாங்கலிய ஸ்திரீயாய் வாழ்ந்திருக்கக்கடவாய்" என்று ஆசிர்வாதஞ் செய்தருளினர். அவ்வசனத்தைக்கேட்ட பிராமணுேத்தமி நகைத்து, "ஓ சுவாமி! விந்தையான வசனத்தைப் புகன்றீர். என் கணவனிறந்து ஒரு ஜாமமாயிற்று. என் மங்களமும் போயிற்று. என் கணவனைக் கங்கையில்போடக் கொண்டுபோகிறுர்கள். நானும் அவருடன் பாகீரதியிற் குதித்திறக்க எண்ணங்கொண்டு கூடவே தொடர்ந்து வந்து இவ்விடத்தில் ஏககூட்டமாயிருக்கக்கண்டு உம்மைத் தரிசனஞ்செய்துக்கொண்டு பிராணனை விடலாம் எனத் துணிந்து வந்தேன். வந்தவிடத்தில் தேவரீர் கேட்டவர்களெல்லாம் அதிசயிக்கும்படியான ஆசிர்வசனம் புகன்றீர். புருஷனிறந்தபின் எனக்கு எங்கிருந்து புத்ரபாக்யமுண்டாகும். இனி கள்ளபுருஷரை நான் சேர்ந்து பிள்ளைகளைப் பெறவும்வேண்டுமோ? இதர புருஷர்களை நான் புணர்ந்து மானங்கெடுவதுடன்ஈனமடைந்து நான் எமதண்டனைக்கு உட்படுவதைப் பார்க்கிலும் இறத்தலழகல்லவோ? உமக்கும் விரித்துச் சொல்லவேண்டுமோ? அல்லா

மல் பதிவிரதைத்தன்மை கெட்டுப் பாபுருஷனைக் கூடி நான் பல பிள்ளைகளைப் பெற்றாலும் நான் சுபமங்கிலிய ஸ்திரீயாய் வாழ்வதெங்கே? தேவரீர் செய்த ஆசீர்வாதப் பலனெங்கே? பகவானைப் பலருக்குந் தரிசனந் தருவித்த மகானுபாவராகிய தேவரீர் வாக்கில் நிஷ்பலமான வாக்கியம் பிறக்கமாட்டாதே? பெரியோர்களின் ஆசீர்வாதப்பலன் பெற்றவர்க்கு யாதோர் வியாகுலமும் வரமாட்டாதே. உத்தமர்கள் ஆசீர்வாதப்பலன் ஒருபோழ்தும் தப்பிப்போகமாட்டாதே? நான் கைமையாகுங் காரணமிருந்தால் இப்பேர்க்கொத்த வாக்கியம் புறப்படமாட்டாதே" எனப் பற்பல வார்த்தைகளாடினாள். ஓ பகவானே! நீர் செய்த ஆசீர்வாதப்படியே நான் சுபமாங்கிலிய ஸ்திரீயாய் அஷ்டபுத்திரரைப்பெறச் சீக்கிரம் என் காவலனைப் பிழைப்பிக்க வாரும்; கடைக்கண்ணாற் பாரும்; மாங்கல்யபிட்சையைத் தாரும்; கிருபைகூறும்; என்று ஏத்திப்பணிந்தாள். அப்போது அக்பர்பாதுஷாவும் அவனுடைய மந்திரிபிரதானிகளும் சேனைகளும் "இப்போதுதான் துளசிதாசருடைய மகிமையைப் பிரத்தியட்சமாய்ப் பார்க்கவேண்டும். இறந்தவர்களை எழுப்ப ஒருவராலாகுமா? சகல சாமர்த்தியமுள்ளவரெனப் பலரும் புகழ்ந்தது அசத்தியமோ? சத்தியமோ? எல்லாம் ஓர் நாழிகையில் தெரியவருகிறது" என்று துளசிதாசருடைய வதனத்தைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். துளசிதாசரோ பிராமணஸ்திரீ யுரைத்த வாக்கியங்களைக் கேட்டுத் திடுக்கிட்டு மோசம் வந்தது, இப்பேர்க்கொத்த அபாரமான வார்த்தை என் வாக்கில் ஏன் பிறந்தது. இவள் மனம் ஏன் நொந்தது எனக்கேன் அவமானந் தந்தது. இறந்தவர்களை எழுப்ப ஒருவர்வசமா? எழுப்ப ரிஷிகள் வங்கிஷமா? மேன்மையான மகிமையுடையவர்களாலும் விதியைத் தடுக்கக்கூடுமா? விதியைத் தடுக்கும்படியான வாக்கைக் கொடுக்கக்கூடுமா? எனப் பற்பலவிதங்களாய் யோசித்துப் பகவானை மனதிலேயே பூசித்திருந்தார். பின்பு அந்தப் பதிவிரதையைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து, ஓ அம்மா! இப்போது என் வாக்கிலிருந்து புறப்பட்ட. ஆசீர்வசனம் நானாகச் சொல்லவில்லை. ஸ்ரீமந் நாராயணரே என் வாக்கிலிருந்து உரைத்தார். இதற்கு நான் என்னசெய்யட்டும். உள்ளபடியே முடியட்டும். என் வாக்கு பொய்த்துப்போனாலும் போகட்டும், இனி எப்படியானாலு மாகட்டும். நீ உன் கணவனிடம் போய்ச்சேர்" என்று உரைத்துப் பிரமவிலாசமான

முகங்கறுத்து அக்பர்பாதுஷாவின் வதனத்தைப்பார்க்க நாண மடைந்து யாதோர் மொழியும் பேசுதற்கிடைந்து, தலையைத் தாழ்த்திக்கொண்டு பகவானை வாழ்த்திக்கொண்டிருக்கையில், பக்தவர்சலனாகிய பகவான் கங்கையிற்போடக் கொண்டுபோகும் பிரேதத்தினிடம் துளசிதாசர் வடிவுடன்வந்து, சுமந்து செல்வோர்க்குத் தரிசனந்தந்து, ஓ இறந்த பிராமணா! தன்னை மறந்த பிராமணா! உன் மனையாளுக்கு நான் செய்த ஆசிர்வாத வாக்கியப்பிரகாரம் யெழுந்து என்னுடன் வருவாயாக" என்று உரைத்தார். அம்மாத்திரத்தில் பிரேதமாய்ப்போன பிராமணன் உயிர் பெற்று "இதோ வருகிறேன் சுவாமீ" என்று உரைத்தான்.

அம்மாத்திரத்தில் அவனை யெடுத்துக்கொண்டு போகும் அந்தணர்கள் அதிசயித்துப் பிரமைகொண்டு மரித்த மறையோனை நோக்கி, இறந்துபோன நீ மறந்து தூங்கினவனைப் போல் எழுந்தகாரணம்யாதோ? எனக்கேட்டுக் கட்டுகளை யவிழ்த்துவிட்டார்கள். உடனே அம்மாதவன் சந்தோஷமுகத்துடன் எழுந்து துளசிதாசர் பாதங்களில் விழுந்து, "ஓ என் ஆண்டவனே! என்னை யாட்கொள்ளும்பொருட்டு மடத்தைவிட்டு இவ்வளவுதூரம் நடந்துவந்தீரோ? அரிதான சேவை தந்தீரோ? என்று உரைத்துக்கொண்டே அவர்பின் நடந்துபோனான். மாயா துளசிதாசர் அப்பிராமணனை யழைத்துக்கொண்டு துளசிதாசர் படத்திற் பிரவேசிக்க, அப்போது கங்கையிற் குதித்து இறக்க வெண்ணங்கொண்டுவரும் பிராமணோத்தமி துளசிதாசரும் மரித்த மணாளனும் சபையில் வருவதைக்கண்டு, ஆனந்தங்கொண்டு அங்கிருந்த துளசிதாசர் இங்கு எப்படி வந்தார்? என்றும், என்கணவனுக்கு உயிர் எங்ஙனந் தந்தாரென்றும், ஆச்சரியப்பட்டுமாச்சரியங்கெட்டு ஆனந்தக்கண்ணீர்சொரிய அவர்கள் பின்றொடர்ந்துபோய் அக்பர்பாதுஷாவின் முன் வீற்றிருக்கும் துளசிதாசரையும் தங்களுடன்வரும் துளசிதாசரையும்பார்த்து வியப்புற்றுத் துளசிதாசரே பகவானெனத்துதித்து பற்பலவிதங்களாய்த் தோத்திரஞ் செய்யத் தொடங்கினான். மாயாவிலாசனாகிய பகவான் அக்பர்பாதுஷாவை நோக்கிச் சந்தேகத்தைப் போக்கி, "ஓ பாதுஷாவே! நான் இப்போ ஆசீர்வாதஞ்செய்த பிரகாரமே மரித்த பிராமணன் இதோ உயிர்பெற்று எழுந்து வந்தான். அவன் மனையாளுக்கு மாங்கல்யந் தந்தான். ஆதலால் இராமநாமமும் மெய்யே. துளசிதாசனென்னும் என்வாக்கும் மெய்யே" என்று அறைந்து மாயமாய் மறைந்தார். உடனே

தேவவாத்தியம் தாம்தாமென முழங்கிற்று. சுரர் பூமாரி சலசல வெனப் பொழிந்தார்கள். அக்பர் பாதுஷா திடுக்கிட்டு ஜயபுத்தி கெட்டு தலையைத் தாழ்த்திக்கொண்டு தன் எதிரில் எழுந்தருளி யிருக்கும் துளசிதாசரையும் தன்னெதிர் வந்து நின்று சிலமொழி கள் புகன்று மாயமாய்ப்போன துளசிதாசரையும், இறந்த பிரா மணன் உயிர்பெற்று எழுந்துவந்து நிற்பதையும், அவன் பக்கத் தில் நின்றுகொண்டு அனந்தம் விதங்களாகத் துதிக்கும் பிராம ணோத்தமியையுங்கண்டு விந்தையென்றுவிண்டு, இனி இவர்க்குத் தொண்டுசெய்வேனென்று உட்கொண்டு, மடத்தில் நடுவே நின்று இவர் சொல்மொழிகளே கற்கண்டு, இவர் முன் நம்மதத்தோர் பெண்டு இவரைத் தூஷிப்போர்களைச் செய்வே னிரண்டு துண்டு என்கிற பற்பல வார்த்தைகளைப் புகன்று பக்தியுடனெழுந்து நின்று சிரசாஷ்டாங்கமாய் வந்தனம்புரிந்து மிகவும்பரிந்து, "ஓ சுவாமி! உம்முடைய மகிமையை என் ஒருவனாலுரைக்கப் போமோ? இவ்வுலகிலுள்ள மானிடர்க ளனைவராலும் விரிக்கப் போமோ? ஓ என் சற்குருநாதன் தனயரே! யாவரும் போற்றும் வினயரே! பூனைபோலிருந்து புலிபோற் பாய்ந்ததென்னும் பழ மொழிப்படி காமியாயிருந்து நிஷ்காமியாயுயர்ந்து, இறந்தவர் களை எழுப்பின மஹானுபாவரே! யான்தொழுந் தேவரே! இனி ஓர்கணமும் உம்மைவிட்டுப் பிரிந்து என் உயிருடன் இருக்க மாட்டேன் எமது சொந்தநாட்டுக்குவந்து நாடோறுஞ் சேவை தந்து எங்களை யாட்கொள்ளவாரும்" என்று அறைந்து யானை யின்மேல் ஏற்றிக்கொண்டு காசிராஜனை நோக்கி "ஓ அரசனே! என்னுலிடிக்கப்பட்ட கோயில் குளங்களைக்கட்டி முன்னிலும் தர்மதானங்கள் நடக்கவும், பல சத்திரங்கள் கட்டவும், பத்துக் கோடி பொன்னளித்தேன்; பெற்றுக்கொள்ளு மென்றறைந்து விடைபெற்றுக்கொண்டு டில்லியையடைந்து, அங்கும் ஸ்ரீராமர் கோவில் முதலான ஆலயங்களை ஏற்படுத்தி சாதுப்பிராமணர் களுக்குக் குறைவில்லாமல் கேட்டதளித்து இராமநாமத்தைத் தியானஞ் செய்துக்கொண்டு சத்விஷயத்தில் காலங்கழிக்கத் தொடங்கினன்.

துளசிதாசரோ பகவான் தன் வாக்கைப் பரிபாலனஞ்செய் யத் தன்னுரு வெடுத்துவந்து, இறந்தவனுக்கு உயிர்தந்து தன் னைக்காத்து ரட்சித்ததை அடிக்கடி நினைந்து ஆனந்தபாஷ்பங் களால் நனைந்து, "ஓ சுகுணபரிபாலனே! தானவர்காலனே! உற் பத்தி ஸ்திதிலயங்களுக்கும் காரணமாயிருக்குங் கர்த்தனே!

ஸ்தூல சூட்சும காரணமென்னுந் திரிதேகங்களுக்கு அதீதமா யிருக்கும் பரிசுத்தனே! இத்திரய தேகங்களுக்கு விலட்ச ணைத்தமனுய் விவேக க்ஞானசில ரிருதய கமலாசனத்தில் வீற் றிருக்கும் தேவனே! ஜனன மரண ராகத்வேஷ சுகதுக்கங்களை யடையாமல் கண்டு ஆனந்தாமிர்தத்தில் மூழ்கும்படியான கடைக்கண் கிருபையை யளிக்கும் வாசுதேவனே! சுலட்சண சுகிர்த சுபமங்கள சோபித சுந்தர சுபம்பிரகாச சுத்தாத்புத மோட்ச சாதனனுஷ்டான தியானபரர்களுக்கு அந்தரங்கமான இஷ்டதெய்வமே! சாட்சாத்கார சதானந்த சதோதய சமசாந்த சாவ்விதலட்சண சந்தோஷாமிர்தத்தை யளிக்குஞ் சகநாதனே! மோகாந்தகாரக் குகையிற் சிக்கி அஞ்ஞானத்திமிரேறி அதோ கதிக் காளாகும் அடியேனை உஜ்ஜீவிக்கும்படி முற்றிலும் என்னை இப்படியே ஆட்கொள்ளக் கடன் உமதாகும்" எனப் பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்து பிரமானந்தவாரியில் மூழ்கியிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

பகவான் துளசிதாசருருவாய் வந்து
பிராமணனை எழுப்பிய அத்தியாயம் முற்றிற்று.

---

பதின்மூன்ருவது

## துளசிதாசர் அக்பர்பாதுஷாவை பங்கஞ்செய்த அத்தியாயம்

---

கேளுங்கள் சித்தர்களே! அஷ்டாட்சரத்தின் இரண்டா மட்சரமும், ஸ்தூல பஞ்சாட்சரத்தின் இரண்டா மட்சரமுங் கூடியபோது எந்தநாமம் விளங்குகின்றதோ அந்தத் திவ்விய திருநாமஸ்மரணையும், விஸ்வதை சத்பிராக்ஞ விராட் டிரண்ய கர்ப்ப அவ்யாகிர்தத்துக்கு அப்பாற்பட்ட பரிபூரண சர்வசாட்சி யாயிருக்கும் சாட்சாத்கார தசையையும் பெற்றுத் தொந்தா தொந்தங்களையும், அரிஷ்டவர்க்கங்களையும் சூர்மிகளையுங் கட ந்து, சாந்தம் சம்பாவனை சந்தோஷம் உபாதி ஜகத்விலட்சணம் சம்சாரவெகுதிருக்தம் அந்தர்மூகம் அகண்டானந்தத்தையுந் தரும் நியதிமார்க்கத்தை யடைந்து சகசானந்தத்தாற் பூர்த்தி யாய் விஸ்ராந்தியைமேவி ஜன்ம கர்ம சூன்யராய் விளங்கி

யிருக்கும் சர்வ சத்குணாலங்கிர்தராகிய துளசிதாசரை வீரம் தீரம் கெம்பீரம் தாத்ருத்வம் தர்சத்வம் தைரியம் சௌரியம் முதலான குணங்களிற் சிறப்புற்றோங்கி இவ்வுலகத்தைத் தாங்கி, யுக்தி பக்தி சுபத்தியுமுள்ள அக்பர்பாதுஷாவானவர் அனு தினம் அன்பாயின்பமாய்ப் பூசித்து வணங்கிப் பகவான் திரு நாமங்களை ஸ்மரிப்பதற் கிணங்கி, மஹம்மது மதத்தோருடன் பிணங்கி, எத்திசையிலும் சிவாலயம், விஷ்ணுவாலயம், அன்ன சத்திரம் தடாகம் முதலியவைகள் அபரிமிதமாக ஏற்படுத்திக் கோவதையை விலக்கி, அநுமக்கொடிகளையும் கருடக்கொடி களையும் நட்டு, இந்துமதத்துக்குட்பட்டுப் பரமசாதுவாயிருக்கும் நாளில், மோசலமாமுனிவனா லேற்படுத்திய மொசல்மான்கள் சகலருங்கூடிப் பாதுஷாவின் நடத்தையைக் குறித்து முகம் வாடிப் பற்பலவிதங்களா யோசித்துப் பாதுஷாவுடன் கபட மாக நேசித்து, துளசிதாசரை வாயாற்பூசித்துத் தாங்களும் வைகுந்தநாதனை மேலுக்கு விசுவாசித்துச், சிலநாளிருந்து ஒரு நாள் பாதுஷாவைநோக்கி, “ஓ அரசனே! வேந்தரிற் சரசனே! வெகுநாளாய்ப் பூசிக்கும் நமக்கு விஷ்ணுதரிசன மில்லாமற் போச்சுது, வீணாக நாள்களைக் கழிக்கலாச்சுது, பரமபக்தனாகிய உமக்கு ஸ்ரீராமதரிசன மகத்தியமாகும், உம்மைப்போலொத்த புருஷோத்தமர்க்குப் பகவான் தரிசனம் கிடைக்காமற்போனால் எம்போலொத்த பாவிகட்குக் கிடைக்குமா? துளசிதாசர் உமது பேரில் அத்தியந்த பிரீதியுடையவராயிருப்பது மெய்யாகில் ஒரு கணத்தில் ரகுநாயகரை வரவழைப்பார். தரிசனந்தருவிப்பார். நீர் இக்கணம் அரிபக்தனிடம்போய் இன்றையோடு மூன்று தினத்துக்குள் ஸ்ரீமந்நாராயணரை வரவழைத்துத் தரிசனந் தருவித்து என்னை யாட்கொள்ளுமையா” வென வணங்கி நீர் மேடைக்கெழுந்தருளும் நாங்களெல்லோரும் அவர் மனமிரங் கும்படியான பட்சமான பற்பல வார்த்தைக ளுரைத்துக் கன்னெஞ்சரைக் கரைத்து ஒரு நொடியிற் பகவானை வரவழைக் கிறோமென்று உசுப்பேற்றி அனுப்பினார்கள்.

பாதுஷா பகவானைப் பார்க்கா இக்கண்களும், பகவான் பாதங்களைப் பரிசிக்கா இக்கரங்களும், பராத்பரனை வணங்கா இச்சென்னியும், இருந்தாற் பயனேதேனுமுண்டா? என வுன் னித் துளசிதாசரை நண்ணி, “ஓ மகானுபாவா! யாந்தொழுந் தேவா! இக்கொடியேன்மேல் அருள்புரிந்து ஸ்ரீரகுநாயகரை வரவழைத்து அடியேனுக்குத் தரிசனந் தருவித்து ஆட்கொள்

ளும் ஐயா" என்று வணங்கினர். அரிபக்தன், "ஓ அரசனே! பனிரெண்டாண்டு பகவானை நோக்கித் தவஞ்செய்த எனக்கே அப்பாந்தாமனுடைய தரிசனங் கிடைக்க வெகு துர்லபமாச்சுது; என்னுலாகாப்போச்சுது; அநேக வருஷங்கள் தறிபோல் தவத்திலிருக்குந் தபோதனர்களுக்குந் தரிசனந்தராப் பகவான் நான் அழைத்தவுடன்வந்து உனக்குத் தரிசனந்தந்து ஆட்கொள்வாரா? கோஹத்தி சூழ்ந்த இப்பட்டினத்திலும் வருவாரா? லேசில் விஷ்ணுவின் தரிசனங் கிடைக்குமா? அவர் முன் ஒருவர் திராணி நடக்குமா? என்னுலாகாக் காரியமாகுமென்று ஒருபோழ்துஞ் சொல்லமாட்டேன்; வீண் சம்பத்தைக் காட்டேன்; இன்னஞ் சிலநாள் சென்றபின் பகவான்கருணை கூர்ந்து ஆட்கொண்டால் கொள்வாரே யன்றி இப்போது கூடாது" என்று மறுத்துவிட்டனர். பாதுஷா "ஓ சுவாமி! வெகுநாளாக அத்தியந்த பக்தியுடன் அனுதினம் பஜிக்கும் என்முன் பகவான் வருவதற்கு ஓர் தடையுமிராது. நீர் நினைத்த காரியத்துக்கு ஓர் இடையூறும் வாராது. வாரணாசியிலுள்ள மாந்தர்களெல்லாம் பார்க்கவந்த பக்தவச்சலன் நானொருவன்பார்க்க வருவதற்குத் தடையேன். பிர்மா நினைத்தால் ஆயுளுக்குக் குறைவில்லாததுபோல் நீர் நினைத்தால் அகத்தியம் பகவான் வருவார். ஏழையேனுக்குத் தரிசனந் தருவார். இன்றையோடு மூன்றுதிவசத்துக்குள் பகவானை வரச்செய்து எனக்குற்ற பந்த தொந்தங்களைக் கொய்து பாதுகாத்தருளுமையா" எனப் பணிந்து, இனி நமக்குப் பகவான் தரிசனந் தருவாரெனத் துணிந்து, மந்திரி பிரதானிகளுரைத்தவண்ணம் தன்னிருப்பிடஞ் சேர்ந்து பிரஜைகளை நோக்கி "நீங்களெல்லாம் போய் துளசிதாசருடைய மனதைக்கரைத்து ஸ்ரீமந்நாராயணரை வரவழைத்து என் குலத்தைப் பரிசுத்தப் படுத்துங்கள்" என்று ஆக்யாபித்தான்.

துடுக்கர் முடுக்காய்த் துளசிதாசர் பக்கலடைந்து, "ஓ அரிதாசரே! நீர் இப்போது பகவானை யாங்கள் பார்க்க வரவழைக்காவிடின், நீர் முன்னம் ஸ்ரீமந்நாராயணரைக் கண்டதும், அவர் உமக்கு ஆசிர்வசனங்கள் விண்டதும், நீர் ஆனந்தங்கொண்டதும் சுத்தப் பொய்யாகும். ஆதலால் சீக்கிரம் பராத்பரனை வரவழைப்பீர்" என்று பலவந்தஞ் செய்யத் தொடங்கினர். அரிதாசர் நகைத்து, "ஓ மொசல்மான்களே! நான் சொல்வதைக்கேளுங்கள். அதேனென்றால் பகவானே கருணைகூர்ந்து

காட்சிகொடுக்க வேண்டுமேயல்லது நம்முடைய பலவந்தத்தால் தரிசனந் தரவேமாட்டார். நம்முன் வரவேமாட்டார். இது சத்தியவசனமாகும். இதை உங்கள் இறைவனுக்கு உரைத்து இவ்விடம் அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்று இயம்பினர். துலுக்கர், "ஓ ஸ்வாமி! அரசன் வார்த்தையை மறுத்து உமது மொழிக்குச் செவிகொடுத்துத் தண்டனைக்கு உடன்படுவோமா? பகவானை வரவழைக்கா வும்மைக் கொஞ்சத்தில் விடுவோமா? நீர் தொழும் ஸ்ரீராமரை வரவழைக்கும் பரியந்தம் உம்மை இச்சிங்காசனம் விட்டெழுந்திருக்க வொட்டோம், உம்மால் எங்கள் குலதர்மங் கெட்டோம், மஹம்மதுவைக் கும்பிடுவது விட்டோம். அநீதிக் குட்பட்டோம். பாதுஷாவிடம் உமது பாசாங்கு நடக்குமே யன்றி எங்களிடம் நடக்காது, உம்மைக் கொஞ்சத்தில் விடமாட்டோம் நடக்காது" எனப் பற்பல வார்த்தைகள் பகராலுற்றார்கள். அரிபக்தன் "ஓ துடுக்கரே! சொல்லும்முன் கொல்லும் முடுக்கரே! சன்மார்க்கங் குறைந்து துன்மார்க்கம் நிறைந்து வாதுசெய்வோர்க்கு ஜெகநாதன் தரிசனங் கிடைக்குமா? என்னை வருத்துவதுங்களுக்கு அடுக்குமா? இனி நான் இஷ்டமான விடத்துக்குப்போக விட்டுவிடுங்களென் றறைந்து சிம்மாசனம் விட்டெழுந்தார். மொசல்மான்கள் அரியணையிலிருந்து எழுந்த அரிதாசரை எழுந்திருக்கவொட்டாமல் அவ்வணையின்மே லமுத்தி "சீக்கிரம் பகவானை வரவழைத்தாலன்றி உம்மை யிங்கிருந்துபெயரவிடமாட்டோம்; ஜீவன் பிரிந்தாலும் முதுகு காட்டோம்; மஹம்மதியர் வைராக்கிய மறியீரோ? இது மாத்திரந்தெரியீரோ" என்று பலவார்த்தைகள் படபடவெனப் பிதற்றலுற்றார்கள். அரிபக்தன் "ஓ மொசல்மான்களே! இவ்வித பலவந்தத்தாற்றானே பகவானைப் பார்க்கப்போகின்றீர்கள்? பாவங்களைத் தீர்க்கப்போகின்றீர்கள்? இப்பேர்க்கொத்த துஷ்டர்களுக்குப் பகவானுடைய தரிசனங் கிடைக்குமா? சாதுக்களிட மொருவர் பலம் நடக்குமா? இனி யென்னைத் தீண்டாமல் பகவானைக்குறித்து வேண்டாமல் உங்களிருப்பிடஞ் சேருங்கள் சீக்கிரம் இவ்விடம்விட்டுப் பேருங்கள் என்று அறைந்தார். துலுக்கர் ஓகோ துர்க்குணமுள்ள சாதுவே! உம்முடைய துஷ்ட குணத்தையும், பிரஷ்டத்தனத்தையும், எங்களிடங் காட்டவேண்டாம். வீண் ஜம்பத்தை நீட்டவேண்டாம். அரசனுக்கினைப்படி அரியணையை விட்டசையவேண்டாம். ஒரு மொழியும் பேசவேண்டாம், நகங்கள்வளர்ந்த கரங்களை நீட்டி வீசவேண்டாம்"

என்றுதடிகளாலும் கர்ச்சனையிடிகளாலும் பயங்காங்காட்டிக் கோபத்தை மூட்டி மூன்றுநாள் பரியந்தம் சிங்காசனம்விட்டெழாமலும், அசையாமலும், மலசல விசர்ஜனதிகட்குச் செல்லாமலும் அன்னபானுதிகளை உட்கொள்ளாமலும் அதட்டி வாயில் வந்தபடி பிதற்றி வெகு தொந்தரவுசெய்யத் தொடங்கினார்கள்.

அதனால் துளசிதாசர் உடல் வாட்டமும் மனக்கோட்டமுமடைந்து மிகவு மிடைந்து, "ஓ மஹம்மதியரே! உங்கள் இஷ்டப்படி பகவானை வரவழைக்கின்றேன். பாதுஷாவை அழைப்பியுங்கள்" என்றார். துலுக்கர், "முன்னம் ஸ்ரீராமரை வரவழைத்தா லொழிய இராசனைக் கூப்பிடமாட்டோம்" என்று உரைத்தார்கள். அடிமேலடியடித்தால் அம்மியும் நகருமென்கிற பழமொழிப்படி உம்மாலொருகணத்தில் பகவானை வரவழைக்கின்றோம் பாருங்களென்று இன்னம் தொந்தரவுசெய்யத் தொடங்கினார்கள். இவர்கள்இங்குஇவ்விதகோரஞ்செய்ய அங்கேபாதுஷா துளசிதாசரிடம்பகவான்தரிசனத்துக்குஉரைத்துவந்து மூன்றுநாளாகின்றதே; என்ன சங்கதியென்று தன் அருகிலிருக்கும் பிரதானிகளைக் கேட்டான். மந்திரிகள் இதுபரியந்தம் நம்மவர் செய்த தந்திரத்தாலும் தொந்தரவாலும் பக்தியாலும் சக்தியாலும் பகவானை வரவழைக்கின்றேனென்று உரைத்தாராம். இன்னம் மூன்று ஜாமத்துக்குள் பொழுதுவிடியும். அதற்குள் பகவானும் பிரசன்னமாவர். சற்றேபொறுத்திரும்" என்று அறைந்தார்கள். பாதுஷா சந்தோஷமடைந்து எப்போது சூர்யோதயமாகும்? எப்போது பகவான் வருவார்? தரிசனம் தருவாரென்கிற எண்ணத்தோடு கூடியிருந்தான். அங்கே துளசிதாசர் துடுக்கர் செய்யும் வேதனைக்காற்றுமல் இக்கொடியவரை [அனுமாரால் சிகிச்சை செய்விக்கவேண்டும். ஏனெனின் இத்துடுக்கருக்கு ஆதிகாரணனுன மோசலமா முனிவரை ஓர் குத்தால் குடல்களெல்லாம் குதத்தின் வழியாக வரச்செய்தவர் அனுமாரேயாம். அவரே இவர்களுடைய மடமையைப் போக்கடிப்பவரென்று உன்னித் தனக்குற்ற வேதனையைப் பொறுக்கமாட்டாமல் அன்பாய் இன்பமாய் அனுமாரைத் தோத்திரஞ்செய்யத்தொடங்கினர்.

---

## அனுமார் அனுபூதி



சீரார்தாளுந்தேனுர்மொழியுந்
தாரார்புயமுந்தடமார்புமுள
சூராவிரைவாய்த்துணையாவருவாய்
வீராவினைவீறடுமாருதியே. 1

அடல்வவ்வலறிவழிராகம்மாடி
மடமாதியில்கேசரியின்மதலாய்
மூடிவென்றுமிலாமூதல்வாவடியே
னிடர்தீர்த்தருள்வாயிறைமாருதியே. 2

இறையேசுசியஞ்சனையீன்றருளும்
பொறையேயொருருவாகியபுண்ணியனே
குறையேபுரிதீக்குணனேலமிடும்
முறைகேட்டருளென்முதுமாருதியே. 3

முகிலோரணுவாமணுவும்மலையாம்
பகவானுனிலப்பதமேயிரவும்
பகலுந்துதியாப்படிறேனெனிலும்
மிகைதீர்த்தருள்வாய்மிளிர்மாருதியே. 4

மிளிராதவனைமிகுநற்பலமென்
றிளமைப்பருவத்தின்புற்றதுபோ
லுளவொன்றறியாதிடருற்றனனுன்
களியெய்திடக்காகாமாருதியே. 5

காத்தாட்கொள்வாய்க்கருணைக்கண்ணாற்
பார்த்தாட்கொள்வாய்படிறேன்வினையைத்
தீர்த்தாட்கொள்வாய்திமிரும்மருளும்
பேர்த்தாட்கொள்வாய்ப்ரியமாருதியே. 6

பிரியத்துடனெம்பெருமானனவருட்
டுரியத்திலெனைச்சொக்கும்படிசெய்
தருமைப்பொருளாக்கியவாண்டவவென்
மருளச்சமகற்றுவைமாருதியே. 7

அகமும்புறமும்அணுவுங்குறையா
தகரக்கரநேரமலப்பொருளே
சுகநற்றவசுந்தரசோபிததே
சிகவற்புததிண்ணியமாருதியே. 8

நியமப்படியோர்நெறிதன்னினிலாப்
பயனற்றவனுகினன்பண்பருள்வாய்

ஜயசித்களனேஜய நிஷ்களனே
ஜயபுஷ்களனேஜயமாருதியே. 9

ஜயஸ்ரீ ரகுநாயகவித்தகனே
ஜயவாரிதிதாண்டியசத்துவனே
ஜயலங்கணியட்சயகூற்றுவனே
ஜயமாமறைவாசகமாருதியே. 10

ஜகசாட்சியிரிந்தொருசார்புசெல
விகலாட்சியர்வாழ்மிகன்லங்கையையப்பா
வகனேயுனைவாலகநீட்டியகான்
மகனேயிவண்வாவாமாருதியே. 11

வாலாலுயர்மாவணைசெய்தவுணன்
மேலோனுப்பல்விடைகூறினவா
மாலோனுழிபோய்வைதேகியின்சீ
ராலோசனையுமறைமாருதியே. 12

அறையாலவுணர்க்கதமீந்திளவல்
குறைநீங்கமருந்துகொணர்ந்ததலத்
துறைராவணனுட்புகுதாவகைமாச்
சிறையாற்றியதிண்புயமாருதியே. 13

புயநாலைந்தோன்போர்விட்டிரிய
மயில்ராவணன்மாய்ந்திடமோதினவா
சுயம்வச்சுதசுப்பிரனேவடியேன்
மயனீங்கிடல்வாவிவண்மாருதியே. 14

வண்ணமும்முளமாவைதேகியைச்சூ
ழெண்ணங்களைநீத்தின்பீந்தவனே
நண்ணித்தொழுமிந்நாயேற்கருள்விண்
மண்ணுந்துதிசெய்மாமாருதியே. 15

மாமேவியகோசலம்வாழ்பரதன்
ராமாஜகதீசுவரரட்சியெனத்
தீமூழ்கிறபோதனுகித்திடமும்
ஆமோதமுமீயருண்மாருதியே. 16

அருளார்கதிராதவன்பாற்கலைமெய்ப்
பொருளோதியநுண்ணியபுந்தியினை
லிருளார்விரகமிழிவுமழிவும்
மருளேதமுநீக்கியமாருதியே. 17

நீக்கப்படும்வல்வினைநீடளையைப்
போக்கப்படும்வெம்புரையார்குறையை
ஆக்கம்புகழிய னுமானெனவே
மூர்க்கனெனினும்மூதுமாருதியே. 18

முதுசொல்லுரை தும்புருநாரதன்முன்
மதமூற்றுனை நாடிவரத்தகையோ
டிதமூற்றிடவின்னிசைமீட்டியவர்
மத நீக்கியதேவகமாருதியே. 19

தேவாதிகளேத்தியதேசிகனே
காவாவிஜயன்களை தீர்த்தவனே
மூவாவுலகம்புகழ்மூர்த்திகனே
வாவாபடர் நீக்கிடுமாருதியே. 20

படரும்வினையும்பழியுமிழிவும்
தொடரும்பவமுந்தொடராதெனையே
கொடையுந் துதிமெய்க்குறியுமறிவும்
நடையுந்தருவாய் நயமாருதியே. 21

நயனேபாந்தநாயேன்மீதில்
பய நீங்கிட நீபார்த்தாட்கொள்வாய்
நயனேச்சவநானடையும்வகைநிர்ப்
பயனேசுயபண்டிதமாருதியே. 22

பண்டோரேத்தும்பகவானேயுன்
தண்டாமரைத்தாட்புணை நீதருவாய்
எண்டோளினனீபெண்ணேக்கினன்கோ
தண்டாச்சுதனீசரன்மாருதியே. 23

சரணம்விசுவாகாராட்சயனே
சரணம்விருகோதரன்முன்னவனே
சரணம்மகமேரிணைதாஷ்டிகனே
சரணஞ்சுகதாண்டவமாருதியே. 24

சுகமோரணுவாந்துயர்வாரணமாம்
ஜகமீதறியாதவர்யாரறிவுற்
றிகமேயாசித்திடராலலையும்
அகமேவரலேனருமாருதியே. 25

ஏனேவுனதன்பிலையுண்டெனிலென்
கோனேவருவாய்குறைதீர்த்தருள்வாய்
நானேவுனைநம்பினனம்பினனே
ஞானேதயனேநலமாருதியே. 26

நலமும்நீயேநாயேன்விரதப்
பலமும்நீயேபரமானந்தப்
பலமும்நீயேபரமேசுவரநிர்ச்
சலனும்நீயேசதுர்மாருதியே. 27

சதுரப்படையாசமரப்பிரியா
துதிசத்குரவாதுகளில்லுருவா

அதிகத்தயவாயடியேன்முன்வா
மதிதத்துவமாதவமாருதியே. 28

தவமேசெயினுந்தவறேசெயினும்
பவமேயுறினும்பழியேபெறினும்
அவதூறெடுசிராடியேற்குளதோ
அவிகாரனேநீயருண்மாருதியே. 29

நீயிக்கணமிந்நிசியோர்மருள
வாயத்தமிழைத்தருள்வாயருள்வாய்
தாயொத்ததயாபராவுன்னடியேன்
சேயொத்தவன்சீர்தருமாருதியே. 30

என்று இவ்விதமாகத் தோத்திரஞ் செய்திருக்குந் துளசிதாசருடைய பரிதாபமறிந்த அனுமார் துடுக்கர் செய்யும் அக்கிரமத்தை நிக்கிரகிக்கு நிமித்தம் தனது சேனைகளாகிய வானரங்களை நோக்கி "ஓ யூகக்கூட்டங்களே! உங்களில் பதினுயிரம் மந்திரிகள் டில்லிநகரிற் பிரவேசித்து, எத்திசையிலும் பிரகாசித்துத் துடுக்கர் நடுக்கங்கொண்டு பல திக்குகளிலும் ஓட்டமெடுக்கவும், துளசிதாசரைக் கெஞ்சியடுக்கவும், அக்பர் பாதுஷா பயந்தேங்கவும், துளசிதாசருக்குச் சந்தோஷமோங்கவும், அஸ்தினுபுரத்தை அல்லோல கல்லோலங்கள் செய்து வாருங்கள்" என்று அறைந்தார். அம்மாத்திரத்தில் பர்வதாகாரமான பதினுயிரம் வானரங்கள் ஓர் கணத்தில் டில்லி நகரையடைந்து தோப்புகளையும் சிங்காரத் தோட்டங்களையும் பாழாக்கி, அங்கிருக்கும் மேடைகளைத் தூளாக்கிப் பட்டினத்துட் சென்று, கரங்களைக்கொட்டி நிமிர்ந்து நின்று, முன்னுளில் நம் முதியோர் இலங்கையைப் பாழாக்கினதுபோல் இன்று இந்நகரையழித்து எதிர்த்தவர்களைப் பழித்துக் கிழேதள்ளி மிதித்துப் பிராணன் நீங்கும்படி சிதைத்து, ஒருவரையும் விடாமல் வதைத்து, இம்மாளிகைகள் சரிந்துவிழும்படியாக வுதைத்துத் தூளனஞ் செய்துவிடுவோமென்று மேடைகளை யிடித்து, பஸ்பமாகப் பொடித்து, மானிடர்களை யடித்துக் கரங்களால் எட்டிப்பிடித்து மூர்ச்சையடையக் குத்திப் பட்டணம் நடுங்கிக் கத்திக் கிருகிரெனச் சுற்றிப் பட்சிபோல் பறக்கவெற்றிப் பாதுஷா நகரையடைந்து காவல்களெல்லாங் கடந்து, பட்டத்தரசிகளைப் பார்த்துக் கூந்தலைப் பிடித்து ஈர்த்துப் பற்களைத் திறந்து காட்டிப் பாணியாலறைந்து வாட்டி, இராஜனைக்கண்டு நகைத்து, நீயார்? அரசனெனப்பகைத்து, நெஞ்சம்பிளக்கமருட்டி, நிலமேற் பல

தரம்புரட்டி, வதனத்தில் மலத்தைப்பூசி மாதர்மேல் மரியை வீசித் துளசிதாசர்பால் வந்து சொகுசாக வந்தனந்தந்து சூழ்ந் திருப்பவர்களை மடக்கிக் கக்கத்தில் பலரையடக்கி நசுங்கும்படி யாகச் செய்து நகங்களாற் சிரங்களைக்கொய்து வாலாலடித்துக் கொன்று, ஓடுவார் முன்னோடி நின்று, அமர்செய்யலாமெனப் புகன்று, அநேகரைக் கனந்தனில்வென்று சுற்றுப்பக்கங்களி லோடிப் பதுங்கினோர் தம்மையுந் தேடிப்பிடித்து ஆகாயத்தி லெறிந்து பலர்மேல் கற்களையெறிந்து பட்டணத்தைப் பாழாக்கி மேடைகளைத் தூளாக்கிப் பலதிக்குகளிலும் பாவும்போது சிரங்களுடைந்தவர்களும், கரங்களறுந்தவர்களும், உரங்க ளெறிந்தவர்களும், தோள்கள் முறிந்தவர்களும், தாள்களறுந் தவர்களும், கண்கள் கெட்டவர்களும், புண்கள் பட்டவர்களும், குடல்கள் சரிந்தவர்களும், இடைகள் முறிந்தவர்களும், மூக் கறுந்தவர்களும், நாக்கறுந்தவர்களும் ரணக்களத்தில் சாய்ந்த வர்களும், தலைவிரிகோலமாய் மூலைக்குமூலை பதுங்கி ஒதுங்கிக் கூகாவெனக் கூக்குரலிட்டு ஸ்மரணைகெட்டுத் திக்கு முக்கிட்டுத் தட்டுகெட்டு டில்லிநகரைவிட்டுப் பல திக்குகளிலும் ஓட்ட மெடுத்தார்கள். அங்கும் வானரங்களைக்கண்டு தைரியத்தை விடுத்தார்கள்; தெண்டனென்று உரைப்பார்கள்; தொண்ட னென்று உரைப்பார்கள்; மூர்ச்சையாய் விழுவார்கள்; முறை யோவென்று அழுவார்கள்; தெய்வமேயென்று தொழுவார்கள்; திருத்தாட்களில் விழுவார்கள்; நடுங்குவார்கள்; ஒடுங்குவார்கள். இவ்விதமாகத் துடுக்கர் நடுக்கம் கொள்ளும்படியாகச் செய்த வானரங்கள் அட்டகாசஞ்செய்து கெக்கலிகொட்டி நகைத்து, டில்லிநகரை யழித்தன. அப்படி யழிக்கும்போது, துளசிதாசர் அக்பர் பாதுஷாவின் மேலிருக்கும் அன்பினால் அதிசீக்கிரமாய் அந்தப்புரமடைந்து அரசரிருக்கும் அலங்கோலத்தைக் கண்டு இடைந்து, "ஓ அரசனே! உனக்கு ஐக்கியமாயிருக்கும் மாந்தர்க ளாலல்லவோ இவ்வளவு வேதனைவந்தது. ஆயாசம் தந்தது" என்று உரைத்தார். அப்போது பாதுஷா துளசிதாசர் பாதங் கள்மேல் வீழ்ந்து பலதரந் தாழ்ந்து "இந்த வானரங்கள் எங் கிருந்து வந்தது? சீக்கிரஞ்சொல்லும் சுவாமி" என்று பணிந் தான். துளசிதாசர் "ஓ இராஜனே! ஸ்ரீராமருடைய சேனை களில் ஆயிரம்பங்கில் ஓர் பங்குவந்தது. மற்ற 999-பங்கு இனி வரும் பின்னால் ஸ்ரீராமர் வருவார். தரிசனந் தருவார்" என்று அறைந்தார். உடனே பாதுஷா நடுங்கிப் பூனைபோலொடுங்கி,

"ஓ சுவாமி! ஸ்ரீராமருடைய தெரிசனம் எனக்குத்தேவையில்லை. அவருடைய சேனைகளாகிய யூகங்களைத் தன்னிருப்பிடம் போகக் கடாட்சித்தருளும் ஐயனே" என்று பன்முறையும் வேண்டினான். அதற்கு அரிதாசர் அப்படியே யாகட்டுமென்று அனுமாரைத் தியானஞ்செய்து உம்முடைய படைகளைக் கூப்பிட்டுக் கொள்ளும் சுவாமீ யென்று பிரார்த்தித்தார். உடனே அனுமார் மாயமாய் அங்கடைந்து அசரீரிவாக்காய், "ஓ துளசிதாசரே! என்னைத் துதித்துப் பாடிய பாடல்களை யாராவது அன்புடன் துதிசெய்வார்களானால் அவர்களுக்குற்ற விக்கினங்கள் நீங்கிச் சுகசீவியாக வாழ்ந்திருப்பார்கள்" என்றறைந்து கவிகளையெல்லாங் கூட்டிக்கொண்டு மறைந்துவிட்டார். பின்பு டில்லிநகரிலுள்ள துடுக்கரெல்லாம் துளசிதாசர் பக்கலடைந்து, "ஓ சுவாமி! சிறியோர்கள் செய்த குற்றங்களையெல்லாம் நற்றவமாகக் கொண்டு எங்களை யாட்கொள்ளுமையா" என்று சிரசாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்தார்கள். அதற்குக் கருணாநிதியான அரிதாசர் பயப்படாதிருங்களென்று அபயஸ்தங்கொடுத்துத் துன்பத்தைக்கெடுத்துப் பாதுஷாவை நோக்கி, "ஓ இராஜனே! துஷ்டப்பிள்ளைகளுக்கு ஊரார் புத்திசொல்வாரென்கிற பழமொழிப்படி இந்தத் துன்மார்க்கப் பிரஜைகள் மந்திரிகளால் மிகவும் நொந்தார்கள். அரசமரத்தைப் பிடித்த சனியன் அனுமாரையும் பிடித்ததென்பதுபோலவும், பிரஜைகள் செய்த பாவம் இராஜனைப்பிடிக்கு மென்பதைப்போலவும், உமக்குத் துன்பம் வந்து நேரிட்டது. துஷ்டர்கள் தேசங்கெட்டது" என்று பற்பல வார்த்தைகளாடித் தன்னிருப்பிடஞ் சேர்ந்து பிரமநிஷ்டையைச் சார்ந்து, துன்பத்திலிருந்து பேர்ந்து மிகவுங் களிகூர்ந்து சகஜக்ஞானத்தில் விஸ்ராந்தி யடைந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

துளசிதாசர் அக்பர்பாதுஷாவைப் பங்கஞ்செய்த
அத்தியாயம் முற்றிற்று.

---

பதினுன்காவது

# துளசிதாசர் அக்பர் பாதுஷாவுக்கு

## அனுக்கிரகஞ்செய்த அத்தியாயம்



இப்பால் அக்பர்பாதுஷா தன்மந்திரி பிரதானிகளைநோக்கி "ஓ மந்திரிகளே! தந்திரிகளே! நீங்கள் செய்த அக்கிரமத்தால் பட்டணம் பாழானது. அன்றிப் பலபேர் நகைக்கும்படியான கீழ்மையை யடைந்தேன். இப்பேர்க்கொத்த துஷ்டர்களாகிய நீங்கள் என் பட்டினத்திலிருந்தால் வெகு நஷ்டமுண்டாகும். பரமசாதுவாகிய துளசிதாசருடைய மனம் நையச் செய்யத் தகாத காரியங்களைச் செய்தீர்கள். என் கழுத்தைக் கொய்யாமற் கொய்தீர்கள். துன்பத்துக்குள்ளானீர்கள். துளசிதாசருடைய அருமை தெரியாமற் போனீர்கள். ஆதலால் இனி ஓர் கணமும் என் நாட்டிற்றங்காமற் பேருங்கள்" என்றறைந்து தன்மனம் மிகவுங் கரைந்து துன்பம் மிகவும் நிறைந்து சமஸ்த மேன் மைகளிலுங் குறைந்து துளசிதாச ரிருப்பிடமடைந்து முன் போவதற்கிடைந்து புறத்திலிருந்துக்கொண்டே பலபலவிதங்க ளாகத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர். துளசிதாசர் தப்பித மறியாத தராபதியைப் பிரியத்துட னழைத்து அருகி லிருத்திக் கொண்டு பட்சமான வார்த்தைகள் பல புகன்று, "ஓ இறை வனே! உனக்கு ஓர் குறையும் நேரிடாது. அரசன் அஜாக் கிரதையா யிருத்தலடாது, உத்தமர்கள் சித்தக்கலக்கம் கிஞ்சித் தில் விடாது. சாதுக்களைத் தணலுஞ் சுடாது, இனி சுகத்துடன் வாழ்ந்திரும். நான் பலதேசங்களிற்சென்று சஞ்சாரசமாதியால் சகலஞானத்தைப் பூரணமா யடையவேண்டும். அன்றி உன் பட்டணத்திலுள்ளவர்கள் மதபேதத்தால் அபேதஞான மறிந் துக்கொள்ளாமல் அகக்கிரந்தியால் பொருமை கொண்டிருக்கின் ருர்கள். இதனுல் ஒவ்வொருகாலத்தில் என்னுடன் வாதிப்பார் கள். உன்னையும் பேதிப்பார்கள். இதற்குத் திருஷ்டாந்தமான சரித்திரம் உங்களிலேயே நடந்திருக்கின்றது. அது வதென்பீ ரேல் "மன்சூரைச் சூலத்திலேற்றினதும், தோலுரியகளாசத்தா லடிக்கவேண்டுமெனத் தீர்மானித்ததேயாம். அப்பதிக்கிறைவன் மந்திரிபிரதானி பிரஜைகளுக்கு அனந்தம்விதமாய் அவர்பெரு மையை விரித்துரைத்தும், அன்பானவார்த்தைகளால் மனதைக் கரைத்தும், கேட்காமல் சூலத்தி லேற்றினர்கள். அப்போது

மகாத்மாவின் அங்கத்துற்ற துங்கமான ரத்தத்துளிகளெல்லாம் அனலக்யென்னும் மகா வாக்கியார்த்தத்தையே யுரைக்க, அதைச் சுட்டுச் சாம்பலாக்கி, ஓர் கலசத்தி லடைத்துவைக்க, அத்திருநீறும் அப்படியேயுரைத்துக்கொண்டிருந்தது. அவ்வூ ரையன்மகள் அதை யவிழ்த்துப்பார்த்ததே அக்கன்னிகையின் கற்பத்திற் பிரவேசித்துப் பூரணமாய்க் குழந்தையாய்ப் பிறந்து அவ்வாக்கியமே புகன்றுக்கொண்டிருந்து அவ்வேந்தனுடைய மகன் மடிய அக்குழவியை அவ்வாக்கியத்தாலெழுப்ப அதனுல் மாந்தர்களனைவரும் வெட்கி, நமது குமாரனுக்கு விரோதமான வாக்கியத்தால் எழுப்பினனென்று தோலுரிய அடிக்க எத்தனிக் கையில், அப்புருஷோத்தமன் தோலை யுரிந்தவர் முன்னெரிந்து சூரியனையழைத்துப் பட்டினத்தை நடுங்கச்செய்து அத்வைத க்ஞானத்தைப் புலப்படக்காட்டி மதபேதத்தை வாட்டி அரைக் கணமும் அவ்வூரிற் றங்காமல் புறநாட்டிற் சென்ருர். இதை நீர் கேட்டுமிருப்பீர். அப்படியே எனக்கும் நேரிட்டதன்றி இன்ன மும் நேரிடும். இதனுல் உனக்குக் குறைவுண்டாகும். சந்தோஷ மாக விடைகொடுத்தனுப்பும்" என்றறைந்தார். பாதுஷா அவர் பதாம்புயங்களில் தனது இருநயனங்களை யணிந்து, சிரசாஷ் டாங்கமாகப் பணிந்து, "ஓ சுவாமி! எனக்கு ஓர் மார்க்கம் அறி விக்காமல் எழுந்தருளினுல், நான் மகம்மது மார்க்கத்திலும் நில்லாமல் இந்துக்கள் நெறியிலுஞ் செல்லாமல் நடுநாடனுய்த் தடமாடிக்கொண்டிருக்கமாட்டேனே? இப்படிச் சந்தேகத்தில் வைத்துப்போவது அழகோ? காருண்யமூர்த்தியாகிய தேவரீரே என்னைக் கைசோரவிட்டால் காப்பவர் ஒருவருண்டோ?" என்று மிகவுங் கரைந்து அழத்தொடங்கினர்.

அரிதாசர் அரசனை ஆலிங்கனஞ்செய்துக்கொண்டு ஓ வேந் தனே! சத்துவகுணத்திற் சிறந்த சாந்தனே! குரானில் உரைப் பதும் வேதத்தில் உரைப்பதும் ஒருபொருளன்றி வேறில்லை. ஆயினும் ரூபத்தைத் தொழுவோர் இந்துக்கள். நிரூபத்தைத் தொழுவோர் மகம்மதியர். இப்படிப் பேதமா யிருந்தாலும் ஒன் றையே தொழுததாகும். எப்படியென்பீரேல் லவணத்தைப் போன்றது ரூபம், ஜலத்தைப்போன்றது நிரூபம், ஜலமே லவண மின்றி வேறல்ல. அதுபோல நிரூபமே ரூபமன்றி வேறல்ல. அவிவேகத்தால் வேறுபடுத்துவதன்றி விவேகத்தால் ஊன்றி விசாரிக்கின் சம்மதமாகவே யிருக்கின்றது. ஆதலால் நீர் இது

காலபரியந்தம் தியானஞ் செய்துக்கொண்டுவந்த நிருபமாகிய பரப்பிரமத்தையே தியானஞ்செய்துக்கொண்டிருப்பதன்றி அப் பரப்பிரமத்தை உமக்குள் நீரறிந்து சந்தோஷசாகரத்தில் மூழ்கி யிருப்பீராக" என்று அஸ்தமஸ்த சையோகஞ்செய்து மகாவாக் கியோபதேசஞ்செய்து, தேகேந்திரிய கரண பிராண ஜீவவஞ் ஞானங்கள் ஈதென்று உணர்த்திச் சாக்ர சொப்ன சுழுத்தியின் நிலவரங்களைத் தெரிவித்து, சின்னுளிருந்து பிரம நிஷ்டையி லிருக்கும் மர்மத்தையும் அந்தர்முகத்தில் மனஞ்சென்று ஆனந்த நித்திரையில் ரமிக்குங் குறியும் புலப்படக் காட்டி, அத்வைத க்ஞானத்திற் பூர்த்தியடையும்படியாய்ச்செய்து, ஒருநாள் இறை வனை நோக்கி, "ஓ அரசனே! உமக்கு ஏதேனுஞ் சந்தேகமிருந் தால் கேளும்" என்று அறைந்தார். பாதுஷா தன்னுடைய பட் டணத்திலிருக்கும் அநேக பகீரிகள் உரைக்குமார்க்கமும் அரி தாசர் சொன்ன மார்க்கமும் ஒற்றுமையா யிருப்பதால் யாதொன் றுங் கேட்கக்கூடாமல் சற்றே மௌனமுற்றிருந்தார். பின் தனக் குற்ற ஓர் சங்கை நீங்கப் பரமபாகவதனைத் தொழுது "ஓ சுவாமி! எங்களில் மஸ்தானென்றும், வலீயென்றும், புகழ்பெற்ற பேர் படைத்த உத்தமர்கள் சொல்லும் நெறியும் தாங்கள் புகன்றவழி யும் அபேதமா யிருப்பதாலும், பிரத்தியட்சமான அனுபவ க்ஞானத்தாலும் சந்தேகமொன்றுமில்லை. ஆயினும்இவ்வுலகம் எவ்விதமா யுண்டாயிற்ளுே? எவ்விதமா யொடுங்குமோ? என்கிற சங்கைமாத்திரம் நிவர்த்திசெய்யக் கோருகிறேன்" என வணங்கி ஞன். துளசிதாசர் "ஓ பாதுஷாவே! அனுதினஞ் சகலருக்கும் அனுபோகமான நித்திரையின் உற்பத்தியையும் நாசத்தையும் சொல்வதற்கேகூடாமையாயிருக்கப் பிரபஞ்சோற்பத்திலயத்தை ஒருவரால் உரைக்கத்தகுமோ? ஆயினும் சகல மதஸ்தரும் ஒப் புக்கொள்ளும்படியான வேதாந்த சாஸ்திரத்தால் உரைக்கும் பிரபஞ்சோற்பத்தி லயத்தைப் பெரியோர்களால் கேள்விப்பட்ட படியே யுரைக்கின்றேன். சற்றே கவனமாகக் கேளும். அதே னென்ருல் அகண்டபரிபூரண சச்சிதானந்த நித்திய நிர்மல சொரூப சாக்ஷாத்கார சுயம்பிரகாசமாகிய ஒப்பற்ற பரப்பிரம வஸ்துவானது நாமரூபரகிதமா யிருக்கின்றபடியால், இப்பேர்க் கொத்ததென்று மூவர் தேவர் மற்றியாவராலுஞ் சொல்லக்கூடா ததா யிருக்கின்றது. சொல்லப்புகின் பிரமைக்குள்ளாகும். ஆத லால் அத்வைதமான நிர்க்குண வஸ்துவுக்குப் பிரமமென்கிற நாமம் உண்டாயிற்று. இப்படியே பலகாரணங்களால் பல நாமங்

கள் ஏற்பட்டது. நிராங்காரமாகிய பரப்பிரம்மம் நிவாததீபம் போலவும், நிஸ்தாங்கசமுத்திரம்போலவும், ஓவியம்போலவும், காந்தக்கல்போலவும் சலனமற்றிருக்க; அதன் சந்நிதானத்தில் காந்தக்கல்முன் இரும்பு ஊசிகளைப்போலவும், அக்கினியிற் சூடு போலவும், விளக்கின் நிழலைப்போலவும், நச்சு சர்ப்பம்போலவும், கானல் சலம்போலவும், சலனமே சுபாவமான மூலப்பிரகிருதியென்றும், அவ்வியக்தம் என்னும் பேருடைய ஓர் மாயா சக்தி யுண்டாயிற்று. இதின்வடிவம் இருளேயாம். எங்ஙனமெனின் சந்திரசூரியர் உற்பத்தியாகாமுன் எங்கும்அந்தகாரமே நிறைந்திருந்தது. அந்த அந்தகாரமே மாயையென்று உரைக்கத்தகும். ஓ ராசனே! அகண்ட பேரொளியின் பரப்பிர்மம் ஓர் தீபமாம். அத்தீபத்தின் நிழலே மாயையாம். ஏகபெருவெளியின் பிரமத்தினிடத்தில் வந்தியாபுத்திரனைப்போல அணுவுக்கு அணுவான மாயையென்னும் இருட்டு எப்போது உண்டாயிற்றோ அப்போதே ஒன்றுண்டு. ஆனல் அதில் அநேகமுண்டு என்கிற சம்பவப்பிரமாணப்படி முழுதும் மித்தையான மாயையிற் பிரதிபலித்த பரப்பிரமத்திற்கு அரோபமாய் ஈஸ்வர னென்கிற பொதுப்பெயருண்டாயிற்று. அநேக விசித்திரரூபமான மாயா பிரதிபிம்பனை ஈஸ்வரனுக்கு அநேக விசித்திரரூபமுள. அதெப்படியென்றால் சலனமே சுபாவமான மாயாந்தகாரத்தில் சத்ததன் மாத்திரையான அரூப ஆகாயமுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரமத்திற்கு சதாசிவனென்றும், அரூபமான ஆகாயத்தில் சத்தத்துடன் பரிசதன்மாத்திரிரையான வாயுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரமத்திற்கு மயேசுவரனென்றும், ரூபாரூபமான வாயுவில் சப்தஸ்பரிசத்துடன் ரூபதன் மாத்திரையான தேயுவுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரமத்திற்கு ருத்திரனென்றும், ரூபமுள்ள தேயுவில் சப்த ஸ்பரிச ரூபத்துடன் ரசதன்மாத்திரையாகிய அப்புவுண்டாயிற்று.

அதிற் பிரதிபலித்த பிரமத்திற்கு விஷ்ணுவென்றும், ரூபமுள்ள ஜலத்தில் சப்த ஸ்பரிச ரூபத்துடன் கந்ததன்மாத்திரையான பிருதிவியுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரமத்திற்குப் பிரமாவென்று சொல்லப்படும். பஞ்சபூதங்களும் மாயாம்ஸமாம். பஞ்சகர்த்தாக்களும் பிரமாம்ஸமாம். பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமான மாயை பிரமத்தில் ஓர் அணுவெனச் சொல்லப்படும். மாயையென்னுஞ் சாயையில் விசாலமான ஆகாயமும், ஆகாயத்தில் வாயுவும், வாயுவில் தேயுவும், தேயுவில் அப்பும்,

அப்புவில் பிருதிவியும் அடக்கமாயிருக்கும். நிர்ச்சலமான ஆகாயத்துக்கு இணையாயிருக்கும் பரப்பிரமத்தினிடத்தில் தனக்குத் தானே யுண்டாகிச் சுழலும் சுழல்காற்றுக்கு இணையான மாயையானது பஞ்சபூதங்களிடமா யிருந்து ஒன்றுடனொன்றைச் சேர்க்கும்.

ஈசுர பிரயோகத்தால் அநேக அண்டங்களாகி மயில் முட்டையைப்போல் நானாவிசித்ர ரூபங்களால் விளக்கமுற்றிருப்பின் அல்லாமல் ஸ்படிகம் நிஷ்களங்கமாய்ச் சுத்த துல்லியமாயிருந்தும், பஞ்சவர்னக்கோட்பாட்டால் பலவிதவர்னங்களாக எப்படி தோன்றப்படுமோ, அப்படியே அரூபமுள்ள ஆகாயத்திற் பிரதிபலித்த பரப்பிரமம், அரூபமுள்ள சதாசிவனாகவும், ரூபாரூபமுள்ள வாயுவிற் பிரதிபலித்தபரப்பிரமம் ரூபாரூபமுள்ள மயேசனாகவும், ரூபமுள்ள தேயு அப்பு பிருதிவியிற் பிரதிபலித்த பரப்பிரமம் ரூபமுள்ள ருத்ராரி பிரமாவாகவும் விளங்கின. பிருதிவி சொரூபமான பிரமாவானவர் ஐந்துகுணமுள்ள பிருதிவியால் அநேக அண்டபிண்டங்களை யுண்டாக்கினார். விஷ்ணுவானவர் நால்குகுணமுள்ள அப்புவால்பிரமாவால் உண்டாக்கினதை இரட்சிக்கத்தொடங்கினார். உருத்திரன் மூன்றுகுணமுள்ளதேயுவால் அரியால் இரட்சிப்பதைச் சம்மாரஞ் செய்யத்தொடங்கினார். மஹேசுவரன் இரண்டுகுணமுள்ள வாயுவால் மாயாம்ஸமான ஜீவர்களுக்கு மயக்கமுண்டாக்குவார். சதாசிவன் ஏககுணமுள்ள ஆகாயத்தில் ஜீவர்களுக்குத் தெளிவைக்கொடுப்பார். மாயை பஞ்சபூதாம்ஸமான தேகேந்திரியாதிகளே நான் நானென்னும் அகங்காரக் கிரந்தியை விளைவிக்கும் பிர்மம் தேகாதிகளுக்கும், இவைகளையே நானென்றிருக்கும் சிதாபாசனுக்கும் விலட்சணமாய் எல்லாவற்றிற்கும் சாட்சியா யறிந்துக்கொண்டு சுலட்சணமாகித் திருக்குவாகிய ஆத்மாமாத்திரமாயிருக்கும். பிரம்மா ஜாக்ராவஸ்தையாய் ஜீவனை நானாவித போகபோக்கியங்களில் அலையச்செய்வார். விஷ்ணு சொப்னவஸ்தையாய் ஜீவனுக்கு அநேகவித லீலையைக் காட்டுவார். ருத்திரன் சுழுப்தியவஸ்தையாய் எல்லாவற்றையுஞ் சூனியமாக்கி ஜீவனைத் தனியாக்குவார். மயேசன் ஜீவனுக்குத் துரியாவஸ்தைக்கு இணையான ஓர்மயக்க முண்டாக்குவார். சதாசிவன் ஜீவனுக்குத் துரியாதீத அவஸ்தைக்கு இணையான ஓர் ஆனந்தமுண்டாக்குவார். மாயை சுகத்தை மறைத்துச் சுத்தசூன்யமாய்ப் பிர்மிக்கச்செய்யும். பிரமம் சுயம்புவாய் அறிவானந்தமாயிருக்கும். பரப்பிரமமான இந்த ஆத்மானந்தத்தை

விசேஷத்தால் அறியாச் சீவன் துக்கத்தையே சுகமாக நினைத்து அளவற்ற ஆசைக்குள்ளாகி இச்சாசொரூபமான அனந்ததேகங் களெடுத்து ஜனனமரணமென்னும் வாரிதியில் அமிழ்ந்து கரை யேறுதற்கு ஓர் துறைகாணுமல் துக்கத்தையே யனுபவித்துக் கொண்டிருக்கும். பஞ்சதன் மாத்திரைகள் பஞ்சபூதங்கள் இவை களாலுண்டான அண்டபிண்ட பிரமாண்டங்களும், மாயையினு டைய லீலையன்றி வேறில்லை. விவேகத்தால் அறிவூன்றி விசாரிக் கில் ஜீவசப்தமேயில்லை. எங்ஙனமெனின் தேகாதிகளைப் பஞ்சபூ தாம்சமென்று நியதிசெய்து பார்க்கையில்நானெனுஞ்ஜீவசப்தம் சூன்யமாகும். தேகாதி நானென்று அகங்கரித்து நிற்கும் பிரமையே ஜீவனன்றி வேறில்லை. சாட்சியாகிய ஆத்மாவே பிரம மாகும். இந்தக்கூடஸ்தபிரமமே சுயம்பிரகாசமாய் ஜாக்ர சொ ப்ன சுழுப்தியிலுள்ள விஷயபோகங்களையும், நாளுபேத விசித் திரங்களையும், சூனியத்தையும், ஜீவனுக்குள்ள மயக்கத் தெளி வையும், விலட்சணமாயிருந்து அறிந்துகொண்டு அவைகள் நாளுபேதப்பட்டாலும் தானபேதமாய் அவைகள் சத்தானு லும், தானழியாச் சத்தாய் அவைகள் அஞ்ஞானமயமானுலும், தன் ஞானமயமாய் அவைகள் துக்கமயமானுலும், தானுனந்த மயமாய் நிர்மலமாய் நிர்விகாரமாய் நிரூபமாய் ஏகப்பிரகாசமாய் பெருவெளியாய் அகண்டபரிபூரணமாய் விளங்கியிருக்கும் மாயை ஓர் காலத்தில் விசித்ரரூபங்களாய் அனிருதசடதுக்கமா யிருக்கும் இந்த மாயையை நாடினோர்களுக்கு விசித்திரமான சித்திகள் சித்தித்தாலும், நானற்ற பிரமக்ஞான மில்லாமையால் அகங்காரம் விர்த்தியடைந்து, இறுதியில் துக்கமே பலிதமா கும். பிரமத்தை நாடினோர்களுக்குச் சித்திகள் அநேகம் பலித மாவதன்றி அகண்டானந்தமுண்டாகி இறுதியில் கைவல்யங் கிடைக்கும். பிரம்மாம்ஸமான பஞ்சகர்த்தாக்களில் யாரைப் பர தெய்வமென நம்பித் தியான தோத்திரங்கள் செய்தாலும், அந் தப் பரப்பிரமத்தையே தியானதோத்திரஞ்செய்ததாகும். அதனு லேயே அநேகர் எந்தத் தேவதையை இஷ்டதெய்வமெனத் தொழுதார்களோ அதையே தேகவியோக பரியந்தம் நம்பி அத் தேவதையின் அருளால் மோட்சமடைந்தார்கள். ரூபமுள்ள தேவதைகளைத் தள்ளி நிரூபமான பரப்பிரமத்தைத் தியானித் தல் வெகு துர்லபமாகும். ரூபத்திலேயே நிலைக்கா மனம் நிரூ பத்தில் நிற்பது அருமையாதலால் சுலபமாய் முக்தியை நாடும் வழி ரூபமென அநேகர் அங்கீகரித்தார்கள்.

இதிலிருந்துதேர்ந்து நிரூபமானபரப்பிர்மத்தை நாடினேர்களைப்போல, எல்லோரும் ரூபத்தைவிட்டு நிரூபத்தைத்தியானஞ் செய்வதால் நிஷ்பிரயோசனமே பலிதமாகும். உறுதியான மனதால் தியானிப்பதற்கு ஓர் தடையுமில்லை. தடைசொல்வாருமில்லை. பரப்பிரமமே சிருஷ்டியாதி கிருத்தியங்கள் இயற்றுகின்றதென்றால் நிர்ச்சலன வஸ்துவென்று உரைத்தல் கூடாது. நினைத்தமாத்திரத்தில் சகலமு முண்டாயிற்றென்றால் நினைப்பிருந்தால் மறப்புமிருக்கும். இவ்விரண்டு மிருந்தால் விகாரமுமிருக்கும். ரூபமு மிருக்கும். விகாரமும் ரூபமுமில்லாப் பரம்பொருளுக்கு நினைப்புண்டென்பதே எல்லாச் சங்கைகளுக்குமிடமாயிருக்கின்றது. ஆதலால் திரிமூர்த்திகளாலேயே சிருஷ்டி ஸ்திதி லயங்கள் நடக்கின்றது. ஆதலால் இவர்களையும் முக்கியமாகத் தொழல்வேண்டும். திரிகாணசுத்தியோடும் திரிமூர்த்திகளையாவது பரப்பிரமத்தையாவது பஜிப்பவனே பரமபக்தனென்று உரைக்கத்தகும். இந்தச் சிரத்தாபக்தியோடு சர்ப்பத்தைப்போல் சுவாசத்தையுண்டு நீண்ட ஆயுளைப் படைத்து அநேக சித்திகளால் பூர்த்தியடைந்து நிர்வியாகூலத்துடனிருப்பவன் மாட்சிமையான சித்தனென்று உரைக்கலாம். பகவத்பக்தியும் யோகப்பயிற்சியும் செய்தபலத்தால் சித்திப்பது என்னவெனில் ஜீவன்முத்தித்தன்மையாம். ஜீவன்முத்தியென்பது தேகாதிகளை நியதிசெய்து தன்னையறிந்து தானேபிரமமென்றுணர்ந்து பிர்மநிஷ்டாசாதனத்தினல் விஸ்ராந்தியடைந்து தன்னை மறந்து பரப்பிரமத்துக்குள் ஐக்யமாய் ஆனந்தவாரியில் மூழ்கி தான் இன்னனென்று உணராமல் ஆரூடக்ஞானியாதலேயாம். கேவலம் மௌடீகப் பசுவைப்போல் இருப்பவனினும் மூர்த்தித்தியானஞ்செய்பவன் அதிகம். அவனிலும் பரப்பிரமத்தைதியானிப்பவன் அதிகம் அவனிலும் பரப்பிரமத்தைத்தனக்குள் அறிபவன் அதிகம். அவனிலும் அப்பரம்பொருளாயிருப்பவன் அதிகம். அவனிலும் அகண்டானந்தத்தால் தன்னையின்னனென்று அறியாமல் சாட்சாத்காரத்தை யடைந்திருப்பவன் அதிகம். அவனிலும் துரிய திருஷ்டியை மேவித் திக்குதேசாதிகளிறந்து பேய்பிடித்தவன்போலவும் சேமிருப்பதுபோலவு மிருக்கும் சகசஞானிகளைத் தேடிக்கண்டுபிடித்து அன்னபானதிகளூட்டிக் குற்றேவல் செய்பவன் அதிகமாகும். "ஓ இராஜனே! இப்பேர்க்கொத்த மேலான லாபத்தை விடுத்துத் துன்பத்தையடுத்து அரிதான ஆயுளைக்கெடுத்துக் கர்மமென்னும்

பெருமூட்டைகளையெடுத்துப் பசுவைப்போலிருக்கும் மானிடர்கள் நாளை எமன் வந்தடுத்தால் என்ன செய்வார்களோ? யாரை வைவார்களோ? யான் அறிகிலேன். ஓ வேந்தனே! எத்தனை நாளிருந்தாலும் ஒருநாளில் அழிந்துபோகும் இத்தேகத்தைப் பொய்யெனத் தீர்மானித்து மெய் வாழ்வுக்கு உடன்படாமல் அரை நிமை வீண்காலம் போக்கலாமோ? மண்ணினுற் செய்த பாண்டம் உடைந்தும் மண்ணே இருந்தும்; மண்ணே ஆனது போலப் பரமபக்தியும் ஜீவன்முக்தியும் அடையாதவர்களின் ஆக்கை இருந்தும் பிரேதமே, மரித்தும் பிரேதமேயல்லவோ? ஆ! ஆ! மந்தமதியோர்க்கு எந்தவிதமாயுரைத்தாலும் அந்தகன் சூரியனைக்காணுமல் ஒன்றுந்தோன்ருமல் அந்தகாரமே நிறைந்திருப்பதாகக் காண்பதைப்போலப் பந்தத்துக்குள் அகப்பட்டு வெகு தொந்தரைக்குட்பட்டிருக்கின்ருர்களே; மதபேதவாதிகள் வாதுகளாடி வேதைக்கு உட்பட்டுத் தாங்கற்ற கல்வியால் ஓர் பயனடையாமல் சம்மதத்துக்குட்படாமல் உங்கள் வேதம் பொய்யென்றும், எங்கள் வேதம் மெய்யென்றும், உங்கள் தெய்வம் அசத்தியமென்றும், எங்கள் தெய்வம் சத்தியமென்றும், தூஷணை வார்த்தைகள்விண்டு மதாபிமானமேற்கொண்டு சம்மதத்துக்குட்படாமல் தன்னை யறியாமல் தனக்குள்ளிருக்கும் ஆனந்தத்தையும் அனுபவிக்காமல் உத்தமர்களைப் பழித்து வீணாய் நாளைக்கழித்து எமன்வருங்காலத்தில் தந்தங்களைக் காட்டிச் சூழ்ந்திருப்போரையும் வாட்டிச் சொல்லொணுத்துயரத்தை யூட்டி நாகப்பட்டணத்துக்கு மேட்டான மேட்டிகளாகிறது நன்மையோ? தனக்குள் மெய்ப்பொருளைத் தேடாமல் தெரிவிப்பவர்பாலும் ஓடாமல் பகவத்பக்தியையும் நாடாமல் பரமபாகவதர்களையுங் கூடாமல் வீணுய்த் தர்க்ககுதர்க்கங்களால் நாள்கள் கழிக்கலாகுமோ? இதனுல் அகமமதை பிரிந்துபோகுமோ? க்ஷணபங்கமான இவ்வங்கத்தைத் தங்கத்தைப்போல் எண்ணலாமோ? பாபகர்மங்களைப் பண்ணலாமோ?

ஓ அரசனே! மதபேதகர்க்குச் சதுர்வேதமும் சங்கையேயாகும். சம்மதமுள்ள சாதுக்களுக்கு ஓர் மொழியே போதும். முடிவு எழுவகைத் தோற்றங்களான சராசரங்களெத்தனை யுகமிருந்தாலும், ஓர்காலத்தில் பூமியிலடங்கிப்போகும். பூமியோ சூரியன் உஷ்ணத்தாற் சுண்ணமாகிப் பிரசண்ட வாயுவாற் றூசாகி வருணபகவானுல் ஜலமயமாய்ப்போகும். ஜலமோ அக்கினியால் வற்றிப்போகும். அக்கினியோ வாயுவா லில்லாமற்போகும். வாயுவோ ஆகாயத்தி லடங்கிப்போகும். ஆகாயமோ இருள்மயமான மாயையி லடங்கிப்போகும். மாயையோ தன் சாமர்த்தியங் கெட்டுச் சூரியனைக்கண்ட பனியைப்போலவும், சுழல்காற்றி லகப்பட்ட இலவம்பஞ்சுப்போலவும், அக்கினியில் வீழ்ந்த சருகைப்போலவும், சுத்தசூன்னியமாய்ப் பிரமத்திலில்

லாமற் போகுமானுல் நமது ஆக்கையை ஓர் பொருளாய் மதித்து அகமடைந்திருக்கலாமோ? ஓ பூபதி! மாயை யிவ்விதமா யொடுங்கியும், பாப்பிரமம் ஆதிமத்தியாந்த ரகிதமாய் நாமரூப விகார ரகிதமாய் அகண்டானந்தமயமாய் நித்தசுத்த புத்தமுத்தமாய் நிஷ்கள நிராமயமாய் நிர்ச்சேத நிர்பேத நிராவரணமாய் என்றுமுள்ளபடியே யிருக்கும். ஆதலால் தனக்குள் இப்போது மந்தலட்சணத்தோடிருக்கும்பரமாத்மாவைச்சற்குருவாலறிந்து, கூடஸ்த பிரமத்தையே சுசாதிக விசாதிக சுவகத பேதரகிதமென்றும், அகண்ட பரிபூரணஸ்வரூபியென்றும், சத்யக்ஞானனந்த வஸ்துவென்றும், தேவரும் மற்றியாவரும் போற்றும் ஆதிதெய்வமென்றும், முத்தரும் பத்தரும் சித்தரும் வணங்கும் பரம்பொருளென்றும், சித்விலாச சின்மய சுயம்பிரகாச தேஜோமயமென்றும், திவ்ய மங்களாற்புத போதமென்றும், இதை யடைந்தவர்களுக்கு ஜனன மரண துக்கபரம்பரை யொழியுமென்றும், சகல பாபகர்மங்கள் விமோசனமாகுமென்றும், நரக வேதனை யில்லையென்றும், மோட்சானந்தங் கிடைக்குமென்றும் சொல்லப்படும். இதிற் சந்தேகமேயில்லை. சந்தேகமுள்ளோர்க்கு அளவற்ற தொல்லை. ஓ இராஜனே! இந்தப் பிரமக்ஞானம் லேசிலடைவதற்குச் சற்குருகிருபையும் இஷ்டதேவதையின் வரப்பிரசாதமும் அவசியம் வேண்டும். இன்றேல் நிஷ்பிரயோசனமாய் முடியும். ஆதலால் இன்றுடன் தெய்வபக்தியும் சற்குரு சிரத்தையும் சாதுக்கள் சேவையும் செய்து சுகமுற்றிருப்பாயாக" என்று அறைந்து அக்பர் பாதுஷாவிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மதுரா பிருந்தாவனம் முதலிய புண்ணியக்ஷேத்திரங்களிற் சஞ்சரித்து ஆனந்தமேலீட்டாற் றன்னை மறந்து சகஜஞானத்தால் பூர்த்தியடைந்து ஆரூடக்ஞானியாய் சிறப்புற்றிருந்தார். அக்பர் பாதுஷாவோ அன்றுடன் பகவத் பக்தியில் விசேஷித்துப் பிரமக்ஞான நிஷ்டையையும் சாதித்துக்கொண்டு ஆனந்தமா யிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே! பின்னும் துளசிதாசரால் அநேக விசித்திரங்கள் நடந்ததுண்டு. அவையனைத்தும் பக்தவிஜயத்தின் மத்தியில் அங்கங்கே வரும் சத்விஷயங்களைக் கேட்டுச் சந்தோஷமடையலாமென்று உரைத்துப் பின்னுஞ் சொல்லுவார். இந்தத் துளசிதாசருடைய சரித்திரத்தை அன்புடன் பாராணஞ் செய்தவர்களுக்கும், சிரவணஞ் செய்பவர்களுக்கும், பகவத்பக்தியும், நிஷ்காமியமும், பிரமக்ஞானமும், அகண்டானந்தமும், அஷ்டயிசுவரியமும், தீர்க்காயுசும், நோயற்றவாழ்வும், சத்தியமாகச் சித்திக்கும். "ஓ சித்தர்களே! நாளை உத்தவ அவதாரமான நாமதேவர் சரித்திரத்தைச் சொல்லுவேன். அது வெகு உசிதமாயிருக்கும். இனி உங்களுடைய ஸ்தானத்துக்கு எழுந்தருளி நாளை அதிகாலையில் வாருங்கள்" என்று ஆக்யாபித்து நாபாஜி

சித்தர் பிரமானந்தத்திற் படிந்திருந்தார். உத்தவசித்தர் முதலானவர்கள் தங்கடங்கள் இருப்பிடஞ் சேர்ந்து யோகநிஷ்டைகள் எழுந்தருளிக் களிகூர்ந்திருந்தார்கள்.

---

நாலாயிரப் பிரபந்தத் திருவாய்மொழியில்

### விஷ்ணுபக்தர் வாக்கியம்

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுள்நேர்மை அதுவிதுவென்று
ஒன்றும்ஒருவர்க்குணரலாகாது உணர்ந்துமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானங்கடந்ததே.

நன்றாய்ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழ் உலப்பிலதனைஉணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்
அன்றேஅப்போதேவீடு அதுவேவீடுவீடாமே.

### சிவபக்தர் வாக்கியம்

அஞ்சலிலன்றகாதலமுங் கனபணைகங்கணமும்
அரைக்கிசைந்தபுலியுடையு மம்புலிச்செஞ்சடையும்
நஞ்சையுண்டமணிமிடறு முன்னூலுமார்பும்
நலந்திகழ்வெண்ணீற்றொளிவு மறிமானுமமுவும்
கஞ்சமலர்ச்சேவடியுங் கருணைபொழிமுகமுங்
காமனையன்றெரித்ததிருக் கண்களொருமூன்றும்
பஞ்சடிசிற்றிடைமடந்தை யொப்பனைபாகனுமாய்
பால்வண்ணனுளத்திருக்கப் பயமுண்டோவெமக்கே.

என்றுரைத்த பதிக்கவர் சதியுரைத்த

### வாக்கியம்

ஆக்கையெனும்புழுக்குரம்பை யணைந்தணையாப்பொருளை
அருளொளியைப்பராபரத்துக் கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்கு மிடவறவிவ்வுலகை
நிறைந்துநின்றபெருவெளியை நினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந் தவக்குறைகண்முடித்த
பழவடியார்க்கருளுதவும் பசுந்துணைக்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்துக் களவுபடாவொன்றை
மாசற்றபெருவெளியை மனவெளியிலடைப்பாம்.

### துளசிதாசர் சரித்திரம் முற்றிற்று.

---

☞ இச்சரித்திரத்தின் பிற்பாதியை எம்மால் வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீநிவாசய்யங்காரால் எழுதியுள்ள ஸ்ரீமகா பக்தவிஜயம் இரண்டாம் பாகத்தில் பரக்கக்காணலாம்.

ஸ்ரீ

ஸ்ரீமத் விட்டலதேவாய நம.

நான்காவது

# நாமதேவர் சரித்திரம்

## பகவான் துதி

விருத்தம்

பாண்டவர்க்காத் தூதுசென்ற பத்மநாபா பரந்தாமா
நீண்டவுலக முழுதுண்ட நெடியமாலே யுனையன்பாய்
வேண்டிடாம லல்கியலே வேண்டுஞ் சிறியநாயேனை
ஆண்டுகொள்வா யச்சுதனே அடியேனுன்ற னடைக்கலமே.

## நாமதேவர் துதி

விருத்தம்

அன்னைவயிற்றிற் பிறக்காதோ னரியைக்கணமு மறக்காதோன்
அன்னமாலுக் குண்பித்தோ னரியவருத்தந் தருவித்தோன்
சொர்னஞ்செய்கற் பலதந்தோன் சுரபிக்கன்றுக் குயிர்தந்தோன்
உன்னற்கரிய நாமதேவ னுபயவடிக டமைத்தொழுவாம்.

முதலாவது

# நாமதேவர் உற்பத்தி அத்தியாயம்



பிர்மரந்திரத்தில் சுவாசத்தை யேற்றிக் காலபயத்தை மாற்றித் தேகமனவாதைகளில்லாச் சித்தர்கள் காலையிலெழுந்து நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, புராதனசித்தரான நாபாஜிசித்தருடைய ஸ்தானத்தையடைந்து, அவருடைய தாட்டாமரைகட்கு வந்தனந் தந்து, "ஓ சுவாமி! உத்தாவதாரமான நாமதேவருடைய திவ்விய சரித்திரத்தைக்கிருபைகூர்ந்து அருளுமையா" என்று வணங்கினார்கள். நாபாஜிசித்தர் களிகூர்ந்து, "ஓ சித்தர்களே! அண்டர்கள் மகிழும் தொண்டர்கள் திகழும் இந்திரன்புகழும் சந்திரன் தவழும் சுந்தரமான சந்திரபாகாநதிக்கு அருகான எண்டிசைபோற்றும் விண்டு வீற்றிருக்கும் பண்டரபுரத்திலிருப்பவர்; பண்டரம் நெற்றியிற்றரிப்பவர்; சுப்ரகுணத்திற் சிறந்தவர்; மெய்ப்பணிதன்னில் நிறைந்தவர்; தப்புகளெல்லாந் துறந்தவர்; இப்புவியாசை யிறந்தவர், கைப்

புளயெண்ணம் மறந்தவர்; செப்பரும்பக்தியி லுறைந்தவர், ஒப்பிலாவின்பிற் கறைந்தவர்; துப்புள குணத்திற் குறைந்தவர்; எப்பொழுதும் அரியின்பதத்தில் மறைந்தவர்; தைப்பவர் குலத்தில் பிறந்தவர்; ஆகிய ராமராம என்னும் வாக்குள்ள தாம்ஸேட்டியென்பவர்; மனோவிகாரங்களை மாய்த்த குணுபாயியென்னும் மங்கையுடன் இங்கிதமாக இல்வாழ்க்கையிலிருந்து செல்வாக்குகளறைந்து அனுதினம் நனவிலுங் கனவிலும் அன்பாய் இன்பாய் ஆயனே! மாயனே! நேயனே! உபாயனே! சகாயனே! என்றறையும் சுஜனரோடுங்கூடிப் பஜனை பற்பல பாடிப் பண்டாபுரத்திலிருக்கும் விண்டுவுக்கு நாடோறுந் தப்பாமல் நைவேத்தியங்கொண்டுபோய், நைவேத்தியஞ்செய்து அஞ்ஞானமனதைக்கொய்து தையல்வேலை விடாமல் வேறு வேலையைத் தொடாமல் எண்ணங்களுக்குத் தன் மனதைக்கொடாமல் கோபத்துக்குட்படாமல் வீண்தொழில் செய்துகெடாமல் நலத்தில் நாள்களைக்கழித்துப் பஜனைசெய்யாதவர்களைப் பழித்து, லோபஞ் சற்றுமில்லாமலழித்துப் பகவான் பக்தியிற் செழித்து வாழ்கிறகாலத்தில், தனக்கு அறுபதுவயதாயும், தன் மனைவிக்கு ஐம்பது வயதாயும், பிள்ளையில்லாமையாற் கள்ளிபோல் வளர்ந்தோமேயென்று சதியும் பதியும் துக்கம்மேலிட்டு கக்கசத்துக்குட்பட்டு பாலனுக்காக வழுது பாண்டுரங்கனைத் தொழுது நாடோறும் தாம்ஸேட்டி அதிகாலையிலெழுந்து சந்திரபாகா நதியிற்போய் ஸ்நானஞ்செய்து ஈரவஸ்திரத்துடன் கோயிலை நூற்றெட்டுதரம் அங்கப்பிரதக்ஷிணஞ்செய்து பண்டரிநாதனைப் பணிந்து, "ஓ என்னுண்டவனே! ருக்மணி மனோகரனே! எனக்கு ஓர் மைந்தன் பிறக்க வரந்தந்து ஆண்டளுமையா" என்று தோத்திரஞ் செய்துக்கொண்டே வந்தார்.

இவர் மனைவியாகிய குணுபாயி தன் கொழுனன் நித்திரை விட்டு எழுந்துபோவதற்கு முன்பே ஸ்நானஞ் செய்திருந்து அவர் ஆலயத்திற்கு வருவதற்குள் தான் பண்டரிநாதன் கோயிலுக்குப்போய், "ஓ பண்டரிநாதா! பாண்டவர்தூதா! எனக்குற்ற பிள்ளைகலியைத் தீர்க்கலாகாதோ" என்று தொழுது கண்ணீர்விட்டழுது தன்வீட்டில் வந்திருப்பாள். இப்படி சிலநாள் கழிய ஒருநாள் இரவில் குணுபாயின் சொர்ப்பனத்தில் பகவான் ஓர் அந்தணனாய் வந்து தரிசனந்தந்து "ஓ குணுபாயி! நீபொழுது விடிந்தவுடனே பிள்ளையைப் பெறுவாய்" என்று அறைந்து மறைந்தார். உடனே குணுபாயி, நித்திரைவிட்டெழுந்து தன்

பதியின் பாதங்களில் விழுந்து, "ஓ சுவாமி! யாரோ ஓர் பிராமணர் என் கனவில்வந்து நீ சூரியோதயமானதே குழந்தையைப் பெறுவாய்" என்றறைந்து மறைந்துபோனார். அவர் வாக்கியப்படி நான் பிள்ளையைப் பெறுவேனா? என்றாள். அதுகேட்ட தாம்ஷேட்டி குலுங்க நகைத்து, "அடிபெண்ணே! என்னிரு கண்ணே! பத்துமாதஞ் சுமந்தல்லவோ புத்திரனைப் பெறவேண்டும். அப்படிக்கிருந்தாலும் நரைத்த கிழவியாய்ப்போன நீஎப்படி பிள்ளையைப்பெறுவாய்? உனக்குற்ற தனயனாசையின் நினைவே கனவாய் வந்தது. நனவிற் காண்பதே பொய்யாயிருக்க கனவிற்கண்டது மெய்யாயிருக்குமா? ஓர்வேளை நீ கண்ட சொர்ப்பனம் மெய்யாயிருந்தால் பகவானருளால் நமக்கு எங்கிருந்தாவது குழந்தை யகப்படுமென்று இக்கிழவியான நீ இனிக் குழவியைப் பெறுதற்கு இச்சையாயிருப்பது லச்சைக்கிடமல்லவோ?" என்றார். அதற்குக் குணபாயி நாணமடைந்து மறுத்துப் பேசுவதற் கிடைந்து, நாடோறும் போவதுபோல் ஆலயத்திற்குச் சென்று பகவான் முன்னின்று, "ஓ பாண்டுரங்கா! ஸ்ரீரங்கா! என் கனவில்வந்த அந்தணர் நீரோ? மற்றியாரோ? யாராயிருந்த போதைக்கும் எனக்குற்ற பிள்ளைக்கலியை இத்தினந் தீர்த்தருளல் வேண்டும்" என்று மிகவுந் துதித்துப் பகவான் திருத்தாட்களை மனதிற் பதித்து, மைந்தனாசை தீருமென்று மதித்துச் சந்தோஷமேலீட்டாற் குதித்து வீட்டில் வந்திருந்தாள். தாம்ஷேட்டியென்பவர் அதிகாலையில் நாடோறும் போவதுபோல ஸ்நானஞ்செய்யச் சந்திரபாகா நதியை நோக்கிப் போகையில், பகவான் ஓர் விருத்தப்பிராமணராய் அவாருகிற்சென்று "ஐயா! தாம்ஷேட்டியாரே! உமக்கு இன்றையத்தினம் மைந்தன் பிறந்தானா?" என்று கேட்டார். அதுகேட்ட தாம்ஷேட்டி நகைத்துத் திகைத்து, "ஓ! ஓ! நமது மனைவி நம்முடன் இராத்திரி பேசிய மொழிகளை இவர் கேட்டிருந்ததுபோற் றோன்றுகின்றது. நாமும் நம் மனைவியும் விருத்தாப்பிய மேலிட்டும் குழந்தையாசையாற் குளறிப்பேசினோமே. இவருக்கு உத்தரஞ் சொல்லக் கூசினோமே" என்று யோசித்துக்கொண்டிருந்தார்.

அப்போது மாயாமறையோன் தாம்ஷேட்டியின் கரத்தைப் பிடித்துக்கொண்டு, "ஓ ஐயா! அரிபக்தரே! நான் சொன்ன வார்த்தை யுமக்குக் கேட்கவில்லையோ? உமது காது செவிடோ? இப்படி காது செவிடான நரைத்த கிழவனுக்கும் பிள்ளையாசை

கொள்ளையா யிருக்கின்றது. கேட்டீர்களோ ஜனங்களே! என்று பலருங் கேட்கப் பலதரம் உரக்கக்கூவிச் சொல்லத் தொடங்கினார். அதனால் தாம்ஷேட்டி கோபித்துக் கையைத் திமிறிப் பிடுங்கிக்கொண்டு அந்தணரை நோக்கி, "ஏனையா பரியாசஞ் செய்கின்றீர்? தள்ளாத கிழவனாகிய எனக்குப் பிள்ளை யென்ன மிருக்குமா? உமது வேலையைப் பார்த்துக்கொண்டு போகாமல் பிரயோசனமில்லா மொழிகளைப் பேசுகின்றீர்? வீணா யேசுகின்றீர்? ஈது உமக்குத் தகாத காரியம்" என்றார். விப்பிரர் "ஓ ஐயா பகவத்பக்தரே! பிராரியாக்குப்தரே! உன்மனையாள் இப்போது தான் மகவை யீன்றாள். நான் பார்த்தே வந்தேன். உள்ளதைச் சொன்னால் வெள்ளறிவன் சள்ளென்று விழுவான்" என்பதைப் போல் நிச்சயத்தைச்சொன்னால்குச்சிதங்கொள்ளுகிறீர். தூஷண வார்த்தைகள் விள்ளுகின்றீர். என் வாக்கியத்தைப் பரிசோதிக்கச் சீக்கிரம் வீட்டுக்கு வாரும்; புத்திரனைப் பாரும்; பத்திரமாய்க் காரும்; எனக்குத் தட்சணை தாரும்" என்று பின்னும் அவர் கையைப் பிடித்து இழுக்கத் தொடங்கினார். தாம்ஷேட்டி முனிவுடன் நீயாரையா? வெகுநேரமாக என்னை மறித்து வருத்துகின்றீர்? பொய்ம்மொழி புகன்றீர்? பருவகாலங் கடந்த விருத்தை கர்ப்ப மெப்படி யுறுவாள்? சுதனை யெப்படி பெறுவாள்? மூதோள் குமரனைப் பெற்றதை யாராவது இவ்வுலகில் பார்த்த துண்டா? அல்லது கேள்விப்பட்டதுண்டா? ஒருநாளும் அறிமுகமில்லா நீர் இப்படி ஏளனம் செய்யலாமா? மோடனம் பண்ணலாமா?" என்றார். மாயாமறையோன், "ஓ ஓ! என்னை நீர் நாடோறும் பார்த்துக்கொண்டிருந்தும், கரங்களைச் சேர்த்துக்கொண்டிருந்தும், இன்றைக்குத்தான் நூதனமா யறிந்தவர் போல் நீர் யாரென்று கேட்கின்றீர்? நெடுநாள் சிநேகத்தை மீட்கின்றீர்? ஓ ஓ! காது செவிடானாலுங் கண்ணுங் குருடோ? அல்லது முருடோ? இப்படி கண்கெட்ட குருடனுக்குங் காளையாசை யிருக்கலாமோ? சுதன் வாஞ்சையைப் பெறுக்கலாமா?" என்று உரைத்தார். தாம்ஷேட்டி அந்தணரை உற்றுநோக்கிச் சாந்தத்தை நீக்கி, ஏனையா? குருடன், திருடன், முரடன், கடன் என்று ஏசுகின்றீர்? பேசாதெல்லாம் பேசுகின்றீர்? அப்படி என்பெண்சாதி பிள்ளையைப் பெற்றாலும் நீர் இப்படிப் பேசக்கூடுமா? பேசி யேசக்கூடுமா? வெகுநேரமாக விகடவார்த்தைகள் கடபடவென்று சொல்லிக்கொண்டு குடுகுடு, திடுதிடுவென்று அங்குமிங்குமாக உலாவிக்கொண்டு பலர்முன் என்னைத் தூற்று

கின்றீர்? ஏமாற்றுகின்றீர்? இச்சகம்பேசிப் பிட்சையெடுத்துண்ணும் துச்சகுணத்தைக் காட்டாமல் லச்சை செய்வதுவிட்டு இட்சணமே உம்மிடஞ்சேரும்" என்று கடுகடுத்து உரைத்தனர்.

வேதியர் என்னைப்போவென்று இசைத்த தாம்ஷேட்டியாரே! நீர் நாடோறுந்தப்பாமல் என் குட்சி நிறையப் பிட்சையிடுவதும் நிச்சயமே. இனிமேல் உன்றன் சொந்த மைந்தன் என்றனுக்குப் பிச்சையிடுவதும் நிச்சயமே. "ஓசித்தனே! பிறந்த மைந்தனுக்கு என்ன நாமகரண மிடப்போகிறீர்? பெயரிடும் போது என்னை மறந்துவிடப்போகிறீர்? வேறு ஓர் அந்தணனைத் தொடப்போகிறீர்? தொட்டுத் துக்கப்படப்போகிறீர்? துக்கப்பட்டுக் கெடப்போகிறீர்? ஜாக்கிரதை ஜாக்கிரதை" என்று சொல்லினர். தாம்ஷேட்டி இதென்ன சள்ளையாயிருக்கின்றது. பேயில் பிராமணப்பேய் பிரம்மராட்சசப்பேயென்று உரைப்பது போல அதிகாலையிலிருந்து கூடவே தொடர்ந்தார். சூழ்ந்த கொடியைப்போலப் படர்ந்தார். ஸ்நானஞ் செய்யப்போகாமலடர்ந்தார் என்று தாபமுள்ளவர்க்குக் கோபமதிகமென்று உரைப்பதுபோல ஸ்வாமி யென்று பூஷித்ததுபோய் நாயே பேயேயென்று தூஷிக்கத்தொடங்கினர். வேஷதாரி வேதியன் துவேஷங்கொண்டதுபோல தாம்ஷேட்டியின் மார்புடன் தன் மார்பகத்தைச் சேர்த்துக் குடிமையைப் பிடித்தீர்த்து மீசையை முறுக்கிக் கோபத்தைப் பெருக்கி, "அடா கந்தைகளிலுள்ள ரந்திரங்களைக் காலையிலிருந்து மாலைபரியந்தம்தைக்குங்கடையா! அறிவில்லா மடையா! நான் சுபத்தைச் சொல்லவந்தால் விபத்தென்று நினைத்து மேன்மேலுங் கனைத்துச் சாந்தமே வேதாந்தமென்று வாசித்ததுபோய்ப் பிராமணோ மமதேவதாயென்று விசுவாசித்ததுபோய்ப் பூஷிப்பதைவிட்டு வாயில்வந்தபடி தூஷிக்கிருயா? அந்தணர்புகழும் சந்திரன் தவழும் இந்தச் சந்திராபாகாநதியறிய உனக்கு மைந்தனுசை எந்தநேரமு மில்லையா? பாசபந்தனே சொல்லடா" என்று தாம்ஷேட்டியின் கன்னத்திலறைந்து மிகவுமிறைந்து பேசத்தொடங்கினர்.

தாம்ஷேட்டி "இதென்ன கர்மம்; தர்மசங்கடமா யிருக்கின்றது. பிரமிக்கும்படி நமதுமர்மமெல்லாம் நாலுபேரறிய மேலுமேலும்பேசுகின்ருன். ஒண்டியாயிருந்தால்கண்டகோடாரியால் கண்டங்கண்டமாகத் துண்டந்துண்டமாகக்கண்டித்துவிடுவேன் சூரியோதயமாகிவெகுநேரமாய்விட்டது. பகவானுக்கு நைவேத்

நியஞ் செய்யத் தடங்கலாய்விட்டது. நன்மைதின்மையுங் கெட்டது. இப்பிராமணர் ஆகாத்தியம் மிகவுங்கெட்டது" என்று கோபங்குதித்து மிகவுங்கொதித்துப் பற்களை நறநறெனக்கடித்து அதரத்தைமடித்து உதிரம் புறப்படக் கடித்து மிகவுந் துடித்து ஈனமொழிகளைப் படித்து மாக்கிளையை ஒடித்து ஓங்கி ஓடிவாங்கப்போனார். கபடநாடகமாடும் ஐயன், "ஓ ஜனங்களே! எனக்குரிய இனங்களே! இந்த விருத்தன் மிகவும் பருத்த மரத்தின் கிளையை முறித்து நான் வருத்தமுற அடித்தான் பார்த்தீர்களா? பார்த்தீர்களா? எனக் கூக்குரலிட்டுக் கோபமேலிட்டுத் தாம்ஷேட்டியைக் கீழேதள்ளி, நகங்களாற் கிள்ளி மேன்மேலுங் குத்தத் தொடங்கினார். தாம்ஷேட்டி அதிக கோபதீப்தனாக மீசைகள் படபடவென்று துடிக்கக் கண்களில் நெருப்புப்பொறிகள் பறக்க மகாவுக்கிரங்கொண்டு வேதியர் முகத்திலும் மார்பகத்திலும் கைமுஷ்டியிற் குத்தி அவ்விருத்தப் பிராமணரைக் கீழேதள்ளி வெற்றியடைய வேண்டுமென்கிற எண்ணத்தால் தன்பலங்கொண்டமட்டும் போர்செய்து புரட்டிப்பார்த்தும் தன்னாலாகாமல் பற்களாற்கடித்து நகங்களாற்கீறித் தட்டுக்கெட்டுத் தடுமாறி மிகவும் வேசாறி மெதுவாகத் தப்பித்துக்கொண்டு ஆற்றின் பக்கமாய் ஓடத்தொடங்கினார். மாயாவிலாசன் தாம்ஷேட்டியை விடாமற் றொடர்ந்தோடிக் கழுத்தைப்பிடித்து நெட்டிக்கொண்டே தலையில் குட்டிக்கொண்டே ஆற்றிற் குப்புற விழும்படி அதட்டிக்கொண்டே வாயில் வந்தபடி திட்டிக்கொண்டே நின்றார். தாம்ஷேட்டி நதியில் தலைகீழாய் வீழ்ந்து திக்குமுக்கிட்டு நொந்து துக்காக்கினியில் வெந்து இன்று நமக்குப் பொல்லாதகாலமானதால் இந்த முரட்டுப்பிராமணன் நம்மைத் தரையிற்புரட்டித் தன்பலங் கொண்டமட்டும் அடித்துவிட்டான். வைராக்கியத்தை முடித்துவிட்டான். வல்லடிவழக்கு சொல்லடிமாமி என்கிறபடி வீணாய் இத்துஷ்டனிடங் கஷ்டப்பட்டோம். நதியிலிறங்கிவந்து தொந்தரை செய்தாலுஞ் செய்வானென்று தூரமாகச்சென்று அந்தணனுக்குப் புலப்படாமல் நின்று அதிசீக்கிரமாய் ஸ்நானஞ் செய்யத்தொடங்கினார்.

அப்போதுபகவான் தாம்ஷேட்டியையடைந்து, வேஷ்டையைத்திர்க்கவும், மைந்தன் வாஞ்சையைப்போக்கவும் உத்தவரை நினைத்தார். உடனேஉத்தவர்பரமபதத்தைவிட்டுப் பகவான் பக்கலடைந்து பற்பலவிதங்களாகத் துதித்து, என்னை யழைப்பித்த காரணமேதோ? திருவாய்மலர்ந்தருளும் ஸ்வாமி யென்று

வணங்கிநின்றார். பகவான் உத்தவரைநோக்கி, "ஓ உத்தவனே! இதோ நமக்குநேரே அதோ ஸ்நானஞ்செய்யும் உத்தமர் தன் வீட்டுக்குப் போவதற்குள் அவருடைய சதியின் கர்ப்பத்திற் றங்கி ரிஷிபிண்டத்தைப்போல இவ்வுலகிலுள்ளோர் யாவரும் ஆச்சரியப்படும்படியாய்ப் பிறந்து மாந்தர்களுக்கு என் பக்திப் பிரதாபத்தை விரித்து உரைப்பாயாக" என்று திருவாய்மலர்ந் தருளினர். அவ்வாக்கியத்தைக்கேட்ட உத்தவர் திடுக்கிட்டு, "ஓ என்னுண்டவனே! உனது பரிபூரண கடாக்ஷம்பெற்ற அடியேனை நரகத்தை யடையச்செய்யலாமோ? உதராக்கினி காமாக்கினி கோபாக்கினியென்னும் திரியாக்கினியும் புகைந்தெரிந்து மலம் ஜலம் வழும்பு முதலானவைகளுஞ் சேர்ந்து, புழுக்கள் நெளிந்து, துர்க்கந்தமான சுரோணிதம் வழிந்து, மச்சைக் கொழுவாற்றழைந்து இருக்கும் கர்ப்பக்குழியையன்றி வேறு நரகமொன்றுளதோ? ஜன்மமில்லாம லிருப்பதன்றி வேறு மோட்ச மொன்றுளதோ? கருப்பைக்குள் கட்டுப்பட்டுப் பெருமூச்செறிவதும், நெருக்கவழியில் தலைகீழாய்த் தள்ளாடிக் கொண்டு வருவதும், பிரசூதவாயு வேதைசெய்ய அயர்ந்தழுவதும், மாயையென்னும் நீரில் மூழ்கியிருப்பதும் சொல்லக் கூடாத துன்பமல்லவோ? துன்பமே நரகமல்லவோ? தேவரீருக்கு அடியேன் விரித்துச் சொல்லவோ? எமதண்டனையும் நரகக் குழியும் கர்ப்பத்திலிருப்பதேயன்றி வேறே எவ்விடத்திலாவது எமதண்டனையும் நரகக்குழியும் இருக்கின்றதோ? ஓ என்தெய்வமே! மோட்சமடைந்த நான் நரகத்தையடைந்து தாட்சியடையலாகுமோ? அடியேன் நரகடைய மறந்தும் தேவரீர் நினையீரென்றிருந்தேனே. இப்படி அதிக நம்பிக்கையோடும் இருந்த என்னைப் பாழ்நரகிற்றள்ளலாமோ? அடியேன் துன்பங் கொள்ளலாமோ? நரகலோகமென்பது இந்தலோகமன்றி வேறு உண்டோ?" என்று உரைத்து உருகினர். அவ்வாறு உருகும் உத்தவரைப் பகவான் கருணையுடன்பார்த்து மார்புடன் சேர்த்து, "ஓ எனது அன்பனே! உன்னைப்போன்றவர்களாலேயே என்னுடைய திருநாமத்தின் மகிமை இவ்வுலகில் விளங்குமன்றி மற்றவர்களாற்றுலங்காது. ஆதலால் சீக்கிரம் குழந்தையாகித் தாம் ஷேட்டியிடஞ்செல்லும்" என்று அறைந்தார். உத்தவர் "ஓ சுவாமி! உமது ஆக்கினைப்படியே மைந்தனாய் ஜலத்தில் மிதந்துக்கொண்டுபோய்த் தாம்சேட்டிற்குத் தனயனுகின்றேன். ஆனல் அடியேன் இப்போது எடுக்கும்

ஆக்கையைவிட்டுப் பரமபதத்தை யடையும் பரியந்தம் உமது பக்தி சிறந்திருக்கவேண்டும். என்னுடன் கூடித் தேவரீர் நாடோறும் உண்ணவேண்டும். தாரித்திரம் என்றென்றைக்கும் அணுகாம லிருக்கவேண்டும். நான் நினைத்தபோதெல்லாம் உமதுகாட்சி கொடுக்கவேண்டும். தாழ்ச்சி தவிர்க்கவேண்டும்'' என்கி றவரங் கேட்டுக்கொண்டார்.

பகவான், ''ஓ உத்தவா! நீ கேட்ட வரங்களெல்லாங் கொடுத்ததன்றி உனக்குத் தோழனுகவும், பணியாளனுகவு மிருக்கின்றேன். சீக்கிரங் குழந்தையுருவாகிப்போ" என்று திருவாய் மலர்ந்தார். உத்தவர் மகாபாக்கியமென்று அழகுள்ள குழவியாய் ஓர் நீண்ட சிப்பியிற்றங்கிச் சந்திரபாகாநதியில் மிதந்துக் கொண்டே காகாவென்கிற சப்தத்துடன் அழுதுக்கொண்டே தாம்ஷேட்டியின் அருகில்வந்தார். தாம்ஷேட்டி குழந்தையைக் கண்டதே கொப்பென்று எழுந்துவாரியெடுத்து மார்புடனணைத்துச் செப்புதற்கரிய ஒப்பிலாமணியாகிய என்னப்பனே! இச்சலத்தில் எப்படி மிதந்துவந்தாய்? எனக்கேன் உன்னிட சேவைதந்தாய்?என்று அம்மகவை எடுத்துக்கொண்டு தன்வீட்டைநோக்கி ஓடத்தொடங்கினுர். அப்போது பகவான் தாம்ஷேட்டியின்பின் தொடர்ந்தோடி, "அடா திருடா? அடா குருடா? குழந்தையேதடா எதடா? நீ இதுபரியந்தம் என்னுடன்செய்தது வீண் வாதடா வாதடா? உன் பக்தி மிகவுஞ் சூதடாசூதடா? குழந்தையையெங்கே கொண்டுபோகிருய்? ஓதடா ஓதடா? அப்பா இவ்வளவு துரிதமாயோடுதற்கு உனக்கு எங்கிருந்துவந்தது பலம்? இக்குழவிக்காகத்தானே வெகுநாளாகக் கோயிலே வலம் வந்தாய். இச்சுதனுல் உனக்கு என்னடாவரும் நலம்? இம்மதலையாற்றானே ஈடேறும் உன்குலம்? மகப்பேறில்லாமையாற்றானே அடைந்திருந்தாய் சஞ்சலம்" என்று உரைத்துக்கொண்டே காற்றைப்போல அதிவேகமா யோடும் தாம்ஷேட்டியின்முன் ஓடி மறித்து "அடா தையற்காரா! இச்சுதன் யார்பெற்றபாலன்? எவர்பெற்ற சீலன்? என்ன திருவிளையாடல் செய்யவந்தகோலன்? எப்பேர்க்கொத்தவர்க் கனுகூலன் குழந்தையைத் தாரும் பார்ப்போம்" என்று பலவந்தமாகப் பிடுங்கத்தொடங்கினுர். பகவானுடைய மாயையால் அக்குழவியின்மேல் அதிக ஆவல்கொண்ட தாம்ஷேட்டிக்குத் தாபமும் கோபமும்சோபமும் லோபமும்மேலிட்டு அப்பிராமணுேத்தமருடன் வாதாடப் பின்னிட்டு, "ஓ சுவாமி!

நீர் மேலான வருணம். ஆதலாற் செய்கிறேன் சரணம். ஓடிவருதலால் நோகும் உமது சரணம், இப்போது என்னை மறுக்காத தருணம். மறித்தால் உமக்குவரும் மரணம். நீர் எனக்கோர் திரணம். சாந்தமாய்வந்தாற் றருவேன் அனேகாபரணம். ஆதலால் என்னைத் தடைசெய்யாதீர் செய்யாதீர். வாயில்வந்தபடி வையாதீர் வையாதீர்" என்று உரைத்துக்கொண்டே குழந்தையைக் கொடுக்காமல் அங்குமிங்குமாய் ஓடத்தொடங்கினர்.

மாயாப்பிராமணர் தாம்ஸேட்டியின் மடியைப் பிடித்துக் கொண்டு அசையாமல் நிறுத்தி மிகவும் வருத்தி, "அடா தாம்ஸேட்டி! குழந்தை ஏதுசொல்லு? ஓடாமல் சற்றுநில்லு? ஏன் செய்கிறாய் மல்லு? நீயெனக்கோர் புல்லு? நசுக்கு எருவராட்டிச் சொல்லு? நறநறென்று ஏன் கடிக்கின்றாய் பல்லு? கோபத்தால் என்னைக் கொன்றாலுங்கொல்லு. இத்தர்ப்பையேஉன்னைக்கொல்லும் வில்லு, உன்னைப்புடைக்க என்கரமுஷ்டியேபெரியகல்லு. உன்பலமூதச் சிதறும்பதர்நெல்லு. இப்பாலனுக்காகவா நாடோறும் அல்லும்பகலும் பண்டரிநாதனுக்கு நைவேத்தியஞ் செய்துக்கொண்டுவந்தாய். அடா! மோட்சத்தின் சூட்சமான மார்க்கமறியா மூர்க்கநாயே! அறிவில்லாப்பேயே! உனக்கும் வாயேன்?" என்று கான்மூளை நசுங்கிக் காகாவெனக் கூக்குரலிட்டு அழத்தாம்ஸேட்டிபலதரந்தொழ, அவர்மீதிருக்கும்பேரன்பால் மார்புடன் மார்பைச் சேர்த்துப் பல திக்குகளிலீர்த்து அங்கம் வேர்த்துத் தாம்சேட்டி தோர்த்துப் போகும்படியாயும், மனங்கொதித்து வேகும்படியாயும், பகவானுக்கு முறையிட்டு நோகும்படியாயும், சின்னபின்னமாகும்படியாயும், குடுமியைப்பிடித்துப் பலதரமிழுத்து, முழங்கைகளா லிடித்து, வீட்டுக்குப்போகாமற் றடுத்தார். விடாச்சலந் தொடுத்தார். அதனல் தாம்ஸேட்டிக்குக் கோபம் மிகவும்ஓங்கி பெருமூச்சுகள்வாங்கிச் சண்டைசெய்யப் பின்தாங்கி என்னசெய்யலாமென்றேங்கிக்கைகால்களை அடிக்கடியுதறி அங்கமெல்லாம்பதறி வாய்தடுமாறக் கதறி அந்தணர்முகத்தில் எச்சில்சிதறி விழும்படியாய்ப் பேசி மிகவும்யேசி, அடா லச்சைகெட்டுப் பிச்சையெடுத்துழலும் பேயனே! துர்மொழிகள் பேசும்வாயனே கலியாணப்பந்தலில் கரடியைவிட்டு ஓட்டினதுபோலவும், யானை நிழலைப் பார்க்கத் தவளை கலக்கினதுபோலவும், எனக்கு இம்சைதரவந்தாய்; வாதாடிநொந்தாய்; என்று தூஷித்துப் பின்னும் சந்தோஷமாய் வீட்டுக்குவாரும்; என்னவேண்டுமோ கோரும்; கோரினது அளிப்பேன்பாரும்; கொடுக்காவிட்டால் செய்

வீர் தாருமாறும்; வழக்காடியது போரும்; சற்றேகிருபைகூறும்" என்கிற மொழிகளால் பூஷித்தார். அப்போது மாயாப்பிராமணன், "அடா போடா குடிகேடா! மூழுமூடா! வனவேடா! எனக்குத் தேவையானது இக்குழந்தையே வாக்குக் கொடுத்தபடியால் இக்குழவியை இழந்தையேயென்று சுதனைக் கொடுக்கும்படி வம்புக்கு நின்று மெய்யன்வீறிட்டு அழத் தாம்ஷேட்டியைக் கீழே தள்ளிப் பாபர" என்று பலபக்கங்களில் இழுக்கத் தொடங்கினர்.

தாம்ஷேட்டி தனயனுக்குக்காயம்படாமல் மார்பில்சேர்த்துக் கொண்டு, இதுவென்ன கோரமென்றுவிண்டு. சோகம் மிகுந்து, மிகவும் நொந்து, தனது இஷ்ட தெய்வமாகிய பண்டரிநாதனை நினைத்து, கண்ணீரால் நனைந்து, "ஓபண்டரிநாதா! அண்டர்கள் நாதா! தொண்டர்கள்நாதா! புண்டரீகபாதா! பாண்டவர்தூதா! ருக்மணிசமேதா! லீலாவினோதா! வேதாதீதா! ஓமதுசூதா! நான் உமதிடம் குசேலனைப்போல் பாக்கியமும், விபீஷணனைப்போல் சிரஞ்சிவித்தன்மையையும், அனுமாரைப்போல் பிரமபட்டமும், துருவனைப்போல் அழியாப்பதமும், அருச்சுனனைப்போல்படைத்துணையும், பிரகலாதனைப்போல்வம்சரட்சணையும், ருக்மாங்கதனைப்போல் அநேகர்க்குப் பரமபதமும், அம்பரீஷனைப்போல் பத்தவதார மெடுக்கவும், தேவர்களைப்போல் அமிர்தத்தையும், விதுரனைப்போல் தன்னுடன் விருந்துண்ணவும், பரமசிவனைப் போல பிர்மத்தியை நீக்கவும், பார்வதியைப்போல மானபங்கத்தைக் காக்கவும், இலட்சுமியைப்போல் உமது வட்சஸ்தலத்திற் சேர்க்கவும், நாரதரைப்போல் உமது வடிவத்தையும், இந்திரனைப்போல் பலதரம் இராக்கதரோடு போர்செய்யவும், முசுகுந்தனைப்போல் நீண்ட ஆயுளையும், வாணசுரனைப்போல் யுத்தஞ்செய்யச் சம்மதிக்கவும், உத்தவரைப்போல் பேரின்பத்தையும், குப்ஜாவைப்போல் சிற்றின்பத்தையும், அனுசூயைப்போல தனக்குப் புத்திரனாகவும், தேவகியைப்போலப் பிரமஞானம் போதிக்கவும், துருவாசரைப்போல்கடினபணிவிடைக்காளாகவும், துரோபதையைப்போல் பல வஸ்திரங்கள் தரவும், கஜேந்திரனைப் போல் முதலையைச் சம்ஹாரஞ் செய்யவும், உமதிடம் நான் இச்சிக்கவில்லையே? நான் ஆசித்தது இக்குழந்தையைத் தானே. ஓ எம்பெருமானே! தந்தையின்மடியை இச்சித்து அனுகூலப்படாத துருவனுக்கு அழியாப்பதமளித்த பகவானே! மூவுலகை வாஞ்சித்த மாபலிக்கு மோட்சவுலகை யளித்த பகவானே! ஐசு

வரியத்தைக் கோரிய குசேலனுக்கு அடிமையாய்ப் போக எண்ணங்கொண்ட அச்சுதனே! எச்சிலைக்கொடுத்த சவரிக்குச் சொற்சமான மோட்சங் கொடுத்த உச்சிதனே! பத்மநாபா! பரமசொரூபா! பரந்தாமா! ஸ்ரீராமா! பரமேசுவரா! ஜகதீசுவரா! பரிபூரணு! சர்வகாரணு! வேங்கடரமணு! சங்கடஹரணு! சகஸ்திரநாமா! நீலமேகசாமளா! ஓ பகவான் ஓ விஷ்ணு! ஓ தெய்வமே என்று தோத்திரஞ் செய்தார். அப்படி ஏத்தும்போது பக்தவச்சலனுகிய பகவான் தாம்ஷேட்டி செய்யுந் தோத்திரத்தினுல் தனக்கு ஆத்திரமடங்கி ஆனந்தமேலிட்டு ஸ்மாணை கெட்டுச் சித்திரம்போல் அசைவற்று நின்றிருந்தார். அத்தருணத்தில் தாம்ஷேட்டி கான்முளையை ஏந்திக்கொண்டு காலடி பிட்டத்திற் படும்படியாய் அதிக பரப்பரப்போடும் தன்வீட்டை நோக்கி ஓடத்தொடங்கினர்.

உடனே பகவான் கண்களைத்திறந்து தாம்ஷேட்டியைக் காணுமற்பறந்து தாம்ஷேட்டி தன்வீட்டில் நுழையுந்தருணத்தில் ஓடிப்போய்மறித்துக் கொக்கரித்து வாயிலில் நிறுத்தி வீட்டுக்குட் போகாமல் வருத்தி மென்னியைப் பிடித்து அழுத்திக் குப்புறவிழுத்திப் பிள்ளையைப் பிடுங்கிக்கொண்டு, அடா! நான் அநேகநாளாய்த் தவஞ்செய்து பெற்ற பாலனைக் கதிர்வடிவேலனை ஏன் திருடிக்கொண்டு வந்தாய்? எனக்கு ஏன் இடர் தந்தாய்? நீயும் உன் மனைவியுங் கிழப்பிணங்களாயிற்றே. உங்களுக்குக் குழந்தையேது? செய்யவேண்டாம் வீண்வாது?'' என்று ஓசையாய்ப் பேசத்தொடங்கினர்.

அப்போது குணுபாயி வெளியில் வந்து சகலமும் மணுளனுற் கேட்டு அறிந்து அந்தணர்மேல் சீறிவிழுந்து இது நல்ல அகடவிகடமென்று அறைந்து, "ஓ அந்தணரே! பகவான் என் சொப்பனத்தில் வந்து உரைத்தவண்ணம் எங்களுக்கு அகப்பட்ட மதலையை நீயார் வாங்கிக்கொள்ளுகிறவன்? விருத்தரைப் பிடித்துத் தள்ளுகிறவன்? என்னுடைய சுதனென்று விள்ளுகிறவன்? கோபமேலிட்டுத் துள்ளுகிறவன்?'' என்று சிறுவன் சீறியழவும் விடாமல் பிடுங்கத்தொடங்கினள். அதற்கு மாயா மறையோன், "ஓ கிழப்பிணமே! உடைக்கிறேன்பார் உன்பல்லை. இக்கணமே நீயுரைத்த விருத்தையானபின் உனக்கேன் மகவாசை? வீட்டினுட்போ பசாசே?'' என்று வாயில்வந்தபடி பேசத் தொடங்கினர். அதுகேட்ட குணுபாயி "அடா! லச்சைகெட்டுப் பிச்சையெடுத்துக் குட்சியை நிறப்பும் துச்சகுணத்தையா

காட்டினும், வீண்ஜம்பத்தையா நீட்டினும். ஐயையோ! சிறு குழந்தை பசியால் பதறுகிறது. குளிரால் உதறுகிறது. உன் போராட்டத்தால் கதறுகிறது. வாதுசெய்ய நீ எங்கிருந்து வந்தாய்? எங்களுக்கு ஏன் இடர்தந்தாய்? எங்கள் சாபத்தால் என் வெந்தாய்? ஓடோடி வந்தேன் நொந்தேன்" என்றிரைச்சலிட்டுப் பேசினுள். அப்போது வழியிற்போகும் பலருங்கூடி வழக்கைத் தீர்க்கமாட்டாமல் வாடி மாயாமறையோனுடன் வாதாடி, இவர்பேசுவதும் நமக்குத் தெரியாமோடியென்று தங்கடங்கள் அலுவலைநாடி பின்னடைந்தார்கள். அப்போது பராத்பரன் குணுபாயின் பாபங்களெல்லாம் பஸ்பமாய்ப் பரிசுத்தமாகும் பொருட்டு எட்டியுதைத்துத் தாம்ஷேட்டியைக் கைமுஷ்டியிற் சிதைத்துத் தனது திருக்கோயிலை நோக்கி ஓடத்தொடங்கினர். சதிபதிகள் கூடவே தொடர்ந்தோடி ஆலயத்தின் சந்நிதானத்தில் எங்கள் குழந்தை உங்கள் குழந்தையென்று போராடும் போது மாயாவிலாசனுன பண்டரிநாதன் கான்மூளையைக்கசக்கி முற்பிறப்பின் நிலைமையையும், பிர்மக்ஞான நிலையையும் மறக்கும்படியாய்ப் பூமியில் தொப்பென்றுபோட்டு மாயமாய் மறைந்தார்.

உடனே குணுபாயி காகாவென்று கூக்குரலிட்டு அழும் மகவை வாரியெடுத்து ஸ்தன்னியத்தைக் கொடுத்துத் தன்னை மறந்துநின்முள். உடனே பகவான் அருளால் குணுபாயின் கொங்கைகளில் பால்பொங்கி வழிந்தது. அதனுல் சதிபதிகள் இருவரும் தாங்கள் பெற்ற தனையனைப்போல மோகித்து வீட்டிற்சென்று திஷ்டி தாங்கினதெனப் புகன்று நீராட்டி ஆலங் காட்டிப் பக்தர்களுக்கு மேட்டி இவனென்று பாராட்டிப் பாலூட்டித் திலகம் நெற்றியிற் றீட்டிப் பல ஆபரணங்களையுஞ் சூட்டி, வியாகுலத்தை விழக்காட்டிப் பாலன்மீதில் மனதை நாட்டி, வேறு நினைவுகளை வோட்டி, விருத்திக் கதவுகளைப்பூட்டித் தைபற்காரனுகிய தாம்ஷேட்டி லோபகுணத்தை வாட்டிக் கேட்போர்க்கு நிறைந்தகரத்தை நீட்டிக் கான்மூளையை அருமையாகக் காப்பாற்றிப் பண்டரிநாதனைப் போற்றிக் கடவுளே காதலனைத் தந்தார் என்று எங்குந் தூற்றித் தள்ளாமையென்பதை மாற்றிப் பந்துவர்க்கங்களைக் கூப்பிட்டுப் பட்சத்துடன் விருந்திட்டு, மறையவரைக் கும்பிட்டு, மதலைக்கு நாமதேவென்று பேரிட்டு, அருமையாக வளர்த்து ஆனந்தமாய்க் களித்து, அதிதிகட்கு அநேகந் திரவியமளித்து அருங்கொழுந்துபோற்

றளிர்ந்து. அகமும் மலர்ந்து இன்புற்று இருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

நாமதேவர் உற்பத்தி அத்தியாயம்

முற்றிற்று.



இரண்டாவது

## நாமதேவர் பகவானுக்கு அன்னமூட்டிய அத்தியாயம்

வாருங்கள் வினோதமான காதையை மனோரதமாகக் கேட்கும் மஹானுபாவர்களே! ஸ்திரமான ஜீவர்களே! இவ்வித அன்புடன் சதிபதிகள் மனமொத்துத் தனயனைப் பாதுகாக்கும் நாளில், நாமதேவ் நான்காம்வயதைக் கடந்து, ஐந்தாம் வயதை யடைந்து, பிள்ளைகளுடன் துள்ளி விளையாடிக்கொண்டிருக்கும் நாளில், ஓர்நாள் தன் மனைவியைநோக்கித் தாம்ஸெட்டி "ஓ பெண்ணே! இன்றையத்தினம் நான் என் அனுஜனிருக்கும் ஊருக்குப்போய் மாலைக்குமுன் வருகின்றேன்; சீக்கிரம் சகல பதார்த்தங்களையுஞ் செய்து நமது மைந்தனிடங் கொடுத்தனுப்பிப் பண்டரிநாதனுக்கு நைவேத்தியஞ் செய்துவரும்படித் திட்டஞ்செய்து அனுப்புவாய்" என்று அறைந்தனர். பின்பு நாமதேவவைப் பார்த்து, "அப்பா ஒப்பிலாமகனே! இன்று உனது அழகான கைகளால் பாண்டுரங்கனுக்குப் பூமாலைகளைச் சாத்திப் பத்மநாபா பரமசொரூபா என்று ஏத்தி நைவேத்தியஞ்செய்து எங்களுக்குற்ற பந்தபாசங்களைக்கொய்து பத்திரமாய் வீடுவந்து சேர்ந்து, பின்பு விளையாடலாற் களிகூர்ந்து இருப்பாயாக" என்று உரைத்துத் தன் தம்பியிருக்கும் ஊரைநோக்கிப்போனர்.

பின்பு குணபாயி நாடோறும்போல் பகவானுக்கு அனுப்பும் வஸ்துக்கள் அனைத்தையும் ஓர் தட்டில் வைத்து நாமதேவுக்கு நீராட்டிப் பூசூட்டிப் பட்டுவஸ்திரம் புனைந்து, இத்தோன்றல் பாலசுப்ரமண்யனே என்று நினைந்து, நைவேத்தியங் கொடுத்து "அப்பா மகனே! அழகானமுகனே! பண்டரிநாதனுடைய திவ்விய சந்நிதானத்துக்குப் போய் நைவேத்தியஞ் செய்து உன் தாதை ஓதினபடி வழியில் எங்குந் தங்காமல் யாரையுந் தீண்டா

மல் பாண்டுரங்கா ஸ்ரீரங்காவென்னுந் திவ்விய திருநாமத்தைத் தியானஞ் செய்துக்கொண்டே பண்டரிநாதனுடைய திவ்விய சந்நிதானத்துக்குப்போய் நைவேத்தியஞ்செய்து அதிசீக்கிரமாய் வீட்டுக்குவாருமப்பா” என்று அனுப்பினுள். நாமதேவ் அதிக சந்தோஷசித்தனுய் நைவேத்தியத் தட்டை ஏந்திக் கொண்டு பாண்டுரங்கா ஸ்ரீரங்காவென்று பஜனை செய்துக் கொண்டு, வீதியில்வந்து அங்கு பந்தாடிக்கொண்டு இருக்கும் பாலகரைக்கண்டு ஆனந்தங்கொண்டு அசைவற்று நின்ருர். பாலர் விளையாடும் பந்தானது தவறி நைவேத்யத் தட்டின்மேல் விழுந்தது. அதனுல் நாமதேவ் பந்தாடும் பாலரை முனிவுடன் நோக்கிச் சாந்தத்தை நீக்கி, “அடா துஷ்டப்பயல்களே! நைவேத்தியத் தட்டின்மேல் பந்தை யெறிந்தீர்களே? தெய்வ பக்தி உங்களுக்கில்லையா? மூடாத்மாக்களே” என்று வைதார். அம்மொழியைக் கேட்ட சிறுவர் நாமதேவைச் சூழ்ந்துக் கொண்டு, “அடா நாமா! சாப்பாட்டு ராமா! கந்தைகளையும் பொந்தைகளையும் தைக்கும் தையற்காரரும் நைவேத்தியஞ் செய்வதுண்டா? அடா பக்தியிற்சிறந்த தொண்டா? நைவேத்தியங் கொண்டுபோகும் உனக்கு விளையாட்டின் கியாபகமேன்? வெகுநேரமாய் இங்குநின்றதேன்? அசுத்தமில்லாமல் பரிசுத்தத்தோடும் ஒதுங்கிப் போயிருந்தால் பந்து ஏன்விழும்?” என்று உரைத்து நைவேத்தியத்தைத் தீண்டிப் பந்தை எடுத்துக்கொண்டார்கள். அதனுல் நாமதேவ் முனிவுகொண்டு, தூஷணவார்த்தைகள் விண்டு, நைவேத்தியம் அசுத்தமாகப் பந்தைப்போட்டதல்லாமல் தையற்காரரும் நைவேத்தியஞ் செய்கிருர்களாவென்று விகடவார்த்தை யுரைத்தீர்கள். பகவானுக்கு நைவேத்தியஞ்செய்யாமல் உண்ணும் பசுவுக்கு ஒப்பான உங்களைப்போல் எங்களையும் நினைத்துக்கொண்டீர்களோ? என்று அறைந்தார். சிறுர் ஒருவரைப்பார்த்து ஒருவர் நகைத்து நாமதேவைப் பகைத்து, “அடா நாமா! உன்னைப்போன்ற பக்தர்கள் இவ்வூரில் யாருமில்லை; நீ பண்டரிநாதனைவிட்டு ஒருநாளும் புசித்ததில்லை; மொட்டைப் பையனுயிருந்தும் வெகு கெட்டவனுயிருக்கிருய்; எங்கள் கைமுட்டியால் உன் தலைபிளக்கக் குட்டிவிடுவோம்; பற்களைத் தட்டிவிடுவோம்; சண்டைக்குவாடா?” என்று துஷ்டத்தனஞ் செய்யத்தொடங்கினுர்கள்.

நாமதேவ் நைவேத்தியத்தட்டைத் தெருத்திண்ணையில் வைத்து அதிக கோபதிப்தனுயெரிந்து பொரிந்து சண்டை செய்

பவன்யாரடா? என்றுபாலர்கூட்டத்தில்புகுந்து முனிவுமிகுந்து அடித்தும், இடித்தும், குத்தியும்,எத்தியும்,மிதித்தும்,குதித்தும், தட்டியும், முட்டியும், விழுந்தும், எழுந்தும், பன்னியும், பின்னியும், தோள்களைத் தட்டியும், கொக்கரித்துத் தட்டியும், யானைத் திரளிற்பிரவேசித்த சிங்கக்குட்டியைப்போல் சிறார் முறிந்தோட யுத்தஞ்செய்தார். அதுதெரிந்த குணுபாயி வெகுண்டு நாமதேவிடஞ்சென்று, "அடா நாமதேவ்! பகவானுக்கு நைவேத்தியஞ் செய்து வரச்சொன்னால் தெருத்திண்ணையில் தட்டைவைத்துப் போர்செய்துக்கொண்டா யிருக்கின்றாய்? இனி அந்த நைவேத்தியம் பகவானுக்கு ஏற்குமா? அனேகநாளாகச்செய்துவந்த விரதத்தைக் கெடுத்தாயே? எங்கள் வாக்கைத் தடுத்தாயே? துன்பத்தைக் கொடுத்தாயே? ஆசாரத்தை விடுத்தாயே? வீண்சண்டை தொடுத்தாயே? என்னைப்பார்த்ததே தட்டை எடுத்தாயே? அடா நாயே! அறிவில்லாப்பேயே?"என்று உரைத்துக்கொண்டே சமீபத்தில் வந்தாள். அப்போது வருமுன் நாமதேவ் பயந்து இதோ நைவேத்தியஞ்செய்து வருகிறேனென்றுசந்நிதானத்தை நோக்கி ஓடினார். அப்படி ஓடும்போது குணுபாயி, "அடா துஷ்டா! அடாபிரஷ்டா! பலரால்தீண்டப்பட்ட நைவேத்தியத்தையா பகவானிடங் கொண்டுபோகிறாய்? வேண்டாம் வேண்டாம்" என்று மறுத்தாள். அப்படி மறுத்தும் கேட்காமல் அதி சீக்கிரமாய் ஆலயத்திற்பிரவேசித்து சந்தன புஷ்பங்களாற் பூசித்துப் பாண்டுரங்கா! ஸ்ரீரங்காவென்று கோஷித்து வினயமாய் விசுவாசித்துப் பண்டு பலாதிகளைப் படைத்து முக்கண்காயை யுடைத்து தூபதீபங்களைக்காட்டி எங்களிஷ்டதெய்வமாகிய பரமேட்டி உமது வலக்கையை நீட்டி நைவேத்தியம் உட்கொள்ளுமென்று பாராட்டிப் பகவான் பாதத்தில் மனதை நாட்டித் தன் கரத்தால் ஓர் பிடியன்னம் எடுத்து ஊட்டி உண்ணுக்கண்ணனைப் பார்த்து இரண்டஸ்தங்களையுஞ் சேர்த்து, "ஓ பாண்டுரங்கா! இந்த நைவேத்தியம் அசுத்தமாய்விட்டதென்றோ உண்ணுமல் இருக்கின்றீர்? வேறு நைவேத்தியத்துக்குப்போனால் என்தாயார் வாயில்வந்தபடி வைவாள். சித்திரவதைசெய்வாள். ஆதலால் அடியேன்மீது அருள்கூர்ந்து ஓர் பிடியன்னமாவது உட்கொள்ளவேண்டும் சுவாமி" என்று பன்முறை கெஞ்சிக்கெஞ்சிக்கொஞ்சினார். அப்போது பக்தவச்சலனாகிய பகவான் சற்றும் அசையாதிருந்தார். நாமதேவ் விக்கிரகத்தின் காதருகில் தன் வாயை வைத்து "ஓபண்டரிநாதா! பாண்டவர்தூதா! நான் இசைக்கும்

மொழி கேட்கவில்லையோ? உம்முடையகாதுசெவிடோ? ஓர்பிடி யன்னம் உண்ணும்படி பலதரஞ் சொல்லச்சொல்ல அசையாக் கல்லைப்போ லிருக்கின்றீர்? நீர்சகலஜாதியாருக்கும் பொதுவான வராயிற்றே. யார் கொண்டுவந்தாலும் பேதமின்றிப் புசிக்கவே ண்டுமன்றோ? நீர்உண்டாக்கினஜீவர்களன்றி மற்றெந்தஜீவர்கள் இந்த நைவேத்தியத்தைத் தீண்டிக்கொண்டார்கள்? உமக்குச் சாதிபேதமுண்டா? அதாவது சொல்லலாகாதா? பேச வாயில்லையா? என்னால் வந்த தொல்லையா? அல்லது தூங்குகிறீரா? வேளைதப்பிப்போய்விட்டதா? புசித்துவயிறு நிறைந்துவிட்டதா? நைவேத்தியங்கெட்டதா? என் கைகள்கெட்டதா? உள்ளபடி கள்ளமின்றிச் சொல்லலாகாதோ? என்முன்சாப்பிடலாகாதோ?இவ்வளவு அன்னம்போதாதோ? நீர் நினைத்திருக்குஞ் சூதேதோ?" என்கிற மொழிகள் பலவுரைத்தார். அவ்வாறு உரைத்தும் பகவான் அசையாதிருக்கும்போது, இதென்னடா வருவதெல்லாம் வம்பாயிருக்கின்றது. எனக்கோ மிகவும் பசியாய் இருக்கின்றது. இந்தத்தெய்வமோ முரட்டுத்தெய்வமாயிருக்கின்றது என்று, "ஓ சுவாமி! நீர்என்முன்உண்ணாமலிருக்கத்திருடனா? எனக்கும்கோபம்வந்தபின் உண்ணமுரடனா? நைவேத்தியம் வைத்திருப்பதறியாக் குருடனா? என்னை ஏமாத்திப்போகப் பறக்குங் கருடனா? ஓ முரட்டுத்தெய்வமே! நல்லதனத்தாற் சாப்பிடு; இல்லாவிட்டால் என் முரட்டுத்தனத்தையுங் காண்பிப்பேன்; உனக்கு நைவேத்தியங் கொண்டுவந்தல்லோ ஈனர்கரங்களால்அடிபட்டுப்புழுதியில் வீழ்ந்து உதைபட்டும் அலங்கோலப்பட்டும், நான் 'அணிந்து கொண்டிருக்கும் இவ்விலையுயர்ந்தபட்டும், சின்னபின்னமாகக் கிழிந்தும் நேரமாய்ப்போகுதென்று ஓடோடியும்வந்து கால்கள் நோகின்றது. இதோ பொழுதும்போகின்றது. நான் வெகுநேரமாய் வருந்தியழைக்கின்றேன். கெஞ்சிக்கெஞ்சி மிகவும் உழைக்கிறேனே. சீக்கிரம்எழுந்துவருவாய். உன்னுடைய அரியசேவை தருவாய். உண்ணலாகாதாஒருவாய். உண்டால் என் துதிபெறுவாய். இன்றேல் எனக்குவரும்கோபம். உண்டால் உனக்குவரும் லாபம். இப்படிசெய்தாற் பெறுவாய் என்சாபம். அசையாதிருப்பதுதானோஉன்பிரதாபம். நான்அறியாச்சிறுபிள்ளை நீர்உண்ணு திருப்பது வெகுசள்ளை. வலியவூட்டுவதும் உனக்குக் கொள்ளை. வம்புசெய்யும் நீதானாஆண்பிள்ளை. உன்னுடையஅறிவெல்லாம் வெள்ளை. பலதரஞ்சொல்லாதான் நீயாவாயா கிள்ளை. ஓபாண்டு ரங்கா! எத்தனைதரந்தான்கெஞ்சுவேன். எளியேன்முன் உண்டா

லல்லவோ கொஞ்சுவேன். உன் பக்தியில் மிஞ்சுவேன். மெய்த் தெய்வமென்று அஞ்சுவேன் என்னும் பற்பல பட்சமான வார்த்தைகள் பகர்ந்தும், பாந்தாமன் எதாப்பிரகாரமிருக்க ஆயாசமடைந்துமிகவுமிடைந்து, ஆ ஆ! நம்முடைய பிதா அனுதினம் நைவேத்தியஞ் செய்துவருவாரே; பகவான் சேஷமென்று தருவாரே; அவர் கொண்டுவர உண்ட அண்டரேத்தும் விண்டுவாகிய இப்பண்டரிநாதன் நான் கொண்டுவந்ததைத் தீண்டாமல் வேண்டாமென்பதைக்காட்டினாரே; மூட்டுத்தெய்வமென்பதை நிலைநாட்டினாரே; பக்தனல்லவென்று நீக்கிவிட்டாரே; என்னைப் பாவியாக்கிவிட்டாரே; இனி இவ்வாக்கையோடு இருக்கலாமா? வைராக்கியத்தைச் சுருக்கலாமா?" என்று பாண்டுரங்கனைப் பணிந்து, பாதங்களில் தனது திருநயனங்களை யணிந்து, "ஓ பண்டரிநாதா! நீ இக்கணம் உண்டாலாச்சுது, இன்றேல் என்னுயிர் பிரியலாச்சுது. உனக்கு அபகீர்த்தி வாய்ச்சுது. நீயே தேடிக்கொள்ளலாச்சுது. இக்ஷணம் என்தலையை உன் பாதங்களின்மே லிடிப்பேன். என்னுயிரை மடிப்பேன். வைராக்கியத்தை முடிப்பேன். பிர்மராக்ஷசனு யுன்னைப்பிடிப்பேன். ஊரிலுள்ளோர்பாலு மடுப்பேன் உன் சன்னிதானத்துக்கு யாரும் வராமற் கெடுப்பேன். அப்பா! உனக்கு இவ்வளவு கடுப்பேன்" என்று பாண்டுரங்கனைப் பக்தர்போற்றுந் துங்கனைப் பசியமாவங்கனைப் பலதரம் ஆலிங்கனஞ்செய்து திருட்டுத்தெய்வமே யெனவைது, கண்ணீர்விட்டழுது, கடவுளேயென்று தொழுது, இதோ போச்சுது பொழுது, உன்னால் வந்ததேபழுது என்று பகவான் பாதங்களின்மேல் தலையை மோதிக்கொள்ளப்போனார்.

உடனே பகவான் நிஜரூபமாய் நின்று, அடா என்னப்பனே! எனப் புகன்று, நாமதேவ் மஸ்தகத்தைத் தனது இரு அஸ்தங்களாற் றூக்கிக்கொண்டு, "அப்பா நாமதேவ்! உன் பக்திப் பிரதாபத்தைச் சோதிக்கவேண்டி இவ்வளவு தாமதஞ் செய்தேன். இதைக் குறித்துக் கோபஞ்செய்யாதே. வாயில்வந்தபடி வையாதே. அடா என் கண்மணியே! சிகாமணியே! மாசிலாமணியே! மரகத மணியே! தேகமெல்லாம் புழுதியாயிருக்கின்றதோ? அதிதுரிதமாய் வந்ததாற் பாதங்கள் நோகின்றதோ? நைவேத்தியம் ஏந்திக்கொண்டுவந்ததால் கைகள் நோகின்றதோ? சிலர் அடித்த அடிகளால் அங்கமெல்லாம் நோகின்றதோ?" என்று பற்பல பக்ஷமான வார்த்தைகளாடித் தன் கரத்தால் புழுதி

யைத் துடைத்துப் பாதாதிகேச பரியந்தம் தடவித் தன்மீதிருக்கும் பீதாம்பரத்தை யணிந்துக்கொள்ளச்செய்து நாமதேவ் தரித்துக்கொண்டிருந்த பீதாம்பரத்தைத் தான் அணிந்துக் கொண்டு, "அப்பா நாமதேவ்! உனக்கு அதிக பசியாயிருக்கின்றதோ? வெகு நேரமானதால் களையாயிருக்கின்றதோ? என்று அன்னத்தைப் பிசைந்தூட்டி உன்னுடைய திவ்விய அஸ்தத்தால் எனக்கு அன்னம் ஊட்டப்பா" என்று திருவாயைத் திறந்தார்.

நாமதேவ் துன்பத்திலிருந்து பேர்ந்து, கிருதார்த்தனானேனெனத் தேர்ந்து, பகவானோடு ஒன்றாய்ச் சேர்ந்து, மிகவுங்களிகூர்ந்து, ஸ்வாமிக்கு நாமதேவரூட்ட, நாமதேவருக்குப் பகவான் ஊட்டச் சகல பதார்த்தங்களையும் புசித்தபின்பு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி நாமதேவருக்குப் பரிமள சந்தனாதிகளைப் பூசி அடைக்காயிலையை மென்று கொடுத்து, "அப்பா நாமதேவ்! நீ வந்து நேரமாய்விட்டது. சீக்கிரம் வீட்டுக்குப்போய் நாளை நைவேத்தியங் கொண்டுவா" என்று அறைந்து மாயமாய் மறைந்து கல்லுருவாய் இருந்தார். பின்பு நாமதேவ் சந்தோஷமடைந்து மெதுவாய் நடந்து வீட்டிற் புகுந்து தாயைப் புகழ்ந்து வெறுந்தட்டைக் கொடுத்து, அம்மா! இன்றைக்கு நேரமானதைக் குறித்தும், பகவான் மிகவும் வெறுத்து நைவேத்திய மூண்ணாமல் மறுத்துச் சற்றுநேரம் பொறுத்துச் சகல பதார்த்தங்களையும் உண்டார்; ஆனந்தங்கொண்டார்; அன்பான மொழிகள் விண்டார்.

ஆதலால் என்மேற் கோபங்கொள்ளாதே; தூஷணவார்த்தைகள் விள்ளாதேயென்று நடுவீட்டில் உட்கார்ந்துகொண்டு அடைக்காயிலையை மென்றுக்கொண்டு பகவான் அணிந்த பீதாம்பரத்தைப் பார்த்துக்கொண்டு பகவான் கொடுத்த பீதாம்பரத்தைப் பாரும் அம்மாவென விண்டு, சந்தோஷ மேலீட்டால் அடிக்கடி நகைத்துக்கொண்டு மிருந்தார். குணபாயி வெறுந்தட்டைக் கொண்டுவந்ததையும், பகவான் அணிந்துக்கொண்டு இருந்த பீதாம்பர மணிந்துகொண்டு இருப்பதையும் பூமாலைகள் புனைந்துக்கொண்டு இருப்பதையும்பார்த்துக்கோபமேலிட்டு "அடா நாமதேவ்! பழவர்க்கமெங்கே? நைவேத்தியமெங்கே? நீ அணிந்துகொண்டுபோன பீதாம்பரயெங்கே? உண்மையைச் சீக்கிரம் சொல்லடா?" என்று கோபக்குறி காட்டினாள். நாமதேவ், "ஓ என்னம்மணி! உண்மையாய்ப் பகவானே சகல

பதார்த்தங்களையும் உட்கொண்டார். பசி மிகுதியால் நானும் இரண்டொரு பிடியன்னம் புசித்தேன். எனக்கு இனி அன்னம் வேண்டியதில்லை" என்று "வயிறு நிறைந்திருக்கிறதைப் பார்" என்று வயிற்றைக்காட்டினர். குணபாயி, "அடா துஷ்டப்பய லே! பகவானென்ன? நைவேத்திய முண்பதென்ன? சாணுண்டு பயலே! நீ வயிறு நிறையப்புசித்து எல்லாவற்றையும் சுவாமியே அருந்தினரென்று அசத்தியம் பேசுகின்ருயா? இப்போதே அசத்தியம் பேச ஆரம்பித்தாயா" என்று அருகிலிருந்த ஓர் கோலையெடுத்து வீசியெறிந்தாள். நாமதேவ் இதென்னடா வம்பாய் இருக்கின்றது. நான் மெய்சொன்னல் பொய்யென்று எரிந்து விழுகின்ருள். அபாயம் நேரிட்டதுபோல் அழுகின்ருள் என்று தெருவில் ஓடிவந்து நின்று "என்னுயிர் போனலும் அசத்தியம் பேசேனெனப் புகன்று, அந்த மூரட்டுத்தெய்வம் வெகுநேரம் அழச்செய்து நைவேத்திய முட்கொண்டு என்னை வேண்டிப் புசிக்கச் சொன்னல் பகவான் வாக்கியத்தைத் தள்ளக்கூடாதென்று இரண்டொருவாய் அருந்திவிட்டேன்; அபசாரத்துக் குட்பட்டேன்; வீட்டிலிருக்கும் பதார்த்தங்களையெல்லாம் நீ புசிக்கலாகாதா? விருத்தையா யிருந்து சகலமும் தெரிந்து உண்மை யறியாமல் ஆலோசனை பிரியாமல் மிகவுங் கோபித்து உன் வார்த்தையையே ஸ்தாபித்து உரக்கப் பேசுகின்ருய்; வாயில் வந்தபடி ஏசுகின்ருய்; கோலையெடுத்து என்மேல் வீசுகின்ருய்" என்று கடுகடுத்துப் பேசினர்.

குணபாயி, "அடா துஷ்டா! அடா பிரஷ்டா! உன் தந்தை வாட்டும் உன்னை இரண்டு துண்டாய்க் கண்டிக்கச் செய்கிறேன்; கண்டங்கண்டமாகக் கொய்கிறேன்" என்று உரைத்துக்கொண்டே பகவானுக்கு வேறு நைவேத்தியஞ் செய்துக்கொண்டிருந்தாள். நாமதேவ் இதென்ன கர்மமாய் இருக்கின்றது. இன்றைக்கெல்லாம் வியாகுலத்தாலேயே பொழுதுபோயும் இன்னந் தீராமலிருக்கின்றது. இனி அந்தக் கிழவன் வந்தால் என்ன செய்வானே என்கிற எண்ணத்தோடுங்கூடிப் புறத்திலேயே மரம்போல் அசைவற்று நின்றிருந்தார். இப்படி நிற்குந் தருணத்தில் தாம்சேட்டிவந்து தெருவில் நிற்கும் நாமதேவையெடுத்து மார்புடனணைத்து, "அடா என் அருமைக் குழந்தாய்! நமது ஆண்டவனுகிய பண்டரிநாதனுக்கு நைவேத்தியம் படைத்து வந்தாயா? உன் தாய்க்குச் சந்தோஷம் தந்தாயா?"

என்று கேட்டார். அதற்கு நாமதேவ் நைவேத்தியஞ் செய்து வந்தேனென்று உரைத்தார். தாம்ஷேட்டி உன் சிறிய அஸ்தங்களாற் பாண்டுரங்கனுக்குப் பூசைசெய்துவர நான் என்ன பாக்கியஞ் செய்தேனோ? என்று உச்சிமோந்து முத்தமிட்டுக் கைகளா லேந்திக்கொண்டு வீட்டுக்குட் போனார். குணபாயி அந்தத் திருட்டுப்பயலை விடாமல்கட்டி இரண்டு துண்டாக வெட்டிவிட வேண்டுமென்று அறைந்தாள். தாம்ஷேட்டி மனைவியை நோக்கி, "ஓ பெண்ணே! நான்பிரிந்த மூன்று ஜாமத்துக்குள் உனக்கு வெறுப்பு வரும்படியான காரியம் என்ன செய்தான்? யாரை வைதான்? சீக்கிரஞ் சொல்வாய்?" என்று கோபக்குறி காட்டினார். அதைக்கண்ட குணபாயி, நாமதேவ் நைவேத்ய தட்டை வீதியிற்கொண்டுபோய் வைத்ததும், சிறுவருடன் போர் புரிந்ததும், மத்தியானத்துக்குமேல் பலராலுந் தீண்டப்பட்ட நைவேத்தியத்தைச் சந்நிதானத்துக்குக்கொண்டு போனதும், மூன்றுஞ்சாமத்தில் வெறுந்தட்டைக் கொண்டு வந்ததும், பகவான் அருந்தினாரென்று விண்டதும், பகவான் அணிந்திருந்த பீதாம்பரத்தைத் தான் தரித்துக்கொண்டு வந்ததும், முதலான சங்கதிகளை யெல்லாம் சொல்லி முடித்தாள். உடனே அவ்வசனங்களைக் கேட்ட தாம்சேட்டி கோபதீப்தனாய் "எதோ வாளைக்கொண்டுவா? இவனை இரண்டு துண்டாக வெட்டியெறிகிறேன்" என்று ஆர்ப்பரித்தார்.

அதனால் நாமதேவ்பயந்து தெருவீதியில் ஓட்டமெடுத்தார். தாம்ஷேட்டி தொடர்ந்தோடி, "அடா துஷ்டப்பயலே! விளையும் பயிர் முளையிற் றெரியும் என்கிற பழமொழிப்படி சிறுபொழுதிலேயே பொய்யுங்களவும் கற்றுக்கொண்டிருக்கிற நீ, பெரியவனானால் வெகு துன்மார்க்க காரியங்கள் செய்வாய். ஆதலால் இனி உன்னை உயிருடன் வைத்திருந்தால் என் குலத்துக்குப் பழுது வந்து நேரிடும். பாபம் மீறிடும்" என்று உரைத்துக்கொண்டே பிடிக்கவந்தார். நாமதேவ் இவனும் அக்கிழவியைப் போன்றவனே ஆதலால், அகப்படாமல் ஓடிப்போவதே நன்மையென்று நமக்கு யாருந் துணையில்லையென்று பண்டரிநாதனைத் தியானஞ் செய்துக்கொண்டே பலபக்கங்களிலோடி மிகவும் வாடிப்பாண்டுரங்கன் சந்நிதானத்தைநாடி ஆலயத்தினுட்போய்ப் பண்டரிநாதனை ஆலிங்கனஞ்செய்து, பின்பக்கத்தில் ஒளித்துக்கொண்டார். தாம்ஷேட்டி கூடவே தொடர்ந்து ஆலயத்திற் பிரவேசித்துபக

வான் பின் பதுங்கியிருக்கும் நாமதேவின் கரத்தைப் பிடித்துக் கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு, "அடா நாமதேவ்! நைவேத்தியம் என்னசெய்தாய்? தெய்வசந்நிதானத்தில் அசத்தியம் பேசாதே" என்று வற்புறுத்திக்கேட்டார். நாமதேவ் சத்தியமாய் இப்பண்டரிநாதனே நைவேத்திய மருந்தினுறென்றார். தாம்ஸேட்டி நல்லது பகவான் அணிந்த பீதாம்பரத்தை நீஎன் தரித்துக்கொண்டாய்? என்றார். நாமதேவ் பகவானே என்னை யணிந்துக்கொள்ளச்சொன்னதால் நான் தரித்துக்கொண்டேன் என்றார். தாம்ஸேட்டி அதிசயிந்துப் பகவானுக்கு இன்னம் ஓர்தாம் என்முன் நைவேத்தியத்தை யூட்டுகின்றாயா வென்றார். நாமதேவர் "ஒருதரமின்றிப் பலதாம் பாண்டுரங்கனுக்கு நீர் பார்த்திருக்க அன்னத்தை யூட்டுகிறேன். உமக்குப் புலப்படக் காட்டுகிறேன். நைவேத்தியத்தைக் கொண்டுவாரும்" என்றான்.

தாம்ஸேட்டி நல்லதாகட்டும்; உன்னை இப்போதே பரிட்சித்துச் சிட்சைசெய்கிறேன் என்னுடன் வாவென்று வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் நைவேத்தியம் ஏந்திக்கொண்டு வந்து பகவான்முன் வைத்து, "அடா நாமதேவா! சீக்கிரம் பகவானை நைவேத்தியம் உண்ணும்படியாகச்செய்; இல்லாவிட்டால் உன்காலைவாரிப் பூமியிலறைந்து பகவானுக்குப் பலியிடுகிறேன்" என்று புலியைப்போலக் கர்ச்சித்து அடங்காக்கோபத்துடன் வாயிலின் மத்தியில் நின்றார், நாமதேவர் பகவான் பாதங்களிலும் சிரத்திலும் புஷ்பங்களைச்சொரிந்து தூபதீபங்களைக் காட்டி நைவேத்தியத்தைத்திறந்து, "ஓ பாண்டுரங்கா! ஸ்ரீரங்கா? முன்போற் றாமசம்செய்யாமல் என் கழுத்தைக் கொய்யாமல் யாருந்தீண்டாப் பரிசுத்தமான இந்த நைவேத்தியத்தைச் சீக்கிரம் புசியுமையா! அண்டரேத்துந் துய்யா!" என்று தோத்திரஞ் செய்தார். பகவான் முன்போலவே அசையாதிருந்தார். நாமதேவர் ஓ ஓ! இந்த முரட்டுத்தெய்வம் மத்தியானத்தைப்போலவே உண்ணுமற் கோபித்துக்கொண்டிருக்குமோவென்கிற பீதி மேலிட்டு, ஓ பண்டரிநாதா! புண்டரீகபாதா! என்பிதா முன்னிலையில் உண்டு, என்னை மெய்யனுக்கவேண்டும். அன்றி பொய்யனுக்குவது உமக்குத் தர்மமல்ல, நான் பலதரஞ்சொல்ல நீரறியாதவரல்ல. இதோ நிற்கிறார் என்னைக்கொல்ல" என்று ஓர் பிடியன்னமெடுத்துப் பாண்டுரங்கன் வாயில் வைத்தார். மாயாவிலாசனுகிய பகவான் அசையாக் கல்லுருவாயிருந்தார்,

நாமதேவர் கோபித்து, "ஓ முரட்டுத்தெய்வமே! நீ மெய்த் தெய்வமா யிருந்தாலல்லவோ திருட்டு புரட்டுகளும் இல்லாம லிருக்கும். பொய்த்தெய்வமானதாலும் என்னைப் பொய்யனுக்கி விட்டாய். நீ கெட்டாய்" என்று தூஷித்தார். அவ்வசனங்களைக் கேட்ட தாம்ஷேட்டிற்குச் சாந்தமிறந்து கோபம்பிறந்து, "அடா திருட்டுப்பயலே! பகவானை மரியாதையில்லாமல் திரு டன் முரடன்யென்று பிதற்றுகிறுய். அசத்திய முரைக்கும் வாயா? நீ நன்றுய்த்தின்று பகவானே தின்றுரென்று பொய்ம் மொழிகளைப் புகன்று பயப்படாமல் நின்று துன்மார்க்க மொழி கள் பேசுகின்றுயா?" என்று கோபமேலீட்டால் அடிக்கிறேன் உதைக்கிறேனென்று அருகில் வந்தார். நாமதேவர் நடுநடுங் கிப் பூனைபோலொடுங்கி, "ஓ பகவானே! என் வசனம் பொய் யாக்காமல் சீக்கிரம் நைவேத்தியம் அருந்துகின்றுயா? இல் லையா" என்று தன்தலையைப் பகவான் பாதத்தில் மோதிக்கொள் ளப்போனுர். உடனே பகவான் நிஜரூபமாய் நின்று நாமதேவர் சிரத்தைத் தன் கரத்தாற் பிடித்துக்கொண்டு, "ஓ என்னருமைப் பாலனே! பக்தியிற் சிறந்தசீலனே! சகலருக்கு மனுகூலனே! சகல லட்சணங்களும் வாய்ந்த கோலனே! உன் பக்திப்பிரதா பத்தை உன் தாதையறியாமல் வேதைசெய்யத் துணிந்தானே? உன்தாய் கோலாலடிக்க வந்தாளோ? இதனுல் நீ மனங்குழை ந்து நொந்தாயோ? ஆதரிப்பார் யாருமில்லாமல் என்பால் ஓடி வந்தாயோ? இனி சந்தோஷமாய் உன் திருக்கரத்தால் முன் போலவே எனக்கு அன்னமூட்டுவாய்" என்று வாயைத் திறந் தார். அப்படி வாயைத்திறக்கவே நாமதேவர் ஊட்டத் தான் உண்டார். தானும் நாமதேவருக்கு ஊட்டினுர். நாமதேவர் பிர தாபத்தைத் தாம்ஷேட்டிபிரத்தியக்ஷயமாயறியக்காட்டி ஜகதீஸ் வரனுகிய பரமேட்டி கல்லுருவாயிருந்தார்.

அவ்வாச்சரியத்தைப்பார்த்த தாம்ஷேட்டிதனக்கிருந்தமாச் சரியத்தை நீக்கிப் பக்தவச்சலனுகிய பண்டரிநாதனை நோக்கி, "ஓபாண்டுரங்கா! ஸ்ரீரங்கா! கார்வண்ணு! கமலக்கண்ணு! கருட வாகனு! மதுசூதனு! பரிபூரணு! சர்வகாரணு! ராக்ஷசமர்த்தனு! காளிங்கநிர்த்தனு! ஓ ஜனுர்த்தனு! உம்மை இந்தப் பாவியேன் கண்ணுரப் பார்க்க என்ன பாக்கியஞ் செய்தேனே? ஏதுதவஞ் செய்தேனே? உமது அருமைப் பக்தனுகிய இந்த நாமதேவர் உரைத்த வாக்கியத்தை என் அஞ்ஞானபுத்தியாற் பொய்யென்று நினைந்தேனே? கொல்லவுந் துணிந்தேனே? வாயில்வந்தபடி

வைதேனே? மனங்குழையச் செய்தேனே? அபசாரத்துக்குள்ளா னேனே? படுபாவியாய்ப் போனேனே? என்று பற்பலவிதங்களா யுரைத்து ஓவென்று அலறி அழத்தொடங்கினர். பகவான், அச ரீரியாய் "ஓ தாம்ஷேட்டி! இன்றுடன் இந்த நாமதேவரை நானு கப்பாவித்து அன்புடன் சேவித்து வருவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாக்கியத்தைக் கேட்ட தாம்ஷேட்டி பக வானைப் பலபலவிதங்களாகத் தோத்திரஞ்செய்து ஏத்திட நாம தேவுக்குச் சிரசாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து, "அப்பா நாம தேவா! உன் வசனத்தை மெய்யென்று நம்பாமல் பொய்யென்று எண்ணிப் பொல்லா அபசாரத்துட்பட்டேன்; நன்றிகெட்டேன், நானியற்றிய அபசாரத்தை உபசாரமாகக்கொண்டு என்னை ஆட் கொள்ளவேண்டு மென்னப்பனே" என்று வாரியெடுத்து மார்பு டன் அணைத்துப் புஜத்தின்மேல் ஏந்திக்கொண்டு வீட்டை யடைந்து குணுபாயிக்குச் சகலமும் சவிஸ்தாரமாயுரைத்து அவ் வுத்தமியின் மனதையுங் கரைத்து சதிபதிகளிருவரும் நாமதேவ ரைப் பகவானென்றே தீர்மானித்து அத்தியந்த பக்தியுடன் விசுவாசித்து, அன்றுமுதல் நாமதேவரிடத்தில் நைவேத்தி யத்தை அனுப்பிக்கொண்டிருந்தார்கள். நாமதேவர் நாடோறும் நைவேத்தியங் கொண்டுபோய் பகவானுக்கு ஊட்டி பகவான் ஊட்டத் தான் உண்டு அகமகிழ்ந்திருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங் கினர்.

நாமதேவர் பகவானுக்கு அன்னமூட்டிய அத்தியாயம்

முற்றிற்று.

---

மூன்றாவது

## நாமதேவருக்கு பகவான் விவாகஞ்செய்த அத்தியாயம்



வாருங்கள் சித்தர்களே! நாமதேவரை சதிபதிகளிருவருந் துதிசெய்துக்கொண்டு அன்புடன் பாதுகாக்குங்காலத்தில், அரி பாந்தாமன் தாம்ஷேட்டியின் கனவிலடைந்து பதினாறுவயதை

யடைந்தும் கலியாணஞ் செய்யாமலிருப்பது தகுதியல்ல; சீக்கிரம் நாமதேவருக்கு உமது குலத்தில் உற்பவித்திருக்கும் ராஜாபாயென்னும் கன்னியை மணம்புரிந்து இன்பமடையும் என்று தாம்ஸேட்டி விழித்துத் தன் மனைவியை எழுப்பி, "ஓ பெண்ணே! பகவான் என்கனவில் வந்து தரிசனந்தந்து ராஜாபாயென்னும் மங்கையைப்பேசி நாமதேவருக்கு விவாகஞ் செய்யும்படியாகத்" திருவாய்மலர்ந்தருளினர். ராஜாபாயென்னுங் கன்னிகை உனக்குத் தெரியுமா? என்று கேட்டார். குணபாயி, ராஜாபா யென்பவள் நமது குலப்பெண்ணானாலும் லக்ஷாதிபதியின் மகளாயிருப்பதால் நமது மைந்தனுக்குக் கிடைப்பது அரிதென்று உரைத்தாள். தாம்ஸேட்டி பகவானே சொர்ப்பனஞ் சாதித்தபின் நாம் அப்பெண்ணை அகத்தியங் கேட்கவேண்டுமென்று அதிகாலையிலெழுந்து செய்யவேண்டிய நியமங்களெல்லாஞ் செய்து முடிந்தபின் ராஜாபாயின் தந்தையிடம் போய் தன் கருத்தைத் தெரிவித்தார். அவன் நிச்சயதாம்பூலத்துக்காக ஆயிரம் பொன்னோடும் வந்து என்னிடம் பேசலாமென்று அறைந்தான்.

தாம்ஸேட்டி அவ்வசனத்தைக் கேட்டதே மனங்கூசி விவாகஞ்செய்ய மனம் ரோசி வீட்டையடைந்து வியாகூலத்தாலிடைந்து மனைவியை யழைத்து, நாம் மிகவும் உழைத்துப் பொருள் சேர்த்தாலும் ஆயிரம்பொன் சேரப்போகிறதில்லை. இனி என்ன செய்யலாம்? மகனுக்கு மணம் எப்படிசெய்யலாம்? திரவியத்துக்காக யாரைப்போய் யாசிப்போம்? எவரைப்போய் நேசிப்போம்? பகவானையே பூசிப்போம்? பின்னால் நன்றுயோசிப்போம்? என்று பகவான்சன்னிதானத்துக்குப்போய், "ஓ பாண்டுரங்கா ஸ்ரீரங்கா! தேவரீர் கிருபையினாற்கிடைத்த மைந்தனுக்குத் தாங்கள் என்கனவில்வந்து உரைத்தபெண்ணை மணஞ்செய்யப் பணமில்லாமையால் தடையாச்சுது. லக்ஷாதிபதியின் சம்பந்தம் வாய்ச்சுது. இதற்கு நான்என்னசெய்வேன்?கர்த்தனேயென்றுவீட்டையடைந்து சதிபதிகள் பலவாறு யோசனையோடுங்கூடி சூரியன் அஸ்தமனமாய் இருஜாமமாகியும் திரவியக்குறையால் எண்ணமிட்டுக்கொண்டு நித்திரைசெய்யாமல் கதவைமூடிக்கொண்டு பகவான்கீர்த்தியைப் புகழ்ந்துக்கொண்டு பணமில்லாதவர்கள் நடைபிணமேயென்று உரைத்துக்கொண்டுமிருந்தார்கள். இப்படி இவர்கள் நித்திரைசெய்யாமல் தோத்திரஞ் செய்துக்கொண்டிருந்தது தோத்திரப்பிரியனாகிய பகவானுக்கு வெகு கசப்பாயிருந்தது. ஏனெனில்

நாமதேவர் விவாகத்துக்குத் தடையில்லாமல் பொன் செங்கல்லுகளைக்கொண்டுவந்து தாம்ஷேட்டி வீட்டில் போடுவதற்காய் வந்த பகவான் வீட்டின் தடையால் வெளியிலிருந்தபடி ஓர் பொன் செங்கல்லை வாசலிலெறிந்தார்.

விழித்திருந்த தாம்ஷேட்டி யாரடா? என் முற்றத்திற் பயமின்றிக் கற்போட்டவன்? அடா மடையா! கடையாவென்று வைதார். பகவான் மடையா கடையாவென்ருலுஞ் சம்மதிதான். இடையா கொடையாவென்ருலும் சம்மதிதானென்று மற்ரோர் கல்லை வீட்டின்மேற் போட்டார். தாம்ஷேட்டி கோபங்கொண்டு "அடா திருடா! அடா முருடா! துடைப்பக்கட்டைக்குப் பட்டுக் குஞ்சங் கட்டினதுபோல் பிறர்வீட்டிற் கல்லெறியும் துஷ்டனுகிய உன்னைத் தருமத்திற்சிறந்த கொடையாளனென்று உரைக்கப்போமா" என்ருர். பகவான் கொக்கரித்துத் திக்கரித்து, "அடா தாம்ஷேட்டி! அடா திருடா! அடா முருடா! அடா கிம்புருடா! அடா புண்ணியபுருடா! வென்றும், என்னைச் சொல்லலாமென்று மற்ருெரு செங்கல்லைக் கதவிற்படும்படியாய் வீசியெறிந்தார். உடனே தாம்ஷேட்டிஓர்தண்டத்தையெடுத்துக் கொண்டு அரணந்திறந்து வெளிப்பட்டு, "அடா கிம்புருஷா அடா புண்ணியபுருஷா! சற்றே நில்லுவென்று ஆர்ப்பரித்தார். பகவான் ஓர் பொன் செங்கல்லைத் தடிமேல் வீசியெறிந்து மற்ருேர்கல்லை வீட்டினுள் வீசியெறிந்தார். குணபாயி அடா துஷ்டா! அடா பிரஷ்டாவென்று வைது கூகூவென்று கூச்சலிட்டாள். பகவான் கூகூவெனக் கூச்சலிட்டதால் இரண்டு கல்லைப்போடுவேனென்று இரண்டு கற்களைப்போட்டார். தாம்ஷேட்டி ஆக்கிரம நிக்குரோதனு யெரிந்துவீழ்ந்து இந்த மூர்க்கனை அந்தப் பண்டரிநாதனறியக் கொன்றுவிடுகிறேனென்று ஜெயவிட்டல் ஜெயவிட்டலென்று உரைத்துக்கொண்டே தெரு வீதியில் வந்தார். பண்டரிநாதன் பயந்தவர்போல் ஓடி மாயமாய் மறைந்தார்.

தாம்ஷேட்டி பகவானுக்குப் பயங்காட்டி அரைநிமை தங் காமலோட்டி நான் மேட்டாடைமேட்டி அறிந்தாயா சீமாட்டி ஓடிப்போனுன் காமாட்டியென்று மனைவிக்கு உரைத்துக்கதவை மூடிக்கொண்டு நித்திரைசெய்தார். குணபாயி வழக்கப்படி அதிகாலையிலெழுந்து முற்றந்துலக்க வாசலில்வந்து கற்களெல்லாம் பொன்மயமாயிருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு விந்தையென்று

விண்டு நாம் தவஞ்செய்தவர்களே பண்டுயென்று மனங்களித்து மனாளனை விளித்துக் கற்களைக் காண்பித்து, இது பகவான் கிருபையென்று உரைத்துக் கற்களையெல்லாம்ஓரிடத்தில்புதைக் கும்படியாய்ச்சொன்னாள். தாம்ஷேட்டி கனகத்தைக்கண்ட களிப் பால் புருஷோத்தமனைத் தூஷித்தது மறந்து இன்பம் நிறைந்து அவைகளை மூலவீட்டினுள் புதைக்க ஆரம்பித்தார். இங்கு இப் படியிருக்கப் பகவானும் ருக்மணியும் அதிகாலையிலேயே தாம் சேட்டியைப்போலவும், குணுபாயியைப்போலவும் வடிவெடுத்து ஆயிரம்பொன் எடுத்துக்கொண்டு ராஜாபாயின் வீட்டுக்குப் போய்ச் சம்பந்தியைக் கூப்பிட்டார். இவர்கள் வரவையறிந்த அந்த லட்சாதிபதி கெக்கலிகொட்டி நகைத்துக்கொண்டே வெ ளியில்வந்து ஆயிரம் பொன்னுக்கே வழியில்லா அல்கலரே! என்னகாரணத்தைக்குறித்து வந்தீர்கள்? என்றான். பகவானும் ருக்மணியும் தாங்கள் கொண்டுவந்த ஆயிரம் வராகனையுங் கொடுத்து, உமது பெண்ணுக்குப் பதினாயிரம் வராகன் பணிக ளணிகிறோம். கலியாணச் சிலவுக்கு இருபதினாயிரம் வராகன் தருகிறோம். நல்ல முகூர்த்தநாளாகிய இன்றைக்கே வதுவை செய்ய ஆரம்பிக்கலாம்" என்று அறைந்து புறம்போந்து மறைந்து ஆள்கள்வசம் முப்பதினாயிரம் வராகனைக் கொடுத் தனுப்பி சந்தோஷப்படுத்திப் பெண்ணைக் கொடுக்க இணங்கச் செய்தார். பின்பு பகவான் ஓர் அந்தணனைப்போல்வடிவெடுத்து அங்கடைந்து தாம்சேட்டி கையுடன் உம்மையழைத்துவரும்படி என்னை யனுப்பினனென்று அறைந்து அச்சம்மந்தியை யழைத்துக்கொண்டு தாம்சேட்டி வீட்டுக்குட்புகுந்து சதிபதிகள் மெய்மறந்திருக்கச்செய்து புதைத்த பொற்கல்லுகளை யெல்லாம் பலவந்தமாக வெடுத்துச் சம்பந்தி களிப்படைய அவர் முன்னம் வைத்தார். அவைகளைப்பார்த்த சம்பந்தி சந்தோஷ சாகரத்தி லமிழ்ந்தவனாய் தாம்சேட்டியை நோக்கி, "ஓ கோட்டீசுவரனே! அறிவில்லார் பெருமையைக்காட்டுவார். அறிவுள்ளார் அடக்க மாயிருப்பாரென்பதுபோலவும், பெருத்த வச்சிரங்கள் மறைந்து சிறுத்த வயிரங்கள் வெளிப்படல்போலவும், பதிவிரதையும் பரமபக்தனும் குப்தமாயிருக்க விபசாரியும் வேஷதாரியும் பயிரங்கப்படுவதுபோலவும், நம்மிருவருடைய செய்கையிருக் கின்றது. இவ்வளவு அடக்கமொடுக்கமுள்ள உம்முடன் சம்பந் தஞ்செய்ய நான் என்னபாக்கியஞ் செய்தேனோ? என்று அறைந் தார். பின் நாமதேவரைப்பார்த்து பிர்மித்து ஆ! ஆ! இவ

ருடைய சவுந்தரியம் மன்மதனுக்கு மிருக்காது. இவர்க்கு என் கன்னிகையைக் கொடுக்க நான் இழைத்த தவமோ? ராஜாபாய் செய்துக்கொண்டுவரும் விரதபலனிதோ?" என்று களிசாகரத்து அமிழ்ந்தினர். பொற்கற்களேயும் தாம்சேட்டி குணுபாயி நாமதேவர் தூதுவந்த பிராமணோத்தமரையும் வண்டியி லேற்றிக் கொண்டுபோய்த் தன்வீட்டை அலங்கரித்து ராஜாபாய் நாமதேவரையுஞ் சிங்காரித்துக் கிரமப்பிரகாரம் வதுவைசெய்து ஆனந்தமடைந்தான். தாம்சேட்டியும் களிசாகரத்து அமிழ்ந்தவராய் மருகியையும் மகனேயும் சம்பிரமத்துடன் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் சம்பந்திக்கும் பந்துக்களுக்கும் விருந்திட்டுச் சகாயஞ்செய்த அந்தணர்க்கு அளவற்ற திரவியங் கொடுத்துத் தெண்டனிட்டு இன்புற்றிருந்தார்கள். கேட்டீர் களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

நாமதேவருக்கு பகவான் விவாகஞ்செய்த

அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காவது

## பகவான் லட்சவராகனளித்த அத்தியாயம்

---

கேளுங்கள் சித்தர்களே! தர்ம சொரூபரான பகவான் பிராமண ரூபத்துடன்வந்து நாமதேவருக்கு மணஞ்செய்து முடித்த பின் நாமதேவரை நோக்கி, சில வாக்கியங்கள் சொல்லத்தொடங்கினர். அதாவது, "ஓ பரமபாகவதோத்தமனே! அன்னதானம், வஸ்திரதானம், சொர்னதானம், வித்தியாதானம், கன்னிகாதானம் முதலான அநேக தானங்களிலும் அன்னதானமே மேலான தானமென்று உரைக்கத்தகும். ஆனல் அன்னதானஞ் சீரணம், வித்தியாதானம் அசீரணமென்கிற வாக்கியமிருந்தாலும், பரமபாகவதோத்தமர்களுக்கு ஒருதினம் அன்புடன் அன்னம் படைப்பவனுக்கு அழியாப்பதம் சித்திப்பதற்கு ஓர் தடையில்லை. அதற்குத் திருஷ்டாந்தம் ஏது என்பாயேல்? பாரதயுத்தத்தில் அர்ச்சுனனல் விடப்பட்ட பாணங்களாற் களேயடைந்து, தன் ரதத்தின் ஸ்தம்பத்தின்மேற் சாய்ந்து, அரிபரந்தாமனேத் துதிக்கும் கர்னன் விஜயனுக்குத் தர்மராஜனேப்போல் தோன்ற, அத்தருணத்தில் ஸ்ரீ கிருஷ்ணதேவர் கவசகுண்டலஞ் செய்த

தர்மத்தையெல்லாம் கவர்ந்துக்கொள்ள ஓர் அந்தணன்போலாகி அங்கர்கோமானை யாசிக்க, அதற்கு அக்கச்சைக் கொடியோன், "ஓ பிராமணேத்தமா! இந்த அந்தியகாலத்தில் இல்லையென்கிற வாக்கை நான் உரையாமல் என்பாலிருக்கும் வஸ்து எதாகுலுங் கேட்டு வாங்கிக்கொள்ளலாகும்" என்று வணங்கினுன். அதற்குக் கண்ணன் "ஓ கர்னனே! உன்னிடத்திலிருக்கும் வஸ்துவையே கேட்கவந்தேன்" என்று அறைந்தார்.

உடனே கர்னன் மனமகிழ்ந்து, "ஓ அந்தணு! நீர் இச்சித்தது என் உயிராகுலுங் கொடுப்பேன்; சீக்கிரங்கேளும்" என்று அறைந்தான். ஸ்ரீகிருஷ்ணன் எனக்கு உன்னுயிர் வேண்டியதில்லை. உன் உயிர்க்குத் துணையான நீ செய்துவந்த தர்மமனைத்தையும் எனக்குத் தத்தஞ்செய்வாய்?" என்றுகேட்டார். கவசகுண்டலன் களிப்புற்று, "ஓ வேதியரே! நீர் யாசித்த புண்ணியத்தைத் தத்தஞ்செய்வேன். எனக்கு இப்போது அடைந்த களை நீங்க ஜலங்கொண்டுவந்து ஊட்டுமையா" என்று வேண்டினுன். பகவான் அப்படியே யாகட்டுமென்று கச்சைக்கொடியோனைக் காங்களை நீட்டெனப் புகன்று ஜலத்தையூற்ற அவன் அஸ்தத்தில் வீழ்ந்த புனல் பொன்மயமாய் ஒளிபெற்று விளங்கக் கர்னன் அதிசயித்து, "ஓ பூசுரரே! என் காதலத்தில் வீழ்ந்தஜலம் கனகமாய்ப்போகின்றதே; ஆயாசம் மேலிடுகின்றதே, இதுவென்ன காரணம்? என்று பணிந்தான். தாமோதரன், "ஓ சொர்னகுண்டலனே! நீ செய்ததெல்லாம் சொர்னதானம். ஆனதால் நீ தொட்டதெல்லாம் பொன்னுகின்றது. அன்னதானம் ஒருகாலத்திலும் செய்பவில்லையோ? எனக்கேட்டார். அதற்குக் கர்னன் நான் அன்னதானம் ஒருநாளுஞ் செய்ததில்லை. ஆனுல் ஒரு காலத்தில் ஓர் அந்தணன் என்னைப் போஜனங்கேட்டார். நான் அதோ தர்மாராஜன் அன்னதானஞ் செய்கின்ருர். அவ்விடத்திற் போம் என்று சுட்டுவிரலாற் காட்டினது உண்டு" என்று உரைத்தான். கோவிந்தன் "ஓ கர்ன! அன்னதானயிடத்தைச் சுட்டிக்காட்டின சுட்டுவிரலை உன்வாயில் வைத்துக்கொண்டால் அன்னதான யிடத்தைக் காட்டின பலனுல் ஜலம்பெருகி உமது தாகத்தைத் தணிக்கும்" என்று அறைந்தார். அப்படியே சூரிய குமாரன் தன் சுட்டுவிரலைத் தன்வாயில் வைத்துக்கொண்ட மாத்திரத்தில் ஜலம்பெருகித் தாகத்தைத் தணித்தது. பின்பு கர்னன் அவ்விப்பிரருக்கு முழுதர்மத்தையுந் தாரைவார்த்துக் கடல்வண்ணனைக் கண்ணுரக்கண்டு களிசாகரத்து அமிழ்ந்தான்.

ஆதலால் அன்னதான பலனுக்கு எந்தபலனும் ஈடாகாது. அதுவுமல்லாமல் அட்சயபாத்திரத்தில் ஒட்டியிருந்த ஓர் அன்னத்தை நந்தநந்தனன் உண்டபலத்தால் தூருவாசரும், அவருடன் வந்த அனேக முனிவர்களும் திருப்தியடைந்தார்கள். ஆதலால் "நீ இன்றுடன் அன்னதானமளித்து புனிதனுகக்கடவாய். சன்யாசத்துக்குத் தவமும் சம்சாரத்துக்குத் தர்மமும் துணையென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றது. அன்றித் தன்னைமற்ந்த பிரமக்ஞானிகளும், பக்தியிற் சிறந்த பரமபாகவதர்களும், அன்னத்தை யன்று வேறொரு பொருளையும் கனவிலும் இச்சியர்கள்" என்று பற்பல வார்த்தைகளுரைத்து நாமதேவரிடம் விடைபெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டகன்று மாயமாய் மறைந்தார்.

அப்பால் நாமதேவர் அந்தணருரைத்த வாக்கியங்களை மனதிற் பதித்துப் பகவானைத் துதித்து, அன்றுமுதல் நூறு இருநூறு சாதுக்களுடன் போஜனஞ்செய்து சின்னாளில் வறுமையடைந்து நல்லுறவு பொல்லாதென்றிடைந்து, எல்லாவற்றிற்கும் பகவானே துணையெனத் துணிந்து, இல்லையென்கிற துக்கந்தணிந்து பண்டரிநாதனைப் பணிந்து அவர் திருவடிகளிற் றன் திருவட்சிகளையுமணிந்து வீட்டுக்கும் வாராமல் ஆலயத்திலே வாசமாயிருந்தார், தாயுந் தந்தையும் விருத்தாப்பியமேலிட்டுத் தையல் வேலைசெய்து பகவானுக்கு நைவேத்தியந் தப்பாமல் கொண்டுவந்து கொடுத்துக்கொண்டிருந்து ஒருநாள் நைவேத்தியத்துக்கும் வழியில்லாமல் சம்பந்தியிடமுஞ் சொல்லாமல் ஒருவருடனும் சொல்லாமல் பண்டரிநாதன் கோயிலை யடைந்து, "ஓ பகவானே! நைவேத்தியத்துக்கும் வழியில்லாமற் போச்சுதே. பொல்லா வறுமை எங்களுக்கு வாய்ச்சுதே. நாமதேவன் பட்டினியாயிருப்பானு? ஒருநாள் பொறுப்பானு? நாங்கள் இனியென்னசெய்வோம்? எப்படியுய்வோம்?" என்று கண்ணீர்விட்டு அழுதார்கள். அதுதெரிந்த நாமதேவர் தந்தையை வணங்கி, "ஓ என் மாதாபிதாக்களே! விருத்தாப்பியப் பருவமுள்ள நீங்களிருவரும் பட்டினியாயிருக்க எனக்கு என்ன? இந்தப் பகவானுக்கென்ன? ஐயோ! பசியால் வாட்டமுற்றிருந்தும் இவ்வளவு தூரம் தள்ளாடித் தள்ளாடி என்னைத் தேடிப் பகவானை நாடி வந்தீர்களோ?" என்று உரையாடிப் பகவத்கீர்த்தனைகளைப் பாடிக் கொண்டிருந்தார். தாய் தந்தையிருவரும் மிகவும் நொந்து பண்டரிநாதனுக்கு வந்தனந்தந்து எந்தையாகிய கடவுளே!

இந்த மைந்தன் பட்டினியால் நைந்திருக்கலாயோ? பசிவேதனை ஒருவரால் பொறுக்கப்போமோ? என்றறைந்து தன் வீட்டை யடைந்து வாட்டமுற்றிருந்தார். அத்தருவாயில் பகவான் ஓர் சேவகனைப்போல வேஷந்தரித்துக்கொண்டு கருடனை ரிஷப மாக்கி ஓர் பெருத்தகோணியில் லட்சம்விராகன் நிறைத்துக் கலுழன்மேலேற்றி தாம்ஸேட்டி வீட்டுக்கு எதிரில் ஓட்டிக் கொண்டு வந்துநின்று, ஓ நாமதேவரே! என்று பன்முறை கூப் பிட்டார். குணுபாயி யாரையா? நாமதேவரைக் கூப்பிடுகிறது என்றாள். சேவகனுகிய பகவான், "ஓ அம்மா! நான் நாமதே வரை நாடி வெகு தூரதேசத்திலிருந்து வந்தேன். நடந்து நடந்து நொந்தேன். அவர் எங்கே சீக்கிரம் அனுப்பும்" என்றார். குணுபாயி யாரோ விருந்துக்கு வந்ததாகத் தோன்று கின்றது. இனி இவனிடம் பேசினல் மாட்டுக்கும் தனக்கும் உணவு கேட்பான். நமது வீட்டிலோ ஒன்றுமில்லாம லிருக் கின்றது என்று தனக்கிருக்கும் வறுமையாலும் பட்டினியா யிருக்குஞ் சிறுமையாலும் இங்கே நாமதேவரில்லை. அவர் எங் கேயோ போயிருக்கின்றார். அவருடன் உனக்கு என்னகாரியம்? வந்தவழியைப் பார்த்துக்கொண்டு போம் என்றாள்.

பகவான் யாரம்மா வீட்டில் வெளியில்வந்து பார்த்தும், அன்பாய்ப் பேசாமல் சற்றுங் கூசாமல் வீட்டிற்சென்று வெய்ய லில் நொந்துவந்திருக்கும் எனக்கு தாகத்துக்காவது கொடாமல் கடுகடுத்துப் பேசுகின்றாய். தன்னை நாடி வந்தவர்கட்கு இப்படித் தானே உபசாரஞ் செய்கின்றது. நான் உங்கள் வீட்டுவிருந்தைச் சட்டைசெய்து வரவில்லை. உனக்குத்துன்பந்தரவில்லை. பணமில் லாதவன் பிணமென்பதற்குச் சந்தேகமில்லை. தாரித்திரத்தைப் போன்ற கொடியவியாதி யில்லவேயில்லை. வறுமையுற்று இவ் வுலகிலிருப்பதைப்பார்க்கிலும் மரணமடைவதே உத்தமமென்று சொல்லலாம். நல்குரவால் நலிவுற்றிருக்கும் உங்கள் முகத்தைப் பார்க்கவேகூடாது. ஆனாலும் எஜமானுடைய உத்தரவால் இங்கு வரநேரிடடது. அந்த நாமதேவர் வருகிறபரியந்தம் இருந்து போகிறேன். நீங்கள் கோதுகுணத்தால் ஒருவேளைவாதுசெய்யப் போகிறீர்கள் என்று பற்பல மொழிகள் பகர்ந்து வாயில் மத்தி யில் உட்கார்ந்துக்கொண்டு அடிக்கடி கனைத்துக்கொண்டு மிருந் தார். அவ்வசனங்களைக் கேட்ட குணுபாயி 'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு' மென்பதைப்போலக் குரோதங்கொண்டு விரோதமாய் அச்சேவகன்பால் வந்து, "யாரடா! நீ பங்காளியைப்போலவும்,

கடன்காரனைப்போலவும், வாசற்படியி லுட்கார்ந்து என்னென்னவோ கடபடவென்று உளருகிருய்; சீக்கிரமாக இவ்விடம் விட்டு எழுந்துபோ என்று'' அறைந்தாள்.

பகவான், "அடா! இவர்கள் கொடும்பாவிகளா யிருக்கிருர்கள். கடவுள் இப்பேர்க்கொத்தமூடர்களை ஏன்சிருஷ்டித்தாரோ? வீட்டிலொன்றும் இல்லாவிட்டாலும் வந்தவர்களுக்குத் தாகமாவது கொடுத்துச் சந்தோஷப்படுத்தலாகாதா? நாமதேவர் வர எந்நேரஞ் செல்லுமோ" என்று உரைத்துக் குணுபாயைச் சட்டைசெய்யாதவர்போலக் காண்பித்து இறுமாந்து அசையாமல் வாசற்படியிலேயே வீற்றிருந்தார். குணுபாயி, "அகங்காரத்திற் சிறந்தவனே! உனக்கு அதிக தாகமாயிருந்தால் அதோ கேணியிருக்கின்றது, அதிற் சேந்தி சாப்பிட்டுச் சாந்தியாய்ப்போகலாம்; எழுந்திரு; வழிவிடு'' என்று இறைந்துபேசினுள். பகவான் "ஓ நரைத்த விருத்தையே! தாகத்துக்குக் கேட்காமுன்னமேகேணியைக்காட்டிக்கைகளை நீட்டிவிண்ணுனவார்த்தைகள் பேசுகின்ருய். நான் உங்கள் வீட்டில் தாகத்துக்குக்கொள்ளும்படியான தபமும் நீங்கள்செய்தீரோ? பஞ்சபாதகங்கள் செய்யுங் கொஞ்சக்குணமுள்ள உங்கள் வீட்டினருகில் நிற்கவேகூடாது. இப்படிதானு நரைதிரை வருமட்டும் சமுசாரஞ்செய்தாய்? பிள்ளையைப்பெரு மலடியாகிய உனக்கும் ஜீவகாருண்ய மிருக்குமா? உங்களுக்கு செல்வம் பெருக்குமா? கெடுகாலி படுநீலி" என்று உரைத்தார். அவ்வசனங்களைக்கேட்ட தாம்ஷேட்டி கோபித்து யாரடா அவன்? வம்பும் துன்புமாய்ப் பேசுகின்றவன்? வழிப்போக்கனுகிய நீ துன்மார்க்க வார்த்தைகள் பேசக்கூடுமா? சீக்கிரம் இவ்விடம்விட்டு எழுந்துபோ? இல்லாவிட்டால் ஓங்கி ஓர் அரைவாங்குவேன்" என்று கடுகடுத்துப் பேசத்தொடங்கினுர். பகவான், "அடா கிழவா! இதுதானே ஞாயம்; இதற்காகவா செய்யவந்தேன் சகாயம்; இப்போதே உன்னையும் இக்கிழவியையும் வெட்டி பலியிடுவேன்; நாமதேவர் முகத்தைப் பார்த்தல்லவோ சும்மாயிருக்க நேரிட்டது; அடடா! இப்பேர்க்கொத்த பரமலோபிகளுக்குத்தானு அந்தக் கேசவசவ்கார் இத்தனை திரவியங்கொடுத்து அனுப்பவேண்டும். இவர்களுக்கு என் உயிர் நீங்கினும் லட்சவராகனைக் கொடுப்பேனே?'' என்று மாட்டைத் தட்டியோட்டிச் சிலவராகன் கோணியிலிருந்து சிந்தும்படியாகவும் செய்தார்.

அதுதெரிந்த குணுபாயும் தாம்ஷேட்டியும் ஓடோடிவந்து ரிஷபத்தை மறித்துச் சேவகன் மோக்கட்டையைப் பிடித்துக் கொண்டு, "அப்பா! எங்களுக்குற்ற தாரித்திரத்தாலும், பசியின் வேதனையாலும், விருத்தாப்பிய மேலீட்டாலும், ஒன்றுந்தோன் ருமல் ஏதேதோ பேசிவிட்டோம். நன்றிகெட்டோம். கொண்டு வந்த வராகன்களைக் கொடுக்காமல் கோபித்துக்கொண்டு ஏன் போகிறீர்? நாங்கள்செய்த அபசாரத்தை உபசாரமாகக்கொண்டு திரவியத்தைக் கொடுத்துவிட்டுப் போமையா, குற்றங்களைப் பொறுத்தருளுமெய்யா, சாந்தத்தில் மிகுந்த துய்யா, தருமங் களையெல்லாம் செய்யுங் கையா" என்று பலதரம் வேண்டிக் கொண்டார்கள். பகவான் "ஓ ஜனங்களே! கேட்டீர்களோ; இப் போது இவர்கள் செய்யும் மரியாதைஎனக்காகவா? திரவியத்திற் காகவா? சொல்லுங்கள்; சற்றே நில்லுங்கள்; யாரேனும் பட்டி னியால்வாடி இவர்கள்வீட்டைநாடிவந்தார்களானுல் வேஷ்டை யுற்று, வாட்டமடைந்து பசிபசி யென்று பறந்து பிராணனிழந் தல்லவோ போகவேண்டும். தாரித்திர காலத்திலல்லவோ தர்ம குணத்தையும் மனைவியின் மர்மத்தையும், சினேகிதர் வாஞ்சை யையும், பந்துக்கள் விசுவாசத்தையும் ஆராய்ந்து அறியவேண் டும் என்கிற பழமொழிப்படி தர்மகுணத்திற் சிறந்த இவர்கள் தாரித்ரம் வந்தடைந்தமாத்திரத்தில், தாகத்துக்கும் அளிக்கா மல் சகாயஞ்செய்யவந்த என்னைத் தாறுமாறுஞ்செய்து சஞ்சலத் துக்குள்ளாக்கினுர்கள். தாரித்திரகாலத்தில் தர்மகுணமும், அதி காரகாலத்தில் அகங்காரக்குறைவும், துன்பம் வரும் காலத்தில் தைரியமும், அவமானகாலத்தில் சந்தோஷமும் உள்ளவர்களை யல்லவோ புருஷசிகாமணிகளென்றும், வறுமையுள்ள காலத் தில் மணுளன் பக்தியும், காவலில்லாக்காலத்திற் கற்பென்னுங் காவலும், பதி கோபஞ்செய்யும் வேளையில் சாந்தமும் அதிதி அப்பியாகதிகட்கு அன்னம் இடுவதில் உற்சாகமும் உள்ள பெண் களையல்லவோ பதிவிரதைகளென்று சொல்லலாம்.

அப்படி யிருக்க, இப்படிச்செய்யும் இவர்களைப் புண்யோத் தமரென்றும் விரதசீலரென்றும் இவ்வூரிலுள்ளோர்சொல்லுங் காரணமியாதோ? பாகமாச்சுதில்லையென்பதற்கு ஓரன்னமேகாட் டுங் கொள்கையைப்போல் இவர்கள் துஷ்டர்களென்று ஒரு காரி யத்தாற் றெளிந்துக்கொண்டேன்" என்ருர். அவ்வாறு சொல் லிக்கொண்டே பின்னும் மாட்டைத்தட்டி ஓட்டினுர். தாம்ஷேட்

டியும் குணபாயும் "ஓ பொறுமையிற் சிறந்த புண்ணியவானே! கோபம் பாபமறியாது என்றபடி எங்களுக்குற்ற வறுமையால் உம்மைச் சிறுமைப்படுத்திவிட்டோம்; தர்மகுணங்கெட்டோம்; இதை மனதில் வையாதீர்; அவமரியாதையைச் செய்யாதீர்" என்று பல மரியாதையான வார்த்தைகளாடத் தொடங்கினர்கள். மாயாவிலாசன் "ஓ பிரஜைகளே! இப்போது இவர் செய்யும் பாசாங்கைப் பாருங்கள். இவ்வழக்கைத் தீருங்கள்; அகப்பட்டாற் றலைமுடி; இல்லாவிட்டால் காலடி. இவர்கள் தர்மபக்தர்கள் தர்மசுத்தர்கள் பணவாசைக்குகந்த கிழப்பிணங்களாகிய இவர்களுடன் பேசவுந்தகுமோ?" என்றார். லோபிகளே! கொடும் பாபிகளே! துவேஷிகளே! அவிசுவாசிகளே! எனக்கூறி வந்த வழியாக மாட்டைத்திருப்பி இழுத்துக்கொண்டு போகத்தொடங்கினர். குணபாயி "அப்பா ஒப்பிலாதவனே! வீட்டினுள் வாரும்; ஏழைகள் முகத்தைப்பாரும்; ஆசனத்திலுட்காரும்; ஆயாசந் தீரும்; ஏளனஞ்செய்ததுபோதும்; இனி நாங்கள் ஈடேறும்படியாகக் கிருபைகூறும்; கொண்டுவந்த திரவியத்தைத் தாரும்; நாங்களுய்யக்காரும்" என்கிற வார்த்தைகளாடி சேவகனுடைய இரண்டுகரங்களையும் பிடித்துக்கொண்டு பலவந்தமாய் வீட்டினுட்கொண்டுபோய் ஆசனத்திலிருத்திக் கேசவசவ்கார் எந்தவூர்? அவருக்கும் நாமதேவருக்கும் எத்தனை நாளாய் பரிட்சைசொல்லுமப்பா?" என்றாள். கபடநாடகன் "ஆஆ! இவ்வுலகில் பணமென்றால் பிணமும் வாய்திறக்கும் என்பது கட்டுக்கதையென்றல்லவோ நினைத்திருந்தேன். இப்போது பிரத்தியட்சமாகக் கிழப்பிணங்களாகிய உங்களால் பணத்தாசையைப் பரீட்சித்தேன். அகத்தியம் பிணமும் பணத்துக்காக வாய்திறக்கும். மானம் போய் வெகுமானங் கிடைத்தால் நலமென்று எண்ணும் மாந்தர்கள் இவ்வூரிலிருக்கும் நீங்களன்றி வேறு எங்கணும் இருக்க மாட்டார்கள். ஓ பொருளாசையென்னும் மருள்கொண்டு இருக்கும் புலையரே! ஜீவகாருண்ணியமில்லா வலையரே! புண்ணியமறியாத லுத்தரே! அனியாயஞ்செய்யும் சுத்தரே" என்று உரைத்துக்கொண்டிருந்தார். தாம்ஸேட்டி மாட்டை வீட்டின் வாசலில் ஓட்டிக்கொண்டு வந்து ஓர் சார்பிற்கட்டி, "ஓ வேவுகாரரே! வீணாய்க்கோபங்கொள்ளாதீர்; ஏழைகளைத் தள்ளாதீர்; தூஷணவார்த்தைகள் விள்ளாதீர்; வாலிபத்தால் துள்ளாதீர்; கேசவசவ்கார் நாமதேவருக்குத்தானே இந்த திரவியத்தைக் கொடுத்தனுப்பினர். அப்படியிருக்கச் சேவகனாகிய நீர் இப்

படிப் பேசலாமா? ஆயினும் குற்றமில்லை. கேசவசவ்கார் எந்த வூர்? எத்தனைபை கொடுத்தனுப்பினர்? ஒரோர் பையில் எத்தனை வாரகனிருக்கின்றது?" என்று கோணிப்பையைக் கீழே தள்ளினர். சிதறி வாசலெல்லாம் பொன்மயமானதாற் றுள்ளினர். பாண்டுரங்கனைப் பாடினர். பரமானந்தம்மேலிட்டாடினர். அதைப்பார்த்த பகவானுங் களிப்படைந்து, "ஓ தாம்லேட்டி! கேசவசவ்கா ரிருப்பது வைகுந்தபுரம். நாமதேவரைச் சிறுபோழ்திருந்து அறிவார். அவர் அனுப்பியது பத்துப்பை. ஒவ்வொரு பையிலும் பதினாயிரம் வாரக விருக்கின்றது. நீர் எண்ணிக்கொள்ளும் நான் இம்மாட்டைச் சந்திரபாகாநதியிற் குளிப்பித்து நானும் ஸ்நானஞ்செய்து பண்டரிநாதன் ஆலயத்துக்குப்போய் நாமதேவருடன் பேசிவருகின்றேன்" என்று உரைத்து ரிஷபத்துடன் வெளிப்பட்டு அந்தர்த்தானமானர். பின்பு தாம்லேட்டியும் ராஜாபாயும் வாரகன்களை யெண்ணி லட்சம்வாரகன் சரியாயிருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு சில வாரகன்களுக்குத் தேவையான வஸ்துக்கள் வாங்கிக்கொண்டு அதிசீக்கிரமாய்ப் பதார்த்தங்கள் சமைத்து, ராஜாபாயை நல்ல வஸ்திராபரணங்கள் அணிந்துகொள்ளச்செய்து, நாமதேவருக்குத் திவ்வியமான வஸ்திராபரணங்களும், பகவானுக்குக் கைத்தல், தித்தித்தல், புளித்தல்,உவர்த்தல், துவர்த்தல்,கார்த்தல் என்னும் அறுசுவை யுண்டியுடன் அணிவர்க்கங்களும் கொடுத்தனுப்பித் தாங்கள் திரவியத்துக்குக் காப்பு செய்திருந்தார்கள்.

ராஜாபாய் மிகுந்த களிப்புடன் நைவேத்தியத் தட்டையும் வஸ்திராபரணங்களையும் ஏந்திக்கொண்டு வீதியிலுள்ள ஆடவரும் மாதரும் இவள் ரம்பையோ? இந்திராணியோ? கலைமகளோ? மலைமகளோ என்றுமயங்க அன்னம்போலவும் கரிணியைப்போலவும், மெதுவாகநடந்து பலவீதிகள்கடந்து, சரணம் நோவதாலிடைந்து, சன்னிதானத்தையடைந்து, பாண்டுரங்கன் முன் பசியால்வாடிப் பகவானை நாடிப் பக்தியைக்கூடிப் பரமானந்தத்தைத்தேடி, இருகண்களைமூடி, விஷ்ணு சங்கீர்த்தனங்களைப் பாடி, எழுந்தெழுந்துகூத்தாடிக்கொண்டிருக்கும்தன்கணவனைச் சூழ்ந்து பலதாந் தாழ்ந்து, "ஓ சுவாமி! பசியால் வருத்தமடைந்தீரோ? பாடியாட விடைந்தீரோ? இதோ நைவேத்தியங் கொண்டுவந்தேன்; பாண்டுரங்கனைக் கண்டுவந்தேன். சீக்கிரம் பண்டரிநாதனுடைய பாதங்களுக்கு நீராட்டும்; தூப தீபங்களைக் காட்டும்; அன்னத்தை யூட்டும்; பஜனை பிறகாகட்டும்"

என்று பணிவாக உரைத்தார். நாமதேவர் கண்ணைத் திறந்து காந்தையைப் பார்த்து மெய்மறந்து, "ஓ பெண்ணே! உசித மான வஸ்திரங்களேது? திவ்வியமான ஆபரணங்களேது? பற் பல பலகாரங்களேது? அநேகவித கனிவர்க்கங்களேது? சீக்கிர மாக ஓதுவாய்" என்று கேட்டார். ராஜாபாய் "ஓ சுவாமி! தங்க ளுக்குப் பால்யசிநேகிதராகிய வைகுந்தபுரத்திலிருக்கும் கேசவ சௌகாரென்பவர் ஓர் ரிஷபத்தின்மீது லட்சம் வராகன்களை ஏற்றி ஓர் ஆளுடன் அனுப்ப; அச்சேவகன் நமது வீட்டிற்கு வந்து உம்மைக் காணாமல் நொந்து, கனகங்களைத் தந்து, உம் மைக்காண விங்குவந்து ஓர் ஜாமத்துக்கு மேலாயிற்றே, அவ னைத் தேவரீர் காணவில்லையோ?" என்று வணங்கினாள். அவ் வாக்கியங்களைக் கேட்ட நாமதேவர் "ஓ ஓ! பகவானே நமக்கா கத் திரவியம் கொண்டுவந்ததுபோற் றோன்றுகின்றதென்று துன்பங்கள் அகன்று சந்தோஷமெனப் புகன்று சற்றுநேரம் அசையாமல் நின்று ஆடையாபரணங்கள் தரித்துக்கொண்டு நைவேத்தியத்தட்டை வாங்கிக்கொண்டு சந்நிதானத்தினுட் பிர வேசித்துச் சந்துஷ்டியோடும் பூசித்து நாடோறும்போல நைவேத்தியம் உட்கொள்ளுமையா?" என்று தோத்திரஞ் செய் யத்தொடங்கினார். உடனே பகவான் பிரசன்னமாய் ஒன்றும் அறியாதவர்போல் இன்று வெகு சம்பிரமமாக விருக்குங் கார ணம் ஏது? என்று கேட்டார். நாமதேவர் "ஓ தெய்வமே! அடி யேனுக்காக ஆட்காரனாகலாமோ? என் தாய் தந்தையர்பால் ஏக லாமோ?" என்று பணிந்தார். பகவான் "ஓ நாமதேவரே! நீ வெகுநாளாய்ச் சன்னிதானத்துக்குக் காவலா யிருப்பதன்றி அன்னமூட்டும்சேவகனாயும் அமர்ந்திருக்கின்றாய். அதற்குச் சம் பளங்கொடுக்காமல் நெடுநாளாக மறதியாயிருந்துவிட்டேன். இதினிமித்தம் முனிவுகொள்ளாமல் இனிமேல் அப்போதப் போது சம்பளம் பெற்றுக்கொண்டு அன்புடன் எனக்கு அன்ன மூட்டப்பா!" என்றார். பின்னும் "ஓ அரிதாசனே! முகவிலாசனே! இனிமேல் இராக்காலத்தில் வீட்டிலும் பகற்காலத்தில் இவ்வி டத்திலுமிருந்து நாள்கழிப்பாயாக" என்று அறைந்து மறைந் தருளினார். பின்பு நாமதேவர் பகவான் கட்டளையின்படியே நாள் கழிக்கத் தொடங்கினார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினார்.

பகவான் லட்சம்வராகனளித்த அத்தியாயம் முற்றிற்று.

---

## ஐந்தாவது
## பகவான் கூலியாளனாய்வந்து பணிசெய்த
## அத்தியாயம்

வாருங்கள் சித்தர்களே! இப்பால் நாமதேவர் பகவான் கொடுத்துப்போன வராகன்களைக் கண்டு ஆனந்தங்கொண்டு விந்தையென விண்டு, இனி பக்தர்களுக்குத் தொண்டுசெய்தால் இன்பமுண்டு என்றதாக வுட்கொண்டு, அந்தணர் சாதுக்கள் அப்யாகதி முதலானோர்க்கு அன்னதானம் சொர்னதானம் முதலியவைகள் அன்புடனளித்து, இன்புடன் களித்து வரான்களை யெல்லாஞ் செலவழித்து, லோபிகளைப் பழித்து வீட்டையும் விற்று மேலோர்க்கீந்து சபதப மூபாதி சந்தோஷத்தையுஞ் சார்ந்து முன்போலவே ஆலயத்திற் பிரவேசித்துப் பண்டரிநாதனைப்பூசித்து நாள்கழிக்கத் தொடங்கினர். ராஜாபாயும் தாய் தந்தையும் தையல் வேலையால் பகவானுக்கு நைவேத்தியம் அனுப்பிக்கொண்டு இருப்பதற்கு வீடில்லாமையால் ஓர் பந்தல்போட்டு அதில் வாசமாயிருக்கிறநாளில் ராஜாபாய் கர்ப்பவதியாய் பூரணமானபின் நல்ல சுபமுகூர்த்தத்தில் பூரணச்சந்திரனைப்போன்ற ஓர் ஆண்குழந்தையைப் பெற்றாள். அப்போது பண்டரிநாதன் நாமதேவர்முன் பிரசன்னமாய் "அப்பா நாமதேவ்! உனக்கு ஒப்பிலாப் புதல்வன் பிறந்தான். ஆதலால் சீக்கிரம்போய்ப் பார்த்து நாளைவா" என்று பலவந்தமாயனுப்பினர். நாமதேவர் கடவுள் உத்திரவின்படியே தமது இருப்பிடமடைந்து குழந்தையைப் பார்த்துவந்து உடனே சந்நிதானத்துக்குத் திரும்பினர். அது தெரிந்த குணபாயும் தாம்ஷேட்டியும், "அப்பா ஒப்பில்லா மகனே! உனக்கு அருமையான மைந்தன் பிறந்தானே; இன்றைக்காவது இங்கு இருக்கலாகாதோ?" என்று வேண்டிக்கொண்டார்கள். நாமதேவர் நல்லதென்று அப்பந்தலின் ஓர்பக்கத்தில் சயனித்துக்கொண்டார். அப்போது மழைத்துளிகள் விழ ஆரம்பித்தது. அதனால் தாம்ஷேட்டி நாமதேவரை நோக்கி, "அப்பா நாமதேவ்! பின்னுக்குதவுமென்று ஓர் காசும் வைக்காமல் ஆபரணம்முதல் வீட்டையும் விற்றுச் சம்பந்தி முதலானோர் நகைக்கப் பந்தலில் சமுசாரம் செய்யும்படியாகச் செய்துவிட்டாயே; அதிக மழைவந்தால் இளங்குழந்தையும் தாயும் விருத்தாப்பியமுள்ள நாங்களும் நனையமாட்டோமா? குளிரால் வாதைப்

படமாட்டோமா? ஆதலால் யாரையாவது அழைப்பித்து இப் பந்தலைச் சற்றே செம்மையாகக் கட்டிவையப்பா" என்றுசொல்லி னார். நாமதேவர் "இப்பந்தலுக்கு மூன்றுகாலே யிருக்கிறது. மேற்புல்லுமில்லை. ஆதலால் ஒருகாலும் புல்லும் இவ்விரவில் எங்கிருந்து கொண்டுவரட்டும்? யாரிடம்போய்க் கேட்கட்டும்? அப்படி இவைகளகப்பட்டாலும் கட்ட என்னாலாகுமா? கூலியா ளை யழைப்பித்தால் அவர்களுக்குக் கூலிகொடுக்க என்னிடம் பணமிருக்கின்றதா? இதற்காக்த்தானா என்னை இருக்கச் சொன் னீர்?" என்று எழுந்துசந்நிதானத்துக்குப் போகத்தொடங்கினார்.

குணாபாயி நாமதேவரை மறுத்து "அப்பா மகனே! உன்னை நாங்கள் எவ்வளவு அருமையாய்க் காப்பாற்றினோமோ அவ் விதமாகவே உன்மைந்தனை நீ பாதுகாக்க வேண்டியதில்லையா? மனைவி மகனைக் காப்பாற்றுவதுந் தொல்லையா? நாங்கள் விருத் தாப்பிய மேலீட்டால் யாதொன்றுஞ்செய்யக்கூடாமல் தடுமாறு கிறோமே? நீயறியாதவனல்லவே" என்று நவின்றார்கள். நாம தேவர், "ஓ அம்மா! எல்லாருக்கும் பகவான் துணையாயிருக்க, ஒருவரையொருவர் காப்பாற்றுவதென்பது கர்த்தன் பக்திக்குத் குறைவல்லவா? ஈ எறும்பு முதல் சகல சீவராசிகளுக்கும் சுகதுக் கம் அறிந்தூட்டும் கர்த்தவ்யம் இக்குழந்தையைக் காக்காமல் கைசோர விடுவாரா? நமக்குந் துன்பந்தர வுட்படுவாரா?" என் கிற பல மொழிகள் பகர்ந்து ஜாமராத்திரிக்கு மேலானதாலும், தாய்தந்தையர் வாக்கைக் தடுக்கக்கூடாமையாலும், சயனித்துக் கொண்டு பகவானைத் தியானஞ்செய்துக்கொண்டு மழை காற்று வீசுவதால் நித்திரை வராமல் விழித்துக்கொண்டு இருந்தார். அப்பொழுது காற்றுமழையும்பலமாய் அடிக்கவே, தாம்லேட்டி யும் குணாபாயும் மருகியாகிய ராஜாபாயும் குழந்தையும் நனையா மல் இருக்கும்படிக்குக் காற்று எந்தப்பக்கமாக வீசுகின்றதோ அந்தப்பக்கத்தில் தட்டிகளையெடுத்து வைத்துக்கொண்டிருந்து, மழை விட்டபின் ஓர்பக்கத்தில் சயனித்துக்கொண்டு "ஓ பக வானே! பலமாகக் காற்றும் மழையும் வந்து அடித்தால் பந்தல் வீழ்ந்துபோகுமே. சிசுவுக்குந் தாய்க்கும் வேதனை யுண்டா குமே. இதற்கு நாங்கள் என்னசெய்வோம்? ஓ பண்டரிநாதா! நீயே துணை" என்று தோத்திரஞ் செய்துக்கொண்டே கண் வளர்ந்தார்கள். அப்போது பக்தவச்சலனாகிய பாண்டுரங்கன் கூலியாளனாகப் பந்தலுக்கு ஓர்காலும் புல்லும் ஏந்திக்கொண்டு

வந்து, ஓ நாமதேவரோ யென்று பன்முறை உரக்கக் கூப்பிடத் தொடங்கினர்.

நாமதேவர் இதென்னடா சள்ளையா யிருக்கின்றது. கர்த் தன்பக்திக்குத் தடைவந்துகொண்டிருக்கின்றது. அரிஅரி இந் நேரபரியந்தம் இந்த விருத்தனும் விருத்தையும் குணுகுணு முணுமுணென்று என்னென்னமோ பிதற்றிக்கொண்டிருந்து இப்போதுதான் அனந்தல் செய்தார்கள். அவர்களை யெழுப்ப வும், என் தியானத்தைக் கலைக்கவும், எவனோ வந்து கொள்ளை கொடுத்தவன்போல் கூக்குரலிடுகிறான். சம்சாரம் சாகரமென் கிற வசனம் மெய்யன்றிப் பொய்யல்லவென்று அனந்தவித யோசனையோடுங்கூடி மௌனமுற்றிருந்தார். பகவான் நாம தேவர் அருகிற்சென்று, "அடா நாமதேவ்! நான்வந்து பல தாங் கூப்பிட்டும், கண்திறந்து பார்த்தும் மௌனமாயிருக்கின் ருயா? நீ யாருக்காகச் சஞ்சாரஞ் செய்கின்ருய்? பேரின்பத்தை யும் பிள்ளையைப்பெற்றுச் சள்ளையென்று உரைக்கின்ருய்? உனது மாமனர் பந்தலுக்கு ஓர்காலும் புல்லும் கொடுத்தனுப்பக்கூ டாதா? லட்சாதிபதிக்கு இதுவோர் பாரமா? அரிஅரி! சிசுவுந் தாயும் ஈரத்தால் ஜன்னிகண்டு ஓர்வேளை இறந்துவிடப் போகி ருர்களென்று பக்கத்து வீட்டுக்காரனுகிய நான் பெருத்த குடும்பி யாதலால் ஜீவகாருண்யத்தால் பந்தலைச்செவ்வையாக நிறுத்திக் காற்றும் மழையும் உட்பிரவேசிக்காமல் ஓர்காலும் புல்லும் நாரும் கொண்டுவந்து துணையாயிருந்து கட்டுதற்கு ஓர் துணை வேண்டி வெகுநேரமாய் உன்னை யழைக்கின்றேனே? நானொரு வனு யுழைக்கின்றேனே?" என்று மூன்றுகாலில் இருந்த பந்தலை நாமதேவர்பேரில் விழும்படி செய்தார். பந்தல் வீழ்ந்துவிட் டது; உன்னுடைய எண்ணங்கெட்டது; சீக்கிரமெழுந்துவாவா வென்று காத்தைப் பிடித்திழுத்தார். நாமதேவர் பந்தலின்கீழ் அகப்பட்டுக்கொண்டு வெளிப்படுவதற்குக் கூடாமல் வெகு கஷ் டத்துடன் புறம்போந்து கூலியாளனைநோக்கி, "அடாமுருடா! அடாகுருடா! நீ பந்தலை என்மேற் றள்ளவேண்டுமென்றே தள் ளினுய். உபகாரஞ் செய்யவந்தே னென்கிற கர்வத்தாற் றுள்ளி னுய். அதிக கருணையோடும் வந்த நீ ஓர் ஆளையும் அழைத் துக்கொண்டு வரலாகாதா? பந்தலைக்கட்டிப் போகலாகாதா?" என்று உரைத்தார். பகவான், ஓ நாமதேவா! கோபஞ் செய் யாதே; வாயில் வந்தபடி வையாதே; நானும் உங்களைப்போல் ஏழைபன்றி மகாராஜனே? ஓர் ஆளுக்குக் கூலிகொடுக்க என்

னிடத்தில் பணம் எங்கிருக்கின்றது? உனது தாய்தந்தையரை வெகுநாளாய்ச் சினேகித்திருக்கும் வாஞ்சையாலும், உன்மனைவியும் மகவும் படுந்துயரத்தாலும், உபகாரஞ் செய்யவந்தேன். நீ சற்றே துணையிருந்து கட்டுமப்பா'' என்று பலவந்தமாகப்பந்தலை ஓர் பக்கந் தாங்கச்செய்து, தான் ஓர் காலைநட்டுக் காவணத்தைச் செவ்வையாக நிறுத்திப் புல்லைப்பரப்பி நாருகளாற்கட்டி நாலு பக்கங்களிலும் தட்டிகளை நிறுத்தி, நாமதேவை உள்ளிருத்திப் புறத்திலிருந்த பகவான் மூங்கில்களால் பலமாயிறுக்கிக் கட்டி, அடா நாமா! சாப்பாட்டு ராமா! பந்தல் செவ்வையா யிருக்கின்றதா?'' என்று உரைத்துக்கொண்டே உள்ளிருப்பவர் வெளி வருவதற்கு வழியில்லாமல் செய்து அலுப்பவர்போல் "அப்பப்பா! இராத்திரியெல்லாம் நித்திரையில்லாமல் இந்த மூடாத்மாக்களுக்காக வெகு கஷ்டப்பட்டேன். இனியிவர்கள் கூலி கொடுப்பது எப்போ? நான்போய் நித்திரைசெய்வது எப்போ? என்று உரைத்தார். அடா நாமதேவா! நான் இன்னேரவேலையில் வந்து மழையில் நனைந்து பந்தலைக் கட்டினதற்கு சீக்கிரங் கூலிகொடு. ஓர் காலுக்கும் புல்லுக்கும் நாருக்கும் விலைகொடு. எனக்கு அதிக நித்திரை வருகின்றது ஆயாசந்தருகின்றது'' என்று சொல்லத் தொடங்கினர்.

நாமதேவர் "சபாசு! நன்றாயிருக்கின்றது; காலும் புல்லும் நாரும் நான் உன்னைக் கொண்டுவரச் சொன்னேனா? கஷ்டத்துடன் கட்டச்சொன்னேனா? வீண் வாதுசெய்ய நீ எங்கிருந்து வந்தாய்? ஏன் எனக்கு ஆயாசந்தந்தாய்? என்னிடம்கூலியேது? விலையேது? போபோ?" என்றார். பகவான் "அடா நாமா! கூலியும் விலையுங் கொடுக்காமற்போனால் உன்னைக் கொஞ்சத்தில் விடுவேனா? நஷ்டத்துக்குட்படுவேனா? இப்போது சுகப்பட்டது உன் மனையாட்டியா? என் மனையாட்டியா? உன்மகவா? என் மகவா? உன் தாய்தந்தையா? என் தாய்தந்தையா? நீயிக்கணம் கூலி கொடுத்தாலாச்சுது;இல்லாவிட்டால் இப்பந்தலுக்கு நெருப்பை வைத்து பஸ்பமாக்கிவிடுகிறேன். ஒருவரும் புறப்படுவதற்கு வழியில்லாமல் முன்னமே தடைசெய்திருக்கிறேன். இதோ தீயைக் கொண்டுவருகிறேன். பச்சைக் குழந்தையும் தாயும் துன்பப்படப் போகிறார்களென்று சகாயஞ்செய்த எனக்கு உபசாரமுஞ் செய்யாமல் அபசாரஞ் செய்கிறாயா? இப்பேர்க்கொத்த துஷ்டனாகிய உன்னையும் உன் குடும்பத்தையும் எரித்து விடுவதால் எனக்கு ஓர் பாபமும் அணுகாது. நாணமில்லா

நாயே? பிரியமில்லாப் பேயே?" என்று வைதுகொண்டே சற்றுதூரம்போய் மாயமாய் மறைந்தார். உடனே நாமதேவர் பந்தலிலிருந்து வெளிப்பட, நாலுபக்கத்திலும் சுற்றிப்பார்த்து வழியில்லாமல், ஓ ஓ! நெருப்பிட்டு எரிப்பதற்கோ யிப்படிச்செய் தான். நமது கழுத்தைக் கொய்தான். இனி உள்ளபடி முடி யட்டும்; பொழுது விடியட்டும்" என்று பகவானைத் தியானஞ் செய்துக்கொண்டே ஓர் சார்பிற் சயனித்துக்கொண்டார். அப் போது ராஜாபாய் நாமதேவை நோக்கி, "ஓ சுவாமி! கஷ்டப் பட்டவனுக்குக் கூலியுங்கொடுக்காமல் சமாதானமுஞ் சொல்லா மல் பந்தலைக் கொளுத்திவிட்டால் விடட்டும் நமக்கு என்ன வென்று உமக்குள்ள பக்தியின் பிரதாபத்தால் சட்டை செய்யா மல் சயனித்துக்கொண்டீர். தள்ளாமையான உமது தாய்தந் தையும் நமது கான்முளையும் அக்கினியால் திக்குமுக்கிட்டு இறந்துபோவதாற் பாபஞ்சம்பவிக்காதோ? இப்படி செய்வது நீதியோ" என்று உரைத்துத் தனது மாமன் மாமியாரையும் எழுப்பி நடந்த விருத்தாந்தங்களனைத்தையும் புகன்று, பாலனை எடுத்துக்கொண்டு பந்தலைவிட்டு வெளிப்படுங்கள்" என்று உரைத் தாள். அதற்குக் குணுபாயும் தாம்ஷேட்டியும் பயந்து நயந்து நாமதேவரை நோக்கி, "அப்பா நாமதேவா! இதுவென்ன விப ரீதம் நேரிட்டது. வாயிலில்லாமல் கட்டும்போது நீயேன் பார்த் திருந்தாய்? சீக்கிரம் வழிசெய்து நாம் இப்பந்தலிலிருந்து வெளிப்பட்டுப் போவோம் வாருமப்பா" என்று இறுக்கிக் கட்டி யிருக்கும் தட்டுகளிலொன்றை அவிழ்க்க ஆரம்பித்தார்கள்.

அது அவிழ்க்கப் பலமாயிருந்ததல்லாமல் வெளிப்படுவ தற்கு வழியுண்டாகாமற் போச்சுது. அதனால் தாய்தந்தை மிக வுங் கிலேசமுற்றுத் தங்களாலானமட்டும் கரங்களாலவிழ்த்தும், பற்களாற் கடித்தும், முழங்கைகளாலிடித்தும், காலாலுதைத் தும், தலையால் மோதியும், மார்க்கமுண்டாகாமையால் இனி அக் னிக்கிரையாவோமென்று தீர்க்கமாயோசித்துக் கூகூவென கூச் சலிடத் தொடங்கினார்கள். அப்போது நாலாஞ்சாம ராத்திரி யாதலால் பலரும் விழித்து எழுந்துவந்து என்ன சங்கதி? என்றுகேட்டு ஓர் பக்கத்திலுள்ள தட்டியை யவிழ்த்து நாங்க ளெல்லோருமிருக்க நெருப்பிடுகிறவனெவன்? பயப்படாமலிருங் கள்; நாங்கள் சூரியோதயமாகும் பரியந்தம் இருக்கிறோமென் றுரைத்துப் பற்பல வார்த்தைகளாடத் தொடங்கினார்கள். நாம தேவர் சள்ளையொழிந்ததென்று வெளிப்பட்டுச் சந்திரபாகா

நதிக்குப்போய் ஸ்நானஞ்செய்து பண்டரிநாதன் சன்னிதானத்துக்கு எழுந்தருளிப் பாண்டுரங்கனைப் பற்பல விதங்களாகத் துதித்து, இராத்திரியெல்லாம் அனந்தல் செய்யாமையால் அயர்ந்து ஓர் சார்பிற் சயனித்துக்கொண்டு நித்திரைசெய்தார். இங்கே சூரியோதயமாவதற்கு ஓர் நாழிகையிருக்கையில் சகலரும் இனி யாரும் வரமாட்டார்கள்; நெருப்பையிடமாட்டார்கள்; துன்பந்தரமாட்டார்கள் என்று உரைத்து ஸ்நானஞ்செய்யச் சென்றார்கள். அப்போது குஞ்பாயும் தாம்ஷேட்டியும் வெளிப்பட்டுப் பந்தல்கட்டியிருக்கும் ஒழுங்கைப்பார்த்து அதிசயித்து உள்ளே போய்ப்பார்க்கையில் ஒருகாலும்நாரும் அடியிலிருக்கும் புல்லும் பொன்மயமா யிருக்கக்கண்டு, இது பகவானுடைய திருக்கூத்தென்று தீர்மானித்து, ஓர் துண்டுபுல்லைக் கொண்டுபோய் விக்கிரயஞ்செய்து, ஓர் வீட்டை வாடகைக்குப்பேசி அதிலிவைகளையெல்லாங் கொண்டுபோய் மறைத்துத் தானியவர்க்கங்களை வாங்கி நிறைத்து பலவித பலகாரங்களுடன் அன்னமும் சமைத்துத் தாம்ஷேட்டி நைவேத்தியம் ஏந்திக்கொண்டுபோய் நாமதேவை விளித்துச் சீக்கிரம் பகவானுக்குப் பூசைசெய்து அன்னமூட்டி வீட்டுக்கு வாருமப்பா என்று உரைத்து வீட்டிற்போய்ப் பொன்னையெல்லாம் துண்டுகளாக்கிக்கொண்டிருந்தார்.

நாமதேவர் அநேக பதார்த்தங்களுடனிருக்கும் நைவேத்தியத்தைப்பார்த்து ஆச்சரியங்கொண்டு இன்றைக்கு வெகு ஜம்பமாய் இருக்கிறதென விண்டு, பண்டரிநாதனிடம்போய் புஷ்பங்களையணிந்து அன்புடன் பணிந்து, "ஓ ஸ்வாமி! மகாவுன்னதமான பலகாரங்கள் வந்திருக்கின்றன உட்கொள்ளுமையா" என்று தோத்திரஞ்செய்தார். பகவான் பிரசன்னமாய் "அப்பா நாமதேவா! இராத்திரி கூலியாளனுய்வந்து பந்தலைக் கட்டினதற்குக் கூலிகொண்டுவந்தாயா?" என்று கேட்டார். அதற்கு நாமதேவர், "ஓ பகவானே! பகவானே! உமக்குக் கூலிகொடுக்கும் எஜமான் நானுக என்னையாக்கிவிட்டீரோ? அசங்கிதமான குழந்தையையுந் தொட்டீரோ? கூலியாளனுகவும் புறப்பட்டீரோ? பந்தலைக்கட்டவு மூற்பட்டீரோ? எங்களுக்கிருந்த தரித்திரத்தைக் கெடுத்தீரோ? அளவற்ற வின்பைக்கொடுத்தீரோ? பகவானென்கிற பெருமையை விடுத்தீரோ? கூளங் குப்பையும் வாரியெடுத்தீரோ? இவ்வளவு கஷ்டமெடுத்துக் கொள்ளலாமோ? கூலியாளனென்றும் விள்ளலாமோ? பலதரம் கூலி

கொடுமென்று நீர்கேட்கலாமோ? நானில்லையென்றுஞ் சொல்லலாமோ? என்கிற பற்பல வாக்கியங்கள் பகர்ந்துகொண்டே அன்னத்தையூட்டினர். பகவான் சந்தோஷத்துடன் புசித்தார். பின்பு ஓ நாமதேவா! பிறந்த மைந்தனுக்கு விஷ்ணுதாசனென்று நாமதேயமிடும் என்றறைந்து மாயமாய் மறைந்தார். நாமதேவர் நைவேத்தியத்தட்டுடன் வாடகைவீட்டையடைந்து வீடெல்லாம் பொன்துண்டுகள் நிறைந்திருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு மைந்தனை வாரியெடுத்து மார்புடனணைத்துப் பந்துவர்க்கங்களைக் கூப்பிட்டுச் சந்தோஷமாக விருந்திட்டுப் பண்டரிநாதன் உரைத்தவண்ணம் விஷ்ணுதாசனென்று பேரிட்டு நாள்ஒன்றுக்கு ஆயிரம் இரண்டாயிரம்பேர்களுக்கு அன்னதானம் வஸ்திரதானம் கோதானமுஞ் செய்யத்தொடங்கினர். அதனல் குணுபாயும் தாம்ஸேட்டியும் வேஷ்டையுற்று, இருக்குந் திரவியத்தையெல்லாம் ஒருநாளுக்குள் தானஞ் செய்துவிட்டால் அடிக்கடி திரவியம் எங்கிருந்து கிடைக்கும்? பந்தலுக்கு ஓர்காலும் புல்லும் அகப்படாமல் எத்தனைநாள் வாதையும் மனவேதையும் பொருந்தி மிகவும் வருந்தியிருந்தோம். அதை இப்போது நினைக்கத் தேவையில்லையா? நமக்குப் பகவான் எத்தனைதாந்தான் பாக்கியமளிப்பார்? உனக்குத் தெரியாதது நாங்களென்ன சொல்லப்போகிறோமென்று உரைத்துத் தானஞ்செய்ததுபோக மிகுதியான பொன்னை ஓரிடத்தில் புதைத்துவைக்க வேண்டுமென்று வாதாடத் தொடங்கினர்கள். நாமதேவர் தந்தையை நோக்கிப் புண்ணியத்தால்வரும் பலனைச் சொல்லத் தொடங்கினர்.

விருத்தம்

இல்லையென்றுகேட்குமவ னிந்தவுலகத்திலீனனிவனிலீனன்
இலையென்றுரைக்குமவ னிசைபெறநன்மனதோடுமீகுவோரை
விலகச்செய்பவரிலிழிவின னீவனென்றிசைந்துபின்னர்
அலைவித்துமீதலிலன் மிகவினனன்னவரேநரகிலாழ்வார். 1
அரசாட்சியீந்துமரசிற் குரியவன்பானசுதனையீந்தும்
சரசத்தையீயுமனைதனையீந்துஞ் சாயுச்சியபதவிசேர்ந்தார்
பிரமபதமடையவென்று மனப்பெரியோரென்றுமிகப்பேறெய்துற்றும்
திரணமுமேயீயநெஞ்சமுருச்சிறியோர் நரகமெனுந்தீயேசேர்ந்தார். 2
முதுகென்பளித்துமுடலைத்தரசி லுயிரோடளித்துமுதியோர்
சதுரவேதனுதிமிகுதேவர்போற்று சாயுச்சியம்பெற்றனர்
முதுமெய்த்தவத்தினல்வந்தசெல்வ மதில்வாஞ்சைவைத்துமூகர்
அதிதிக்குத்துசுகாசுங் கொடாமலமிழ்வார்கணிருநரகிலே. 3

உலோபத்தைவென்றுயோகத்தையீந்து மொளிபெற்றனன்மாபலி
உலோபத்தினலேகுருடாயிவ்வுலகி லொளியற்றனன்சுக்கிரன்
உலோபத்தினலேசாபங்கொடுப்ப ருறுவார்கள்சாபம்பெற
உலோபத்தினலேதுயராதலாலவ் வுலோபம்பொலாதையனே. 4

தருமந்தவத்தினிலுமேலதாகும் சாயுச்யபதமளிக்கும்
தருமம்பலர்க்குமுபகாரமாகு மிகுசங்கடங்கடீர்க்கும்
தருமஞ்செயாதவுடலம்பிரேத மல்லாதுதகைமையுளதோ
தருமம்வினைசற்கருமஞ்சகத்தி லுளதோவென்னருடந்தையே. 5

தருமஞ்செயாதபேரேகரங்க ளில்லாமலவதரிப்போர்
தருமம்அநேகஜனனங்களுக்குத் துணையாகிவந்திடுவதாம்
பொருளுடுநகாமும்பெண்டுபிள்ளை யுயிர்போகதுணையாகுமோ
அருள்செய்யுமெந்தையேயென்றறைந்து மன்பாகவேதுதித்தே. 6

சரணத்திற்பணிந்தெந்தாயுனக்குந் தமியேனுரைத்தற்குமோ
புரணத்தையீயும்புண்யத்தையீட்டல் புனிதற்குகந்ததன்றி
தருணத்திலுதவுந்தருமத்தினியலைச் சாற்றத்தவிர்ப்பையுன்றன்
ஸ்மரணத்தையென்றுநாமதேவனிந்த வணமேபுரைக்கலுற்றான். 7

வேறு

தருமஞ்செய்தோர்க்கிடரில்லை தருமஞ்செய்தோர்க்கழிவில்லை
தருமஞ்செய்தால்வறுமையிலை தருமஞ்செய்தாற்பிணியுமிலை
தருமஞ்செய்வோரைசுவரியந் தாழாதோங்குஞ்சமனனுகின்
தருமமெதிர்த்துச்சமர்புரிந்து ஜயம்பெற்றுயிரைக்காத்திடுமே. 8

தருமந்தலைகாத்திடுமென்றே சாந்தருரைப்பர்கர்னன்மிகத்
தருமஞ்செய்தகாரணத்தாற் சமரிற்கொடியவம்புகளைத்
தருமந்தடுத்ததல்லாமற் சாகாவரமுமளித்ததனல்
தருமங்கவர்ந்துதனதரிய சேவையளித்தான்ஜகதீசன். 9

வேறு

தருமஞ்செய்யாமற்பொல்லாச் சண்டாளலோபத்தாலே
தருமமிற்றுரியோதனன்றான் றாழ்வுளநிரயஞ்சேர்ந்தான்
தரணியையிழந்தபோதுஞ் சங்கடமடைந்தபோதும்
தருமமேஜெயமென்றெண்ணித் தருமரிவ்வுலகையாண்டார். 10

உயிர்த்துணையானதம்பியர்நால்வ ருயிர்க்குயிராகியமனையாள்
உயிரிழந்ததையுமொருவனுதையு முத்தமப்பதியனுகாதும்
தயிரியஞ்சொலுதற்கியாருமில்லாதுஞ் சகலமுங்கேனந்துசெல்போதில்
பயந்தருநதியைக்கண்டதைத்தாண்டப் பலன்சற்றுமின்றியங்கிருந்தான். 11

அங்கொருநாய்வந்தக்கரைபோக வங்குமிங்கலைவதையறிந்தே
அங்கையாலெடுத்தம்புயத்தினில்வைத்தவ் வாற்றினிலிறங்கிடப்புனல்மேற்

பொங்குகந்தரமட்டுறவிடருற்றப் புண்ணியன்சுணங்கனைத்தலைமேல்
சங்கையில்லாமற்றுங்கிச்செல்போதிற் சாரமேயன்றனுப்புழுக்கள். 12

கண்ணில்வாய்செவிமூக்கிலும்புகுந்திடவக் கனமுளவுதிட்டிரனென்றும்
எண்ணிடாதகனைவிட்டிடாதன்னன் னதிக்கரையேறியன்னுயைப்
புண்ணியன்விடுத்தான்பெரும்புகழடைந்தா னெந்தையேபுண்ணியஞ்செய்தற்
கெண்ணுவனெவனேவவன்புகழென்று லிசைத்திடற்கெளிதலவென்றான். 13

தேவரைக்காக்கவல்லோவனங்கன் தேவன்மேற்கணைதொடுத்தழிந்தான்
தேவரைக்காக்கவல்லோகடுவைச் சிவன்புசிஇயங்கினன்முன்னாள்
மூவரும்போற்றுமகத்தியர்க்கன்ன மளித்திடாதண்டர்மாமுனிவர்
மூவருமஞ்சுந்தாருகாவனத்து முனிவர்களுயிரிழந்தாரே. 14

என்று தருமத்தின் மேன்மையைப் பலவிதங்களா யுரைத்து மாதா பிதாக்களின் மனதைக் கரைத்து, இருந்த பொன்னையெல்லாம் அருந்தவர்க்களித்து மிகவுங் களித்துப் பண்டரிநாதன் கோயிலே சொந்தவீடாக வெண்ணிப் பண்போடு பஜனை பண்ணி இன்புற்றிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னும் சொல்லத்தொடங்கினர்.

பகவான் கூலியாளாய் வந்த அத்தியாயம்
முற்றிற்று.

---

ஆறுவது

## நாமதேவர் தநயனுக்கு மயிர்வாங்கிக்
### காது குத்தும்போது
### பகவான் வரிசை கொண்டுவந்த அத்தியாயம்



வாருங்கள் சித்தர்களே! மிகவும் பரிசுத்தர்களே! இவ்விதமாகப் பொன்னையெல்லாம் அன்னதானம் முதலியவைகளிற் சிலவழித்து, லோபிகளைப் பழித்துப் பாண்டுரங்கன் திவ்விய சன்னிதானத்துக்கு நாமதேவர் போனபின் குணுபாயும் தாம்வேட்டியும் ஐயையோ! நாமதேவர் அறியாமல் ஒருபுல்லையாவது ஒளித்துவைக்காமற்போனேமே? முன்போலவே வறுமைக்குள்ளானேமேயென்று மனவேதை யுற்றுச் சிலநாள் வாங்கிவைத்திருந்த தவசங்களாற் காலங்கழித்துப் பின்பு தாரித்திர மடைந்து தையல்வேலையால் ஜீவனஞ் செய்யத்தொடங்கினர்கள். அப்போது ராஜாபாயின் தந்தையாகிய லட்சாதிபதி தன்மகள் பகவைப் பெற்றதும் குழந்தை

பிறந்ததே அளவற்ற திரவிய மகப்பட்டதும் நாமதேவன் ஒருநாளிலே அதிதிகட்களித்ததும் கேள்விப்பட்டுத் தாம் ஷேட்டி யிருக்குமிடத்தையடைந்து பட்சமான வார்த்தைகளாடி அவருத்தரவால் தன் மகளை யழைத்துக்கொண்டு தன் அரண்மனையிற் சென்று குழந்தையை அன்புடன் வளர்த்து 11-மாசமானதே மயிர்வாங்கி காதுகுத்த வேண்டுமென்று எண்ணி ஓர் வேவுகாரனை நோக்கி, நீ தாம்ஷேட்டியினிடம் போய் நாளைய தினம் குழந்தைக்குக்காதுகுத்துஞ்சடங்காதலால் நீங்கள் அனைவோரும் அதிகாலையில் இங்கு வரவேண்டுமென்று உரைத்து வாவென்றனுப்ப,வேவுகாரன் தாம்ஷேட்டியினிடம்போய் எஜமானுரைத்த வண்ணம் பகர, அதுகேட்ட தாம்ஷேட்டியும் குணுபாயும் அப்படியே யாகட்டுமென அறைந்து அனுப்பினபின் நாளை நாம் போகும்போது தகுந்த வரிசைகளுடன் போகாமல் வெறுமையாய்ப்போனால் பலருக்கும் நகைக்கிடமாவதன்றி சம்பந்தியும் ஏளனஞ்செய்வானே. அப்படிச்செய்யாமல் இவ்விடத்திற்கு ராஜாபாயும் குழந்தையும் அழைப்பித்துக்கொண்டு சகல பந்துக்களையும் வரவழைத்துச் சம்பிரமத்துடன் நாமே செய்பலாமென்றால் ஒருகாசுமில்லையே. ஓ தாரித்திரத் தொல்லையென்று மிகவுஞ் சிந்தாக்கிராந்தர்களா யிருக்குந்தருவாயில், இதையறிந்த பாண்டுரங்கன் ஒரு சவ்காரைப்போல் வேஷந்தரித்துக்கொண்டு வேவுகாரருடன் தாம்ஷேட்டியினிடம் போய் க்ஷேமவார்த்தைகள் பேசியபின் "நாளையத்தினம் உமது பேரனுக்குக் காதுகுத்துஞ் சடங்கு செய்கிறார்களாமே, நீரென்ன ஒருவஸ்துவும் வாங்காமல் வறுமையுற்றவர்போல வாடியிருக்கின்றீர்? உங்களுடைய சகாயத்தால் லட்சாதிபதியாயிருக்கும் என்பால் வேண்டிய திரவியம் கடனாய் வாங்கிக்கொண்டு காரியத்தை நிறைவேற்றும்; வாங்கிக்கொண்ட திரவியங்கொடுக்கநேரிடுமென்கிற அச்சம்வேண்டாம் பதினாயிரம் வராகன் உமக்கு இப்போதே கொடுத்துவிடுகிறேன் அதை எனக்கு நீங்கள் கொடுக்கவேண்டாம். அக்கரையோடு இவ்வளவு திரவியமும் உங்களுக்கு நான் கொடுக்குங் காரணம் ஏனென்றால் சில வருஷங்களுக்குமுன் நான் வணிகனாயிருந்தும் சாதுவேஷந் தரித்துக்கொண்டு வந்து நாமதேவிடம் இருபதினாயிரம் வராகன் வரையில் தர்மார்த்தமாய் வாங்கிக்கொண்டேன். அதனாலேயேலட்சாதிபதியானேன். உபகாரஞ்செய்தவர்களுக்கு உடனே உபகாரஞ்செய்யவேண்டும் என்கிறபடி சகாயஞ் செய்ய வந்தேன்" என்கிற பற்பல மொழிகள் பகர்ந்தனன். பின் வேவு

காரரை விளித்து, "இக்கணம் நமது வீட்டுக்குப்போய் பதினுயிரம் வராகன் கொண்டுவந்து இவருக்குக் கொடுங்கள்" என்று உரைத்தனுப்பித் தானும் புறப்பட்டு மாயமாய் மறைந்து மாயா சேவகரிடம் பதினுயிரம் வராகனையனுப்பி, நாமதேவைச் சோதிக்கவெண்ணி, சன்னிதானத்திலிருக்கும் நாமதேவையழைத்து, "அப்பா நாமதேவ்! நாளையதினம் உனது மைந்தனுக்கு மயிர் வாங்கி காதுகுத்தவேண்டுமாம். அதற்குத் திரவியமில்லாமல் உன் தாய்தந்தை சிந்தை நைந்திருக்கிருர்கள். நீ சீக்கிரம்போய் அவர்களுக்குற்ற வியாகுலத்தை நீக்கி வாருமப்பா" என்று அனுப்பினுர். அப்படியே நாமதேவர் மகாபாக்கியமென்று வீட்டையடைந்து, தந்தை தாயைப்பணிந்து வியாகுலத்தோடிருக்குங் காரணம் ஏனென்று கேட்டார். அதற்குத் தாம்ஷேட்டி "அப்பா நாமதேவா! நாளைக்கு உனது மைந்தனுக்குக் காது குத்துவதால் அதற்கு ஏதேனும் வரிசை கொண்டுபோவற்கு ஓர் காசுமில்லை. வெறுங்கையோடு போவதற்குஞ் சமாதானமில்லை. இது உன்னுல்வந்ததொல்லை. நீ சமுசாரத்துக்குகந்தவனல்லை" என்று உரைத்தார்கள். அத்தருணத்தில் பகவான் அனுப்பிய பரமபாகவதராகிய இரண்டு வேவுகாரர் தாம்ஷேட்டியின் முன் வந்து பதினுயிரம் வராகன் சரியாயிருக்கின்றதா? எண்ணிக் கொள்ளுமென்று அறைந்து இரண்டு மூட்டைகளை யவிழ்த்து வைத்து ஓர் பக்கத்திலுட்கார்ந்தார்கள். நாமதேவ் தந்தையை நோக்கி, "ஓ என் தாதையே! இந்தத் திரவியம் யார் அனுப்பினுர்கள்?" என்று கேட்டார். தாம்ஷேட்டி சொல்வதற்கிடைந்து மௌனமுற்றிருந்தார். அப்போது திரவியங் கொண்டுவந்த வேவுகாரர் "எங்கள்சவ்கார் சாதுவேஷந் தரித்துத் தங்களிடம்வந்து சிலநாட்களுக்குமுன் இருபதினுயிரம்பொன்தானம்வாங்கிக் கொண்டு இதனுல்லட்சாதிபதியானுர். அவர்தற்காலத்தில் நீங்கள் வறுமையுற்றிருப்பது தெரிந்து இத்தருணத்தில் இவ்வளவு திரவியம் உதவிசெய்தார். உத்தமர்க்கு உதவினுல் இப்படியேசகாயஞ் செய்வார்கள்" என்று அறைந்தார்கள். அவ்வசனத்தைக்கேட்ட நாமதேவர்கரங்களால்இருசெவிகளையும்மூடிக்கொண்டுஅரி அரி என்ன பாவத்துக்கு உட்பட்டேன்; தானஞ்செய்வதைப் பின்னும் வாங்குவதுமுண்டோ? வாங்குவோர் பரமபதமடைவதுண்டா? ஓ வேவுகாரரே! இக்கணம் இத்திரவியத்தைக்கொண்டுபோய் உமது சவ்காருக்குக் கொடுங்கள். தடுத்துப்பேசுவதை விடுங்கள்" என்றறைந்தார். அதற்குத் தாம்சேட்டி நாமதேவைநோக்கி, "அப்பா

நாமதேவா! உபகாரஞ்செய்த உனக்கு உதவிசெய்த சவ்கார் மன முறியத் திரவியத்தை அனுப்பக்கூடுமா? இது நமக்கு யோக்கியமா?" என்று புகன்றார். அதற்கு நாமதேவர் பிதாவைவணங்கி, "ஓ என்தாதையே! தானஞ்செய்ததை இச்சித்தால் அருநரகடைவதற்கு ஏதுவாகும். இதுதெரிய உதாரணசரித்திரம் ஏதென்றால்; இராவணாதிகளைச் சம்மாரஞ்செய்த ஸ்ரீராமர் லங்கையின் முகவாயிலையடைந்து அங்கிருக்கும் ஓர் விலையுயர்ந்த கல்லைப் பார்த்து இதை அயோத்திக்குக் கொண்டுபோகவேண்டுமென்று இசைத்ததை ஜாம்புவந்தர் கேட்டுக் காகுத்தனைப் பணிந்து, "ஓ பகவானே! திரிபுரசம்மாரமாகும்போதும், திருப்பாற்கடல்கடையும்போதும் தட்சகன் சிவனைநீக்கி யாகஞ் செய்தபோதும்; பார்வதி இமோற்பர்வதராஜனுக்கு மகளாய்ப் பிறந்து பரமசிவனைக் கலியாணஞ் செய்தபோதும் இராணியன் இராணியாட்சன் சோமுகாசுரன் முதலானவர்களை நீர் வென்றபோதும், பிர்மா ஐந்துசிரங்களுட னிருந்தபோதும், காமனை யெரித்தபோதும், காலனையுதைத்தபோதும், சிவசுப்பிரமணியர் பிறந்தபோதும், ஐங்கரனும் சங்கரனும் யுத்தஞ்செய்தபோதும், பத்மாசுரனுக்குப் பயந்துஓடும் பரமசிவனை நீர் காத்தபோதும் நானிருந்தேன். அதுகாலந்தொடங்கி இதுகாலபரியந்தம் ஒருவருக்குக் கொடுத்தது அமிர்தத்துக்கு இணையானதானாலும், பின்னும் இச்சித்த ராஜர்களைப் பார்த்ததேயில்லை இன்றுஉம்மைத்தான்பார்த்தேன்'' என்று உரைத்து லங்கைக்குள் போகாமற்றடுத்துவிட்டார். அவ்வசனத்தைக்கேட்ட ஸ்ரீராமர் ஓரடியும் பெயர்த்துவைக்காமல் நின்றுவிட்டார். ஆதலால் கொடுத்தவஸ்துவை வாங்குவது நரகத்துக்கு ஏதுவாகும். அல்லாமல் ரகுராஜன் கொடுத்த வஸ்துவை வாங்குவது கூடாதென்று ஓர் மறையோனால் வெகு துன்புற்று இறுதியில் மேன்மையை யடைந்தான். அச்சரித்திரத்தைக் கேளுமென்று சொல்லத் தொடங்கினார்.

விருத்தம்

வீரியந்தனினல்விண்டுவைசெயித்தோன் மேன்மையிலரன்றனைச்செயித்தோன்
ஆரியபக்தியினின்மிகநிறைந்தோ னன்னதானம்மிகச்செய்வோன்
பாருயிரிடர்கடனதெனநினைப்போன் பரிதிபோலனைவரைப்பார்ப்போன்
சூரியவம்சந்தனிலவதரித்தோன் சுகுணமாம்ரகுவெனும்பெயரோன். 1

ஒருகுடைநிழற்கீழுலகெலாம்புரப்போ னுத்தமவயோத்தியையாள்வோன்
ஒருதினம்வழுவாதறமிகச்செய்வோ னுயர்மனைவியர்முப்பதுடையோன்

ஒருதினமறையோர்மறையவர்வறுமை யுற்றவர்தமைவிளிப்பித்
தொருபொருள்வையாதனைத்தையுமீந்தோ னுதவுகோவணத்துடனிருந்தான். 2

இருக்கின்றபோழ்தோர்மறையவன்வந்தா னேதுவேண்டிடுமெனவரைய
னருக்கமாவினவலட்சமாணிக்க முதவவேண்டிடுமெனநிருபன்
சுருக்குடனகர்சென்றுயர்தனதாரத் தோகையர்மீதுறும்பணிகள்
சுருக்குடன்வாங்கிலட்சமாணிக்கஞ் சுத்தசாத்விகத்துடனளித்தான். 3

அளித்தெனதையாவின்னமேதேனு மாசையுண்டோவெனமறையோ
னளித்தநல்லரசேயினமொருபொருண்மே லாசையாகினனதைநீவி
ரளித்திடுவீரோவெனப்பதியெளியே னாவியைக்கேட்கினுந்தடையின்
றளித்திடுவேனென்றுரைக்கநின்மனைவி களிலொருத்தியையளியென்றான். 4

மன்னவன்மகிழ்ந்தம்மங்கையர்தம்மை மறையவன்முனமழைத்திகழிலா
ரின்னவர்தம்மிலியாவர்வேண்டிடுமென் வேலவார்குழலியர்மீது
மன்னவனுசிக்கரசனேயையா றரிவையரையுமளியெனவே
மன்னவனந்தமங்கையர்தம்மை மறையவர்க்களித்தின்பமடைந்தான். 5

முப்பதுபேரையின்றுமக்களித்தேன் முனிவனேயினமவர்யேதோ
செப்பெனச்சுகத்திலிருந்தவித்தாயச் சேயிழையார்தமைக்காக்க
ஒப்பிலாநிதியைக்கொடுவெனமன்ன னுளமகிழ்ந்தையனேயின்றே
டெப்பொருள்களுமிவ்வுலகினைத்தாங்கு மெழிற்குடையையுமுமக்களித்தேன். 6

இனியிந்தவுலகமனைத்தையும்புரந்திங் கிருவெனப்பணிந்தடவியிற்போய்த்
தனியனுப்பகவான்றனைப்பணிந்தேத்திச் சலனமற்றிருந்தனன்மறையோ
னினிதுடனுலகம்யாவையுமாண்டிங் கிருந்தனன்சிலதுநாளோர்நாள்
முனிவரின்மிகுந்தநாரதமுனிவன் மோகமிலயோத்தியையடைந்தான். 7

வந்தயோத்தியையாளிரகுவின்வளப்ப மகிழ்வுடன்கேட்டதிசயித்தவ்
வந்தணன்மீதுமிகமுனிந்தரைய னனுகிடுங்கானடைந்தன்பா
யுந்தநல்லறத்தின்மாட்சியென்னொருவ னாலுரைத்திடற்கெளிதாமோ
பந்தமில்லாதோயென்றவன்கரத்தோர் பழங்கொடுத்தஃகனியினைப்பகர்வான். 8

இக்கனிபுரப்போனாகமிவ்வுலகத் தென்றுமுற்றிடுமெனவரையன்
பக்குவப்பழமீநாரதமுனியின் பதம்பணிந்திடமுனியரசே
இக்கனிபுசித்திங்கிருவெனவகல வெழிற்றவமிகுத்தவன்னிருபன்
இக்கனியுண்டியானென்பெறற்காமீ தெழின்மறையவன்றனக்களித்தால். 9

இக்கனிபுசித்திவ்வுலகினைப்புரந்திங் கிரவிவாழளவுமிங்கிருப்பான்
பக்குவமிதுவென்றந்தணன்பாற்போய்ப் பழத்தினற்குணந்தனையுரைத்தே
இக்கனிபுசிப்பாயெனமறையோனென் னன்பனேமாரணமின்றி
இக்குவலயத்தினியானுறுமளவிவ் வேலவர்குழலிருமிருக்க. 10

முப்பதுபலங்களைப்படியேனு மோசநீசெய்திடாதளிப்பா
யொப்பிலாவரசேயெனப்பதிமறையோ னுபயநல்லடிகளைத்தொழுதென்
அப்பனேயோர்மண்டலங்கெடுவளித்தா லட்டியில்லாமனத்கனிகள்
முப்பதுங்கொடுப்பேனெனப்பணிந்தடவி தனிற்சென்றமோகமிலாசன். 11

மண்டலமாயின்மொழிதப்புமென்பான் மறையவன்முனிவனென்றயர்வா
னண்டர்களேத்துமத்தனேயென்பா னபயமென்றலறிவீழ்ந்தழுவான்
தொண்டனுக்குற்றதுயரினையகற்றுந் தூய்மையாரில்லையோவென்பான்
எண்டிசைபோற்றுநாரதமுனிவ னென்றன்பாலருளுடன்வந்தே. 12

கொடுத்தநற்குறையாலடுத்தவிக்குறையைக் கூறுவதேவர்கள்பாலென்பான்
சடத்தினைவிடுத்தானடுத்தறமென்பான் சடத்தினைவிடுத்தினியடுத்த
சடத்தினிற்கொடுக்கலாமெனச்சொல்வான் சடத்திணைவிடுக்கினிச்சடமே
கிடைத்திடலரிதென்றடிக்கடிநினைப்பான் கிலேசமுற்றயர்ந்துமூர்ச்சிப்பான். 13

இவ்விதத்துன்பத்திருக்குமன்னவன்பா லெழிலருணாரதரடைந்து
திவ்வியவரசேயென்றுயரொன்னத் திருவடிகளிற்பணிந்தேத்தி
அவ்வியநீத்தோய்நீமுனமெனக்கோ ரருங்கனியளித்ததுபோலத்
திவ்வியக்கனிகண்முப்பதுந்தென் றீவினையகற்றெனமுனிவன். 14

உம்பர்வாழ்சொர்க்கத்தொப்பிலாச்சோலை யொன்றுளதங்குநீவந்தா
லம்புவியினிலில்லாக்கனிகிடைக்கு மென்றந்தவனந்தனிற்கொடுபோ
யும்பர்களருந்தும்பலங்களையளித்திவ் வுலகினில்விடுத்தவக்கணமே
அம்புயவரையனயோத்தியையடைந்தவ் வந்தணன்பதம்பணிந்தேத்தி. 15

அந்தணர்கையாறருங்கனியளிக்க வயன்முகத்தோன்மகிழ்ந்தரசே
இந்தநற்பலங்களிருப்பிடம்பெண்க ளோடெனைக்கொண்டுபோமென்ன
செந்தணல்மெழுகாயரையன்மூச்செறிந்தென் செய்குவனிதற்கெனத்துன்புற்
றந்தணன்பதத்திவ்வந்தனஞ்செய்தென் னையனேகேளெனச்சொல்வான். 16

இந்தநற்கனிகளிருப்பதண்டர்பா லித்தெரிவையர்களோடுனையும்
அந்தச்சொர்க்கத்துக்கறிவிலேனெங்க னறிவிப்பேனெனச்சினமாகி
அந்தணனுரைப்பானரும்பலமிருக்கு மண்டத்திற்கொண்டுபோகாயேல்
உந்தநன்மாதரோடுலகினையு முந்தனுக்களித்தியான்கானில். 17

செல்லுவனெனவவ்வந்தணன்ருளிற் றெண்டனிட்டையனேகானில்
செல்லுதலழகோசிலதினந்தனிலத் தேவலோகந்தனையடைய
வல்லநற்றவத்தைச்செய்துமைவானில் வளப்பமாவைப்பனென்றுறுதி
சொல்லியவ்வரசனடவியிற்றனித்துத் தூயமாதவங்களைச்செய்தே. 18

அந்தணன்றனையுமரிவையர்தமையு மண்டர்வாழுலகினைச்சேர்த்தவ்
வந்தணன்குற்றசாபஙீங்கிடவிவ் வகிலத்தைப்புரந்திடவிசைந்தா
னெந்தமையின்றேய்விச்சுவாமித்திரர்க் கிவ்வணமேயனைத்தினையுந்
தந்தானுரைத்துமளித்ததைப்பெறச்சங் கடமடைந்தனனரிச்சந்த்ரன். 19

என்று பல நீதிவாக்கியங்களைப் புகன்று, வேவுகாரரைப் பதினாயிரம் வராகனையுங் கொண்டுபோகும்படியாய் உரைத்துத் தந்தையின் மனதைக் கரைத்து, இன்னம் பற்பல நீதிகளை ஓதி, இந்த அண்டபிண்ட பிர்மாண்டங்களை யெல்லாங் காக்கும் பரந் தாமன் நமது பங்கில் இருக்க, நமக்கு ஓர் குறையுண்டாகுமோ? தேவரீர் பாண்டுரங்கன்மேல் பாரம்போட்டுச் சந்ததமும் கோவிந்தநாதனை வந்தனஞ் செய்துக்கொண்டு இருக்கவேண்டுமல்லது சிந்தை நைந்து இருக்கலாமோ என்றறைந்து, இரண்டாஞ்சாம ராத்திரியானதால் வீட்டிலே சயனித்துக்கொண்டு விஷ்ணுசங் கீர்த்தனைகளைப் பாடிக்கொண்டு இருந்தார். நாமதேவர் பாடுங் கீர்த்தனங்களைத் தாம்ஸேட்டியும் குணபாயுங்கேட்டுச் சந்தோஷ சாகரத்திற் படிந்தவர்களாகி வெகுநேரஞ் சென்றபின் அயர்ந்து நித்திரை செய்தார்கள். நாமதேவருங் கண்வளர்ந்தார். இவர் கள் இப்படியிருக்கப் பதினாயிரம் வராகன் கொண்டுவந்த பரம பாகவதர் இருவரும் சன்னிதானத்தை யடைந்து, பாண்டுரங்க னைப் பணிந்து, நடந்த வர்த்தமானங்களைப் பகர்ந்து, நாமதே வரை மிகவுந் துதிக்கத் தொடங்கினார்கள். பகவான் சந்தோஷ மடைந்து நாலாஞ் சாமத்தில் அநேகம் பரமபாகவதர்களும், தேவகன்னிகைகளும், பலபல வஸ்துக்களை ஏந்திக்கொண்டு தன்னைச் சூழ்ந்துவரத் தாளமேளங்கள் தாம்தாமென்று முழங்க, முனிவர்கள் அந்தணர்கள் ஆசிகூறப் பகவான் நாமதேவர் வீட் டையடைந்து, 'ஓநாமதேவா!' என்றுகூப்பிட்டார். உடனே நாம தேவர் விழித்து வெளியில்வந்து பார்க்கையில், சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனே சகல சம்ப்ரமங்களுடன் வந்து நிற்பதைக்கண்டு ஆனந்தங்கொண்டு, பகவானைத் துதிக்கப் பகவான் நாமதேவனை அருகிலழைத்து "உனக்குமாத்திரம் என் நிஜரூபந் தோன்றும். மற்றவர்களுக்கெல்லாம் ஓர் வர்த்தகனைப்போல் காணப்படும். இதைக்குறித்து நீ சங்கைகொள்ளாமல் சீக்கிரமாய் ஸ்நானஞ் செய்து ஆடையாபரணங்கள் அணிந்துகொண்டு உனது மாதா பிதாவையும் அணிந்துகொள்ளச்செய்து என்னுடன் இவ்விர தத்தின்மீதில் அமர்ந்து உன்சம்பந்தியின் மனைக்குப் போவோம் வாரும்" என்று அறைந்தார். நாமதேவன்றி மற்றவர்கட்கெல் லாம் ஓர் சௌக்காரைப்போல் தோன்றித் தாம்ஸேட்டி குண பாயியையும் அழைத்துக்கொண்டு பண்டரிபுரம் கிடுகிடென்று நடுநடுங்கத் தோற்கருவிகளைக் கொட்டச் செய்து, துளைக்கருவி களை யூதச்செய்து, கண்டோர் களிப்புறக் கன்னிகைகளை நடனம்

புரியச் செய்து, கேட்டோர் மதிமயங்கப் பதங்கள் பாடச் செய்து, எத்திசையிலும் பரிமளவாசனை பரவச்செய்து, இந்த வர்த்தகன் யாரென்று உன்னுவோர்க்கெல்லாம் நானிருப்பது வைகுந்தபுரம், என்னுடைய நாமம் கேசவசவ்கார், என்றுரைத்துக்கொண்டே நாமதேவர் மாமனார் வீட்டையடைந்து, அங்குள்ள யாவருக்கும் பிரமைகொள்ளும்படி ஆடையாபரணங்களளித்து, அதிதிகட்கும் அந்தணர்க்கும் அளவற்ற சொர்னதானம் வஸ்திரதானம் கோதானங் கொடுத்து, ராஜாபாயிக்கும் அவளையீன்ருளுக்கும் குணுபாயிக்கும் அநேக ஆடையாபரணங்களைப் பூட்டி, நாமதேவர் மைந்தனுகிய விஷ்ணுதாசனுக்கு மயிர் வாங்கிக் காதுகுத்தி நவமணிகளழுத்திய அநேக ஆபரணங்களைச் சூட்டி, சம்பந்தியின் வீடெல்லாம் தங்கமயமாக்கி, அதிதிகட்கும் விருந்தாளிகட்கும் முப்பத்திரண்டுவகை பதார்த்தங்களுடன் அன்னம்படைத்துண்டபின் சகலருக்குஞ் சாந்து சவ்வாதுகளைப் பூசிப் பன்னீரை வீசிப் பூமாலைகளைப் புனைந்து, களிக்கடலில் அமிழச்செய்து சம்பந்திக்கு முத்துமாலை மோகன மாலையைப் பூட்டினுர். பின் "ஓ லட்சாதிபதியே! நான் உமது மருமகனுக்குப் பால்ய சிநேகன். ஆதலால் அவரைப் பார்க்க வந்து அவர் மைந்தனுக்கு இன்று காதுகுத்துஞ் சடங்கெனக் கேட்டுவந்து என்னுலான வரிசைகொண்டுவந்தேன். எனக்கு உண்டானமட்டுந் தந்தேன்; நாமதேவர் மணத்துக்கே வரலாமென் றிருந்தேன்; அப்போது கூடாமையா யிருந்ததால் இப்போது இங்கடைந்தேன்; இனி எனக்கு விடைகொடுத்தனுப்பும்" என்று உத்தரவுபெற்றுக்கொண்டு அவனுல் செய்யப்பட்ட உபசாரணையை யேற்றுக்கொண்டனர். பின்பு தாம்ஷேட்டியையும் நாமதேவரையும்நோக்கி, "இனி நீங்கள் சவுக்கியமாகச் சந்தோஷமாயிருங்கள்; நான் பண்டரிநாதனுடைய சந்திதானத்துக்குப்போய்ப் பாண்டுரங்கனைத் தரிசனஞ் செய்துக்கொண்டு வைகுந்தபுரத்திற்குப் போகிறேன்" என்று அறைந்து விடைபெற்றுக்கொண்டு பட்டணத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டுச் சகலருடன் மாயமாய் மறைந்தார். பின்பு ராஜாபாயின் தந்தை களிசாகரத்தில் அமிழ்ந்தவனுய் தாம்ஷேட்டி நாமதேவர் முதலானவர்களுக்கும் மரியாதைசெய்து தன் வீட்டிலேயே வைத்துக்கொண்டிருந்தார். தாம்ஷேட்டி சிலநாள் சம்பந்தியின் வீட்டிலிருந்து பிறகு தன்வீட்டுக்குச் சகலருடன்சென்று ஆனந்தமாயிருந்தார். நாமதேவர் நாடோறும் பகவானுக்கு நைவேத்திய

முட்டி தானுமுண்டுவருங்காலத்தில், ஒருநாள் பகவான் நாமதேவர் எண்ணமறிந்திருந்தும் அறியாதவர்போல் "அப்பா நாமதேவ்! நான் உனக்குப் பலதரம் சொர்னமளித்ததன்றிக் கூலியாளனுய் வந்து வேதையுடன் பந்தலைக்கட்டினேன்.

அதற்கு இதுவரையில் கூலிகொடுக்காமற் போனதன்றிப் பதிலுபகாரம் ஒன்றுஞ் செய்யாமலிருக்கின்ருய். உனக்கு அழகாயிருக்கின்றதோ?" என்று கேட்டார். நாமதேவர் பகவானைப் பணிந்து, "ஓ என்னுண்டவனே! எல்லாம் உம்முடைய சொத்தாயிருக்க, நான் உமக்கு எந்த வஸ்துவைக்கொடுப்பேன்? அன்றி உம்மைவிட என்னை ஓர் எஜமானுக்கிக் கூலிகேட்கத் தகுமோ? உமக்குள் ஐக்யமாயிருக்கும் என்னை வேருக்கி உபகாரஞ் செய்யென்று கேட்கக்கூடுமோ? நீர்கேட்கும் விகட வினுவுக்கு என்னுல் சமாதானஞ் செய்யக்கூடுமோ? நீர் கேட்பதற்குமுன்னமே என் உடல் பொருள் ஆவியை உமக்குத் தத்தஞ்செய்திருக்க நீர் என்னை வேறுபடுத்தலாமோ? நீர் பேதப்படுத்தினுலும் நான் பேதமாயிருப்பேனே? தேவரீர் இவ்விதமொழி விள்ளலாமோ? என்னைத் தள்ளலாமோ" என்று உருகினர். அப்படி உருகும் போது பகவான் மந்தகாசம்புரிந்து மார்புடன் அணைத்துக்கொண்டு, "ஐயா நாமதேவா! உன் எண்ணம் இப்படியாயிருக்கின்றது; நான் அறிகிலேன்" என்று உரைத்தார். நாமதேவர் "ஓ மாயாவிலாசனே! சுயம்பிரகாசனே! பாலினுள் வெண்ணைபோலவும், எள்ளினுள் எண்ணெய்போலவும், எங்கும் பரிபூரணமா யிருக்கும் நீர் என் எண்ணமாத்திர மறியமாட்டீரோ? தெரியாமற் ருன் கேட்டீரோ? உம்மனுேபாவத்தை பிர்மருத்திராலும் அறிந்துகொள்ளக் கூடாதென்ருல் என்னு லறிந்து கொள்ளக் கூடுமோ? ஓ பரந்தாமா! ரகுராமா! சகஸ்திரநாமா! நீலமேகஸ்யாமா! பக்தவச்சலா! பாண்டுரங்கா" என்று தோத்திரஞ் செய்தார். அப்படி தோத்திரம் செய்யும்போது பகவான் நாமதேவுக்குப் பல ஆசிகள்கூறி நீ ஆனந்த்மா யிருப்பாயாக வென்றறைந்து விக்கிரகரூபமாயிருந்தார். நாமதேவ் பண்டரிநாதன் கோயிலே சொந்தவீடாக இரவும் பகலும் இருந்துகொண்டு சந்தோஷமாய் நாள்கழித்துக் கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்.

பகவான் வரிசைகொண்டுவந்த அத்தியாயம் முற்றிற்று.

---

## பகவான் துணை



ஸ்ரீ நாமதேவர் ஞானேஸ்வரரோடு யாத்திரைபோய் அக்பர் பாதுஷாவால் கொல்லப்பட்ட பசுவின் கன்றை எழுப்பினதும், மார்வாடி தேசத்தில் ஓர் நதிப்பிரவாகத்தை யுண்டாக்கினதும், நாகேஸ்வரர் கோயிலை மேற்குமுகமாகத் திருப்பினதும், ஆகாயத்திலிருந்து கொடிகள்வர நாகேஸ்வரர்கோயிலில் நாட்டியதும், யாத்திரைசெய்து பண்டரிபுரத்தையடைய ஸ்ரீபாண்டுரங்கன் விருந்துசெய்ததும், இஷோபாவினிடம் பிர்மோபதேசம் பெற்றுக்கொண்டதும், பரிசாபாகவத்தாசனை ஆட்கொள்ள அவனிடமிருந்த பரிசவேதியை நதியிலெறிந்து அவன்செய்த பலவந்தத்தால் சந்திரபாகாநதியில் மூழ்கி, அரசன் முதலானவர்களும் களிக்க அளவற்ற பரிசவேதிகளைக் கொடுத்ததும் முதலான அத்தியாயங்கள் பின்வரும் பக்தர்களின் சரித்திரங்கள் தொந்தார்த்தமாய் வரும். அதை எம்மால் வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீநிவாசய்யங்காரால் எழுதியுள்ள ஸ்ரீமகா பக்தவிஜயம் இரண்டாம்பாகத்தில் பரக்கக் காணலாம்.

ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்டநாயகனே! ஆதிமத்யாந்த ரகிதனே! தந்தையின் மடியில் வீற்றிருப்பதற்கு அபாக்கியனான துருவனுக்கு அழியாப்பதமளித்ததுபோலவே ஒரு சரித்திரமே செய்வதற்குத் திறமையில்லா அபாத்திரனாகிய அடியேனுக்கு எழுபது சரித்திரங்களும் அடியேன் செய்யும்படியான வரமளிக்க, உனது தாட்டாமரைகட்கும் உனது வட்சஸ்தலத்தில் வீற்றிருக்கும் சீதேவியின் கமலக்கழல்களுக்கும் உனது பக்தர்களின் பாத பதுமங்களுக்கும் அநேக வந்தனம் செய்யும் தாசானுதாசனாகிய வேங்கடதாசனது மந்தமதியை எந்த விதத்தினாலாவது திருத்தி, உனது சொந்த பக்தர்களது விந்தையான சரித்திரங்களை முழுதும் முடித்தாட்கொள்வது உமது பாரமாகும். ஸ்ரீமந்நாராயணரது திருவடிகளே சரணம்.

நாமதேவர் திருவருட் கழல்களே துணை.

விருத்தம்

வித்தைதந்துபுத்திதந்து விக்கினங்கள்நீக்கும்
வேழமாமுகவனது விமலபதம்வாழ்க
பத்தரதுமனோரதத்துக் கனுகூலமாகும்
பகவான்றன் திருவடிகள் பல்லாண்டுவாழ்க
சத்துவத்தையளித்தடியா ரிச்சைநிறைவேற்றும்
சங்கரான்றன்றூண்மலர்கள் சந்ததமும்வாழ்க
உத்தமர்கள்சரிதைதனை யுவப்புடனேசெய்ய
உதவியாயிருக்குமறு முகனடிகள்வாழ்க.

நாமதேவர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமத் விட்டல தேவாய நம:

## ஐந்தாவது

# ஞானேசுவரர் சரித்திரம்

### பகவான் துதி

விருத்தம்

தவமார் முனிவர் சுரரேத்தஞ் சடையோன் முகநா லுடையோனும்
தவமோங் கிதனை மறந்தோருஞ் சகநா தாவுன் மாயக்கூத்
தெவர்தா னறிந்தார் நானறிய வெந்தா யகநா யகமேநான்
அவமா காதா ளச்சுதனே அடியேனுன்ற னடைக்கலமே.

### ஞானேசுவரர் துதி

வேறு விருத்தம்

மச்சகச்ச வராக வாமன நாரசிங்க
உச்சித பரசுராம வயரிரா கவகோவிந்தா
சொச்சகுண்ட லனுமான் சுவாமியோ ருருவாய்வந்த
சச்சிதா னந்தஞானேசு வரன்சரண் டலைமேற் கொள்வாம்.

### முதலாவது

## ஞானேசுவரர் தந்தையாகிய விடோபாவின்

### யாத்திரை அத்தியாயம்

ஆத்மா மாத்திரமாயிருத்தும்; அணிமா மகத்துவமீயும்; மகிமா தன்னுக்கை கண்டிதமின்றிக் கண்டிப்புள்ளவற்றை யுருவ வல்லமையளிக்கும்; கரிமா இலகுத்துவங் கொடுக்கும்; இலகிமா வேண்டுவனவளிக்கும்; பிராத்தி நிறையுடனிருத்தும்; பிராகாமியம் ஆட்சியுடனிருத்தும்; ஈசத்துவம் எல்லாவற்றையுந் தன்வசமாக்கும்; வசித்துவம் என்னும் அஷ்டசித்தியால் விசிஷ்டமடைந்திருக்கும் உத்தவசித்தர் முதலானவர்களும் சேவல் கூவுமுன் எழுந்து சந்திரபாகா நதியில் ஸ்நானஞ்செய்து ஜபதபங்களை முடித்துக்கொண்டு விரிஞ்சாவதாரனை நாபாஜிசித்தரிடம்போய் அவரை வலம்வந்து பணிந்து, "ஓ மாசிலா மணியே! குருசிகாமணியே! மும்மூர்த்திகளும் ஆதிசத்தியும்

அவதாரஞ் செய்த சரிதையை தாங்கள் கேட்டு இன்பமடையத் தாங்கள் அன்புடன் அனுக்கிரகம் புரியுமையா" என்று துதித் தார்கள். அப்போது பீபாஜிசித்தரின் நேசராகிய நாபாஜிசித்தர் சந்தோஷசித்தராய் உத்தவசித்தர் முதலானவர்களை நோக்கி, "ஓ யோகீசுவரர்களே! பக்தர்கள் அல்லது ஜீவன்முக்தர்கள் திரு விளையாடல்களாகிய திவ்யசரித்திரங்களை அன்புடன் சொல்பவர் களும், இன்புடன் கேட்பவர்களும், சீவகாருண்யம், சாந்தம், சம பாவம், சற்சங்கம், உபரதி, சகுணத்தியானம், நிர்குணத்தியானம், பிரமக்ஞானம், அகண்டானந்த மோனமுமடைவதன்றி லேசில் சித்திபுத்திகளுஞ் சித்திக்கப்பெற்று, மூத்திமார்க்கங்கற்றுத் தாட் சிகளற்று மாட்சிமையுற்றுப்பிர்மானந்தமடைவார்கள். ஆதலால் பக்தமுக்தர் சரிதங்களுக்கு இணையான பொருள் ஒன்று உண்டென்று உரைத்தல் கூடாது. எப்படியென்றால்? இந் தப் பக்தவிஜயமானது அஞ்ஞானவிருளை நீக்கி, மெய்ஞ்ஞான தேஜஸைக் கொடுத்தலால் ஜகசாட்சியனென்றும், சாந்தமென் னுஞ் சீதளத்தை நிறைத்துத் துவேஷமென்னும் அக்கினி யைத் தணித்தலால் தண்சுடரென்றும், நிஷ்களங்கமான மனதைக் கெடுத்து அரிஷ்டவர்க்கங்களைத் தடுத்தலால் ஆரிய னென்றும், அறிவில்லாதவர்க்கு மெய்யறிவுண்டாக்கலால் இர ணியகர்ப்பனென்றும், பாபகர்மங்களில் விழாமற் றடுத்தளித்த லால் வனமாலியென்றும், நானெனதென்னும் அகங்காரக்கிரந் தியை நாசஞ்செய்வதால் நிடலாட்சனென்றும், பகிர்முக விஷ யாதி போகங்களில் அமிழ்ந்து மயக்கமுற்றிருக்கும் ஜீவனை அந் தர்முக பேரின்பானுபூதியிற் சொக்கி யிருக்கும்படியாய்ச் செய்த லால் மயேஸனென்றும், கனவிலுஞ் சிற்றின்பமுன்னுது பேரின்பாமிர்த மூட்டுதலால் சதாசிவனென்றும், நான் நீ எமது உமது என்னும் விகற்பத்தை நீத்து நிர்ச்சலமா யிருத்துவதால் பரப்பிரம்மமென்றும் சொல்லலாம். அன்றி இந்த ஞானேசு வரர் சரித்திரத்தைச் சொல்பவர் கேட்பவர்க்குற்ற பாக்கியத்தி னளவையே என்னுலுரைக்கக் கூடியதல்லவென்றால் ஞானேசு வரர் சரித்திரத்தின் மாட்சிமையை என்னால் உரைக்கப்போ மோ? ஓ சித்தர்களே! இச்சரித்திரத்தை அத்தியந்த பக்தி யோடும் கேட்பீராக" என்று எச்சரித்துப் பகவான் திவ்விய திரு நாமங்களை யுச்சரித்துச் சொல்லத் தொடங்கினர்.

எப்படியென்றால் ஓ புனிதர்களே! வேதாதிகள் புகழும் கோதாவரி நதிக்கணித்தாகிய மாபோதகர் பரவும் ஆபேகா

மென்னும் ஊரில் மாவிந்தநாதனைத் துதிக்கும் கோவிந்த பண்டிதனென்பவர் சொரூப விசாரணை செய்த நிரூபாயென்னும் மனைவியோடு சமதமாதிகளை விடாமல் சஞ்சலத்துக்குட்படாமல் கர்ணிகப்பிராமணராதலால் இராஜனிடங் கணக்கெழுதும் உத்தியோகத்தி லிருந்துகொண்டு, அன்னதானஞ் செய்துகொண்டு, லோபிகளைப்போன்ற பாபிகளில்லையெனவிண்டு, உத்தமர்க்கன்புடன் தொண்டுசெய்வதே விரதமாகக்கொண்டு, தனக்கு எல்லாச் சம்பத்திருந்தும் புத்திர சம்பத்தில்லாக் குறையால் தானும் மனைவியும் தனது குலதெய்வமாகிய பகவானைத் தோத்திரஞ் செய்துகொண்டு வருகிற காலத்தில், கடவுளருளால் ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அக்காண்முளையை அன்பாய்ப் பாராட்டி இன்பாய்ச் சீராட்டி விடோபாவைத் தியானஞ்செய்ததினால் உற்பவித்த மைந்தனுக்கு விடோபாவென்று நாமதேயமிட்டு வயது முதிர்ந்தபின் உபநயனஞ்செய்து சகல வித்தியாப்பியாசமுஞ் செய்வித்துப் பால்யதசை நீங்கிக் கௌமாரதசையடைந்ததே கலியாணஞ் செய்ய யோசிக்கும் தாய் தந்தையரை விடோபா வணங்கி, "ஓ என் தாய் தந்தையே! விவாகஞ்செய்ய யோசித்ததை நிறுத்தி யான் யாத்திரைசெய்து வரும்படியாகக் கிருபை கூறுங்கள்" என்று தோத்திரஞ் செய்தார். அன்னையும் அப்பனும் சிந்தாக்கிராந்தர்களாய் "ஓ எங்களருமைப் பாலனே! சொல்லுவதற்கு அரியசீலனே! சம்சாரவிச்சையில்லாதவர்களும் தந்தைதாய் இல்லாதவர்களும் செய்யத்தகாத பாவஞ் செய்தவர்களும் சஞ்சலமனதுடையவர்களும் அவசியம் செய்யவேண்டிய யாத்திரையை மிகவுஞ் சிறியனாகிய நீ இச்சித்தது வெகு ஆச்சரியம். தாய் தந்தையராகிய எங்களைப் பிரிந்துபோக உனக்குத் துணிவு வந்ததோ? யாதுகாரணத்தால் இங்கிருக்க உன் மனம் நொந்ததோ? சவுக்கியமாய் இருந்துகொண்டு மணஞ்செய்துகொண்டு நல்லறமான இல்லறத்தில் இருந்துகொண்டு விருத்தரான எங்களைப் புனிதராக்கும் அப்பா" என்று பகர்ந்தார்கள். அவ்வாறு பகர்ந்த தந்தை தாயைப்பணிந்து "ஓ மாதாபிதாவே! இவ்வாக்கையோ தாங்கமென்றும், க்ஷணபங்குரமென்றும், செல்வமோ நீர்மேலெழுத்தென்றும் சுவரின்மேற் சுண்ணமென்றும், இளமையோ நீர்மேற் குமிழியென்றும், சூரியனைமறைத்த மேகமென்றும், ஆயுளோ வில்நாணியைவிட்ட அம்பென்றும், விசையாயோடுங் காற்றென்றும், பிராணனோ விருட்சமேலுற்ற பட்சியென்றும், வெட்டவெளியில் வைத்த விளக்கென்றும், மனதோ

சஞ்சல நிறைந்த குடமென்றும், சன்மசாகரத்தில் அமிழ்த்தும் வடமென்றும், விவேகமோ மின்மினியின் ஒளியென்றும், வெளியிலுறு வளியென்றும், பற்பலதரம் ஒருவர்க்கொருவர் உரைத்துக்கொண்டிருக்கும் நீங்கள் சம்சாரியானபின் யாத்திரைபோகலாமென்று எனக்கு உரைத்தலழகோ? அமாவாசை நிசியினிருட்டு ஓர் திரணமாய் அதிலும் கணிதவிசாலமான அவிவேகவிருளாற் சூழப்பட்டுத் தொன்றுதொட்டுப் பவசாகரத்துட்பட்டு மெய்ஞ்ஞான நிலைகெட்டுத் தட்டுகெட்டுத் தடுமாறிக்கொண்டிருக்கும் எழ்மையான கோழையேன் சம்சாரத்துக் குட்படுவேனே? தையலரையுந் தொடுவேனே? அந்தோ! இல்லறமென்னுந் தொல்லையி லகப்பட்டோர்க்கு அல்லலன்றி சொல்லச் சுகமுண்டோ? ஓ அன்புள்ள அன்னையே! இன்புடன் வளர்த்த எந்தையே! சம்சாரமென்னும் சாகரத்தில் மூழ்கினவன் சுகதுக்கமென்னுந் திரைகளால் அலக்கணுற்று அழிவதேயல்லது மோட்சமடையுஞ் சூட்சுமந் தெரிவிக்கும் சாட்சி ஸ்வரூபமாய் இருக்கும் மாட்சிமை பொருந்திய குருஸ்வாமிகளுக்கு ஏவல் செய்யக்கூடுமா? இது கூடினும் ஞானசாஸ்திரங்களைச் சந்தேகமறத் தெளியக்கூடுமா? இதுவந்தாலும் தெளிந்தபடி நிர்ச்சலனமாய் இருக்கக்கூடுமா? இருந்தாலும் ஆனந்தாவேசமேலிட்டுத் தன்னை மறக்கும் நனவிற் சுழுப்தி நிலையையடையக்கூடுமா? இதை யடைந்தால் கிரகஸ்தாசிரமத்துக்கு உதவமாட்டுவானே? இவ்வளவு அரிதான சகஜானந்தானுபூதியை யடைந்தவர்போல் பேசும் வாசாக்ஞானிகள் அடையும் பயன் வார்த்தை மாத்திரமன்றிப் பரமார்த்தத்தை யடையக் கூடுமோ வென்கிற பல வார்த்தைகளாடினர். ஓ மாதாபிதாக்களே! வைராக்யமில்லாதவனுடைய சாஸ்திர விசாரணையும், ஞானமில்லாதவனுடைய விவேகமும், விதவஸ்திரீயின் எவ்வர்ணமும், பலமில்லாதவன் தேகபுஷ்டியும், பதிவிரதத்தன்மையில்லாதவளது அலங்காரமும், சற்கர்மஞ்செய்யாமற் கழியும் ஆயுள் நாளும், விபசாரியிருக்கும் ஆசாரமும், பக்தியில்லாத பூசையும், குருநிந்தகன் செய்யும் தியானமும், சஞ்சலமனதுடையவன் செய்யுஞ் சபமும், பிரயோஜன மில்லாததுபோல எவ்வர்ன காலத்தில் மோக்ஷமார்க்கத்தைத் தேடாத புருஷனும் பயனடையான். ஆதலால், எனக்கு வதுவையாகுமுன்னமே பலதேசங்களிற் றிரிந்து ஜலஸ்தல பரிசன தரிசனஞ்செய்து உத்தமர்களிடம் ஞானசாஸ்திரார்த்தங்கள் அறிந்துகொண்டு இரண்

டோராண்டில் வந்து உங்கள் இஷ்டப்படி நடந்துக்கொள்ளுகிறேன்" என்று உரைத்தார். அப்படி வணங்குந் தனயனைத் தாயுந் தந்தையும் பல ஆசிகள் கூறி, ஓ எங்களரும்பாலனே! விரதசீலனே! சன்மார்க்கத்திற் செல்பவனைத் தடுப்பவர்க்கும் ஈவதை விலக்குபவர்க்கும் சொல்லொணுத் துன்புண்டு என்று வேதம் முறையிடுகின்றது. ஆதலால் யாத்திரைபோகும் உன்னை நாங்கள் தடுக்கமாட்டோம். ஆனுல் ஓராண்டுக்குள் யாத்திரைசெய்து உன் அழகானமுகத்தை யாங்கள் கண்டு களிப்படையும்படியாக வாக்களித்துச் சுகமாய்ப்போய் வாருமப்பா" என்று அறைந்தார்கள்.

அம்மாத்திரத்தில் விடோபா சந்தோஷவாரியில் மூழ்கினவராய் தேவரீர்களுரைத்த வண்ணமே ஓராண்டுக்குள் வருகிறேன் என்றறைந்து விடைபெற்றுக்கொண்டு, துவாரகா-மச்சதீர்த்தம்-பிண்டாரகம்-சுதாம்புரி - ருக்குமணியம்மாளுக்கு வதுவையான ஸ்தானமாகிய மூலமாதவம் - ஸ்ரீகிருஷ்ணர் சமாப்த விடமாகிய பாலுகா தீர்த்தம் - பிரபாஸதீர்த்தம் - முசுகுந்தரிஷி - அனந்தர் செய்த ஸ்தானமாகிய சோரதி-சோமநாதம்-தவளபுரி-சப்த சிருங்கி-அருணு-வருணு-மமலேசுவரம்-திரியம்பகநாதம் - குஜாவர்த்தகம் - கங்கா துவாரம் - பிர்மகிரிபர்வதம்-பீமாசங்கரம் முதலான ஸ்தலங்களுக்குச்சென்று சக்ரதீர்த்தத்துக்குவந்து ஸ்நானஞ் செய்து, ஜபதபங்களை முடித்துக்கொண்டு அத்தீர்த்தத்துக்குச் சமீபமாகிய அலங்காவதியிற் செல்லுகையில் அவ்வூரிலிருக்கும் சீதோபந்து என்னும் மறையோன் நாடோறும் சக்ர தீர்த்தத்திற்குப்போய் ஸ்நானஞ் செய்து கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, அங்குவந்த யாத்திரைபிராமணர்கள் எத்தனைபேராணுலும் அவர்களை அழைத்துக்கொண்டுபோய் அன்னமூண்பித்து அனுப்பும் வழக்கப்படி, அன்றும் பூசுரரைத் தேடிக் காணுமல் வாடி, விடோபாவைக்கண்டு ஆனந்தங்கொண்டு அழகுசுந்தர அடக்க ஒடுக்கத்துக்குவியந்து, அவரைத்தன் இல்லத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் அன்னமூண்பித்து வேத ரகசியங்களைப் பேசிக்கொண்டு ஆனந்தமாயிருந்தார்கள்.

கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர்பின்னுஞ் சொல்லுவார். கேளுஞ்சித்தர்களே! இப்பால் சீதோபந்துவிடோபாவைநோக்கி, "ஓ பரமபக்தனே! எளியேன்மேற் றயைசெய்து இரண்டுநாளிங்கிருந்து போமப்பா" என்று தன்வீட்டிலே நித்திரை செய்யும்படியாயுரைத்து வெகுநேரம் வேதாந்த வார்த்தை

களாடித் தெளிந்தவனெனக் கொண்டாடி நடுராத்திரியானதால் அனந்தல் செய்யும்படியாய்ப் புகன்று தானுங் கண்வளர்ந்தார். அப்போது பகவான் சீதோபந்து சொர்ப்பனத்தில் வந்து, "ஓ உத்தமனே! இப்போது உன் அருகில் படுத்திருக்கும் விடோபாவுக்கு உன்புத்திரியை நாளையத்தினமே மன்றல்செய்து மகிழ்ச்சியடையக் கடவாய்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தார். உடனேசீதோபந்துவிழித்து, "இதென்னவிந்தையாயிருக்கிறது. இப்புண்ணியனைப் போன்றவனுக்கே நமது கன்னிகையை மணஞ்செய்ய வேண்டுமென்று நினைத்த நினைவே இப்படி கனவாய் வந்ததோ? அல்லது பகவான் சங்கல்பமே இப்படி இருக்கின்றதோ?" எனப் பலவிதங்களா யோசித்துக்கொண்டு இருந்தார். மூன்றாம்சாமத்தின் இறுதியில் விடோபாவையெழுப்பி, "அப்பா! உனக்கு என்னருங்கன்னிகையைக்கொடுத்து மன்றல் செய்யும்படியாய்ப் பகவான் என்கனவில் வந்து உரைத்தார்.

ஆதலால் பகவான் வாக்கியத்தைத் தள்ளாமல் யாதொரு மொழியும் விள்ளாமல் என் புதல்வியைக் கலியாணஞ்செய்துக் கொண்டு களிப்புடனிருப்பாயாக" என்றார். அவ்வசனத்தைக் கேட்ட விடோபா திடுக்கிட்டு, இதென்ன கிணறுவெட்டப்போய் பூதம் புறப்பட்டாற்போலவும், பிள்ளை வரத்துக்குப்போய்ப் புருஷனைப் பறிகொடுத்தாற்போலவு மிருக்கின்றது. தந்தை சொன் மிக்க மந்திரமில்லையென்று அறிந்திருந்தும், தந்தை வாக்கியத்தைத்தள்ளிப் பலதேசங்களிற் றிரிந்துவந்து, இந்தப் பிராமணர் உரைத்தபடி பந்தத்தில் நுழையலாகுமா?" என்றுணங்கிப் பிணங்கிச் சீதோபந்துவை வணங்கி இணங்கி, "ஓ ஐயா! என் குலம் கோத்திரம் அறியாதவராயிருந்தும், இப்படிப்பேசலாமா? முன்னம் கணிகையரிருவர் சடுரசத்தை கலைக்கோட்டு மகாரிஷி கூட்டிக் காட்டிடை விடுக்கவும் நாட்டையடுக்கவும் செய்ய, அந்நாட்டின் ஏந்தல் தன் கன்னியரிருவரை அவருக்கு மணம்புரியச் செய்வித்ததுபோல எனக்கு அன்பாய் அன்னமூட்டி இன்பத்தைக்காட்டி, இகபோகத்திலமிழ்த்த யோசித்தீர். இதற்காகத் தானா இப்படிவிசுவாசித்தீர்? இனிஇவ்வார்த்தையை என்னுடன் சொல்லாமலிருக்க மிகவும் உம்மை வேண்டுகிறேன்" என்றார். சீதோபந்து விடோபாவினிடம் நயவார்த்தைகளாடிக் கோத்திர முதலானதும் விசாரித்துத் தன் இனத்திற் சேர்ந்தவனாயிருக்கக் களிப்புற்று, "அப்பா விடோபா! நீயே என் புதல்விக்கு உகந்த மணாளன். இப்படி கூட்டிவைத்ததே குருகடாட்சமா யிருக்கின்

றது" என்ருர். பின்பு தன் மனைவியை விளித்து, "ஓபெண்ணே! நமது மருமகனைக் கண்டாயா? ஆனந்தங்கொண்டாயா" என்று களிப்பின் மிகுதியால் பல வார்த்தைகளாடினர். அதுகேட்ட விடோபா இதென்ன திருடப்போய் குருடனானதுபோலவும், பாமபக்தனாகப் போய்ப் பைசாசத்தாற் பீடிக்கப்பட்டதுபோலவு மிருக்கின்றது. "ஓ ஐயா பிராமணோத்தமரே! நான் சன்னியாசியாயிருக்க எனக்கு மணஞ்செய்ய நினைக்கலாமா? ஒருவர் விரதத்தைக்கெடுக்கலாமா? எடுக்காப் பாரமெடுக்கலாமா? வேண்டாமென்பவற்குப் பெண்கொடுக்கலாமா? ஒருவர் யாத்திரையைத் தடுக்கலாமா?" என்ருர். அதற்குச் சிதோபந்து, "அப்பா மருமகனே! அழகானமுகனே! இராஜன்வார்த்தையைத்தடுத்தாலும், மாதாபிதாக்கள் வார்த்தையைத் தடுக்கலாகாது. மாதாபிதாக்கள் வாக்கைத் தடுத்தாலும் குருவாக்கைத் தடுக்கலாகாது. ஆரியர் வாக்கைத் தடுத்தாலும் தெய்வவாக்கியத்தைத் தடுக்கலாகாது. ஆதலால், தெய்வவாக்கின்படிசெய்ய நினைத்த என்மொழியைத் தடுக்காமல் வியாகுலத்தைக்கொடுக்காமல் இன்றைக்கே விவாகஞ்செய்துக்கொண்டு நீரும் உமது மனைவியும் இஷ்டமான ஸ்தலஜல தரிசனபரிசனத்துக்குப் போகலாம்; சீக்கிரம் எழுந்திரும்; ஸ்நானஞ்செய்யும்; திவ்யமான வஸ்திராபரணங்க ளணிந்துக்கொள்ளும்" என்ருர். விடோபா இதென்ன குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்டதுபோலவும், கும்பிடத்தகுந்த குருவோடு வம்புசெய்வதுபோலவு மிருக்கின்றது என்றுன்னிச் சிதோபந்துவைப் பார்த்து, "ஓ ஐயா! உமக்கு சொற்பனஞ் சாதித்த பகவான் என் கனவில் வந்து உரைக்கமாட்டாரா? திவ்விய தரிசனந் தாமாட்டாரா?" என்ருர். சிதோபந்து "அகத்தியம் பகவான் உன்கனவிலும் வந்து உரைப்பார். ஆதலால் இன்று இராத்திரிக்கு இங்கேயே நித்திரைசெய்யும்" என்று உரைத்துச் சூரியோதயமானதே சக்கர தீர்த்தத்திற்சென்றுஸ்நானஞ்செய்து ஜெபதபங்களை முடித்துக்கொண்டு வீட்டை யடைந்துபோஜனஞ்செய்து நல்லவார்த்தைகளாடிப் பகவான் கீர்த்தனைகளைப்பாடி ஜாமராத்திரியானபின்கண்வளர்ந்தார்கள். இரண்டாஞ்சாமத்தில்பகவான் விடோபாவின் கனவிலடைந்து, "அப்பா விடோபா! இந்தச் சிதோபந்து புதல்வியாகிய பதிவிரதைகளில் முதல்வியைவிவாகஞ்செய்துக்கொண்டு சுகமாயிரு" என்று அறைந்துமறைந்தார். உடனே விடோபா விழித்து, "ஓஓ! மோசம்வந்தது. நமதுஜென்மாயுசுக்குமணஞ்செய்யலாகாதுஎன்கிற

வைராக்கியத்தைக் கடவுளே கெடுப்பதுபோற் காண்கிறது. அன்றித் தாய்தந்தையாறியாமல் நாமே மன்றல்செய்துக்கொண்டால் மாதாபிதாவின் மனம்நோகும். இதனுல் நரகத்தை யடைதற்கு ஏதுவாகும். அல்லாமல் சொர்க்கத்திற் சென்றவன் நரகத்தையும், சுகத்திலிருப்பவன் துக்கத்தையும், அமிர்தம் புசிப்பவன் விஷத்தையும், இராஜரீகஞ்செய்பவன் யாசிக்கவும், சமபாவமுள்ளவன் ஆசிரியரை நிந்திக்கவும், நித்திய வஸ்துவையடைந்தவன் அனித்தியப்பொருளையும், நரஜென்மத்தினருமையறிந்தவன் வீணுள் கழிக்கவும், பரிமளாதிகளைப் பூசிக்கொள்பவன் மலத்தையணிந்துக்கொள்ளவும், சமாதிநிஷ்டாசாதனஞ் செய்ய விருப்பமுள்ளவன் சஞ்சல வியாபாரத்திற் குட்படவும் வாஞ்சிப்பானு? வாஞ்சியான். அதுபோலவே சந்நியாசியாக வெண்ணங்கொண்ட நாம்சமுசாரத்துக்கு உட்படலாமா? மரணபரியந்தம் பேய்கொண்டாலும் கொள்ளலாம் பெண் கொள்ளலாகாது என்றுபழமொழி யிருப்பதன்றிச் சர்ப்பத்தால் அசுணப்பட்சியும், ஸ்பரிசத்தால் யானையும், ரூபத்தால் விட்டிற்பூச்சியும், ரசத்தால் மீனும், கந்தத்தால் வண்டும், ஒவ்வொரு விஷயமிருந்தே மரணமடைகிறதென்றும், இந்த ஐந்துவிஷயங்களுங் கூடி ஒருருவாய்வந்து மயக்கந்தந்து மாந்தரை வாட்டும் மாதர்கள் தோதகத்து ளகப்பட்டவன் விடுபடுவது ஜென்மாந்திரங்களிலுங் கூடாதென்றும் சாஸ்திரங்களில் முறையிடுகின்றது.

அப்பப்பா! இந்தத் தப்பிதத்துக்கு உட்பட்டபின் தனம் வேண்டும், கனம்வேண்டும், மனைவேண்டும், மக்கள்வேண்டும், பந்துக்கள் வேண்டும். பலஜெந்துக்கள் வேண்டும், இதுதெரிந்தும் தீயில் விழுவேனு? இகத்தோரைத் தொழுவேனு?" என்று பலபலவிதங்களாயோசித்து, இனி பொழுது விடியுமாயின் விபரீதம்விளையும் என்று கள்ளனைப்போலவும், விபசாரியைப்போலவும் மெல்லநடந்து தெருவீதியிற் போனுர். அத்தருவாயில் சீதோபந்து புத்திரியாகிய ருக்மாபாயி நல்ல விவேகஞான புருஷனையே மணம்புரிய வேண்டுமென்று அநேகநாளாய்ப் பார்க்கவியை ஸ்தோத்திரஞ் செய்துக்கொண்டிருந்தபடியே தனக்கு மணவாளன் கிடைத்ததற்கு நாம்செய்த பாக்கியமே பாக்கியம். நாமடைந்த சிலாக்கியமேசிலாக்கியம். இனிஎப்போதுபொழுது விடியும்? விவாகம் எப்போது முடியும்? இவருடன் எப்போது பேசுவோம்? சந்தனுதிகளை எப்போது பூசுவோம்? என்கிற எண்

ணங்களாற் பீடிக்கப்பட்டுத் துயில்வாராமல் விழித்துக்கொண் டிருந்து விடோபா சந்தடியின்றி வெளியிற் போகிறதைக்கண்டு சந்தேகங்கொண்டு இவருடைய மனைவியென்று நம்மை நமது தாய் தந்தை எப்போது தீர்ப்பு செய்தார்களோ அப்போதே இவருக்கு நாம் மனைவியானோம். அப்படியிருக்க இவர் இப்படி நம்மை மோசஞ்செய்து துவேஷங்கொண்டு போகிறதுபோற் காண்கின்றது. சன்யாசி பயணம் திண்ணைவிட்டாலாச்சுது என் கிறது பொய்மொழியா? நாம் செய்த புண்ணிய பலத்தாற் கிடைத்த புருஷோத்தமனை யிழத்த லறிவீனமல்லவா? பகவான் நமது தந்தையின் கனவிலுரைத்தவண்ணம் இவருடைய சொற் பனத்திலுஞ் சாதித்திருப்பார். இதனாலேயே இவர் மனம் வேறு பட்டுப் போகின்றார். ஒருவேளை பகவான் இவர் சொற்பனத்தில் வந்து உரைக்காவிட்டாலும் இவர் மணம் வேண்டாமென்று மறுத்தாலும், இவரே பதி; நானே சதியென்று எப்போது எண் ணங்கொண்டேனோ அப்போதே என் கற்பழிந்தது. யாரால் கற்பழிவு வந்ததோ அவரே கணவனாகும். கணவனுக்கு ஐக்ய மான காந்தை கணவனைப்பிரிந்திருப்பது முண்டாவென்கிற பல வெண்ணங்களோடும் அவர்பின் தொடர்ந்து கற்புள்ள பெண் களுக்குரிய நாணம் மடம் முதலான குணங்களாற் சிறப்புற் றோங்கிய உத்தமியாதலால் விடோபாவை மறிப்பதற்கும் கூப் பிடுவதற்குங்கூடாமல் அதிசீக்கிரமாயோடி அவரைப் பலதரஞ் சூழ்ந்து பாதங்களில் வீழ்ந்து, "ஓ சுவாமி! எங்கே கள்ளனைப் போல் மெள்ளப்போகிறீர்? இங்கிருக்க உமக்கு இஷ்டமில்லா திருந்தால் தாங்கள் நாடிய தேசத்துக்கு நாமிருவரும் போக லாம். என் தந்தையிடம் உத்திரவு பெற்றுக் கொள்ளுமையா" என்றாள். விடோபா ருக்மாபாயின் சௌந்தரியத்தைக் கண்டு பிரமைகொண்டு "நீ யார்?" என்று வினவினார். ருக்குமாபாயி "ஓ சுவாமி! என்னையே உமக்கு வதுவைசெய்ய என் பிதா பேசி உம்மைத் தன்னருகில் சயனிக்கச்செய்து தன்னைமறந்து தூங்கு கின்றார். அவரறியாமல் நீர்போவதறிந்து உம்மைமறுத்து வீட் டுக்கு அழைத்துக்கொண்டு போகவந்தேன். கிருபை கூர்ந்து மனைக்குள்வாரும் சுவாமி" என்றாள். அவ்வசனத்தைக் கேட்ட விடோபா திடுக்கிட்டு ஸ்மரணைகெட்டு அறிவழிந்து உடனே தெளிந்து, "ஓ மாதரசே! தந்தைதாய் ஒருவனுக்கு விவாகஞ் செய்யும் பரியந்தம் மாதா பிதாவே தெய்வமென்றும், தனித்து ஓர் புருஷரோடு உரையாடாம லிருப்பதே விரதமென்றும்

அயல்வீடு அறியாமலிருப்பதே அழகென்றும், கற்பைக்காத் தலே தபசென்றும் பெண்களுக்கு லட்சணஞ்சொல்வார்கள்.

அப்படியிருக்க, நீ இப்படிசெய்யலாமா? வழிப்போக்கனாகிய என்னை இந்த நடுராத்திரியில் தனித்து வந்து மறுக்கலாமா? இப்படி வேசையுஞ் செய்யாள். இப்பேர்க்கொத்த அவலட்சண குணமுடைய உன்னை யான் விவாகஞ் செய்துக்கொண்டபின் நரகடைய வேறு ஓர் பாவமுஞ் செய்யவேண்டுமோ? எப்போது தனித்து ஒரு புருஷனுடன் பேசத்துணிந்தாளோ அப்போதே விபசாரியானார்களென்று பெரியோர்கள் உரைத்திருக்கின்றார் கள். அந்தக் குணமும் உன்னிடத்திற் பிரத்தியட்சமாய்க் கண்ட பின் உன்முகத்திலும் விழிக்கலாமா? இப்பேர்க்கொத்த அபசாரி களின் முகத்தில் விழித்தலன்றி வேறு ஓர் தோஷமுஞ் செய்ய வேண்டுமோ? சீசீ போபோ” என்கிற கடினவார்த்தைகளுரைத் துப்போனார். ருக்மாபாயி விடோபாவை மறுத்துப் பாதங்களிற் பணிந்து, “ஓ என் பிராணநாயகா! பிராண சிநேகா! எப்போது என் தாய்தந்தை உமக்கு விவாகஞ்செய்ய நினைத்து உம்முடன் பேசினார்களோ எப்போது பகவான் கனவில் வந்து உரைத் தாரோ எப்போது நான் உம்மைக் கணவனென்று பாவித் தேனோ அப்போதே விவாகமாய் விட்டது. எல்லாவற்றிற்கும் மனமே காரணமன்றி இம்மணம் மணமாகுமா? நாலுபேரறிய விவாகஞ்செய்தாற்றானு சதிபுருஷர்கள். உமக்கு என்தாய் தந்தை யிடஞ் சொல்லிப்போக மனமில்லாவிட்டாலும் நான் இனி உம்மைப் பிரிந்திருப்பதில்லை; இது சத்தியமாகும்; ஒருவேளை நீர் பலவந்தமாயென்னைத் தள்ளிப்போனால் என்னுயிரை உமக்கு அர்ப்பணஞ்செய்வேன். இதற்குத் தடையில்லை என்றாள். அவ் வாக்கியங்கேட்ட விடோபா ஆ ஆண்டவனே! இதென்ன வல் லடிவழக்காயிருக்கின்றது. ஓ பெண்ணே! உலகத்தில் அனேக ருக்குப் பெண்கொடுக்கத் தாய் தந்தையர் யோசிப்பார்கள் பலரை விசுவாசிப்பார்கள். அவர்களுக்கெல்லாம் அப்பெண் மனைவியா வாளா? நிச்சயதாம்பூல முதலான சடங்குகள் நடந்தும் விவாகந் தவிர்ந்துபோகிறதில்லையா? ஈது உனக்குத் தெரியாத தொல் லையா? நீ தெரியாமையினால் இப்படிப் பேசினை? இதை யாராவது அறிந்தால் நிந்தைக் கிடமாகும். சீக்கிரம் வீட்டுக்குப்போய்ச் சந்தோஷமாயிரு. நான் நாடோடி மனிதன். அன்றி எனக்குச் சம்சாரவிச்சையில்லை. ஸ்திரீகள் கடக்கக்கூடாது தன்னெல்லை.

சன்யாசியான என்னை மணஞ்செய்யவிரும்பலாமா? நீபயித்தியம் பிடித்தவள்போற் காண்கின்றது" என்று அறைந்து போனர். ருக்மாபாயி மறுத்து "ஓ சுவாமி! கற்புள்ளவள் ஒருவனைக்கணவனெனத் தீர்மானித்தபின் அவனையன்றி மற்றொரு புருஷனைக் கனவில் நினைத்தாலும் அவள் கழுதையேயாம். அவள்முகத்தில் விழித்தால் தாங்கள் உரைத்தபடி பாபம்வந்து நேரிடும். ஆதலால் நீரே பதியென்றும், நான் உம்முடைய சதியென்றும் தீர்மானித்தபின் உம்மைப் பிரிய எனக்கு நீதியா? உம்மையன்றி வேறு புருஷனைக் கருத எனக்கென்னகொடிய விதியா? இப்படி நினைக்க எனக்குக் கெட்டமதியா? நாலுபேரறிந்தால் நிந்தைக்கிடமாகுமென்றீரே? யாரும் அறியாமற்போய்விடலாம். வாரும் சுவாமி" என்ருள். அதுகேட்டு விடோபா "ஓ அரிவையே! விவேகமில்லாத தெரிவையே! நீசொல்லும் வார்த்தை உனக்குத் துன்பம்வந்தால் வாட்டும்; எனக்கின்பம் வந்தால் போதுமென்கிறதுபோ லிருக்கின்றது. நல்ல காரியம். தன் யோசனைப்படி நடப்பது சுகம், குருபுத்தி விசேஷசுகம், பாபுத்தி விஞசகாலம், ஸ்திரீபுத்தி பிரளயம் என்கிற பழமொழியை உன்பால் சோதித்தேன். யாரும் அறியாமல் நீ என்னுடன் வருகிறதென்ன? நான் அழைத்துக்கொண்டு போகிறதென்ன? 'எண்ணறக் கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தி' என்கிறது சரியாயிருக்கின்றது. அருமையாகப் பெற்று வளர்த்த தாய் தந்தையரை வஞ்சித்து வழிப்போக்கனுகிய என்னுடன் வாத்துணிந்த கொடிய பாதகியாகிய உன்னுடன் பேசக்கூடாது. இனி என்முன் நிற்காதே. என்னை மறுக்காதே. மாதாபிதாக்களை வெறுக்காதே. இங்கிருக்க என்மனம் பொறுக்காதே" என்று சொல்லினர். ருக்மாபாயி "ஓ ஸ்வாமி! நீர் பதியென்றும், நான் சதியென்றும் கடவுள் முன்னமே அமைத்திருந்த காரணத்தாலேயே என் தாதையின் சொற்பனத்தில்வந்து உரைத்தார். உம்முடைய கனவிலும் வந்து உரைத்திருப்பார். தெய்வவாக்குக்கும் மேலானவாக்கும் ஒன்றுண்டா? தெய்வவாக்கைத் தள்ளுவார்களும் உண்டா? தெய்வவாக்குத் தப்புவதுமுண்டா? தப்புதற்குத் தெய்வவாக்கு இரண்டா? தெய்வவாக்கைத் தள்ளினேர்க்கு இன்பமுண்டா? நீர் இப்படி செய்வது என்னைச் சோதிக்க வெண்ணங்கொண்டா? ஓ என் பிராணநாதரே! மெய்ஞ்ஞான போதரே! தெய்வவாக்கின்படி நடக்கும். என்னை நிந்தித்தாலும் துன்மார்க்கியென்று சிந்தித்தாலும் எனக்குச் சந்தோ

ஷமேயாம். ஏனென்பீரோ? உம்முடைய சொத்தை நீர் எப்படி எண்ணினாலும் துன்பமுறப் பண்ணினாலும் வாயில் வந்தபடி வைதாலும் அல்லது சித்திரவதை செய்தாலும் செய்யலாம்" என்றார். விடோபா ஓ ஓ! இதென்ன பிராமணன் யாத்திரை போய்ச் சூத்திரனானதுபோல் இருக்கின்றது. நாம் வந்த எத்தனமென்ன? பகவான்செய்த மாயமென்ன? இனி இவளைச் சந்தோஷ வார்த்தைகளால் நிறுத்தி, நமது வைராக்கியத்தை விருத்திசெய்யலாமென்று உன்னி "ஓ கோதையே விவேகமில்லாப் பேதையே! உன்னுடைய சௌந்தரியத்துக்கு உகந்த மணாளன் நானாகுமா? உன்னை நான் மணம்புரிதல் சந்திரனைக் கிரகணம் பிடிப்பதொக்கும். உன் காலழகுக்கு இணையாகாவென்னை யிச்சிக்க உனக்கு லச்சையாய் இருக்கவில்லையா? சகல லட்சணங்களும் வாய்ந்து கண்டோர் மயங்கும்படியான மேனியுள்ள நீ அவலட்சணமாய் இருக்கும் என்னைக் கனவிலும் நினைக்கலாமா? விவேகமற்ற உன் தாதை அறிவீனத்தால் உன்னை எனக்கு மன்றல் செய்ய யோசித்தார். நீ விவேகசிகாமணியாய் இருந்தும் பிச்சைக்காரனாகிய என்னுடன் லச்சை செய்யலாமா? யாராவது வந்தால் கெக்கலிகொட்டிக் கரங்களைக்கொட்டி மந்தகாசமும் பரிகாசமும் செய்வார்கள். வாயில் வந்தபடி வைவார்கள். சீக்கிரம் வீட்டுக்குள் போ போ" என்று உரைத்துப்போனார். அதற்கு ருக்மாபாயி, "ஓ ஸ்வாமி! கற்புள்ளஸ்திரீ இவனே நமக்கு உகந்த கணவனெனத் தீர்மானித்தபின் அவன் மூடனாய்த் தரித்திரமுடையவனாய் ரோகியாய்க் குரூபியாயிருந்தாலும் அவனையன்றி மற்றொருவன் மன்மதனுக் கிணையானவனாயிருந்தாலும் இச்சை கொள்வாளா? நளாயினி தன்கணவன் குஷ்டரோகியாய்க் குரூபியானபோதும் வெறுத்தாளா? அம்பா பீஷ்மரை இச்சித்து அவர் மறுத்ததால் மரணமடைந்தாள். அன்றி மற்று ஓர் ஆடவனைப் புணர்ந்தாளா? தமயந்தி நளமகாராஜனைப்போலவே தேவர்கள் வந்து பலவித தந்திரஞ் செய்தபோதும் அந்த நளமகாராஜனை யன்றித் தேவர்கள்மேல் ஆசைகொண்டாளா? இந்த ஞாயங்களெல்லாம் அறிந்த நான் என் உயிர் நீங்கினும் வேறு ஓர் ஆடவனைத் தொடுவேனா? நரகவேதனைக்கு உட்படுவேனா?" என்றாள். விடோபா "ஓ தெய்வமே! என்னைப் பழிக்காளாக்கி விட்டாயே; சுடாமற் சுட்டாயே; இந்தவம்புக்கு என்ன செய்வேன்? எப்படி யுய்வேன்? என்று துக்கித்தார். பின்பு சற்றே கோபம் பிறந்து தன்னைமறந்து "ஓ அரிவையே! அறிவில்

லாத் தெரிவையே! என்னை நல்லதனத்தால் விடுகிருயா? அல்லது என்சாபம் பெறுகிருயா?" என்று கடுகடுத்து உரைத்தார். அதற்கு ருக்மாபாயி அவர் பாதங்களிற்ருெழுது கண்ணீர்விட்டழுது, "ஓ ஸ்வாமி! நல்லோர்களை அண்டின புல்லோர்களும் மேன்மையடைவார்கள் என்கிறபடி தேவரீரையடைந்த அடியாளைக் கருணையுடன் இரட்சித்தாலும் அல்லது சாபமிட்டுச் சிட்சித்தாலும் ஏற்றுக் கொள்ளுகிறேன் உமது சித்தம் எனது பாக்கியம்" என்று அடிபெயர்த்து வைக்காமல் மறுத்து ஓவென்று அழத்தொடங்கினுள்.

அதனுல் விடோபா கோபங்கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு, முகமறியா வென் கரத்தைப் பிடித்த மூதேவி உன்னையும் அடைவாளா சீதேவி; நீலிக்கு நிமையிலே கண்ணீர் என்கிற பழமொழிப்படி தாரை தாரையாகக் கண்ணீர்விட்டு அழுகிருய்; அடிக்கடி காலில் விழுகிருய்; சீ நாயே! துர்க்குணமுள்ள பேயே யென்று உரக்கக் கூவிச்சொல்ல, இவ்வரவத்தால் சீதோபந்தும் அவர் மனைவியும் விழித்து வெளியில் ஓடிவந்து விடோபாவிடஞ் சென்று எதிரில் நின்று, "ஓ வேதமோதிய விப்பிரனே! நீதிகளறிந்த சுப்பிரனே! யாருமறியாமல் இப்பெண்ணை வெளியில் அழைத்து வரலாமா? எங்களுக்குத் துன்பந்தரலாமா?" என்ருர்கள். அவ்வாக்கியத்தைக்கேட்ட விடோபா செவிகளைக் கரங்களால் மூடிக்கொண்டு, "அரி அரி! என்னவார்த்தையைச் சொன்னீர்கள்? இப்பெண்ணை நான் இச்சித்திருப்பேனுகில் நொந்துவந்தவர் முகத்தைப்பார்க்காத லோபியும், குருவைக் கண்டு எழாத தொடியனும், நம்பினேனென்கிறவர்களைக் கைவிட்ட நானும், ஏழைகளோடு எதிர்த்த கோழையும், ஆரியரோடெதிர்த்துப்பேசும் அசடனும், கர்த்தனைத் துதியா கசடனும் தந்தையைக்கொன்ற சண்டாளனும், பரஸ்திரீகமனஞ்செய்யும் பாவியும், சகோதரியைப்புணரும் சபலனும், பரபுருஷனை இச்சிக்கும் பாவையும் தெய்வத்தையிகழுந் தீயனும், தீயருறவைநாடின பேயனும், குருவை நிந்தை செய்பவரோடு கூடினவனும், பேடியாயிருந்தும் பெண்ணை மணம்புரிந்த பிரட்டனும், ஒருவர் குடியைக்கெடுக்க நினைத்தவனும், பெரியோர்களின் மனம் நடுங்கச் செய்தவனும், பிட்சையெடுப்போரை வைதவனும், ஐயமிடாமல் உண்டவனும், அறிவுள்ளோர்மேல் விரோதங் கொண்டவனும், குண்டுனிவேலை செய்பவனும், கோவதைசெய்து வுய்பவனும் போகிறகதியிற் போவேன்" என்று அறைந்தார். சீதோபந்துவை

நோக்கி, உம்மால் இவ்வளவு மேன்மைபெற்றதுபோதும். இம்மட்டில் என்னை விட்டுவிடுமையாவென்று அவ்விடம் விட்டுப் போக அப்போது சீதோபந்து ருக்மாபாயைப்பார்த்து, "அம்மா பதிவிரதாசிகாமணி! விழித்திருந்து விடாச்சலந்தொடுத்து இவரைப் போகாமற்றடுத்து எனக்குவரும் வியாகுலத்தைக்கெடுத்து என்னைப் புனிதனாக்கினையே. இனி நீ வீட்டிற்செல்லு. நான் இவருக்குச் சமாதானமுரைத்து அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்று அறைந்தார். விடோபாவை நோக்கி, "அப்பா என்னருமை மருமகனே! பகவான் உன் சொற்பனத்தில்வந்து ஏதாவது உரைத்தாரா? இல்லையா? என்றுகேட்டார். விடோபா பகவான் பிரத்தியட்சமாய் வந்து என்னை விவாகஞ் செய்துக் கொள்ளும்படியாய்ப் புகன்றாலும் செய்துக்கொள்ளமாட்டேன். உமது வேலையைப்பாருமையா" என்று அதிசீக்கிரமாய் நடந்தார். சீதோபந்து மறுத்து, "அப்பா விடோபா! கடவுள் வாக்கியத்தை மறுத்தல் மிகவுங் குற்றத்துக்கிடமாகும். நீ அறியாதவனல்ல பலதாரஞ் சொல்லச் சந்தோஷமாய் வந்து ருக்மாபாயை மணந்து, இச்சையான விடத்திற்குப் போகலாம் வாருமையா" என்று கரத்தைப்பிடித்து இழுத்தார். விடோபா சீதோபந்துக்கு வந்தனஞ்செய்து, "ஓ ஐயா! என்னுயிரைக் கேட்கினுந் தருவேன். இக்காரியத்துக்கு மாத்திரஞ் சம்மதப்படமாட்டேன். மன்னித்தருளுமையா" என்றார். சீதோபந்து அப்பா விடோபா! உன்னால் என்மகளை இழந்துவிடலாயிற்று. ஏனென்றால் நீ என் புத்திரியை மணம்புரியாமல் மறுத்துப்போவாயானால், என் புதல்வி உடனேமரிப்பாள்; நானும் பிராணனிழந்து விடுவேன். இதனால் உனக்கு ஸ்திரீஹத்தி பிர்மத்திநேரிடும். ஹத்தியை மேற்கொண்டபின் உன் யாத்திரை பலிக்குமா? தபஞ் சிறக்குமா? மோட்சமடையக்கூடுமா?" என்றார்.

இவ்வசனங்களைக்கேட்ட விடோபா கோபமுற்று, "ஓ கர்த்தனே! பரிசுத்தனே! அருளத்தனே! மிகுசுத்தனே! என்விரதத்தை இப்படிக் கெடுக்கலாமா? இவர் என்னைப் போகாமற்றடுக்கலாமா? விடாச்சலந் தொடுக்கலாமா? சாபங் கொடுக்கலாமா?" என்று உருகினார். அப்போது கடவுள் அசரீரியாய் "ஓ விடோபா! இவ்வுத்தமர் புத்திரியை மணந்து சுகமுற்றிருப்பாய் என் வாக்கை மறுக்காதே" என்று உரைத்தார். விடோபா அவ்வாக்கியத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு இனி என்ன செய்வேன்? தெய்வமேயென்று அசைவறநிற்கச் சீதோபந்து அருள்வாக்கைக்

கேட்டுப் பொங்கி ஆனந்தந்தங்கி விடோபாவின் கரத்தைப் பிடித்து அழைத்துக் கொண்டுவந்து இப்பேர்க்கொத்த பாமபக்தருக்கு என் புத்திரியைக்கொடுக்க என்னபாக்கியஞ் செய்தேனே? ருக்மாபாயி என்ன தவஞ்செய்தாளோ? என்று உடலம் பூரித்து இருவரையுஞ் சிங்காரித்து சகல பந்துக்களுடன் சந்தோஷமாய்க்கலியாணஞ்செய்து ஆனந்தமடைந்தார். விடோபா விவாகமான மூன்றுநாள் மாமனுரைப் பார்த்துக் கரங்களைச்சேர்த்து, "ஓ ஐயா! வேண்டாமென்கிறவன் கழுத்தில் லிங்கங்கட்டியதுபோலவும், முறையோவென்று வெறுப்பவனுக்கு முத்திரை போட்டதுபோலவும், எனக்கு மணஞ்செய்து மனமகிழ்ந்தீர்; கடவுள் வாக்கியப்படியே முடிந்து விட்டது; என்யாத்திரை கெட்டது; பாதியாத்திரை செய்வதற்குள் பந்தத்துக்குட்பட்டேன்; வைராக்கியங்கெட்டேன்; தடைசெய்யாதுவிடை கொடுத்தால் மற்ற யாத்திரைசெய்து வருகிறேன்; லாபம் பெறுகிறேன்" என்று உரைத்தார். சிதோபந்து மருகனை நம்பாக் குறையால் தானுங்கூடவே பிரயாணப்பட்டுப் பண்டரிபுரம், அஹோபலநரசிம்ஹம், திருவேங்கடம், கோகர்ணம், கோலாபுரம், ராமேசுவரம், சிதம்பரம், தட்சிணகைலாசம், கண்டி கதிர்காமம், சுப்பிரமணியம், தணிகாசலம், திருக்கழுக்குன்றம், மகாபலிபுரம் முதலான திவ்விய ஸ்தலங்களும் தரிசித்துப் புண்ணியநதிகளில் ஸ்நானஞ்செய்து அலங்காவதியை யடைந்தார்கள். விடோபா மாமனர் வீட்டையடைந்த நாலாநாள் மாமனுரைப்பணிந்து, "ஓ ஐயா! என் தாய் தந்தையைப் பிரிந்து வெகுநாளாயிற்று. விவாகமானதுந் தெரியாமற்போயிற்று. ஆதலால் நாளையத்தினம் ஆபேகாமுக்குப் பிரயாணமாகவேண்டும்" என்றார். சிதோபந்து அப்படியே யாகட்டுமப்பா என்றார். மறுநாள் காலையில் சகலருடன் பிரயாணப்பட்டுச் சிலநாள் நடந்து பல நாடுகளைக்கடந்து ஆபேகாவைச்சேர்ந்து களிகூர்ந்து வீட்டிற் பிரவேசித்துச் சம்பந்தியை விசுவாசித்து மிகவும் நேசித்தார். விடோபா மாதா பிதாக்களின் மலரடிதனிற் பணிந்து அட்சிக ளிரண்டையு மணிந்து பற்பலவிதங்களாகத் தோத்திரஞ் செய்யலுற்றார்.

சிதோபந்து மனைவியும் மகளும் வந்தனஞ்செய்து நின்றார்கள். தனயனைக்கண்ட கோவிந்தபண்டிதனும் நிருபாயும்மகனைக் கட்டியணைத்து முத்தமிட்டு, ஆனந்த மேலிட்டுத் தங்களை மறந்து பின்னுந்தெளிந்து, "அப்பாமகனே! அழகானமுகனே!

உன்னுடன் வந்த இவர்கள் யாரப்பா?" என்று கேட்டார்கள். சீதோபந்து விடோபா யாத்திரைவந்ததும், தன்வீட்டில் கண் வளர்ந்ததும், பகவான் இருவர் சொர்ப்பனத்திலும்வந்து பகர்ந் ததும், விடோபா வெறுத்ததும், பகவான் அசரீரிவாக்கால் மறுத்ததும் விவாகமானதும், பின்னும் யாத்திரைசெய்ததும், சவிஸ்தாரமாக உரைத்தார். அதுகேட்ட நிருபாயி ருக்குமாபாயி முகவிலாசமும், அழகுமேனியும் அடக்கமொடுக்க முதலானவை கட்கு மெச்சி, வைதேகியைப் பார்த்து ஆனந்தமடைந்த கௌ சலைபோலவும், பாஞ்சாலியைப்பார்த்துப் பரிவுகொண்ட குந்தி யைப்போலவும், சந்தோஷித்து மருகியையும் அவள் மாதாவை யும் அன்புடன் ஆதரணை செய்தாள். கோவிந்தபண்டிதன் சீதோபந்துக்கு வந்தனஞ்செய்து, "ஓ உத்தமரே! உமதுகிருபை யாலல்லவா என் அருமைப்பாலகனை கண்குளிரப் பார்த்தேன். உமக்கு என்ன உபகாரஞ் செய்யப்போகிறேன்? மகனைக்கண்ட களிப்பால் உமக்கு வந்தனஞ்செய்யாமலிருந்தேன். இதைக்குறி த்து மன்னித்தருளுமையா" என்றார். சீதோபந்து கோவிந்த பண்டிதரைப் பணிந்து, "உம்முடைய அருமையாகிய புத்திர னுக்கு என்னுடைய சிறுமியைக் கொடுக்க என்னபாக்கியஞ் செய்தேனோ? ஏதுதவஞ் செய்தேனோ? கடவுள் அசரீரியாய்ப் பலருமறியத் திருவாய்மலர்ந்த திருவாக்கைக் கேட்டபோது அடைந்த களிப்பிலும் உம்மைக் கண்டகளிப்பே அதிகமென்று உன்னினேன். பரமசாதுவாகிய உம்முடன் சகவாசஞ்செய்யக் கூட்டிவைத்தது குருகடாட்சம்" என்று உரைத்துச் சகலரும் அன்யோன்யமாய்க் களிப்புற்றிருந்தார்கள். கேட்டீர்களோ சித் தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங் கினர்.

விடோபாவின் யாத்திரை அத்தியாயம்

முற்றிற்று.

---

மூன்றுவது

## சன்னியாசி விடோபா அத்தியாயம்



வாருங்கள் சித்தர்களே! இவ்விதமாய் அனைவருஞ் சிலநாள் ஒற்றுமையோடிருந்து சீதோபந்தும் அவர்மனையும் கோவிந்த

பண்டிதரிடம் விடை பெற்றுக்கொண்டு, ருக்மாபாயிக்குச் சொல்லவேண்டிய புத்திமதிகளை யுரைத்து, அலங்காவதியைச் சேர்ந்து களிகூர்ந்திருந்தார்கள். இங்கே விடோபா மணமாய் ஐந்தாறு வருஷங்களாயும், ஓர் நாளும் ருக்மாபாயியைக்கண்ணெடுத்துப் பார்க்காமல் மாதுக்குத் தோர்க்காமல் வேதாந்த சிரவணங்களாலும், சாதுசங்கத்தாலும், வைராக்கியமடைந்து, சம்சாரத்தி லிருப்பதற்கிடைந்து, எப்போது சன்யாசியாவோம்? எக்காலத்திற்றன்னை மறந்திருப்போம்? என்று ஏக்கங்கொண்டிருக்கிறநாளில், வருஷகாலம், சீதளகாலம், வேனிற்காலம் என்னும் மூன்றுகாலங்களுக்குச் சமானமான பால யவ்வன விருத்தாப்பிய மென்னும் மூன்று பருவங்களுந்தேகத்துக்கு உடையதுபோலக் கோவிந்தபண்டிதனும் நிருபாயும் மூப்புப்பருவ மடைந்தும், மழை குளிர் வெய்யிலென்னும் மூன்று காலங்களிலும் ஒரே விதமா யிரா நின்ற ககனத்தைப்போல, பால யவௌவன விருத்த மென்னும் மூன்று பருவங்களும் தானுகிய ஆத்மாவுக்கு இல்லையென்று உறுதிகொண்டிருந்தும், ஜனித்தது மரிக்குமென்னுங் காரணத்தால் சதிபதிக ளிருவரும் சமாதினிஷ்டையில் இருந்தபடி தேகவியோகமடைந்து மீளாக்கதி யடைந்தார்கள்.

விடோபா தாய்தந்தை யிருவரும் கைவல்லிய மடைந்ததற்கு வியப்படைந்து செய்யவேண்டிய கிரியைகளெல்லாஞ் செய்து முடித்துச் சிலநாளிருந்து, ஒருநாள் தன்மனைவியை நோக்கி, ஓ பெண்ணே! நான் என்தந்தையின் அஸ்திகளைக் கொண்டுபோய் கங்கையில் விடவேண்டும். நான் போனபின் இங்கு நீ தனித்திருக்கமாட்டாய். ஆதலால் உன் தந்தையிடங் கொண்டுபோய் விட்டுப்போகிறேன் என்று அறைந்து தன் தந்தை சம்பாதித்த திரவியத்தைக் காண்பித்து, உனக்கு எவ்வளவு இச்சையோ அவ்வளவு எடுத்துக்கொண்டு மற்றவைகளெல்லாம் இன்றையத் தினமே அதிதிகட்கு அளிப்பாய்" என்று உரைத்தார். ருக்மாபாயி கணவன் கட்டளைப்படி அன்றையத்தினமே வீடு முதலானவைகளையும் அதிதிகட்கு அர்ப்பணஞ்செய்து வணங்கிஞள். விடோபா ருக்மாபாயி மங்கிலியந்தவிர மற்றவைகளை யெல்லாந் தானஞ் செய்ததற்கு அதிசயித்து, இவள் உத்தமியே யென்று உன்னி ருக்மாபாயை அழைத்துக் கொண்டு அஸ்திகளையும் ஏந்திக்கொண்டு பல நாடுகளைக் கடந்து, அலங்காவதியை யடைந்து, மாமனூர்வீட்டிற் பிரவேசித்து, மாமன்மாமியைப் பூசித்துத் தன் கருத்தைப் புகன்றூர்.

அதற்குச் சிதோபந்து சிலநாளிருந்து போய்வாருமப்பா" என்ருர். ருக்மாபாயி தாய்தந்தையை வணங்கி, மாதாவுடன் தன் கொழுனனுடைய வைராக்கியத்தைப் பகர்ந்து அவர் நம்மைப் பிரிந்துபோனுல் இனி வருவது அசாத்தியம். ஆதலால் நாம் அனைவருங் கூடத் தொடர்ந்துபோவதே உத்தமம் என்ருர்கள். அநுசங்கதி சிதோபந்துக்குத் தெரிந்து விடோபாவை இணைபிரியாமலிருக்க, விடோபா சிதோபந்தை வணங்கிப் பன்முறை கங்கைக்குப்போக விடைகேட்டும்; தனித்துப்போக விடைகொடுக்காமையால் சிந்தாக்கிராந்தனுய் ஒருநாள் இரவில்யோசிக்கின்ருர்: அதாவது நமது தாய்தந்தை மரித்துப்போனதைப் பிரத்தியட்சமாய் அறிந்திருந்தும், தேகம் அனித்தியமெனத் தெரிந்திருந்தும், மோட்சமடையும் மார்க்கத்தை நாடாமல், சற்குருவைத் தேடாமல், பலதேசங்களி லோடாமல், சற்சனசங்கைக்கூடாமல், மேல்வரும் எமவாதனைக்கு வாடாமல்வெகுநாளாய்ச்சமுசாரத்தி லிருந்துவிட்டேனே. ஆ கெட்டேனே. எனது அறிவீனத்தை என்னவென்று சொல்லுவேன்? சஞ்சலமனதை எப்போது கொல்லுவேன்? அகமமதைகளை எக்காலத்தில் வெல்லுவேன்? அந்தர்முக நிஷ்டையில் எத்தினஞ் செல்லுவேன்? ஆ ஆ! நான் இனி அரைக்கணமும் சம்சாரத்தில் இருக்கலாகாது. அனித்தியத்தை நித்தியமென்று நம்பியிருக்கும் அறிவீனர்களன்றி வேறு மூடர்களுமுண்டா? எல்லாச் சென்மங்களிலும் இந்த மானிடசென்மம் அரிதானதல்லவா? இந்த மனுஷப் பிறப்பெடுக்க என்னதவஞ் செய்தேனே? இப்பிறவியகன்ருல் இனி எப்பிறவி கிடைக்குமோ? இப்பிறப்பே கிடைத்தாலும் பிறப்புப் பிறப்புக்கு இச்சங்கடந் தவிர்வதும் உண்டா? இவ்வளவு அறியாமல் மேற்பிறப்பில் மோட்சமடையலாமென்று உன்னல் என்ன மதிகொண்டோ? இம்மதி அனேகர்க்கு என்ன காரணத்தா லிருக்கின்றதோ? இதைத்தான் மாயையின் சாமர்த்தியமென்று உரைக்கத்தகும். அல்லாமல் மானிடரை ஏமாற்றிப் பொருள்பறிக்கும் வேசிகளைப்போன்ற மாயையினது மாந்தர்களை ஏமாற்றி மறலிக்குணமாக்கிப் பல ஜென்மங்களைக் கொடுத்துச் சனனமரண மென்னும் சுழலிலகப்பட்டு உழலும்படியாகச் செய்யும்சாமர்த்தியமே சாமர்த்தியம். மாயையைக் கடத்தல் அரிதென்று பெரியோர்கள் உரைப்பதினுலேயாம். அம்மம்மா! அநித்தியகாரியத்தை மெய்யென்று இறுமாப்படைந்து எமனுக்கு இரையாகும் பேதை மானிடரைப்போல நான் இருக்க

லாமா? கோடிபொன் அளித்தாலும் அரை நிமை உயிர்தரிப் பது அரிதென்பது அபத்தமா? மாணமடைவது அசாத்தியமா? முற்பவப் புண்ணியபலத்தாற் கிடைத்த மானுஷ ஆயுள்நாளை வீணாளாகக் கழிக்கலாமா? அந்தோ! நாடுநகர் பெண்டுபிள்ளை பண்டம் பதார்த்தம் முதலானதும்கூட வருவதுண்டா? மறு பிறப்புக்காவது உதவியாகுமா? என் அஞ்ஞானபுத்தியாலல்ல வோ மெய்ஞ்ஞானத்தைத் தேடாமல் பொய்ஞானத்தில் இருந்து விட்டேன் என்று பற்பல யோசனைசெய்து தன் மனைவியை விளித்து, "ஓ பெண்ணே! இனி எனக்கு இவ்வாழ்க்கை வேண் டியதில்லை. நான் சந்நியாசியாய்ப்போக எண்ணங்கொண்டிருக் கிறேன், வஞ்சகஞ் செய்துப்போகும் கொஞ்சமனிதரைப்போல உனக்குப் புலப்படுத்தாமல் போகக்கூடாதென்று எண்ணத்தை யுரைத்தேன். ஆதலால் உதயமானதே உன் தந்தை தாயாரிடம் வினவி, என் மனதின்படி போக விடைகொண்டுவா" என்று அறைந்தார். ருக்மாபாயி பதியின் வாக்கை மறுத்து உரைக்கக் கூடாக் கொள்கையால் மகா பாக்கியமென்று வணங்கித் தன் தாய் தந்தையருக்கு உரைத்து வாட்டமுகத்துடன் நின்றாள்.

சிதோபந்து விடோபாவை நோக்கி, "அப்பா மருமகனே! இளமைப் பருவமுள்ள நீ இப்போதே சன்னியாசியாக வெண் ணங்கொள்ளலாமா? பிரியமுள்ள மனைவிபால் இப்படியும் விள் ளலாமா? அன்றி எழுபத்தைந்து வயதுக்குமேல் சந்நியாசியாக வேண்டுமென்று சாஸ்திரம் முறையிடுகிறது. அது அறிந்த நீ இப்படி செய்யக்கூடுமோ? எவ்வர்ன காலத்தில் இந்திரியங்கள் இறத்தலென்பது கூடா ஒழுக்கமல்லவா. சூதாடல் வாதாடல் முன்னம் இனிப்பாகத் தோன்றிப் பின் எப்படி இடையூறுகட்கு இடமுண்டாகுமோ அதுபோலவும், கோபத்தால் யாத்திரை போய்த் தாபத்தை யடைவது எப்படியோ அதுபோலவும், சன் யாசமாகும்போது வெகு சந்தோஷமாகவே யிருக்கும். ஆனபின் இந்திரியச் சேஷ்டையாலும் அந்தக்கரண வேஷ்டையாலும் வாட்டமடைய நேரிடும். நனவிற் சுழுப்தி நிலையையடைந்த வனே சன்யாசியென்று உரைக்கப்படும். காஷாய வஸ்திரங்க ளால் அலங்கரிக்கப்படுவது சன்யாசமல்ல. மன ஆயாசங்களை மாய்ப்பதே சன்யாசமாகும். பிர்மக்ஞானியாதல் லேசானதென்று நினையாதே. திரிவுலகத்து ஒரு க்ஞானியென்கிற பெரியோர்கள் வாக்கியத்தின் மர்மத்தை நன்றாய் யூகித்துப்பாரும். பூசையில் மானசபூசையேசிரேஷ்டமானது. அதுபோல, சன்னியாசிகளில்

மானச சன்னியாசியே சிரேஷ்ட முள்ளவனுகும். மாயையைச் செயித்த நாரதனும், ஓர் மங்கையால் பங்கமுற்முன். பிரம்ம சிருஷ்டிக்கு எதிர் சிருஷ்டி செய்த விசுவாமித்திரனும் ஒரு கோதையால் வேதையுற்முன். சுரகுருவான பிரகஸ்பதியும் அசுரர் குருவான சுக்கிராசாரியும் மாதர்கள் ஆசைக்குள்ளானுர்கள். மாயாதீதரான திரிமூர்த்திகளும் அரிவையர் ஆசைக்குள் சிக்கினுர்கள். எமனைச் செயித்தாலும் செயிக்கலாம். அன்றி மாரனைச் செயித்தல் மிகவுந் துர்லபம். சம்சாரத்திலிருந்துக் கொண்டே சிரேஷ்டமடைவது யோக்கியமல்லவா? நீர் தெரியாதவரல்ல. பலதரம் நான் சொல்ல என்கிற பலவாக்கியங்களுரைக்கும் மாமனுரை விடோபா வணங்கி, "ஓ ஐயா! யுத்தகளத்திற்சென்ற வீரன் பகைவரை செயிக்கக்கூடாமல்போனுலும் புறங்காட்டி யோடாமல் போர்புரிந்து மரணமடைந்து வீரசொர்க்க மடைவதுபோல அடியேன் யதியானபின் தன்னை மறக்காச் சஞ்சலனுயிருந்தாலும், அகக்கருவி புறக்கருவிகளுக்கு இடங்கொடுக்காமல் மனமென்னும் பகைவனை எதிர்த்து வெதிர்த்து மேன்மையையே யடைவேன். பசியால் வாட்டமுற்ற சிங்கமானது அருகிலிருக்கும் சிறு கலைமானைக் கொன்று புசிக்காமல் யானையைத் தேடுவதுபோல விகாரமடைந்த நான் பேரின்பங் கிட்டாமற்போனுலும், அதையே நாடியிருப்பேன். அன்றிச் சிற்றின்பத்தைக் கோருவேனு? மலத்தைப் பரிமளமென்று பூசிக்கொள்ளும் அறிவீனனைப்போலத் துர்க்கந்தம் வீசும் தோகையர் போகத்தைக் கனவிலுஞ் சிந்திப்பேனு?" என்கிற பல மொழிகள் புகன்று, அஸ்திகள் ஏந்திக்கொண்டு மாமன் மாமியாரைப் பணிந்து, வைராக்கியத்தாற் றுணிந்து யார் மறுத்தாலுங் கேட்காமல் வெறுத்து வாரணுசியை நோக்கிப் போகலுற்முர்.

அதனுல் ருக்மாபாபி அலக்கணுற்று அழுதுக்கொண்டே மணுளன் பின்தொடர்ந்து ஓடலுற்முள். தனயை தலைவிரிகோலமாய் ஓடுவதைக்கண்ட தாயும் தந்தையும் பின்தொடர்ந்தோடி மனமுருகிவாடி விடோபாவுக்கு அனந்தம் நயனவார்த்தைகள் உரைத்துப்போகாமல் மறுத்தார்கள். விடோபா அவ்வசனங்களைக்கேட்காமல் சற்றுந் தங்காமல்போக ருக்மாபாயி தன்கொழுனன் தாள்களில் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து, "ஓ என் பிராணநாயகா! உம்மைப்பிரிந்து உயிருடனிருக்க என்னுலாகுமா? ஒருவரால் என்குறை போகுமா?" என்று கறைந்து அழத்தொடங்

னுள். விடோபா, "ஓ பெண்ணே! நீ பதிவாக்கியங் கடக்காச் சதியானல் என் வாக்கைத் தள்ளாமல் மறுத்து ஓர் மொழிவிள்ளாமல், தந்தையின்பாலிரு" என்று அறைந்து அதிவேகமாய் நடந்து மறைந்தார். ருக்மாபாயி அவ்வாக்கியத்தாற் கட்டுப்பட்டு ஸ்மாணைகெட்டு நிலத்திற் சாய்ந்து மூர்ச்சையடைந்தாள். அது தெரிந்த தாயுந்தந்தையும், அலக்கணுற்று ருக்மாபாயிக்கு உபசாரணைசெய்து எழுப்ப, ருக்மாபாயி மூர்ச்சை தெளிந்தெழுந்து தந்தையின்முன் விழுந்து இனி என்னசெய்வேன்? என்று அலறியழுது கடவுளைத்தொழுது, தன் பிராணனை விடுவதற்கு முயற்சிகொண்டாள். அதனல் சிதோபந்து மிகவுந் துக்கித்து, "ஓ அம்மா! பதிவிரதாசிரோமணி! விருத்தாப்பியப் பருவமுள்ள எங்களைப் பாதவிக்கவிட்டு நீ உயிர்விடுத்தால் நாங்களும் உயிர் பிரிந்து பிராணனை விடமாட்டோமா? இத்தோஷம் உன் மணாளனைச் சேராதா? இப்படி கணவனுக்குக் கர்மம் சம்பவிக்கச்செய்யும் காந்தை யுத்தமியாவாளா?" என்றார். ருக்மாபாயி "ஓ என் தந்தையே! கணவனைப் பிரிந்த நான் உயிருடனிருப்பதனுற் பிரயோசனமேது? பிராணநாயகனைப் பார்க்காமல் நானிருக்கவே மாட்டேன்? அவரைத்தேடிப்போகின்றேன்" என்று நடந்தாள். சிதோபந்து மறுத்து "ஓ என்னரும்புதல்வியே! இறந்துபோன சத்தியவானை விரதத்தால் எழுப்பிய சாவித்திரியைப்போல் நீசில நாள் கௌரிவிரதத்தை அனுஷ்டித்து வருவாயானல் உனது கணவன் உன்பாலடைவதற்குத் தடையில்லவேயில்லை. பெண்கள் வைராக்கியத்தின்முன் ஆடவர் வைராக்கியம் அணுவுக்கிணையாகும். இறந்தவனை எழுப்பிய விரதம் கணவனைக் கைவசப்படுத்தமாட்டாதா? ஸ்ரீபரமசிவனை மணஞ்செய்ய ஆசித்த பார்வதியும், ஸ்ரீகிருஷ்ணரை ஆசித்த ருக்மணியும், கௌரிவிரதத்தாலல்லவோ கோரிக்கைகள் ஈடேறக் களிப்புற்றார்கள். அவ்விரதத்தை நீயும் அனுஷ்டிப்பாயானல் அகத்தியம் உன்கொழுனன் இங்கு அடைந்து உன்மனதுக்கு இசைந்திருப்பான்" என்று விரதமிருக்குந் தன்மையை உரைத்தார். ருக்மாபாயி சற்றேயோசித்து நாம் இப்போது கணவன்பின் தொடர்வதால் பதிவாக்கியத்தைக்கடந்தவளாவோம். அன்றி அவருடன் அன்புற்றிருப்பதற்குக் கூடாது. விரதமிருந்து மணாளனைச் சேர்வதே உத்தமமென்று உறுதிகொண்டு விரதானுஷ்டானத்தில் பசுமரத்தாணிபோல் விருப்புற்றிருந்து காலங்கழிக்கத் தொடங்கினள். விடோபாவோ அலங்காவதியைவிட்டு நீங்கிப் பல காடுகளையும் நாடு

களையுந்தாண்டி வாரணாசியையடைந்து கங்கையில் ஸ்நானஞ் செய்து மாதாபிதாக்களின் அஸ்திகளைப் பாகிரதியில் விடுத்துக் காசிவிசுவநாதரைப் பணிந்து, ஞானாசாரியரை நாடிச் சின்னாள் தேடி அங்கு திகம்பரராகியும், மாயாதீதராகியும், தேகஸ்மரணை யிறந்தவராகியும் பிர்மானந்தம் நிறைந்தவராகியும் விளங்கா நின்ற ஸ்ரீபாதஸ்வாமிகளைக்கண்டு ஆனந்தங்கொண்டு அவரை வலம்வந்து பணிந்து, அவர் பாதங்களிற் றன்திருநயனங்களை யணிந்து, "ஓசாந்தனே! உபசாந்தனே! ஞானவேந்தனே! வேத வேதாந்தனே! நாதநாதாந்தனே! யோகாந்தனே!ஏகாந்தனே!" எனத்தோத்திரஞ்செய்தார். அவ்வாறு அழுதகண்ணுந்தொழுத கையுமாய் நிற்கும் விடோபாவை, ஸ்ரீபாதஸ்வாமிகள் அருட் கண்ணாற்பார்த்து மார்புடன் சேர்த்து, "ஓ பவபந்த நாசனே! அருள்மூகவிலாசனே! என்னைப் பரப்பிரம்மமாய்ப் பாவித்து அன்புடன் சேவித்துப் பலதரம் ஏன் தொழுகிறாய்? கண்ணீர் விட்டு ஏன் அழுகிறாய்? உனக்குஎன்னகுறைநேரிட்டது உரைப் பாயப்பா?"என்றார். அவ்வாக்கியத்தைக் கேட்ட விடோபா களிக் கடலிற் படிந்தவனாய் "ஓ என் சற்குருநாதனே! மெய்ஞ்ஞான போதனே! பவப்பிணிக்கயர்ந்துவந்து உமதுபக்கலடைந்தேன்; பவசாகரத்தைக் கடந்தேன்; முற்றிலும் என்னைக் காப்பாற்று மையா களங்கமில்லாதுய்யா" என்று போற்றினார். ஸ்ரீபாத ஸ்வாமிகள் இம்மானிட ஜென்மத்தால் உனக்கு என்ன அவஸ் தை நேரிட்டது? இதோசகலரும்சந்தோஷமாய் விஷயபோகங் களை யனுபவித்துக்கொண்டு இதுவே மேலான போகமென விண்டு களிப்புற்றிருக்க நீமாத்திரம் துக்கமென்று ஏன் வெறுப் புற்றாய் என்றார்.

விடோபா "ஓ ஸ்வாமி! நிஷ்காமி விஷயங்களென்னுந் தேள்களும், இந்திரியங்களென்னும்சர்ப்பங்களும், காமக்குரோ தங்களென்னும் வியாக்கிரங்களும், எண்ணங்களென்னும் மந்தி களும், அகங்காரமென்னும் யானைகளும், அபிமானமென்னும் முட்பன்றிகளும், இச்சையென்னும் ஓநாய்களும், அஞ்ஞான மென்னும் இருட்கூட்டங்களுஞ் சூழ்ந்த தேகமென்னும் காட் டில் அகப்பட்டுக்கொண்டு தப்பிப்போக வழியில்லாமல் வெகு காலமாய்வருத்தமுற்றிருக்கும் என்னை இக்கணமேதேவரீர் பாது காக்கவேண்டும்" என்றுபணிந்தார். அதற்கு ஸ்ரீபாதஸ்வாமிகள் "அப்பா! இவ்விஷயேந்திரிய காணதிமிருகங்களைக் கண்டிக்குங் கட்.கமும், அஞ்ஞானவிருளை நீக்கும் மார்க்கமும், அறியாமல்

அதையருளும் தேசிக ஸ்வாமியை நானே வெகுநாளாய்த் தேடித் திரிகிறேன். என்னைப்போல் நீயும் நொந்து வந்தாயோ? நீங்கா ஜயந்தந்தாயோ! இனி இதைப் பகுத்து உரைக்காமல் வேறு ஏதேனுங்கேள்? தருகிறேன்" என்றார். விடோபா அகக்கரண புறக்கரணங்களை யொடுக்கும் உபாயமொன்றுமாத்திரம் கிருபைகூர்ந்தால் எல்லாங் கொடுத்ததேயாகும். ஆதலால் ஏழையைவருத்தும், இந்திரியங்களைவெல்லும், அந்தக்கரணங்களைக்கொல்லும் தந்திரவித்தையை மாத்திரம் தந்தருளுமையா என்று வணங்கினர். ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓபரிசுத்தனே! பரம பக்தனே! எனக்குத்தெரிந்த பேலானராஜவசியமந்திரம் உபதேசிக்கின்றேன். அதை ஓர்மண்டலம் ஜபிப்பாயானல் இராஜன் வசமாவான். அதனல் ஸ்திரீபோகங்களினலும், தண்டிகை சவாரிகளாலும், ருசியான போகங்களாலும், மேலானயோகங்களாலும் சுகமுற்றிருக்கலாம். இதை விடுத்துச் சன்யாசத்தை யடுத்துச் சங்கடம் ஏன் அடைகிறாய்?" என்றார். விடோபா, அரிச்சந்திரன்-நளன்-முசுகுந்தன்-புருகுற்சன்-புரூரவன்-காத்தவீரியன் என்னும் சக்ரவர்த்திகள் அறுவரும் பட்டபாட்டைச் சாஸ்திரங்களி லறிந்ததன்றி பிரத்தியட்சமாய் அநேக ராஜர்களடையும் துன்பத்தையுங்கண்ட நான் இராஜபோகத்தைவேண்டுவேனே? மோக்ஷ விருப்பமுள்ளோர் விஷயபோகத்தின்மேலிச்சைகொள்வாரோ? என்றார்.

ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓவைராக்கியனே! போகத்தையிகழ்ந்த அபாக்கியனே! எக்கியபலசித்தி மந்திரம் உரைக்கின்றேன். இதனல் இல்லறத்தி லிருந்துக்கொண்டே யாகங்கள் செய்து மேலான சொர்க்கத்தையடைந்து ரம்பாமிர்தாதி போகங்களாற் சுகித்திருக்கலாம். அதை நீக்கி இருந்துண்ணும் யதிதி ஆசிரமத்தைக் கோருகின்றாய்?" என்றார். விடோபா தேவர்களுக்கு அதிபதியான தேவேந்திரன் ஓர்காலத்தில் பிர்மஹத்திக்கு அயர்ந்து தண்டாமரைத்தண்டின் நூலில் நுழைந்திருந்து அலக்கணுற்று மேகவாகனனுயிருந்தும் தனது நந்தவனத்துக்கு ஜலமின்றி வாட்டமுற்று இருந்ததன்றி இராக்கதர்களால் பலதரம் பிடிக்கப்படடு இந்திரபதவியை விட்டு ஓடி ஒளித்திருந்தானென்று சாஸ்திரங்களில் முறையிடுவது அறிந்து நான் பொன்னுலகைப்பாசிப்பேனே! என்றார். ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓசீலனே! தவபரிபாலனே! வேதங்கள்புகழும் அஷ்டாக்ஷரத்தை உபதேசிக்கின்றேன். அதைச் சிலநாள் தியானஞ் செய்து

வருவாயானுல் ஸ்ரீமந்நாராயணர் வாசஸ்தானமாகிய பரம பதத்தையடையலாம். இந்தப் பரமாம்சத்தை என் வஞ்சித்தாய்?" என்ருர். விடோபா "ஓ மாதவனே! அஞ்ஞானவிருளை நீக்கு மாதவனே! பரமபதமடைந்த ஜெயவிஜயாள் ஸனகசந்தஞதியால் சாபமடைந்து இராட்சசசன்மமெடுத்து துன்மார்க்கரெனப் பேர்பெற்றதால் திருமால்பதவியும் வேண்டிலேன்" என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் அரியயனுந் தேடிக்காணுப் பரமசிவனுர் வாஸஸ்தானமாகிய கைலாசத்தை யடையச்செய்யும் பஞ்சாட்சரத்தைப் போதிக்கின்றேன்; இதனுல் பரமபக்தனுகலாம் என்ருர். விடோபா "கைலாசவாசராகிய பரமசிவனுர் பிரமஹத்திக்கு அயர்ந்து பிச்சையெடுத்து உழன்றதாலும், பார்வதி தட்சகப்பிரமாவின் யாகத்தில் வீழ்ந்திறந்து பர்வதராஜனுக்கு மகளானதாலும், சிவனுர்பதமும் வேண்டிலேன்" என்ருர். பாதஸ்வாமிகள் "ஓ புண்ணியவானே! அஜபாமந்திரமும் யோகப் பயிற்சியும் உணர்த்துகின்றேன். இதனுல் சித்தபுருஷனுகி வேண்டிய சித்திகளை யடைந்து கற்பாந்தரங்களிலும் நசியாத்தூலம் படைத்திருக்கலாம்" என்ருர். விடோபா சாகாமற் கற்பதே கல்வி செத்தாற் பிறவாமலிருப்பதே காட்சி. ஆனுலும் சூட்சமத்தில் மோட்சமார்க்க முணர்த்தும் ஞானதேசிகராகிய தேவரீரிருக்க, யோகப்பயிற்சியைக் கற்றுக்கொண்டு பிராணனைக் கும்பித்து ஸ்தம்பித்துப் பிரத்தியட்ச எமவாதைக் குட்பட்டு ஸ்மரணை கெட்டுத் தறிபோலிருப்பதைப் பார்க்கிலும் பக்தனுவதே மேன்மையாதலாலும், தேகமுத்தி யடையக்கூடாமையாலும் அசத்தியப் பிரபஞ்சம் மெச்சும் காரடிவித்தைக்குச் சமானமான பலசித்திகளும் அகத்தைவளர்க்கும் மகத்துவமானதாலும், அறுபத்துநாலு சித்தியும் முத்தியைக் கொடுக்காமையாலும், தாமசாதிகளை நீக்கும் மோட்சமார்க்கமே அனுக்கிரகம் புரியுமையா" என்று பணிந்தார். ஸ்ரீபாதஸ்வாமிகள் "புண்ணியவானே! வேதத்தில் முறையிடும் மந்திரங்களையும் தந்திரங்களையும் பதங்களையும் இதங்களையும் நீக்கிவிடாமல் வேறு எது உனக்குபதேசிப்பேன்? இதற்கு மேலானது எனக்குத் தெரியாது. வேறே ஆசானைத்தேடு என்று உரைத்து, மௌனநாட்டத்தை யடைந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லுவார்.

சன்னியாசி விடோபா அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காவது

## விடோபா ஞானோபதேச அத்தியாயம்

கேளுங்கள் சித்தர்களே! இப்படி ஸ்ரீபாதஸ்வாமிகள் மௌனமுற்றிருக்க, விடோபா அவரை இணைபிரியாமல் பலநாள் தொடர்ந்து ஓர்நாள் சோபமிகுந்து அவரை வணங்கி, "ஓ என் சற்குருவே! உம்மையன்றி வேறுஓர் ஆசானைச்சரணமடையேன். காரணம் பதிவிரதையிற் சிறந்த உத்தமபத்தினி கணவனையன்றி மற்றைத் திரிமூர்த்திகள்வந்தாலும் வணங்குவாளன்றி இணங்கு வாளா? காவலன் அயோக்கியனாயிருந்தாலும், யோக்கியனை நாடுவாளா? நாடாள். அதுபோல உத்தமன் ஓர் அடிகளையடை ந்து இவருக்கு ஞானமார்க்கந் தெரியவில்லை. யோக்கியருமல்ல வென்று வேறு குருவைத்தேடான். தேடுவதினால் மோட்சலட் சுமியைக்கூடான். தன்பதி என்ன துர்க்குணமுடையவனானலும் அவனைச் சகதீசுவரனாகப் பாவிக்கும் விரதசீலியல்லவோ மேன் மையையடைவாள். அவ்வுத்தமியன்றி மற்றவிபசாரமாதருக்கு இருணரகன்றி இகபரமும் கிட்டுமோ? ஓ என்னையனே! மூன்று சங்கவருஷம் இராஜரீகஞ்செய்து வேதோபநிஷதங்களும் இயற் றிய திரிசங்குமகாராஜன் தனக்கு அதிகுருவான வசிஷ்டரை வெறுத்து விசுவாமித்திரரை யடுத்துச் சண்டாளனாய் தான் நாடிய சொர்க்கத்துக்குஞ் செல்லாமல் இகலோகத்திலும் நில் லாமல் தலைகிழாயிருக்கும் அவாந்திரலோகத்தில் அயர்ந்திருப்ப தானான். இச்சூசனையையறிந்த இவ்வடியேன் நீயே எனக்கு உகந்த ஆரியனென்று உமக்கு அடைக்கலம் புகுந்தபின் உம் மையன்றி வேறு ஓர் அடிகட்கு அடிமையாவேனோ? என்னை ஏன் பரிசோதிக்கின்றீர்? உமக்குத் தெரிந்திருக்கும் பிரமக்ஞா னத்தைப் போதித்து, அஞ்ஞான மனதைச்சோதித்து, மமதா கங்காரங்கள் அறும்படியாகவும், பிரமானந்தவாரியில் மூழ்கும் படியாகவும், தேக ஸ்மரணையிறந்து திரியும்படியாகவும், கருணைகூர்ந்து ஆட்கொள்ளுமையா" என்று இரந்து கூறி னார். விடோபாவை ஸ்ரீபாதஸ்வாமிகள் அன்புடன் பார் த்து மார்புடன் சேர்த்து, ஓ சீலனே! உன்னைப்போலொத்த தீவிர வைராக்கிய முடையவனையே நான் தேடித் திரிகின் றேன். ஆதலால் நீ விவாகமான கிரகஸ்தனா? விஷயபோக மறியாப் பிரமசாரியா?" என்றுகேட்டார். விடோபா கிரகஸ்த

னென்ருல் உபதேசங் கிடைக்கத் தடையாகுமென்றும், நிச்சயமாய் தாம் ஸ்திரீபோகமறியா பிர்மசாரியேயாம் என்று உரைத்தார். ஸ்ரீபாதஸ்வாமிகள் உன் தாய்தந்தை ஜீவித்திருக்கிருர்களா? என்ருர். விடோபா இல்லே என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் சந்தோஷசித்தராய் "ஓ விடோபா! உனக்கு வேதோபநிஷதமான பிரமோபதேசஞ்செய்கிறேன். ஏகமனதுடன்கேட்பாயாக" என்று அஸ்தமஸ்த சையோகஞ்செய்து பிரணவாதி மந்திரங்களும் மேன்மையாகியும் அசரீரிவாக்கியமாகியும், பல சித்திகளே லேசில் கொடுப்பதாகியும், நிர்க்குண தியானத்துக்கு உகந்ததாகியும், அத்வைத மந்திரமாகியும், வேதமுடிவாகியும், தேகபீடைகளே யெரிப்பதாகியும், மனேசஞ்சலங்களே யகற்றுவதாகியும், சதுர்வேதங்கள் உண்டாவதற்குக் காரணமாகியும், தானே பிர்மமென்னுஞ் சந்தோஷத்தை யளிப்பதாகியும், மூவரும்முனிவரும் சிந்திப்பதாகியும், அழியாப்பதவியையளிப்பதாகியும், திரிபதார்த்தங்களாற் பூர்த்தியடைந்ததாகியும், தன்னே மறக்கும் ஐக்ய பதத்தைக் காட்டுவதாகியும், சைவவைஷ்ணவாதி சண்மதங்களே வாட்டுவதாகியும், அஞ்ஞான சந்தேக விபரீதங்களே நீக்குவதாகியும் மமதாகங்காரங்களே அடியோடும் போக்குவதாகியும், எல்லேயற்ற அகண்டானந்த வாழ்வைத் தருவதாகியும், தியானித்தவனேச் சிரேஷ்டமான சம்பாவனேயிற் கொண்டுவருவதாகியும் விளங்காநின்ற மகா வாக்கியத்தை உபதேசஞ்செய்தருளினர்.

விடோபா தேசிகஸ்வாமிகளின் திருத்தாட்டாமரைகளிற்ருெழுது, "ஓ என்னேயாவே! இவ்வற்புதமானமகாவாக்கியத்தின் மர்மத்தைவிடுத்துரைத்து ஆட்கொள்ளுமையா" என்று பணிந்தார். ஸ்ரீபாதஸ்வாமிகள் நமக்கு உகந்த மாணுக்கன் இவனேயாகும். இப்பேர்க்கொத்த அதிதீவிர வைராக்கியமுடையவனுக்கு அகத்தியம் சொல்லவேண்டும்" என்று உன்னினர். "அப்பா விடோபா! நீ மிகவும் புண்ணியவான். ஆனதால் உனக்கு இந்த மகாவாக்கியார்த்தஞ் சொல்லத் தொடங்கினேன். ஏனெனில் பன்னிரண்டாண்டு பரிசோதித்தபின்பே பெரியோர்களின் மர்மம் வெளிப்படுத்துவார்கள். பாறையின்மேல் விதை போட்டாற்போல் * அபக்குவர்க்கு உரைக்கின் அபலமாய்ப் போவதன்றி உரைப்பவர்க்கு ஆயாசமும் கேட்பவர்க்கு அதோ

* வாசிஷ்டம் இயற்கைகுணஞ் சோதித்து முன்பின்னே யாவையு மர்மம். பிர்மம் நீயென்னல்வேண்டும் வியற்புறுமாசையிலுழல்வாருக்கு இவ்வாருேதில் விழாத தீநரகத்தில் வீழ்ந்ததாகும்.

கதியும் பலமாகும். நீ இதற்கு உகந்தவனென்று உரைக்கச் சம்மதித்தேன். நீசெய்தபாக்கியமேபாக்கியம். ஏகமனதுடன் கேட்பாயாக: மறதியின்றி மனதிற் றரிப்பாயாக. அதேதெனெனில்; ஞானமே பிர்மமென்னும் ஓர்மொழியினர்த்தமே இருக்குவேதம் முறையிடுகின்றது. வேதபுருஷனுல் நாலுவாக்கியங்களுக்கு உரை நாலுவேதங்களால் விரித்துரைத்தும் அதற்கு அர்த்தமாகாமல் தயக்கமுற்ருன். தேவர்களுக்குக் காரணகுருவான பிரகஸ்பதி யென்பவரும் மற்ற ரிஷிகளும் ஞானகாண்டத்தில் தன்னுலானமட்டும் மகாவாக்கியார்த்தத்தை விரித்துரைத்து முடிவுபெருமல் தியக்கமுற்ருர்கள். அப்பேர்க்கொத்த வாக்கிய லட்சணத்தை என்னுல் உரைக்கப்போமோ? ஆயினும் எனது ஆசாரியர் அருளோடு உரைக்க நான் சிரவணஞ்செய்தபடி விரித்துரைக்காமல் சங்கிரமாகப் புகல்கின்றேன். அதாவது "ஞானமென்பது ஆத்மா; பிர்மமென்பது பரமாத்மா; ஞானஸ்வரூபமே பிரமமென்றுஉரைக்கப்படுவதே இதன் அந்தார்த்தமென்று உரைத்தார். விடோபா ஞானமென்பது எது? பிர்மமென்பது எது? ஆத்மாவே பரமாத்மாவானது எவ்வண்ணம்? விரித்துரையுமா" என்று கேட்டார். ஸ்ரீபாத ஸ்வாமிகள் "அப்பா விடோபா! ஞானமென்பது விஷயங்களையறியும் இந்திரியங்களையும், இந்திரியங்களையறியும் அந்தக்கரணங்களையும் அந்தக்காணங்களையறியும் சிதாபாசனேயும் இவைகளெல்லாமொடுங்கும் அவித்தையும், சாட்சியாயிருந்து அறிவதெதுவோ அதையே ஞானமென்றும், இப்படியே சமஸ்த வஸ்துக்களிலுமிருந்தறியும் சர்வசாட்சியே பிர்மமென்றும் வேதம் முறையிடுகின்றது.

அன்றிக் கூடஸ்தன் பிரத்யேகாத்மா திருக்கு போதம், சைதன்யம், சித்து, சத்து, ஆனந்தம், நித்தியம், நிர்மலம், நிர்க்குணம், நிர்விகாரம், நிரஞ்சனம் என்கிற பல நாமங்களுக்கு ஆதாரமாகிய சாட்சியாகிய ஞானமே ஆத்மாவென்றும், பரப்பிரமம் பரிபூரணமே பராபரம், பரமேசுவரம், பரஞ்சோதி, பாாத்பரம், நிரூபம், நிர்நாமம், நிஷ்களங்கம், அசலம், அகண்டாகண்டம், அட்சயம், ஆதி, அனுதிஎன்கிற பலநாமங்களுக்கு ஆதேயமாகிய சர்வசாட்சியாகிய பிர்மமே பரமாத்மாவென்றும் ஈசுரவாக்கிய மிருக்கின்றது" என்று அருளினர். விடோபா "ஓ சுவாமி! ஓர்தேகத்திலிருக்கும் சாட்சியாகிய ஆத்மா சர்வசாட்சியாகிய பரமாத்மா எப்படியாகும்?" என்று சங்கை செய்தார்.

ஸ்ரீபாதஸ்வாமிகள் "திரி தீவட்டியென்று நாமம் வேறுபட்டாலும் பிரகாசமொன்ரு யிருப்பதுபோல் ஆத்மா பரமாத்மாவென்கிற நாமத்தால் வேறுபடாமல் சுபாவமொன்ருகவே யிருக்கின்றது. எப்படியென்ருல் பெரியதாயிருப்பதால் ஏரியென்றும், சிறியதாயிருப்பதால் மடுவென்றும், பெரியதாயிருப்பதால் நதியென்றும், சிறியதாயிருப்பதால் ஓடையென்றும், பலமனிதர்களுக்குக் கூட்டமென்றும், ஒருமானிடனுக்குமானுஷனென்றும், பலவிருட்சங்களுக்குத் தோப்பென்றும், ஓர் தருவுக்கு விருட்சமென்றும் நாமம் விகாரப்பட்டதால் ஜல,மனித,விருட்ச, பாவம் வேறுபடாமல் ஏகீகபாவமா யிருப்பதுபோல அனேக சரீரங்களைக்குறித்து சர்வசாட்சி பரமாத்மாவென்றும், ஓர் சரீரத்தைக் குறித்துச் சாட்சி ஆத்மாவென்றும், உபாதிபேதத்தால் நாமம் வேறுபட்டதேயன்றி ஆத்மாபரமாத்மாக்களில் சற்றும் பேதமேயில்லை. பரமாத்மா சர்வஜீவாத்மாவென்கிற வேதப்பிரமாணமுமிருப்பதன்றி ஆத்மா பரமாத்மாவில் பேதப்படுத்தினவன் ரவ்ரவாதி நரகத்தை யடைவானென்று வியாசர் விஷ்ணுபுராணத்திலும், இவ்வியாசர் தந்தைக்குப் பாட்டஞன வசிஷ்டர் வாசிஷ்டத்திலும், வால்மீகர் அத்தியாத்மிக ராமாயணத்திலும், மகாவிஷ்ணு பகவற்கீதை உத்தரகீதையிலும், ருத்திரன் சிவகீதையிலும், பிர்மா பிர்மகீதையிலும், ஸ்ரீராமர் ராமகீதையிலும், திருவாய்மலர்ந்திருப்பதன்றிச் சுகப்பிர்மரிஷிக்கு நாரதரும், சனக சனசனந்தனுதியர்க்குச் சாம்பவனும், பரத்வாசருக்கு வால்மீகரும், ஸ்ரீராமருக்கு வதிஷ்டரும், சுக்ராசாரியருக்குப் பிருகுரிஷியும், பிரகலாதனன் அருச்சுனன் உத்தவராதியோர்க்குப் பகவானும், சுவேதகேதுவுக்கு உத்தாலகரும், இந்திரனுக்குப் பிரகஸ்பதியும், விதுரனுக்கு மயித்திரேயரும், தருமருக்குத் தூருவாசரும், மாபலிக்குச் சுக்ராசாரியரும், அனுமாருக்குச் சீதையும், அகஸ்தியருக்குச் சுப்பிரமணியரும், புஜண்டருக்கு அம்பிகையும், சதானந்தருக்குக் கௌதமரும், பகீரதனுக்குத் திரிதுலரும் தேவஹூதிக்குக் கபிலரும் போதித்திருக்கின்ருர்கள்.

ஆதலால் மறந்தும் ஆத்மபரமாத்மாக்களின் பின்னபாவஞ் சொல்லக்கூடாதென்று அறைந்தார். விடோபா "ஓஐயனே! ஆத்மாவே பரமாத்மாவானுல் முத்தியடைவதெது? 1. பந்தத்திலிருப்பதெவர்? 2. ஆத்மாவுக்குக் கைவல்யங் கொடுப்பவர்யார்? 3. மீளாக்கதிக்கு முயற்சிசெய்யுங்காரணமேன்? 4, சாதுக்கள்

சேவையேன்? 5. புண்ணியத்தை யீட்டுவதேன்? 6. சாஸ்திர விசாரணேயேன்? 7. குருவிசுவாசம்யேன்? 8. ஈசுவரபக்தியேன்? என்கிற பலசங்கைகட்கு இடமாகின்றதே. அறிவிலேனுக்கு அன்பாயனுக்கிரகம் புரியுமையா” என்று துதித்தார்.

ஸ்ரீபாதஸ்வாமிகள் “ஒவிவேகவிஸ்தீரணனே! முக்தியடைவது ஜீவனென்று உரைக்கத்தகும். 1-அச்சீவினை மிகத்தெளிவுடன் ஆராய்ந்து நன்ருயறிவூன்றி விசாரிக்கில் சுத்தசூன்யமாயிருக்கும் நிழலோடு போராடுவதுபோல் மதபேதகர் புறக்கரண அகக்கரணுதிகளின் கூட்ட விசேஷத்தால் நானென்று அபிமானம் பூண்டிருக்கும் ஜீவத்வத்தைச் சிறுபிள்ளைகள்விளையாடலில் இவன் ராஜன் இவன் மந்திரி யென்கிற பலகோட்பாடுகளை ஏற்படுத்திக்கொண்டு விவகரிப்பதுபோல இல்லாத ஜீவத்தை ஏற்படுத்தி அதன்மேற் பாரத்தைச்சுமத்தி அநித்தியமான மாயா சம்சாரத்தில் மனப்பிரமைகொண்டு இல்லாததை யுண்டாக்கும் மாயாசம்பந்தத்துக்குள்ளாக்கி ஜனனமரண சாகரத்துக்குள் அமிழ்ந்திருக்கிருர்கள். தான் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவாயிருக்க, மாயாந்தகாரத்தால் மறந்து தானல்லாத தேகாதிகளைத் தானென்று மிறுமாப்புற்று, நாடு நகர் பெண்டு பிள்ளை பண்ட பதார்த்தங்களைச் சதமென்றும், சுகந்தருமிதமென்றும் நம்பிப் பிரத்தியட்ச துக்காத்பமான விவைகளை நித்யானந்தமாகப் பாவித்துத் தன்னுலே தான் கெட்டால் அண்ணுவி யென்ன செய்வான் என்கிற பழமொழிப்படி க்ஷணபங்கமான காயத்தைக் காப்பாற்றிக் காந்தையரைப்போற்றித் தான் இன்ன வஸ்துவென்று அறியாமல் தேகேந்திரிய பாவமடைவதே பந்தம். இவர்கட்குத் துக்கமயமான சரீரமே கற்பகாலங் கடந்தும்சொந்தம். தானல்லாவாக்கையைத் தானெனப் பிரமிப்பதே பவதொந்தம். ஸ்தூல சூட்சும காரணமென்னும் திரிசரீரத்தை யாராய்ந் தறியாததே மதிமந்தம். 2-என்தேகம், என்கண், என்செவி,என்வாய்,என்மனம், என் பிராணன், என் சீவனென்று உரைக்கும் நீ வேருயிருந்து ஜாக்ராவஸ்தையில் இந்திரிய வியாபாரத்தையும், சொப்னுவஸ்தையில் மனேவியாபாரத்தையும், சுழுப்தி யவஸ்தையில் சுத்த சூன்யமாயிருக்கும்ஜீவத்தன்மையையும்சாட்சியாயறிந்துகொண்டிருக்கும் உன்னைக் கரதல நெல்லிக்கனிபோலக்காட்டுங் காரண குருவே மோட்சமளிக்கும் ஜெகதீசுவரனுகும். 3-வைகுந்தமாதி யடைந்த ஜயவிஜயா ளாதியோர்க்குப் பின்னும் ஜன்மம்வந்தது

போல் தனக்குப் பிரத்திசட்ச நகரமான தனுவுண்டாகாமல் ஜாக்ர சுழுப்தி நிலையையடைய முயற்சிப்பதே பரமாத்மாவில் ஐக்யப்படுங் காரணமாகும். 4-துர்க்கந்தமான விஷயானந்த போகத்தில் மலத்தை யாசித்த சிறுவண்டைப்போலவும், பன்றியைப்போலவும், அமிழ்ந்து இடையூறுசெய்யும் எமனுக்கு இரையாகும் சரீரவாஞ்சையையும், துக்கத்தைச் சுகமாகக்காட்டும் இந்திரியபோகத்தை மேன்மேலும் வாஞ்சிக்கச்செய்யும் துர்ச்சங்கம் நீங்கி இந்திரிய் நீக்கி வைராக்கியசீலராய்ச் சதா சமாதிநிஷ்டானுபூதியால் அகண்டானந்தத்தால் திருப்தியடையச்செய்யும் சற்சங்க சகவாசஞ் செய்யவேண்டுவது அவசியமாகும். 5-அனித்யமாகிய தேகத்தைக்காக்கும் புண்ணியத்தையளித்து நித்யமான பிரமபதத்தை அபேட்சித்து ஸ்ரீஹரிபாதந் தாமனை அந்தியகாலத்தில் தரிசித்து, மறுஜெனனத்தில் சிறுத்தொண்டனுய்ப் பிறந்து கார்த்திகேயரால் பிரமக்ஞானம் உபதேசிக்கப்பெற்று புண்ணிய பதவிகளைத் தரிசித்து விதேக கைவல்யத்தையடைந்த கர்னனைப்போலத் தர்மத்தைப் பெருக்குவதே உத்தமர் துதிக்கும் முத்திக்கு வழியாகும். 6-மூடசிரோமணிகளாகிய சிலர் காரியகுருக்கள் போதிக்கும் யாதோ ஓர் நிலையில் மனதை நிறுத்தி எதையோ ஒன்றைத் தியானித்து மற்றோர் மார்க்கத்தைச் சிரேஷ்டமாய்ப் பேச அதில் வாஞ்சைகொண்டு முன்னும் அனுஷ்டித்ததை வெறுத்துச் சஞ்சலமடையச்செய்யும் அவிவேகஞானத்திற் புகாமல் மனோதிடத்தையும் சமபாவனையும் சந்தோஷத்தையும் சாந்தத்தையும் ஏகத்தியானத்தையும் நிர்ச்சலசித்தத்தையும் அனுபவக்ஞானத்தையும் திரியாவஸ்தைகளின் மர்மத்தையும் மனோவுற்பத்திநாசத்தையும் பவபந்தம் வந்த சம்பந்தத்தையும் பயசாஸ்திரமான கர்மகாண்டத்தையும் நான் நீயென்னும் அகம்பாவத்தையும் மாற்றும் ஞானசாஸ்திர விசாரணையை அகத்தியஞ்செய்யவேண்டும். 7-மரணபவமென்னும் காலநேமியிற் சுழன்று அலுத்துத் துன்பம் வலுத்து மோகாந்தகாரக்கூபத்தில் அமிழ்ந்து நன்கு தீதறியாப் பசுவைப்போலாகிய பசுவென்ற பேரையே யடைந்து, மேலுமேலும் உழலாமல் ஊனக்கண்களை மறைத்து ஞானக்கண்களைத் திறந்து அநேக ஜன்மங்களுக்கு வித்தான சஞ்சிதகர்மத்தைப் பஞ்சுமூட்டைபற்றிய ஊழித்தீயைப்போலெரித்துத் ததாகாரமாயிருந்து சதாகாலமும் ஆனந்தமயமாயிருக்கச்செய்யும் ஆசிரியர் மேல் விசுவாசம் அகத்தியமிருக்கவேண்டும். 8-அபமிர்த்திய

வாதிகளை நீக்கி அதோகதிக்காளாக்கும் கொடிய மனதைப் போக்கிப் பூரணக்ஞானியாகாமல் மரித்த உத்தமருக்கு மறுஜென்மத்திற் றெளிவளித்து, அப்பா பிரகலாதனை இனிப் பிறவாவரங் கேளென்று உரைத்ததுபோலுரைத்துச் சங்கடமானகாலத்தில் பிரசன்னமாய் வந்து களிப்படையும்படியான வரங்களைத் தந்து காத்து இரட்சிக்கும் இஷ்டதேவதைமேல் பூரணபக்தியு மிருக்க வேண்டும். என்று விடோபா கேட்ட நவசங்கைகட்கும் உத்தாமுரைத்து இனி நீ தேகாதிகளை நியதிசெய்து ஆத்மாவாகி ஆத்மாவே பரமாத்மாவென நம்பி ஆனந்தமடையலாமென்றறைந்தார். விடோபா ஆத்மாவே பரமாத்மாவென்று அறிந்ததனுல் ஆனந்தமடையலாமோ என்ருர். ஸ்ரீபாதசுவாமிகள் மந்தகாசம்புரிந்து நீ ஆனந்தஸ்வரூபமாகயிருக்க வேறு ஆனந்தத்தைத் தேடுவானேன் என்ருர். விடோபா நான் ஆனந்தஸ்வரூபம் எப்படியாவேன்? ஆனந்தமாயிருப்பவனுக்கு இந்தத் துக்கமிருக்குமோ என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் உனது யதார்த்தஸ்வரூபத்தை இன்னம் நீயறியாமல் அஞ்ஞானமயமாகவே யிருப்பதால் ஆனந்தமயமாகவில்லை என்ருர். விடோபா தேகேந்திரிய கரண பிராண ஜீவவிருளை யறியும் ஆத்மாவே நானென்று அறிந்துக்கொண்டும், ஆனந்தமுதயமாகவில்லையே என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் தேகாதிகள் தானல்ல; ஆத்மாவே தானென்று அறிந்தபடி ஆத்மஸ்வரூபமா யிருந்தாலல்லவோ ஆனந்தரூபமாவாய் என்ருர்.

விடோபா ஆத்மஸ்வரூபமாவதெப்படி அதற்குச் சாதனமென்ன? திருவாய்மலர்ந்தருளுமையா வென்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் தேகாதிகள் தானல்லவென்று நியதி செய்தவண்ணம் தேகாயாசங்களுக்கும் இந்திரியசுகங்களுக்கும் மனோராச்சியங்களுக்கும் இடங்கொடாமல் நிக்கிரகஞ்செய்து ஆத்மாவே தானுகி விஷயாதிகளையடக்குங் கோனுகி மானுபிமானங்களைக் கடந்து மௌனமுத்திரையையடைந்து சங்கல்ப விகல்பத்துக்கு உட்படாமல் நிர்விகல்ப சமாதியைவிடாமல் இருப்பதே பிர்மானுசந்தானம் என்ருர். விடோபா பகிர்முக திருஷ்டி நீங்கி அந்தர்முக திருஷ்டிஓங்கி நிர்ச்சலனமாயிருப்பதால் அகண்டானந்தத்தை யனுபவிக்கக்கூடுமோ? என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் நனவிற் சுழுப்திநிலையையடைவதே ஆனந்தம் என்ருர். விடோபா நியதி செய்து சூனியமாக்கிச் சாட்சிஸ்வரூபமாகி அசையாச்சித்திரம்போலிருந்தும் ஆனந்த முதயமாகவில்லையே

என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் கருவிகாணுதிகளொழிந்த சுழுப்தி எவ்விதமாயிருக்கிறது? என்ருர். விடோபா ஆனந்தமாயிருக்கிறது என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் என்னகாரணத்தால் ஆனந்தமாயிருந்தது? என்ருர். விடோபா பிரபஞ்சவியாபாரமும் மனேவிகல்ப மில்லாமையால் ஆனந்தமாயிருந்தது என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் சுகதுக்கங்கள் மனதிலிருப்பதாலும் மனம் சுழுப்தி யவஸ்தையில் மறந்தாலும், வேறு கருவிகளில்லாமல் எல்லாஞ் சூனியமாகி ஆத்மா ஒன்றுமாத்திர மிருந்ததால் ஆனந்தமாயிருந்தது. அவ்வானந்தமே ஆத்மஸ்வரூபம் என்ருர். விடோபா இந்தச் சாக்ராவஸ்தையில் ஆனந்தமாயிருப்பது எப்படி? என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் அகக்கரண புறக்கரணங்கள் எப்போதும் துக்கமயமேயாகும். ஆத்மா எப்போதும் ஆனந்தமயமேயாகும். இதுதெரியாமல் தேகாதிகளின் பீடையை ஆத்மாவின்மேல் ஏன் சுமத்துகிருய்? என்ருர். விடோபா தேகேந்திரியாதிகளின் துன்பங்களால் ஆத்மானந்தம் மறைபடுகிறதே? என்ருர்.

ஸ்ரீபாதஸ்வாமிகள் மரணபரியந்தம் தேகாதிகளுக்குச் சுகதுக்கம் வந்துகொண்டேயிருக்கும். ஆத்மாநுபவமுடையவனுக்கு அச்சுகதுக்கங்கள் சொற்பன காட்சிபோல் தோன்றியுந் தோன்ருமலிருக்கும். இப்படி தோன்றுவதும் அப்யாசிக்கு அல்லாமல் ஆரூடனுக்கு ஒன்றுந்தோன்ரு ஆனந்தமாகவே யிருப்பான் என்ருர். விடோபா இப்படி ஆனந்தமயமா யிருப்பவன் தானே மோட்சபாக்கியம் பெறுபவன்? மற்றவர்கள் அடையக்கூடாதோ? என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் பிரமவித்து பிரமவரன் பிரமவரியான் பிரமவரிட்டன் என்கிற நால்வரும் மோட்சமடைபவர்களே. ஆனுலும் தான் இன்னதேசத்தி லிருக்கிறதும் தான் இன்னனென்பதும் மலசல விசர்ச்சனையாவதும், சடுசரங்களின் சுவையும் அறியாப் பிரமவரிஷ்டனே சிரேஷ்டன். இவனேபிர்மானந்தவாரியில் மூழ்கித் தன்னை மறந்து ஜீவன்முக்தித் தன்மையை கரதலக்கனிபோலே அடைந்தவன் அவ்வரிஷ்டபதத்தையே யடைந்து ஆனந்தானுபோகம் பெறக்கடவாய்என்ருர். விடோபா ஜீவனிருக்கும்போதே மோட்சமடையக்கூடுமா? என்ருர். ஸ்ரீபாதஸ்வாமிகள் மோட்சமென்பதின் அர்த்தம் மோசனமாம். மோசனமென்பது பந்தவிமோசனமாம். பந்தமே நரகம். பந்தநிவர்த்தியேமோட்சம். துக்கமேநரகம். பிரமானந்தமோட்சமன்றி வேறு மோட்சசாதனம்எங்குமில்லை. ஆதலால் துக்கமய

மான வியாபாரங்கள் ஒழிந்து சதா ஆனந்தமயமாயிருப்பாயப்பா என்றார். விடோபா அடியேன் பேரின்பவாரிதியில்மூழ்கி ஜீவன் முத்தியடைய எத்தனை நாள் செல்லுமோ? தேவரீருடைய பரிபூரண தயை எக்காலத்தில்வருமோ? என்று அயர்ந்து நின்றார். ஸ்ரீபாதஸ்வாமிகள் அப்பா ஒப்பிலாபிரமக்ஞானியே! என்னிரு கண்மணியே! இன்றுடன் தேகாபிமானத்தை விடுத்து வலிமையான இச்சையைத்தடுத்துக் குட்சிபாதையின் நிமித்தங் கிடைத்ததுண்டு, உன்னையண்டினோர்க்கு ஆத்மானுபவத்தையே விண்டு மனவெண்ணங்களை மாய்த்து மானாபிமானங்களைத் தேய்த்து ஆத்மஸ்வரூபமாய்ப் பரமாத்மாவில் ஐக்யமாய்ப்பரிபூரணமாய்ப் பிரமானந்தபரவசனாய் மௌனசமாதியை யடைந்திருக்கக் கடவாய் என்று பூரணாபிஷேகஞ்செய்து சைதன்ய சுவாமியென்கிற பேரைக் கொடுத்துத் தானும் பரமசமாதியடைந்து ஆனந்த மேலீட்டால் தன்னைமறந்து அசைவற்றிருந்தார். விடோபா ஆசாரியருடைய பூரணகடாட்சம் பெற்றுக்கொண்டதால் பஞ்சு மூட்டையில் நெருப்புப்பற்றியதுபோலச் சகல சங்கல்பங்களும் பஸ்பமாய்ப் பரமானந்த நிஷ்டையிற் பசுமரத்தாணிபோற் பதிந்து, தன்னைமறந்து தலைவனிற்கலந்து பேய்பிடித்தவன்போலவும்சேய் இருப்பதுபோலவும் வாரணாசியில் பிரகாசித்துக்கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினார்.

விடோபா ஞானோபதேச அத்தியாயம் முற்றிற்று.

---

ஐந்தாவது

## விடோபா கிரகத்தாசிரம அத்தியாயம்



வாருங்கள் சித்தசிகாமணிகளே! என் இருகண்மணிகளே! விடோபா வாரணாசியில் இவ்விதமாயிருக்கையில் அலங்காவதியில் சிதோபந்து "ஓ பகவானே! என் அருமைப்புத்திரியைச் சம்சாரயிச்சையில்லா விடோபாவுக்குப் பாணிக்கிரகணம் செய்யும்படியாய்ச்செய்து, என்கழுத்தைக்கொய்து, சதிபதிகள்ஒற்றுமையோடிருக்காமல் என்னைப் பிரித்துவிட்டாயே; ஒப்பில்லாப் பதிவிரதையாகியஎன் தனையை படுந்துயர் பார்க்கஎன்னால் ஆகவில்லையே; தீராததொல்லையே; ஓதெய்வமே! இனி என்ன செய்வேன்" என்று தியானஞ் செய்துக்கொண்டே வந்தார். அவர்

மனைவியோ விடோபாவும் ருக்மாபாயும் சந்தோஷமாய்க்கூடிக் களித்திருக்கக் கருணைகூறுவாயென்று இலட்சுமியைப் பூசித்துக்கொண்டே வந்தாள். ருக்மாபாயி நாடோறும் அதிகாலையி லெழுந்து சக்கரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஈரவஸ்திரத்துடன் அரசும் வேம்புங் கலந்திருக்கும் விருட்சத்தை நூற்றெட்டுதரம் பிரதட்சணஞ்செய்து தன் பதியின் திருநாமமாகிய விடோபாவென்னுந் திருநாமத்தையே பதினாயிரம் உருவேற்றி மூன்றாஞ்சாமத்தில் வீட்டையடைந்து, ஓர்பொழுது உண்டு தரையிற்புரண்டு நல்ல வஸ்திராபரணம் அணியாமல் தாய் தந்தையரோடும் பேசாமல் கூந்தல் சடைகளாய்த் தொங்க, பார்த்தோர் பராசத்தியென்றுவணங்க, பேய்பிடித்தவள்போல் குணம் வேறுபட்டுக் கிரகஸ்தாசீர்மத்துக்கு மாறுபட்டு நாள் கழிக்கத் தொடங்கினாள். இப்படி பதினாறுமதிகள் கழிய தாய் தந்தை தனையை யென்னும் மூவர்செய்யும் தபோபலமானது விடோபாவின் மனதிற் பிரவேசிப்பதனாற் பயனில்லையென்று அவருக்கு சன்யாசங்கொடுத்த ஸ்ரீபாதஸ்வாமிகளின் மனதிற் பிரவேசித்து, அவருடைய ஆரூடக்ஞானத்தைக் கலைத்து, சஞ்சாரசமாதி செய்யும்படியான சலனத்தைக் கொடுத்து, அஃதறியா ஸ்ரீபாதஸ்வாமிகள் சஞ்சாரசமாதி செய்யவேண்டு மென்கிற எண்ணங்கொண்டு; வாரணாசியைவிட்டு அலங்காவதியை நோக்கிப் புறப்பட்டுப் பல நாடுகளைக் கடந்து சக்ரதீர்த்தத்தை யடைந்து அதற்கு அருகாயிருக்கும் அரசவிருட்சத்தின் கீழ் ஆயாசத்தால் சயனித்துக்கொண்டு ருக்மாபாயின் கோரிக்கை ஈடேற்றவந்த ஜகதீசுரன்போல பிர்மானந்த நிஷ்டையில் எழுந்தருளியிருந்தார்.

இப்படி மறுநாள்பரியந்தம் அசைவற்று ஆனந்தபரவசத்தில் தன்னை மறந்திருக்கும் அற்புதத்தைக்கண்ட ருக்மாபாயி இவர் யாரோ மகாபுருடனென்றும், இப்பேர்க்கொத்த மகாத்மாவால் தீராக்குறையுமுண்டோவென்றும் அதிசீக்கிரமாய் வீட்டையடைந்து பலகாரமும் பரமான்னமும் ஏந்திக்கொண்டு நமது சஞ்சலம் நீங்குமென்று வந்து அவரருகிற்சென்று பய பக்தியுடன் நின்று, "ஓ சுவாமி! அன்னமில்லா ஆயாசத்தால் களைத்திருக்கின்றீரோ? அல்லது பிர்மானந்த மேலீட்டால் தன்னை மறந்திருக்கிறீரோ? ஓ பகவானே! அடிமைகொண்டு பலகார பரமான்னமும் உட்கொண்டு ஆயாசந்தீர்த்துக்கொண்டு பிர்மநிஷ்டையில் எழுந்தருளியிருக்கலாம் எழுந்திரும் சுவாமி"

என்று இனிய குரலோடு அவர் நிஷ்டை பிரஷ்டமடையக் கூப்பிட்டாள். குயிலோசைபோன்ற தொனியைக்கேட்ட, ஸ்ரீ பாதஸ்வாமிகள் நிஷ்டைகலைந்து கண்களைத் திறந்து ருக்மா பாயைப் பார்த்து கரங்களைச்சேர்த்து, "ஓ அம்மா! தவவேடமா யிருக்கின்ற நீ யார்? என்ன குறையால் வாட்டமுற்றுத் தவ நாட்டத்தி லிருக்கிறாய்?" என்றார்.

ருக்மாபாயி "ஓ சுவாமி! எனக்குற்ற குறையைப் பின்னால் சொல்லுகிறேன்; பலகார பரமான்னமுண்டு ஆயாசந் தீரு மையா" என்று வணங்கினாள். ஸ்ரீபாதசுவாமிகள் பசிமிகுதியால் புசித்து உன்குறையைச் சொல்லுமம்மா என்றாள். ருக்மாபாயி எனக்குப் புத்திரபாக்கியம் வேண்டும் என்றாள். ஸ்ரீபாதசுவாமி கள் ருக்மாபாயிசெய்த உபசரணைக்குச் சந்தோஷப்பட்டு, "ஓ அம்மா! உனக்கு நான்கு சிசுக்கள் பிறக்க வரமளித்தேன். இவ் வேஷத்தை மாற்றி உன்கணவனோடு சந்தோஷமாகக்கூடி யிருப் பாயாக; சமஸ்த சுபங்களும் பெற்று வாழ்ந்திருப்பாயாக" என்றார். அதுகேட்ட ருக்மாபாயி நமது கணவன் வரலாற்றை யுரைக்குமுன் நான்கு கான்முளையைப்பெற வரமளித்துவிட் டாரே. நமது காவலனைக் காண்பது எப்போ? களிப்புடன் சேர் வது எப்போ? தனயரைப் பெறுவது எப்போ? சந்தோஷ முறு வது எப்போ? என்று நகைத்தாள். ஸ்ரீபாதசுவாமிகள் "ஓ அம்மணி! என்வாக்குப்பொய்க்குமென உன்னியோ நகைத்தாய்? திரிமூர்த்திகளும்தடுத்தாலும் என் ஆசீர்வாதத்துக்குத்தடைவரா மல் மாந்தாதாவின் பத்தினிக்கு நான்குபுத்திரபாக்கியம் அளித்த ஓர் முனியின் வாக்கியத்தின் உறுதிப்பிரகாரம் நீ நான்கு பிள்ளை களைப்பெற்றுச் சுகமுற்றிருப்பாய்" என்றார். அவ்வுறுதி வாக்கி யத்தைக்கேட்ட ருக்மாபாயி இப்படியும் நமக்கு அனுகூலகால முண்டாகுமா? நிச்சயமென நம்பலாகுமா? என்று களிப்பின் மிகுதியால் மேன்மேலும் மந்தகாசம்புரிந்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்து ஒன்றுந் தோன்றாதவளாய் பதுமைபோல் அசை வற்று நின்றாள். ஸ்ரீபாதசுவாமிகள் சந்தேகங்கொண்டு "ஓ அம்மா! நீ நகைத்துக் கண்ணீர்விட்டு அழுங்காரணம் ஏன்? தெரியச் சொல்லுவாய்" என்று வற்புறுத்திக் கேட்டார். ருக்மா பாயி "ஓ என்னுண்டவனே! உமது வாக்கியப்படி சுபமங்கிலியத் துடன் சகலசாம்பிராச்சியமும்பெற்றுவாழ்வது நிச்சயமாயினும் அக்கினியில்லாமல்பாகமாகுமா? எண்ணெயில்லாமல்விளக்கெரி யுமா? ஜலமில்லாமல் அங்குரம் புறப்படுமா? விருட்சமில்லாமல்

பலமுண்டாகுமா? புருடனைப் பிரிந்த நான் புத்திரரைப் பெறக்கூடுமா?'' என்றாள். ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓ அம்மணி! உன் கணவன் வெறுப்பால் உன்னைப்பிரிந்து எங்கிருந்தாலும் என் ஆசீர்வாதப்பலனால் உன்மேல் விருப்பங்கொண்டுவந்து உன்னைச் சேர்வான். இனி அதைரியப்படாதே" என்றார். ருக்மாபாயி "ஓ சுவாமி! சமுசாரத்தி லிருந்தபோதே தொடாத என்கணவன் இப்போது சன்னியாசியாயிருக்கின்றாரே. அவர் சமுசாரத்துக்குட்படுவாரா? அன்பாய் என்னையுந் தொடுவாரா? காரணஞ் சொல்வதற்குமுன் அவசரப்பட்டு ஆசீர்வாதஞ்செய்தீரே. கருணைமழைபெய்தீரே. உமது வாக்கியப்படி நடப்பதற்குச் சன்யாசியான என்கணவன் சமுசாரியாகவேண்டுமே'' என்றாள்.

ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓ புண்ணியவதி! ஆயிரம்பேர்களுக்குத் தான் சிஷனாகலாம் அன்றி ஒருவனுக்கு ஆசானாவது கூடாது. ஏனெனில்? சப்தநகரங்களுக்கு அக்கினி வைப்பதும், சிஷனுக்கிருக்கும் எழுவகைப்பிறவிகளை மாற்றுவதும் ஒப்பாகும். காரணம் எழுபட்டணங்களை எரிப்பதனால் உண்டாகும் பாவத்தை நீக்குவது லேசாகவும், அநேக ஜன்மங்களுக்கு வித்தாயிருக்கும் மாணாக்கனுடைய சஞ்சிதகர்மத்தைப் பஸ்பமாக்குவது கடினமாகவும் இருக்கும். ஒரு சிஷ்யனை ஜன்மசாகரத்து அமிழாமல் மோட்சமடையச்செய்தல் எளிதானதல்ல. ஒருவனைக் கிருதார்த்தனாக்க ஆசான் தான்செய்த தவத்தையெல்லாம் தாரைவார்க்கவேண்டும். இதையறியாக் காரியகுருக்கள் டம்பத்துக்காகவும், பணிவிடைக்காகவும், அர்த்த நிமித்தமாகவும் அநேகரைச் சீஷர்களாக்கிக்கொண்டு அதோகதிக்காளாகிறார்கள். அதுபோல உனதுகணவன் சம்சாரியாயிருக்கச் சன்னியாசங்கொடுத்த ஆசான் எவன்? அப்படி சன்னியாசங் கொடுத்த தேசிகனும், காஷாயம் பெற்றுக்கொண்ட மாணாக்கனும் குற்றத்துக்குள்ளாவார்கள். நல்லது உன்கொழுனன் எந்ததேசத்திலிருக்கிறான்? யாரிடம் உபதேசம்பெற்றுக்கொண்டான் சொல்லுமம்மா?" என்றார், ருக்மாபாயி "ஓ சுவாமி! இப்போது காசிதேசத்திலிருக்கின்றார். உபதேசம் யாரிடம் பெற்றுக்கொண்டாரோ யானறிகிலேன்" என்றாள். ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓ பாக்கியவதி! என்னகாரணத்தால் உன்னைப் பிரிந்துபோனான்? பிரிந்து எத்தனை நாளாயிற்று? பதிவிரதையான நீ அவனைத் தொடர்ந்து போகாமலிருக்கக் காரணமென்ன?" சொல்லுமம்மா என்றார். ருக்மாபாயி தன்கணவன் தந்தைதாய் விவாகஞ்செய்ய, அதைத்

தடுத்து யாத்திரை வந்ததும், அலங்காவதியை யடைந்ததும், தன்வீட்டில் சயனித்ததும், தன் தந்தைக்குப் பகவான் சொர்ப்பனஞ் சாதித்ததும், மறுநாள் கணவனுடைய கனவிலுரைத்ததும், ஆர்வலன் நடுராத்திரியி லெழுந்துபோனதும் தான்மறித்ததும், அசரீரி விவாகஞ் செய்துக்கொள்ளென்று பகர்ந்ததும், தந்தை பலவந்தமாய்ப் பாணிக்கிரகணஞ் செய்ததும், ஐந்தாறு வருஷங்களாகத் தன்னை யேரிட்டுப் பாராமலிருந்ததும், தன் தாய் தந்தைமரித்த சாக்கை முன்னிட்டுக்கொண்டு காசிக்குப் பிரயாணப்பட்டதும், தன் தந்தைகூடவே தொடர்ந்ததும், பின்பு சன்னியாசியாக இச்சையிருப்பதை வெளியிட்டதும், பதி வாக்கியத்தை மறுத்தல் பதிவிரதைக் கழகல்லவென்று தன்னை மறித்துப்போனதும்சொல்லி முடித்து, “ஓ என்னையனே! என் நாயகன் என்னைப்பிரிந்து பதினாறு திங்களாயிற்று. பதிவாக்கைக் கடக்கக் கூடாக்குறையால் அவரைத் தொடர்ந்துபோகாம லிருந்துவிட்டேன். காரணங்களிப்படியிருக்க யான் புத்திரரை எவ்விதமாய்ப் பெறுவேன்?” என்றாள்.

ஸ்ரீபாதஸ்வாமிகள் “ஓ விரதசீலியே! அதிதிகட்கு அனுகூலியே! உன்மணாளன் குணங் குறி ரூபம் வயது சொல்வாயம்மா?” என்றார். ருக்மாபாயி அவர் குணாதிசயங்களைச் சொல்லிக்கொண்டேவர, அதுகேட்ட ஸ்ரீபாதஸ்வாமிகள் அம்பலத்தில் கொண்டுவரப்பட்ட விபசாரியின் மனம்போலவும், தண்டனைக்குட்பட்ட குற்றவாளியின் நெஞ்சம்போலவும், உள்ளங்கலங்கிப் பித்தசுரக்காரனுக்கு மதுரமான சர்க்கரை கசப்பதுபோலவும், விடநாயகிக்கு நிஷ்காமியான கணவன்மேல் வெறுப்புறுவதுபோலவும் துவேஷமுற்பவித்து, “ஓ பதிவிரதையே! உன் ஆர்வலன் நாமதேயம் என்ன?” சொல்லுமென ருக்மாபாயி கணவன் திருநாமம் வாக்காற் சொல்லக்கூடாக்குறையால தரையில் வரைந்து அத்திவ்யநாமத்துக்குச் சிரசாஷ்டாங்கமாய் வந்தனஞ்செய்தாள். அதைக்கண்ட ஸ்ரீபாதஸ்வாமிகள் தனது மாணாக்கன்மீது அதிககோபங்கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு இக்கணம் அந்த விடோபா வென்னும் பொய்யனைப் பஸ்பமாய்ப்போகச் சபித்துவிடுவேன். ஆ! ஆ! உனக்குக் கொடுத்த ஆசீர்வசனத் தடையாலல்லவோ என்னிடம் சன்யாசம் வாங்கிக்கொண்ட உன் கணவனுக்குச்சாபங்கொடுக்காமல் பொறுக்க நேரிட்டது. சொல்வதற்கரிய பத்தினியாகிய உன்னை மோசஞ்செய்து என்னிடம் சத்தியம்பேசி என்னைக் குற்றத்துக்குள்ளாக்கிவிட்டான். இப்

போதே காசிக்குப்போய் அவனை உதைக்கிறேன் நையப்புடி சிதைக்கிறேன்" என்று ஆக்ரோஷத்தோடும் வாரணாசியைநோக்கிப்போனார். ருக்மாபாயி "ஓ பகவானே! இதென்ன விபரீதம் நேரிட்டது. இதற்குநானென்னசெய்வேன்" என்று அதிசீக்கிரமாயோடி அவர் பாதாம்புயங்களில் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து "ஓ எங்களாண்டவனே! என்பதி பிராணனோடிருக்கிறார் என்கிற கேள்வியே எனக்குச் சகலபாக்கியமுங் கிடைத்ததற்குச்சமானம். அதையும் இழக்கும்படியானகாலம்நேரிட்டதோ? அதனாலேயே உமக்கு இவ்வளவு கோபம்வந்ததோ? எனக்குப் புத்திரபாக்கியமும் அஷ்டயிஸ்வரியமும்வேண்டியதில்லை. மாங்கல்யபிட்சையேகொடுத்து ஆட்கொள்ளும் சுவாமி" என்று பிரலாபித்தாள். ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓ குணோத்தமியே! உன்பதி சுகசீவியாய் உன்னோடு சந்தோஷத்துடன் கூடியிருப்பான். என் வாக்கியப்படி நான்கு குழவிகளையும்பெறுவாய். நீயாதொன்றுக்கும் வியாகுலப்படாமல்சிலநாள்என்வரவுக்கு எதிர்நோக்கிக்கொண்டிருப்பாயாக" என்று உரைத்து நாடு காடுகளைக்கடந்து வாரணாசியையடைந்தார். பின் விடோபாவிடஞ்சென்று, "ஓ அசத்தியனே யெனப்புகன்று, அடா சைதன்யா! உனக்குச் சமுசாரமிருக்கின்றதா? இல்லையா? உண்மையைச்சொல். இன்றேல் அகஸ்தியர் தன் சீஷனுக்குப் பர்வதாகாரமாகவே யிருக்கச் சாபமிட்டது போலவும், பிரகஸ்பதி தன்மாணாக்கனுக்குக் குஷ்டரோகியாய்ப் போகச் சாபமிட்டதுபோலவும் சபித்துவிடுவேன். கோபாக்கினியாற் றகித்துவிடுவேன்" என்று தூருவாசரைப்போல் கோபாவேசத்தால் துவேஷிக்கத்தொடங்கினார்.

விடோபா இராஜன்முன் குற்றவாளியும், மாமியார்முன் மருகியும், வித்யாகுருவின்முன் மாணாக்கனும், பதியின்முன் விபசாரியும் நடுங்குவதுபோலக் கிடுகிடென்று நடுநடுங்கிப் பூனைபோலொடுங்கி வாய்குளறி நாத்தடுமாறி, "ஓதெய்வமே! அகப்பற்றற்றவனுக்குப் புறப்பற்றென்னும் சமுசாரமேது? நானென்னும் மேன்மையேது? எனதென்னும்பான்மையேது? பெண்டுபிள்ளை தாய்தந்தை தமரென்னும் பந்தமேது? இவர்கள்மேல் அபிமானங்கொண்டிருக்குந் தொந்தமேது? அப்படியிருக்க நமது சுவாமிகள் நகைமுகம்வேறுபட்டு மிகவும் வெகுளிமேலிட்டு உண்மை தெரிந்தவர்போல் உனக்குச் சமுசாரமுண்டா? இல்லையா? நிஜத்தைச்சொல்? என்றுகேட்கின்றாரே. மித்திரனிடத்து அசத்தியம்

பேசினுல் விரோதமும், பிரஜைகளிடமும் கைதவமுரைத்தால் அவமரியாதையும், இராஜனிடம் பொய்பேசினுல் தண்டனையும், ஆசானிடம் அபத்தம்புகன்ருல் நரகப் பிராப்தியுமுண்டாகும்" என்று சாஸ்திரமிருக்கின்றது. அல்லாமல் பொய்யானது பஞ்ச பாதகத்திலொன்ருய்ப் பாபங்களுக்கெல்லாம் மூலமாயிருக்கின்ற காரணத்தால் உண்மையே சொல்லவேண்டும். அன்றித் தாய் தந்தை சாபத்தால் எடுத்த தேகத்துக்குப் பீடையும், பெரியோர்கள் கோபத்தால் பல ஜென்மங்களுக்குப் பீடையும், ஆசாரியர் சீற்றத்தால் ரவ்ரவாதி நரகமும்உண்டாகுமே. தாய்தந்தை பெரியோர் தெய்வமுமிட்டசாபம், குருசுவாமிகளால் நிவர்த்தியாகும்.

ஆசானிட்டசாபத்தை அரியராதிகளாலும் அகற்றக்கூடியதல்லவே. இப்போது சமுசாரமுண்டென்று உரைத்தால் முன்னில்லையென்று உரைத்ததைக்குறித்துக் கோபம்வருமே. ஆரியரிடமும் அசத்தியமும்பேசலாகாதே. இதற்குஎன்னசெய்யலாம் என்று பலவிதமான வெண்ணங்களோடுங்கூடி உத்தாஞ்சொல்வதற்குத் தடமாடிக் கண்ணீர்விட்டழுது அடியற்ற பனைபோல் அவரடிகளில் வீழ்ந்துதொழுது, ஓ என்னுண்டவனே! உடல் பொருள் ஆவியென்னும் மூன்றையும் முன்னமே உமக்குத் தத்தஞ் செய்திருக்கிறபடியினுலே இவ்வேழையேன் சிரத்தைத் தரித்துவிட்டாலும் சாம்பலாகப்போகஎரித்துவிட்டாலும்,தேவரீரை நம்பின வடியேனுக்கு ஓர் குறையுண்டாகுமோ? அப்படி குறை நேரிட்டாலும் உமக்கன்றி எனக்கென்கிற சுதந்தரமுண்டோ? ஓ சாந்தஞ் சேர்ந்த சதுர்வேத வேதாந்த உபசாந்தபோதனே! நாதனே! நீதனே! விஞேதனே! அதீதனே! அவதூதனே! நித்தனே! நிமலனே! நிர்க்குண சரணம், சத்யனே! சாந்தனே! சத்குண சரணம், சுத்தனே! சுகிர்தனே! சோதியே சரணம், அத்தனே! அமுதனே! ஆதியே சரணம், கர்த்தனே! கடவுளே! காரணசரணம், புத்தனே!புனிதனே! பூரணசரணம், நிச்சயப்பொருளான நீதியேசரணம், அச்சுதாத்விதவனுபூதியே சரணம், சுந்தரானந்தசுயதுரியனேசரணம், அந்தமாதியில்லாதவரியனேசரணம், மோட்சமீந்தெனையாண்ட முத்தனேசரணம், சாட்சியாயிலகு நிர்ச்சர்ப்பத்தனே சரணம், கருவி காணுதிகளை வென்றவா சரணம், அருவாகியருளாகி நின்றவாசரணம், மமதகந்தையுமிலா மாதவா சரணம், சமதமாதிகளீந்த ஆதவா சரணம், காட்சியருளிய ஞானக் கண்மணியே சரணம், மாட்சியருளும் தூயமனேன்மணியே சரணம், தேவரேத்தித் துதிசெய்

சீலனே சரணம், மூவரோருருவமான மூலனே சரணம்" என்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

அப்போது விடோபாவைச் சூழ்ந்திருக்கும் தொண்டர்களும் ஸ்ரீபாதசுவாமிகளின் பாதங்களிற் பணிந்து, பற்பல விதங்களாகத் துதிக்கலுற்றூர்கள். ஸ்ரீபாதசுவாமிகள் விடோபா தேம்பித் தேம்பி யழுகிறதையும் அவருடைய பணியாளர் தோத்திரம் புரிந்து ஏத்துகிறதையும் நோக்கிக் கோபத்தை நீக்கி, ஓ ஓ! கோபமல்லவா பாபங்களுக்கெல்லாம் மூலம். பொறுமை கடலினும் பெரிதல்லவா? அன்றி ஒருவனைக் கொல்வதா கொலை. மனம் நோகவைப்பதே கொலை. ஒருவனைப் புணர்வதாவிபசாரம். மனதில் வாஞ்சைகொண்டதே விபசாரம். வாக்கினுற் றேத்திரஞ்செய்வதா பூசை. மனதிலுள்ள அன்பே பூசை. ஒருவரையொருவர் தழுவுவதா ஆசை. மனதிலுள்ள பிரியமே ஆசை. அனேக பதார்த்தங்களோடு ஊட்டுவதா அமிர்தம். அன்புடன் அன்னப்பால் ஊற்றுவதே அமிர்தம். பணிவிடைசெய்வதா பக்தி. பயத்துடனிருப்பதே பக்தி. கங்கையில் மூழ்குவதா ஸ்நானம். களங்கமற்றிருப்பதே ஸ்நானம். மடியோடிருப்பதா ஆசாரம், மடமற்றிருப்பதே ஆசாரம். மாடகூடங்களோடிருப்பதா கெம்பீரம். மானத்தோடிருப்பதே கெம்பீரம். தியானஞ்செய்வதா நிஷ்டை. மோனமுற்றிருப்பதே நிஷ்டை. கலைக்ஞானங் கற்பதா வித்தை. பிரமக்ஞானங் கற்பதே வித்தை. கோபமா கொடியது. குரோதமே கொடியது. வாயிலுள்ள பற்களா கெட்டவை. வயிற்றிலுள்ள பற்களே கெட்டவை. ஆதலால் சாந்தமென்னும் ஆபரணம்பூண்டு சாதுவென்று பேரெடுத்த நாம் சாந்தமாயிருக்காமல் சற்சீடன்செய்த குற்றத்தைப் பொறுக்காமல் சன்யாசியாகியும் சமுசாரியைப்போல் கோபத்துக்கு உட்பட்டேனே, தவநிலை கெட்டேனே, கோபத்தினுலல்லவா அனேகம் ரிஷிகள் தவமழிந்துவிட்டார்கள்; நரகத்துக்குட்பட்டார்கள். விஸ்வாம்பரனுன பரப்பிரமத்துக்கு மிகவும்நேசனுன விசுவாமித்திரனை வசிஷ்டர் சாந்தத்தாலல்லவோ வெற்றிபெற்றூர். சாந்தமே சிறந்த பக்தியும் ஜீவன்முக்தியும் சாந்தமே ஏகதியானமும் பிரமக்ஞானமுமாகும். அன்றி மோக்ஷயிச்சையுள்ளவன் நானென்னுமகங்காரமும், எனதென்னு மமகாரமும் அற்றவனன்றி மற்றவனுகான். நானென்பதற்றவன் எனதென்னும் சுதந்தரமொன்று உண்டென்று உரைப்பானு? நானெனதற்றவனே ஞானியன்றி மற்றவர்கள்

ஞானிகளாவார்களா? என்று அனந்தம் விதங்களா யோசித்து, விடோபாவை நேசித்து, "அப்பா விடோபா! உன் வரலாற்றை யெல்லாம் அலங்காவதியிலிருக்கும் ஓர் பதிவிரதையால் கேள் விப்பட்டேன். அசரீரி வாக்கியத்தை மறுக்காமலல்லவோ பாணிக்கிரகணஞ் செய்துக்கொண்டாய். நான் உபதேசஞ் செய்யமாட்டேனென்றல்லவோ பொய்ம்மொழி புகன்ருய். நீ யாதொன்றுக்கும் அஞ்சாமல் என்னுடன்வா. மறுத்தொன்றும் பேசாதே" என்று அழைத்துக்கொண்டுபோய் அலங்காவதியிற் சென்று சிதோபந்து வீட்டின் முன்னின்று, அம்மா ருக்மாபாயி யென்று கூப்பிட்டார்.

அந்திவேளையில் அந்திவண்ணனைப்போல் வந்து கூப் பிடும் ஸ்ரீபாதசுவாமிகள் இனிய தொனியைக் கேட்ட ருக்மா பாயி அதிதுரிதமாய் புறம்போந்து ஸ்ரீபாதசுவாமிகளின் பாதங் களுக்கு வந்தனஞ்செய்து, அவர்பின் ஜடாமகுட காஷாய வஸ்திராவதாரியாய் நிற்கும் தன் கொழுநன் திருவடிகளிற் பணிந்து, பரமசிவமேயெனத் துணிந்து, அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நின்ருள். விடோபா தன் மனையாள் தன்னைப் போலவே ஜடைகள் வளர்ந்து சரீரந்தளர்ந்து பரமசாதுவாய் இருப்பதற்கு ஆச்சரியப்பட்டு சத்குருநாதன் இவளுடன் கூடி யிருக்கச்சொல்வாரோவென்று பயப்பட்டு, அரசன்முன்னிற்குந் திருடனைப்போலவும், விபசாரஞ்செய்து அகப்பட்டுக்கொண்ட அபசாரியைப்போலவும் தலைகுனிந்து நின்றிருந்தார். அத்தரு வாயில் ஸ்ரீபாதஸ்வாமிகள் "அப்பா விடோபா! இவ்வுத்தமி யாருடைய பத்தினி?" என்றுகேட்டார். விடோபா ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமுற்றிருந்தார். ஸ்ரீபாதஸ்வாமிகள் "ஓ விடோபா! அருந்ததி அனுசூயை சந்திரமதி தமயந்தி முத லான பதிவிரதைகளிற் சிறந்த இவ்விரதசீலியை நீக்கி மேல் வேஷமான சன்யாசத்தால் என்ன லாபம் பெறப்போகிருய்? ஆயிரஞ் சன்யாசிகள் ஓர் இல்லற ஞானிக்கு இணையாவார் களா? கற்புள்ள மாது சிரோமணியால் கைவல்யமடைவது உண்மையல்லவா? விரித்துச் சொல்லவா? இவ்வுத்தமியின் கற்பென்னும் அக்கினியால் நாம் இருவரும் எரிந்துபோக மாட்டோமா? சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரஞ் செய்யும் திரிமூர்த் திகளும் அனுசூயாதேவியின் கற்பால் தங்கள் வல்லமை குன் றிக் குழந்தைகளாய்ப் போகவில்லையா? பிருந்தையின் கற்பென் னும் பலத்தால் சலந்தான் திரிமூர்த்திகளையும் செயிக்கவில்

லையா? நளாங்கினியால் ஏழுநாள் சூரியோதயமாகாமல் இவ்வுலகை இருள் மூடிக்கொள்ளவில்லையா? உனக்குத் தெரியாத தொல்லையா? பதிவிரதைகளின் மனதை நோகவைத்தால் ரவ்ர வாதிநரகத்துக் கிடமில்லையா?'' அழகான வாய்திறந்து உண்மை வார்த்தையைச் சொல்லையா?'' என்றார். பின்பு அவர் கரத்தைப்பிடித்துக்கொண்டு, “ஓ என்னப்பனே! இந்த அற்புதகுணமுள்ள கற்பிற்சிறந்த காந்தையைத் தள்ளாமல் என் வாக்கை மறுப்பதற்கு எண்ணங்கொள்ளாமல் நல்லறமாகிற இல்லறத்திலிருந்து பிர்மக்ஞானியாய் மோட்சமடையக்கடவாய். அகத்துறவன்றிப் புறத்துறவால் ஓர் பலனுண்டா? குருவாக்குக்கு எதிர் வாக்கு உரைத்தவருமுண்டா? ஆசானை அவமதித்தவருமுண்டா? ஆசிரியர் ஆசீர்வாதம் பெற்றவர்க்கு ஓர் இடையூறும் வருவதுண்டா? ஓ குருபக்தியிற் சிறந்தவனே! பிர்மக்ஞானிகள் அகட்டிற்பிறந்தவனே! ஆசையை யணுவும்வைக்காமற் றுறந்தவனே! ஆசாரியரே நீரே கெதியென்று அறைந்தவனே! அஞ்ஞானத்திற் குறைந்தவனே! மெய்ஞ்ஞானத்தில் நிறைந்தவனே! அகமமதையிறந்தவனே! ஆனந்தத்தில் மறைந்தவனே! பிரபஞ்ச வியாபாரம் மறைந்தவனே!'' என்று அனந்தம் வார்த்தைகளாடி மிகவுங் கொண்டாடிக் காஷாயத்தை நீக்கி ஜடாபாரத்தைப் போக்கி ஆடையாபரணங்களைச்சிங்காரித்து அழகில்மதனெனப் பூரித்து ருக்மாபாயியையும் அலங்கரித்து அன்பாயுபசரித்து மகா வாக்யோபதேசஞ்செய்து மாசுகள் அனைத்தையுங்கொய்து மூவருந் தேவருந்தொண்டு உங்களுக்குச் செய்யக்கடவதென விண்டு பாக்கியஞ் செய்தவர்களென்று பற்பல வார்த்தைகள் புகன்று இனி நான் போய் வருகிறேன் என்று அவ்விடம்விட்டு அகன்று போகலுற்றார். அப்போது விடோபா ஸ்ரீபாதசுவாமிகளின் பின் தொடர்ந்துபோய் பலதரஞ்சூழ்ந்து பாதங்களில் வீழ்ந்து, “ஓ என்னாண்டவனே! ஆனந்தத்தாண்டவனே! நிசாரமாகிய இச்சமுசாரசாகரத்தில் என்னையமுத்திச் சள்ளையொழிந்ததென்று சற்றுந்தங்காமல் நம்பின என்னைக் கைநழுகவிட்டு ஏகுதலால் என்னுயிருடன் அரைக்கணம் இங்கு தங்கியிருப்பேனா? அடியேன்மீது இவ்வளவு அருவருப்பேனோ? இக்குவலயத்தில் நீரன்றி எனக்கு ஓர் திக்குமுண்டோ? தாயைவிட்டு அகன்ற கன்றுமுண்டோ? அருளே ஓர் உருவாகி என்னை ஆட்கொள்ளவந்த என் ஐயனே! கரதல நெல்லிக்கனிபோல் கைவல்யமளித்த மெய்யனே! சுரர்நரரேத்துந் துய்யனே!

துரிசுகளகற்றிய துய்யனே” என்று தோத்திரஞ் செய்து தாட்டாமரைகளைத் தழுவி கண்ணீராற் கழுவிப் பிரிவாற்றாமையால் ஓவென்று அழுதுக்கொண்டே தோத்திரஞ் செய்யத் தொடங்கினார்.

## குருஸ்துதி



விருத்தம்

உலகம்புரக்குந்திருமாலு முயர்வேதாவுஞ்சங்கரனும்
இலகுமுலகிரேழேத்து மெழிலாலருடேசிகஸ்வாமி
நலமொன்றுமிலாநாயேனை நயந்தாட்கொண்டநாயகனீ
யலதியாரெனக்குத்துணையுண்டிங் கடியேற்கருளியகல்விரே. 1

அகலவைத்தாலெளியேனை யஞ்சேலென்பாரிவண்யாரே
முகமனுரைத்திங்கிருவென்றான் முகுராமில்லாமூடனைப்போல்
பகலுமிரவுந்துதித்தேத்தும் பகவானேயுன்றிருவடியை
அகிலத்தெங்ஙனம்மறந்திருப்பே னந்தோவெந்தாயறியேனே. 2

அறியாமையினாலில்லமென்னு மளற்றிலமிழ்ந்தேனலக்கணுற்றேன்
பிறியாவினையோபெண்ணெனும்பேய் பிடித்தாள்விடுக்காதெனைக்கெடுத்தாள்
முறையோமுறையென்றனைநீவிர் மோசஞ்செய்தீண்டிவண்விடுத்துப்
பிறியேல்பிறியேலருட்குருவே பேரின்பளித்தபெருமானே. 3

பெருமானேயென்பிறவியெனும் பிணிக்கோர்மருந்தேயருந்தவமே
கருமால்விழியார்மயல்வேண்டேன் கனகம்வேண்டேன்கயிலையொடு
திருமால்பதமும்யான்வேண்டேன் றிமிரம்மருளுமகற்றியவுன்
அருளார்பதமேவேண்டுமெனக் களிப்பாய்களிப்பாயனுதினமே. 4

தினமுமுனதுதிருச்சேவை செய்தோர்க்குண்டோதீங்குனைவிட்
டனமுஞ்செலுமோதுயில்வருமோ வரைமாத்திரையுமுனைப்பிரிய
மனமும்வருமோமகிழ்வுறுமோ மறந்துமிருக்கமதிப்பேனோ
கனமுந்தனமுங்கதிபதியு நீயென்றுன்னுங்கடையேனே. 5

உன்னற்கரியபேரொளிநீ யுணர்வுக்குணர்வுமுயிர்க்குயிர்நீ
மன்னுந்தவமுமாட்சியுநீ மனக்கண்டனுக்கண்ணருட்கணுநீ
சொர்னமரசுதூய்மையுநீ சுரருண்ணமுதுஞ்சோபிதநீ
அன்னைதந்தைதெய்வமுநீ யென்றேயிருந்தேனருட்குருவே. 6

அருளேஞானமணிவிளக்கே ஆவித்துணையேயச்சுதமெய்ப்
பொருளேஸ்புரணபுண்ணியமே புனிதஸ்புடமேபோதகமே
மருளேன்மனத்தினுட்டெளிவே மணமார்சுகமேமாதவமே
இருணீக்கிடுமாப்பேரொளியே எளியேனன்பேதென்பருளே. 7

தென்பேசிற்றின்பினைவேண்டாத் திருக்குவாகித்தெளிந்தோர்கள்
அன்பேயகண்டாகார வருளானோருளமென்றகலாநல்

இன்பேமுப்பாழ்கடந்தப்பா லேகப்பொருளில்விழித்தோர்கள்
துன்பேதுமிலாவுபசாந்தத் தூய்மையளிக்கும்வாய்மையனே. 8

வாயுமனமும்மௌனமுமாம் வகையன்றுவகையோடருளிச்
சேயென்றெனையாட்கொண்டவருட் டேவேகோவேமருளிருளும்
மாயும்படிசெய்தெனைமறந்து மாறுவனுபூதியுமேற்கொண்
டோயும்பொழுதில்பழுதுறநீ யுன்னத்தகுமோவென்னிறையே. 9

இறையேயன்னம்பகிர்ந்துகர மெட்டிப்பிடித்தூண் தடுத்தாற்போல்
முறையோடறைக்கப்பாற்கொடுபோய் மோக்கத்தைக்யமாக்கியபின்
குறைநானுலலென்றீவினையோ குருவேதுணையென்றிருப்போர்க்கோர்
குறையேதறைவாய்நிறைவான கோனேசசிகார்நிகரோனே. 10

நிகரில்பதத்தையடைந்தோர்க ணிலையில்வாழ்வைமதிப்பதுபோல்
சிகியென்றறிந்தும்மதிப்பதுபோல் றேனைப்புசித்துக்கடுவுண்டு
மிகவோக்காளம்செய்வதுபோன் மிடியேற்கடுத்ததங்தோவான்
இகமுமிழந்தேனெனைப்போன்ற வேழையுலகிலிலையிலையே. 11

இல்லந்துறந்துன்றனையிரந்த வென்னைமறந்துன்றனைமறந்தே
அல்லலிறந்தின்பினையடைந்த வங்கந்தனைக்காத்தலுங்கடந்து
தொல்லையகன்றேயகமுகத்திற் றூங்குமென்னைப்பகிர்முகமா
இல்லத்துறந்துமல்லலுற வேனீர்வாஞ்சையானீரே. 12

என்று இவ்விதமாகத் தோத்திரஞ்செய்து முறையோவென் றோலமிட்டு அழும் விடோபாவை ஸ்ரீபாதஸ்வாமிகள் வாரியெடுத்து மார்புடனணைத்துக் கடந்தமனமுருகிக் கண்ணீர் பெருகி ஒப்பிலா வென்னப்பனே! இதுகாலபரியந்தம் நான்செய்துவந்த தபோபலமெல்லாம் உனக்குத்தத்தஞ்செய்தேன். உனது முன்னேழு பின்னேழு மரபினர் பாவத்தைக் கொய்தேன். உனக்குத் திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும் புத்திரராய்ப் பிறக்க வரமளித்தேன். உனக்கு உபதேசஞ்செய்ததால் மிகவுங்களித்தேன். நீபிர்மானந்தத்தால் தன்னை மறந்திருப்பாயாக. அகண்ட சாம்பிராச்சியத்தைப் பெற்றிருப்பாயாக என்று ஆனந்தமேலீட்டால் அநேக வரந்தந்து, மிகவுமுவந்து, "ஓவிடோபா! என்மொழி தள்ளாமல் சந்தேகங்கொள்ளாமல் ருக்மாபாயுடன் சேர்ந்திரு. சிலநாள்பொறுத்து சஞ்சாரசமாதி செய்துவந்து உன்னைப் பிரியாமலிருக்கின்றேன். இதைச் சத்திய வசனமென்று நம்புவாய்" எனப்புகன்று போவதற்கு விடைகேட்டார். விடோபா குருவாக்குக்கு எதிர்வாக்கு உரையாக்குறையால் ஓ ஸ்வாமி! சஞ்சல சுபாவமான இச்சமுசாரமுஞ் சமாதி நிஷ்டையைத் தவிர்த்துவிட்டாற்றுனே பிர்மமென்கிற திடம் நீங்கி மடம் ஓங்கி மாயாந்தகா

ரத்தில் மறைந்திருக்கநேரிடும். அதை நீக்குதற்கு உபாயம் ஏதென்று பணிந்தார். ஸ்ரீபாதஸ்வாமிகள் அதுநீங்கப் பிர்மத்தைத் தியானஞ்செய்வாயென்று உரைத்தவாக்கியம்.

## பரப்பிர்மஸ்துதி

விருத்தம்

திருமாலீசனயன்போற்றுந் தேஜோன்மயமாம்பரப்பிர்மம்
சித்தர்பக்தர்நற்றவருஞ் சிவன்முத்தர்பணிபிர்மம்
அரிஞர்வசிஷ்டர்க்கருள்பிர்மம் அகண்டானந்தபரப்பிர்மம்
அரியஜனகர்சுகமுனிவர்க் கன்போடறைந்தபரப்பிர்மம்
அருவாயுருவாயருவுருவா யைம்பூதமுமாம்பரப்பிர்மம்
அருளாய்பொருளாயனுபவமா யதுதானனபரப்பிர்மம்
குருவாம்பிர்மம்குணபிர்மங் குணமுங்கடந்தபரப்பிர்மம்
குறியில்பிர்மந்தனைத்தொழுது கொடியதடைக்குவிடைகொடுப்பாய். 1

திருவருட்பொருளாகியபரப்பிர்மந் திருக்குவாகியபரப்பிர்மம்
திசைமுகன்முதலானவர்பணிபிர்மந் தெருண்மறைகாணுணப்பிர்மம்
அரன்றனக்காசானருள்பரப்பிர்மம் அசிபதத்தொளிர்பரப்பிர்மம்
அருட்சுகர்க்கெழினாரதருட்பிர்மம் அனுமகத்தாகியபிர்மம்
திரிகாணத்தாலறியொணாப்பிர்மந் திருபுடிகுணமிலாப்பிர்மம்
சித்தர்முத்தர்களுந்தேடிடும்பிர்மந் திக்குதேசாதியில்பிர்மம்
துரியமாகிலயிற்றுலங்கியபிர்மஞ் சுயம்பிரகாசமாம்பிர்மம்
சுகப்பிரமந்தனையனுதினமும் தொழுதருட்பிரமமாயிருப்பாய். 2

வேறு

உலகமெலாம்நிறைபொருளை யுயிர்க்குயிராகும்பொருளைவொழிவுக்கப்பால்
இலகியசிர்க்குணப்பொருளை யிதுவதுவாகாப்பொருளையெழிலார்வேத
பலகலைக்கெட்டாப்பொருளைப் பரமானந்தப்பொருளைப்பழையஞானத்
தலமாறுங்கடந்தேழாந்தலத்திலுறும் பொருளையன்பாய்த்தாழ்ந்துவாழ்வாய். 3

வேறு

பொன்னுலகோரும்போதனும்பிரக லாதனும்போற்றியபொருளை
மன்னுபநிஷதவாகமமறைமா வாக்கியத்தர்தமாம்பொருளை
உன்னுதற்கரியயோகமாதிகள்செய் யுத்தமர்க்கரியவான்பொருளைத்
தன்னையாராயுந்தவத்தினர்க்கெளிய தற்பதப்பொருளையேதொழுவாய். 4

அந்தமாதியுங்கீழ்மேலிலாப்பொருளை யற்புதவத்விதப்பொருளைப்
பந்தமில்சுகருக்கெங்குமேநின்ற பரப்பிர்மப்பொருளைமாவாக்யத்

தைந்துமாப்பதங்கட்கிலட்சியப்பொருளை யகனிதப்பொருளைஞானிகட்கே
சொந்தமாம்பொருளைச்சுகந்தரும்பொருளைத் துரியமாம்பொருளையே தொழுவாய்.

நனவினிற்பலர்சூழ்ந்திடவிருந்தைய னடித்திடாகத்திடும்பொருளைக்
கனவினிலொருவீரியன்புரிபோரைக் கண்டுங்களித்திடும்பொருளை
நினைவில்விப்பிரமத்தொருவருமறியா நீலியைப்புணர்ந்துயரின்பந்
தனையுறும்பொருளைச்சாட்சியாம்பொருளைச் சந்ததஞ்சிந்தனைசெய்வாய். 6

ஊமையன்கண்டகனவினைப்போல வுரைப்பதற்கரியதாம்பொருளை
ஆமையைப்போலவைந்துபூதத்தை யடக்கெனவுறுபரம்பொருளை
நாமரூபங்கள்குணங்குறிபாச நாசமில்லாதவான்பொருளைச்
சோமசூரியர்களொளிபலமழுங்குஞ் சோதியாம்பொருளையேதொழுவாய். 7

வேறு

பிரமங்கருத்தாஜகநாதன் பிரானந்தாதிபிறப்பில்லான்
பரமம்பரமேச்சுரன்முதலோன் பகவன்விமலன்வேதார்த்தன்
தருமக்கொடியோன்சர்வேசன் சர்வவியாபிதனிக்கோலான்
கருணாலயனாதியநாமக் கடவுடன்னைப்பணிவாயே. 8

வேறு

பூவலம்வந்துங்காணாப் புண்ணியஞ்செய்துங்காணா
நாவினாற்றுதித்துங்காணா நற்கிரியையினுங்காணா
ஆவியைமறித்துங்காணா அஷ்டசித்தியினுங்காணா
மூவருங்காணாமோன முதல்வனைவணங்குவாயே. 9

குகைதனிலிருந்துங்காணாக் கோயிலுட்புகுந்துங்காணா
மகம்பலசெய்துங்காணா வாழ்வினைத்துறந்துங்காணா
அகமுகமுறுமானந்த வறிவினர்கண்டுங்காணாப்
பகவனையகண்டானந்த பரமனைவணங்குவாயே. 10

வேறு

அரனரியயனுமேத்திடும்போதவ் வசரீரியுரைத்தமந்திரத்தைத்
தருமநற்சனகஸனந்தருக்கன்று சங்கரனறைந்தமந்திரத்தை
அருள்புலஸ்தியர்நாரதர்பிருகுவுக்கு மயன்மகிழ்ந்திசைத்தமந்திரத்தைப்
பிரகலாதனாதியர்க்கரிமொழிந்த பிரமமந்திரத்தினைஜபிப்பாய். 11

ஞானமாம்பொருளேமோனமென்றுணர்த்தி நற்சுகமீயும்வாக்கியத்தைத்
தானெனும்பொருளேவானமென்றுணர்த்தித் தன்மயமீயும்வாக்கியத்தை
மோனமாம்பொருளேஞானமென்றுணர்த்தி முத்தியையீயும்வாக்கியத்தை
நானேநீதானென்னும்வாக்கியத்தை நாடோறுந்தியானஞ்செய்துய்வாய். 12

என்று "விலட்சண லட்சண பாவத்தைக் கொடுக்கும் துவி தாத்வித தியானத்தை உபாசித்து மாயா மயக்கத்தை நீத்து, மோன நிஷ்டையாற்பிரகாசித்து, பரமாத்மஸ்வரூபமாய்விளங்கி

யிருக்கக் கடவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினர். எங்கும் குருரூபமாய்த் தெரியும். குரு துரியானுபவத்தை யுபதேசித்து ஸ்ரீபாதஸ்வாமிகள் சஞ்சாரசமாதி செய்ய அவ்விடம்விட்டு அகன்றார். இப்பால் விடோபா ஜீவதுரியம் பரதுரியமுங் கடந்த முப்பாழுக்கப்பாலான குரு துரியானுபவத்தால் எங்கணும் குருஸ்வரூபத்தையே கண்டு ஆனந்தங்கொண்டு மௌனஸ்திதியை யடைந்திருந்தார். ருக்மாபாயி ஸ்ரீபாதஸ்வாமிகளை அனேகவிதமாகத் துதித்து, அவர் உபதேசித்த மகா வாக்கியத்தை மனதிற் பதித்துத் தன்கொழுனன் றிருவடிகளிற் பணிந்து அழைத்துக் கொண்டுபோய் வீட்டினுள் வீற்றிருக்கச்செய்து, அறுசுவை யுண்டிகளைச் சமைத்து அதிமதுரபாகமாக சமைத்துத் தாய் தந்தை ஆர்வலனுக்கும் படைத்து ஆனந்தசமுத்திரத்தில் மூழ்கினவள்போலக் களிப்புற்றிருந்தாள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

விடோபா கிரகஸ்தாசிரம அத்தியாயம் முற்றிற்று.

---

ஆறாவது

## திரிமூர்த்திகளும் ஆதிசக்தியும்

### உற்பத்தியான அத்தியாயம்



கேளுங்கள் சித்தர்களே! விடோபா குரு ஆக்கினையைக் கடவாமல் மனைக்குள் எழுந்திருக்கும் அற்புதத்தைக் கண்ட சீதோபந்து ஆனந்தவாரியிற் குளித்து அளவிலா வின்புடன் களித்து அருங்கொழுந்துபோற் றளிர்த்து, அழகுள்ள பூங்கொடிபோற் றளித்து, மருகன்வந்த சந்தோஷத்தால் மறுநாள் அலங்காவதியிலிருக்கும் உறவினர்க்கும் மற்றைப் பிராமணர்களுக்கும் விருந்து செய்ய யோசித்து, சகல பதார்த்தங்களோடு அன்னமுஞ் சமைப்பித்துப் பந்துக்களையும் பார்ப்பாரையும் விருந்துண்ண அழைத்தார். அப்போது அவ்வூரில் இருக்கும் அந்தணரெல்லாம் அவரகத்தில் வந்துகூடி சீதோபந்தை நோக்கி, "ஓ அந்தண! உன்னுடைய மருமகனாகிய விடோபா வாரணாசிக்குப் போய்ச் சன்யாசம் வாங்கிக்கொண்டு கண்டோர் வீட்டிலுண்டு பிரஷ்டனாய்ப்போன துஷ்டனை வீட்டில் வைத்துக் கொண்டு எங்களை விருந்துக்கு அழைத்துத் தான் கெட்ட குரங்கு

வனத்தையெல்லாங் கெடுத்ததுபோல நீ கெட்டதன்றி எங்களை யுங் கெடுக்கவா நினைத்தாய். அமிர்தம் புசிப்பவன் சுராபானம் புசிப்பதுபோலவும், வேதமோதுபவன் களாசாஸ்திரம் வாசிப் பதுபோலவும், பிராமணனு யிருந்தவன் நீசனுனதுபோலவும், சன்யாசியானவன் சமுசாரியாகிச் சகலரையுங்கெடுக்க உகந்த வனை உன் வீட்டிலிருந்து இப்போதே ஓட்டிவிட்டால்தான் நாங்களனைவரும் வந்து அன்னம் உண்ணுவோம். இன்றேல் உன்னைச் சாதியிலிருந்து விலக்க எண்ணுவோம். மறுத்துப் பேசினுலுனக்குப் பிராயச்சித்தமும் பண்ணுவோம். பண்ணின பின்பே உன்னைப் பந்தியில் வைத்துக்கொண்டு உண்ணுவோம் என்கிற பற்பல வார்த்தைகள் காகூவென்று இரைச்சலிட்டுப் பேசத்தொடங்கினுர்கள். அப்போது சீதோபந்து "ஓ பிராம ணுேத்தமர்களே! உங்களனைவோருக்கும் வந்தனஞ் செய்கின் றேன். விபரீத வார்த்தைகள் பேசாமல் விடோபாவைப் பந்தி யில் வைத்துக்கொண்டு உண்பதற்குக் கூசாமல் யாதொரு சந் தேகமுங் கொள்ளாமல் ஏழையேன்செய்த விருந்தைத் தள்ளா மல் கிருபைகூறுங்கள்" என்று சகலரையும் வேண்டிக்கொண் டார். அதற்குத் தப்புள்ள விப்பிரர் சீதோபந்தை நோக்கி, "அடா பிரஷ்டா! அடா துஷ்டா! நீ செய்யும் உபசாரத்தால் அபசாரத்துக் குட்படுவோமா? வர்ண வைராக்கியத்தை விடு வோமா? இந்த அனுசாரத்தைத் தொடுவோமா? உன்னை யழைத்து இனி யன்னமும் யிடுவோமா? சீ சீ நாயே பேயே என்று வாயில் வந்தபடி வைது அங்கொருவரையும் உண்ணு மற்செய்து தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

அதுதெரிந்த விடோபா ஓ! ஓ! பிரபஞ்ச ஆசையிற் சிக்கி விஷயானந்த போகத்திற் சொக்கி மாயையென்னுஞ் சுழலி லுழ லும் உன்மத்தனென்னும் பயித்திய மேலிட்டோர் ஆக்குரோ ஷத்தோடு கூக்குரலிட்டு ஓடுகின்றுர்கள். ஓர்வேளை இங்கடைந்து கோபமென்னும் வாயால் குரோதமென்னும் பற்கள் பதிய விரோத மொழிகள் யென்பதனுற் கடித்தால் அபிமானமென் னும் விஷந் தலைக்கேறி அகங்காரமென்னும் மயக்கம்மீற அஞ் ஞானமென்னும் நரகத்தை யடைந்து பிரபஞ்சமென்னும் துக் கத்தால் இடிந்து மெஞ்ஞான மென்னும் விவேகங் கலைந்து போகும். ஆதலால் இதற்கு இக்கணமே தப்பித்துக்கொண்டு போய்விடுவதே உத்தமமென்று உன்னிச் சீதோபந்தை வணங்கி, "ஓ துய்யனே! முதற்பிடி சாதத்திலேயே பல ஈக்கள் மடிந்திருக்

கக்கண்ட சிலன் அருவருப்பின்றி அதை யுண்பதற்கும், விவாக கான அன்றே உதையுங் குத்தும் பிரயோகஞ்செய்த அறிவில்லா ஆடவனுடன் மெலிவான மெய்யுடைய மங்கை இங்கிதமாய்க் கூடி யிருப்பதற்கும், பேசின நாளே பெரும்போர் செய்யும் சம் பந்தியோடு மிகவும் மானஸ்தனுகிய விவேகி யுறவு செய்யவும், பழகினநாளே பழிபோட்டு அம்பலத்தில் கும்பல்கூட்டி வாட் டப்படுத்தின துஷ்டனுடன் அறிவிற் சிறந்தோன் சகவாசஞ் செய்யவும், வாஞ்சைகொள்ளக்காரணம்போல்வீட்டையடைந்த மறுநாளே மனக்கோட்டமுண்டாகிய இந்நாட்டில் வேட்கையுற் றிருக்காமல் காட்டை யடைவதே எனக்குறுதியான வபீஷ்ட மென்று சேஷ்டையில்லாக் காட்டை நோக்கிப் போகலுற்ருர்.

அப்போது வாட்டமுற்ற ருக்மாபாயி கோஷ்டத்துடன் கொழுனன்பின் தொடர்ந்தாள். சிதோபந்து விடோபாவை மறுத்து அந்தனரால் நமக்கு அக்கரையென்ன? நமது வீட் டில் சுகமாயிருப்போம் வாருமப்பாவென் றழைத்தார். விடோபா மாமனுரை வணங்கி ஊரிலிருக்கப் பிணங்கி, ஓ ஐயா! அடியேன் பிரஷ்டனுன துஷ்டனென்பதுண்மையே. ஆதலால் இக்கொ டியனுகிய என்னுல் தாங்கள் குடும்பத்துடன் பிரஷ்டமடை வது தகுதியா? இது விவேக மிகுதியா? பெரியோர்க் குறுதியான பகுதியா? வர்ணுச்சிரமதர்மம் கடக்கத்தகுந்த தொகுதியா? நான் காட்டையடைவதே உத்தமம் என்று போகலுற்ருர். சிதோ பந்தும் அவர் மனேவியும் நாங்களும் கூடவே வந்து காட்டி லிருக்கின்ரேம் என்று பின்தொடர்ந்தார்கள். ருக்மா பாயி "ஓ என் தாய் தந்தையே! தள்ளாமையான நீங்கள் காட்டிலிருந்து காலங்கழித்தல் வெகு துர்லபம். என்வாக்கை மறுக்காமல் நாட்டிலேயே யிருங்கள். அடியாள் பன்முறை வந்து பார்த்துப் போகின்றேன்" என்று உறுதிகூறிக் கணவன் பக்திமீறிப் பதியோடு கூடியிருப்பதற்குக் கோரிப் பிரபஞ்சிக ளோடுபேசுவதற்கு வேசாரி கணவனேத் தொடர்ந்துபோனுள். விடோபா நாட்டுக்கொருநாள் பயணத்திலிருக்கும் ஓர் மலேக் குகையில் தங்கி ஆனந்தம் பொங்கிப் பிரபஞ்ச வெண்ண மிறந்து பேதாபேதங்களேத் துறந்து தன்னே மறந்து தலேவனிற் கலந்து மௌனசமாதியி லெழுந்தருளியிருந்தார். ருக்மா பாயி கணவன் சமாதிநிலேயி லிருக்கும்போது தான் நாட்டை யடைந்து மாதா பிதாக்களேப் பணிந்து வேண்டிய பதார்த் தங்கள் கொண்டுவந்து ஆர்வலனுக்கு உண்பித்து வந்து

ஆனந்தமா யிருந்தார்கள். காட்டில் இவர்கள் இப்படியிருக்க ஸ்ரீபாதஸ்வாமிகள் ஒருநாள்மனமொத்த மாணுக்கனுகிய விடோபாவை நினைத்துத் திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும் மகவாய்ப் பிறக்க நாம் வரங்கொடுத்திருக்கிருேமே; அப்படியாகிறது வெகு அருமையிலும் அருமையல்லவா. சத்சீஷன்மேல்வந்த சந்தோஷத்தாலல்லவோ இப்படி வரமளித்துவிட்டோம். வரங்கொடுத்தபடி மைந்தர்கள் பிறக்காவிட்டால் நமது வாக்கியம் அசத்தியமாய்ப்போகுமே. இதற்கென்ன செய்யலாமென்று யோசித்து நால்வரும் பிரசன்னமாகும் பொருட்டுப் பரப்பிரமத்தை ஏகாக்கிரசித்தத்தோடு தைலதாரைபோலத் தியானஞ்செய்யத்தொடங்கினுர். இப்படி ஒருமுகூர்த்தம் தியானஞ்செய்யவே, ஆதிசத்தியும் திரிமூர்த்திகளும் பிரசன்னமாகி ஓ பேதமிறந்த பிர்மக்ஞானியே! நிர்க்குணத்தொனியே! எங்கள் வரவைக் கோரிய காரணம் ஏதென்றுகேட்டார். ஸ்ரீபாதஸ்வாமிகள் உடனே நால்வருக்கும் வந்தனஞ்செய்து, ஓ ஜகத்ரட்சகரே! தேவரீர்களை எளியேன் என்னகாரணத்தால் வரத்துதித்தேனே அது உங்களுக்குத் தெரியாததோ? தெரிந்தும் இவ்வடியேனைக் கேட்கலாமோ? நான் உங்களை வரும்படியாகக் கோரியது நீங்கள் நால்வரும் எனது மாணுக்கனுகிய விடோபாவுக்குக் குழவிகளாய்ப் பிறக்கவேயாம். எங்களை வரவழைத்த காரணம் ஏதென்று நீங்கள் வினுவியபோதே என்கோரிக்கையை நிறைவேற்றினீர்கள்.

காருண்யக்கடவுளாகிய நீங்கள் எம்போலொத்த எளியோர் வாக்கைக் காப்பாற்றல் வேண்டுமல்லவோவென்று பற்பலவிதங்களாகத் தோத்திரஞ்செய்ய, அவர் தோத்திரத்துக்கு இரக்கமுற்ற பகவான் "ஓ அவதூதனே! நாங்கள் இவ்வுலகில் அவதாரஞ்செய்து வர்ணுசிரமதருமங்களையும், சகுண நிர்க்குண தியானங்களையும் நிலைநிறுத்த முன்னமே யோசித்திருக்கின்ருேம். அது நிறைவேறவே உமது வாக்கில் இப்பேர்க்கொத்த வாக்கியம் பிறந்தது. ஆனுல், விடோபாவை யாரென்று நினைத்தீர்? அவர் சாட்சாத் வசிஷ்டாம்சமாகும். அது எப்படியென்ருல்,அயோத்தியில் அறுபதினுயிரவருஷம் அரசுபுரிந்து தசரதமகாராஜனுக்கு நானும் எனது சயனமும் சங்கு சக்கரமும் புதல்வராகப் பிறந்து, அத்தசரதனுர் மடியில் நான் வீற்றிருக்கும்போது மற்ற பாத சத்துருக்க லட்சுமணனும் பால்யபருவத்தால் தாங்களும் தசரதன் மடியில் வீற்றிருக்க வாஞ்சைகொண்டு நால்வரும் அவர் மடியில் வீற்றிருக்க இடம்போதாமல் ஒருவரையொருவ ரடித்துக் கலக்

கப்பட்டுக் கண்ணீர்விட்டு ஓவென்றழுத காரணத்தால், தசரதர் இருவரை மடியிலும் இருவரைத் தோள்களிலும் வைத்துக் கொண்டார். மடியில் வீற்றிருந்த நானும் இலட்சுமணனும் அவ்வரசன் தோண்மேலுட்காருதற் காசித்து பரதசத்துருக்க ரிருவர் காத்தையும் பிடித்திழுத்தோம். அவ்விருவரும் புஜத்தி லிருந்து இறங்காமல் தந்தையின் கழுத்தை உறுதியாகக் கட்டிப் பிடித்துக்கொண்டு சற்றும் அசையாமலிருந்தார்கள்.

அப்போது நான் முன்பக்கமாய் நின்றும், லட்சுமணன் பின்பக்கமாய் நின்றும், தசரதனுர் மிடற்றைக் கட்டிப்பிடித்துக் கொண்டு நால்வரும் நான்குபக்கம் இழுக்கத் தொடங்கினேம். அதைப்பார்த்துக்கொண்டிருந்த கௌசலை சுமித்திரை கைகேயி யும் சந்தோஷமேலீட்டால் கரங்களைக்கொட்டி நகைத்தார்கள். தசாதனே தனக்கு அனேகநாளாய்ப் பிள்ளைகளில்லாமல் ஏக காலத்தில் நால்வர் பிறந்து சுகமாய் வளர்ந்து இருவர் தோள் களி லேறிக்கொண்டும், ஒருவன் முதுகின்மீதும், ஒருவன் மார் பின்மீதும் பாதங்களைத் தாங்கிக்கொண்டும், மிடற்றைப் பிடித் துக்கொண்டும் தொங்குவதால் புளகாங்கனுய் மயிர்க்குச்செறி ந்து, ஆனந்தபாவசத்தால் என்னைத் தழுவிக்கொண்டு கண் ணீரைத் தாரைதாரையாய்ப் பெருகவிட்டார். அவ்வதிசயத்தை அருகிலிருக்கும் வசிஷ்டர்பார்த்து இராசன் சந்தோஷமேலீட் டால் ஆனந்தபாஷ்பங்களைச் சொரிந்தார். இவ்வுலகில் புத்திர பாக்கியமே பாக்கியம் என்று தந்தை மார்பிறுகத் தழுவிக்கொண் டிருக்கும் என்னைத் தன் தோண்மேல் வைத்துக்கொண்டு இன் புற வெண்ணைங்கொண்டு தனது இருகரங்களால் எடுத்துக் கொண்டும், ஓர் தோண்மே லிருத்திக்கொண்டும், லட்சுமணனை யும் ஓர்தோளி லிருத்திக்கொண்டும், இராஜன் ஆயாசத்தை நிவர்த்திசெய்பவர்போல அபிநயங்காட்டித் தனக்குற்ற புத்திர வாஞ்சை வெளிப்பட்டு, ஓ ஸ்ரீராமா! பரந்தாமா! உன்னையும் நான் புத்திரனுகப் பெறும்படியான நற்காலமும் வருமோ? ஆனந்த பரவசமுந்தருமோ என்று தன் கண்ணீரால் என் பாதத் துக்கு அபிஷேகஞ் செய்தார். உடனே அவ்வசிஷ்டர் அழ கிய அட்சிகளுக்கு நான் திரிமூர்த்திஸ்வரூபமாய்த் தரிசனந் தந்தேன். வாஞ்சையென்னும் வாரிதியைக்கடந்த அவ்வசிஷ் டர் "ஓ பகவானே! திரிமூர்த்திஸ்வரூபமாய்த் தோன்றும் நீ ஏகனுயிருந்தும் என் கண்ணுக்கு மூவராய்த் தோன்றின கார

ணத்தால் அத்திரிமகாரிஷிக்கு மூவரும் புதல்வராய்ப் பிறந்த படியே எனக்குப் பிறந்து இத்தசாதனைப்போல் என்னைக் களிப்புறச்செய்வது எப்போ?" என்று என் கழலுக்கு முத்தமிட்டார். உடனே பிர்மக்ஞானம்பிறந்து தானுடிய வார்த்தைகளைத் தானே மறந்து தசாதனைநோக்கி, "ஓ இராஜனே! நீ செய்த பாக்கியமே பாக்கியம். இப்புத்திரபாக்கியம் கலைக்கோட்டு மகாரிஷியினாலல்லவோ உமக்கே கிடைத்தது" என்று பகர்ந்தார். தசாதன் வசிஷ்டரை வணங்கி, "ஓ என் குலகுருவே! கலைக்கோட்டு மகாரிஷியை வரவழைத்ததும், புத்ரபாக்யந்தருவித்ததும் நீரே" என்று முடியைச் சாய்த்து, ஓ பகவானே! உமக்கே புத்திரவாஞ்சை மேன்மேலுமிருக்க என்போலியர்க்கு இல்லாமற்போகுமோ? என்று உரையாடிக் குருசங்கீர்த்தனங்களைப்பாடி, வசிஷ்டரைக் கொண்டாடினுர். பிரபஞ்ச பாசமில்லா வசிஷ்டர் சற்றுநோமிருந்து எங்களிருவரையும் இராஜன் மடியிலுட்காரவைத்து, அரசன் பால் விடைபெற்றுக்கொண்டு, தன்னிருப்பிடஞ்சேர்ந்து, தன் மனைவியான அருந்ததியை நோக்கி, "ஓ பெண்ணே! எனக்கு என்றுமில்லாப் புத்ரவாஞ்சை இன்று வந்தது. அவமானந் தந்தது. அதாவது திரிமூர்த்திகளையும் மைந்தர்களாய்ப் பெற எண்ணங்கொண்டேன்" என்ருர். அதுகேட்ட அருந்ததி "ஓ சுவாமி! தெய்வசபையில் நாரதர் அநுசூயாதேவியைப் புகழ்ந்தபோது திரிமூர்த்திகளையும் நான் புத்திரராகப் பெறுவதெப்போவென்றும், பார்வதி இமோற்பர்வதராஜனுக்கு மகளாகிப் பரமசிவனைக் கலியாணஞ் செய்தபோது இப்பராசத்தியை நான் எக்காலத்தில் புத்திரியாய்ப் பெறுவேனென்றும் வாஞ்சைகொண்டிருக்கிறேன்" என்ருள். அத்தருணத்தில் நாரதர் அவர்பாலடைந்து வசிஷ்டரை நோக்கி, "ஓ முனிசிரேஷ்டரே! உம்முடைய இச்சையும் உமது மனைவியினிச்சையும், மற்ற அனேக ரிஷிகளினிச்சையும்கலியுகத்திற்றீரும்; புத்ராருக்காய்ப்பேசியதுபோதும்" என்ருர். வசிஷ்டர் நாரதரறிந்தால் நாற்றிசையும் அறியுமேயென்று அந்த யாழ்வல்லோனைத் தொழுது, "ஓ பகவானே! நானும் என் மனைவியும் திரிமூர்த்திகளையும் ஆதிசத்தியையும் மகவாகப் பெற்றெடுக்கக் கலியுகத்தில் மானிடராய்ப் பிறக்கும்போது நீர் எங்களுக்கு ஆசானுகவரவும், அக்காலத்திலேயே இவ்வார்த்தையை எமது வாக்காலுரைக்கவும், அதுவரையில் மறைத்துவைக்கவும்வேண்டுகிறேன்" என்ருர். அப்படியே செல்வேனென்று உரைத்த நாரதராகிய நீர் இக்கலியுகத்தில் பிறந்து

ஸ்ரீபாதஸ்வாமிகளென்று பேர்பெற்றீர். வசிஷ்டரும் அருந்ததியும் விடோபாவாகவும் ருக்மாபாயாகவும் பிறந்தார்கள். நானும் இவர்களும் உன்வாக்கியப்படி விடோபாவுக்குப் புத்திராய்ப் பிறக்கப்போகிறோம். நீர் அதையிரியப்பட வேண்டாம்' என்று திருவாய்மலர்ந்தருளி மூவருடன் அந்தர்த்தானமாய் வைகுந்தமடைந்தார்கள். அவ்வற்புத வசனங்களைக்கேட்ட ஸ்ரீ பாதஸ்வாமிகள் பிர்மித்து மர்மம் வெளிப்படுத்தாமல் பிர்மஞானத்தில் சொக்கியிருந்தார். இப்பால் பரமசிவனைப் பகவான் நோக்கி, ஓ மகாதேவா! நீர் முந்திப்போய் விடோபாவுக்கு மைந்தனாய்ப் பிறந்து களிப்புறச்செய்வீர். நாங்கள் மூவரும் உமக்கு இளையவரா யுற்பவிக்கிறோம்" என்றார்கள்.

அதற்குப் பரமேசன் ஓ பகவானே! உமது இஷ்டப்படிக்கு நானே சீக்கிரமாக முந்திப்போய் விடோபாவுக்குப் புத்திரனாகின்றேன். ஆனால் நான் தூருவாசனாதி யவதாரங்களெடுத்து என்னையே புகழ்ந்துக்கொண்டேன். நீரோ வியாசாதி அவதாரங்களெடுத்து உம்மையே சிரேஷ்டப்படுத்தினீர். இதனையே வற்புறுத்தி அனேக ரிஷிகள் சைவ வைஷ்ணவமென்னும் இருபிரிவாகப் பிரிந்து சதுர்வேதங்களைப் பிறருக்குப் போதிக்காமல் மறைத்து, ஆறு சாஸ்திரங்களிலும் பதினெண் புராணங்களிலும் தங்கள் கருத்தை வெளிப்படக்காட்டிச் சகுணத்தியானத்தையே விஸ்தீரணஞ்செய்து, நிர்க்குணத்தியானத்தைமறைத்து, உபநிஷதங்களில் காட்டாமற் காட்டின காரணத்தால் பிரமஞானம் மறைந்து, அஞ்ஞானம் நிறைந்து, கர்மகாண்டத்தால் கட்டுப்பட்டு, ஆத்மாவை யாராய்ந்தறியு முணர்வு கெட்டு, ஞானக்கண் துலங்காமல் ஊனக்கண் மலங்காமல் நிர்க்குணதியானிகளாகிய இஸ்மாயில் இஸாக்கென்பவரால் ஏற்படுத்தப்பட்ட மதங்களில் அனேகர் பிரவேசித்து அரியராகிய நம்மை தூஷித்து பிரஷ்டத்துவ மடைந்தார்கள். இதுகாரணத்தால் நாம் இப்புவியில் அவதரித்து, நிர்க்குணத்தையே விஸ்தீரணமாகப் போதித்து, ஈனமதஸ்தரை வாதித்து, கொலையாதி பஞ்ச பாதகங்களை நிக்கிரகித்து, நமக்குப் * பூசனைசெய்யும்படி செய்ய வேண்டுமென் றுரைத்தார். அதற்குப் பிரமாவும் ஆதிசத்தியும் இப்படிச் செய்வதே உத்தமமென் றறைந்தார்கள். அதற்குப் பகவான் நானும் உங்களிஷ்டப்படி நடந்துகொள்ளுகிறேன்;

* "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு." குறள்.

ஆனல் தன்னையறிந்த பிர்மக்ஞானியும், சகுணத் தியானத்தால் பரவசமடைவதால் சகுணத்தையும் பலர்க்கு விளங்கச்செய்து நிர்க்குண தியானிகளாகிய புறமதஸ்தரைச் சகுண தியானிகளால் பங்கப்படுத்துவோம்.

இதனல் சகுணத்தியானத்தை வெறுக்கும் நிர்க்குண தியானிகளும் சகுணோபாசனைக்குட்பட்டுக் கிருதார்த்தராவார்கள். ஆகாயத்தை எட்டிப்பிடிப்பதுபோல் ரூபமாகியபரப்பிர்மத்தை அபக்குவர்கள் தியானித்துப்பலனடையாமலும், ரூபமாகிய நம்மைத் துதித்து உருகாமல் துவேஷித்து நரசென்ம மடையாமலும், குறுக்கி யோனிகளிற்சுழன்று அதோகதிக்கு ஆளாகிருர்கள். அன்றிப் பேதமிறந்த பிரமக்ஞானியும் உலகோபகார நிமித்தம் ஜப தப தியான தானுதிகள் அவசியம் செய்யவேண்டுமென்று முன்னமே அனேக சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறதென்று பல வார்த்தைகளாடி, "ஓவாமதேவா! நீர்போய் அவதரித்துப் பிரமக்ஞானத்தையும், நிர்ச்சனமான மோனத்தையும் விளக்குவீராக" என்று மற்ற இருவருக்கும் விடைகொடுத்தனுப்பினர். இப்பால் பரமேசன் தன்னம்சத்தை விடோபாவின் வீரியத்தில் பிரவேசிக்கச்செய்து அவருடைய நிஷ்டையைக்கலைத்து, ருக்மாபாயுடன் கூடும்படியாகச்செய்து, அவ்வுத்தமியின் கர்ப்பத்திற்றங்கிப் பூரணமானபின் இகலோகமும் பரலோகமும் ஈடேறும்பொருட்டு அவதரித்தார். உடனே அக்குழவியின்மேல் தேவர்கள் சலசல வென்று பூமாரிபொழிந்து தேவதுந்துபியை முழக்கினர்கள். அழகான புத்திரன் உற்பத்தியானதும், ககனத்திலிருந்துபூமாரி பொழிந்ததும் பார்த்த விடோபாவும் ருக்மாபாயும் களிசாகரத்தில் படிந்தவர்களாய் அன்பாகப்பாராட்டி, இன்பாகச்சீராட்டி, எல்லாவற்றையும் வெறுத்த பரமாம்சனைப்போல் அசையாமல் தறிபோல் எப்போழ்துமிருக்கும் குழந்தைக்கு நிவர்த்திசாது என்று நாமகரணமிட்டுப் பாதுகாத்து வந்தார்கள்.

பின்பு பகவானம்சம் விடோபாவை மயங்கச்செய்து ருக்மாபாயின் கர்ப்பத்தடைந்து விர்த்தியாய் ஜனிக்கும்போதே தந்தை களிக்கும்படியான ஞானவார்த்தைகள் ஆடிக்கொண்டே பிறந்தார். அதனல் சதிபதிகள் அதிசயித்து அக்குழவிக்கு ஞானேசுவரரென்று பேரிட்டுக் களிப்புற்றிருந்தார்கள். பின்பு பிரமாம்ஸம் ருக்மாபாயின் அகட்டிலடைந்து வளர்ந்து உற்பவிக்கும் போது உலர்ந்த விருட்சங்கள் பச்சையாய்த் தளிர்த்தபடியாலும், இறந்துகிடந்த ஈ எறும்பு முதலானதும் உயிர்பெற்று எழுந்த

படியாலும், தாய்தந்தை இப்பாலன் தன்னிமித்தத்திற் பிறந்த காரணத்தால் சோபான்தேவென்று நாமமிட்டு வளர்த்தார்கள். இப்பால் ஆதிசத்தியின் அம்ஸம் ருக்மாபாயின் வயிற்றிலடைந்துவளர்ந்து உற்பத்தியாகும்போது மோனமே முத்தியென்று உரைத்துக்கொண்டே பிறந்த காரணத்தால் முக்தாபாயென்று நாமமிட்டு நான்கு சிசுவையும் அன்பாய்ப்பாலித்து ஆனந்தவாரியிற் படிந்திருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே என்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும்
உற்பத்தியான அத்தியாயம் முற்றிற்று.

---

ஏழாவது

## விடோபா சஞ்சலத்துக்கு ஆற்ருமல்

### பரப்பிர்மத்தைத் துதித்த அத்தியாயம்

---

ஸ்ரீமந் நாராயணருடைய திவ்விய திருத்தாள் தாமரைகளை அத்தியந்த பக்தியோடு தியானஞ்செய்தேத்தும் சித்தர்களே! ஸ்ரீ கயிலாசவாசனும் ஸ்ரீ வைகுந்தவாசனும் பிரமதேவனும் ஆதிசத்தியும் தனக்குக் குழவிகளா யவதரிக்கும்படியான பாக்கியம்பெற்றும், பக்தர் சித்தர்களுக்கும் அரிதான பிர்ம்மவித்தையைக்கற்று அகண்டிதமான பிரம்மானந்தத்திற் பொருந்திப் பேதாபேதங்களில்லாமற்றிருத்திப் பெருந்தவத்தில் மனநாட்டமுற்றிருந்த விடோபாவானவர் 'கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கள்மேல் காதல்' என்கிற பழமொழிப்படியே பிள்ளைகள் வாஞ்சைமீறிப் பிரமக்ஞானம் மாறிக் காளைகள் ஆசையில் கட்டுண்டிருந்தார். ருக்மாபாயி வாரத்துக்கு ஓர்தரம் நாட்டிற் சென்று தந்தை வீட்டிலிருக்கும் பண்டங்களைக் கொண்டுவந்து பாகஞ்செய்து பதிக்கும் பாலருக்கும் படைத்துக்கொண்டிருந்தாள். இப்படி ஆறுவருஷங்கள் கழியத் தந்தையின் ஆஸ்தியெல்லாம் நாஸ்தியாய்ச் சீதோபந்து பிட்சை யெடுப்பதற்கு ஆரம்பித்ததறிந்த ருக்மாபாயி தன் பதியைப்பணிந்து, "ஓ ஸ்வாமி! நம்மால் எனது தந்தை பிட்சையெடுத் துண்பதற்கு ஆரம்பித்தார். இனிக் காட்டிலிருந்து இக்குழந்தைகளைக் காக்க

நம்மாலாகாது. ஆதலால் நாட்டிற்செல்வதே உத்தமம்" என்று வணங்கினுள். விடோபா சம்சாரத்தொல்லையாலல்லவா சமாதி நிலைதவிர்ந்தது என்றுன்னிச் "சண்டிக்குதிரைக்குச் சறுக்கினதே சாக்கு" என்பதுபோல "ஓ பெண்ணே! நீ குழந்தைகளோடு நாட்டிற்சென்று சுகமாயிரு; நான் காட்டிலேயே காலங்கழிக்கிறேன்" என்ருர். ருக்மாபாயி "ஓ என் பிராணநாயகா! காட்சியளிக்கும் மாட்சிமையாகிய கொழுநனைப் பிரிந்த குலமங்கையர் உலகிலுண்டா? பிரிந்து துணிந்திருப்பவர்க்குப் பரகதியுண்டா? நீர் இப்படி சொல்வது தவத்தின்மேல் ஆசைகொண்டா? அல்லது வேறு எண்ணங்கொண்டா? பிள்ளைகளாலல்லவோ இச் சள்ளை நேரிட்டது. குழந்தைகளைக் கொண்டுபோய் விட்டுவருகிறேன்" என்ருள். விடோபா "கும்பிடப்போனதெய்வம் குறுக்கே வந்தது" போலச் சந்தோஷித்து இவள் நாட்டிற் சென்றவுடன் நாம் காட்டிற் போகலாமென்கிற எண்ணத்தால் இது நல்லவுபாயம். இவள் செய்வது சகாயம் என்று "ஓ பெண்ணே! என்னிரு கண்ணே! நாட்டிற் கொண்டுபோய்க் குழந்தைகளைச் சீக்கிரம் விட்டுவா" என்ருர். ருக்மாபாயி பதிவார்த்தைக்கு எதிர்மொழி சொல்லாமல் மக்களை அழைத்துக்கொண்டு நாட்டை அடைந்தாள். உடனே விடோபா இது நல்லதருணம். இந்தச் சமுசாரத் துக்குச்சரணம், நமக்குஏன் இந்த ஆவரணம். இதனுலல்லவோ ஜனனமரணம் என்று துணிந்து, சற்குருநாதனைப் பணிந்து, தபோவெண்ணம் ஓங்கி, அவ்வரையை நீங்கி, மக்களாசையினுலே ஏங்கிக் காட்டிற்செல்லப் பின்தாங்கி, மலையினருகே வருவார். யாருக்குயார் துணையென்று காட்டிற்செல்வார். காலெழாக் குறையால் பர்வதத்தருகில் வருவார். விவேகமேலீட்டாற் பின்னுங் காட்டிற்செல்வார். இப்படி வெகு நேரம் உஞ்சல் அலைவதுபோல் மலைக்கும் கானகத்துக்கும் பலதரம் அலைந்து திரிந்து, முடிவில் மக்களாசையிறந்து மனதிற் றெளிவு பிறந்து, மனதின் விருத்திகள் குறைந்து, பிரமஞ்ஞானம் நிறைந்து, பேரின்பத்தில் மனமுறைந்து அடர்ந்த காட்டிற் பிரவேசித்துக் கடவுளை மனதிற் பூசித்து, இது நல்ல ஸ்தானமென்று யோசித்துச் சமுசாரத்தைத் தூஷித்துச் சன்யாசத்தைப் பூசித்துக் குருசங்கீர்த்தனங்களைக்கோஷித்துப்பிரமானந்த நிஷ்டையிலிருக்க ஆசித்துப் பத்மாசனத்தில் வீற்றிருந்து, தேகத்தை அசைக்காமல் ஊனக்கண்களைமூடி, ஒன்ருன பிரமத்தைநாடி, ஓயாத வெண்ணங்களால் வாடி, உவகையிற் பிர்மத்தைப்பாடி,

இந்திரியங்கள் விஷயங்களைப் புல்லாமல் மடக்கி, மனவெண் ணங்கள் ஓங்காம லடக்கி, மனதைக் கூடஸ்தப் பிரமத்தி லொடுக்கி, மாறெண்ணம் வாரமல் முடிக்கி, ஞானக்கண் ஒளி பெற்றுத் துலங்க, நானென்னும் அகங்காரங் கலங்க, மாயையி லிருந்து வெளிப்பட்டு அனேககாலமாகத் தொன்றுதொட்டு வரும் வாசனைகள் ஒன்றுபட்டு ஆகாமியத்தைக் கொன்றுவிட் டுச் சஞ்சிதத்தை ஞானக்கினியாற் சுட்டுப் பிரமானந்தத்தில் ஒன்றுபட்டுப் பிராலப்தமென்னும் 'தேகஸ்மாணை அடிபட்டுப் போகும்படியாகச் சித்திரதீபம்போலவும், நிவாததீபம் போல வும், பிர்மநிஷ்டையில் திகழ்ந்திருந்தார்.

இவர் இங்கு யிப்படியிருக்க, ருக்மாபாயி குழந்தைகளை அழைத்துக்கொண்டுபோய்த் தந்தை தாயைக்கண்டு "எந்தையே! என்னைவளர்த்த தந்தையே! தாயே! என்னை யீன்ற ஆயே! இக் குழந்தைகளை நீங்களே பாதுகாக்கவேண்டும். வனத்திலிருக்கும் எங்களாலாகாது. ஆதலால் இங்குவிட்டுப்போகவந்தேன்" என்று சொன்னுள். சிதோபந்து, "ஓ என் செல்வப் புத்திரியே! கற்பிற் சிறந்த தாத்திரியே! மக்களுக்காக மகரிஷிகளெல்லாம் மாதவஞ் செய்ய, அருமையான தபோபலத்தாலும், ஆசிரியர் ஆசீர்வாதத் தாலும், பிறந்த குழந்தைகளைப் பிரிந்து, விடோபா எப்படி மனந்துணிந்திருப்பார்? நீதான் எப்படி துணிவுற்றிருப்பாய்? அரைக்கணமும் உன்னைவிட்டு இப்பாலகர் எப்படியிருப்பார்கள்?" என்முர். ருக்மாபாயி தந்தையை வணங்கி இக்கான்முளைகளால் என்பதிக்குள்ள பிர்மக்ஞானந் தவிர்ந்துபோகும்படியாயிருக்கின் றது. எனெனின் எந்நேரமும் இவர்களுக்காக பண்டுபலாதிகள் கொண்டுவரவும், ஆழ்ந்த சுனையிற் சென்று ஜலம் மொண்டுவர வும், மிருகங்களாற் சேதம் வாராமற் பார்க்கவும், பாதுகாக்கவும் சரியாயிருக்கின்றது. இதனுல் அங்கங்கறுத்து, மனம் வெறுத்து, வெகுநாளாய்ப் பொறுத்து, மக்கள் பாசத்தை யறுத்துக் குழந் தைகளை நாட்டில் விட்டுவா" என்று வாய்விட்டு அறைந்தார். கொழுநன் வாக்கியத்தைமறுத்தல் மதிதனில் மிகுந்தபதிவிரதை களுக்கு அடாது. மறுத்தால்தோஷம்விடாது. அன்றி நான் வீட் டுக்கு வந்துபோவதற்குள் அவர் சமாதிநிஷ்டையில்தன்னைமறந் திருந்தால் மக்களை மிருகங்கள் கொன்றுவிட்டாலும் கொன்று விடும். தின்றுவிட்டாலும் தின்றுவிடும். அல்லாமல் சற்புத்தி ரர்களுக்குத் தந்தைவாக்கே வேதம். சத்சீஷர்களுக்கு சற்குரு

வாக்கே வேதம்; பதிவிரதைகட்குப் பதியின்வாக்கே வேதம். ஆதலால், பாலரைக்கொண்டுபோய் இவர்கள் பாட்டனரிடம் விட்டுவாவென்று அறைந்த வாக்கியத்தை நான் மறுக்கலாமா? சற்றும் பொறுக்கலாமா? பதியை வெறுக்கலாமா? தவத்தைச் சுருக்கலாமா? என்று பணிந்து உரைத்தாள். அவ்வார்த்தை களைக்கேட்ட சீதோபந்து உன்பதியை நாட்டில் அழைத்துக் கொண்டுவந்து சுகமுற்றிருக்கலாமே தவத்தைப் பெருக்கலாமே. காட்டிலிருப்பானேன் என்றார். ருக்மாபாயி பதிவாக்கியம் மறுக் கவும், மறுத்து ஓர் உரையுரைக்கவும், பதியைப் பிரிந்திருக்க வும்கூடாது. ஆதலால் சீக்கிரம் நான் அவரிடம் போகவேண்டு மென்று, குழந்தைகளுக்கு முத்தமிட்டுக் கண்ணீர் தாரைதாரை யாய்விட்டுத் தாய் தந்தையைக் கும்பிட்டு, நாட்டிலிருக்கப் பின் னிட்டுக் காட்டிற்செல்ல முன்னிட்டுப்போனாள். அப்படிபோகும் போது குழந்தைகள் அம்மா! அம்மா! என்று கூப்பிட்டுக் கொண்டே மறுக்கவும், கண்டோர் மக்களைவிட மணாளன் பற்று அதிகமா என்றுவெறுக்கவும், தாயானவள் குழந்தைகள்உன்னை விட்டு எப்படியிருக்குமென்று அழவும், தந்தை எங்களுக்கு இவ் வித சங்கடந்தரலாமோ? என்று தெய்வத்தைத்தொழவும்பார்த்த ருக்மாபாயி பதியினைப்பிரிந்து இப்பார்தனில் பாவையர் யிருக்க லாமா? இது நீதியாகுமா? என்று மக்களைவெறுத்து மணாளனை யடுத்துக் கற்பின் நிலைமையைக்காட்டிய தமயந்தி அற்பமான வளா? பிரபஞ்சத்தோர்க்கு அச்சமுற்றுப் போனவளா? என்று பட்டணத்தைவிட்டு வெளியேபுறப்பட்டுத் தோப்புந் துறவுகளை யுங் கடந்து கொஞ்சதூரம் நடந்து, மக்கள் வாஞ்சையா லிடைந்து, சொல்லொணுத்துன்பமடைந்து, காதலராசைமீறி, காவலனாசைமாறி, மைந்தரைப்பார்க்க ஆசித்து, மண்டலத்திற் பிரவேசித்து, மைந்தரை வாரியெடுத்து, மாருத்துன்பத்தைக் கெடுத்து சற்றுநேரமிருந்து, கணவனை நினைத்து, கண்ணீரால் நனைந்து, மக்களைப்பிரிந்து, மணவாளன்பாற்போகத்துணிந்து, பாம்பைப்போலவும், கொடிகளைப்போலவும், பன்னிப்பிடித்துக் கொள்ளும்பாலரைவிட்டுப் பிரிவதற்கும், கணவன்பாற் செல்லு தற்குங் கூடாமல், இருபுறமும் அக்கினி மூண்டெரியும் மூங்கிற் குழாய்க்குள் அலையும்எறும்பைப்போலக் காட்டுக்கும்நாட்டுக்கும் பன்முறை யலைந்து, பாலராசை தொலைந்து, மலைச்சாரலிற் சென்று, வாசஸ்தானத்திற்போய் நின்று, மணாளனை நாடிக்காணு மல்வாடிச் சுற்றுப் பக்கங்களிலோடி அதிக பரபரப்போடுந்

தேடிப் புதருகளில் நுழைந்து களையால் கீழ்விழுந்து "ஐயோ! பொழுதுபோச்சுதே! எனக்கே துன்பம் வாய்ச்சுதே" என்று செடிகளில் மயிர்சிக்கவும், தோள் புயங்கள் இடிக்கவும், முட்க ளால் உதிரம்பெருகவும், கற்களால் கண்ணீர் பெருகவும், உடல் வேர்த்து உருகவும், உள்ளங் கலங்கியுருகவும், கரடியும் புலியும் மிரட்டவும், கரியும் எருமையும்அதட்டவும், நடுங்கி ஒடுங்கி குரு தியாலுங் கண்ணீராலும் நனைந்து, கொழுநனை அடிக்கடி நினைந்து, "ஓ என் பிராணநாயகா! பிராணசிநேகா! சர்வசங்க பரித்தியாகா! சதானந்தயோகா! நீ இப்படி மோசஞ்செய்வா யென்று அறியாமற் போனேனே. ஆராத்துயரத்துக் குள்ளா னேனே. மாணம்வேண்டாமென்று மறுத்தவா! மாதாபிதாவை யும்வெறுத்தவா! காமக்கடலைக்கடந்தவா! காசினித்தலங்களுக்கு நடந்தவா! மோட்சவீட்டில் நுழைந்தவா! மோனானந்தத்தில் தழைத்தவா! மிருகங்களின்கர்ச்சனையால் மனம்நடுங்குகின்றதே. உன்னைக்காணுக்குறையால் பிராணனும் ஒடுங்குகின்றதே. இருட் டால் வழியுந்தெரியவில்லையே. ஏனேதந்தா யிவ்வளவு தொல் லையே. இன்னம் உனது மனமிரங்கவில்லையே. எனக்கு உன் அருமைத் தரிசனந்தரவில்லையே. மாதர் அச்சத்தால் மாண மடைவாரே. மணாளன்மேலிச்சையால் மிகவும் இடைவாரே. என்னை நீர் இவ்விதஞ்சோதிக்கலாமோ? இருளில் மறைவுற்றுப் பேதிக்கலாமோ? ஓ புருஷோத்தமா! புண்ணிய புருஷா! பூத தயாளா! புண்டரீகத்தாளா! ஓ என்தெய்வமே! என்னுயிரே! தனித்து இவ்விருளில் உன்னைத் தேடித்தேடித் திரிகிறேனே. பதறிக்கதறிவெகுநேரமாய்ப் புலம்புகிறேனே. ஏனென்று பேச லாகாதா? இன்னம்ஓர்கணத்தில் என்னுயிர்போகாதா? இன்னம் ஒளித்திருப்பதற் கிச்சையா? எளியாளுடன் பேசவும் லச்சையா? என்கிற பல வார்த்தைகளாடிக்கொண்டே இராத்திரியெல்லாந் தேடிச் சூரியோதயமானதே மலைகளின்குகைகளிலும். புதருகளி லும், பர்னசாலைகளிலும், அடர்ந்தசோலைகளிலும்பார்த்து, அங் கம்வேர்த்து, "ஓமயில்களே!குயில்களே!என்மணாளனைக்கண்டீர் களா? ஓ கரிகளே! நரிகளே! என் காவலனைப் பார்த்தீர்களா? ஓ புலிகளே! புனுகுபூனைகளே! என் கணவன் இங்குவந்தாரா? ஓ காகங்களே! யூகங்களே! என் ஆர்வன் உங்களுக்குத் தரிசனந் தந்தாரா?" என்று மிருகங்களையும்பட்சிகளையுங்கேட்டுக்கொண்டு வாயில்வரும் மொழிகளைவிண்டு, பிள்ளைகள் ஆசையாலல்லவோ பிராணநாயகரையிழந்தேன். பிரியாத்துன்பத்தாற் குழைந்தேன்.

ஓ கர்த்தனே! பரிசுத்தனே! பரமேசனே! ஜகதீசனே! பரிபாலனே! மறைமூலனே! பிள்ளைகளால்என்னபேற்றைப்பெறவெண்ணியோ பிராணநாதனைப்பிரிந்தேன். இடரால் வயறெரிந்தேன். ஓ பகவானே! பகவானே! என் பிராணநாயகனை மிருகங்கள் கொன்றதோ? அல்லது தின்றதோ? வெறுப்பால் வேறிடம் போனரோ? வேஷ்டையால்தனியன் ஆனரோ? ஒன்றுந்தெரியவில்லையே! ஒன்றுந் தோன்றவில்லையே. ஓ தெய்வமே! மனந் துணிந்து எப்படி யிருப்பேன்? என்மேல் உனக்கு இவ்வளவு அருவருப்பேன்? எனக்குற்ற தீயவிதி யிவ்வுலகில் யாருக்காவது உண்டா? யாருஞ்செய்யாப் பாவம் நானொருத்தியே செய்தது உண்டா? பதினாலுவருஷங்களாய் துக்கமே துணையாயிருக்கின்றதே; விசனமேகுடியாயிருக்கின்றதே; "ஓ ஆதிகாரணா! சர்வபரிபூரணா! அனந்தசயனா! கமலநயனா! பாண்டுரங்கா! ஸ்ரீரங்கா! நாராயணா! பாமபாராயணா!" என்று இவ்விதமாகத் தோத்திரஞ் செய்துக்கொண்டே அக்கார் அடவியில் ஓலமிட்டு அழுதுக் கொண்டே பார்த்தவிடங்களிலேயே பலதரம் பார்த்து வாட்டத் தோடிருந்தார். அப்போது நாட்டில் அன்னையைப்பிரிந்தபாலர் நால்வரில் நிவர்த்திசாது "இதோ வருகிறேன்" என்று போன மாதா மறுநாள் மாலைபரியந்தம் வாராக்குறையாலும், மார்மேலுந் தோண்மேலும் ஏந்திக்கொண்டிருந்த தந்தையைப் பிரிந்ததாலும், மனம் மயங்கி மிகவுந்தயங்கி, "ஓ தந்தையே! தந்தையே! என்னைவளர்த்த எந்தையே! எந்தையே! ஓஎன்னருமைத்தாயே! தாயே! என்னையீன்ற ஆயே! ஆயே! எங்களைவிட்டு எங்கே போனீர்கள்? போனீர்கள்? எங்கள்மேல் நிராசை ஏன் ஆனீர்கள்? ஆனீர்கள்? என்கிற பலவார்த்தைகளாடிக்கொண்டே தாய் போன மார்க்கத்தை நோக்கிப் போகலுற்றார்.

அப்போது ஞானேசுவரர், "ஓ ஐயா! ஐயா! எனைக்காத்த மெய்யா! மெய்யா! எனதன்புள்ள ஔவையே! ஔவையே! எனைப் பயின்ற கௌவையே! கௌவையே! உங்களைவிட்டு நாங்களிருப்போமா? இருப்போமா? இருந்து உயிர்தரிப்போமா? தரிப்போமா? என்றுஉரைத்துக்கொண்டேதமையன்பின்தொடர்ந்து போகலுற்றார். அத்தருவாயில் சோபான்தேவ் "ஓ அத்தனே! அத்தனே! வாஞ்சையுள்ள் கர்த்தனே! கர்த்தனே! அன்னமூட்டின அன்னையே! அன்னையே! இதோ வருகிறேனெனச் சொன்னையே! சொன்னையே! இதுபரியந்தம் வாரமலிருக்குங்காரணம்

ஏதோ? ஏதோ? எவரால்வந்த வாதோ?" என்று கண்ணீர் வடிய முன்னோர் பின்னாகவே செல்லலுற்றார். அத்தருணத்தில் முக்தாபாயி "ஓ தாதையே! தாதையே! இதுவென்ன வார்த்தையே! வார்த்தையே! ஓ அம்மனே அம்மனே! பாலூட்டுந் தம்மனே தம்மனே! ஓ அம்மா! அம்மா! நீவருகிறேனென்று போனதுசும்மா! சும்மா! ஓ எங்களம்மை! அம்மை! நீ பிரிந்து எங்குபோனாய்? அம்மையம்மை என்று அழுதுக்கொண்டும், தாயைப் பார்க்க ஏக்கங்கொண்டும் முன்னவர் பின்னவர் ஓடத்தொடங்கினார்கள். அதையறிந்த சிதோபந்தும் அவர் மனைவியும் அதிக பரபரப்போடும்போய்க் குழந்தைகளைமறுத்துக் கொடியவிதியை வெறுத்து "அப்பா! ஒப்பில்லாச் சிகாமணிகளே! என்னிரு கண்மணிகளே! உங்கள் தாய்தந்தை இதோ ஒருநொடிக்குள் வருவார்கள். தரிசனந்தருவார்கள். இதற்குள் ஏன் ஓடுகிறீர்கள்? சோபமுற்று ஏன்வாடுகிறீர்கள்?" என்றுநால்வரையும்வீட்டிற்கொண்டுவந்து பண்டுபலாதிகளைத் தந்து சந்தோஷப்படுத்தினார். அவ்வாறு செய்தும் குழந்தைகள் கண்ணீர்விட்டு ஐயா! ஐயா! அம்மா! அம்மா! என்று தாயைப்பிரிந்தது முதற்கொண்டு மறுநாள் சாயந்திரபரியந்தம் அழத்தொடங்கினார்கள். அதனால் சிதோபந்து மனங்கலங்கி, "ஓதெய்வமே! எங்களையும் இச்சிசுக்களையும் இவ்விதமாய்ப் பாதவிக்கச்செய்வது உனக்கு அழகோ? அந்த விடோபாவை நாட்டிற் கொண்டுவந்து சேர்க்கலாகாதா? உனது அருட்கண்ணால் இப்பாலகரைப் பார்க்கலாகாதா? ஆகாரமும் நித்திரையுமின்றி அறியாக் குழந்தைகள் அன்னையப்பனைப் பிரிந்திருக்கமாட்டாமல் கதறுகின்றார்களே? கதறிப் பதறுகிறார்களே? உனக்குக் கருணையில்லையா? நாங்கள் செய்துகொண்டதே தொல்லையா? ஓ கண்ணில்லாததெய்வமே! கதறுங் கான்முளைக்கென்ன செய்வமோ? ஓ கர்த்தனே! கர்த்தனே! பரிசுத்தனே! சுத்தனே! ஓ பகவானே! பகவானே! மகவானே! மகவானே!" என்று கண்ணீர்விட்டு அழத்தொடங்கினார்.

அவர் மனைவியும் அனலிலிட்ட மெழுகைப்போற் கரைந்து அழத்தொடங்கினாள். இவ்விதமாக நான்குகுழந்தைகளும் சிதோபந்தும் அவர் மனைவியும் மனம் புழுங்கியிருக்குங் காரணத்தாலும், கானகத்தில் ஒருத்தியாகத் தனித்து ஓலமிட்டு உருகும் ருக்மாபாயின் சோகத்தாலும், அடர்ந்த கானிற்சென்று அருந்தவத்திலிருக்கும் விடோபாவின் சமாதிநிஷ்டை கலைந்துவிட்டது. ஏனென்றால், திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும் கலக்கமுற்

ரூல் கலங்காதது ஒன்று உண்டோ? தாத்திரியசைந்தால் சகலமு மசைவதுபோல விடோபா மனக்கலக்கமுற்று, தனயர்மேல் வாஞ்சையுண்டாகி அத்வைதமாயிருந்த மனம் இரண்டாகி அனலிலிட்ட அரக்குபோல் உருகி, கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகி, அடிக்கடி குழந்தைகளை நினைந்து, ஓயாக் கண்ணீரால் நனைந்து, "ஓ பரமாத்மாவே! தேவாதிதேவ! வேண்டாமென்று மறுத்த எனக்கு விவாகம் ஏன் செய்துவைத்தாய்? சன்னியாசியாய்ப்போன என்னைச் சம்சாரம் ஏன் தொடர்ந்திருக்க வைத்தாய்? உனது இஷ்டமான என்னைக் குலப்பிரஷ்டனாக ஏன் அமைத்தாய்? நிஷ்காமியான எனக்கு அடங்காக் காமத்தை ஏன் ஜனிக்கவைத்தாய்? மகவை வேண்டாத எனக்கு நான்கு மைந்தர் ஏன் பிறக்கச்செய்தாய்? ஒருநாளும் பிரியாப்பாலரைப் பிரியும்படி ஏன் செய்தாய்? சஞ்சலமில்லாத எனக்குச் சஞ்சலம் ஏன் பிறப்பித்தாய்?" என்கிற பற்பலமொழிகள் பகர்ந்து, பாலரைப்பார்க்க வாஞ்சையாகி மனையாள்மேல் மிகு மோகமாகி, "ஓ நிவர்த்திசாதுவே! உன்பரிசம் பட்டமாத்திரத்தில் அநேகநாள் நிஷ்டையிலிருக்கும் சஞ்சலமுற்றிருக்கும் நெஞ்சமானது ஒரு கணத்தில் நிர்ச்சலனமாய் மௌனானந்தத்தைக் கொடுக்குமே; அகண்டானந்தமென்னை யடுக்குமே; இப்பேர்க்கொத்த மைந்தனாகிய உன்னைப்பிரிந்த காரணம் ஏதோ? யான் செய்த தீதோ? ஓ க்ஞானேசுவரா! உன்பாதபரிசம் பட்ட மாத்திரத்தில் மாயா மயக்கங்களெல்லாம் மாண்டுபோகுமே. ஓயாக் கவலைகளெல்லாம் ஓய்ந்துபோகுமே. என்றுங் காணு இன்பஞ் சுரக்குமே. என்னை இன்னானென்று அறியாமல் மறக்குமே. இப்பேர்க்கொத்த புத்திரசிகாமணியாகிய உன்னை ஏன் பிரிந்தேனே? பிரிந்து இங்கு தனித்து ஏனிருந்தேனே? ஓ சோபனதேவா! மஹானுபாவா! உன்னை என் அஸ்தங்களால் தொட்டமாத்திரத்தில் ஆகாத வேதாந்தங்களெல்லாம் அரைக்கணத்தில் ஆகுமே. அகலாச் சங்கைகள் அகன்றுபோகுமே. மாறா அனுபூதிவந்து வாய்க்குமே. மனதில் ஆனந்தம்வந்து தேக்குமே. ஓ முக்தாபாயி! என்னைப்பெற்ற தாயி! உன்னை என் மடிமேல் இருத்திக்கொண்டால் அஷ்டசித்திகளின் அனுபவந் தோன்றுமே. அளவிலா இன்பம் அகத்திற்றோன்றுமே. நிஷ்டையில்நெஞ்சம் நிலைத்திருக்குமே. நிமையில் பாழ்மனதினை மிகவுருக்குமேயென் பார். தன் விவேகமேலீட்டால் தனயரைவெறுத்து மௌனநிஷ்டையில்இருப்பார். சஞ்சலப்பட்டுப்பிரமநிஷ்டைகெட்டு, மனைவி

யைக் கொண்டாடுவார். ஐயோ! பிரிந்துவந்து விட்டோமே யென்று வாடுவார். தன் விசாரஞானத்தால் மனைவியின் வாஞ்சையை நீக்குவார். சற்றுமில்லாமற் போக்குவார். சற்றுநேரம் நிஷ்டையிலிருப்பார். பின்னுங் கண்களைத் திறப்பார். சமாதி நிலையைமறப்பார். தன்னைத்தானே வெறுப்பார். அந்தோ! இந்த அடவாயில் ஏன் வந்தேன் என்பார். மனைவியைப் பிரிந்தேன் என்பார். இவ்விதமாக நிஷ்டையிலிருப்பதும், பிரபஞ்ச வியாபாரத்தால் விழித்திருப்பதுமாயிருந்து முடிவில் சஞ்சலசித்தனாகிப் பிதற்றும் பித்தனாகி, விகற்பத்திலுஞ் செல்லாமல் நிருவிகற்பத்திலும் நில்லாமல, சங்கல்பத்தினும் போகாமல், நிர்ச்சங்கல்பத்துக்கும் உள்ளாகாமல் அசரீரியுரைத்ததும், வைராக்கியம் பின்னப்பட்டதும், சன்யாசம் நீங்கினதும், குலபிரஷ்டமடைந்ததும், தாரித்திரமடைந்ததும், தாய் தந்தையரைப் பிரிந்ததும், சமாதிஞானங் கலந்ததும் ஆகிய இவைகளை நினைத்து நினைத்து ஒன்றுந்தோன்றாதவராய்ப் பரப்பிர்மத்தைத் தன் வாய்விட்டுத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர்.

## பரப்பிரமஸ்துதி



சந்தவிருத்தம்

அம்பரங்கோசம்பரங்கா லங்கிதிங்களெல்லெங்குமாய்ச்
சம்பு *நேமிசமயம்பு ‡சாமி சதாசிவன்பணிலிங்கமாய்க்
கம்பநீக்கியகம்பமாக்கிய கற்பவாழ்வருடுங்கமாய்ப்
பிம்பமாகியபிம்பமாகிய பிர்மமேபரப்பிர்மமே. 1

பூதமும்மனமாதியும்முயிர் போதமேதவிர்போதமே
நேதியும்மிகுநீதியுந்தவிர் நீதமேநவநீதமே
நாதமும்ஒளிபேதமும்உணர் நாதமேஜகநாதமே
பேதையேற்கவிரோதமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 2

தன்னையாய்ந்தவருன்னையாய்ந்தவர் சாந்தமேஉபசாந்தமே
கன்னலேயுயிர்மின்னலேஅருட் காந்தமேநல்லேகாந்தமே
என்னையாரிடர்தன்னையாரோ டியம்புவேனேசுயம்புவே
பின்னமாகியபின்னமாகிய பிர்மமேபரப்பிர்மமே. 3

தஞ்சமென்பவர்பானிரஞ்சன சாட்சியேசர்வசாட்சியே
வஞ்சமின்றியநெஞ்சில்வாழிரு வாட்சியேயுயர்காட்சியே
அஞ்சலென்றுனைகெஞ்சினேற்கரு ளாட்சியேமிகுருட்சியே
பிஞ்சகன்றெழுமாட்சியேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 4

* நேமி-விஷ்ணு. ‡ சாமி-மயேசன்.

அந்தரந்தனினேக்குவோர்க்கறி வானசின்மயகோலமே
சிந்தைநைந்துனேயேத்துவோர்மன சேட்டைநீக்கிடுஞ்சீலமே
நொந்துவந்துனையண்டினேர்க்கரு ணேக்கமீந்தறிவாக்குவாய்
பிந்துநாதமுணார்ந்ததேசுள பிர்மமேபரப்பிர்மமே. 5

சட்சுவாதிகள்சேஷ்டைநீங்குமோ சத்துவக்குணமோங்குமோ
பட்சமின்றிமாதர்மேலுறு பட்சமெத்தினநீங்குமோ
இட்சணம்உனையாண்டிடாவிடி னென்மனந்துயர்தாங்குமோ
பிட்சையேற்றறவரங்கமோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 6

அன்னைநீயலோதந்தைநீயலோ அன்புமின்பமுநீயலோ
சொன்னநீயலோஅன்னநீயலோ ஸ்தூலமூலமுநீயலோ
என்னையாள்பவனீயலோவிடர் தன்னைக்காப்பவனீயலோ
பின்னையுங்குருநீயலோபரப் பிர்மமேபரப்பிர்மமே.

அண்டரும்நவகண்டருந்தொழு மாதியேயருள்வீதியே
தொண்டருக்கருடண்டருஞ்சுயஞ் சோதியேயனுபூதியே
ஒண்டியாகியகண்டமாகிய ஓதியேமிகுநீதியே
பிண்டமாகியபிண்டமாகிய பிர்மமேபரப்பிர்மமே. 8




அண்டரண்டமழியினுமழி யாவகண்டிதகாலமே
விண்டரனயன்செய்கையீந்தவர் வேலைமாற்றிடுமூலமே
தொண்டருக்கெனதொண்டனுக்குவை தோன்றலேசுகருக்காள்
பிண்டஞானமளித்திடும்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 9

செய்வதொன்றுமறிகிலேனெரு திக்கிலாக்கொடும்பாவியேன்
உய்வதற்கொருமார்க்கமின்றிவ ணுண்டியாயுனேயண்டினேன்
தெய்வநீயலதிந்தவேளையிற் றீயனென்றுயர்மாயவே
பெய்வியாதருண்மாரியைப்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 10

ஆயனேமிகுமாயனேயுனே யண்டினேனேழைத்தொண்டனேன்
தூயனேயருட்காயனேதெருள் சோமனேபலநாமனே
நாயினேற்கிகபோகவின்பொரு நாளும்வேண்டிலன்வேண்டிலேன்
பேயனேற்கினிநேயமேயருட் பிர்மமேபரப்பிர்மமே. 11

அருமையாந்தவஞ்செய்குவோர்க்கறி வானபேர்க்கனுகூலமே
தருமசாந்தசமந்தமம்புகழ்ச் சத்சுகம்விளைஞாலமே
கருமகூபத்தளற்றிலாழ்ந்திவண் கண்கலங்கியவென்னையாள்
பிரமனும்பணிசுந்தரானந்த பிர்மமேபரப்பிர்மமே. 12

வித்தையாலுனேக்காணலாமெனில் வேதமுன்னையறியுமோ
சித்தியாலடைதற்குநீயெத் திசையிற்றசத்திருத்தலோ
பத்தியாயுனேயுன்னுவோமெனிற் பாழ்மனநிலைநிற்குமோ
பித்தனேற்கருண்முத்தநீயருள் பிர்மமேபரப்பிர்மமே. 13

ஆசையும்பசுபாசமுந்தவி ரர்த்தமேபரிசுத்தமே
நேசமும்விசுவாசமும்அரு ளித்தமேயெனும்புத்தமே

மோசமங்கையர்நேசம்நீத்தருண் முத்தமேபிரசித்தமே
பேசுதற்கரிசத்தமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 14

பரிதிவிந்துகம்பார்புனல்கனல் பாயும்வாயுவின்மூலமே
காணரிவவிருட்புலன்பொறி காயமாமிந்த்ரஜாலமே
கருணைமீதெனையாளுவாய்சம சாந்தசாசுவிததற்பத
பெருமைமாதவமீகுவாய்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 15

அன்னைதந்தையுமில்லையேயுற வாளருமிவணில்லையே
சொன்னந்தானியமில்லையேயரு டோழருமெனக்கில்லையே
பின்னையோர்துணையில்லையேபிற குன்னருள்வரவில்லையே
பின்னையாருளரென்னையாள்பவர் பிரமமேபரப்பிர்மமே. 16

அச்சுதானந்தநச்சினோர்முகத் தந்தமேமுதலந்தமே
மெய்ச்சுகோதயநற்சுனையர விந்தமேமகாவிந்தமே
துச்சனோற்குறுபொய்ச்சுழக்கடற் றெருந்தமேதவிர்சொந்தமே
பிச்சையேற்றுணுமுச்சிதர்க்கருள் பிரமமேபரப்பிர்மமே. 17

அன்பனேமிருநண்பனேயென தாவியேசஞ்சீவியே
துன்பமீயுமிவ்வாழ்வினாற்பல துன்பமுற்றனனிக்கணம்
இன்பமீந்தெனையாண்டிடாவிடி னென்னதுன்பம்விளையுமோ
பின்பியாரெனையாளுவார்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 18

யாருந்திக்கிலையிக்கணத்தெனை யாண்டுகொண்டருளாண்டவா
ஊருளுள்ளவராலுமென் றுய ரோயுமோமுத்துத்தாண்டவா
சிரிலங்கியதேவநீயிவன் தீயனென்றெனைநீக்கினால்
பேரிழந்திருள்வாரிமூழ்குவன் பிர்மமேபரப்பிர்மமே. 19

சுத்தசாசுவிதசுதந்தராவருட் டுயரேத்திடுமந்திரா
முத்தர்நெஞ்சினிரந்தராபர மோனமீயுந்துரந்தரா
முத்தியீயுஞ்சுதந்தராவெகு முக்கியமாம்பிர்மரந்திரா
பித்தனுக்கருடந்திராபர பிர்மமேபரப்பிர்மமே. 20

வையினுங்கழலாலுதைத்தெழின் மத்தகம்பிளப்பாகவே
கையினாலறைந்தாவிநீங்கிடக் கண்கலங்கிடவேகுறை
செய்யினுங்குருபக்திமேவிய சிலர்சொன்முனமேமழை
பெய்யுமேயவர்க்கேவல்செய்யருள் பிர்மமேபரப்பிர்மமே. 21

ஆசைவெட்கமறியுமோபல வாணையாற்றடையாகுமோ
நேசர்சொல்லினுமோயுமோவரு ணிஷ்டைகூடினுமாயுமோ
ஈசனேயிடராசைநீத்தரு ளேகபாவனையீகுவாய்
பேசிலாமறைவாசனேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 22

அந்தமாதியில்காரணா வடியார்கள்பாற்பரிபூரணா
விந்தையாகுமுதாரணாவருண் மேவினோர்க்கருடாரணா
சொந்தமாகியநாரணாமிகு தூய்மையீய்ந்திடுமாரணா
பெந்தநீக்கிடும்பாரணாபரப் பிர்மமேபரப்பிர்மமே. 23

மாடகூடமும்யானையும்பரி மாவுஞ்சேனைதளங்களும்
கூடுநீங்குயிரேகுநாளினிற் கூடவேகுவதின்றனைப்
பாடுபட்டருட்பாதைபெற்றிருட் பாதைபுக்கினனேழையாய்
பீடையுற்றனனென்கொலோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 24

முன்னம்யான்செய்ததின்தீமையோமதி மோசமோவென்னமோசமோ
தன்னையாய்ந்தவரொன்றனுக்கிட்ட சாபமோயென்னபாபமோ
என்னமாயமோயுன்னையான்மறந் தினனுகினனேகமோ
பின்னுமுன்னுமில்லாதசின்மப் பிர்மமேபரப்பிர்மமே. 25

பாதகமறுஸ்தானமேயருட் பாதைகாட்டுநிதானமே
மாதவமருடானமேமகா வாக்கியத்துறுமோனமே
நேதிசெய்திடுஞானமேசுய நேயமாகியவானமே
பேதமின்றியதியானமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 26

வேதமேத்திடுங்கற்புமேவிய மெல்லியர்மனநொந்ததோ
சோதிவீடருள்கோதிலாக்குரு சுவாமியார்மனநொந்ததோ
யாதுகாரணமோமனேவிரு ளென்னைசூழ்ந்தகலாமலே
பீதியீவதுணர்ந்திலேன்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 27

எந்தநாளினிற்பந்தமாமன மின்பவீட்டைவிரும்புமோ
விந்தையாகியவிந்தவாழ்வினின் மேவிடாமல்விரும்புமோ
முந்தநீயெனையாண்டுகொண்டவன் மோசஞ்செய்தனியாயமோ
பெந்தமீவதென்மாயமோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 28

அருடருமிகுநேசமேகதி ராதியாம்பிரகாசமே
மருளரும்புவிவாசமேவிசு வாசர்பால்விசுவாசமே
இருடரும்பவநாசமேயெனு மேகமானவாகாசமே
பிரமைநீக்கும்விலாசமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 29

ஆயிதென்னவதிசயம்மென்ன தாயுளிலறியாதவோர்
மாயவிந்தையைக்கண்டனனிது மாயையென்றுவறிந்தபின்
தீயதென்றிதைநீக்கிடாதரு டேவநின்னருளேக்கிடாப்
பேயனானதென்மாயமோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 30

ஊரும்வேண்டிலன்பேரும்வேண்டில னுலகவாசையும்வேண்டிலன்
பாரும்வேண்டிலன்பதியும்வேண்டிலன் பசியபொன்னையும்வேண்டிலன்
சீரெலாந்தருமுன்னருட்டொடர் தியானமொன்றினைவேண்டினன்
பேருமூருடன்யாதுமின்றிய பிர்மமேபரப்பிர்மமே. 31

தேகமிந்திரியம்முயிர் ஜீவனையுணர்தீபமே
மோகலோகபவகோரசோப முழுதுநீக்கிடுந்தாபமே
ஏகபோகவுற்சாகதியாகமு மின்பமீந்திடும்லாபமே
பீகரந்தருகியாபமே:பரப் பிர்மமேபரப்பிர்மமே. 32

வணங்கியேயுனைவாழ்ந்திடாதிக வாழ்வினாலறிவீனனாய்
உணங்கினேனொருதிக்கிலாதிவ னோலமிட்டமுதேத்தினேன்

இணங்கியேயெனையாண்டிடாவிடி னியாவரொன்முறைகேட்பவர்
பிணங்கினேன்குறைதீர்க்கவாபரப் பிர்மமேபரப்பிர்மமே. 33

சோடுநீங்கியபேடுபோற்பிணி தொல்லையாலழும்பிள்ளைபோல்
வீடுநீங்கியநங்கைபோலெரி வீட்டிலேயுறுமங்கைபோல்
வாடுகின்றனனையனேயென்றன் வாட்டந்தீர்த்தருடுய்யனே
பீடுதங்கருள்மெய்யனேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 34

நிஷ்டருக்கனுபோகமேயரு ணேசர்வாழ்பரலோகமே
சிஷ்டர்நெஞ்சினுற்சாகமேமுக்தி சித்தியீயும்விவேகமே
துஷ்டனைக்குலபிரஷ்டனையிவண் சோதியாதருண்மோனமாம்
பெட்டகமருடியாகமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 35

லச்சையும்பணத்திச்சையுமவ லட்சணம்மிகுபட்சணம்
மிச்சையார்விஷயேச்சையும்விப சாரமும்மபசாரமும்
குச்சிதமொழிமிச்சமுமுள கோதைமார்களைவிட்டெனும்
பிச்சையேற்பதுலட்சணம்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 36

நீதிசற்றுமிலாதவன்குரு நிந்தகன்ஞானவந்தகன்
நாதியற்றவனாதியாகிய நாயினேன்றனையிக்கணம்
ஆதியாகியதேவதேவனீ யாண்டிடாவிடினேழையாய்ப்
பீதியாழியிலாழுவேன்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 37

மந்தருக்கதிதூரமேயொரு மாசிலாதகெம்பீரமே
நிந்தகர்க்கதிபாரமேகுரு நேசர்நெஞ்சிற்கர்ப்பூரமே
புந்திமேவியக்ஷீரமேயனு பூதியீந்திடுஞ்சாரமே
பெந்தநீக்குபகாரமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 38

அந்தமாதியில்விந்தையாகிய வாதவாமிகுமாதவா
எந்தமக்குற்றபந்தமாமிட ரேகுமோபெரிதாகுமோ
சொந்தமாயுனைநம்பியேபல தோத்திரம்புரிந்தேத்தினேன்
பெந்தநீக்குஞ்சுகந்தமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 39

தருமதானமுஞ்செய்கிலேனருட் சாதனங்களாலுய்கிலேன்
குரவனேர்பேதமேத்திலேனிருட் கோசபாசமுநீத்திலேன்
கருமபாமரநீக்கிலேனுடற் கள்ளஞானமும்போக்கிலேன்
பிரியமோடெனையாள்வையோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 40

சுந்தரானந்தசோபிதகுரு சுவாமியேசுயமேநம
அந்தமாதியிலாததூயறி வானசின்மயமேநம
தந்தைதாய்குருதெய்வமேசர்வ சாட்சிதன்மயமேநம
பந்துவாகியுகந்தவாநம பிர்மமேபரப்பிர்மமே. 41

அச்சுதாத்விதவஸ்துவேநம வற்புதப்பொருளேநம
உச்சிதப்பரவஸ்துவேநம வுண்மைமெய்ப்பொருளேநம
சச்சிதானந்தவஸ்துவேநம சாந்தமாம்பொருளேநம
பிச்சர்நெஞ்சுறுவஸ்துவேநம பிர்மமேபரப்பிர்மமே. 42

முத்தமேபரிசுத்தமேகம மோனவாழ்வேகமோகம
புத்தமேபிரசித்தமேகம போதவாழ்வேகமோகம
அர்த்தமேமறைபர்த்தமேகம வாதிவாழ்வேகமோகம
பெத்தநீக்கிடுஞ்சுத்தமேகம பிர்மமேபரப்பிர்மமே. 43

என்று நாற்பத்திமூன்று சுலோகங்கள்பாடி மனங்குழைந்து உருகிப் பிர்மத்தைத் தோத்திரஞ் செய்தார். அம்மாத்திரத்தில், அசரீரியானது "ஓ விடோபா! உனக்குற்ற சமஸ்தகுறைகள் நீங்கவும், அகண்டானந்தம் ஓங்கவும் வரங்கொடுத்ததும் அன்றி, இப்பிரமஸ்துதியை அன்புடன் தோத்திரஞ்செய்தவர்களும் உனக்கு அளித்த வரம்பெறக்கடவர்கள்" என்று அறைந்தார். அம்மாத்திரத்தில் விடோபாவுக்குற்ற சமஸ்தசங்கல்பமும் நிவர்த்தியாய்ப் பிரமானந்தம் பூர்த்தியாய்த் தன்னைமறந்து தலைவனிற் கலந்து சவ்விகற்பசமாதியில் அசைவற்றிருந்தார். இவ்விதமாய் விடோபா நிருவிகற்பசமாதியில் எழுந்தருளியிருக்கையில் பரப்பிர்மத்தின் அருளால் ருக்மாபாயி விடோபா வீற்றிருக்கும் ஸ்தானத்துக்குச் சரியாய் நடந்துவந்து மணாளனைக் கண்டு "ஓ என் பிராணநாயகா! பிராணசிநேகா! என்னை இப்படி மோசஞ் செய்துவரலாமா? நான் சோகமுறலாமா" என்று உரைத்துப் பதியின் பாதங்களில் வீழ்ந்து பலதாந் தாழ்ந்து, ஓலமிட்டு அழத்தொடங்கினாள். மனோவிகாரங்கள் இறந்து, தன்னை மறந்து ஆனந்தத்திற் சொக்கியிருக்கும் விடோபா கண்களைத் திறந்து மனைவியைப்பார்த்து, "ஓ பெண்ணே! இக்கார் அடவியில் எப்படிவந்தாய்? என்னைத்தேடி என் நொந்தாய்? குழந்தைகளை எங்கே விடுத்தாய்? என்னையேன் அடுத்தாய்? தவத்தை ஏன் கெடுத்தாய்? சஞ்சலத்தை ஏன் கொடுத்தாய்? இனி என்மேல் இருக்கும் வாஞ்சையை விட்டுவிடுவதே நன்மை; விடாமலிருப்பதே தின்மை. இக்கணம் நாட்டுக்குப்போவதே நல்ல ஸ்திதி. பாலரைக்காப்பதே நல்ல மதி. காட்டிலிருக்க உனக்கு என்ன கொடிய விதி. கற்புள்ளவளுக்குக் கணவனே பதி. இப்படி நிச்சயித்து இருப்பவளே சதி. இது பதிவிரதைக்குள்ள மதி. நாட்டில் இருந்துகொண்டு தெய்வத்தைத் துதி. உனக்கு உண்டாகும் நல்ல கதி. உனக்கும் எனக்குங் கடவுளே அதிபதி. தவஞ்செய்யும் எனக்கு நீ யுகந்தாதி. ஆதலால் சீக்கிரம் நாட்டிற்குச்சென்று அவ்விடத்தில் மக்களுடன் இருப்பாய்" என்று கண்ணைமூடிக் கடவுளைநாடி அகமுகமாயோடி ஆனந்தத்தைத் தேடிப் பிர்மநிஷ்டையில் எழுந்தருளியிருந்

தார். ருக்மாபாயி மக்கள்மேல் மிகவும் வாஞ்சைகொண்டிருந்தும், கணவனை நம்பாக்குறையால் கணமும் பிரியாமல் பண்டு பலாதிகளைக் கொண்டுவந்து காவலனுக்குத்தந்து, நாள்கழிக்கத் தொடங்கினள். இப்படி மூன்று நாள்செல்ல விடோபாவுக்குக் கருணைபிறந்து, திருவாக்கைத் திறந்து, "ஓ பெண்ணே! விருத்தாப்பிய பருவமுள்ள உன் தாய்தந்தை எவ்விதமாய் வருந்துகிறார்களோ? பாலர் நம்மைக்காணுமல் எவ்விதமா யலைகிறார்களோ? நான் முன் இருந்த இடத்தில் வந்து தங்கியிருக்கிறேன்; நம்புவாயென்று உறுதிகூறி மனைவியோடும் முன்னிருப்பிடம் அடைந்து, ஓ மாதரசே! நீ சீக்கிரம் போய்க் காதலரைப் பார்த்து அவர் வியாகுலத்தைத் தீர்த்து வருவாயாக" என்று அனுப்பினர். ருக்மாபாயி கணவன் கட்டளையைக் கடவாமல் நாட்டையடைந்து, தனயரைக் கண்டு ஆனந்தங்கொண்டு இரண்டுநாளிருந்து பாலரைத்தேற்றி மாதா பிதாவைப்போற்றிப் பின்னும் வருகிறேன் என்று உரைத்து மைந்தர் மனதைக் கரைத்துப் பதியின் பக்கலடைந்து குழவிகளின் வாஞ்சையையுரைத்து இடைந்து நாட்டுக்கும் காட்டுக்கும் போக்குவருத்தாய் இருந்துகொண்டு இன்புற்று இருந்தாள். விடோபா விவேக மேலீட்டால் மக்கள் வாஞ்சைக்குள்ளாகாமல் பிர்மானந்தத்திற் சொக்கியிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

விடோபா சஞ்சலத்துக்காற்ருமல் பரப்பிர்மத்தைத்
துதித்த அத்தியாயம் முற்றிற்று.

---

எட்டாவது

## ஞானேசுவரர் அந்தணரை

### அவமானஞ்செய்து ஐசுவரியம் பெற்ற அத்தியாயம்



வாருங்கள் சித்தர்களே! பரிசுத்தர்களே! விடோபாவும் ருக்மாபாயும் காட்டில் இப்படி களித்திருக்க, நாட்டில் சீதோபந்து நாம் சம்பாதித்து வைத்திருந்த ஆஸ்தியெல்லாம் நாஸ்தியாய் விட்டதே. இக்குழந்தைகளை எப்படி காப்பாற்றப் போகிறோமென்கிற ஏக்கத்தினுல் நோக்கமுற்று, வீதிகளிற்சென்று ஆதி சிநேகரைக்கண்டு, தனக்குற்ற அபாக்கியத்தை விண்டு அவர்

கள் கொடுத்ததை வாங்கிக்கொண்டு, மனைவிபால் கொடுத்தேங்கித் துக்கம் மிகவும் ஓங்கிப் பட்டினியால்வாடி தூங்கிக் கேட்டோரை கேட்டதற்குப் பின்வாங்கி வீடு வீடாகப்போய் பிட்சையெடுக்க ஆரம்பித்தார். ஒருநாள் க்ஞானேசுவரர் பாட்டனூர் படுந்துயரந்தீரப் பலரும் மோட்சவீட்டைச்சேர ஞானமார்க்கத்தைச்சேரப் பாசங்கள் நாசமாயீடேறச் சீதோபந்துடன் தானும் போய்ப் பிட்சையெடுக்க ஆரம்பித்தார். அரிபரந்தாமனாகிய ஞானேசுவரரைக்கண்ட தருமத்திற்சிறந்த உத்தமர்களும் கற்பிற்சிறந்தஉத்தமிகளும் சீதோபந்தைப்பார்த்துக்கரங்களைச்சேர்த்து அந்தோ! இச்சிறுபால்யனை அகோரமான வெய்யலில் ஏன் அழைத்துவந்தீர்? குழந்தைகளுக்குஏன் ஆயாசந்தந்தீர்? என்று குழவியின் அழகுக்கும் கல்விக்கும் மெச்சி உச்சிமோந்து முத்தமிட்டு சாமக்கிரிகைமுதல் தவசமும் எதேஷ்டமாய்க் கொடுத்தார்கள். சீதோபந்து அதையெடுக்கமாட்டாமல் ஓர்தெருத்திண்ணையில்வைத்து இதையெப்படி எடுத்துக்கொண்டுபோவேன் என்று வாட்டமடைய அதுதெரிந்தக்ஞானேசுவரர் நான்பாதிஎடுத்துக்கொண்டு வருகிறேனென்று சாமர்த்திய வசனங்களைப் புகன்று பாதிபகிர்ந்து தன்வஸ்திரத்தில் ஸ்திரமாயிறுக்கிக் கட்டித் தலைமேலேந்திக்கொண்டு சற்றுதூரம் நடந்து காலிடறிக் கீழேவிழுந்து பாட்டனூர் பார்த்தால் முனிவுகொள்வாரென்கிற பயத்தால் சிந்திச்சிதறின தானியத்தை அதிசீக்கிரமாய் ஓரிடத்திற் சேர்த்துக்கொண்டும் மூதாதையை அடிக்கடிபார்த்துக்கொண்டும் இருந்தார். சீதோபந்து திரும்பிப் பார்த்து கோபத்தால் தேகம் வேர்த்து "அடா! க்ஞானதேவ்! வேண்டாம் என்று பன்முறை மறுத்துங் கேட்காமல் பலவந்தமாய் வாங்கிக் கட்டிக்கொண்டு தரையிற் கொட்டிவிட்டாயே; ஆயாசத்துக்கு உட்பட்டாயே" என்று கடினவார்த்தைக ளாடிக்கொண்டே பசிமிகுதியாலும் வறுமைமேலீட்டாலும் அடிக்கிறேன் இடிக்கிறேன் என்று அருகில்வந்து தலைமேல் ஓர் குட்டு குட்டினூர். க்ஞானேசுவரர் வெகுண்டு பலங்கொண்டு சீதோபந்தைத் தள்ளினூர். விருத்தப் பருவத்தாலும், பலயீனத்தாலும் கீழேவிழுந்த சீதோபந்து மிகவும்முனிந்து, "அடா துஷ்டப்பயலே! என்னைஇப்படி அவமரியாதைசெய்யத்தானூ உன்னை அருமையாகவளர்த்தேன். மட்டிப்பயலே! உன்னை எட்டியுதைக்கிறேன்" என்று எழுந்தார். க்ஞானேசுவரர் பாட்டனூர் சீற்றத்துக்கு அஞ்சி மூட்டையை விட்டு ஓடத்தொடங்கினூர்.

சிதோபந்து தீவிரமாக நடுத்தெருவில் இரண்டு மூட்டையில் உள்ள தவசங்கள் சிதறுண்டதால் வெகுளிக்கு இடங்கொடுத்து பின்தொடர்ந்தோடி க்ஞானேசுவரரைப் பிடித்துக்கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு முதுகின்பேரில் தும்தும் என்று குத்தத்தொடங்கினர். அடிக்கடி பின் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு ஓடினகாரணத்தால் அகப்பட்டுக்கொண்ட க்ஞானேசுவரர் பாட்டனுர்க்குப் பயந்து நயந்து ஓவென்று அழத் தொடங்கினர். அதை ஆகாயத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்ததேவர்கள் க்ஞானேசுவரர் திருக்கூத்துக்கு ஆச்சரியப்பட்டு, ஓம்.அரிஹரி! முராஹரி! நரஹரி! அம்புஜாக்ஷரி! பச்சைவண்ணு! கமலக்கண்ணு! கருடவாகனு! கோபியர் மோஹனு! நாராயணு! பரமபாராயணு! ஓ சுவாமி! முன்னம் பூமிபாரந்தீர்க்கும் பாராயணு! அனந்தசயனு! வாமனு! கிருஷ்ணு! ஜனர்த்தனு! ராவணமர்த்தனு! காளிங்கநிர்த்தனு! நந்தநந்தனு! மதுசூதனு! பரிபூரணு! சர்வகாரணு! பத்மசரணு! வேங்கடரமணு! சங்கடநிமித்தம் கிருஷ்ணுவதாரமெடுத்துத் தந்தவக்ரன் துரத்த ஓட்டமெடுத்து அகப்படா நீர்இவ்விருத்தருக்குத் தப்பித்துக்கொண்டு ஓடாமல் அகப்பட்டுக்கொண்ட காரணமேதோ! தந்தவக்ரனேவிட இம்மறையோன் சமர்த்தனே? நீர்செய்யும் லீலாவினேதமோ? மகாவல்லமைசாலியாகிய இரணியாக்கதனேவென்ற நீர் இவ்விப்பிரன்கையில் அகப்பட்டுக்கொண்டுஅடிபடல்நியாயமோ? இதென்ன மாயமோ? அந்த இரணியாக்கனிலும் இவ்விருத்தன் வலியுள்ளவனே? கோவர்த்தனகிரியை ஓர் விரலாற்றூங்கின உமக்கு இத்தானியமூட்டைபளுவாய்விட்டதோ? உமக்கிருந்தபலங்கெட்டதோ? ஓவென்று அழுங்காரணம் பீஷ்மாசாரியர் முதலானேர் விட்ட அம்புகளால் தேகம் ரணமாயிருக்கின்றதோ? அல்லது கோபிகாஸ்திரீகளால் அடிபட்டுப்புண்ணுயிருக்கின்றதோ? அதனுல் பொறுக்கக்கூடாமல் அழுகின்றீரோ? உம்மை நீர் மறந்துவிட்டீரோ? பக்தர்முன் பலம் நடக்கவில்லேயோ? அல்லது கலியுகத்தின் தொல்லேயோ?" என்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்தார். அதைக்கேட்ட க்ஞானேசுவரர் ஆனந்தமடைந்து பாட்டனுர்க்கிடைந்து, "ஓ தாதா! இனிமேல் எப்போதும் இப்படிசெய்யமாட்டேன். உமக்குத்துன்பந்தரமாட்டேன்" என்கிற பாசாங்கு வார்த்தைகள் கூசாமற் செய்து பேசாமலிருந்தார். அப்போது வீதியிற் போகும் பலரும் சிதோபந்தை நோக்கி வீணுக ஏன் சிறுகுழந்தையை அடிக்கிறீர்? வேண்டாம் வேண்

டாம்" என்று விலக்கிவிட்டார்கள். சீதோபந்து சற்றே கோபந் தணிந்து சாமக்கிரியைகளை ஓர் கூலியாளன்மேல் வைத்து வீட்டிற் கொண்டுவந்து மனைவிபாற்றந்து க்ஞானேசுரர்செய்த துடுக்குத்தனத்தைப் பகர்ந்து கோபத்தா லடித்துவிட்டேனென்று அயர்ந்து சமைத்த பதார்த்தங்களை நுகர்ந்து வறுமையை யிகழ்ந்து நாள்கழிக்கத் தொடங்கினர்.

இப்படியிருக்கிற காலத்தில் ஒருநாள் ஓரிடத்தில் சந்தர்ப்பணம் நடக்க, அங்கு சீதோபந்துவும் குழந்தைகள் நால்வரும் சீதோபந்து மனைவியும்போய் ஓர்பக்கலுட்கார்ந்தார். பால்யரைக் கண்ட விப்பிரர் சீதோபந்தை நோக்கி, "அடா பிரஷ்டப் பிராமணா! துஷ்டபிரஷ்டனுக்குப் பிறந்த இத்துஷ்டப்பிள்ளைகளை அழைத்துவந்து எங்களோடுபந்தியில் உட்காரவைத்து எங்களையும் பிரஷ்டராக்கவா நினைத்தாய். இக்கணம் இச்சிறுவரைத் தூரமாகப் போகும்படி செய்யாவிட்டால் உன்னையும் பந்தியிலிருந்து எழுப்பிவிடுவோம்" என்று அறைந்து மிகவுமிறைந்து அச்சிறுவர் கையைப்பிடித்து இழுத்துத் தூரமாய் உட்காரவைத்துப் பத்திரங்கள்போட்டு அன்னம் பகிர்ந்தார்கள். க்ஞானேசுவரர் மிகவுங் குரோதமுற்றிருந்து சகலரும் புசித்திருக்குந் தருணத்தில் நிவிர்த்திசாது வேண்டாம்வேண்டாமென்று மறுத்து உரைத்துக்கொண்டிருக்கும்போதே கேட்காமற்போய்ப் பந்தியிலிருந்து உண்ணும் பாட்டனூர் பத்திரத்தில் உட்கார்ந்தார். அதனால் அந்தணர் முனிந்து, "அடா துஷ்டப்பயலே! பிரஷ்டப் பயலே! உன் தாதையின் அருகில்வந்து உட்கார்ந்து எங்களை அன்னமுண்ணுமற் செய்துவிட்டாயே. நீ கெட்டாயே" என்று வாயில்வந்தபடி வைது ஆளுக்கு ஓர் அடியடித்து அன்னமூண்ணுமல் இனி என்னசெய்யலாமென்று ஒருவர் ஒருவரையோசனை கேட்டார்கள். அதற்குச் சீதோபந்து, "ஓ பூசுரரே! இவ்வறியாக் குழவியால் உங்கள் ஆசாரம் போகாது; வீணுப் வம்பு செய்யலாகாது; அறியாக் குழந்தையைப் பலரும் இப்படி அடிக்கலாமா? தூஷணமொழிகள் படிக்கலாமா? அடாதகாரியஞ் செய்தால் படாதபாடுபட வேண்டியதாய்வரும்" என்று அறைந்தார். அவ்வசனத்தைக்கேட்ட விப்பிரர் துவேஷமேவிட்டு, "அடா சீதோபந்து! நீ அறியாப்பிள்ளைகளைக் கூடவைத்துக்கொண்டு உண்ணுவது எங்களுக்குத்தெரியாது. இன்றுபிரத்தியட்சமாய்ப் பார்த்தகாரணத்தால்இனிமேல் எங்களோடிருந்துண்ணத்தக்கவ

னல்ல. பந்தியிலிருந்து இக்கணம் தூரமாய்ப் போ. இல்லா விட்டால் வாயில்வந்தபடி திட்டிவிடுவோம்" என்று பலரும் பகர்ந்து சீக்கிரம் எழுந்துபோகும்படியா யிரைந்துபேசினர்.

அதனல் சீதோபந்துக்குக் கோபம்பிறந்து தன்கையிலிருந்த பஞ்சபாத்திரத்தைப் பிராமணர்மீதுவீசியெறிய, அந்தணர் ஆக்ரம நிக்குரோதர்களாய்ச் சீதோபந்தைச் சூழ்ந்துகொண்டு, "அடா மடையா! அடா கடையா" என்றுவைது ஆளுக்கு ஓர் அடி அடித்து மூர்ச்சையாய்விழும்படிச் செய்தார்கள். அதைப் பார்த்த க்ஞானேசுவரர் மிகவும் முனிந்து, "ஓ விப்பிரர்களே! 'பிரமக்ஞானந்து பிராமணு' என்கிற வேதவாக்கியப்படி பிரமத்தை யுணர்ந்தவனே பிராமணன். அன்றி நீங்களெல்லாம் பிராமணர்களாவீர்களா? அதமஞ்செய்யும் பிராமணனுக்கு இதஞ் செய்பவனல்லவோ அந்தணனென்று ஆகமத்தில் முறையிடுகின்றது. அதை யறியா நீங்களெல்லாம் அந்தணராகக்கூடுமா? கொலை செய்யும் நீசரே! விவேகமில்லா மிலேச்சரே! வீணுய் எங்கள் மூதாதையோடு வாதாடி மூர்ச்சையடைய அடித்தீர்களே? காயம்படாமல் ஆயம்பார்த்து இடித்தீர்களே? இனி உங்களைக் கொஞ்சத்தில் விடப்போகிறேனு?" என்று அங்கிருக்கும் ஓர் பெருத்த கட்டையை எடுத்துக்கொண்டு பாட்டனாருகில் யாரும் வாராமல் நாலுபக்கமும் வீசினர். அப்படி வீசப் பூசுரரெல்லாம் பிரமித்து ஒன்ருயொருமித்து இந்தத் துஷ்டப்பயலை வெட்டி விடவேண்டுமென்று தாங்களும் பெருத்த கட்டைகளை எடுத்துக் கொண்டு க்ஞானேசுவரர்மேல் விழப்போகையில் நிவிர்த்திசாது, "ஓ பிராமணசீலரே! ஏழைகட்கனுகூலரே! விருத்தரையும் பாலயரையும் அதட்டவும் வாய்வராதே. அப்படியிருக்க நீங்கள் இப்படி செய்யலாமா? வேதமோது மாதவர்க்கீதியல்பானதா? எங்கள் பாட்டனுரை மூர்ச்சை யடைவித்ததன்றிச் சிறுகுழந்தையையும் அடிக்கத் துணிந்தீரே. இது தருமமாயிருக்கிறதா? இப்பேர்க்கொத்த முரட்டுக்குணம் பூசுரர்க்கு இருக்கலாமா? கோபத்தைப் பெருக்கலாமா? சாந்தத்தைச் சுருக்கலாமா? ஏழைகளை வெறுக்கலாமா?" என்கிற நீதிவாக்கியங்கள் ஓதினர். அவ்வசனங்களைக் கேட்ட முப்புரிநூலோர் கோபித்து, ஓ ஓ விளையும் பயிர் முளையில் தெரியும் என்கிற பழமொழிப்படி இனிமேல் விபரீதஞ் செய்யும் இவர்கள் இப்போதே நமக்கு நீதிகளுரைத்துத் தங்கள் குணத்தைக் காட்டினர்கள். மேன்மையைப் பாராட்டினர்கள். 'பண்ணியபயிரிற் புண்ணியந் தெரியும்' என்கிறபடி

பிரஷ்டனுக்குப் பிறந்தவர்களின் துஷ்டகுணத்தைச் சிறு பொழுதிலேயே துலங்கச்செய்தார்கள்.

இக்கணம் இவனையும் அவனையும் இறுக்கிக்கட்டி நறுக்கி விடுவதே நன்மை. இன்றேல் அந்தணர்க்குவரும்தின்மை என்று நிவிர்த்திசாதுவையும் க்ஞானேசுவரரையும் கற்களாலும் கழிகளாலும் அடிக்க ஆரம்பித்தார்கள். அதனுல் க்ஞானேசுவரர் பற்களை நறநறவென்று கடித்துத் தூஷணவார்த்தைகள் படித்து இராக்கதர் கூட்டத்திற்புகுந்த அநுமானைப்போலவும், யானைத் திரளிற்புகுந்த சிங்கத்தைப்போலவும், பசுமந்தையிற் பிரவேசித்த வியாக்கிரமத்தைப்போலவும், அந்தணர் குழுவிற்புகுந்து தன் கையிலிருந்த கட்டையால் மறையோர் கரங்களிலும் சிரங்களிலும் தாள்களிலும் தோள்களிலும் உதிரம் புறப்படவும், அவர்கள் வீரங்கெடவும், மூலைக்கு ஒருவராய் ஓடிப்பதுங்கவும், கண்கள் பிதுங்கவும், தரையில்விழவும், சரணுர்த்தியென்று தொழவும், தங்களைத் தாங்களே வெறுக்கவும், சக்ரபாணி நீயென்று உரைக்கவும், ஒருவரையொருவர் தள்ளவும், உச்சித நீ யென்று விள்ளவும், அடியடியென்றடித்து காக்கைகள்போலப் பறக்கடித்து பின்னுலோடிப்பிடித்து மூளைகள்சிதறவிடித்து ஒரு கணத்தில் ரணக்களமாக்கிவிட்டார்கள். அதனுல் நிவர்த்திசாது க்ஞானேசுவரரின் கரத்தைப் பிடித்துக்கொண்டு "ஓ பகவானே! நாம் பிறந்திருக்குங் காரியமென்ன? நீ கொண்டகோலமென்ன? கலியுகதர்ம மறிந்திருந்தும் விபரீதங்கள் நடக்கிறதெனத் தெரிந்திருந்தும் அந்தணரைப் பிடித்துக்கொள்ளலாமா? தூஷணவார்த்தைகள் சொல்லலாமா? என்று உரைத்து மரித்தபேர்களெல்லாம் உயிர்பெற்று எழும்படியாய்ச் செய்து இன்னஞ் சிலநாள் நமது மகிமையைக் காட்டாமலிருப்பதே நமக்குகந்தயோக்கியம்; இதனுல் வருஞ் சிலாக்கியம்" என்று பாட்டனுருடைய மூர்ச்சையைத் தெளிவித்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனுர். க்ஞானேசுவரர் கோபந்தணிந்து சோபான்தேவையும் முக்தாபாயியையும் நோக்கி இப்படி நான் செய்யாவிட்டால் விப்பிரர் மிகவும் விபரீதஞ்செய்வார்கள் என்று உரைத்துப் பாட்டன் பின்னுகவேபோய் வீட்டையடைந்து வேஷ்டையுற்றிருந்தார்.

அத்தருவாயில் ஓடிப்போன அந்தணர்களெல்லாம் அரசனிடம்போய் முறையிட்டுத் தங்கள் தேகத்திற்பட்ட காயங்களைக்

காட்டி, இக்கணம்சிதோபந்தையும்அவன்வீட்டிலிருக்கும்பிள்ளை களையும் ஓட்டிவிடவேண்டும். இன்றேல் கழுவில் மாட்டிவிட வேண்டுமென்று ஆர்ப்பரித்தார்கள். அதுகேட்ட இராஜன் மிக வும் கோபதீப்தனுகி மறையோரை யடித்த மகா பாதகரைத் தூர்த்தகுணமுள்ள தோதகரை இக்கணமே அழைப்பியும் மந்திரி என்று அறைந்து அந்தணரை அன்போடு ஆதரணைசெய்தான். மந்திரி காவலரை நோக்கி, "நீங்கள் இக்கணம்போய்ச் சிதோபந்தையும் அவன் வீட்டிலிருக்கும் சிறுவரையும் அதிசீக்கிரமாய் அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்று ஆக்யாபித்தான். ஏவலாளர்கள் மகாபாக்கியமென்று சிதோபந்து வீட்டையடைந்து சிதோபந்தை நோக்கி, "ஓ துஷ்டப்பிராமணு! ஓ பிரஷ்டப் பிள்ளைகளே! உங்களை இராஜன் அதிதுரிதமாய் அழைத்துக் கொண்டுவரும்படியாகக் கட்டளையிட்டார். சீக்கிரம் நடவுங்கள்" என்று அதட்டினுர்கள். அவ்வசனங் கேட்ட க்ஞானேசுவரர் "ஓ காவலரே! எங்கள் பாட்டனுர் அந்தணர்களா லடிபட்டுப் பெருமூச்சுவிட்டுக்கொண் டிருக்கின்முர். என் தமையன் முதலானோர் அவர்க்கு உபசாரணை செய்துகொண் டிருக்கின்முர்கள். இவர்களுக்குப்பதிலாக நான் ஒருவனே வருகிறேன். அறையன் வினுவுக்கு விடைதருகிறேன் வாருங்கள்" என்று அழைத்துக்கொண்டு போனுர். பின் சபாமண்டபத்துக்கு எழுந்தருளி "ஓ பூபதியே! எங்களை அழைப்பித்த காரணமேது?" என்று வினவினுர். க்ஞானேசுவார் செருக்குடன் பேசியதைக்கேட்ட தமக்குள்ள நரபதி மிகவும் முனிந்து, "அடா!இதென்ன'கத்தரிக்காய்க்குக் கால்கை முளைத்ததுபோல' ஜாண்பையலாயிருந்தும் வெகு முறுக்குடன் சுருக்கென்னும் வார்த்தைகளாடினுன். இவன் வெகு துஷ்டனுகவே யிருக்கின்முன். நல்லதாகட்டும் பார்க்கிறேன்" என்று அட்டகாசஞ்செய்து, ஓ பிரஷ்டனே! நீயும் உன் சகோதரரும் பூசுரரை அடித்த காரணமென்ன? சீக்கிரஞ்சொல்லடா? என்று கேட்டார். க்ஞானேசுவரர் "ஓ மண்டலாதிபதியே! நியாயமாய் விசாரித்து நல்லோர்க்குச் சகாயஞ்செய்யும் நரபாலனே! பொல்லார்க்கு அபாயந்தரும் பூபாலனே! சந்தர்ப்பணம் நடக்கும் பந்தியில் பிள்ளைகளாகிய நாங்கள்போய் வீற்றிருந்தால் இவ்வேதியர் மறுத்த காரணமும், வேதமோதிய விப்பிரர்களாயிருந்தும் தப்பிதஞ்செய்யா எங்கள் மூதாதையை நைய அடித்து மூர்ச்சையடையச் செய்தகாரணமும், போர்புரியாதீர்களென்று அறைந்த என் தமையன்மேல் சீறிவிழுந்து அடித்தகாரணமும், முன்

னம் விசாரித்து எங்கள்மேல்குற்றமிருந்தால் தடையின்றித்தண்டனைகொடுக்கலாம். காரணந் தெரிந்துகொள்வதற்கு முன்பே கடுஞ்சினமடைந்தால் காவலனுகிய உம்மை எதிர்த்து உத்தரஞ் சொல்ல என்னுலாகுமா? என்னல் ஆனுலும் உமது சீற்றம்போகுமா? அரசனுக்குநீதியும், ஆசானுக்குவிவேகமும்,மந்திரிகட்கு ஆலோசனையும், பதிவிரதைகட்குக் கற்பின் மேன்மையும் சொல்பவருண்டா? கொடுங்கோல்பிடித்த கோமானும் கோள்சொல்லும் விப்பிரசீமானும், விவேகமில்லா மந்திரியும், விபசாரஞ் செய்யுமங்கையும், நரகமன்றிப் பரமடைவதுண்டா?" என்கிற நீதிவாக்கியம்காட்டி வெகுளிநிறைந்த வேந்தன் மனதைவாட்டி மௌனமாயிருந்தார். அவ்வாக்கியங்களைக் கேட்ட கொற்றவன் ஆச்சரியப்பட்டுத் தனக்கிருந்த மாச்சரியங்கெட்டு முப்புரிநூலோரைநோக்கி, "ஓ விப்பிரர்களே! பந்தியில் வந்திருந்த மைந்தர்களை யெல்லாம் நீங்கள் தள்ளின காரணமேது சொல்லுங்கள்?" என்று கேட்டார். பூசுரர் இப்பால்யர் தந்தையாகிய விடோபாவென்பவன் சன்யாசியாகிப்பலர்வீட்டிலுமுண்டுபிரஷ்டனுய்விட்டானென்று முன்னமே குலத்திலிருந்து நீக்கிவிட்டோம். அவன் காட்டை யடைந்தபின் உற்பவித்த இச்சிறுவர் நாட்டையடைந்து எங்கள் பந்தியிலிருந்து உண்ணவந்தால் நாங்கள்வேண்டாம்" என்று உரைத்தோம். அதற்கு க்ஞானேசுவரர் ஐயா "இராஜனே! பிரமக்ஞானந்து பிராமணுவென்றவேத வாக்கியப்படி பிரமத்தை யறிந்துகொள்வதற்காக எங்கள் தந்தை சன்யாசியாய்ப்போனர். பிரமக்ஞானியானர். குருவாக்கை மறுக்காமல் சம்சாரியானர். இதனல் அவர் எப்படி பிரஷ்டனுனர்? கேட்பீராக" என்றார்.

அந்தணர் சன்யாசி சண்டாளன் வீட்டிலும் புசித்திருப்பானுதலால் சாதியிலிருந்து தள்ளநேரிட்டதென்று அறைந்தார். க்ஞானேசுவரர் பலர் வீட்டிலுமுண்ணும் பரமாம்ஷனை அந்தணர் பந்தியில்வைத்துக்கொண்டு உண்ணும்படியாய் வேதத்தில் முறையிடுவதால் எங்கள் தாதைபிரஷ்டன்எப்படியானுர்?அன்றி முன்னேர் அனேககாலங் காட்டில் தவம்புரிந்தும், அனேக தேசங்களிற்றிரிந்தும்சன்யாசவேஷமாயிருந்தும்பின் சம்சாரிகளாகவில்லையா? காஷாயதாரியாகிய கலைக்கோட்டுமுனிவர் ஓர் காவலனீன்ற கன்னியரிருவரைக் கலியாணஞ்செய்துகொள்ளவில்லையா? அனேகநாள் சன்யாசியாயிருந்த கும்பமுனி ஓர் அரசன் புத்திரியை மணந்து சம்சாரியாகவில்லையா? எங்கள் தாதை

மாத்திரஞ் செய்தது தொல்லையா? பிர்மத்தை யுணர்ந்தவர்களுக்குச்சாதிபேதமுண்டென்று எச்சாத்திரத்தில் முறையிடுகின்றது?
அப்படியே பேதமாய்ப் புகன்றிருக்குமாகில் சக்கிலியன்வீட்டில் வளர்ந்த அருந்ததியை மணந்த வசிஷ்டரும், மச்சகந்தியின் கர்ப்பத்திற்பிறந்தவியாசரும், கிராதனுயிருந்த வால்மீகரும், வலைஞனுக்கு மாணுக்கனுகி அவன் எச்சிலையுண்ட நாரதரும், பிரஷ்டமடைந்திருக்கவேண்டுமல்லவா? அப்படி யில்லாமையாலும் பிர்மக்ஞானந்து பிராமணுவென்று வேதம் முறையிடுவதாலும் யாரும் ஒப்புக்கொள்ளாத தப்புவார்த்தைகளாடினுல் தலைகள் வெடித்துப் போகாதா? என்று அறைந்தார். பின்னும் அரசனைநோக்கி, "ஓ இராஜனே! எங்கள் தந்தை பிர்மக்ஞானத்தை வேண்டிக் காசிதேசத்திற்சென்று விசுவநாதரைப்பாடி ஆசானைத் தேடி பிராமணோத்தமராகிய ஸ்ரீபாதஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்றுத் தபவேஷமுற்றுத் தன்னைமறந்து பிர்மானந்தம் நிறைந்து குருவாக்குக்கு எதிர்வாக்குச் சொல்லாமல் சம்சாரத்துக்குட்பட்டார். அவர் எப்படி குலபிரஷ்டரானுர்? அநீதியான காரியங்கள் செய்கிறவர்களே பிரஷ்டரன்றி, பிரமக்ஞானிகள் பிரஷ்டராவார்களா? அன்றிக்குணம் சிரேஷ்டமென்றும், குலம் சிரேஷ்டமல்லவென்றும், வியாசவசிஷ்டராதியோரால் பிரத்தியட்சமாய்க் காணப்படுகின்றதால் இனி உமதிஷ்டப்படி தீர்ப்புசெய்யும்" என்று உரைத்தார். அவ்வாக்கியங்களைக் கேட்ட அரசன் "ஓ போக்கியத்திலும் சமஸ்த பாக்கியத்திலும் சிறப்புள்ள பாலயனே! உன் திருவாய் உரைத்தருளிய வசனங்களெல்லாம் வேதமந்திரமேயாகும்; எனக்கென்று மில்லா ஆனந்தந் தந்தாய்; ஓ விடோபாவின் மைந்தா! சீக்கிரம் என் அருகில்வா; முத்தந்தா என்று அவரை வாரியெடுத்து மார்புடனணைத்து நீர் எட்டுவயதுள்ள குழந்தையாயிருந்தும் மிகவும் அற்புதமான வசனங்கள் புகன்முய். இனி பெரியவனுனல் உன்னுடன் எதிர்த்துப்பேச இவ்வுலகில் ஒருவருண்டோ? உனக்கிணை லட்சம் பிராமணர்களு மாகார்கள். ஓ மதிமந்திரி! இச்சிறுவன்பேசிய வசனங்களைக் கேட்டீரா? நீரும் முத்தந்தரமாட்டீரா" என்று அறைந்தான். பின் "ஓ காவலரே! இக்கணம் மூன்று தண்டிகைகளைக் கொண்டுபோய் இவ்வுத்தமருடைய சகோதரரை அதில் ஏற்றிக்கொண்டு வாருங்கள்" என்று அறைந்து காவலராற் கொண்டுவரப்பட்ட நிவர்த்திசாது முதலானேரைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து அவர்கள் வாய்மொழிகளையுங் கேட்டு

ஆனந்தபரவசத்தனுகித் தன்னை மறந்து உடனே தெளிந்து சிம்மாசனங்களில் வீற்றிருக்கச்செய்து ஓ ஓ! இப்பேர்க்கொத்த சிலர் என் நாட்டுக்கனுகூலர். இத்தேசத்திலிருக்க நான் என்னபாக்கியஞ் செய்தேனே என்கிற பற்பலமொழிகள் பகர்ந்து நால்வருக்கும் நான்குமேடையும் அநேக ஆடையாபரணங்களும் அளவற்ற சொர்ணங்களும் அளித்து மிகவுங்களித்து விப்பிரர்களை நோக்கி, "ஓ பூசுரரே! என் வேண்டுகையில் யாதொரு குற்றமில்லா இந்நற்றவரை உங்களிற் சேர்த்துக்தொண்டு பந்தியில் வைத்துக்கொண்டு என்னைக் களிப்படையச் செய்யுங்கள்; என் கர்மத்தைக் கொய்யுங்கள்; என்னைப் புனிதராக்குங்கள்; உங்களுடைய துவேஷத்தை நீக்குங்கள்; இதனிமித்தம் உங்கள் ஒவ்வொருவனுக்கு ஆயிரம் வராகனளித்தேன்" என்று உரைத்தான். செங்கோலுக்கு முன் சங்கேதஞ் செல்லாக் குறையால் விப்பிரர் ஒப்புக்கொண்டதுபோல் அபிநயங்காட்டித் திரவியத்தைப் பெற்றுக்கொண்டு மறுநாள் இராஜன் பக்கலடைந்து "ஓ அரசனே! எங்களுக்கு முதன்மையாசாரியர் பயிடவபுரியிலிருப்பதால் அவ்விடத்திற்குக் குழந்தைகளையும் இவர்கள் தாய் தந்தையையும் அனுப்பி இவர்களுக்குச் செய்யவேண்டிய பிராயச்சித்தங்கள் செய்வித்து, அவர்கள் சமாதானப் பத்திரிகையும் வரும்படியாய்ச் செய்தால் உங்கள் இஷ்டப்படி நடக்கிறோம்" என்று உரைத்தார்கள். இராஜன் அப்படியே செய்வேனென்று சிதோபந்தை வரவழைத்து நீரும் இக்குழந்தைகளும் பல காவலர்சூழத் தண்டிகைமீது ஊர்ந்துபோய் மகானுபாவராகிய விடோபாவும், விரதசீலியாகிய ருக்மாபாயியையும் தண்டிகையின்மேலேற்றிக்கொண்டு, ஆலசியஞ்செய்யாமல் அழைத்துக்கொண்டு வாருமென்று அறைந்து பல காவலரையும் இரண்டு தண்டிகையையும் அனுப்பினர். அகண்டசாம்பிராச்சியம் பெற்ற சிதோபந்து களிப்புற்றுப் பேரன்மாருடன் காட்டையடைந்து மலைச்சாரலில் வாசமாயிருக்கும் விடோபாவிடஞ்சேர்ந்து களிகூர்ந்து "அப்பா மருமகனே! நீ பெற்ற பால்யரால் நமது தாரித்திரமும் சகல குறைகளும் நீங்கிவிட்டன. அரசன் உன்னை இக்கணமே அழைத்துக்கொண்டு வரும்படியாய்ப் பல காவலரையும் தண்டிகையையும் அனுப்பினர். தடைசெய்யாமல்நாட்டுக்கு எழுந்தருளுமப்பா" என்று அழைத்தார். அவ்வசனங்கேட்ட விடோபா நகைத்து, "ஓ ஐயா! காட்டிலிருந்து களிப்புற்றவர்கள் நாட்டையடைந்து நலிக்குள்ளாகார்கள். அது

தெரிந்த தேவரீர் அடியேனை அரசன் அழைத்தாரென்று அறைந்தீர். 'துறவிக்கு வேந்தனொரு துரும்பு' என்கிற வாக்கிய மறியாதவரோ? ஒன்றுந் தெரியாதவரோ? இனி இவ்வாக்கிய முரைக்காமல் என்னை வெறுக்காமல் இச்சிறுவருடன் நாட்டுக்குப்போய் வாட்டமற் றிருப்பீராக" என்று மைந்தரையும் பார்க்காமல் மௌனநாட்டத்திலிருந்தார். க்ஞானேசுவரர் பாட்டனுரையும் காவலரையும் நோக்கி, "நீங்கள் இத்தண்டிகை முதலானவைகளுடன் நாட்டுக்குப் போங்கள்; நான் இவரை நாலு நாளுக்குள் அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்று உரைத்து அனுப்பிச் சகோதாருடன் தந்தையிடத்தில் சந்தோஷத்துடனிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

ஞானேசுவரர் அந்தணரை அவமானஞ்செய்து
ஐசுவரியம்பெற்ற அத்தியாயம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

## ஞானேசுவரர் தன் தந்தையை

### நாட்டிலழைத்துவந்த அத்தியாயம்

பக்தர்களின் எண்ணமுழுதும் இனிதாய் நிறைவேற்றும் கருணாகரக் கணபதியை ஆராதாரத்துக்கு ஆதாரமான மூலாதாரத்திற் கண்டு களிப்புற்ற சித்தர்களே! ஏகாக்கிரக சித்தத்தோடுங் கேட்பீராக. சிதோபந்தும் காவலரும் நாட்டையடைந்த பின் காட்டிலிருக்கும் ஸ்ரீமந்நாராயணராகிய க்ஞானேசுவரர் தங்கள்மேல் பஞ்சபிராணனையும் விட்டுத் தந்தையாகிய விடோபா தபோபலத்தாலும், பிரமக்ஞான நிஷ்டையாலும், ஆனந்த பரவசத்தாலும், தன்னைமறந்து சங்கல்பமிறந்து தட்சிணாமூர்த்தியைப்போல் சமாதிநிலையைச் சார்ந்திருப்பதைக்கண்டு அவருடன் தர்க்கஞ்செய்ய வாஞ்சைகொண்டு சின்மயமுத்திரையிலிருக்கும் அவர் மடியின்மேற்போய் வீற்றிருக்கப் பராத்பரனாகிய க்ஞானேசுவரர் பரிசம்பட்ட மாத்திரத்தில் எல்லையற்ற பரவசத்தனாயிருக்கும் விடோபாவின் நிர்விகற்ப சமாதிகெட்டுச் சுழுப்தி மௌனத்தைவிட்டுப் புளகாங்கிதனாகி விகற்பமனதுடையவனாகி ஞானக்கண்ணைத் திறந்து ஊனக்கண்களைத் துறந்து

தன் மடியின்மேல் வீற்றிருக்கும் பக்தவச்சலனுகிய க்ஞானேசு வரர்மேல் மிகவும் வாஞ்சைகொண்டு என் கண்மணியேயென்று விண்டு வாரியெடுத்து மார்பகத்திலணைத்து உச்சிமோந்து முத் தங்கொடுத்து நிவிர்த்திசாது முதலானவர்களையுந் தழுவி ஆனந்த பாஷ்பங்களாற் கழுவி, "ஓ ஒப்பில்லா மைந்தர்களே! யான் வணங்குதற் குகந்தவர்களே! சவுக்கியமான நாட்டைவிட் டுக் காட்டில் ஏன் வந்தீர்கள்? அன்பிலாவென்பால் ஏன் வந்து நொந்தீர்கள்? அழகொழுகிய உங்கள் முகதரிசனம் இன்று ஏன் தந்தீர்கள்? அனேகநாளாய் ஏன் தரிசனந் தாராமலிருந்தீர்கள்?" என்கிற பலபட்சவார்த்தைகளாடினுர். உடனே மௌனநாட்டை நாடிப் பரப்பிரம்ம சங்கீர்த்தனம் பாடிப் பரமானத்தத்தைத் தேடி மகவாசையை நீக்கி மைந்தர்களைநோக்கி "இனி சுகமாய் நாட்டைச் சேர்ந்து வேஷ்டைதீர்ந்து மயக்கத்திலிருந்து பேர்ந்து மிகவுங் களிகூர்ந்து அரசனேடு அன்புற்றிருங்கள்" என்று பகர்ந்து மடியிலிருந்த ஞானேசுவரரை எழுந்திருமப்பா என்ருர். கபடநாடகனுகிய ஸ்ரீஞானேசுவரர் "ஓ எந்தையே! எங்களைப் பெற்ற தந்தையே! தேவரீரும் நாட்டுக்கு வரவேண் டும், எங்களுடனிருக்க வேண்டும். நாங்கள் களிக்கவேண்டும். இந்த வரம் நீர் இப்போதே தரவேண்டும்" என்று அறைந்து, மற்ருேர் வாமத்தின்மேல் வாமபாகனுகிய நிவர்த்திசாதுவும் எதிரில் சோபான்தேவும் முக்தாபாயும் வீற்றிருக்கச் செய்தார். பின் ஞானேசுவார் தந்தையைநோக்கி "நீர் நாட்டையடையா மல் இக்காட்டிலிருக்க நாங்கள் சுகமுற்றிருப்போமோ? பெற்ற தந்தையையும் வெறுப்போமோ? சீக்கிரம் எங்களுடன் பட்ட ணத்துக்குப் பிரயாணப்படும் என்ருர்.

அதற்குவிடோபா "அப்பா ஞானேசுவரா! கக்கினது ஆயா சந்தீர்க்கும் பாயாசமானுலும் அதை நக்குவாருண்டா? உத்தமர் வாக்கிரண்டா? காட்டில் வந்தபின் நாட்டிற் பிரவேசிக்கலாமா? அறிவில்லாத மாந்தரோடும் நேசிக்கலாமா? அன்பார்ந்த நெஞ் சுடன் விசுவாசிக்கலாமா? அற்பமான அரசனைப் பூசிக்கலாமா? எப்பொழுதும் எனக்குக் காடேகெதியாகும். உங்களுக்கு நாடே கெதியாகும். ஆதலால் வாட்டமற்று நாட்டையுற்றிருப்பீர்கள்" என்ருர். ஞானேசுவரர் "ஓ என்னையனே! நீர் காட்டிலிருக்கும் காரணமேது?" என்ருர். விடோபா "அப்பா மகனே! நான் நாட்டையடைந்து இனி பெறும்படியான போகலாபம் எதிருக்

கின்றது? நாட்டில்வருவதால் மோக்ஷத்துக்கு விக்கினமேயன்றிச் சகாயமில்லை. நிர்ச்சங்கமான இக்கானகமே மோன நிஷ்டைக்கு யோக்கியமானதால் இம்மலைச்சாரலிற் சஞ்சரிக்கின்றேன்" என்ருர். ஞானேசுவரர் கண்களை மூடாமல் கவுசனையால் விண்ணை மூட நினைப்பதுபோலவும், இடியைத் தன் சிறுகால்களாற்ருங்கக் கருதிய சிறுகுருவியைப்போலவும், கர்மம் செய்துகொண்டே தர்மம் தேடுவதுபோலவும், கடின நெஞ்சன் காட்சியைப்பெற வாஞ்சைகொண்டதுபோலவும், நானென்பதைமாற்ருமல் ஞான நிஷ்டையைச் சாதிப்பதுபோலவும், நாடென்றுங் காடென்றும் பேதவெண்ணங்களோடுங் கூடியிருக்கும் நீர் செய்யும் பிரம நிஷ்டையிருக்கின்றது. அபேத நிஷ்டைக்குப்பேதநாட்டமிருக்க லாமா? என்ருர். விடோபா எனதென்னும்பொருள்கள் இருக்கும் பரியந்தம் நானென்னுமகந்தையும், அதுவிதுவென்னும் துவித பாவமும்போகாது. இப்பேதபாவங்களை நீக்குவது நிர்விகற்ப நிஷ்டையாம். இந்நிர்விகற்பநிஷ்டை நிர்ச்சங்கல்பத்தாலும் லபிக்கும். ஆதலால் ஏகாந்தமானகாடே மௌனநிஷ்டைக்கு உரியதென்று இவ்விடத்திலிருக்கின்றேன் என்ருர். ஞானேசுவரர் தன்னையறிந்து தானுயிருப்பதே பிரமநிஷ்டை; அன்றிக் காட்டினில் தனித்திருப்பது நிஷ்டையல்ல என்ருர். விடோபா சத்குரு முன்னிலையில் தன்னையறிந்துகொண்டாலும், தானுயிருப்பதற்கு ஏகாந்தஸ்தானமே முக்கியமாக வேண்டுமல்லவா? என்ருர். ஞானேஸ்வரர் காட்டினிற்றனித்துத்தபஞ்செய்வதால் அஞ்ஞான நிவர்த்தியாகாது. அகமமதைகள் நீங்கிப்போகாதென்று மெய்ஞ்ஞானிகள் காடென்றும் நாடென்றும் சன்னியாசமென்றும் சம்சாரமென்றும்உன்னுமல் திடமனதிேைடு நிருவிகற்பசமாதியைப் பொருந்தியிருக்க, நீர் சம்சாரத்தை எதிர்த்து இக்கானகத்திலிருக்குங் காரணமேது? என்ருர். விடோபா சாட்சியையறிந்து சர்வ சாட்சியில் ஐக்யமானவர்கள் சம்சாரத்தி லிருப்பாரேல் சமாதி சாதனைக்கு விக்கினம் நேரிட்டுச் சாட்சாத்காரத்தை யிழந்துவிட நேரிடும். ஆதலால் சகசானந்தபூதி பெற்ருேர் சம்சாரவபேட்சையைக் கனவிலுங் கொள்ளமாட்டார்கள் என்ருர். க்ஞானேசுவரர் இது வேண்டுமென்கிற சங்கல்பமும் இது வேண்டாமென்கிற விகல்பமும் அற்றிருப்பதே சகஜநிஷ்டையன்றிக் காட்டை அபேக்ஷித்து நாட்டை யுபேக்ஷித்திருப்பது நிஷ்டையாகுமா? என்ருர். விடோபா சங்கல்பவிகல்பமற்றிருப்பவர்க்கு வியாபாரம் எவ்விதமாய் நடக்கும்? விவகாரத்துக்கு உதவா

தவன் நாட்டிலிருப்பதால் பிரயோசனமென்ன? ‘பிணத்துக்கு மணஞ்செய்வதுபோல’ அநித்யத்துக்கா சுத்தமான இத்தேக போஷணையைக் குறித்துப் பலசங்கடங்களுக்கு இடமான நாட்டிவிருக்கக் கூடவே கூடாது என்றார். க்ஞானேசுவரர் வியாபாரத்தில் இச்சையற்றவன் சமாதிசாதனஞ் செய்வானாயின் அச்சாதனமும் வித்யாபாரமல்லவோ? இவ்வியாபாரமுள்ளவனுக்குச் சம்சார வியாபாரமு மிருக்கட்டுமே என்றார்.

விடோபா சமாதி ஓர் வியாபாரமானாலும் சமஸ்த சங்கல்ப சஞ்சலங்களையும் மாற்றிவிடும். சம்சாரவியாபாரம் சமஸ்த சஞ்சலங்களைக்கொடுத்து எந்நேரமும் அல்லலுறச்செய்யுமல்லவா என்றார். ஞானேசுவரர் சச்சிதானந்தப்பொருளே தானாயிருக்க நிஷ்டாசாதன மென்னகாரணஞ் செய்யவேண்டும்? என்றார். விடோபாசாக்ராவஸ்தையில் சுழுப்தி நிலையையடைவதல்லவோ பிரமநிஷ்டையென்று உத்தமர்கள்உரைக்கின்றார்கள். அப்படிக்கில்லாச் சமாதியால்தடைபற்றஆனந்தம்உண்டாகுமா? என்றார். க்ஞானேசுவரர் சாக்ராவஸ்தையில் இந்திரியங்களின் சேஷ்டையும், சொப்னவஸ்தையில் மனோவியாபாரத்தையும், சுழுப்தியவஸ்தையில் சுத்த சூனியத்தையுங் கண்டு களித்திருப்பதே ஆனந்தமும், பருத்தி நிழல்போல் ஒன்றிலும் ஒட்டியும் ஒட்டாமலிருப்பதே நனவிற் சுழுப்தி நிலையும் என்று வேதங்கள் முறையிடச் சுத்த சூன்யமான சுழுப்தியைப்போ லிருப்பதே ஆனந்தமென்றும், நனவிற் சுழுப்தியென்றும் நீர் நினைத்திருக்கலாமா? என்றார். விடோபா சாக்ராவஸ்தையும் சொப்னவஸ்தையும் பிரபஞ்சவியாபாரத்தில் அமிழ்த்தி விஷயங்களென்னும் மிருகங்களுக்கு ஆகாரமாக்கி மிகவும் வேதனை யடையும்படிசெய்யும். ஆதலால் பிரபஞ்சவியாபார மிழந்த சுத்தசூன்யமான சுழுப்தியவஸ்தைக்கு இணையான சமாதியே உத்தம சமாதியன்றி வேறல்ல என்றார். க்ஞானேசுவரர் திருடனுக்கு மூடனே குருவென்பதுபோலப் பிரபஞ்ச வியாபாரத்தி லிருந்துகொண்டே ஜனகரைப்போல விஷயங்களென்னும் மிருகங்களைத் திடஞானமென்னும் வாளால்கண்டித்துச் சுகதுக்கங்களைச்சட்டைசெய்யாமல் எதிர்த்திருப்பதே பரமசமாதியன்றி சூன்யமாயிருப்பது சமாதியல்ல என்றார். விடோபா அனேக ஜென்மங்களாய் வாசனையேறியிருக்கும் மனக்குரங்கைச் சகலபற்றுகளுமற்ற சுகப்பிர்மரிஷியால் ஜெயிக்கப்பட்டதன்றிச் சுழுப்தி நிலையில்லாமல் தான் பிர்மமென்கிற திடஞானமுள்ள ஜனகரால் ஜயிக்கப்பட்டதல்

லவே என்ருர். க்ஞானேசுவரர் கோலாடினுல் குரங்கு ஆடுவது போலத் திடஞானமுள்ள ஜனகரால் மனநாசமடைந்ததேயன்றிப் புறப்பற்று அற்றுக் காடே கெதியாயிருந்த சுகரால் மனேலயமடையவில்லையா என்ருர். விடோபா திருக்குவாயிருந்து திரிசியத்தை யகற்றவேண்டுமேயன்றித் திரிசியத்திலிருந்து கொண்டே திரிசியத்தை எப்படி நீக்கக்கூடும்? விஷந்தீர விஷமே குடித்தால் மரணவேதுவல்லவோ என்ருர். க்ஞானேசுவரர் விஷந்தீர வேருேர் விஷமான அவுஷதம் உட்கொள்ளுவதுபோலப் பயமான விஷயேந்திரிய காரணுதிகள் நிர்ப்பயமான திடஞானத்தாற் கொள்பவனே சமர்த்தனன்றி எப்போதும் நிஷ்டையிலிருந்துகொண்டு எங்கே விஷயங்களென்னும் மிருகங்கள் வரப்போகிறதோவென்கிற பீதியைக் குடிகொண்டிருப்பவனுக்கு அப் பீதியே பலிதமன்றிப் பிர்மானந்தம் ஓர் காலத்துங் கிட்டாது. நன்ருய் யோசித்துப்பாரும் என்ருர். விடோபா சன்யாசியாகி சதா சமாதி நிஷ்டையில் இருப்பவனையே சஞ்சலத்துக்கு உட்படுத்தும் விஷயங்கள் சம்சார வியாபாரத்தில் இருப்பவனை என்னென்ன பாடுபடுத்தாது; பெருவெள்ளத்தில் வீழ்ந்த சருகு சலனமின்றி ஓரிடத்திலிருக்கவுங் கூடுமா" என்ருர். க்ஞானேசுவரர் திடஞான மில்லாதவன் எத்தனைநாள் அந்தர் திருஷ்டியிலிருந்தாலும், கருவிகள் பகிர்முகத்திற் கொண்டுவந்து பல துன்பமடையச்செய்யும் பெருத்த வெள்ளத்தில் வீழ்ந்த பருத்த கல்லானது சற்றும் அசையாமல் இருப்பதுபோல விஷயாதி விகாரங்கள் எத்தனை வந்தாலும், சகிக்காத் துன்பந் தந்தாலும், நிர்ச்சலனமா யிருப்பவனே பிர்மானந்தானுபவம் பெறுவானன்றித் திடமில்லாதவனுடைய மடமை ஒருக்காலத்தும் நீங்கவே நீங்காது என்ருர்.

விடோபா எவ்வளவு திடமிருந்தாலும் நிர்சங்கனுய்ச் சதா பிர்மானுசந்தானஞ் செய்யாமற்போனுல் மாயாந்தகார கூபத்தில் அமிழ்ந்து போவதற்குச் சந்தேகமேயில்லை என்ருர். க்ஞானேஷ்வரர் பிர்மத்தையன்றி மாயையென்பதொன்றுண்டாயிருந்தாலல்லவோ சதா நிஷ்டையிலிருந்து அதை நீக்கவேண்டும். தன் நிழல் தன்னேடு எதிர்த்து யுத்தஞ்செய்யு மென்பதுபோல இல்லா மாயையும் இல்லா அகத்தையும் ஏற்படுத்திக்கொண்டு சதா நிஷ்டையிலிருக்கவேண்டுமென்று உரைக்கின்றீர். இல்லா நிழலோடுபோராடுவதால் இளைப்பே பிரயோசனமாகுவதுபோல் என்றுமில்லா மாயையை இல்லையென்று அறிந்துகொண்டு

மௌனமுற்றிருக்காமல் எந்நேரமும் நியதி களைந்துகொண்டிருப்பது என்றும் நீங்காச்சள்ளையல்லவோ என்ருர். விடோபா நியுதி களையாமலும் ஏகாக்கிரசித்தமாகாமலும் சாட்சியாயிருக்காமலும் சகலஞானம் பொருந்துவது எப்படி என்ருர். க்ஞானேசுவரர் நியதிசெய்யச் செய்யப் புற்றினுள்ளிருந்து புறப்படும் ஈசலைப்போல மிகவும் விஷயங்கள் புறப்பட்டு நிற்கும் ஏகாக்கிரசித்தமாக்க வாக்க அடிக்க அடிக்கப் பந்தெழும்புவதுபோல மனஞ் சஞ்சலப்பட்டு நிற்கும் சாட்சியாயிருக்க விருக்கக் குணங்களெடுத்த கணங்கள் வாலைப்போல் அத்தனுவாதிகள் தானென்கிற பிரமையே வந்துகொண்டிருக்கும். ஆதலால் அவித்தையென்னும் அகந்தையையும், மித்தையென்னும் மாயையும், சுத்திகாரஜிதம் போல் முழுதும் மித்தையாயெண்ணி தானே பிர்மமென நண்ணி விசாரக்ஞானத்தால் கெம்பீரத்துட னிருப்பதே பிர்மானந்தம் என்ருர். விடோபா யாதொரு சாதனையுஞ் செய்யாமல் விசார ஞானத்தால் தானே பிர்மமென்று இருப்பதால் துக்கமயமான விஷயாதிகளை வெல்லக்கூடுமோ? அகண்டானந்த ஆத்மாவைப் புல்லக்கூடுமோ? என்ருர். க்ஞானேசுவரர் உயிரோடிருக்கும் பசுவே வியாக்கிரத்தைக் கொல்லாதாயின் இறந்துபோன பசு கொல்லுமா? அதுபோல நித்யமாகியும் நிஷ்களமாகியும் அகண்டானந்த மயமாகியும் விளங்கா நின்ற ஆத்மாவை விஷயாதிகள் என்ன செய்யக்கூடும்? கொழுத்தபசுவும் புலிமுன் வா அஞ்சுவதுபோலத் திடஞானத்தால் பூர்த்தியடைந்திருக்கும் ஞானவான்முன் விஷயங்கள் வரவே வராது. வந்தால் புலிமுன் வந்த பசு எப்படி அபாயமடையுமோ அப்படியே யழிந்துபோகும் என்ருர். விடோபா விபசாரியோடுகூடிய சம்சாரியுங் கெடுவது போல அஞ்ஞானிகளோடு கூடிய மெய்ஞ்ஞானியும் விஷயாதிகளிற் சிக்கி மனோசஞ்சலத்திற் சொக்கி துக்கமாய்ப்போனுலோ என்ருர். க்ஞானேசுவரர் திடமுள்ள சம்சாரி பல விபசாரிகளோடு கூடியிருந்தாலும் கற்பழியாமலே யிருப்பாள். திடமில்லாதவள் ஒருவர் கூட்டுறவில்லாதிருந்தும் பதிவிரதைத் தன்மைக்குத் தானே பழிதேடிக்கொள்வாள்.

அதுபோல திடமுள்ளஞானி அநேக ஞானிகளோடு சூழ்வுற்றிருந்தாலும் பூரணஞானத்தை யிழக்கமாட்டான். திடமில்லாதவன் ஏகாந்தனுயிருந்தும் இகழ்ந்துவிடுவான் என்ருர். விடோபா சம்சார வியாபாரத்தி லிருந்துகொண்டு சகலஞானி

எப்படியாகக்கூடும் என்ருர். க்ஞானேசுவரர் பார்ப்பான் தோட்டி வேஷம்போட்டு நாட்டியமாடினுலும் தோட்டியாகாமல் அந்தணனுகவே யிருப்பதெப்படி, அப்படியே மெய்ஞ்ஞானி அஞ்ஞானிகளோடுகூடி அநேகவித நடனத்திலிருந்தாலும் பரமானந்தானுபோகியாகவே யிருப்பான் என்ருர். விடோபா எவ்வளவு திடப்ரக்ஞை யுள்ளவனுனுலும் ஓர் முகூர்த்தநேரமானது பிரமானுசந்தானஞ் செய்யாமற்போனுல் பிரமஞானியாதல் வெகுதுர்லபம் என்ருர். க்ஞானேசுவரர் தோட்டி வேஷம் போட்டு நாட்டியமாடும் மறையோன் அடிக்கடி நான் மறையோன் நான்மறையோன் என்றுன்னவேண்டுமோ? அப்படி நினேக்காவிட்டால் தோட்டியாய்ப் போவானே? நாடறிந்தபிராமணனுக்குப் பூணூல்வேண்டுமோ? நானென்னும் அகந்தை யற்றபின் பின்னும் நானென்னும் அகங்காரக்கிரந்தியை வைத்துக்கொண்டு அகம் பிர்மமென்னும் பிர்மானுசந்தானம் பண்ணவும் வேண்டுமோ? நாடறிந்தபிராமணனுக்குப் பூணூல் இல்லாவிட்டாலும் எல்லாராலும் பூசுரனென்றே பூசிக்கப்படுவதுபோலவே நானெனதென்னும் அகமமதையற்றவன் யாது ஓர் அநுசந்தானஞ் செய்யாவிட்டாலும், எல்லாராலும் பூசிக்கப்பட்டுப் பிர்மானந்தானுபோகியாகவே யிருப்பான் என்ருர்.

விடோபா ஜகதீசுவரனுக்கு இணையானவனுனுலும் தான் பிர்மமென்கிற அநுசந்தானம் நாடோறுஞ் செய்யானுகில் அஞ்ஞானியாய்ப்போவதற்கு ஓர் தடையில்லவேயில்லே. தனுவாதிகளே நானென்னும் அகந்தை கொஞ்சத்திற் போகவே போகாது என்ருர். க்ஞானேசுவரர் விளக்கைக் கையிற் பிடித்துக்கொண்டு இருட்டே இருவென்ருல் இருக்குமோ? பூனேயை அருகில் வைத்துக்கொண்டு கிளியே பேசென்ருல் பேசுமா? அதுபோலவே தேகாதிகள் தானென்னும் அஞ்ஞானத்தை எதிர்த்துப் பிர்மமே தானென்று அறிந்தபின் அஞ்ஞானமே யிருப்பாயாக வென்பதால் இருக்குமா? ஜீவேசுவர ஜகத்தாதிகள் பொய்யென்று அறிந்தபின் மாயையை வாவென்ருல் வருமா? நபும்சகனென்று அறிந்த ஸ்திரீயின்முன் நான் புருஷனெனச் சொல்ல நாணமடைந்த பேடியைப்போலப் பிரமமென்பது சத்தியமென்றும், மாயையை அசத்தியமென்றும், பிர்மம் நிர்விகல்பமென்றும், மாயை சங்கற்ப விகல்பமென்றும், தானே பிர்மமென்றும், பிர்மமே தானென்றும், சற்குருநாதன் சன்னிதானத்திற் சந்தேகமறத் தெரிந்தவனுக்குச்

சங்கல்பமேது? விகல்பமேது? பந்தமேது? மோட்சமேது? ஜனனமேது? மரணமேது? நாடேது? காடேது? தானமேது? தபமேது? சன்யாசமேது? சமுசாரமேது? என்று செத்த ஆட்டுக் கண்போலச் சகத்திலிருப்பவன் மாயையின் சாமர்த்தியம் அணுவும் நடக்குமா? அஞ்ஞானத்திலுமடுக்குமா? நன்கு யூகித்துப்பாரும் என்று உரைத்தார். அப்படி உரைக்கும்போது நிவர்த்திசாது “ஓ என் தந்தையே! நீர் வெகுநேரமாகத் தர்க்கிப்பது விந்தையே! எதை நினைத்தமாத்திரத்தில் சகல பாபங்களும் நிவாரணமாய்ப் போகுமோ? எதையாராயின் அனங்கனுவானே? எதனுடைய தரிசனத்தால் தன்னை மறப்பானே? எது ஞானுர்ச்சனைக்குகந்ததோ? ஏகமாயிருப்பதெதுவோ? அதையே யறியவேண்டும். மிகவும் பிரியத்தைக் கொடுப்பதாகியும் அகண்டானந்தத்தைத் தருவதாகியும், ஓர் தரம் தரிசித்தாலும் ஆயுளிறுதிபரியந்தம் நினைத்து நினைத்து வியப்படைவதாகியும், வெளியிலும் வளியிலும் சமீபமானதாகியும், கோடி சூரியப் பிரகாசமானதாகியும், மகாவாக்கியங்களுக்கு லட்சியமாகியும், எப்போதும் நூதனமானதாகியும், விளங்கா நின்றது எதுவோ அதையே தியானிக்கவேண்டும். எதனிடத்தில் இந்த அண்டாண்ட பிண்டாண்ட பிர்மாண்டங்களெல்லாம் சிருஷ்டி திதி லயங்களைப் பொருந்தி யிருக்குமோ? பூத பவுஷிய வர்த்தமானமென்னும் திரிகாலங்களிலும் பின்னமின்றி அத்துவிதமாயெந்தப்பொருளானதிருக்கின்றதோ? எது அவாங்மனே கோசரமாயிருக்கின்றதோ? எது ஆதிக்காதியாகியும் முடிவுக்குமுடிவாகியுமிருக்கின்றதோ? எது மேல்கீழ் நடுபக்கமும் நாமரூப விகார முற்றிருக்கின்றதோ அது பிர்மமென்று உரைக்கத்தகும் என்று வேதத்தில் முறையிட்டாலும், சராசரங்களிலும் பிருதிவியாதி பஞ்சபூதங்களிலும் சப்தமாதி பஞ்சதன் மாத்திரைகளிலும் அவ்யக்தம் மகத்வம் அகங்கார தத்வங்களிலும் சாத்வீக ராசத தமோ குணங்களிலும் இதின் பிரதிபிம்பரான திரிமூர்த்திகளிலும் பரமாணுக்களிலும் பரிபூரணமாய் என்றும் நீங்காதிருக்கும் பரப்பிரமத்தை வணங்குவது எப்படி? இணங்குவது எப்படி? இப்பேர்க்கொத்ததென்று வாக்கினுற் சொல்லவும் மனதினுல் நினைக்கவுங்கூடாததான வஸ்துவை வாழ்த்துவது எப்படி? மனனஞ் செய்வது எப்படி? எதனுக்கு ரூபஞ் சூன்யமாயிருக்குமோ எது நாமத்துக்கு அப்பாற்பட்டிருக்குமோ அதைப் பார்க்கவேண்டும்; துதிக்கவேண்டும்; என்று பலதரம் பேசு

வதனுற் பிரயோசனமேது? சுருதி ஸ்மிருதிகளே அப்பரமாத்மாவின் நிலையை யுரைத்தற்குக் கூடாமல் மௌனஸ்திதியைப் பொருந்தி யிருக்குமாயின் நாம் சொல்வதெப்படி? நாமரூபம் குணங்குறி முதலியவைகளை நீக்கியபின் எப்பொருள் மீதியா யிருக்கின்றதோ அந்தப்பொருளாகி சமஸ்த வஸ்துக்களிலும் சமத்துவம் பொருந்தியிருப்பதே மேன்மையான பிர்மத்தியானமாகும். விருப்பு வெறுப்பு அற்றுச் சுகதுக்கசகிதனுகி நானென்னும் அகங்காரக்கிரந்தியைக் களைதலே மாட்சிமையான பிர்ம நிஷ்டையாகும். ஈது உண்மையாயிருக்க நீர் காட்டினிலிருக்குங் காரணம் என்? தறிபோலசையாது ஸ்தானத்தில் வீற்றிருப்பது என்? என்கிற பலவார்த்தைகளாடும்போது விடோபா தனயரோடு தர்க்கம்செய்யச் சாமார்த்தியமின்றி, அப்பா நிவிர்த்திசாது! ஐயா க்ஞானேசுவரா! நீங்கள் ஜன்மிக்கும் போதே மெய்ஞ்ஞான நாட்டமும் சுஞ்ஞான கோஷ்டமும் விளக்கமுற்றிருந்தவர்கள். ஆதலால் உங்களுடன் வாதுசெய்ய என்னுல் ஆகுமோ? இப்பேர்க்கொத்த மகானுபாவர்களாகிய உங்களை நான் மைந்தர்களாய்ப்பெற என்னபாக்கியஞ் செய்தேனே? ஏதுதவஞ் செய்தேனே? என்று அவர்களை மார்பு இறுகத் தழுவிக்கொண்டு ஆனந்தமேலீட்டால் தன்னை மறந்தார். உடனே ஞானேசுவாரும் நிவர்த்திசாதுவும் அரியரஸ்வரூபிகளாய் வீற்றிருந்தார்கள். விடோபா கண்களைத்திறந்து ஆலிங்கனஞ் செய்த தனயர் இருவரும் சங்கரன் சாரங்கபாணியா யிருக்கக் கண்டு ஆனந்தங்கொண்டு புளகாங்கனுய் மயிர்க்குச்செறிந்து தழுவினபடியே அரியரனைத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர்.

## பகவான் துதி



விருத்தம்

மந்தரகிரிஞெழுங்கா வகையுறப்படக்கியாகி
இந்திராதியரைக்காத்த வெந்தையேநெடியமாலே
பந்தமாம்பகுதிக்குள்ளாய்ப் பவம்பலவெடுப்பேற்கும்நீ
மைந்தனுய்வந்திதென்ன மாயமோவறிகிலேனே. 1

மந்தரகிரிக்காற்றுமல் வாசுகிக்குமாலம்
விந்தையாயுண்டுவானேர் மேற்றயைசெய்தமூர்த்தி
தொந்தம்ம்வாழ்வைமேலாஞ் சுகமெனநினைந்தேற்கும்நீ
மைந்தனுய்வந்ததென்ன மாயமோவறிகிலேனே. 2

பந்துபோலிருக்குமிந்த பற்பலவண்டபேதம்
அந்தணன்படைத்ததன்றோ வவற்குநீதாதையன்றோ
எந்தையேயுனக்குந்தாதை யிகபரத்துண்டோவுன்றன்
மைந்தனான்பிதாநீயென்ற மாயமேதறிகிலேனே. 3

அந்தணன்வலவனாதி யோர்சிரமாலைபூண்ட
தந்தையுந்தாயுமில்லாச் சங்கராவுனைப்பயந்தோர்
எந்தலோகத்திலுண்டிஃ திங்ஙனமிருக்கவுன்றன்
மைந்தனான்பிதாநீயென்ற மாயமேதறிகிலேனே. 4

சிந்துரஞ்சிஞ்சுமாரஞ் செயுஞ்சமர்க்கிடைந்தயர்ந்தே
உந்திபூத்தவனேகாவென் றோலமிட்டிறைந்துகூவ
வந்தனனஞ்சேலென்று வருத்தருண்மாலேநீயென்
மைந்தனாய்ப்பிறந்ததென்ன மாயமோவறிகிலேனே. 5

அந்தகன்வலியாங்கார மாவிநீங்கிடவுதைத்தே
எந்தைமார்க்கண்டர்க்கீரெட் டாண்டினையளித்தாட்கொண்ட
சுந்தரானந்தஞானத் தோன்றலேதொழும்பனேற்கும்
மைந்தனாய்ப்பிறந்ததென்ன மாயமோவறிகிலேனே. 6

அந்தமார்பிற்ககலாத னரியரியெனவேசீற்றம்
வந்துதன்மகவுமாழ்கும் வகைபலவியற்றினோனை
அந்திவேளையிலழித்த வாயனேநீயுமுன்றன்
மைந்தனானென்றறைந்த மாயமோவறிகிலேனே. 7

சுந்தரதிதியின்மைந்தன் துகளெளியுருவாய்ச்சென்று
அந்தரந்தனைக்கறிக்க வலவனாயடைந்தனோன்றன்
கந்தரங்கடித்துமூர்ச்சை யுறச்செய்தகபாலியுன்றன்
மைந்தனானென்றறைந்த மாயமோவறிகிலேனே. 8

தந்தையின்மடிக்காசித்த தன்யனாந்துருவனுக்கே
அந்தரத்தசலவாழ்வை யளித்தகாருண்யமாயா
வெந்துயர்க்கடலின்மூழ்கி வேட்கையுற்றிருப்பேற்கும்நீ
மைந்தனாய்ப்பிறந்ததென்ன மாயமோவறிகிலேனே. 9

நந்திவாகனனேயென்று நலவுபமன்யரேத்த
முந்தமிழ்துந்தியீந்த முக்கணாயகனேதீய
செந்துவர்வாய்நலார்தஞ் சேமமிச்சித்தேற்கும்நீ
மைந்தனாய்ப்பிறந்ததென்ன மாயமோவறிகிலேனே. 10

என்று இவ்விதமாகத் துதித்து உருகி ஓ வைகுந்தவாசனே! ஓ கைலாச நிவாசனே! நீங்களே எனக்குப் புத்திரராய் அவதரித்திருக்கத் தவமுஞ் செய்யவேண்டுமோ? என்னைப்போன்ற புண்ணியவானும் இவ்வுலகிலுண்டோ? உங்களுக்குச் சேவை செய்

வதைவிட்டு இக்காட்டிலிருந்த என் அறியாமையை என்னவென் றுரைப்பேன்? பிறந்தநாளிலேயே உங்களுடைய சுயரூபங்களைக் காண்பித்து என்னை ஆட்கொள்ளலாகாதோ? இதுநாள் பரியந் தம் மறைந்திருந்த காரணமேதோ? என்கிற பல வார்த்தைகளா டிச் சோபான்தேவை நோக்கி, "ஓ மகானுபாவா! சோபான் தேவா! உம்முடைய திவ்விய உருவத்தையும் அடியேன் தரிசிக் கும்படியாக அருள்புரியவேண்டும் என்று வேண்டினார். சோபான்தேவ் பிரமதேவனாகக் காட்சிகொடுத்துத் தந்தையை நோக்கி, "ஓ பரமசாதுவே! தனக்குள் பரப்பிர்மத்தையறிந்து, தானே பிர்மமெனத் தெளிந்து, தனக்கு எக்காலத்திலும் ஜனன மரணாதிகள் இல்லை யென்றறைந்து, பரிபூரண வஸ்துவா யிருப்பானானால் அவனுக்கு மரணமுண்டா? ஜன்மமுண்டா? இப்படி பிறப்பிறப்பற்ற பிரமஞானிக்கு நரகமேது? சொர்க்க மேது? பந்தமேது? மோட்சமேது? எல்லாம் பிர்மமென்கிற அதர்வண வேதவாக்கியார்த்தத்தின்படி பிபீலிகாதி சமஸ்த வஸ்துக்களும் பிர்மமயமென்றும், பிர்மம் அணுவுக்கு அணு வாகியும், மஹத்துக்கு மஹத்தாகியும் விளங்கும் பரவஸ்துவென் றும், அறிந்தவனே பிரமா்னுபூதி பெற்றவனாகும். அன்றி இப் பேர்க்கொத்த அனுபவத்திலிருந்துகொண்டே சம்சாரத்தில் இருப்பவன் பிர்மவித்தென்றும், சுகஞானியென்றும் சொல்லப் படும். இல்லறத்திலிருந்து தேர்ந்த வசிஷ்டருக்கு விஸ்வாமித் திரரும், ஜனகருக்குச் சுகப்பிர்மரிஷியும், ஸ்ரீகிருஷ்ணருக்குத் துருவாசரும் ஐக்கியமாய் இருந்தார்கள். ஆதலால் இல்லற ஞானியே தன்னை மறந்த சன்யாசிகட்கும் மேலானவனாகு மென்று அறைந்தார். அப்போது விடோபா "ஓ சகத் சிருஷ்டி கரே! உமது வாக்கைக் கடப்பவருமுண்டோ? இனி நீங்க ளென்ன சொல்லுகிறீர்களோ அப்படியே நடக்கச் சித்தமாயிருக் கிறேன்" என்று அறைந்து ஆனந்தம் நிறைந்திருந்தார். பின் ருக்மாபாயியை நோக்கி, "ஓ பெண்ணே! நமது ஆசிரியர் ஆசீர் வசனப்படி திரிமூர்த்திகளும் நமக்கு மகவாய்ப் பிறந்து நம்மைக் கிருதார்த்தராக்கினார்கள். இனி நாம்தவமுஞ்செய்யவேண்டுமோ? வனத்திலும் இருக்கவேண்டுமோ? நம்மைப்போல் புண்யவான்க ளும் உண்டோ?" என்று உரைத்தார். அப்போது ருக்மாபாயி ஆனந்தவாரியில் மூழ்கினவளாய் இவ்வுலகில் இப்பேர்க்கொத்த விந்தையும் நடந்ததுண்டோ? ஆனால் அநுசூயாதேவி புத்திர வாஞ்சையால்வாடக்கண்ட மும்மூர்த்திகளும்அவ்வுத்தமிக்குமக

வாகப் பிறந்தார்கள். காரணம் அவ்விரதசீலியின் கணவனுகிய அத்திரி மஹாரிஷியின் தபோபலத்தால் அநுசூயாதேவியைப் பரிசோதிக்கவந்த மூவரும், தம்வல்லமைகுன்றிச் சிறுகுழவிகளா யிருந்ததினுலேயாம். மகா பதிவிரதையாகிய அநுசூயாதேவிக்கும், மகவாய்ப்பிறந்த மூவரும் யாதொரு நற்குணமும் இல்லாத அடியாளுக்கு அருங்குழவிகளா யுற்பவித்தது மிகவும் ஆச்சரிய மல்லவா என்கிற பல வார்த்தைகளாடினுர். பின்பு முக்தாபாயின் வதனத்தைநோக்கி, "ஓ அம்மா! நீசரஸ்வதியோ? லட்சுமியோ? பார்வதியோ? யாங்களறிய உன் சுயரூபத்தையுங் காட்டி எங்களை ஆட்கொள்ளும் அம்மா" என்று வணங்கினுர்கள். முக்தாபாயி மூவர்வேண்டுதலினுல் தன்சுயரூபமெடுத்து ருக்மாபாயும் விடோபாவும் களிக்கடலில் மூழ்கும்படியாகத் தரிசனந்தரவே சதிபதிகள் இருவரும் பரமேசுவரியின் பாதங்களிற்ருெழுது, "ஓ அம்மணி! பரமேசுவரி! ஜகதீசுவரி! அந்தரி! சுந்தரி! நிரந்தரி! துரந்தரி!சங்கரி! பயங்கரி! மனேன்மணி! மஹாதேவி! சகலலோகங்களையும் உன் உதரத்தில் வைத்திருந்தும், எங்கள் அகட்டிற் பிறந்து குழந்தையென்கிற பேருறலாமோ? தந்தை தாயென்னும் பேர் நாங்கள் பெறப்போமோ?" என்று அனந்தம் விதங்களாய்த் துதித்தார். அப்போது ஆதிசத்தி ருக்மாபாயியையும் விடோபாவையும்நோக்கிப் "புனிதர்களே! நாங்கள் நால்வரும் உலகிலுள்ள கொடும்பாவங்களைப் பரிகரிக்கவும், கோஹத்தி மூதலான தீங்குகள்செய்யும் கொடியாரை அடக்கவும், சகுண நிர்க்குண தியானங்கள் நிலைபெற்றிருக்கவும், ஸ்ரீராம லட்சுமண பரதசத்துருக்கரைப்போல்அவதரிக்க எண்ணங்கொண்டு மகாபுண்ணியவான்களாகிய உங்களுக்கு மகவாய்ப் பிறந்தோம். அவதரித்த காரணத்தைமுடிக்க நாட்டையடையவேண்டும். ஆதலால்எங்கள் வாக்கியத்துக்கு மறுவாக்கு உரைக்காமல் நீங்களும் நாட்டுக்குவரவேண்டும். அன்றிப் பிர்மானுபூதி பெறும்படியான அத்வைதஞானிகள் காடென்றும் நாடென்றும் பின்னபாவமாகப் பார்க்கவேகூடாது; மலமாதிகளும்சந்தனுதிகளும் அபின்னமாய்ப் பார்ப்பவனும், விஷாமிர்தத்தை ஒன்றெனமதித்துப் புசிப்பவனும், சுகதுக்கத்தைச் சமமாக நினைத்திருப்பவனும், உறவும்பகையும் ஒன்றென உண்ணுபவனும், சாதிக்கும்படியான பிரமநிஷ்டையைப் பேதபாவமுள்ளவனுல் ஒருபொழுதும்சாதிக்கவேகூடாது. ஆதலால் எல்லாவற்றிற்கும் சமபாவமுள்ளவனுல் சாதிப்பதற்கு உகந்த பிர்மநிஷ்டை நாடென்றும் காடென்றும் பேதபாவமுடைய

உங்களால் அத்விதானுபவம்பெறவேகூடாது. மூவர்தேவர் மற்றியாவர்களும் பிரியமாகியும் அவர்கள்பால் அணுமாத்திரமான ஆனந்தமாகியும், தான்கண்டு ஆனந்தமயமாகியும் சராசரங்களில் நிறைந்திருக்கும் பராபரமாகியும் இருப்பது எதுவோ அதுவே பிர்மமென்று உரைக்கத்தகும். அதை ஏகமென்றும், அனேகமென்றும்சொல்லக்கூடாது. ஒன்றென நிச்சயித்தபோதே அங்ஙனே விகற்பங்களுண்டாகும். அப்பரவஸ்துவை இப்பேர்க்கொத்தது என்று சொல்வதற்குக்கூடாமையாலே இப்பரமேசன் சின்முத்திரையால் ஜனகசனந்தனுதியர்க்குங் காட்டாமற் காட்டிப் பரமாத்மாவில் ஐக்யப்பட்டுமௌன நிஷ்டையைப் பொருந்தியிருக்கிருர். இந்தமகாவிஷ்ணுவும் அப்பரப்பிர்மத்தை இப்பேர்க்கொத்தது என்றுஉரைக்கக்கூடாமையால்பௌத்தாவதாரமாய்மௌனமூற்றிருக்கின்ருர். இப்பிரம்மாவும் அப்பரவஸ்துவைவிரித்து உரைத்து உரைத்துத் தன்னுலாகாமல் மூகபாவத்தை யடைந்திருக்கின்ருர். வாக்கினுற் சொல்லும் ஓர்மொழியை அவ்வாக்கினுலே ஸ்திரப்படுத்த வேண்டுவதுபோலப் பரமாத்மாவின் நிலைமை அப்பரமாத்மாவாலேயே அறியவேண்டும். சீவயிம்சை அச்சீவனன்றி மற்றதால் அறிதற்குக் கூடாததுபோலவும், தாகத்தின் வேஷ்டையைத் தாகமெடுத்தோனுல் தெரியவேண்டுவதுபோலவும், இனிய பதார்த்தத்தின் ருசியை அருந்தினவனுலே அறிந்துக்கொள்வதுபோலவும், தானே அப்பரவஸ்துவை யாராய்ந்து அறிந்துக்கொள்ளவேண்டும். அன்றிஒருவராலுணர்த்துதற்குக் கூடாது. குருவுஞ் சீஷனும் ஒன்ருய் இருக்கும் அனுபவத்தில் சேவைசெய்பவன் யார்? சேவித்துக்கொள்பவன் யார்? ஆசிரியர் மாணுக்கனை நோக்கி, நீயேநான்; நானேநீ என்கிற அத்துவிதானுபவத்தை உரைப்பானுயின் மாணுக்கன் பின்னப்பட்டிருக்கக் கூடுமா?தன்னுடைய சொரூபஸ்திதி அபின்னகீர்த்தியாயிருக்கப் பின்னபடுவதுஎப்படி? நன்றென்றும்தீதென்றும்பாராமல் காடாக்கினிக்கு இணையா யிருப்பவர்க்குக் காடென்றும் நாடென்றும் துவிதபாவங்கொள்ளலாமோ வென்கிற பற்பல வார்த்தைகளாடி விடோபாவைநோக்கி, “ஓ புண்ணியவானே! உண்மை இப்படியிருக்க, நீர் நாட்டைவெறுத்துக் காட்டிலிருக்குங்காரணமேன்?” என்று கேட்டார். விடோபா வணங்கி, “இனி உங்களிஷ்டப்படி நடப்பதேஎனக்குஉறுதியான தபோபலம். ஆதலால்நாட்டிற்பிரவேசிக்கலாம் வாருங்கள்” என்று உரைத்தார். மூவரும் ஆதிசத்தியும் விடோபாவைநோக்கி “ஓ விரதசீலனே! எங்களுடைய ரகசி

யத்தைப் பிறருக்கு உணர்த்தாமலும் நாங்கள் இனிசெய்யும் திருக்கூத்துக்கு வெதிருக்தம் செய்யாமலும், மௌனநாட்டத்திலிருப்பதே உமக்கு உறுதியானபிர்மநிஷ்டை" என்று அறைந்து நால்வரும் சிறு குழந்தைகளாகி விடோபாவுக்கும் ருக்மாபாயிக்கும் முன்போல் புத்ரவாஞ்சையை யுண்டாக்கி, அவர்களை அழைத்துக்கொண்டு காட்டைக்கடந்து நாட்டை யடைந்து, சீதோபந்தின் வீட்டிற் பிரவேசித்துப் பால்யரைப்போலவே விளையாடத் தொடங்கினர்கள். விடோபாவைக்கண்ட சீதோபந்து சந்தோஷசாகரத்தில் படிந்தவராய்க் களிப்படைந்து பலவுபசாரஞ் செய்யத்தொடங்கினர். விடோபா மாமன் மாமியார்க்கும் வந்தனஞ்செய்து களிக்கடலில் அமிழ்ந்திருந்தார். ருக்மாபாயி தனக்குற்ற பாக்கியத்தை உன்னியுன்னிப் புளகாங்கமடைந்திருந்தாள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

க்ஞானேசுவரர் தன் தந்தையை நாட்டிலழைத்துவந்த

அத்தியாயம் முற்றிற்று.

---

பத்தாவது

## ஞானேசுவரர் எருமைக்கடாவினல்

### வேதத்தை விரித்துரைத்த அத்தியாயம்

வாருங்கள் சித்தர்களே! விடோபா நாட்டைச்சேர்ந்த மறுநாள் காலையில், க்ஞானேசுவரர் தந்தையை அழைத்துக்கொண்டு அரையன்பாற் சென்று வேந்தனை நோக்கி, "ஓ ஏந்தலே! சாந்தியால் உபசாந்தியடைந்த எங்கள் தந்தை இதோ வந்தனர். காட்டை நீங்க விடைந்தனர்; நாட்டையடைய நொந்தனர். கிடைத்தற்கரிய சேவைதந்தனர்" என்று உரைத்தார். அதைக் கேட்ட நராதிபன் க்ஞானேசுவரருக்கும் அவர் தாதைக்கும் வந்தனஞ்செய்து விடோபாவை நோக்கி, "ஓ புண்ணியமெல்லாந்திரண்டு ஓர் உருவாய்வந்த புனிதரே! தவத்தில்கணிதரே! இகபர சவுக்கியத்தையளிக்கும் நாட்டைவிட்டு ஜனசூன்யமான காட்டை,

யடைந்த காரணமேதோ? திருவாய்மலர்ந்தருளுமையா'' என்று பணிவாகக்கேட்டார். விடோபா அரசனுக்கு ஆசிகூறி "ஓ வீர முந் திரமும் விளங்கிச் சலட்சண சுலட்சணங்களிற் பூர்த்தியாய்த் துலங்கிக் கொடுங்கோலைவாட்டிச் செங்கோலை யீட்டிக் கர்மத்தை நீத்துத் தர்மத்தைப் பாதுகாத்துவரும் தலைவனே! நாட்டுக்கு நரரே முக்கியம், நாருக்கு நரபதியே முக்கியம்; பதிக்குப் பண்பே முக்கியம்; பண்புக்கு பச்சாத்தாபமே முக்கியம்; தாபத்துக்குச் சாந்தமே முக்கியம்; சாந்தத்துக்குத் தர்மமே முக்கியம்; தர்மத் துக்குச் சத்புருஷரே முக்கியம்; சத்புருஷருக்கு ஜகதீசுவரனே முக்கியம்; ஜகதீசுவரனுக்கு தாசரே முக்கியம்; தாசருக்குச் சம் பாவமே முக்கியம்; சம்பாவத்துக்குத் தற்பரசோதனையே முக்கி யம்; தற்பரசோதனைக்குச் சர்வசாட்சித்வமே முக்கியம்; சர்வசாட் சித்வத்திற்கு சாட்சாத்காரமே முக்கியம்; சாட்சாத்காரத்திற்குச் சாஸ்திரவிசாரணையே முக்கியம்; சாஸ்திர விசாரணைக்குச் சாத் சித்வமே முக்கியம்; சாட்சித்துவத்துக்குத் ததாகாரமேமுக்கியம்; ததாகாரத்துக்கு ஜகத்விலட்சணமே முக்கியம்; ஜகத்விலட்சணத் துக்குச் சர்வசங்க பரித்யாகமே முக்கியம்; சர்வசங்க பரித்தியாகத் துக்குச் சதாநிஷ்டையே முக்கியம்; சதாநிஷ்டைக்குத் தபசே முக்கியம்; தபசுக்குச் * சங்கிரமமேமுக்கியம். ஆதலால் காட்டை யடைந்தேன். அல்லாமல் தியானத்துக்குத் தபசே முக்கியம்; தானத்துக்குச் சமுசாரமே முக்கியம். ஆதலால் தியானத்துக்கு உறுதியான தவஞ்செய்துக் கொண்டிருந்தேன்'' என்று அறைந்தார்.

அவ்வாக்கியங்களைக்கேட்ட அரையன் திடுக்கென்றெழுந்து அவர் சேவடியில் விழுந்து, "ஓ மாதவனே! அஞ்ஞானவிருளை நீக்கும் ஆதவனே! நரர்செய்யுங் குற்றம் நரபாலனுக்கென்கிற ஸ்மிருதியின்படி அடாத அகமமதை கெடாத அகிலாசாரத்தை விடாத அந்தர்முகத்துக்குட்படாத அந்தணர் எனக்கு அறிக்கை செய்யாமல் உம்மை அவமானஞ்செய்து அடவியிற் போகும்படி யாய்ச்செய்த அபசாரத்தை உபசாரமாகக்கொண்டு ஆசீர்வசனங் கள்விண்டு, இப்போதேஎன்னை யடிமையாக்கிக்கொள்ளுமையா'' என்று மிகவும்வேண்டினர். அப்போது விடோபா இராஜனுக்கு அன்பானமொழிகள் பகர்ந்து, "நீர் பரிசுத்த மனதுடையவராத லால் சகலசாம்பிராச்சியத்துடன் சுபமுற்றிருப்பீர்'' என்று ஆசீர் வாதஞ்செய்தார். அதற்கு இராஜன் சந்தோஷித்துத் தன் மந்

* சங்கிரமம் - காடு.

திரியிடம் நிருபமெழுதிக் கொடுத்து, நீ இவ்வுத்தமர்களுடன் பைடணபுரிக்குப்போய் அங்கிருக்கும் ஆசாரியரைக்கண்டு இவர்கள் ஆட்சேபமற்றவர்களென்கிற நிருபம் வாங்கிக்கொண்டு வாருமென்று அனுப்பினர். க்ஞானேசுவரர் நிவர்த்திசாது முதலானவர்களுடன் பைடணபுரிக்குப் பிரயாணைப்பட்டுப்போய் கோதாவரியில் ஸ்நானஞ் செய்யப்போன ஆசாரியரைக் கண்டு வந்தனஞ்செய்து அரசன் வரைந்து அனுப்பிய கடிதத்தைக் கொடுப்பித்தார்.

அம்மூடங்களைப் பார்த்த ஆரியன் அதற்குமுன்பே அலங்காவதியில் இருந்து அந்தணர் வரைந்து அனுப்பிய கடிதங்களைப் பார்த்து இருப்பவனுதலால் அங்கு ஸ்நானஞ் செய்யவந்த பல மறையோரையும் விளித்து, "கேட்டீர்களோ அந்தணரே! சன்யாசியாய்ப் பலர் வீட்டிலும் உண்டு, பிரஷ்டனுய்ப் போனவனையும், அவனுக்குப் பிறந்து மறையோரை அடித்த துஷ்டச்சிறுவரையும், நாம் அனைவோரும் மரியாதைசெய்து பந்தியில் வைத்துக்கொண்டு அன்னமுண்டு, இவர்கள் மறுமாசில்லா அந்தணரென்று வரைந்து கொடுக்கவேண்டுமாம். இந்த விந்தையை யாராவது பார்த்ததுண்டா? கேட்டதுண்டா? உலகில் இப்படியும் நடக்குமா?" என்கிற பற்பல வார்த்தைகளாடினர். விப்பிரர் மதகரியின் தோலையும், கறுத்தநாயின் தோலையும் வெள்ளையாக்குவது போலல்லவோ இச்சங்கதி யிருக்கின்றது. சன்னியாசியானவன் சூத்திரன்பந்தியிலும் உட்காருதற்குக் கூடாது. அப்படியிருக்க, இப்படி நம்மாற் செய்யக்கூடுமோ? விபசாரியைப் பதிவிரதையாக்குவது போலல்லவோ இருக்கின்றது. சூத்திரனேடு உண்ண அபாத்திரனுனவன் அந்தணரோடு உண்ணப் பாத்திரனெப்படியாவான்? என்கிற பலவார்த்தைகளாடிச் சீட்டைக்கிழித்தெறிந்து மந்திரியை நோக்கி இப்பிறப்பில் இவர்கள் விப்பிரரோடு உண்ணுவது அருமை. மறுபிறப்புக்கு உதவுமென்று அவ்வாசனுக்கு உரைப்பாயென்று அறைந்தார்கள். அவ்வசனத்தைக்கேட்ட மந்திரி உலகியல்பை ஒருவரால் நிக்கிரகிப்பது அருமையென்று உன்னி அலங்காவதிக்குப் பிரயாணப்பட்டுப் போய்விட்டான். பின்பு க்ஞானேசுவரர் வேதபாராயணருக்குத் தன் தந்தையின் வரலாற்றைப் புகன்று பரமார்த்தத்தைக் குறித்துச் சன்னியாசம் பெற்றுக்கொள்பவன் பிரஷ்டனெப்படியாவான்? இப்படி மிகவுங் கற்றேர் சொல்லமாட்டார்கள் என்று உரைத்தார். அதுகேட்ட பூசுரர் "அடா துஷ்டப்பயலே! மிக

வுங் கற்ருேரை நீதானு பார்த்தாய்? கண்டவர் வீட்டிலுண்டு பிர ஷ்டனுன துஷ்டனுக்குப் பிறந்தவர் சிரேஷ்டம் ஒருகாலத்தும் அடைவதில்லே. ஞாயமாய் உங்களைத் தொட்டுக்கொண்டாலும் பிரஷ்டமடைய நேரிடும்" என்று அறைந்தார். அதற்கு ஞானே சுவரர் "அஞ்ஞானத்தினுல் செருக்குற்றுத் தபநிலேயற்றுச் சூத் திரர்பால் யாசிக்கும் உங்களைப் பார்த்தமாத்திரத்தில் தோஷம் வந்துநேரிடும். இதற்குச்சந்தேகமுண்டோ?"என்ருர். விடோபா "அப்பா க்ஞானேசுவரா! நமக்கு வீரது என்? வேண்டாமென் கிறவர்களைத் தீண்டலாகாதுஎன்கிறபடி இச்சையில்லாதவருடன் லச்சை செய்வது அழகு அல்ல. இக்கணம் அலங்காவதிக்குப் போகலாம் வாரும் அப்பா" என்ருர். முப்புரிநூலோர் க்ஞா னேஸ்வரா வென்று அழைத்ததைக் கேட்டுக் கெக்கலிக்கொட்டி நகைத்து "ஓ விடோபா! இச்சிறுவனே என்னபேர் சொல்லி யழைத்தாய்? என்ருர். விடோபா க்ஞானேசுவராவென்று அறை ந்தேன் என்ருர். பூசுரர் மற்ற மூன்று குழந்தைகளின் பெய ரென்ன? என்ருர். மூத்தவன்பேர் நிவிர்த்திசாது; இளையவன்பேர் சோபான்தேவ்; இப்பெண்ணின்பேர் முக்தாபாயி என்ருர். ஆதி வருணர் மந்தகாசம் புரிந்து, ஆச்சரியம் துடைப்பக்கட்டைக் குப் பட்டுக்குச்சங் கட்டினதுபோலவும், பறைகொட்டிப் பிழைப் பவனுக்குத் துரையெனப் பேரிட்டது போலவும், உண்ட வீட் டுக்கு இரண்டகஞ் செய்தவனுக்குத் தொண்டனென்று உரைப் பதுபோலவும், நிதிமேல் ஆசையாய்ப் பதிதோறுந் திரிபவனுக் குப் பதியென்பது போலவும், பதியையிழந்த மதியில்லா மங்கை யைச் சதியென்பது போலவும், குருசுவாமியை நிந்திப்பவனேக் குருபக்தனென்பது போலவும், குண்டுனிவேலே செய்தவனேப் பண்டிதனென்பது போலவும், பிரஷ்டனுகிய உனக்குப் பிறந்த இத்துஷ்டப்பிள்ளைகளுக்கு நிவிர்த்திசாது, க்ஞானேசுவரன், சோபான்தேவ், முக்தாபாயென்கிற பேரிட்டிருக்கின்றது.

எந்த விந்தையிலும் இந்த விந்தையே கேட்பதற்கு ஆச் ரியமாயிருக்கின்றதென்று அறைந்து பற்பல பரியாசவார்த் தைகளாடி ஸ்நானஞ்செய்ய நாடிப்போனுர். அப்படி போகும் போது க்ஞானேசுவரர் "ஓபிராமஃணுேத்தமர்களே! மலேயைப்பார் த்துக் குலேக்கும் நாய்க்கு ஆயாசமேயன்றிப்பர்வதத்துக்குஆயாச முண்டா? நல்லோர்களைத் தூஷிக்கும் புல்லோர்களுக்குக் குற்ற முண்டா? தெய்வத்தை நிந்திக்கும் தீயர்க்குக்கேடன்றித்தெய்வத்

துக்குக் கேடுண்டா? அதுபோலவே முப்பத்திரண்டு பற்களைக் காட்டிக் கெக்கலிகொட்டி நகைக்கும்உங்களுக்கு அவமானம்வருமேயன்றி எங்களுக்கு ஒருபொழுதும் வராது" என்று அறைந்தார். வேதியர் "அடா துஷ்டப்பயலே! நீங்கள் மலையும், நாங்கள் நாய்களென்றல்லவோ ஒப்பிட்டுஉரைத்தாய். ஓ அறிவுகெட்டவனே! உன் துஷ்டத்தனம் அடங்க வெட்டிவிடுகிறோம்; பற்களைத் தட்டிவிடுகிறோம் பார்" என்று ஆர்ப்பரித்தார்கள். அப்போது நிவர்த்திசாது விப்பிரரை வணங்கி, "ஓ பூசுரரே! எங்களுடையஸ்திதி தடங்கலின்றித் தங்களுக்கு உரைத்தோம். உங்களுக்கு உகந்தபடி எங்களுக்கு ஏதாவது எழுதிக் கொடுத்தாலும் சரி; இல்லையென்று உரைத்தாலும் சரி; அப்படிசெய்யாமல் இப்படி திட்டத்தகுமா? திட்டுவதன்றிநிந்தைசெய்யலாமா? இப்படி செய்வதால் தொந்தரவல்லவா?" என்றார். ஆதிவருணர் இனி சந்தடிசெய்யாமல் வந்தவழிபோனால் தொந்தரவு ஏன் வரும்? என்றார். நிவர்த்திசாது உங்களைநாடிவந்த எங்களுக்கு ஒருமையோடு ஒரு நிரூபமெழுதிக்கொடுக்கலாகாதோ என்றார். வேள்வியாளர் பறையன்மறையோனாகாததுபோலவே, நீங்களும் பிராமணராகமாட்டீர்கள். ஆதலால் இக்காரியத்தைக்குறித்து இனி பேசாமல் இருப்பதே உங்களுக்குரிய யோக்கியமென்று அறைந்தார். நிவிர்த்திசாது "ஓ பூசுரரே! வேதத்தை விரித்துரைத்த வியாசரும், அவர் தந்தையின் பாட்டனாகிய வசிஷ்டரும், பாரதுவாசன் ஆசிரியராகிய வால்மீகரும், குகமகாரிஷியும், விசுவாமித்திரரும், குலத்திற்றாழ்ந்தவராயிருந்தும் தபத்தாலல்லவோமேன்மையடைந்து அந்தணர்க்கு ஆதிகுருக்களானார்கள். அப்படியிருக்கத் தபத்தைச்சார்ந்த எங்களுடையதாதை எப்படி பிரஷ்டரானார்? சொல்லுங்கள்" என்றார். அயன்முகத் துதித்தோர் விவேகமில்லா வுனக்கு வெகுநேரமா யுரைத்தும் கேட்காமல் கிழக்கதைகள் சொல்லத்தொடங்கினாய். சாபானுக்கிரக சாமர்த்தியம் உள்ள அவர்களுக்கிணை உன் தந்தை ஒருகாலத்தும் ஆகமாட்டான். மகாரிஷிகளைத்துதித்ததுபோல் பழித்தாய். மோசலமாமுனி ஓர் நீச்சஸ்திரீயைச் சேர்ந்து அவளுக்குப் பிறந்த ஏழு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு சொர்க்கத்துக்குப்போய் இவர்களுக்கு உபநயனஞ்செய்து ஆட்கொள்ளுங்களென்று ரிஷிகளைவேண்ட, அவர்கள் கூடாதென மறுத்துவிட்டார்களென்று பெரியோர்களுரைப்பதுமெய்யல்லவா? அப்படியே பிரஷ்டனுக்குப் பிறந்த நீங்களும் மரணபரியந்தம் பிரஷ்டராகவே யிருப்பீர்

கள். பன்னிப்பன்னிப் பேசுவதால் ஓர்பயனுமில்லை யென்றார். நிவிர்த்திசாது நாங்கள் நீச்சருக்குப் பிறந்தவர்களோ? என்றார். அந்தணர் சன்னியாசியாய்க் கண்டோர்வீட்டில் உண்டவன் நீச்சனிலும் இழிவான மிலேச்சனேயாம் என்றார். நிவிர்த்திசாது நீங்கள் ஆகாத்தியத்தால் இப்படிப் பேசுகின்றீர்களேயன்றி அருமறையாராய்ந்து உணர்ந்தோர் இப்படிசொல்லவேமாட்டார்கள்" என்றார்.

அந்தணர் ஆதிமறையை ஓதினோர்கள் தடையின்றிச் சன்னியாசியைப் பிரஷ்டனென்றேயுரைப்பார்கள்என்றார். நிவிர்த்திசாதுவேதத்தில் பாமார்த்தநிமித்தம் பரமாம்சமானவன் பிரஷ்டனென்றுரைக்கின்றதா? என்றார். மறையோர் அப்படியேயுரைக்கின்றது என்றார். க்ஞானேசுவரர் ஜலத்தைச் சுமந்துகொண்டு போகும் எருமைக்கடாவைச்சுட்டிக்காட்டி இம்மேதிக்கடாவுக்கு இணையான நீங்கள் ஆதிநூலை ஓதியிருந்தாலல்லவோ நீதிகள் தெரியும். வேதமேஓதாத நீங்கள் இம்மேதிக்கடாவோடும் வாதுசெய்யமாட்டீர்கள். அப்படியிருக்க, இவருடன் வாதுசெய்யத் தகுந்தவர்களோ? உங்களைத் துதிப்பதிலும் இந்த எருமைக் கடாவோடு பேசுவதாற் பிரயோசனமுண்டு என்றார். மறையோர் முக்கால் மூடனை முழுமூடன் கொண்டாடுவதுபோல் எருமைக் கடாவிலும் இழிவான நீ இவ்வெருமைக் கடாவுடனே பேசத் தகுதியானவன்என்றார். ஞானேசுவரர் இந்த எருமைக்கடாவுக்கு இருக்கும் அறிவில் ஆயிரம்பங்கில் ஓர்பங்கு உங்களுக்கு இருந்தால் உங்களை அகத்தியங் கொண்டாடவேண்டியதே என்றார். இருபிறப்பாளர் "அடா துஷ்டா! அந்த எருமைக்கடாவுக்கு என்ன அறிவு உண்டு? இக்கணம் அதைப் புலப்படுத்தாமற் போனால் உன்னை இரண்டு துண்டங்களாக வெட்டுகின்றோம் பார்" என்று அவ்வம்பலைக் கொண்டுவந்து அவர்முன் நிறுத்திப் பல வார்த்தைகள் கூசாமல்பேச, க்ஞானேசுவரர் இந்தப் பகடுவின் பண்பை உங்களுக்கு அறிவிக்கின்றேன் பாருங்கள் என்றார். அப்போத்துவின் மஸ்தகத்தின்மேல் தன்அஸ்தத்தைவைத்து, "ஓ ஒருத்தலே! தபசால் பிராமணனா? ஜாதியால் பிராமணனா? பிரமக்ஞானத்தால் பிராமணனாக ஆகவேண்டுமா? கர்மகாரியங்களால் பிராமணனாகவேண்டுமா? உண்மையை உன் வாய்திறந்து உரைப்பாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினர். அம்மாத்திரத்தில் அந்த எறு, ருக்கு யஜுர் சாமம் அதர்வணமென்னும்

நான்மறையிலுள்ள அனேக வாக்கியங்கள் உரைத்து முடிவில் இச்சுலோகஞ்சொன்னது.

ஜன்மனுஜாயதே சூத்ர கர்மணு ஜாயதேத்வஜ
வேதமுக்கியந்து விப்ராணும் பிர்மக்ஞானந்து பிராமணு. 1

தாசிகர்ப்ப சம்பூதம் நாரதஸ்ய மஹாமுனி
தபஸப்பிராமணுேத் புத்வா தன்யாஜா தம் நகாரயேத். 2

பூர்வசிகர்ப்பசம்பூதம் வசிஷ்டஸ்ய மஹாமுனி
தபஸப்பிராமணுேத் புத்வா தஸ்யாஜாதம் நகாரயேத். 3

சுணகிகர்ப்பசம்பூதம் சவுனகஸ்யாமஹாமுனி
தபஸப்பிராமணுேத் புத்வா தஸ்யாஜாதம் நகாரயேத். 4

என்கிற பிராமணனுதற்கு முக்கியமான இவ்வாக்கியங்களைப் புகன்று, க்ஞானேசுவாருக்கு வந்தனஞ்செய்ய, அந்தணர் ஆச்சரியப்பட்டுத் தங்களுக்கிருந்த மாச்சரியங்கெட்டு, அப்பா! இவன் மகாமந்திரவாதி; இனி நாமிங்கிருந்தால் அபாயம் நேரிடும் என்று ஒருவர் போனவழி ஒருவர் போகாமல் பல பக்கங்களில் தெரிந்து ஓடிப் பதுங்கலுற்ருர்கள்.

அப்போது செந்தீ வளர்ப்போருக்குந் தேசிகரான ஆசிரியர் பயந்து நயந்து, க்ஞானேசுவரர் திருவடிகளிற் பணிந்து, நிவிர்த்திசாது முதலானவர்களையும் வணங்கி, விடோபாவுடன் இணங்கி, எருமைக்கடாவுரைத்த வாக்கியம் சத்தியம். இவ் வாக்கியம் வேதத்திலில்லையென்று உரைப்போர் இருணரகடைவார். அடியேன் உங்களுடைய மகிமையை அறியாமல் அபசாரப்பட்டேன். இந்த அபசாரத்தை உபசாரமாகக்கொண்டு என்னை யிக்கணமே ஆட்கொள்ள வாருங்கள் என்று தன் மனைக்கு அழைத்துக்கொண்டுபோய் உபசரணைசெய்து தனக்குற்ற சிலருடன் அவர்களைப் பந்தியில் வைத்துக்கொண்டு அன்னமுண்டு வேதாந்த வார்த்தைகளாடிக்கொண்டு இன்புற்றிருந்தார்கள். இது தெரிந்த அவ்வூரிலுள்ள வேதபாராயணர் அனைவரும் ஓரிடத்திற் சேர்ந்து நமது ஆசாரியன் பிரஷ்டர்களைச் சேர்த்துக்கொண்டு பந்தியில் வைத்துக்கொண்டு உண்டு ஆசாரங் கெட்டான்; அனுசாரத்துக்கு உட்பட்டான். ஆதலால் அவன் வீட்டில் நடக்கும் சுபா சுபகாரியங்களுக்கு நாம் யாரும் போகக்கூடாதென்று தீர்மானஞ் செய்துகொண்டு அன்றுடன் ஆசாரியரைப் பார்த்தாலும் பேசாமல் தூஷித்துக் கொண்டிருந்தார்கள். இப்படி யிருக்கிறநாளில் ஆசாரியர்

தன் தந்தையின் திவசம் வந்தநாள் பிதுர்தேவதைகளுக்கு நைவேத்தியஞ் செய்யவெண்ணிச் செய்யவேண்டிய கிரிகைகளெல்லாஞ் செய்து முடித்து அந்தணர்க்கு அன்னமுண்பிக்க வேண்டித் தனக்கு மிகவும் அன்பாயிருக்கும் சில மறையோரை அன்னமுண்ணுதற்கு வரும்படியாய்க் கேட்டுக்கொண்டார். அதற்கு அயன்முகத்துதித்தோர் "ஓ அனுசாரியனே! பிரஷ்டர்களான துஷ்டர்கள் யாதோ ஓர் வித்தையால் எருமைக்கடாவினுல் சில சுலோகங்களை ஓதிவைக்கவே, நீ ஆசாரத்தைவிட்டு அனுசாரத்துக்கு உட்பட்டதன்றி எங்களையுங் கெடுக்க நினைக்கிருய். இனி உன் வீட்டில் நடக்கும் சுபாசுப காரியங்களுக்கு நாங்கள் வரவே மாட்டோம் என்று மறுத்தார்கள். ஆசாரியர் வியாகுலத்தோடு வீட்டையடைந்து, இதற்கு என்ன செய்யலாம்? என்றிடைந்து முகஞ்சுருங்கி மனங்குழம்பி மனோராச்சியத்திலிருக்க, நிவிர்த்திசாது ஆசாரியாரை நோக்கி, "ஓ உத்தமரே! யாது காரணத்தால் முகவாட்டமும்மனக்கோட்டமும்பொருந்தியிருக்கின்றீர்? என்ன குறை நேரிட்டது?" என்ருர். ஆசாரியர் நடந்த விர்த்தாந்தத்தைப்புகன்று உலகக்கட்டுப்பாட்டை ஒருவராலுங்கடத்தற்கு அரிதாயிருக்கின்றதே என்ருர். நிவர்த்திசாது சற்குணமுள்ளவனே ஜாதிமான்; சத்குணமில்லாதவன் சண்டாளனென்று வேதஞ் சாற்றுவதால் சத்குணமில்லா துர்க்குணரை அழைத்தல் குற்றத்துக்கு இடமுண்டாகும் என்ருர். ஆசாரியர் உலகவியாபாரத்திலிருக்கிற பரியந்தம் உலகத்தோடு ஒத்து வாழவேண்டும். இன்றேல் சன்னியாசியாய்ப் போகவேண்டும். இவ்விரண்டுமில்லா நான் 'நாடோட நாமும் ஓடவேண்டும்' என்கிற பழமொழியை இன்று பரீட்சித்தேன் என்ருர். நிவர்த்திசாது பிர்மக்ஞானந்து பிராமணு என்றும், தபசே பிராமணதவமென்றும், எருமைக்கடாவினுல் சொல்லிவைத்தும் தெளியாத அந்தணர்க்கு இனி எவ்விதத்தில் அறிவுணர்த்தலாம்? பன்றியோடுகூடிய கன்றுங்கெட்டதுபோல் துஷ்டர்களாகிய எங்களோடுகூடி நீர் பிரஷ்டத்வமடைந்திரே. இதற்கு நான் என்ன செய்வேன்? என்று வாட்டமுகத்தைக் காட்டினர். ஆசாரியர் பரமார்த்தத்தை நாடிய நமக்கு அந்தணரோடு அக்கரையில்லை யானுலும், பிதுர்தேவதைகட்குப் படைத்த அன்னத்தைப் பிராமணரன்றி மற்றவர்கள் உண்ணத்தகாது. உண்டாலோ பிதுர்கர்மஞ் செய்தவனும், அவன் குடும்பமும் நரகத்தை யடைவார்களென்று கர்மாண்டத்தில் முறையிடுகின்றது. அதனுலேயேவாட்டமடையநேரிட்டதுஎன்ருர். அது

தெரிந்த க்ஞானேசுவரர் நீ பிதுர்தேவதைகட்குப்படைத்த அன்னம்அப்பிதுர்த்தேவதைகளேபுசிக்கவேண்டுமென்றிப் பிராமணர் உண்ணவே கூடாது என்றார். ஆசாரியர் பிதுர்தேவதைகளை யழைப்பித்து உண்பிக்கும்படியான வல்லமை யாருக்கு இருக்கின்றது? என்றார். க்ஞானேசுவரர் உமக்குற்ற மனக்கோட்டம் நீங்க, இக்கணமேஅந்தப்பிதுர்தேவதைகளை அழைப்பிக்கிறேன்பாரும் என்று அறைந்தார். அவ்வாறு அறைந்து “ஓ பிதுர்தேவதைகளே! இந்தப் பிராமணோத்தமர் களிப்புற இக்கணமே வந்து, உங்களரிய தரிசனந்தந்து, இவ்வன்னத்தையுண்டு ஆசாரியரை யாட்கொண்டு அந்தணர்க் கறிவுணர்த்திப் போங்கள்” என்று உரைத்தார். அம்மாத்திரத்தில் அவ்வூரிலுள்ள மாந்தர்யாவரும் பார்த்து ஆச்சரியப்படக்ககனமார்க்கத்திலிருந்து விமானங்களில் ஊர்ந்துகொண்டு அநேகபிதுர்த்தேவதைகள் ஆசாரியர்வீட்டி லிறங்கிப் பத்திரங்களில் வீற்றிருந்து அன்ன முண்ணும்போது அவ்வற்புதத்தைப்பார்த்த அந்தணர்முதலானவரும் ஆச்சரியப் பட்டுத் தங்களுக்கிருந்த மாச்சரியங்கெட்டு ஆசாரியர்வீட்டினுட் சென்று ஈததிசயமெனப் புகன்று, அன்னமுண்ணும் பிதுர்த் தேவதைகளை வணங்கி,ஆசாரியரைவணங்கி,க்ஞானேசுவரரைத் தாழ்ந்து நிவிர்த்திசாது முதலானவர்களின் திருவடிகளில் வீழ்ந்து, நீங்களே பிரத்தியட்ச தெய்வங்களென்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்தார்கள். ஆசாரியர் உடல் பொங்கி உல்லாசத்திறங்கித் துன்பங்குறைந்து இன்பம் நிறைந்து க்ஞானேஸ்வரர் திருவடிகளிற் பணிந்து தன் திருநயனங்களை யணிந்து நீரே ஜகதீசுவரன்; நீரே பரமேசுவரனென்று தோத்திரம் புரிந்தார். க்ஞானேசுவரர் அந்தணரைநோக்கி “ஓ விப்பிரரே! பிரஷ்டனையும் பிரஷ்டனுக்குப்பிறந்த துஷ்டரையும் வணங்கலாமா? வணங்கி யிணங்கலாமா? இப்படிச் செய்வதால் உங்கள் ஆசாரத்துக்குக் குறைவாகுமே? மேன்மை நீங்கிப்போகுமே” என்றார். மறையோர் “ஓ மாதவனே! யாங்கள் தொழும் யாதவனே! அறியாமையாற் செய்த எங்கள் அபசாரத்தை உபசாரமாகக்கொண்டு இக்கணமே அடியேங்களை ஆட்கொள்ளுமையா” என்று அவர் தாள்களில் வீழ்ந்து தோத்திரஞ்செய்தார். க்ஞானேசுவரர் ‘ஓ வேதியரே! அகப்பட்டால் முடி இல்லாவிட்டால் அடியென்கிற பழமொழிக்குகந்த உங்கள் முகத்தைப் பார்க்கவே கூடாது. பிதுர்தேவதைகள் அன்ன முண்ணும் இவ்விடத்தில் உங்களுக்குளென்னகாரியம் போங்கள்?

என்றார். ஆதிவருணர் 'சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பதுகடனே' என்கிற பழமொழிப்படி சிறியோங்கள்செய்த பிழையைப் பொறுத்து எங்களுக்குள்ள பாசங்களையறுத்து அடிமையாக்கிக்கொள்ளும் சுவாமி'' என்று துதித்தார். தயாநிதியான க்ஞானேசுவரர் ஓர் சார்பில் வீற்றிருங்களென்று அறைந்து, பிதுர்த்தேவதைகள் புசித்தபின் அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பி வேறுபத்திரங்கள் போடச் செய்து, அந்தணர்களை விளித்து உட்காரவைத்துத் தாங்களும் வீற்றிருந்து அன்னமுண்டு ஆசாரியரைச் சந்தோஷமுறச் செய்தார்.

இப்பால் அவ்வூரிலுள்ள அந்தணரும் அரசனும் மற்ற மூன்று வர்ணத்தோரும் க்ஞானேசுவரர் முதலானோரைத் தெய்வங்களாகப் பாவித்து அன்போடு சிலநாள் வைத்திருந்து, க்ஞானேசுவரர் உத்தரவின்படி அலங்காவதிக்குப் பிரயாணப்பட்டுப் பலநாடுகளைக்கடந்து அலங்காவதியையடைந்து, அலங்காவதியைப் புறக்கும் அரசனையும் சீதோபந்தையும் புகழ்ந்து அவ்வூரிலுள்ள விப்பிரரோடுகூடி சக்லரும் வுண்டு ஆனந்தங்கொண்டு க்ஞானேசுவரர் முதலானவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு பைடணபுரியைச்சேர்ந்து களிகூர்ந்திருந்தார்கள். அலங்காவதியின் அரசன் க்ஞானேசுவரர் முதலானோர் பாலியராயிருந்தாலும் பரமதேவதைகளெனத் துணிந்து, அந்திசந்தி அவர்கள் தரிசன பரிசனத்தால் காலங்கழிக்கலானான். சீதோபந்து விடோபா ருக்மாபாயி முதலானோரும், க்ஞானேசுவரர் முதலானோர் தம் திருவிளையாடல்களைக் கண்டு ஆனந்தவாரியிற் படிந்திருந்தார்கள். க்ஞானேசுவரர் முதலானோர் அநேகருக்குப் பிர்மக்ஞானமும் சகுணத்தியானமும் போதித்துக்கொண்டு ஆனந்தமாயிருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்.

ஞானேசுவரர் எருமைக்கடாவினால் வேதத்தை விரித்துரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஞானேசுவரர் சரித்திரம் முற்றிற்று.

---

☞ இச்சரித்திரத்தின் பிற்பாதியை எம்மால் வெளியிட்டுள்ள ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச அய்யங்காரால் எழுதியுள்ள ஸ்ரீமகா பக்தவிஜயம் இரண்டாம் பாகத்தில் பரக்கக் காணலாம்.

ஸ்ரீ

புண்டரீகாய நம:

# ஆறுவது

# குசேலமாமுனிவர் சரித்திரம்

## ஸ்ரீ கண்ணபிரான் துதி

பஃறொடை வெண்பா

பூமேவுநான்முகத்தோன் போற்றித்துதிப்பதுவும்
தேமேவுபைந்துளவஞ் சேரக்கமழ்வதுவும்
மாமேவுமாமறைகள் வாழ்த்தப்பொலிவதுவும்
தேமேவும்வஞ்சச் சகடமுதைத்ததுவும்
தீமேவுமாகணியஞ் சென்றுரிந்ததுவும்
தூமேவுமன்பருளந் தோன்றப்பயில்வதுவும்
மாமோகமென்றும் விளைத்தடியரைக்காத்தத்
தாமேகவண்ணனிரு பதாம்புயத்தின்றன்புகழே.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

முற்றுவினமென் றளிர்க்காத்தான் முனிவிலாதுமெல்லெனச்செம்
பொற்றுமரையிற்குடியிருக்கும் பூவைவருடுந்தொறுஞ்சேக்கும்
விற்றுரணிநற்பதமிரண்டும் வியன்மால்நடந்தீண்டிடநடந்து
கற்றுமேய்த்தசிற்றுயன் காமர்கீர்த்திவாழியவே.

## ஸ்ரீ சுகப்பிர்ம்மரிஷி வாக்கியம்



வாரீர் "அகத்தாகியும், புறத்தாகியும், அனைத்தினும் வியாபகமாகியும், அணுவுக்கணுவாகியும், மகத்துக்கு மகத்தாகியும், பரமாகியும், அபரமாகியும், வளர்தலும் தேய்தலும் இல்லாததாகியும், ஜகமாகியும், ஜகத்துக்கு ஆதாரமாகியும், சகல குணங்களாகியும், நிர்க்குணமாகியும், பாகுபோற்செய்துவேதங்கள்சொல்லும் பொருள்களின் விரிவுக்கும் எட்டப்படாததாகியும், உருவாகியும், அருவாகியும், உயிர்க்குயிராகியும், உணர்வுக் குணர்வாகியும், ஒளிக்கு ஒளியாகியும், துரியமாகியும், துரியாதீதமாகியும், தோன்றும் பொருளாகியும், நிர்மலனாகியும், மனத்தாலும் வாக்காலும் நினைக்கவும் உரைக்கவும் அரிதானவனுமாகியும், அனுபவனாகியும், அகண்ட பரிபூரணனாகியும், காலசக்கரத்தையும்

குணங்களையும் கடந்த நிருவிகற்பனுகியும், சருவக்கியனுகியும், அலகிலாவிளையாடல்களில் இச்சை யுடையவனுகியும், அடி நடு முடியற்றவனுகியும், முத்தியளிக்கும் முதல்வனுகியும், பரத்துவப் பொருளாகியும், பிராகிருதப் பற்றற்றவனுகியும், பிரபுவாகியும், புவனங்களுக்கெல்லாம் காரணனுகியும், அகாரணனுகியும், அப்பாலைக் கப்பாலாய் நின்ற அகளங்கனுகியும், சுயேச்சையாலன்றி பிறப்பு யிறப்பற்றவனுகியும், ஞானனந்தமயனுகியும், மருவியிரா நின்ற ஸ்ரீபரவாசுதேவனது உயிர்த்தோழனும், பார்த்தன் பவித்திரனும், உத்தரகுமாரன் மருமானும், பரமபாகவத சிரோமணியாகிய பரிட்சித்து மகாராஜனே! ஸ்ரீகுசேலமுனிவர் ஸ்ரீ பகவானேடு நட்பினராயிருந்து அவரால் இம்மையில் இன்பமும் மறுமையில் பேரின்பமுமுற்ற திவ்ய சரித்திரத்தை உரைக்கின்றேன். அதனை உள்ளத்தில் பதியும்படி செவிகுளிரக் கேட்டுப் பேரானந்தம் பெறுவீராக'' என்று சுகமுனிவர் பின்னும் சொல்வாராயினர்.

நெடிய கடல் புடைசூழ்ந்த பூமண்டலத்தில் பரதகண்டத்தில் பூமாதேவியின் முகக்கமலம்போலவும், அம்முகத்தில் எழுதிய திலகம்போலவும், கண்கள்போலவும், திருமகள் மார்பில் தரிக்கும் மாங்கல்ய சூஸ்திரம் போலவும், அப்பராசத்தியின் ஸ்தனபாரங்களில் புனைந்த முத்துமாலைபோலும் அத்திரு வீற்றிருக்கும் ஆசனமாகிய செந்தாமரை மலர்போலவும், மாயவன் மணிமார்பில் தரித்திருக்கும் கௌஸ்துவாபரணம் போலவும், அவ்வணிகள் வைக்கும் பெட்டிபோலவும், ஊழிகாலத்தில் சகல சராசரங்களும் ஒடுங்கியுள்ள அப்பரந்தாமன் திருவுதரம்போலவும், அப்பரமமூர்த்தி நித்தமுத்தர்களோடு வாழும் அப்பிராகிருத வுலகமாகிய பரமபதம்போலவும், உத்தரமதுரையென்று ஒரு திருநகரம் விளங்குகின்றது. அதன் பாங்கோ மங்கைப் பருவமுடைய மாதர்கள் தங்கள் நாயகர்களோடு பிணங்கிக் கழற்றி வீசிய இரத்தினுபரணங்கள் வீதிகள்தோறும் ஒளிவீசுகின்றதனுல், இது சுவர்க்க லோகந்தானே என்று அமரர்களும் ஐயங்கொள்ளும் அற்புதமான அவந்தியென்னும் தேசம் ஒன்று உள்ளது. அதன் வளப்பம் செந்தமிழ்ப் புலவராலும் ஆதிசேடனுலும் புகழ்ந்து உரைக்கமுடியாது. அப்படிப்பட்ட சிறப்புடைய செழிப்பைக் கூறுதற்கு என்னுல் முடியாதாயினும், எனது உள்ளத்தில் உதிக்கும் சந்தோஷம் தூண்டுதலினுல் சிறிது உணர்த்துகின்றேன்.

அத்தேசத்தில் மருதநிலத்தின் வயல்களானவை சூல்முதிர்ந்தபச்சைப்பாம்புபோல்கருப்பமடைந்து மேன்மைக்குணமற்ற செல்வப்பொருளுள்ள கீழோர்கள் இறுமாந்து தலைநிமிர்வதுபோல் நிமிர்ந்து, கல்விஞானமற்ற மேலோர்கள் அடக்கமுடையோர்களாய்த் தலைகுனிந்து வணங்குவதுபோலக் கதிர்க்குலைகளைவிட்டுத் தாழ்ந்து காய்க்கும். அவைகள் காய்க்கும்படியாகத் தாமரைமலர்களிலிருந்து ஒழுகுந் தேனும், கொடிப்பூ வொட்டுப்பூ மற்றை நீர்ப்பூ முதலியவற்றினின்றும் சிந்துகின்ற தேனும், பெருக்கெடுத்து வயல்நதிகளிலும் கடலிலும் போய் விழும். வாளைமீன்கள் புரள்வதனுல் கயற்கெண்டைகள் துள்ளி விழ, அதனுல் வரால்கள் எருமைகளின்மூளை முதுகிழியப் பாய்ந்து மேலெழும்பிக்கமுகம்பாளை மொட்டுகளைக்கிழிய விரிக்கின்ற தடாகங்களுஞ் சூழ்ந்துள்ளது. சூரியனுடைய உருளைத் தேரிற் கட்டிய பச்சைப்புரவிகள் ஏழும் இளைப்பாறுதற்குத் தக்க பூஞ்சோலைகளும் அந்நாட்டு மங்கையர்கள் செல்வம்மிகுதியும் உடையவராயிருத்தலுமன்றிக் கல்வியிலும் சார்புடையரா யிருத்தலினுல் அதிதியர்கட்கும் இரவலர்க்கும் அகமகிழ்ந்து, கதலிக்கனி மாங்கனி பலாக்கனி வர்க்கங்களோடும் அறுசுவைபதார்த்த வுணவுகளை உண்பிக்கின்ற உற்சாகச்செய்கையும், குயில்போலும் மொழியும், அயில்போலும் விழியும் மயில்போலுஞ் சாயலும், பஞ்சின்மெல்லடியும், பவளவிதழும், முகமதியும், முத்துநகையும், பங்கயக் கொங்கையும், சங்கைநிகர்த்தகழுத்தும், ஆலிலை வயிறும், நூல்போல்மருங்குவலும் அரவமல்குலுமுடைய மாதர்களின் அளகபாரத்தைக்கண்ட கோகிலங்களெல்லாம் மேகங்களென்று வாய்திறந்து மௌனிகளைப்போல் பேசாதிருந்தன. மயில்கள் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்றதினுல் வானத்திற் பாவுகின்ற புகையைக் கண்ணுற்றுக் கொண்டலென்று கூத்தாடும். நம்முடைய நாடுநகரங்களின் வளப்பத்தை நிகர்த்து விண்ணுலகத்திலும் ஒருநாடு உள்ளதோவென்று எட்டிப்பார்ப்பது போன்ற இஞ்சி சூழ்மதிலும், மாதர்கள் தாளகதி தவறாது இசைக்கொத்து நிர்த்தனஞ்செய்கின்ற நாடகசாலைகளும், அவ்வகைமாதர்களின் கண்வலையிலகப்படாத முனிவர்கள் படங்களும், கல்விச்சாலைகளும், தருமச்சாலைகளும், பொற்குவியல்களு முள்ள அறைகளும், மணிக்குப்பைகளுடைய மண்டபங்களும், அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர் வாழும் வீதிகளும், விண்ணுலகத்திலுள்ள பண்ணவர்களாகிய இமையவர்களும்,

இமையாது பார்க்கின்ற கடைவீதிகளும், அங்கு மாலைவிலை பகர்கின்ற மாலைமதி நுதலியர்களாகிய மடமங்கையர்கள் மணமில்லா மலர்களையும் வெறுஞ் சாந்தையும் விற்க, அவற்றைக் கொள்பவர்களாகிய வாலிபர்கள் அப்பாவைமார்களின் கண்ணிமூல் பாய்வதினால் கஸ்தூரி கலந்ததென்றும், சுவாசம் படுவதினாலே நற்கந்தம் பொருந்தியுள்ளதென்றும், அருமையாக வாங்குவதும், அன்னியர்களது பொருளைத் தங்கள் அரும்பொருளாகப் பாவித்து ஒன்றைப் 'பத்து நூறு ஆயிரம் ஆகப் பெருக்கி வாணிபஞ்செய்யும் வளப்பமும், ஐசுவரியத்தால் அளகவேந்தனையும், கல்வியால் அனந்தனையும், அழகால் அனங்கனையும்வென்ற கீர்த்தியையுடைய மைந்தர்களும், கற்பில் அருந்ததியைப் பின்னிடச்செய்து கணவரது சொல்முறை கடவாத மாதர்களும் தங்கி இன்பமுறுவதும், இதழ்கள்விரிந்த மலர்களலர்ந்த நந்தவனங்களும், வாவிகூபங்களும், நான்குவேதங்கள் போன்ற நான்கு கோபுரங்களும், முகில்படியும் மதில்களும், சொற்ப சிகரங்கள் பல அமைத்துள்ள ஏழுநிலை மாடமாளிகைகளும், கூடங்களும், அவற்றிடையேயுள்ள திருவாலயங்களும் பலவுள்ளது. அந்நகருக்குச் சமீபத்தில் மந்தாரம், கச்சோலம், வாகை, வெட்பாலை, சந்தனம், வகுளம், சண்பகம், நாகம், வேங்கை, பலா, முருக்கு, ஏழிலைப்பாலை, மாதுளை, ஞாழல், தேக்கு முதலிய பலவிருட்சங்களுமுடைய வனமொன்று உண்டு. அதன் நடுவில் குரவருமருளும் பெருங்குன்றம் ஒன்று உலகத்தை ஓர் அடியாய் அளந்தருளிய திருவிக்கிரமனைப்போல் நீண்டு உயர்ந்து அம்மலைச்சாரலில் கனி கிழங்கு சருகுகளாகிய உணவுகளை உண்டும், தோலாடைஉடுத்தும், வேடர்களும் முனிவர்கள்போல் விளங்குவார்கள். மிருகஜாதிகளில் மேன்மையடைந்த சிங்கம் யானை புலி கலை ஒட்டகம் ஆளி இவைகளின் ஓசை நீங்காது. யானைகளின் தந்தங்களினின்றும் சிந்துகின்ற முத்துக்களும் பரவி ஒளி வீசுகின்றமையால் அவ்விடத்தில்இருளென்பது அரிதாயிற்று. அந்தப் பெரிய மலையின் கொடிமுடியின் நடுவில் முனிவர்கள் வாசஞ்சேரி ஒன்று உள்ளது. அந்தச்சேரியில் வேத கோஷமும், யாகங்களில் கூறும் மந்திரவோசையும்அமரர்களையழைத்து அவிர்ப்பாகங்களை அளிக்கின்ற ஆரவாரமும், ஆசீர்வசனவோசையும்கூடிக் கடலொலிபோல முழங்கிக்கொண்டிருக்கும். தருப்பை கொய்பவரும், சமித்தைதேடுபவரும், மாவிலை பறிப்பவரும், பஞ்சகௌவியஞ் சேர்ப்பவரும், பவித்திரமுடி தரிப்ப

பசுக்களும் இன்னும் அவர்கள் விரும்பியவற்றைத் தருபவர்களும்; அவர்கள் அருந்த அறுசுவை உணவை அளிப்பவர்களும்; புலி, காடி முதலிய மிருகங்களினாலும் கொடுங்கோல் அரசர்களினாலும், அக்கினியாலும், தண்ணீராலும், கள்வர்களினாலும் இடர்வருமானால் அப்படிப்பட்ட துக்கத்துக்கு ஐயோ என்று இரங்கி, விரைந்து பொருள் முதலியவை கொடுத்து அன்பு உண்டாகிப் பேருதவிசெய்து, மேலுமேலும் காப்பாற்றுவோம் என்பவர்களும், இப்பிறப்பில் பல பெருஞ்செல்வம் இடையறாது விருத்தியாகப்பெற்ற பிள்ளைகள் தங்களைச் சூழ்ந்திருக்கவும், மகா பாக்கியபோகங்களை அநுபவித்து மறுமையில் சுவர்க்காதி போகங்களையும் அநுபவிப்பார்கள். இவ்வித பிராமணராகிய இவரை இலேசாக நினைத்து இவ்வண்ணம் பேசிவிட்டீர்கள். இந்த வேதவித்தாகிய மறையவனை முழுஞானியென்று நினையுங்கள். எத்தன்மையால் என்று கேட்பீராகில் மெஞ்ஞானியர்களுடைய இலக்கணங்களும் குடிகளும் கூறக் கேளீர். நற்குணங்களும் புலன்களிற் செல்லாமல் மண், பெண், பொன் இவற்றின்மேலுள்ள ஆசைகளை வெறுத்த இவர்க்கு மணிகளாலும், பொருளாலும், வேந்தர்களாலும், உம்மாலும் எம்மாலும் உண்டாகும் பயன் யாதுள்ளது சொல்வீர்கள்? மேகங்கள் மின்னி இடித்தாலும் பிரசண்டமாருதம் வீசினாலும், ஏழுகடலும் நிலைபெயர்ந்துவந்தாலும் தங்கள் நிலைபெயரார்கள். மனம் நடுங்கார்கள். அவற்றைக்கண்டு நகைப்பார்கள். தம்மைப் புகழ்ந்து நல்ல மணமுள்ள கலவைச்சாந்தை மார்பிலணிந்தாலும், இகழ்ந்துபேசினாலும், விருப்பு வெறுப்பு என்பது அவர்களுக்கு ஒன்றுமில்லை. பூமியில் உள்ள கிழங்கு முதலியவற்றைப் பசிவந்தபோது அமுதம்போலப்புசிப்பார்கள்; நாளைக்குவேண்டுமென்று சிறிதாயினும் வைத்துக்கொள்ளார்கள். ஆகாயத்தில் செல்லுதலும், பாதலத்தில் புகுதலும், பரகாயப்பிரவேசஞ்செய்தலும், உள்ளவிடத்தே எண்ணியவைகளை வரச்செய்தலும் முதலியவைகளாகிய சித்திகளையும்வேண்டார்கள். பெருமை சிறுமையில்லாதவர்கள் உன்மத்தர்போல் திரிவார்கள். நகைத்திடுவார்கள். கைகொட்டி ஆடிப்பாடுவார்கள். இன்றிருந்தவிடம் நாளையிருக்க மனம்பற்றார்கள். கந்தை அன்றி வேறே உடுக்கார்கள். அப்படிப்பட்டவர்களின் பெருமை இத்தன்மையதுஎன்று யாவரால் மதிக்கக்கூடும். தலைமலர் விரித்து பீலிப்பிச்சங் கமத்திலேந்தி பாயுடைபுனைந்து தவசிகளைப்போல வீணே விஸ்தரிப்

பதும் ஞானமென்றுகந்த ஐந்துவற்ற சீவரம்போர்த்து விளங்குவதும் ஞானமல்ல. தவம் வேண்டாம். நாமே பிர்மம் என்று பேசுவதும் மெய்யுணர்ச்சி அல்ல என்று உரைத்தார்.

கேட்டீரோ பரிட்சித்து மகாராஜனே! இவ்வாறு அம்மடமையோர்க்கு அறிவுறுத்தித் துவாரபாலகர் மேலும் கூறுவாராயினர். ஞானியர்போல் பேசுவார்கள். அவர்கள்போல் வேடம் பூண்பார்கள். சத்கருமம் செய்பவர்களிடத்துச் சென்று இதை வொழித்துவிடு யென்பார்கள். இவையெல்லாம் பிரமத்தின் நிலையென்பார்கள். இவ்விதமாகத் தாங்கள் கெடுவதன்றி மற்றவர்களையுங் கெடுக்கும் எண்ணம்பூண்பார்கள். பொன் முதலியவற்றின்மேல் இச்சையற்றவர்கள்போல் துறவுபூண்டு, பின்பு பக்குவமுடையோர்க்கு உபதேசித்தும் வருவார். அவர்கள் நடக்கையானது ஆற்றில் அடித்துக்கொண்டுபோகும் காடியைக் கண்டு ஆடென்று விரும்பிப் பற்றியபோது அக்காடியோடே தானும் அழிந்த கதையொக்கும். மிக்க அறிவுடையவரைப் போலவும், உடலின் பற்றுகளை விடுத்தவர்போலவும், பேசும் வழக்கத்தில் உயர்திணை வினையே அஃறிணை வினையாய்ச் சமையப்பேசியும் அறிவில்லா மயக்கியும், அவர் கைப்பொருள்களைப் பறிப்பதற்கு இவ்வகை உபாயஞ் செய்வார்கள். மேலும் மெஞ்ஞானியராயுள்ளவர்கள் இல்லறத்திலிருந்தும் உண்டு வுடுத்தும் மனைவிமக்களோடு நெருங்கி யிருந்தாராயினும் தாமரையிலைத் தண்ணீர்போல் பற்றற்றவராக இருப்பார். இவர்களுடைய பெருமையை வேதமானது துறவிகளுக்கும் பெருந்தன்மையதாகக் கூறும். இந்தப்பிராமணர் முழுஞானியாயிருந்தும், சத்கருமமிழந்தவரல்ல. அப்படிப்பட்ட சத்கருமத்தாலேயே இவரது தேகம் இளைப்புற்று இருக்கின்றது. நூல்களில் திரிலோகத்தில் ஒருஞானி கிடைத்தல் மகா அருமையென்று கூறும் எங்களைத் திருத்தி ஆண்டருள இங்கு எழுந்தருளினர் என்று எண்ணுகிறேம். இவர் சிறுபோதில் நமது மகாராஜருக்கு நேசரென்பது உண்மையே ஆகும். அந்த நேசத்தாலேயே ஆசை அதிகரிக்கத் தேடிவந்தனர். அதன்றி நம் அரசரிடத்தில் இவர் பெருங்காரியம் ஒன்றுமில்லை. நம்முடைய பாப விமோசனம் ஆகுங்காலம் நேரிட்டதனால் இவரை யின்று கண்டோம், ஆ! ஆ! இந்தப் பிராமண முனிவரைப் பார்க்குந்தோறும் மனதில் சந்தோஷம் பெருகுகின்றது. தேகத்தில் புளகம் அரும்புகின்றது. கண்க

ளில் ஆனந்தபாஷ்பம் பெருகுகின்றது. நாவானது துதிப்பதற்குத் துடிதுடிக்கின்றது. ஆதலால் நாம் விரைந்துசென்று இப்பொழுதே நம்பெருமானுக்கு இவர் நல்வரவை விண்ணப்பஞ்செய்யவேண்டும் என்று அறியாமையினால் இகழ்ந்துபேசிய மனமுடையோர் வாயடங்கிப் பேசினார்கள்.

ஓ பரிட்சித்து பூபாலனே! இவ்வண்ணம்பேசி நிறுத்திக் குசேலமுனிவர் திருமுகத்தைப்பார்த்துக் கூறுவாராயினர். ஓ ஞானச்செல்வரே! நீர் இவ்விடம் எழுந்தருளியதால் குறையெல்லாம் தவிர்ந்தோம். உமது தவப்பெருமையை அஞ்ஞானிகளாகிய இவ்வுலகத்திலுள்ள யார் அறியப்போகின்றார்கள்? இச்சிறியவர்கள் உரைத்த வார்த்தையை உமது திருவுள்ளத்தில் கொள்ளாதீர். சுவாமிகளே! சிறிது கொள்வீரானால் பெருந்துன்பக்கடலில் ஆழ்ந்துவிடுவார்கள். கங்கை முதலிய நதிகளில் ஆடியும் தானங்கள் புரிந்தும் பெறும்பலன்களெல்லாம் உமது தரிசனம் ஒன்றினாலேயே அடைந்தோம். ஐயா! உமக்கு நமஸ்கரிக்கின்றோம்; சற்று இவ்விடத்திலிருந்தால் மன்னவருக்கு உமது வரவைப் பகர்ந்து காரியத்தை நிறைவேற்றுகின்றோம் என்று வணங்கிக் கோபுரவாயிலினின்று பொன்னாற்செய்த மணிகளால் இழைக்கப்பட்ட எழுபத்திரண்டு வாசல்களையுங் கடந்து, அங்கு கூடியிரா நின்ற மன்னவர்களை நோக்கி நம்மரசர் வீற்றிருக்கின்றது எந்தவிடத்தில்? என்று வினவவும், அவர்கள் துவாரபாலர்களே தம்முடைய நாயகிமாரோடு அந்தப்புரத்தில் எழுந்தருளியிருக்கின்றாரென விடைகொடுத்தார். அதுகேட்டமாத்திரத்தில் சரேலென்று அதிவேகமாகச்சென்று மாதர்கள் காவற்புரியும் மணிவாயிலின் அருகுவந்து நிற்க, அங்கு விளங்குகின்ற பவளத் தூண்கள் நிறுத்தி வயிரவட்டஞ் சேர்ந்து மற்ற மணிகளால் தூலம் நிறுத்தி கட்டியுள்ள மாடங்களும், நிலாமுற்றங்களும் அவ்விடத்து வரிசை வரிசையாய்த் தொங்குகின்ற முத்துமாலைகளும், மலர்மாலைகளும், பொன்னரிமாலைகளும் மணம் வீசி விளங்கிக்கொண்டிருக்கவும், இது ஸ்ரீவைகுந்தமேயென்று தேவர்களும் மயங்கத்தக்க மாளிகையையுங் கண்டு சந்திரகாந்தத்தில் அமைந்த தலங்களில் சந்தனம்-கற்பூரம்-கஸ்தூரி-குங்குமம் இன்னுமுள்ள வாசனை வீசுகின்ற வர்க்கங்களையுங் கூட்டி, பனிநீரிற் குழைத்துப் புரையில்லாமற் பூசி வயிரமேறிய அகிற்கட்டைகளைப் புதைத்து தத்திநாகப் பளிங்கங்களைப் பரப்பி அதன்: நடுவில் பலமணிகள் அழுத்திய கட்டிலின்மேல்

அம்சச்சிறகு முதலியவற்ருல் செய்த மெத்தையில் வெண்பட்டு விரித்து, மயிலியற்சாயல் மாதர்கள்யிட்ட படுக்கையில் திருப் பாற் கடல்போலுஞ் சிறப்புள்ளதாகப் பொருந்தி அமுதம்போ லும் மொழிகளையுடைய மாதர்கள் கவரிவீசவும், முத்துகளை ஓரத்தில் அழுத்திய சாந்தாற்றியாகிய விசிறிவொன்றை அசைக் கவும், ஒரு குயில்போலும் மொழியினையுடையாள் ஒருத்தி முறுக்காணிகளை முறுக்கிச் சுதிகூட்டியாழ் வாசிக்கவும், பச்சை கற்பூரம் லவங்கங்கள் ஏலம் இவற்றைச் சேர்த்து ஒருமாது வெற்றிலைச்சுருளை நீட்டவும், பூங்கொடிபோலும் ஒரு சுந்தர வல்லி பொற்படிகம் ஏந்தவும், சேலையொத்த கண்களை நிகர்த்த விழிகளையுடைய ஒரு பொற்கொடி எங்கள் மனதை உருகுகின்ற உருவமுடைய உமது வடிவழகை நீரே பாருமென்று குறுநகை யோடு கண்ணாடி ஏந்திக்காட்டவும், பனிநீர் தெளித்து மண முள்ள இந்தப் பூச்செண்டைவாங்கி மோருவீர் என்று ஒரு தேன்மொழி இமைகொட்டாமல் ஐயன் வடிவழகில் ஈடுபட்டு அவன் மலர்க்காத்தில் தன் மலர்க்கரம் பரிசிக்கும்படியாய்க் கொடுக்கவும், துடியிடை ஒருத்தி பொற்கமண்டலநீரைத் தாங்கி நிற்கவும், மலர்க்குழலுடைய ஒரு பெண்கள் நாயகம் விரை புகையிடவும், ஒருபிறைபோலும் நுதலையுடைய ஒண்டொடி யாகிய உருக்குமணியின்தொடைமீது சிரத்தைவைத்து தன் பால் அன்புடையவர்களுக்குக் கொடுக்கும் மலரடிகளை அழகிய சத்தியபாமையின் துடைகள்மீது நீட்டியும் நமது நாயகனுகிய சீதாபிராமன் மனமகிழ்ந்து படுத்திருந்தான்.

வாரீர் பரிட்சித்து மகாராஜனே! அதிகாலையில் அவ்வாயி லில் நின்ற துவாரபாலர்கள் அங்கே காவல் காக்கின்ற மாதர் களை நோக்கி, நீங்கள் சென்று நம்முடைய தெய்வநாயகனுக்கு வாயில்காப்பாளர் வந்திருக்கின்றனர் என்று மொழிந்து வாரும் என்றுரைக்க, அதுகேட்டு மாதர்கள் விரைந்து சென்று பகவா னிடத்து கொஞ்சுங் கிளிபோல உரைத்தனர். அது கேட்டு ஆதியஞ்சோதியாகிய அமலப்பிரான் அவர்களை இங்கு அழை த்துவாரும் என்ருர். காவல்புரியும் மங்கைமார்கள் தட்சணம் விரைந்துவந்து கூறக்கேட்ட துவாரபாலர்கள் அநேகமாயிரம் நட்சத்திரக் கூட்டங்களின் மத்தியில் ஒரு பூரணச்சந்திரன் தனது தண்கதிர்கள் பரப்பிக்கொண்டு விளங்கிக் கொண்டிரா னின்ற வேலமூலகாரணனைத் தரிசித்துச் சிந்தையுள் மகிழ்ச்சி பொங்க சிரங்களின்மீது வீழ்ந்து தண்டன் சமர்ப்பித்து வஸ்தி

ரத்தை யொடுக்கிக்கொண்டு நிற்க, எதிரில் நிற்பவர்களைப் பார்த்தும் பவளவாய்திறந்து நீர் வந்தகாரியம் யாது? என்று மாயப்பிரான் கேட்க உரைப்பாராயினர். கேளீர் பரிட்சித்துமகாராஜனே! கோபால பூபாலனுகிய புருஷோத்தமன் யாது செய்தியென்று கேட்கவும் துவாரபாலகர்கள் எங்களை வழிவழி அடிமை கொள்ளுமையனே! வேதமுதல்வனே! சந்திரகுலதீபமே! காமனும் வேமனும் பூமனும் காமதகனனும் ஸ்ரீமானே யென்று புகழ்ந்து போற்றியும், காண்பதற்கரிய ஆண்டவனே! துவாரபாலகர்க் கதிபதியாகிய தோன்றலே! ஒரு பிராமண முனிவர் அவர் திருநாமம் 'குசேலர்' என்றூர். உம்மோடு சிறுவயதில் படித்தவராம். உமக்கு உயிர்த்தோழராம். அவர் தேகமுழுதும் மாமிசம்வற்றி எலும்பு தோன்றும் தோற்றமுடையவராக இருக்கின்றூர். அவர் தேவரீர்மீது வைத்துள்ள அன்பின் உறுதியைப் பகுத்தறிந்து அளக்கவல்லவர் எம்மைப்போன்றவர்களோ? இப்பொழுது நமது அரண்மனையின் தலைவாயிலின் பக்கத்தில்வந்து நின்றூர். இதுவே எமது விண்ணப்பம் என்றூர்கள். இவ்வாறு அவர்கள் கூறிய வசனங்களைச் செவிகுளிரக் கேட்டருளிய ஜகதீஸ்வரன் திருமேனி பூரித்து முகமலர்ந்து கருணைபொங்கி வழியவும், அவர்களைநோக்கி விரைவிற்சென்று இன்று நம் வாயலின் சார்பில் வந்திரா நின்ற தவராஜனுகிய குசேலரை இங்கு அழைப்பீராக என்று திருவாய் மலர்ந்தருளினூர். துவாரபாலகர்கள் அவ்வண்ணமே பலவாயில்காவல்களையெல்லாங் கடந்து குசேலமாமுனிவரைக் கண்டு அவரடிகளில் நெற்றி நிலத்தில் படியத்தாழ்ந்து, ஓ மாதவச் சிங்கமே! மறையவர் குலவிளக்கே! சன்மக்கடலைச் சர்வேசனுக்களித்த பூர்வநேசரே! உமக்கு வந்தனம் செய்கிறோம் என்று பற்பல துதிகளைக் கூறி, 'குசேலரே! நாம்சென்று உமது வரலாற்றை யாதவகுலத்திற்கு ஒரு ஆதவன்போ லவதரித்தருளிய ஸ்ரீமாதவனைக் கண்டு உரைத்தோம். அப்போது அவர்கொண்ட களிப்பின் மிகுதியை ஆயிரநாவினனுகிய ஆதிசேஷனாலும் மிகுத்துப்பேசுவதற்காகுமோ! ஐயா அந்தணர் பெருமானே! அக்காலத்தில் உமது வரவைக்கேட்டவுடனே தனதுமனைவிமார்களோடு மகாவிலாசமாக கொஞ்சிக்கொண்டிருந்த இன்பம் முழுவதும் மறந்துவிட்டார். நல்லோர் நட்பைப்பார்க்கிலும் நானிலத்தில் நலந்தருவது ஒன்றுண்டோ? அன்றியும் தாய்வரவைக்கண்ட இளங்குழவிபோல அன்புடையராகி மனத்தில் மகிழ்ச்சிபிறந்து அழைத்து வாருங்

கள் விரைவில் என்றனர். நாங்களும் தடையின்றி வந்தோம். இனிக் காலதாமதமின்றி நீர் வரவேண்டும். இங்கு நேரே வருவார். ஆதலால் நம்பெருமானுக்கு உற்சாகம் உண்டாக எழுந்தருளக் கடவீர்' என்று கைகூப்பி நிற்கக்கேட்ட குசேலர் நடந்து செல்வதை முன்பு அறிவுசிறிதும் இராமல் இகழ்ந்து பேசிய மடமக்கள்கண்டு நாம் என்னகாரியஞ்செய்துவிட்டோம்; நாம் பேசிய கடுஞ்சொற்களை நமது இறைவன் அறிவாரானல் யாது தீங்கு நேரிடுமோ என்று நடுங்கி நின்றார்கள்.

## ஸ்ரீ குசேலமுனிவர் ஸ்ரீராதா ருக்மணி சமேதரா யிருக்கப்பட்ட மணிவண்ணனைக் காணுதல்



குசேலமாமுனிவர் துவாரபாலகர் வழிகாட்ட ஆங்காங்குள்ள சிறப்புகளையெல்லாம் பார்த்து சந்தோஷ சாகரத்தில் மூழ்கி, இந்த நகரத்தைப் பார்க்கிலும் மற்றொரு நகாம் பிரமாண்டத்துக்குள் எங்குமிராது என்று மனதிற்கொண்டு பலவாகிய மணிவாசலைக் கடந்து இராஜமண்டலங்களைக்கண்டு ஆரணப் பொருளாகிய நாரணக்கடவுளிருக்கும் அந்தப்புரத்தைச் சமீபித்து அவ்விடங்களில் சித்திரமண்டபங்களை அடைந்து அவற்றில் எழுதியுள்ள கண்ணன் திருவுருவங்களை எழுதிவைத்ததாக நினையாமல் சாட்சாத் ஸ்ரீபகவானென விரைந்துசென்று நெருங்கி ஆலிங்கனஞ்செய்ய நினைத்தமாத்திரத்தில், சுவாமிகளே! இவ்வுருவங்களெல்லாம் மாயப்பிரான்போலச் சீர்திருத்தி வைத்த படங்களெனத் தன்னுடன் வந்த துவாரபாலகர்கள் மொழியக்கேட்டு, அகத்தில்தெளிந்து அப்புறஞ்சென்று நடக்கும்போது நம்மை அடிமைகொண்ட அச்சுதன் இன்னும் என் வரவில்லையென்று சூரியன் உதயம்பார்க்குஞ் செந்தாமரைப் போலவும், சந்திரன்வரவைக்காணும் அரக்காம்பல்போலவும், மேகங்களின்வரவைநோக்கும் மயிலைப்போலவும், தாயின்வரவை எதிர்நோக்கும் இளங்கன்று போலவும், ஸ்ரீதாமோதரனுதன் வரவைப்பார்க்கும் மெய்ஞ்ஞானியைப் போலவும், தருமத் தண்ணீர்வார்க்கும் இடத்தைக்காணும் தாகமுடையவன்போலவும், மணம்வீசும் தண்டுழாய் மாலையை யணிந்துள்ள அழ

கன் மறையவன் வரவைப் பார்த்திருக்க அக்குசேல முனிவர் அரிவையர் காவல்செய்யும் அந்தப்புரவாயிலையுங் கடந்து அள வற்ற மங்கைமார் சூழ்ந்திருக்கும் பிர்ம ருத்திராதியர்களும் அணுகுதற்கு அருமையான அவ்விடத்தை யடையும்போது, தினந்தோறும் பசிப்பிணியால் வருந்துகின்ற ஓர் தரித்திரன் புதையலைக் கண்டாற்போலவும், உண்ணும் உண்டியைத் தவிர்த்து நிற்கும் ஒருமனிதன் திருப்பாற்கடல் அமிர்தத்தைக் கண்டாற்போலவும், உஷ்ணத்தால் விடாய்த்த ஒரு மானிடன் கற்பகத்தருவைக் கண்ணுற்றாற்போலவும், ஜகமாயையில் அழுந் திய ஒரு அஞ்ஞானியானவன் பிர்ம்மசாரியனைக் கண்டதுபோல வும், ஆதித்திருவருள் என்கிற மூலப்பிரகிருதியாகிய ஸ்ரீ பரா சத்தியென்னும் பெரியபிராட்டியாருக்குத் தன் திருமார்பை ஈந் தருளிய ஸ்ரீ மணிவண்ணனாகிய கண்ணனைச் சூரியசந்திரர்க ளாகிய திருவாழியாழ்வானையும் ஸ்ரீ பாஞ்சசன்னியப் பெரு மானையும், வலத்தும் இடத்தும் தாங்கிய மூலகாரண ஸ்ரீ பரப் பிரமமாகிய வாசுதேவனைக் கண்டமாத்திரத்தில், உவகைபூத்து அதிசீக்கிரமாகச் செல்லக்கண்ட புருஷோத்தமனாகிய ஸ்ரீபுண் டரீகாட்சன் பஞ்சசயனத்தைவிட்டு எழுந்து அணைகடந்த வெள் ளம்போல் அன்புபெருகக் குசேலமுனிவர் எதிர்சென்று அவ ரது பொன்னடியில் வணங்கி எழுந்திருந்து சரேலென்று ஆலிங் கனஞ் செய்துக்கொண்டார்.

கேட்டீரோ பரிட்சித்துப் புரவலனே! பூமானாகிய ஸ்ரீமான் அந்தக் குசேலருக்கு உயிர்த்தோழன் என்று நிலவுலகத்திலுள் ளோர் கூறும் வார்த்தையை நிலைநிறுத்தி யருளினர். மேலும் இந்த நாள் நான் பாக்கியத்தையுற்றேன். யான் பாக்கியத்தை யடைந்தேன். நான்செய்த தருமம் இன்று பலித்தது. அறத்தின் பயன் இன்றைப்பொழுது கிடைத்தது என்று சகல பாக்கியாதி பதியாகிய சர்வேஸ்வரன் திருத்தாண்டவமாடி நின்றான். அவ னது மாயையின் வல்லமையை யாவர்தான் அறியவல்லவர்கள்? உடனே அங்குள்ள ஒரு உப்பரிகையில் அந்தணர் பிரானாகிய குசேலமுனிவரை எழுந்தருளப்பண்ணிக் கொண்டுபோய் பொற் குடத்தில் நிறைத்து வைத்திருக்கும் புதிய திருமஞ்சனநீரால் அபிஷேகஞ்செய்வித்து, ஒற்றாடையால் துடைப்பித்து, தவள பீதாம்பரத்தை அணிவித்துக் கர்ப்பூரம் கஸ்தூரி கலந்த சந்த னக்குழம்பை அவரது திருமேனியிற் சாத்தி, முத்துக்களாகிய அட்சதையும் இறைத்து மலர்மாலையணிந்து மணமுள்ள தூபங்

காட்டி தீபஞ்சுற்றி திருஷ்டிகழித்து அமிர்தம்போன்ற அறு சுவை உணவும் உண்பித்துத் திருவாயையும் கரசாரவிந்தங்களை அலம்பித் தாம்பூலஞ் சமர்ப்பித்து இனிய வார்த்தைகளாக உபசரித்துத் தனது பீதாம்பரம் விரித்த படுக்கையில் ஏற்றி அன்பு பெருகப்பெருக அவரது முதுகைத் தடவிக்கொடுத்தும் பின்னரும் தாமரைமலர்போன்ற தமது கரங்களால் கவரிவீசி ஆ! ஆ! அடியேன் நிமித்தமாக வழிநடந்து இளைத்தவனே! உமது திருவடிகள் இரண்டு என்று மிகவும் மகிழ்ச்சி அதிகரிக்க மிருதுவாகத் திருவடிகளைத் தடவிக் கொடுத்து வாய்பொத்தி நின்றான். வாரீர் பரிட்சித்துப் பூபாலரே! இவ்வகைப் பல உபசாரங்கள்செய்தும் தன்னை அறியாது அந்தப்பரமாத்மனுடைய பாதாரவிந்தங்களில் தனது இதயகமலத்தைச் செலுத்தியிருந்தார். பித்தர் பாலகர்கள் பிசாசுபிடித்தவர் ஆகிய இவர்களது குணத்தை ஒத்துப் பரமபாகவத ஞானயோகசிகாமணிகள் இருப்பார்கள் என்று வேதங்கள் முறையிடுவதற்கு ஒப்பத் தனது சித்தத்தைவிட்டு ஸ்ரீதரன் திருவடிக்கமலங்களை அகலாது தியானஞ் செய்து பரம ஞானமிர்தத்திற் புனைந்து அசைவற்று மௌனமாயிருந்தார். ஸ்ரீ குசேலமுனிவர் பூசிய குளவியின் ஓசையைத் தவிர வேறே ஒன்றின் சப்தத்தையும் அறியாத புழுவைப்போல இரா நின்ற இந்தப் பரமபாகவதர் தனது மனையாளின் சொற்படி நிலையில்லாத பொய்ச்செல்வத்தையோ விரும்புவார்.

ஓ பரிட்சித்து மகாராஜரே! இந்தக் குசேலமாமுனிவர் எம்பெருமான் திருவுருவைத் தரிசித்தும், மரகதமலைபோன்ற திருத்தோள்களில் அசையும் வனமாலையின் மணத்தை மோந்தும், நான்முகற்கு நான்கு மறைகளைப்பகர்ந்த திருவாய்மொழிகளைக் கேட்டும், மழைவண்ணத் திருமேனியைப் பரிசித்தும், பிரகலாதாழ்வான் முதலிய பேரறிவாளர் புகழ்ந்துரைத்தவையும், உபநிஷதங்களால் பொருள் அறியப்படாததும் ஆகிய திருநாமங்களைத் துதித்தும், தனது ஐம்பொறிகளும் பேரானந்தமுற விளங்குகின்ற குடத்தினுள் தீபம்போலப் பிரகாசித்திருந்தனர். நீரில் உப்பைப்போலவும், கர்ப்பூரதீபம்போலும், சுத்தசாத்வீக சுரூப பரம்பொருளாகிய சுவாமியினிடத்துத் தன் மனமானது பசுமரத்தாணியைப்போலக் கலந்திருந்தால் இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையாகிய வியாதி ஒழிந்துபோக, அந்த ஸ்ரீவாசுதேவனுடைய திரிமூர்த்தியாகிய கண்ணபிரானது திருவுருவமும் தோன்றாது. நிற்க இவரது வரவின் செய்கையைச் சொல்லா

ததற்கு முன்னே உணர்ந்த பரமாத்மசொரூபியாகிய பகவான் அவரது திருமுகமண்டலத்தை நோக்கி, வேத வேதாந்தங்களை யெல்லாம் உணர்ந்த மகாதவசிரேஷ்டரே! உம்முடையதரிசனத் தால் தேகம் பூரித்தேன். ஐயா அந்தணரே! அமரர்களுள்ளும் அந்தணருள்ளும் அரசருள்ளும் நான் பெற்றபேறு யார் பெற் ருர்கள்? இனியார் பெறுவார்கள்? நீர் இப்போதுஎன்னிடத்தில் வைத்த தயைபோல எப்போதும் வைக்கவேண்டும். ஓ சாந்த குணமுடையவரே! நான் எப்போதும் உம்மை நினையாத கால மில்லை. இப்போதும் நினைத்துக்கொண்டுதான் இருந்தேன். உமது சிநேகத்தைப்பார்க்கிலும் மற்ருென்றில் எனக்குப் பிரீதி யில்லை. ஐயா! வேதமுதலிய கலைகள் முழுமையு முணர்ந்து தருமாதருமம் பார்த்து இதுநன்று இதுதீது என்று உணர்ந்து தாமறிந்ததுபோலவே பிறர்க்கும் அறிவுறுத்தும் அறிவுடை யோர் நேசத்தை மறப்பவர்கள் இப்பூமண்டலத்தில் நாயிலுங் கீழ்ப்பட்டவர்களாவார். நல்லவர் சொல்லில் விருப்பமுறுவ தும், அவர்களைக் காண்பதுவும், அவர்களுக்கு ஒருதவிசெய் வதும், அவர்களைப் புகழ்வதும் நன்றென்று ஸ்ரீபாஞ்சராத்திரம் ஆகமம் முதலியவற்றிற் கூறப்பட்டிருக்கின்றது. ஆன்ருேர் பொன்னுள்ளவன் பூமியுள்ளவன் புத்தியுள்ளவனுனுலும், நட் புடைய னல்லனுயின் அவன் பயனுடையவனல்லன். ஒரு பொருளு மில்லாதவனுனுலும் சிநேகமுடையனுனல் அவனுக் கில்லாத பொருளும் அவற்ருல் உண்டாகிய பயனும் உண்டோ? பிரியரே! பேயோடு பழகினும் பின்பு அதைவிட்டுப் பிரிதல் பிரயாசையென்று மேலோர் உரைக்கின்ருர். மேலோர்களானு லும் முன்செய்த தவமிருந்தாலன்றி நல்ல சிநேகரைப் பெறு வாரோ? நேசம் அவ்வளவு அருமையாயிருக்க, இலேசாக ஒருத்தனுக்குக் கிடைத்தால் இகழ்ச்சி செய்வார்களோ? ஒருவ னுக்கு நல்ல சிநேகமிருந்தால் நல்லவழியில் தன்னையும் நடப் பிக்கும். சுவர்க்காதிபோகங்களினுலும் மனஞ்செல்லாது சாஸ் திரமுணர்ந்த சாந்தகுணமுடையவருடைய நட்பைக் காணக் கிடைத்தலும் அரிதாகும். அவ்வித நண்பே தேடக்கிடையாத திரவியமாகும். மேலும் சித்திக்கும் முத்திக்கும் வித்துமாகும்.

இஃது இருக்கட்டும்; உமக்குத் திருமணம் ஆயிற்ரு? உமது தேவியார் நற்குண நற்செய்கையையுடையவராயிருக்கின்ருரோ? உம்மை தன்னுயிர்போல் பாதுகாக்கின்ருரோ? உம்முடைய வர

வுக்கு எற்ற செலவு செய்பவரா? உமதுசொற்படி நடப்பவரோ? என்னதரித்திரம் வந்தபோதிலும் அக்கம்பக்கத்தார்க்குத் தமது குறையைச்சொல்லாதவரோ? இதுவரையிலும் பலபுத்திரர்பிறந் திருக்கவேண்டுமே? தகப்பன் என்னதவத்தைச் செய்தானே என் னும் பிள்ளைகள் உனக்குஎத்தனை உண்டு? அப்பிள்ளைகளுக்கு அழ கான ஆடைமுதலியவைகள் வாங்கித் தந்திரோ? உபநயனம் முதலிய சத்கருமங்கள்செய்து முடித்திரோ? உமது தேவியார் மகிழ புத்திரர்களைக் கற்றுணர்ந்தோர்புகழக் கலைகற்பித்திரா? ஸ்நானம்-சந்தி-ஜபம் முதலியவைகள் நன்ருக நடக்கின்றனவா? இவைகளைக் குறைவாச்செய்ய உமதுதேசம் செவ்வையாக இருக் கின்றதோ? வேதோபநிஷதங்கள் வைத்த தியானம் சிதருமல் ஒருவழியே நின்றதா? உமது ஊரில் நின்று எமதிடத்திற்கு வரு பவரால் உமது க்ஷேம சமாசாரங்களையெல்லாம் நேற்றையவரை யிலும் விசாரித்துக்கொண்டிருந்தேன். வெகுநாள் சென்றபின்பு இப்பொழுது கூடினேம். சிநேகமில்லாதவர் நெருங்கியிருந்த போதிலும் நட்புடையவராகார். கூடிப்பிரியாதவர்கள் தூரத்தே யிருந்தபோதிலும். அன்பு நீங்கார். ஐயரே! நீர்குடியிருக்கும் அழகியநாட்டில் அதிகமழை பெய்யும். நாம் இருவரும் கல்விச் சாலையில் வாசிக்கும்போது பேசிய வசனங்களெல்லாம் ஞாபக மிருக்கின்றதா? ஒருநாள் நமது குருநாயகனுகிய சாந்தீபமுனிவ ருடைய பத்தினியாகிய நமது தாயானவள் நம்மைப்பார்த்து அமுது சமைப்பதற்காக எரிகரும்பு கொண்டுவாருங்களென்று கட்டளையிட்டவுடன், உடனேபோய் விறகொடித்துக் கட்டியெ டுத்துக்கொண்டபோது ஆகாயத்தில்மேகங்கள் கவிந்து பரந்து மின்னிக் குமுறி யிடித்து மழை தாரையாக விடாதுபெய்ய, அப் போது நிற்க இடமில்லாமல் குருந்தம், புன்னை, கொன்றை முத லிய அடிகளில் திகைத்து நின்ருேம். அப்போது நமது தேக முழுவதும் நனைந்து விறகுகட்டும் நனைந்து குளிரில் நடுநடுங்கியு மிருந்தோம். மேலுமேலும் விடாமழை பெய்ந்ததினுல் வெள் ளம்பெருகி முதலில் காலளவாய்ப் பின்பு கணைக்கால் முழங்கால் அரையளவாயினது. அதுகண்டு இன்னும் மாரிவிடாமல் பெய் கின்றதே; நாமென்ன செய்வோமென்று நாம் உள்ளத்தில் யோசித்துக்கொண்டிருக்கும்போது ஒரு குளிர்காற்று வந்து கடு கிச் சுழன்றடித்தது. அதன்பின்பு வருவதற்கு வழிதெரியாது மயங்கி யிருக்குங்காலையில் சந்திரோதயமாயிற்று. அன்றிரவெல் லாம் அக்கானகத்தே தங்கியிருந்து சூரிய வுதயமானவுடனே

நாம் ஊர்நோக்கி வரும்போது, நமதாசாரியரான சாந்திபமுனிவர் நம்மைத்தேடி, ஐயோ! நமது மாணுக்கர்களாகிய பிர்மாச்சாரிகளிருவரும் எங்கு சென்ருர்களோ! என்னபாடு பட்டார்களோ? என்று இரங்கி வந்துகொண்டிருக்கும்போது, நாம் கண்டு வணக்கஞ்செய்து நிற்கக்கண்ட நமதுகுருராயர் நம்மைப் பார்த்து, சிஷர்களே! என்னிடத்து கற்கும் மாணுக்கர்களில் உம்மைப்போன்ற புனிதர்கள் எவரிருக்கின்ருர்கள்? என்னிமித்தம் நீங்கள் மழையில் நனைந்தீர்கள். அதனுல் வருத்தமிகக் கொண்டீர்கள். இதுவே எனக்குக் குருதட்சணையாகும் என்று உரைத்தும் மேலும் உங்களுக்குக் கல்விப்பொருள் வாய்த்தது போல் செல்வப்பொருளும் கற்புடையமனைவியரும் மழலைப்பிள்ளைகளும் நல்வுறவினர்களுடன் தீர்க்காயுசும் உண்டாகக்கடவதென்று ஆசீர்வதித்துத் தமது கிருகத்திற்கு அழைத்துப்போமினுரே. இவையெல்லாம் உமக்கு ஞாபகம் இருக்கின்றனவா? சகல பற்றுக்களையும் ஒழித்த மேலோரே பலநாள் சென்று என்னை நாடிவந்தீரே? என்ன கொண்டுவந்தீர்? அதனை இப்பொழுது தருவீராயின் சாலவும் நன்று. நான் தின்பதற்குப் பட்சணங் கொண்டுவருவீரென்று என்மனம் அதனையே நாடிக் கொண்டிருக்கின்றதென்று கபடநாடக சூஸ்திராவதாரியாகிய கண்ணபிரான் வினவியருளினுர்.

வாரீர் பரிட்சித்து மகாராஜனே! இவ்வாறு வினவிய நமது அரும்பெற வடிகளாகிய நந்தநந்தனன் சிறிது நின்று மீண்டும், "ஓ நட்பினரே! நீர் சிற்றுணவு இல்லாமல் வருவீரோ? உமது தேவியாரும் வெறுங்கையோடுபோய்வாரும் என்பாரோ? எதோ நீர் கொண்டுவந்ததை அளிப்பீர்?" என்று செந்தாமரை மலர் போன்ற தனது கரத்தை நீட்டக்கண்ட குசேலர் நிதானித்துப் பாலன்னம் என்பவர்க்குப் புளித்த காடிச்சோற்றைக் கொடுப்பது போல இம்மூழுமுதற் கடவுளுக்கு அவலையா நாம் கொடுப்பது என்று சும்மாவிருந்தனர். அதுதெரிந்த சர்வக்ஞன் குசேலன் தனது பக்கத்தில் பலநாள் கண்ட கந்தையில் முடித்து வைத்துக் கொண்டு இருக்கும் சிறிய அவல் மூட்டையைக்கண்டு முடியை அவிழ்த்துநோக்கி, "எனக்கு நன்ருக இன்றையத்தினம் வாய்க்காத அரும்பொருள் வாய்த்தது" என்று அண்ட சராசரங்களையெல்லாம் பிரளயகாலத்தில் விழுங்கிய ஸ்ரீபரஞ்சோதியாகிய கண்ணபிரான் தனது திருவுதரத்திட்டு குதப்பி இதுநல்ல உருசிகரமாக விருக்கின்றது. நூதனமாக இப்போழ்துதான் இடித்த

தாகத் தோன்றுகின்றது; கடையில் வாங்கினுல் இப்படி நெய் மணத்துக்கொண்டு இருக்குமோ? என்று அடுக்கு உறிகளில் ஆய்ச்சிமார்கள் சேர்த்துவைத்திருந்த வெண்ணையையும் தயிரை யும் வாரிவுண்டதுபோல ஒருபிடி அவலையும் உண்டு, இதற்கு வெல்லஞ் சேராமலே இவ்வளவு சுவையுள்ளதாயின் இதன் அருமை பெருமையை நம்மால் சொல்லத்தரமோ! என்று தவறி கொடிற்றில் ஒதுக்கப்பட்டிருந்த சிலவூரில் சுவைகொடுக்கச் சுற்றிருத்தி மென்றுமென்று அருந்தும்போது, பலதாம் சிரத் தை யசைத்தும் பெரிய பிராட்டியாருடைய குமுதவாய் தேனூற லைச் சுவைத்து உண்ணும் பவளவாயால், "ஐயா குசேலரே? நமக்கு இவ்வவல் மிகவிருப்பமென்று முன்னம் யாவராயினும் சொல்லக் கேட்டிருக்கின்றீர்களோ?" என்று முன்னுள் அமரர் களுக்கு அமிர்தத்தை உண்பித்த அயன் அன்பராகிய குசேல ருடைய அன்பையுங்கூட்டி உண்பதுபோலத் தின்றுவிட்டு, மற் ெருரு பிடியெடுத்துத் தனது வாயிலிடப்போகுங் காலத்தில், உருக்குமணிப் பிராட்டியார் வெகு பாபரப்புடனே ஓடிவந்து பரமஞானிகளுடைய இருதயதாமரையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய காகமலத்தைத் தனது நாயகனென்னும் சுதந்தரத்தால் தனது கைத்தாமரையில் பிடித்துக்கொண்டாள்.

இவ்வாறு நமது திருத்தாயாராகிய உருக்குமணித்தேவிப் பிராட்டியானவர் ஒரு ஆண்யானையைப் பெண்யானையானது தனது துதிக்கையால் சுற்றிக்கொள்வதுபோல் பற்றிக்கொண்ட னள் என்று ஸ்ரீசுகப்பிர்மமுனிவர் உரைத்தார். அவ்வளவில் இப்பாதகண்ட பூமண்டலத்தை ஆளும் பரிட்சித்து மகாராஜர் கைகூப்பித் துதித்து வினவுவாராயினர். "ஓ தேசிகரே! இப் பொழுது தேவரீர் எடுத்து உரைத்தது மகா அற்புதமாயிருக்கின் றது. கற்பிலக்கண சாத்திரத்தில் கற்புடைய மனையாள் தனது நாயகனுக்கு வேண்டிய பணிவிடைகளை அவன் விரும்பியபடி செய்வதே அல்லாமல் கணவன் மகா இஷ்டத்தோடு உண்ணும் உணவைத் தடுக்கும் காதலியின் ஒழுக்கமும், நல்ல இயல்பினை யடையாதென்று கூறுகின்றதே. பாற்கடலில் பிறந்த விஷத்தை சிவபெருமானிடம்தேவர்கள்வருந்தி முறையிடுங்காலையில் அவர் களுக்கு க்ஷேமகரமுண்டாகப்பருகியகாலத்தில் உமாதேவியாரும் தடுத்ததன்றோ? பிணியால் வாதைப்படுகின்ற நாயகன் ஆயுள் வேதியர்தடைசெய்ய அபத்தியஉணவுகளின்மேல் ஆசைகொள்

வானுயின் அப்பொழுது மெல்லென இது தீது யென்று உரைத்தலும் மகா அருமை ஆயிற்றே. நாயகனுக்குப் பணிசெய்வதில் ஊழியக்காரியைப்போலவும், அறிவில் மந்திரியைப்போலவும், அன்பில் தாயைப்போலவும் அன்றோ இருத்தல்வேண்டும். அவ்வண்ணமிருக்கத் தனது கணவன் அருந்துவதைத் தடைசெய்தது என்ன சொல்லுமையா?'' என்று வினவினர். அதற்கு முனிவர் ஓ புரவலரே! ஸ்ரீமகாலட்சுமியின் அம்சத்தில் அவதரித்து இலக்கணங்களெல்லாம் அமைந்து புகழ்பெற்ற சவுந்தரவதியாகிய உருக்குமணிப் பிராட்டியாரும் நாதனுக்கு மனவருத்தம் வரச் செய்வாரோ? பலசாஸ்திரங்களையும் உணர்ந்த அந்த அந்தணர்க்குப் பெருமகிழ்ச்சியுண்டாக ஒழியாத பெருஞ்செல்வம் இவ்வுலகத்தில் உண்டாக வேண்டுமென்று ஸ்ரீபரந்தாமன் தனது திருவுள்ளத்தில் சங்கற்பித்து ஓர்பிடி அவலெடுத்து திருஅமுது செய்தாரென்று அறிந்துகொண்டு இவ்வொருபிடி அவலுக்கே பெருஞ்செல்வம் பொருந்துமானல் மீட்டும் ஒருபிடியெடுத்து மனமகிழ்ந்து தின்றால் பலநாளும் அம்முனிவர்க்கு அடிமையாய் அவர் சொல்லும் பணிவிடைகளைக் கடவாமல் திருநாதன் அமரவேண்டி முடியும் என்று தனது உள்ளத்தில் அந்தக் கருத்து பிறக்க, இயற்கைமணம்பொருந்திய குழலையும் குழலிசை யாழிசை குயில்வோசை தேன்கலந்த அமுதின்சுவை இவற்றைப் பழித்த மொழியையுமுடைய அவ்வேதவல்லி வேதநாயகனது திருக்கரத்தைப் பிடித்துத் தடுத்தனள். அன்றியும் அத்தொழுகுலத்தானது அழகிய கிருகத்திற்கு வேண்டுவது செல்வம் ஒன்றுதானே. அவர்க்குப் பணிவிடை செய்யவேண்டியதில்லையே. ஆதலினல் தன் நாயகனுக்குப் பொருந்தியபடி செய்தாரே அல்லது மற்றொன்று செய்தாரோ? எம்பெருமானும் தன்பால் அன்புடையோர்க்கு இது அருளத்தகும் தகாதென்று தன் பட்சத்திலாயினும் எண்ணத்தக்கரோ? இவ்வுலகத்தில் ஒரு மகானுபாவன் தன்னை யறியாது சிறிது தர்மம் செய்தானுயினும் சுவர்க்கத்தில் பெரும்போகத்தை அனுபவிக்கின்றான். ஆனல் குசேலருக்கு இது ஒரு பெரிதோ! பகவானுடைய திருவடியை மறவாது வைத்திருக்கும் இருதயம் சேஷ்டைகளற்ற பொறிகளும் உடைய மாதவரல்லவா என்று மீண்டும் உரைப்பாராயினர்.

“ஓ வேல்வேந்தே! தனது தேவியால் தடைபட்டு நின்று மிகுந்த அவலை அவரது கந்தையில்தானே முடிந்துவிட்டு முன்

தின்ற ஒருபிடி யவலிலே மகிழ்ச்சியுடையவராய் முனிவரைப் பல தரம் துதிசெய்து உபசரித்து அன்றிரவில் பள்ளி அலங்கரித்து உதவ, அதில் பள்ளிகொண்டு பகவானுடைய திருமாளிகையில் அந்தப்புர வேடிக்கையைக் கண்டதனுல் பேரானந்தம் ஒழியாமல் குடிகொள்ளவும் நித்திரை செய்தனர். மறுநாள் அருணேதயத்திற்குமுன் நித்திரை தெளிந்தெழுந்திருந்து பல கடமைகளையும் முடித்துக்கொண்டு தெய்வநாயகனை ஒன்றுங்கேளாமல் பொருள் மிகுதியும் பெற்றவர்போல நினைந்து, தன் ஊருக்குப் பிரயாணப்பட்டார். அப்போது ஆதிமூர்த்தியும் தன் அணிவாயில் வரையிலும் வந்து ஆர்வமேலிட்டு அந்தணரது அடியில் வீழ்ந்து வணங்கிட மகிழ்ந்து ஆசிகூறித் துவாரபாலகர் வாயிலைக் கடந்து, அப்பால் செல்லும்போது பகைவரது மணிமகுடங்களை மிதித்துக் கலங்கச்செய்கின்ற வீரகண்டந்தரித்த திருவடியையும், துளபமாலையை யணிந்த திருத்தோள்களுமுடைய தேவர்பெருமானுர் கண்களிகூர்ந்து தமது அரண்மனையின் திருமாளிகையி னந்தப்புரத்தில் செல்ல, அங்கிருக்கும் மின்னிடை மாதர்களும்கண்டு அவர்களிற் சிலர் மதிவதனங்களைச் சாய்த்துக் கொள்பவர்களும், சிலர் உதட்டைப் பிதுக்குபவர்களும், தோழிமார்களை வெறுப்பவர்களும், சிலர் முறுக்கித் திரும்பி நடப்பவர்களும் ஆகி நன்றுநன்று வந்த பிராமணருக்கு ஒன்றுங் கொடாமல் மகா பிரீதியுடைய நேசனைப்போல ஊராரறியப்போய் எதிர்கொண்டு காலில் வீழ்ந்து அலங்கரித்து அவர் கொண்டுவந்த அவலைமாத்திரம் வாங்கித்தின்று போவென்று உரைத்தார் பார்த்தீர்களாயென்றும், சிலமாதர்கள் பார்த்தீர்களா இந்தப் பார்த்தசாரதி பண்ணியவேலையை. அநேக மகுட மாந்தாதிகளெல்லாம் தமது சேவைக்குக் காத்திருக்கப் பாராதவனுய் ஒரு பார்ப்பானை எதிர்கொண்டு பணிந்து கொண்டாடி யாதுந்தராமல், அந்தோ! வீணுகப் போவென்றுன். இப்புருஷோத்தமன் கீர்த்தியில் மகா மேன்மை பெற்றவர்தான் என்றும், சில மடந்தைமார்கள் அம்மம்மா! அந்த மாயவன் தன்பால்வந்த ஏழைபாகிய பிராமண அதிதியைக் கண்டவுடனே பூரண அன்புடையவனைப்போலக் கட்டியணைத்தான். தொழுதுதொழுது முகமன்கூறினுன். பள்ளிமீதிருத்தினுன்; புகழ்ந்தான்; முடிவில் ஒன்றும் கொடுத்திட்டவனல்லன். பொழுது விடிந்தும் விடியாததற்கு முன்னே உமது ஊருக்குப் போய்வாருமென்றுன். இது நல்ல நாடகந்தான் என்றுர்கள். சில பூவைமார் ஐயோ! எளியவன் பாவம். இத்தனை

தூரம் என் வந்தான்? வாயாரத் தித்திக்கப் பேசிக் களிகூர்ந்து ஓர் காசும் ஈயாமல் செல்லுகயென்றான். ஆதலின் இனி நல்லோர் இவன் திருவாய்மொழியை உறுதியாகக் கொள்ளார்கள் என்றார்கள். சில பாவைமார் இவ்விப்பிரகுலோத்துங்கன் மகா பிரயாசையோடு காடு நாடு கடந்து நெடுநாளாக உள்ளவறுமை ஒழியும் என்று மிக ஆவலோடு எண்ணங்கொண்டு வந்தார். ஐயோ! பாவம். இங்கு ஒருவேளைச் சோற்றுக்கே வழியில்லை. இதுதானோ ஜனகஜனந்தனுதிகளாகிய மகான்கள் புகழும் புகழ்ச்சியென்றார். சில மங்கைமார் குன்று குடையாயெடுத்த இந்தப் பாலகிருஷ்ணர் பரமதயாளுவைப்போல எதிர்சென்று எனது உயிர்த்தோழரே யென்று நயமொழி பேசி அவர் கொண்டுவந்ததையும் வாரித் தின்றுவிட்டு வாயலின் அளவே விட்டுவிட்டு நடந்துபோகச் செய்தாரே. இந்தக் கருணைக்கடலாகிய கண்ணபிரானுக்கு என்ன குறைவுயென்றார்கள். சில அரிவைமார் இந்த அந்தணர் முற்பிறப்பில் தவஞ்செய்தவர் அல்லவென்று நினைக்கின்றோம். ஏனெனில் கங்காஸ்நானம் செய்தும் கர்மம் தொலையாததுபோல லட்சுமிபதியைக் கண்டும் கால்நடையாகச் செல்வதைப் பாருங்கள் என்றார்கள். சில தெரிவைமார் சரிதான் அண்டங்களை யெல்லாம் வாரியுண்டருளும் பெருவாயாகிய இந்த ஜகநாதருக்கு அதுவும் போதாதென்றல்லவோ அந்த சுவர்க்காதிபதியாகிய இந்திரனுக்குப் படைத்த ஆராதனைப் பொங்கல்களை யெல்லாம் அமுதுசெய்தும், ஆயர்பாடி கிருகத்தில் அனைதயிர் வாரியுண்டும், யாராவது யாசகர் வந்தால் அதையும் பலாத்காரமாக வாங்கித்தின்பது என்றார்கள். சில காரிகைமார் இத்தேவதேவன் வெளியில் பார்த்தால் மாத்திரம்பார்ப்பவர்களுக்கு அகண்ட அயிஸ்வரியவானைப்போலக் காணப்படுகின்றானே யல்லது உள் நுழைந்துப் பார்த்தால் எல்லாம் வெட்டவெளிதான் என்றார்கள். சிலமடந்தைமார் ஆம் ஆம்; அக்கைமாரே? உலகாள்பவர்கள் தேவிமார்களானாலும், அவர்கள் கைகளில் தரிப்பது மண்வளையல்தானே யென்றார்கள். சில பேதையர்கள் இந்த மறையவன்மேல் வைத்த தயையெல்லாம் அறிந்தோம். கையில் அணிந்துகொண்டிருக்கும் கங்கணத்தைக் காண்பதற்குக் கண்ணாடியும் வேண்டுமோ? ஒருவேளை அன்னம் உண்டது மலையைத் துளைத்து எலியைப்பிடித்ததுபோலாயிற்று என்றார்கள். சில வனிதையர் இந்தப் பிராமணோத்தமருடையமனைவியும்மைந்தர்களும் வருவார்பொன்னோடும் பொரு

ளொடுமென்று வழிபார்த்துக்கொண்டு இருப்பார்களே. இவர் கந்தையன்றி வேறொன்றுமில்லாது செல்கின்றாரே. இதுதானு உலக இரட்சகம் என்றார்கள். சிலமாதர்கள் எவ்வளவு செல்வம் இருந்தாலும் கொடுக்க மனம் வருமோ? இக்கபடநாடகனுடைய பேச்சினால் மதிமயங்கி மரியாதையாய் ஒன்றுங்கேளாமல் மறையவரும் பித்தம் பிடித்துப் போகின்றார். அவர் நேசரென்று வாயாற் பந்தலிட்டுத் திரும்பி வருகின்றார். இந்தப் பூபதியும் கண்டீர்களோ? இப்படிப்பட்ட சினேகம் இருந்தென்ன இராமற்போய்தான் என்ன? என்றார்கள். சில மடமாதர் இந்த வேதியர் என்ன நினைத்து வந்தாரோ? நமது இராஜகோபாலர் யாது கருதியிருக்கின்றாரோ? பகவான் செய்யும் மாயை யார்தான் அறிவார்கள்? நாம் வாயில் வந்தவற்றைப் பேசுவதனால் பயனென்ன? அப்படி நாம் பேசினாலும் நமக்கு அறிவாகுமா? இவ்விஷயம் தம்மையும் தலைவனையும் உணர்ந்த ஞானிகளுக்கே புலப்படாது என்று வேதபுருஷனே உரைப்பானால் நம்தரத்தில் ஆகுமோ? என்றார்கள்.

ஓ பரிட்சித்துவே! இவ்வண்ணம் மாதர்கள் பலவாறாகப் பேசிக்கொண்டு இருக்கும்போது குசேலமுனிவர் துவாரகாபுரியின் நெடுந்தெருக்கள் பல கடந்து சென்று கடலையும் முன்போலத் தாண்டித் தான் வந்த வழியை யடைந்து நடக்கும்போது ஸ்ரீகண்ணபிரான் திருவருளினாலே விரதமுதலானவைகளாலே மிகவும் இளைத்து மெலிந்த தன் திருவுளம் பூரித்துப் பழங்கந்தையும் பீதாம்பரமாகி, கண்டத்தில் அணிந்திருந்த துளபமாலை இரத்தினமாலையாய் விளங்கிற்று. மேலும் காதில் நூதனமாக மகரகுண்டலங்களும், கையில் உள்ள பவுத்திரம் கணையாழியாயும், அதிபராக்கிரமமும் மன்மதனும் இச்சிக்கும் கட்டழகும் ஆகி வழிநடந்த இளைப்பும் போய் மகிழ்வடைந்துச் செல்ல வெயில் குளிர்ந்து தென்றற்காற்று வீசக்கண்டு, இது சர்வாந்திரியாமியாகிய ஸ்ரீகோபாலசுவாமியின் திவ்விய சங்கற்பமென்று அறிந்துகொண்டனர். பின்னர் யானை இரதம் குதிரை காவலர்கள் உடைய பல மன்னர்கள் வந்து எதிர்கொண்டு தாள்களிற் பணிந்து துதித்து அன்பில் வழிபாடு செய்து, முனிராஜரே! இவ்விரதத்தின்மேல் எழுந்தருள வேண்டுமென்று வேண்டிநிற்கப் பொன்மயமான மகம்மேருவின்மேல் உதய சூரியன் உதித்தாப்போல் ஒரு பொற்றேர்மேல் ஏறியருளினார். அப்போது விண்ணவர் இம்மண்ணுலகம் மறைந்து போகும்படி

ககனத்தில் மலர்மாரி சொரிந்து களித்து ஆர்த்தார்கள். ஆகாய துந்துபி முழங்கிற்று. இவ்வோசைகள் அண்டகோளகை அதிரும்படி பேரொலி செய்தன. அன்றியும் அந்தரத்தில் அரம்பையர்கள் மின்னல்கள் தடிக்கின்றாற்போல் நடித்தனர். மேலும் பரமாத்மாக்களாகிய பிரகலாதாழ்வார் பராசரபகவான் சவுனக முனிவர் வேதவியாசர் அம்பரீஷன் புண்டரீகர் முதலியோர்கள் விரவி நின்று துதித்தனர். இவ்வாடம்பரங்களை யெல்லாங் கண்டு அச்சமுற்று, இது ஆதிகேசவனாகிய ஸ்ரீவேதநாயகனது திருக்கூத்தென்று தமது திருத்தாமரையில் அப்பரமபுருஷனது திருமலரடிகளை மறவாது செல்பவர்க்கு முன்னும் பின்னும் அரசர்கள் ஏவலாளர்கள்போல் அணியணியாய்த் தம்மைக் கைகூப்பித் தொழுதுவரவும், கரி பரி காலாள்களாகிய சேனைகளும் சூழ்ந்து வாட்படைகளைத் தாங்கிவரவும், தாம் தமது ஊர்செய்ததவந்தான் இதுவென்று காண்பவர் உரைக்கவும் ஊர்ப்புறத்தில் வந்து தங்கினர். யாவராலும் வெறுக்கத்தக்க பழங்கந்தையை இடையில் அணிந்த இந்த விரதியர் இவ்வளவு மேன்மை பெற்றுடையவரானால் அவரது தவத்தினளவு யாவரால்தான் புகழக் கூடும்! என்று சுகப்பிர்மமுனிவரை வணங்கி மற்றைய சரித்திரத்தையும் நடத்தியருளவேண்டும் எனக்கேட்க மீளவும் சுகப்பிர்மமுனிவர் உரைப்பாராயினர்.

இரண்டாவது குசேலர் துவாரகைக்கண்டு தந்நகர்ப்புறம் அடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

மூன்றாவது

## குசேலர் செல்வநுகர்ந்து பரமபதம் அடைந்த அத்தியாயம்

---

வேற்றொலி வெண்டுறை

கருங்கடலினடுவனெழுகதிரெனக்கார் நிறத்துமணிகதிர்ப்பக்காமர்
பெருங்கனகவரையெனச்செம் பொன்னுடைநான்றபுயம்பிறங்கப்பாயல்
வென்றிவாளரவமுந் தொடரமென்றாமரைத்
தின்றுமாமங்கையுந் தொடரவாய்விட்டெழீஇ
மன்றவேதங்களுந் தொடரவான்சுவையமிர்
தென்றுசெந்தமிழ்தொட ரொருவர்பின்தொடர்தாச்
சென்றவன்றிருவடி தேருவார்யாருமே.

கலித்தாழிசை

காமர்துழவிரைந்துளபக் கண்ணியனைப்புண்ணியனை
மாமகடன்கொழுநனை வழுத்துவீர்மானுடர்காள்
மாமகடன்கொழுநனை வழுத்துவீராமாகிற்
றூமறைப்பெருமுதலுஞ் சாரற்கரியகதிசார்வீரே.

ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா

வண்டாடுபூந்துளப மாலையனைவானோர்கள்
கொண்டாடுஞ்சீர்த்தியனைக் கோவலர்பாடித்தயிர்நெ
யுண்டாடுசிதானை யொப்பிலாவற்புதனைக்
கண்டாடுமன்பருளங் காதலிக்கும்புண்ணியனைத்
தொண்டாடுவன்றியெனச் சொல்லித்துதிமுழக்கி
யொண்டாடுணைக்கொண் டுயர்வீருலகிரே.

ஓ பரிட்சித்து மகாராஜாவே! குசேலமுனிவர் தன் ஊர்ப் புறம் சார்ந்தமாத்திரத்தில் தன்னுடைய சீரூர் பெருநகரமாகிய அதனுள்ளும் புறமுமுள்ள காடுகளெல்லாம் மாடமாளிகைகளாகிய விஸ்வகர்மாவினாலும் தொட்டு அழகுசெய்து படைத்தற்கரிதாகியதென்று புலவர்களெல்லாம் கற்பனை செய்தற்கரிய சிறப்பு வாய்ந்து அப்பிராகிருத திவ்விய லோகமாகிய ஸ்ரீ வைகுந்தமே இவ்வுலகத்தில் இறங்கி வீற்றிருத்தல்போல விளங்கிக்கொண்டு இருந்தது. ஐயன் அருளுண்டானால் கிடையாதது என்ன விருக்கின்றது? அப்படிப்பட்ட அழகிய நகரத்தைத் தேவர்கள்கண்டு நமக்கு விரோதமாக விஸ்வாமித்திர முனிவர் வேறொரு பொன்னகரம் சமைத்தனரோ என்று மதிமயங்கினர்கள். அந்நகரத்தில் பளிங்குக் கற்களாலும் தவளைச்சுதையாலும் கட்டி மெழுகியிராநின்ற வெள்ளிய மாளிகைகள்தோறும் பொற்பதுமைபோல் மாதர்கள் நிற்கின்ற தோற்றங்களானவை திருப்பாற்கடலில் பெரிய பிராட்டியார் திருவடிவம்பலவெடுத்து நிற்பனபோலவும் வெள்ளிமலையில்பவளக்கொடிகள் பலபடர்ந்துள்ளவைபோலவுமிருந்தது. அந்நகரத்துள் குசேலர் செல்வதற்கு மதிலின் வாயிலின் அடையுங்காலையில் அந்நகரத்துள்ளவர்கள் களிப்பு மேற்கொண்டு முனிவரைவந்துகாணும்பொருட்டுக்கைகளிற் பரிசாக எலுமிச்சை முதலிய கனிவர்க்கங்களோடு மற்றுமுள்ள மங்கலப் பொருள்களை யேந்தி எடுத்துக்கொண்டு பல மங்கலவாத்தியங்கள்முழங்கவந்து அடியேங்கள்வாழ்ந்தோம்என்றுகூறி முகமலர்ச்சிகொண்டு பூமியில் நெற்றி தோள் முதலிய அங்கங்கள் படியத் தாழ்ந்து வணங்கினர்கள். உடனே அவ்விரதத்தில் நின்றும் முனிவரை யிறக்குவித்து முத்துத்தண்டிகையிலேற்றி அழகிய

வெண்பட்டுக் குடைகள் நிழலைச்செய்யும் பல வாத்தியங்கள் முழங்கவும், கவரி வீசிக்கொண்டு வரவும், சதுரங்கசேனைகள் புடைசூழ்ந்து வரவும், மறையவர் மங்களவாழ்த்துப் பாடவும், முனிவர்கள் பல்லாண்டு கூறவும், அழைத்துக்கொண்டு வரும் போது வீதிகளில் இருபுறத்திலும் உள்ள உப்பரிகைகளில் விளங்காநின்ற சாளரங்கள்தோறும் சந்திரோதயம்போலத் தங்கள் வதனங்களைச் சாய்த்து மங்கைமார்களெல்லாம் மகிழ்ந்து நோக்கி, ஞானத்தில் தனக்கு ஒப்பில்லாத இந்த முனிவர் முற்பிறப்பில் செய்த தவந்தான் யாதோ என்றும், கிள்ளித் தெறிப்பதற்கும் சற்றும் தசையில்லாத தேகத்தில் கீறல் வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு திரிபவர்க்குப் பட்டாடை வுடுக்கவும், பல்லக்கு ஏறிவரவும் வாய்த்ததைப் பாரீரென்றும், கந்தமூலம் புசித்தும் கானகத்தில் திரிந்தும் பந்தமொழிப்பவர் மிகவுந் தவஞ் செய்வார்கள். பலரும் இவர்செய்த பாக்கியப்பேறு யார்பெற்ருர்கள்? மனம் வாக்கு காயம் என்னும் மூன்று கரணங்களையும் ஸ்ரீமுகுந்தனுடைய திருவடிக்கே சமர்ப்பித்துத் தினமும் நன்னெறியில் நிலையாநிற்கும் அகழ் வாய்ந்த இந்த முனிவர்க்கு வாய்ப்பது இச்செல்வந்தானே? பாமபத வாழ்வல்லவோ என்பார்கள். கற்புடைய மனைவிவேண்ட கண்ணன்பாற் சென்று அவர் அளித்ததைப் பெற்று இப்படிப்பட்ட போகபாக்கியத்தோடு இம்முனிவர் வருவது நம்முடைய பாக்கியமே என்பார்கள். சிலர் நங்கைமார் மெய்ஞ்ஞானியராக உள்ளவர் தங்கள்பால் செல்வம் வந்துற்ருலும், அல்லது வறுமையுற்ருலும், தங்கள் சுபாவம் சிறிதும் குறையாமல் அதற்குத் திருஷ்டாந்தம் ஜனகமகாராஜர் தழல்தட்டில் ஒருநாளும் சந்தனந்தட்டில் மற்றொருநாளும் வைத்துத் தராசு நிரைபோல் செங்கோல் செலுத்தி மனம் சமமாகப் பொருந்தி யிருந்தாற்போலத் தோன்றுவார்கள். இவரும் அவர் போலவே இந்த உலகமயக்கத்தில் சிக்காமலே செல்கின்ருர் பாருங்கள் பாவைமார்களே யென்ருர்கள். சில பூவைமார்கள் இம்முனிவர்க்கு இந்த ஐஸ்வரியமும் பெண்போகமும் தகுமோ? என்று சில மங்கையர் பேசக்கேட்ட சிலமாதர்கள் சிவனரென்னும் முனிவர் இளமைப்பருவம் மேற்கொண்டு பொற்ருெடிப் போகம் விரும்பிப் பலநாள் இருந்திலரோவென்று கூறினர்கள். இதைக்கேடட பரிட்சித்துமன்னர் சுகப்பிர்மத்தின் திருவடிகளை வணங்கி ஆரியரே சிவனரென்னும் முனிவர் வரலாறு என்னவென்று வினவ உரைப்பாராயினர்.

ஓ பரிட்சித்து மகாராஜாவே! பிருகுயென்னும் பெருந்தவ முனிவர் குமாரர் ஆகிய சிவனர் இமயகிரியின் சாரலிலுள்ள வனத்தில் நெடுநாள் தவம் புரிந்துகொண்டு இருக்கும்போது அவர் திருமேனியைப் புற்று மூடிக்கொண்டது. அவ்விடத்தில் சையாதியென்னும் ஓர் அரசன்மகள் சுகன்னியென்பவள் பாங்கிமாரோடு மலர்கொய்ய அவ்வனம் வந்து அங்கு அப்புற்றைக் கண்டு அதனுள்ளிருப்பது என்னவென்று அதன்தொளைவழியே பார்க்க, அதில் தவஞ்செய்யும் முனிவரது கண்கள் தோன்றக் கண்டு, இவை பொன்வண்டுகளோ? என்று ஐயமுற்று ஒரு திணம் எடுத்துக் குத்தவும், அம்முனிவர் யோகம் நீங்கி இது யார் செய்தார்? என்று பார்த்து அவள்மேல் மோகங்கொண்டு அவள் காத்தைப் பற்றினமாத்திரத்தில் பதைத்து உதறிக் காத்தை ஈர்த்துக்கொண்டு பாங்கிமார் இடத்து ஓடிவிழவும், அவர்கள் இவள் எதையோ கண்டு பயந்தாளென்று விசிறி இளைப்பாற்றிக் கொண்டிருக்கும்போது, அவ்வனம் பார்க்கவந்த அவள் பிதா சையாதி அரசன் அப்புற்றின் அருகே அம்முனிவரைக் கண்டு அடிவணங்கி எழுந்திருந்து அவரது கண்களிலிருந்து நீரொழுகுவதைக் கண்டு இது செய்தவர் யாரென்று தேடிவரப் பாங்கிமார் நடுவில் சேர்ந்திருந்த மகளைக்கண்டு முனிவருக்குக் கண்களில் நீர் வரும்படியான உபத்திரவம் யார் செய்தவர் யாவரெனக் கேட்க, நான் செய்தேனென்று நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் கூற, மனம் வருந்தி என்ன காரியஞ் செய்தாய் பேதாய்? என்றிரங்கி விரைந்து முனிவரிடத்துச் சென்று சுவாமிகள் என் புத்திரியின் புன்செய்கையைப் பொறுத்தருளுமென்று மிகவும் பிரார்த்தித்தார். உடனே அவர் உன்செய்கை நன்செய்கைதான். உன்மகளை எனக்கு மணமுடித்துத் தருவாயேல் பொறுப்பேன். இல்லாவிடில் சபிப்பேனென்ருர். அதற்கு அரசன் உடன்பட்டு மகளை அழைத்துக் கல்யாணஞ் செய்வித்தான். அம்மா! முனிவருக்கு வேண்டிய உபசரணைகள் செய்துவரும் நாட்களில் ஓர்நாள் அசுவனி தேவர்கள் சுகன்னியை நோக்கி, அவளழகில் பரவசப்பட்டு, காரிகையே! உன் தந்தை யார்? உன்பெயர் யாது? நாங்கள் அசுவனிதேவர்கள்; உன்மீது காதலித்தோமென்று உருகி இரங்கிக் கேட்டார்கள். அதற்கு அவள் நான் சையாதி மகாராஜாவின் குமாரத்தி; என்பெயர் சுகன்னி; சிவனமுனிவர் மனைவி; ஆதலால் உங்கள்கருத்து முடிவுபெருதுயென்று எடுத்தெறிந்து பேசித் தலைகுனிந்து நின்ருள். அப்படி நிற்பவளைப் பார்த்து

மாதே! உன் புருஷனும் நாங்களும் இந்த மலர்த்தடாகத்தில் மூழ்கினல் நல்ல இளமைப்பருவம் வாய்ந்து அழகுள்ள புருஷர் களாய் நிற்போம். இம்மூவருள் உனக்கு இஷ்டமானவர்களைச் சேரென்று உரைக்கக்கேட்டு மவுனமாய் விரைவில் தன் நாயக னிடத்து ஓடிச் சொல்லினள். அவர் அதுகேட்டுச் சம்மதித்துத் தானும் தன் மனையாளோடு வந்து அசுவனி தேவர்களைக்கண்டு அவ்விருவரோடு முனிவரும் அம்மலர்ப் பொய்கையில் மூழ்கி இளமையும் வனப்பும் பெற்று வெளிவந்தார்கள். சுகன்னியான வள் நான் கற்புடையாளானல் என் புருஷனே புருனுகவேண் டும் என்று புருஷோத்தமனைத் தியானஞ்செய்து தன் கணவ னது தோள்களைத் தழுவிக்கொண்டனள்.

அதுகண்டு சிவனமுனிவர் அசுவனி தேவர்களே! நீங்கள் செய்த உதவி எனக்கு யார் செய்வார்கள்? என்று உடனே ஓர் யாகஞ்செய்து அவர்களுக்கு அவிர்ப்பாகம் பகிர்ந்தளித்து அனுப்பிவிட்டு சுகன்னியோடுவாழ்ந்திருந்தார். அவர்போலவே இந்தக் குசேலமுனிவர் என்னபாக்கிய போகம் எம்பிரான் அரு ளால் வாய்த்தபோதும் ஐயன் திருவடியை மறப்பாரோயென்ருர் கள்? சிலமாதர்கள் இவ்வாறு தத்தம் கிருகங்களில் முனிவரது செல்வத்தைக்கண்டு மகிழ்ந்து பேசிக்கொண் டிருக்கும்போது குசேலமுனிவர் தனது வாயிலையடைந்து, சிவிகை முதலியவை அலங்கிர்தையாய்த் தன்னை எதிர்கொண்டு பாங்கிமார்சூழத் தன் மனைவிவந்து வந்தனைபுரிந்து கரகநீரால் திருவடிவிளக்கி கந்த மிட்டு மலர்சூடி தூபதீபங்காட்டி ஆலாத்தி சுற்றியெறிந்து வணங்கி நிற்கக் குசேலமாமுனிவர் உள்ளெழுந்தருளி, இரத்தி னக்குப்பை பொற்பொட்டி முதலியவைகளையும் பாலசுப்பிரமணி யனைப்போல் அழகுவாய்ந்த தனது புத்திரர்களையும் கண்டு கொண்டிருக்க மனையாள் அங்கொரு ஆசனமிட்டு அவரை அதில் இருத்தி தயிலக்காப்பிட்டு நீராட்டி ஈரம்உலர்த்தி வேறு உடைவுடுத்தி நின்றனள். குசேலர் நியமனம்முடித்து அவள் உபசரிக்கவுண்டுமனையாளோடு இவ்வகையாகஇன்பம் நுகர்ந்து ஒருநாள் அந்தப்புரத்தில் ஓர் அறையில் தான் தனியே யிருந்து கபாடத்தைத் தாளிட்டு யோசிக்கின்ருர். பொருள் சம்பாதித் தலும் அதைக்காத்தலும் இழத்தலும் துக்கமேயாகும், அது நரகத்திலும் சேர்க்கும். சீ சீ! இப்பொருளைப் பரமபாகவதர்கள் மறந்தும் நினைப்பார்களோ? அதனல் பிறப்பும்பெருகும். இத னலே யான் சம்பாதிக்கேன் என்வீடு என்பொருள் என்று மயக்

கம் உண்டாகின்றது. அதை ஒழிப்பவனே பிரமாதிகளுக்கு எட்டாத முத்தியுலகமாகிய பாமபதத்தை அடைகின்ருனென்று வேதோப நிஷத்துக்கள் முறையிடுகின்றன. தெய்வம் உள்ள தோ? இல்லதோ? வினைப்பயன் உண்டோ? இல்லேயோ என் னுஞ் சங்கையை ஒழித்து ஞான அநுபவத்தால் பரமாசாரியனே யும் பகவானேயும் உணர்ந்தவனே இவ்வுலக மயக்கத்தினின்றும் ஒழிந்தவனுவான். ஆசையற்றவனன்ரே ஞானியாவன்; மற்ற வைகளை யெல்லாம் நீக்கினவனுனுலும் அக்ஞானியே யாவான். இம்மனையில் இருந்து ஜீவன் முத்தனுவது என்பது மலையைக் கடலிலிட்டுப் புணையாக்கி அக்கரைசேர நினைக்கும் ஒருவனே ஒக்கும். ஆதலின் சர்வேஸ்வரனைத் துதிப்பேனென்று பகவ ஸ்மரணைசெய்து கண்களில் நீரரும்ப இருகாங்களையுஞ் சென்னி மேற் குவித்து யாவர்க்கும் பிராணுகிய ஸ்ரீவாசுதேவன் எனக் கருளுவனே என்று மனநெக்குருகிக் கசிவுறுங்காலத்தில், வேத மூலமாகிய ஆதிபிரான் ஒரு பச்சைமலையானது தன் முடியில் சூரியனைப் பதித்துக்கொண்டு இரண்டு சந்திர மண்டலங்களை நெடிய சிகரத்தின் இரண்டு பக்கங்களிலும் தரித்துப் பல சுடர்க ளோடும் பல தாமரைமலர்களோடும் வருவதுபோல் ஸ்ரீமந் நாராயணன் அவர்முன் எழுந்தருள முனிவர் எழுந்து கை கூப்பி மும்முறை வலம்வந்து ஞானபூசை செய்து, ஐயா! நெடு நாள் தவமிருந்து யோகஞ்செய்து காணுெணுப் பரஞ்சுடராகிய நீர் அவற்றில் ஒன்றும் செய்து அறியாத பாவியாகிய எனக்கும் உமது தரிசனம் கிடைத்ததே. நான்குவேதங்களும் ஓலமிட்டும் காணுத நினது திருவடிக்காட்சி இருவினைக்கடலிற் கலங்கிய மருளில் மூழ்கும் அறிவில்லாத எனக்கும் காணக்கிடைத்தது. மஹா புதுமை. அடியேன் முடியில் உமது சீர்பாதம் வைத்தரு ளினுல் பழவினை மாய்ந்துபோம். ஐயனே! உமதடியவர் அடிய ராகுதலே பெருஞ்செல்வமாக வேண்டுகின்றேன். இச்செல்வம் வேண்டாம் என்ருர். அதற்கு எல்லாந்தெரிந்த இறைவன் குசே லரே! வறுமையை வேண்டுதல் என்னகாரணம்? என்று கேட் டார். அதற்குக் குசேலர் ஆரணப்பொருளே! உமதடியில் தியா னம் வைத்து இடையூருகிறதென்ன? என்ருர். அதற்குப் பக வான் குசேலரே! உனக்குத் திருவளித்தது உனக்கல்ல; உன்னைச் சேர்ந்தவர்க்கே; உன்னைச்சேர்ந்தவர் துன்புறுதல் அழகாகுமா? உன்னுள்ளம்போல அவருள்ளம்பற்றில்லாமல் இருக்குமா? மந் திரவாதிகளை பாம்பின்விஷம் ஒன்றும் செய்யாததுபோலச் செல்

வம் உன்னை என்ன துன்பஞ்செய்யும்? சற்று நிதானித்துப் பாரும் என்று கம்பீரமாகக் கருணைக்கடலாகிய கமலக்கண்ணன் குறுநகையோடு திருவாய்மலர்ந்தருளினர். அதைக்கேட்டு எம் பெருமானைத் தொழுதுதொழுது துதிப்பாராயினர்.

ஓ ஜெகதலத்தாசனுன பரிட்சித்துமன்னவரே! குசேலர் ஐயனது சீர்பாதங்களில் விழுந்து எழுந்து துதித்ததைக் கேளும். ஓ மாதவனே! எழுதரிய மறையைக் கவர்ந்துகொண்டு கடலிற் புகுந்துஒளித்த சோமுகாசுரனுயிரை மீனுருவெடுத்து அவனுயிர் மாய்த்து அவன் விடாதுபற்றியிருந்த வேதத்தைப் பெற்று நாமகள் நாயகனுகிய நான்முகக் கடவுளுக்களித்து உயிர்களையெல்லாம் புரந்தருளும் புண்ணியனே போற்றிபோற்றி. திருப்பாற்கடலின் நடுவே மந்தரகிரியைமத்தாக்கி மதியைத் தறியாக்கி நாட்டி வாசுகியை வடமாகப் பூட்டிச் சுராசுரர்கள் கடையும்போது அம்மலை கடலிலமுழ்ந்தாவண்ணம் ஆமைவுருவுற்ற பரிசுத்த பராபரனே போற்றிபோற்றி. பார்மகளைப்பாயாகச்சுருட்டி பாதலத்தில் மறைந்த இராக்ஷதனுடைய உயிர் குடிப்பதற்கு இமைப்பொழுதில் அப்பூமியைவிரிப்பதற்கு வராகவடிவுகொண்டருளிய வரதனே போற்றிபோற்றி. இரணியாட்சதனுடைய உயிரை நீக்கிப் பழிவாங்கிக்கொள்ளக் கருதிப் பிரமவுருத்திராதிகட்கு அச்சிறுத்தியும் தன்பெயரையே வேதாரம்பத்தில் வழுத்த ஆக்கினையேசெய்து தன்னையே யாவரும் வந்து வணங்க இறுமாந்திருந்த இரணியன்மார்பை அவனுலரையப்பட்ட தூணில் இருந்துபிறந்து அவ்வசுரனைக் கொன்று அவன் புத்திரனுகிய பிரகலாதாழ்வானைக்காத்தருளிய கருணுகரனே போற்றிபோற்றி. தவத்திற்சிறந்த காசிபமுனிவரும் அதிதியும் தந்தையுந் தாயுமாக அவதரித்து மமதையிற்படிந்த மாவலி யென்னும் அவுணனிடத்துச் சென்று ஓரடியால் பூவுலகுகொண்டு ஓரடிக்கு இடம் பொருமல் அவ்வசுரன் முடிமேல் வைத்து இந்திராதியரைப் புரந்த புராதனனுகிய வாமனனே போற்றிபோற்றி. சமதக்கினி முனிக்கும் ரேணுகாதேவிக்கும் புத்திரனுகப்பிறந்து உலகநடையிற் சிறந்து நடந்த கார்த்தவீரியார்ச்சுனன் முதலிய சூரியகுல அசுரர்களை யழித்து அந்தணரைக் காத்தருளிய அச்சுதனுன பரசுராமனே போற்றிபோற்றி. திருவயோத்தியில் தசரதச் சக்ரவர்த்திக்கும்கௌசலாதேவிக்கும் புத்திரனுய்ச் சங்குசக்ர அனந்தவுருவாகிய பரத சத்துருக்க இலட்சுமணர் தம்பியர்களாகி அடி

பாவவுதித்துத் தாடகை தன் மகனேடுவருகையில் உருளச் சரந் தொடுத்து, விஸ்வாமித்திரன் வேள்வியைக் காத்து, கல்லுரு வாய்க்கிடந்த அகலிகை சாபந்தீர்த்து, மிதிலைநகரம் புகுந்து, காளகண்டனது கார்முகமிருத்தி, மலர்கள் உருவாம் சீதையை மணந்து, மீட்டும் அயோத்தியை யடைந்து, தாய்ச்சொல் தாங் கித் தம்பியுந்தொடர, அன்றுமலர்ந்த தாமரை மலர்போல் முக மலர்ந்த மகிழ்ச்சியோடு அந்நகர் நீங்கிக் குகப்பெருமானைச்சிநே கித்து, சித்திரகூடபர்வதமடைந்து, அங்கு தன்னைக்காண ஆவ லாய் ஓடிவந்த பரதாழ்வானுக்கு இனிமைகூறிப்பாதுகமளித்து அனுப்பி, தண்டகாரணியம் புகுந்து, அங்கு ஜானகியைத் தூக் கிச்சென்ற விராதனைமாட்டி, அவ்வசுரன் துதிகேட்டுச் சாபக் கருத்தினைமுடித்து, அகஸ்தியர் ஆசிரமமடைந்து, அவரருளிய படைமுதலியவற்றைக் கைக்கொண்டு பஞ்சவடியை யடைந்து, சடாயு சந்தோஷம் அடையச்செய்து, சூர்ப்பநகையின் உருவ பங்கங்கண்டு துரத்திக், கரன் முதலியோரைக் காலனூருக்கு அனுப்பி, மாரீசனைமாய்த்துச், சிறகறுப்புண்டு வீழ்ந்து கிடந்த தந்தையைக்கண்டு ஈமக்கடன்முடித்துக் கவந்தனைவீட்டி அவன் துதியேற்று, சவரிபூசைகொண்டு, மதங்கமலையைக் கண்ணுற்று, அனுமானால் சுக்ரீவனைக்கண்டு மாமரந்தொளைத்து, வாலியைப் போக்கி ஆஞ்சநேயரால் அறிவதைபறிந்து வருணனை அடக்கி, சேதுகட்டி, இலங்கைபுகுந்து, கும்பகர்ணாதியரையும் தசமுகனை யுங்கொன்று, விபீஷணர்க்கு அரசளித்து, கற்புக்கரசியைமீட்டு, விமானமேறி பாரத்துவாசர் ஆசிரமம் அடைந்து விருந்துண்டு, அனுமாரால் அக்கினிப்பிரவேசமாகாமல் பரதரைத் தடைசெய் வித்து, அயோத்திசென்று இராச்சியபாரஞ்செய்த ஸ்ரீராகவ பிரானுகிய சீதரனே போற்றிபோற்றி. தேவகிதேவிக்கும் உரோ கணி ஒருமகனுக அவதரித்துப் பிறலம்பன்முதலியோரைக் கூற் றுவனூர்க்குப் பலிகொடுத்தபலராமனுகிய பரந்தாமனேபோற்றி போற்றி. வடமதுரையில் ஆவணிமாதத்தில் கிருஷ்ண அஷ்ட மியில் தேவகியின் திருவுதரத்தில் திருவவதரித்து, வசுதேவன் கால்விலங்கு தெறிப்பித்து, அவர்மலர்க்கரம் அடைந்து, காவற் கதவுதிறக்கவும், யமுனை வழிவிடவும் கடாட்சித்து, நந்தகோபர் கிருகத்தில் அசோதைபெற்ற யோகமாயையின் திருவுருவாகிய வைஷ்ணவிபிறந்த மனையுள் புகுவித்து எல்லாரும் மகிழ வள ரும்நாளில் கம்சனுகிய மாமன் விடுக்கவந்த பூதகியின் முலைப் பாலுண்டு உயிர்போக்கிச் சகடாசுரனை உதைத்து வதைத்து

வாயில் சுழன்றுகொண்டு செல்லும் அரக்கனை மாயும்படி வீழ்த்தித் தாய் காணும்படி வயிற்றுள் பல்லாயிரங்கோடி அண்டங்களையும் அவைகளுக்குத் தலைவர்களாகிய தேவர்களையுங் காட்டி மறைத்துத் தயிர்கடையும் வேளையில் பால்பொங்கி வழிய தாய் ஆற்றப்போன சமயம்பார்த்து அங்குள்ள தயிர்த்தாழிகளை மத்தாலுடைத்து வெண்ணெயைத்திரட்டி உண்டு அடுத்தமனையிற்புகுந்து உரல்மேல் நின்று உறியிலுள்ள வெண்ணெயை வாரியுண்டு பூனைக்குக்கொடுத்து தாம்பால் உரலில் உதரத்தில் கட்டிவைக்க அதை இழுத்துக்கொண்டு மருதமரங்கள் இரண்டும்ஒடிய, இடையேதவழ்ந்து நளகூபமணிக்கிரியானை அநுக்கிரகித்துப்பிருந்தாவனமடைந்து, கன்றுகள் மேய்த்து, அவற்றில் கன்றுபோல் மாயை கொண்டுவந்த ஒரு அசுரக்கன்றால் விளாம்பழமுதிர்த்து, பகாசுரன் வாய்கிழித்துவீசிப் பாம்பின்வாய்ப் புகுந்து சாபமொழிந்து, ஆயர்சிறுவர்களோடுகட்டமுதுபுசித்து,பிர்மதேவர்கவர்ந்துகொண்டுபோன சிறுவர்களையும் கன்றுகளையும் பண்டுபோல் உண்டாக்கி, விஷநீர் உண்டு உயிர்துறந்த உயிர்களாய்ந்திடக் கடைக்கண்பார்த்துக் காளியின்முடியில் நடித்து, ஆயர் சிறுவர்களைக் காட்டழல்வளைந்துகொள்ள அதனை அயின்று, ஆச்சிமார் மயங்க பவளவாயில் வேய்ங்குழல்வைத்து ஊதி, அவர் நீராடல் செய்யும்போது கலைகளைக் கவர்ந்து குறுந்தமரத்தின்மீதேறிக் கரைமிசை வந்து அவர்களுக்குத் துகிலை எடுத்தெடுத்து ஈந்து மலர்சோலையில் பலவுருவங்கொண்டு அவர் கனிவாயமுதுண்டு, முனிவர்கள் பத்தினிமார்கள் சமைத்தளித்த இன்சுவையமுது உண்டு உவந்து, இந்திரனுக்கு இடும் பொங்கல் பூசையைக் கொண்டு, மலையால் மழையைத் தடுத்து, சிவந்த கண்களையுடைய ஓரசுரன் கொண்டுசெல்லும் தந்தையைத் திருப்பிக் கொண்டு வந்து அவனும் அண்டர்களும் தரிசிக்க ஸ்ரீவைகுந்தத்தைக் காட்டித் திடீரென்று மறைத்து பசுக்காவல் செய்யுமிடத்தில் ராதையின் அழகிய நலத்தைக் கவர்ந்து பல மாதர்களோடு ஆயர்பாடிக்குச் செல்லும்போது தந்தையைப் பற்றும் பாம்பைப் பாதத்தால் மிதித்து அகற்றிக் காட்டை மீட்டுமடைந்து, சங்கசூடனை மாய்த்து, மணியினை பலராமர்க்களித்து, நாரத முனிவர் சொல்லக்கேட்டு கம்ஸன் அனுப்பிய பூதகியின் உயிர் குடித்து, அவன் அமர்ந்திருந்த மதுரையை யடைந்து, ஈரங்கொல்லியைத் தடிந்து, எழில்கலன் உதவி மதுமலர்மாலையைக் கொடுத்தவர்க்கு இன்பவீடளித்து, கூனியை நல்ல தெய்வப்

பெண்ணைகச் சமைத்து, இராஜசபைக்குப் போய்க் குவலயாபீட மென்னும் குஞ்சரத்தையும் மல்லர்களையும் கஞ்சனையும்கொன்று உக்கிரசேனர்க்கு அரசுரிமை யளித்து, தந்தை மனமகிழ்ந்து பூநூல்கலியாண முதலியவை செய்தவளவில் சாந்தீபமுனிவரை அடைந்து வேதமுதலிய கலைகளெல்லா முணர்ந்து, குருதக்ஷிணைக்காகக் கொடிய பராக்கிரமம் பொருந்திய அவனது மலை போன்ற மார்பைக்கிழித்து, சக்கரமேவி முன்னிறந்த மதலையை மீட்டு ஆசாரியன் தேவிமுன்வைத்தீ கோபியர்களைத்தேற்ற உத்தவரைச்செலுத்திக் கூனியின் இளநலம்பேசித் திரிதராஷ்டிரனிடத்தில அக்குரூரரைப்போக்கிச் சராசந்தனோடு பதினேழு நாள் அமர்விளைத்து அம்மதுரையை காலயவனன்வந்து வளைத்துக்கொள்ளவும், மேற்கடல் நடுவே துவாரகாபுரியென்று ஒரு அழகிய நகரமொன்று உண்டாக்கிப் போரில் வலியில்லாமல் புறங்கொடுத்து ஓடுபவனைப்போல் விரைந்தோடி முசுகுந்தன் உறங்கும் மலைக்குகையில் புகுந்து, அவனால் பகைவனை அழைப்பித்துப் பலராமரோடு வடமதுரையிலிருந்து துவாரகாபுரிக்குச் செல்லும்போது சராசந்தன் வளைக்க, அவனுக்கும் அஞ்சினவர்போல் பலராமரோடும் மலையேறி அழல்சூழக் கவலையில்லாமல் விரைந்து தாண்டிச்சென்று துவாரகையடைந்து, விதர்ப்பதேசத்தரசன் நங்கை முன்னேன் உரைக்கஞ்சி விடுத்து தூதைக் கண்டபொழுதே தேர்மிசை ஏறிச்சென்று கவுரியை வணங்கிக் கன்னியைக் கவர்ந்து பகைத்த அரசர்களை ஓட்டி ருக்குமன் குடுமியை அரிந்து துவாரகையைச்சேர்ந்து, பின்பு ருக்மணிபெற்ற புத்திரன் மீன்வயிற்றையடைந்து இரதியைச் சார்ந்து வளர்ந்து அவள் நலனுண்டு எதிர்த்த சம்பரனைவென்று அவளோடு துவாரகையில் புகக்கண்டு மனமகிழ்ந்து சத்திராஜித்து சூரியன்பாற்பெற்ற சிவந்தகமணியைப் பிரசேனன் காத்திற்கொடுக்க, அதனைச்சிங்கம்கவர்ந்துகொண்டுபோக, அதினின்றும் ஜாம்புவந்தர் பறித்துப் பிலத்தையடைந்து தன்மகனிடத்துவைக்க, அதுகண்டு பெரும்பழி வருமென்று உடனே அப்பிலத்தை அடைந்து ஜாம்புவந்தரோடு போர்செய்து வென்று, அவர்களையும் அம்மணியையும் பெற்று சத்திராசித்துவுக்கு அளிக்க, மிகவும் மகிழ்ந்து சத்தியபாமையை மணியோடும் உவந்துகொடுக்க, மிகமகிழ்ந்து மணியை அம்மான்கையளித்து தருமர் முதலாயினேர் துயர் ஒழிய அவர்கள் இருக்குமிடம் சென்றுறையுங் காலையில், மாமனைக்கடிந்து அம்மணியைக் கைக்

கொண்ட சத்தனுமாவின் உயிர்நீங்கத் தொலைத்துப் பின்னர் மழைபெய்யுநிமித்தம் அக்குரூரன் சிவந்தகமணியோடு வந்து கண்டமாத்திரத்தில் மிகமகிழ்ந்து அம்மணியைச் சத்தியபாமைக்கு உதவுகவென்று இனிதளித்துச் சுபத்திரையை அர்ச்சுனனுக்கீந்து இந்திரபிரஸ்தத்துக்குப்போகும்போது பார்த்தனோடு கானில் வேட்டையாடுங்காலையில்காளிந்தியின் இன்பத்தை அனுபவித்துத் துவாரகாபுரியை யடைந்து அவந்திராசன் பெற்ற மித்திரவிந்தையைக் கவர்ந்து, துரியோதனன் முதலாயினோர் மனத்தில் அரசுமுறையில் வளைத்தமர்த்திக்கோசலராஜன்விட்ட போர்விழை யேழையுந்தழுவிச் சத்தியைமணந்து கேகயராஜன் கல்யாணஞ்செய்து கொடுக்கப் பத்திரையின் இன்பம் அனுபவித்து இலக்கணையைமணம்புரிந்து காகாசுரனைக்கொன்று வச்சிராயுதபாணியின் மனக்குறையைமுடித்துப் பிலத்தில் வைத்திருந்த பதினாயிரமங்கையர்போகம்விரும்பிச் சத்தியபாமைக்குக் கற்பகத்தருவைக் கொண்டுவந்து கொடுத்து மழலைச்சொற்களையுடைய மதலைகள் அளவற்றவர் பிறக்க அகமகிழ்ந்து பௌத்திரனைச் சிறைவைத்த பாணாசுரன் கரங்களை யறுத்தெறிந்து, சோம்பியாய்க்கிடந்தவன் பாதகந்தவிர்த்து காசிராஜனையும் பாம்பணைப் பரமன் யானேயென்று உலகத்துள்ள மாதர்களையெல்லாம் மயக்கித்திரிந்த பௌவணமன் வாசுதேவனையும் உயிரொழித்து, அக்காசிராஜன் விடுத்த பூதத்தைத் துரந்து சுயேதனன் கன்னியின் போகம் விரும்பி நுகர்ந்து, சாம்பன் சிறையைப் பலராமர் மீட்டு வாக்களித்து நாரதபகவான் காண பதினாயிரந் திருவுருக்காட்ட சராசந்தனுடையஉடலைப் பிளந்துபீமனறியப் புல்லைக்கிழித்துப் பலநாள் வருந்திய அரசர்கள் சிறைவிடுத்துத் தருமர் புரிந்த இராயசூயத்தில் நிந்தித்த சிசுபாலனை வாதித்துச் சாலுவனையும் தந்தவக்ரனையும் சேனைகளோடு மடித்துப் பார்த்தனுக்குச் சாரதியாய்த் தேரை நடத்திப் பஞ்சவர்களால் அரவக்கொடியோன் முதலியோரை அதஞ்செய்வித்தும், பூபாரந்தொலைத்து தருமருக்கு அரசு நல்கி எனது கந்தையில் முடிந்துள்ள அவலையும் அவிழ்த்துத்தின்ற கமலக்கண்ணுடைய கடவுளேபோற்றி போற்றி! எம்பிரான்போற்றி! மாயவாபோற்றி! கஜேந்திரவரதா போற்றி! கமலநாயகனே போற்றிபோற்றி! என்று கண்களில் நீரரும்ப இருகரங்களுஞ் சென்னிமேற்கவிய மனதைக்குருகி உருகுங் காலையில் மறையின்பொருளாய் என்றைக்குமெட்டாத மாயப்பிரான் விரைந்து காட்சிகொடுத்தவளவில் பெருக்கென யெழுந்து

